ஶ்ரீ

சிவமயம்.

கொற்றவன்குடி

உமாபதிசிவாசாரியார் இயற்றிய

# சிவப்பிரகாசம்

திருவருட்பயன் வினாவெண்பா

போற்றிப்பஃறொடை கொடிக்கவி

நெஞ்சுவிடுதூது உண்மைநெறிவிளக்கம்

சங்கற்பநிராகரணம் (என்னும் சித்தாந்தாஷ்டகம்.)

இவைகட்குரையுடன்

கொ - ஷண்முகசுந்தர முதலியாரவர்களாற்

சென்னை-சிந்தாதிரிப்பேட்டை

சிவஞானபோதயந்த்ரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.

இரண்டாம்பதிப்பு புஸ்தகம்-உ௫0.

கலி-௪௯௯௬-இ ஜய௵ தைமீ

உ

சிவமயம்.

# சிவப்பிரகாசக்

## கருத்துரை.

———(※)———

சிவப்பிரகாசமென்பது சிவப்பிரகாசத்தை யுணர்த்துவ தோர் நூலெனப்பொருள்.

சிவஞானபோதம் சிவஞான சித்தியென்னு நூல்களிருக்க அதனை யாய்ந்துணரப்பெறாத சிவம் இதனா லுணரப்படு மோவெனில்? அற்றன்று. சிவஞானபோத மொழிபெயர்த்த வாசிரியரே தமது நூல் சொற்சுருங்கி யத்தமாழ்ந் திருக்கு மோர் நூலெனவும் அது அதிதீவ்ர புத்திமான்கட்கே வெளிப்படுமெனவும் அதனை விரித்தோர் நூல் செய்கவென தமது சீடரும் சன்னைபயர் தலைவருமாகிய அருணந்திசிவாசாரியருக் காணையிட்டமையானும் அருணந்தி சிவாசாரியார் அவ்வாணை மேற்கொண்டு சொல்லப்புகுந்த சிவஞான சித்தியானது தர்க்கமும் விஷயமுங் கற்ற நற் க..ாந்தர்க்கே விரிந்து பொருள் பயப்பதனாலும் இதனைத்தொகுத் தெளிதிற் சிவம் பிரகாசிக்கும்படி யிந்நூல் செய்யப்பட்ட தென வுணர்க.

சிவஞானசித்தி விரிந்த நூலென்பது "இறைவனையும்" என்னும் நூற்கருத்தை யுணர்த்துஞ் சிவஞானசித்தி பாயிரச் செய்யுளா லுணர்க.

சிவப்பிரகாசம் தொகுத்துச் சிவத்தை யெளிதி லுணர்த்து நூலென்பது "தெரித்தகுரு" என்னும் நூற்பெயருணர்த்தும் சிவப்பிரகாசப் பாயிரச் செய்யுளா லுணர்க.

அன்றியும், சிவஞானம் போதித்த மாத்திரையே சிவஞானபோத மெனவும் அதனைச் சித்திக்கு முபாயங் கூறியமாத்

திரையை சிவஞானசித்தி யென்னும் அதனை யெளிதில் நிஷ்டை [redacted]ரகாசமாமாறுசெய்வதே சிவப்பிரகாசமெனவு முணர்க.

சிவஞானபோதம் சிவஞானசித்தியென்னு மிரண்டுநூல் களையு மிந்நூ லெளிதி லுணர்த்தியவா றெவ்வா றென்னில்? அந்நூலுட் கூறிய பன்னிரண்டு சூத்திரங்களையும் பொது உண்மையென விருபாலாக்கிப் பொது வோரதிகாரத்தானும் உண்மை யொன்ப ததிகாரத்தானும் ஆகப் பத்ததிகாரத்தா னும் தெளிவுபட வுணர்த்தியவா றுணர்க.

இதனை முன்கூறிய பாயிரச் செய்யுளானும் "இங்கிவை" என்னும் உண்மையின் தலைச்செய்யுளானும் உரையாசிரியர்கூறிய வரலாற்றில் நூற்கருத்தும் திருவடிவரைவும் கூறியபஃறொடைவெண்பா அகவல்களானும் இதன்பின்ன ரச்சிட்டிருக்கும் பதகத்தானும் தெளிக.

பொது உண்மையென்ப தென்னையெனின்? அதனை முற்கூறிய 'தெரித்தகுரு' என்னும் பாயிரச் செய்யுளுக் கிட்ட [illegible]த்திற்காண்க.

அன்றியும் இம்பரிற்கூறிய ஞானதீக்கைத் திருவிருத்தத்தில் "தேசுமிருமருட்பயின்ற சிவப்பிரகாசத்தில்" என்னும் திருவிருத்தத்தானு முணர்க.

அன்றியும் "புறச்சமயத் தவர்க்கிருளாய்" என்னுமிந்நூற்கருத்தை விளக்கும் பாயிரச் செய்யுளானும் "அரிவையரின் புறமுத்தி" என்னும் பொதுவி னிறுதிச்செய்யுளானும் "நிலவுலகாயதாதி" என்னு முண்மையி னிறுதிச்செய்யுளானு மாய்ந்துணர்க.

அன்றியும் இந்நூலுள் சிவஞானபோதம் சிவஞானசித்தியின் கருத்துக்களை யுரையாசிரிய ராங்காங் கெடுத்துக்காட் டுவதை யிதிற்சேர்க்கப்பட்ட பதகத்தா னுணர்க.

இந்நூற் போந்தபயன் யாதெனின்? பொதுவில் பதி பசு பாச மென்னு முப்பொருளுளதெனவும் உலகியல் முப்பத்தாறு தத்துவமு மூவகையா யனுபவிக்கப்படு மெனவும் அவை சிவதத்வம் வித்யாதத்வம் ஆன்மதத்வ மாகுமெனவும் இதன் பிரேரக போக போக்யங்க ளிவ்வாறெனவு மாய்ந்து மலவிருளிரிய அருளாது தோன்றி சிவப்பிரகாசிக்க நிஷ்டை கூடி யிருப்பதே மோக்ஷசாதனமென வுணர்ந் தடங்குவ தென்பது.

அங்ஙனம் பாசநீங்கி யீசனை யுணரப் பெறுதேல் ஈசனைந்தெழுத்தோதி ஆலயந்தொழுது அடியவர் பரவுதல் செய்யின் தேசமிகுந்த திருவருள் தோன்றி யீசனற்பிரகாச மெளிதினெய்துமென் றுணர்க.

இவ்வாயினவினின் றநுட்டித்தோ ரிந்நூலி னர்த்தத்தையும் பசு பாச நிலைமையையு மெளிதி னுணர்ந்து திருவருளாலாற் சிவப்பிரகாச மெய்தும்படி, அத்தெய்வத் திருவருளே சுத்தமாயையாய் ஆன்மாவிற்குப் பசுத்தன்மையை விளக்குவதைத் திருவருட்பயனென்னு நூலானும் அசுத்தமாயையாய்ப் பாசத்தை விளக்குவதை யிருவென்பாவானு முணர்த்தி யிருக்கின்றனர்.

இவற்றிற்கு மிவராற் கூறப்பட்ட வேனைய சித்தாந்த சாத்திரங்கட்கு முள்ள சம்பந்தங்களுங் காரணங்களு மவ்வவ் நூன்முகப்பி லெழுதப்பட்டுள்ளதை ஆங்காங்கு வாசித் துணர்க.

நீக்கப்பட்டுக் கொற்றவன்குடியிற்சென்று வசித்தருளினர். இவ்வாறு தாம்வசித்துவருநாளில் வடமொழியிற் பௌட்கராகமத்துக்கு வியாக்கியானமும் தமிழில் சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறிவிளக்கம், சங்கற்பநிராகரணம் என்னுஞ் சைவசித்தாந்த சாத்திரங்களும், கோயிற்புராணம், திருத்தொண்டர்புராணசாரம், திருமுறைகண்டபுராணம், சேக்கிழார்புராணம், திருப்பதிக்கோவை, திருப்பதிகக்கோவை என்னும் பிரபந்தங்களுஞ் செய்தருளினர்.

உமாபதிசிவாசாரியார் அருணமச்சிவாயதேசிகர் முதலிய மாணாக்கர்களுக் குபதேசித்தருளிச்செய்ததன்றியும் சபாநாயகர் விடுத்தருளிய "அடியார்க்கெளியன் சிற்றம்பலவன் கொற்றங், குடியார்க்கெழுதியகைச்சீட்டு-படியின்மிசைப், பெற்றான் சாம்பானுக்குப் பேதமறத்தீக்கைசெய்து, முத்தி கொடுக்கமுறை." என்னுந் திருமுகத்தைப் பெற்றுக்கொண்டு பெற்றான் சாம்பானுக் குடனே முத்திகொடுத்தருளினர். இதனைப் பெற்றான் சாம்பான் மனைவி தனதஞ்ஞானத்தால் அரசனிடத்திற் சென்று தனது நாயகனை உமாபதிசிவாசாரியார் கொலைசெய்தனரென்று முறையிட அரசன் தமது மந்திரியுட னாலோசித்து அவரைத் தம்மிடத்தில் வரவழைப்பது தகுதியன்றென்று தமது பரிவாரங்களுடன் பெற்றான்சாம்பான் மனைவியைக் கூட்டிக்கொண்டு உமாபதிசிவாசாரியாரிடத்திற்குச் சென்றனர். இதனையுணர்ந்த உமாபதிசிவாசாரியார் தமக்குப் பிரியமுள்ள முள்ளிச்செடியருகி லிவர்களுடன்சென் றிவர்களையந்தர அம் முள்ளிச்செடிக்கு முத்தியளித்தருளினார்.

# உரையாசிரியர்

—o—

இந்நூற் குரைகள் பலவுள. அவற்றுள் மதுரைச் சிவப்பிரகாசர்செய்தவுரை யாவராலுங் கொண்டாடப்பட்டு வருகின்றமையால் அதைமுன்ன ரச்சிட்டனம். சிலர் வேறு எனக் குறிக்கப்பட்டுள்ள மற்றோருரையைச் சிலாகித்து வருவதால் அதனையுஞ்சேர்த் திப்போ தச்சிட்டனம். இவற்றின் தாரதம்யங்களை யிந்நூல்வல்லோரா லாய்ந்துணர்க.

இஃதிங்ஙனமாகச் சிலரின்னும் விசேடமாய் சித்தாந்தசாத்திரங்கட் குரையிடுவதாயும் இட்டிருப்பதாயும் கூறுகின்றனர். அதனை வல்லோரே யதன் சிறப்பையறிவர்.

சந்தானகுரவர் நால்வர் திருநக்ஷத்ரம்.

சித்திரையத்த முமாபதி யாவணித் திங்கடனி
லுத்திரஞ் சீர்கொண் மறைஞானசம்பந்த ரோதுகன்னிச்
சுத்தமெய்ப்பூர மருணந்தி யைப்பசிச் சோதிதன்னில்
வித்தகமெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

மறைஞானதேசிகர் திருக்களாஞ்சேரியிலும் உமாபதி சிவாசாரியார் கொற்றவன்குடியிலும் பரிபூரணமுற்றனர்.

சித்தாந்தசாத்திரம் ௧௪-யு முணர்த்துஞ்செய்யுள்

உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மைப் பிரகாசம்—வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று.

இங்ஙனம்

கொ - சண்முகசுந்தர முதலியார்

சென்னை-சிந்தாதிரிப்பேட்டை.

சிவமயம்.

இந்நூலுரையாசிரியர்

மதுரைச்சிவப்பிரகாச ரெடுத்துக்காட்டிய

## உதாரண சாத்திரங்களின் பெயர்.

—(ஃ)—

இருபாவிருபஃது
உண்மைவிளக்கம்
உருபசொரூபவகவல்
ஔவைக்குறள்
காஞ்சிப்புராணம்
காளத்தியந்தாதி
கோயிற்புராணம்
சங்கற்பநிராகரணம்
சர்வார்த்தசங்கிரகம்
சிவஞானசித்தியார்
சிவஞானபோதம்
சிவஞானபோதச்சூர்ணை
சிவாகமம்
சிவானந்தமாலை
சிவார்ச்சனாபோதம்
சிற்றம்பலத்தம்பிரானருளிய
ஞானப்பஃறொடை
சூதசங்கிதை
ஞானதீக்கைத்திருவிருத்தம்
ஞானபூஜாகரணம்
ஞானபூஜைத்திருவிருத்தம்
ஞானவந்திரட்டை
ஞானாமிர்தம்
தத்துவசரிதை
தத்துவப்பிரகாசம்
தத்துவவிளக்கம்
திருக்களிற்றுப்படியார்
திருக்கோவை
திருநெறிவிளக்கம்
திருப்புகழ்
திருப்பல்லாண்டு
திருப்பாட்டு
திருமந்திரம்
திருவருட்பயன்
திருவள்ளுவப்பயன்
திருவாசகம்
தேவாரம்
தேவிகாலோத்தரம்
துகளறுபோதம்
தொல்காப்பியம்

நேமிநாதம்
பாணராற்றுப்படை
பிரசாதவகவல்
புத்தநூல்
புராணசாரம்
பெரியபுராணம்
போஜனவிதி
போற்றிப்பஃறொடை
மெய்ஞ்ஞானவிளக்கம்

ஆ௨ - சஅ.

வேறு—எனக் குறிப்பிட்ட வுரைக் குரையாசிரியர் பெயர் பிரதிகளிற் காணப்படவில்லை; உதாரணநூல்களுமில்லை.

சிவமயம்.

# சிவப்பிரகாசம்

## பொது.



## உண்மை.

சிவமயம்.

# சிவப்பிரகாசச்

## செய்யுளின்கருத்து.



## பொது

பொது முற்றி[illegible]

---

## உண்மை

| | | |
|---|---|---|
| ௩—...வுணர் | உலகாயதன் மாத்மீகன் மாயாவாதிகளைமறுத்து சிவனறிவிக்க ஆன்மாவறிவன் என்பது | ௩.௩.௫ |
| ௪—அறிவெனில் | அவிகாரவாதி சங்கிராந்தவாதி சிவசமவாதி பரிணாமவாதி மறுப்பு | ௩.௩.௧ |
| ௫—அறிவினு | ஆன்மா ப்ரபஞ்சத்தை யறியுமன்றி சிவனையறியாவென்னும் பரிணாமவாதி பாடாணவாதிமறுப்பு | ௩.௪௪ |
| ௬—எவ்வறி | பரிணாமவாதி ஈஶ்வர விகாரவாதி சங்கிராந்தவாதி சிவசமவாதி ஈஶ்வரவைக்யவாதி சைவர் மறுப்பு | ௩.௪௮ |
| ௭—சத்தினு | ஆன்மா சத்து அசத்து என்பதை மறுத்து சதசத்து என்பது | ௩.௫௪ |
| ௮—கண்ணொளி | சிவனறிவிகொடுக்க ஆன்மாவறியும் ஆன்மா சிற்றறிவனென்னும் பரிணாமவாதி மறுப்பு | ௩.௫௭ |
| ௯—ஓரிட | அறிவிதுவென்று பலபடக் கூறும் பலசமயிகளின் மறுப்பு | ௩.௬௧ |

௪—சூத்ரம்.

| | | |
|---|---|---|
| ௧௦—எண்ணவொண் | கிழாலவத்தையிற் சகலாவத்தையாகிய நிலையிற் படுமவத்தை யென்னும் காரியாவத்தையைந்து | ௩-௬௮ |
| ௧௧—இவ்வகை | மேலாலவத்தையாகிய சுத்தாவத்தையிற் காரியாவத்தை | ௩-௮௭ |
| ௧௨—நீக்கமி | கேடிகாரணவத்தை | ௩-௯௨ |
| | ௫—சூத்ரம். | ௩-௯௫ |
| ௧௩—மருவிய | ஆன்மா அவத்தைப்பட்டு கிடக்குமிடத் துணரு முறைமை | ௩-௯௬ |
| ௧௪—தலைக்கென | ஆன்மாவுங்கருவிகளுங் கூடியறியுமெனில் கர்த்தாவுணர்த்துவானென்றதற்கு விடை | ௪௦௪ |
| ௧௫—கண்டறி | சிவன் விகாரி[illegible]றிற்க சிவனருளால் ஆன்மா தானேயறியுமென்ற வவிகாரவாதியையும் ஆன்மாவிற்காகச் சிவன் பிரபஞ்சத்தைச்சுட்டி யறிவனென்னும் பரிணாமவாதியையு மறுத்தது | ௪௦௭ |
| ௧௬—இருணனி | சிவனறிவிக்க ஆன்மாக்கள் நான்செய்தேன் பிறர்செய்தாரென்னு முறைமை | ௪௧௧ |
| ௧௭—அறிந்திடு | இதுவுமது | ௪௧௩ |

| | | |
|---|---|---|
| | வென்னு மாசங்கைக்கு மாயாவாதி சைவர் ஐக்ய வாதி சமவாதி கூறும் கடாவை யாசங்கித்து மறுத்தது | ௪௮௪ |
| ௩அ—அழிந்திடும் | ஞானத்தைப்பெற்ற ஆன்மாக்களிடத்துப் பாசமான ஆணவமலமழியுமென்னும் பேதவாதி மதமும் அழியாதென்னும் சமவாதிமதமும் | ௪௯௧ |
| ௩௯—எல்லையில் | கன்மம் மாயை நீங்கும் வழி | ௪௯௫ |
| ௪0—பந்தமானவை | கன்மத்ரயமும் பஞ்சாக்ஷரபலனும் | ௪௯௯ |
| ௪௧—திருவெழுத் | பஞ்சாக்ஷரத்தில் பதிபசுபாச நின்றமுறைமையு மதனை யுச்சரிப்போரிவரென்பதும் | ௫0௫ |
| ௪௨—ஆசறு | ஆன்மா மலநீங்கி சிவத்தைப் பெறும்வழி | ௫0௯ |
| | ௧௧——சூத்ரம். | ௫௧௨ |
| ௪௩—திங்குறு | கன்மக்ஷயம்வந்த ஜீவன்முத்தர்கள் வாதனையலத்தால் மலமாயாகன்மங்களே மேலிடாது சிவனுடையதிருவருள் ஞானத்தோடுங்கூடி யிரண்டறநிற்குமுறைமை | ௫௧௭ |

உண்மை முற்றியது.

௨

சிவமயம்.

# சிவப்பிரகாசச்

## செய்யுளகராதி.



| | ப. | பால். | செ. | | ப. | பால். | செ. |
|---|---|---|---|---|---|---|---|
| மூ | | | | வ | | | |
| மூவகை | ௬௭ | பா | ௮ | வந்தடைந்து | ௨௬௩ | பொ | ௨௯ |
| மே | | | | வளநிலவு | ௨௯ | பா | ௪ |
| மேலைக்கு | ௨௦௯ | பொ | ௧௮ | வி | | | |
| மோ | | | | விரும்பிய | ௬௯ | ,, | ௩ |
| மோகமிக | ௨௧௪ | ,, | ௨௦ | விளம்பிய | ௬௭௭ | உண் | ௯ |

சிவப்ரகாசச் செய்யுளகராதி

முற்றியது.



இதிலுள்ள குறிப்பெழுத்துக்கள்.

ப—பக்கம்

பா—பாயிரம்

சூ—சூத்திரம்

செ—செய்யுள்

சிவமயம்.

# சிவப்பிரகாச சவ்வியாக்யானம்.

——(※)——

## காப்பு.

திருமேவுமுண்மைச் சிவப்பிரகாசத்தின்
மருமேவுபேருரைக்கு மாணைச் - செருமேற்
றொடக்குஞ்சமர்க்கட் கரிகுழன்மான்றந்த
கடக்குஞ்சரக்கன்றே காப்பு.

இந்தச் சிவப்பிரகாசமென்று சொல்லப்பட்ட நூலுக்குவரலாறுயாது பூரணகத்தாவா யிருக்கப்பட்ட ஸ்ரீகண்டபரமேஸ்வரன் றானருளிச்செய்த முன்னூலாகிய சிவாகமத்தில் ஞானகாண்டமா யிருக்கப்பட்ட பதிபசு பாசத்தினுண்மையை ஸ்ரீநந்திதேவதம்பிரானார்க்குக் கடாக்ஷித்தருள அந்தவுபதேசத்தின் பயனாயிருக்கப்பட்ட சிவஞானபோதமாகிய மூலக்கிரந்தம் பன்னிரண்டையும் ஸ்ரீநந்திதேவதம்பிரானார் சநற்குமாரபகவான் முதலாயுள்ள விருடிகளுக்குக் கடாக்ஷித்தருள வந்த சநற்குமாரபகவான் சத்தியஞான தரிசனிகளுக்குக் கடாக்ஷித்தருள வந்த சத்தியஞான தரிசனிகள் பரஞ்சோதிமாமுனிகளுக்குக் கடாக்ஷித்தருள வந்தப் பரஞ்சோதிமாமுனிகள் திருவெண்ணெய் நல்லூரேயிருப்படை வீடாகவுடைய மெய்கண்டதேவ தம்பிரானார்க்குக் கடாக்ஷித்தருள வந்த மெய்கண்டதேவ தம்பிரானார் அந்தமூலக்கிரந்தம் பன்னிரண்டின்வழியே பன்னிரண்டுசூத்திரமாக வகுத்து அந்நூற்பெயராலே சிவஞானபோதமென்னுந் திருநாமத்தினையு

ஞ்சாத்தி வழிநூலாகச்செய்தருளித் தமது திருவடியைப்பெற்ற அருணந்தி தேவதம்பிரானார்க்குக் கடாக்ஷித்தருள அவரந்நூலை யாராய்ந்து பார்த்தருளி யந்நூற் சொற்சுருங்கி யர்த்தமாழ்ந்திருக்கையினாலே யந்நூலினர்த்தத்தை விரித்துச் சிவஞானசித்தியென்னுந் திருநாமத்தினையுஞ் சாத்தி வழிநூலாகச்செய்தருள இந்தவிரண்டுநூலையுங் கொற்றவன்குடியில் உமாபதிதேவ தம்பிரானார் திருவுள்ளத் தடைத்தருளி யந்தவிரண்டுநூலினர்த்தமுந் தீவிரதரமுள்ள புத்திமான்களுக்கொழிந்து மற்றொருவர்க்குந் தெரியாதென்று கண்டியாவர்க்கு மெளிதாக வறியத்தக்கதாக அந்தவிரண்டுவழி நூலினர்த்தமு முன்னூலாகிய சிவாகமத்தினர்த்தமுந் தம்மிடத்தில் விளைவதாயிருக்கப்பட்ட திருவருண்ஞானமுங் கூட்டிப் பொதுவைம்பது செய்யுளாகவும் உண்மையைம்பது செய்யுளாகவும் ஆகத் திருவிருத்த நூறாகக்கொண்டு சிவப்ரகாசமென்னுந் திருநாமத்தினையுஞ் சாத்திச் சார்புநூலாகச் செய்ததெனவறிக.

என்றிங்ஙனஞ் சிவாகம முன்னூலென்பதற்குஞ் சிவஞான போதமுஞ் சிவஞானசித்தியும் வழிநூலென்பதற்கு மிந்தச்சிவப்ரகாசஞ் சார்புநூலென்பதற்கும் பிரமாணமாவது:—

“வினையினீங்கி விளங்கிய வறிவின் முனைவன்கண்டது முதனூலாகும்”

“முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப் பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி யழியாமரபினது வழிநூலாகும்”

“இருவர்நூற்கு மொருசிறைதொடங்கித் திரிபுவேறுடையது புடைநூலாகும்”

“தன்கோணீஇப் பிறர்கோள் மறுப்பினெதிர்நூலென்ப வொருசாரோரே” என்னு மிலக்கணவிதியைப்பற்றி,

வினையினீங்கி விளங்கியவறிவின் முனைவன்கண்டது முதனூலாகும்; என்னும்விதியால் சிவாகம முன்னூலானதெனவறிக.

இரண்டாவது, முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப் பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி யழியாமரபினது வழிநூலாகும்; என்னும்விதியால் சிவஞானபோதமுஞ் சிவஞானசித்தியும் வழிநூலானதெனவறிக.

மூன்றாவது, இருவர்நூற்கு மொருசிறைதொடங்கித் திரிபு வேறுடையது புடைநூலாகும்; என்னும்விதியால் முன்னூலாகிய சிவாகமத்தினத்தமும் வழிநூலாகிய சிவஞானபோதஞ் சிவஞானசித்தியினத்தமுங் கருத்திலுறைதிருவருளாகிய வேற்றுமையத்தமுங்கூட்டி யருளிச் செய்கையாலிந்தச் சிவப்பிரகாசஞ் சார்புநூலானதெனவறிக.

என்றிங்ஙனஞ் சிவாகம முன்னூலென்பதற்குஞ் சிவஞானபோதமுஞ் சிவஞானசித்தியும் வழிநூலென்பதற்குஞ் சிவப்பிரகாசம் புடையாகிய சார்புநூலென்பதற்கும் பிரமாணமேதெனின்?

ஞானதீக்கைத் திருவிருத்தத்தில். "தேசமிகுமருட்பயின்ற சிவப்பிரகாசத்திற் றிரிந்துபொதுச்சங்கற்பநிராகரணந்திருந்தி, யாசிலருள்விளக்கவெண்பாச்சார்புநூலா லருளொளிநிற்குறிகூட வளித்துஞானப், பூசைதக்ககாரணைமுன் புகன்றதனிற்பிரிந்து புணர்விக்கச் சிவஞானபோத சித்திவழிநூல், மாசில்சதாமணிக்கோவை முன்னூல்சான்று மருவுதிருமுறைத்திரட்டுவைத்தனன் மன்னுயிர்க்கே"—என்பது கண்டுகொள்க.

அன்றியுமிந்தச்சார்புநூலாகியசிவப்பிரகாசமென்னு நூலிலே முன்னூலினத்தமும் வழிநூலினத்தமும் அதுநீங்கலாக வேற்றுமையத்தமுங்கூட்டி யருளிச்செய்ததற்குப் பிரமாணம்.

இந்நூலிலே. "தெரித்தகுருமுதல்வருயர்" என்றசெய்யுளிலே "இறைவனூலுங் கலந்து" என்றமையான் முன்னூலினத்தமுங் கூட்டினதெனவறிக.

"விளம்பியநூலவை யிரண்டும் விரும்பிநோக்கி" என்றமையால் வழிநூலினைத்தழுங் கூடினதெனவறிக.

"கருத்திலுறை திருவருளும்" என்றமையால் திரிபுவேறுடைய வேற்றுமையத்தழுங் கூடினதெனவறிக.

ஆகமூன்றுவகையு மிங்ஙனங்கண்டுகொள்க.

இந்தச்சிவப்பிரகாசமாகியநூலிற் செய்யுள் நூற்றுக்குங்கருத்தே தென்னில்:—

பாயிரமீராறு பதியாறுபல்லுயிரொன்
றேயுந்திரோதமல மொன்றென்பர்—தூயபத
முத்திதருமாயை யொன்றுமூவுங்கிற்
புத்திதருமாயைப் புணர்ப்பாறு—பெத்தம்வி—
னன்றுதீதாகும்வினை நாலாகுநாடோறுந்
துன்றுமலத்தின் றொகையொன்று—பொன்றவருங்
கேவலமைந்து கிளக்கிலுயிருக்குப்
பாவுணர்த்தும் வைகரியின் பாலிரண்டு—தேவர்களுங்
கூடுஞ் சகலநாலைந்தாகுங்கூடுமலம்
வீடுகின்ற சுத்த[illegible]பொன்று—நீடுமின்ப
முத்தியொன்றாக மதித்தருளாய்முன்னோர்கள்
பத்தியாற்சொன்ன பரிசிறு—வித்தலமே
லுண்மையுரைக்கி லுயிருண்மையொன்பதா
நண்ணவுத்தைமூன்று நலமாக—வெண்ணரிய
தன்னையுணர்த்துந் தகையைந்துதன்னுணர்த்து
மன்னுணர்வின்ஞான வகைமூன்று—பின்னுயிரை
மாசறவேகாணும் வகையைந்துமற்றதனி
லாசொழிக்குந்தன்மை யதுநான்கு—தேசனுருப்
பார்வையறப்பார்க்கும்வகை பத்தாம்பஞ்சாக்கரத்தைத்
தேரும் வகைமூன்று தெரியுங்கால்—சீர்மருவு

மன்யாற்சிவனை யநுபவிக்குமெய்யடியா
ரின்பப்பகுதி யிருமூன்று—துன்பமறச்
சொற்றருநூலின்கருத்தொன்று சொற்றருநூ
னற்றவருக்கியு நலமொன்று—முற்றவரும்
பந்தமறுத்த சகநாதன்பார்வையென
வந்தளித்தசம்பந்த மாமுனிவ—னெந்தைபதஞ்
சென்னியின்மேல்வைத்துச் சிவப்ரகாசக்கருத்தை
யன்னவயற்காவை யம்பலவ—னன்னயத்தாற்
சொன்னனெழுபிறப்புந் தொல்லைவினையுந்தீர
மன்னாகமத்தை மதித்து. எ-று. கண்டுகொள்க.

அன்றியு மிந்நூலுக்குத் திருவடிவரைவு மதிகாரமு மொக்க வரும்வகையாவது:

ஓங்குபரந்த நலம்வளந்தேவர்பா
ரீங்கிவையாறு மிறைவன்வணக்கம்
புறச்சமயத்தவர் நூற்கருத்தாகு
மூவகைவிரும்பிய கிரியையெனமூன்று
மாவதுதீக்கா முறைமைபதாகுந்
தெரித்ததொன்மை யெனவிவ்விரண்டும்
விரித்தநான்மா பவையடக்கம்மே
பலகலைபீடிகை யுலகங்கந்த
மேற்றவிவ்வாறு மிறைவனிலக்கண
மெண்ணிதொன்றும் பசுவிலிலக்கண
மேகமாமொன்று மலமுந்திரோதமு
முன்னவொன்றுங் குடிலையிலியல்பா
முருவாகியென்னை படைத்தவல்ல
லருத்திமன்னிய வாதுமசத்துத்
திருத்தகுமாயையின் செய்தியதாகும்

கண்ணியகன்ம மேலையுற்றவென்
றெண்ணியநான்குங் கன்மத்தியல்பே
மோகமிகவென் றெண்ணியவொன்றும்
வேகமிகுமல மைந்தின் விதியே
போங்கின்மைமாயை யந்நியம்புகலு
நீங்கிவையைந்துங் கேவலத்தியல்பே
வந்தடைந்தித்தகை பேசியவைகை
யந்தமிலகில் குணமானதனுவுடன்
சொன்னமுந்தி யிந்நிலைதோற்றி
யன்னபத்துஞ் சகலவவத்தையே
யிதையநாதி யெனவிவ்விரண்டு
முன்னவன்சுத்த முறைமையதாகு
மிவையொன்றும் பாசமபத்தவர்
மருவிய முத்தியின் வாய்மையதாகு
மென்னும்பொதுவியல் விருத்தமைம்பதின்
மன்னியகருத்தை வகுத்தனிப்பா
லிங்கிவையொன்று முன்மையிற்பாயிரஞ்
செறிந்திடுமுருவனா நதிவெளிவாயி
லறிவிறுலெவ்வறி வசத்தறிந்தவுஞ்
சத்திதகன்றொளி போரிடத்தெட்டு
மித்திரமான்ம விலக்கணமாகு
மென்னவிவ்வகை நீக்கமின்மூன்று
மன்னவளித்த வவத்தையதாகு
மருவியதனக்கெனக் கண்டறிபுலன்க
ளிருணியறிந்திடு மிவைபோரைந்தும்
பொருவிலான்மாவை புணர்த்தல்புகலுங்
காட்டிடும்பன்னிற மாயைமின்மூன்று

ஊட்டுஞான வாய்மையையுரைக்குந்
தேசுறமும்மையின் பாரிப்பதாகுந்
தன்னறிதத்துவ முறைதருசுத்த
மின்னவைநான்கு மன்னுயிர்த்தரிசனம்
புகலருமின்றுநோக் கிந்நிலையடைபவ
ரிகலறுநான்கு மிலங்குயிர்ச்சுத்தி
பொற்புறுமொடுங்கிடா பற்றிடுமுந்திய
சொற்பெறுபாசம் விளம்பியபாவிக்கி
லொன்றிரண்டாகி யழிந்திடுமெல்லை
யென்றிவையத்து மிலங்குயிரிலாபம்
பந்தந்திருவெழுத் தைந்திலாசற
மந்தமின்மூன்று மைந்தெழுத்தருணிலை
நீங்குறுகுறிப்பக மண்டமன் றொண்டரென்
றோங்கிவையாறு மணைந்தோர்தன்மை
நிலவுலகொன்று நூற்கருத்தாகுந்
திருவருளொன்று மருளுறைநாலைக்
கொடுக்குமுறைமைப் பகுதியதாகுமென்
றிப்படியுமாபதி தேவனுரைத்த
மெய்ப்படுசிவப்பிர காசவிருத்தக்
கருத்தினதுண்மை விரித்துரைத்தருளினன்
சண்டையில்வாழுந் தவகுருநாதன்
பண்பமர்சிற்றம் பலவன்றனே. எ - று. கண்டுகொள்க.

என்றின்னணங் கூறிவந்தவகையில் முன்னுள்ள சிவஞானபோதத்தினுக்குஞ் சிவஞானசித்தியினுக்கு மிந்தச் சிவப்பிரகாசவழிநூலினுக்குங் கூடினதோயாறு லக்நூல்களைப்போலச் சூத்திரம் பன்னிரண்டு மிந்நூலி லின்றமுறைமை யெங்ஙனே யென்னில்? அவைவருமாறு.

ஓங்கொளியாயென்ற விருத்தந்தொடங்கித்தொன்மைய வா மென்னும் விருத்தமுடிவாகிய செய்யுட் பன்னிரண்டும் பாயிர மாக வகுத்தருளிச்செய்து,

மேற் பதி யிலக்கணமாகிய பலகலையென்ற விருத்தந்தொட ங்கி ஏற்றவிவையென்ற விருத்தமுடிவாகிய செய்யுளாறு முதற் சூத்திரமாகவும்,

பசுவிலக்கணமாகிய எண்ணரிதாயென்ற விருத்தந்தொட ங்கி அரிவையரின்புறமுத்தி யென்ற விருததமுடிவாகிய செய்யுள் முப்பத்திரண்டு மிரண்டாஞ்சூத்திரமாகவும்,

ஆகப்பொதுவைம்பது மிங்ஙனம்வகுத்து,

மேலுண்மை யைம்பதில்,

இங்கிவையென்ற விருத்தமொன்றும் இந்தஉண்மைக்கு அதி காரவகுப்பாகவும்,

மேல் ஆன்மவிலக்கணமாகிய செறிந்திடுமென்ற விருத்தந் தொடங்கி ஓரிடத்திருத்தலென்ற விருத்தமுடிவாகிய செய்யுளெ ட்டு மூன்றாஞ்சூத்திரமாகவும்,

அவத்தைத் தன்மையாகிய எண்ணவொன்றிலாததீதம் இவ் வகையவத்தை நீக்கமிலதீதம் ஆகச் செய்யுள்மூன்று நாலாஞ் சூ த்திரமாகவும்,

உணர்த்து முறைமையாகிய மருவியபொறியிலென்ற விருத் தந்தொடங்கி யறிந்திடுமறுநி யென்ற விருத்தமுடிவாகிய செய் யுளைந்தும் ஐந்தாஞ் சூத்திரமாகவும்,

ஞானவாய்மையாகிய காட்டிடுங்கரணம் பன்னிறங்கவரு மாயைமாமாயையென்னும் விருத்த மூன்றினுள் காட்டிடுங் கரண மொன்றும் ஆறாஞ்சூத்திரமாகவும்,

நின்றவிருத்தமிரண்டு மேலதற்கோர் புறனடையாகிய வே ழாஞ்சூத்திரமாகவும்,

மேலதன்பயனென்னு மதிகாரத்தினுள் தேசுறமருவுமென்ற விருத்தந்தொடங்கி எல்லையில்பிறவியென்னும் விருத்த முடிவாகிய செய்யுட் பத்தொன்பதும் புனிதகுணமென்னு மதிகாரமாகிய பந்தமானவை திருவெழுத்து ஆசறுவென்னும் விருத்தமூன்றும் ஆகமூன்றுங்கூட்டிச் செய்யுள் இருபத்திரண்டினுள் தேசுறமருவுமென்ற விருத்தமொன்றும் இவையிற்றுக்கு அதிகாரவகுப்பாகவும்,

ஆன்மதரிசனமாகிய தன்னறிவதருளென்ற விருத்தந் தொடங்கிச் சுத்தமாஞ்சத்தியென்ற விருத்தமுடிவாகச் செய்யுள்நாலும் எட்டாஞ்சூத்திரமாகவும்,

ஆன்மசுத்தியாகிய புகலருமசுத்தர்தம்பாலென்ற விருத்தந்தொடங்கி அடைபவர் சிவமேயாகுமென்றவிருத்தமுடிவாகிய செய்யுள்நாலும் பஞ்சாக்கர தரிசனத்தில் விருத்தமூன்றும் ஆக மூன்றுங்கூடிச் செய்யுளேழும் ஒன்பதாஞ்சூத்திரமாகவும்,

ஆன்மலாபமாகிய பொற்புறு கருவியென்ற விருத்தந் தொடங்கி எல்லையிற் பிறவியென்ற விருத்தமுடிவாகிய செய்யுட்பத்தும் பத்தாஞ்சூத்திரமாகவும்,

மேல் அணைந்தோர் தன்மையாகிய திங்குறு மாயையென்ற விருத்தந்தொடங்கித் தொண்டர்களிடமென்ற விருத்த முடிவாகச் செய்யுள் ஆறினுள் திங்குறு குறிப்பிடம் அகம்புறம் அண்டம் மண்முதலென்னும் விருத்தமைந்தும் பதினோராஞ்சூத்திரமாகவும்,

தொண்டர்க ளிடமென்ற விருத்தமொன்றும் பன்னிரண்டாஞ்சூத்திரமாகவும் நின்றனவறிக.

இங்ஙனஞ்சூத்திரம்பன்னிரண்டும் வகுத்து நிலவுலகாதியென்னும்விருத்தமொன்றுமிந்நூலின்கருத்தாகவும்,

திருவருள்கொடுத்து என்னும்விருத்தமொன்றுஞ் சீடனுக்கு நூலுமத்தமுங் கொடுக்குமுறையாகவும் வகுத்து இந்நூலருளிச்செய்ததெனவறிக.

ஆகவிங்ஙனஞ் சூத்திரங்கள் வகுத்ததுக்கு மேலெழுதுகிற வியாக்கியிலேயந்தந்த வதிகாரங்கடோறுஞ் சிவஞானபோதத்திலுஞ் சிவஞான சித்தியிலும்வருஞ் சூத்திரத்தினேதுக்களுங்காட்டி யெழுதுகிற முறைமையிலே சூத்திரம் பன்னிரண்டுங் கண்டுகொள்க.

இந்த வியாக்கியானஞ்செய்தது மெய்கண்ட சந்ததியில் காவையம்பலநாதத்தம்பிரானார் திருவடிமரபில் ஆசாரியரில் மதுரையில் ஞானப்பிரகாசத் தம்பிரானார் திருவடியடியரில் சிவப்பிரகாசன்செய்த வியாக்யானமெனவறிக.

இந்தச் சிவப்பிரகாசமாகிய நூலுக்கு முன்னோர்களும் வியாக்கிசெய்திருக்க இப்பொழுது இந்தவியாக்கிசெய்யவேண்டுங்காரணமேதென்னில்? முன்னுள்ள தம்பிரான்களெழுதின வியாக்கிகளெல்லாம் பொழிப்புரையாகவெழுத அதனோடு சமயிகள் கருத்துகளுங்காட்டியென்றம்பிரான் ஞானப்பிரகாசத் தம்பிரானாரெழுதின வியாக்கியின்வழியேயதொந்தனையும் பாட்டுஞ்சேர்த்து அதுநீங்கலாகக் காவையம்பலநாதத்தம்பிரானார் இந்நூலின் கருத்தாகச் செய்தருளின குறள்வெண்பா நூறும் இந்நூலிற் பாட்டுகடோறும் பகுத்துச் சேர்த்து அந்தக்குறளின் கருத்தாகிய அர்த்தங்களுக்குந் தவறுவராமல் முன்னுண்டான வியாக்கியளின்பொழிப்போடும் விரிவோடும் நுட்பமும் அகலமுங்காட்டி வழிநூல்களிலுண்டான சூத்திரம் பன்னிரண்டும் இந்நூலிலேவகுத்து வியாக்கி செய்ததெனவறிக.

இங்ஙனம் பலவகையாக வியாக்கியெழுதுகைக்கு விதி யேதென்னில்? அஃதாவது.

"பொழிப்பகல நுட்ப நூலெச்சமென் றுரைக்
கொழித்தகலங் காட்டாதார் சொற்கள்—பழிப்பி
னிரையாமா செக்கர் நெடுங்குன்ற நாடா
வுரையாமோ நூலுக்கு நன்கு" என்றமையான்

நூல்களுக்கு நால்வகைப்பொருள்களுங் கூட்டி வியாக்கிசெய்யும் விதியுண்டாகையா லவ்விதியைப் பற்றிப் பொழிப்பும் அகலமும் நுட்பமும் நூலெச்சமுங் காட்டி வியாக்கியெழுதினதெனவறிக. அஃதாவது?

"பொழிப்பெனப்படுவது பொருந்தியபொருளைப் பிண்டமாகக்கொண்டுரைப்பதுவே" எ - ம்,

"அகலமென்பதாசறக்கிளக்கின் விகலமின்றி விரித்துரைப்பதுவே" எ - ம்,

"நுட்பமென்பது நுழைபொருளியாவுந் திட்பமாகத் தெளியக்கூறல்" எ - ம்,

"எச்சமென்ப திருபொருளொழிவு மிச்சமாக விரித்துரைப்பதுவே" எ - ம், வருமிலக்கணவிதியைப்பற்றியென வறிக.

இதிற் பொழிப்பாவது சத்தத்துக்கு அர்த்தமாகத் தொகுத்தெழுதுகை யெனவறிக.

அகலமாவது அதனைவிரித்தெழுதுகையெனவறிக.

நுட்பமாவது கடாவுக்கு விடைகொடுத் தெழுதுகை யெனவறிக.

எச்சமாவது பாட்டிற் பகுதாதபொருள்களை யமைத் தெழுதுகை யெனவறிக.

மேற்பாயிரம்வருமாறு:-

இங்ஙன மிந்தநூல்களுக்கு முந்தப் பாயிரங்கூறுகைக்கு விதியேதென்னில். "ஆயிர முகத்தா னகன்றதாயினும் பாயிரமில்லது பனுவலன்றே" என்னும்விதியைப்பற்றி முந்தப் பாயிர மருளிச்செய்யவேண்டி இந்நூலுக்குக் காப்பொரு செய்யுளாகவும் பாயிரம் பன்னிரண்டு செய்யுளாகவுமருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

ஒளியான திருமேனி யுமிழ்தானமிகமேவு
களியாரவருமானை கழனாளுமறவாம
லளியாருமலர்தூவு மடியார்களுளமான
வெளியாகும்வலிதாய வினைகூடநினையாவே.

ஒளியிதுகாப்பருட் கணபதிகழலிணை
தெளிபவருளம்வினை சேராவென்றது.

| | |
|---|---|
| (இ - ள்) ஒளியான திருமேனி | ஞானப்பிரகாசமான திருமேனியிலே |
| உமிழ்தானமிகமேவு களியாரவருமானை | பொழியாநின்ற மதத்தினை மிகவும்பொருந்தப்பட்டுக் கர்வமிகுதியாலே யெழுந்தருளாநின்ற யானைமுகத்தினையுடைய மூத்தநாயனார் |
| கழனாளுமறவாமல் | அவனது ஸ்ரீபாதத்தை நாடோறுமறவாமல் |
| அளியாருமலர்தூவுமடியார்கள் | வண்டுகளை யாட்சியாகவுடைய பூக்களினாலே யர்ச்சித்து வழிபடுகிற தொண்டராயுள்ளவர்கள் |
| உளமானவெளியாகும் | உள்ளமானது அஞ்ஞானமாகிய விருணீங்கி சிவஞானம்பிரகாசியாநிற்கும் ஆகையாலே |

வலிதாய வி. அவர்களை மிக்க வினைகளானதும் பொ னை கூட நினையா ருந்தவிசாரியாது. எ - று.

வே.

என்னவே இந்நூல்காப்பது நிமித்தமாக வழிபடாநின் றேமென்பது கருத்து.

நுட்பம் — ஞானமென்றது அறிவெனவறிக.

தானமென்றது மதமெனவறிக.

அடியார்களென்றது தங்கள் சுதந்தரஹானியையறிந் துவழிபடுந்தொண்டர்களெனவறிக.

சுதந்தரஹானியாவது யானெனது கெடுநிற்கை யென வறிக.

வலிதாய வினையென்றது பிராரத்தம் புசிக்கச்சேயே றுகிற ஆகாமியகன்மமெனவறிக.

இதற்குப்பிரமாணம். திருவருட்பயனில். "ஏன்றவினை யுடலோடேகு மிடையேறுவினை, தோன்றி லருளேசுடும்." எ - று. கண்டுகொள்க.

இதன்கருத்து. இந்நூலுக்குக் காப்பெனவறிக.

---

வேறு.— ஒளியானதிருமேனி - ஞானப்பிரகாசமான திருமேனியையும்,—உமிழ்தானமிகமேவுகளி - கவுட்சுவடுமி மூாநின்ற மதமிகப்பொருந்தி யருட்களிப்பினையுமுடைய,— ஆரவரும்யானை கழுகு ஞமறவாமல் - தியானிப்போர் கண் ணுமனமுநிறைய வெளிப்படுகின்ற வானைமுகத்தனாகிய கண பதியினுடையசீர்பாதங்களை நாடோறுமறவாமல்,—அளியா ளுமலர்தூவு மடியார்களுளமான - செவ்வியால் வண்டுகளை யாளாநின்ற மலர்களையிட்டு வழிபடுகின்ற வடியவருள்ளமா னவைகள்,—வெளியாகும் - முன்புண்டான வஞ்ஞானவிரு

னீங்கி ஞானப்பிரகாசமாம்,—வலிதாய வினை கூட நினையாவே - பின்புவன்மையதான மூவிதவினைகளு மவர்களைப்பொருந்தவிசாரியா. எ - று.

ஆணை - ஆகுபெயர். அவன்யாண்டுஞ்செறிந்து போக்குவரவின்றிநிற்றலின் வருதலீண்டுவெளிப்படுதன்மேற்று. வினைசாதியொருமையாதலின் வலிதென்றார்.

இதுகடவுள்வணக்கத்திற்கு முதற்பொதுவாகத் துதித்த விநாயகத்துதி

---

இனிப்பாயிரம் பன்னிரண்டும் வருமாறு:-

நின்மலசொரூபமாயிருக்கப்பட்ட பரமசிவமானது ஆன்மாக்களுக்குண்டான ஜநநமரண துக்கத்தை நீக்குகைப் பொருட்டாகத் திருவம்பலத்தின்கண்ணே நின்று திருநடஞ்செய்த வடிவத்தைநோக்கி யிந்நூற்செய்து முடிவது பொருட்டாகத் தோத்திரம்பண்ணுவா னெடுத்துக்கொண்டருளியது.

ஓங்கொளியா யருண்ஞான மூர்த்தியாகி யுலகைமேலா மளித்தருளு முமையம்மைகாணத், தேங்கமழு மலரிதழி திங்கள்கங்கை திகழரவம் வளர்சடைமேற் சேரவைத்து, நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்கமன்றுளிமையோர் துதிசெய்ய நிருத்தஞ்செயும், பூங்கமல மலர்த்தாள்கள் சிரத்தின்மேலும் புந்தியினு முறவணங்கிப் போற்றல்செய்வாம். (௧)

மன்னியகடவுள் பொன்னடிவாழ்த்தி
முன்னவனுண்மை முறைமைமொழிந்தது.

(இ - ள்) ஓங்கொளியாய் — நின்மலசொரூபமாயிருக்கப்பட்ட பரமசிவமானது பிரகாசமான பரையி

னது சொரூபமாகிய பேரொளியாய்ப் பிரிவற நிற்கச்செய்தே பிரபஞ்சங் காரியப்படுத்துமவதரத்து

அருண் ஞான மூர்த்தியாகி

தனது காருண்ணியத்தினாலே யிச்சா ஞானக் கிரியாசொருபனாய்

உலக மெலா மளித்தருளு மு மை யம்மை காண

பிரபஞ்சத்தையெல்லா மிரக்ஷித்தருளுகிற வுமாபரமேஸ்வரியார் திருக்கண்சாத்தியருள

தேங்கமழு மலரிதழி திங்கள் கங்கை திகழரவம் வளர்சடைமேற்சேரவைத்து

மணம்விட்டு வீசாநின்ற கொன்றை மலரினையுந் திருவிளம்பிறையினையுங் கங்காபரமேஸ்வரியையும் பணாமணிகளினாலேவிட்டு விளங்காநின்ற நாகத்தினையு நீண்டதிருச் சடாபாரத்திலே பொருந்தவைத்து

நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்க

ஆன்மாக்களால் விட்டு நீங்குதற்கரிதாகிய பிறவித்தொந்தனைவிட்டு நீங்குகைப் பொருட்டாக

மன்றுணின்றிமையோர் துதிசெய்ய நிருத்தஞ்செய்யும். (அந்வயம்.) இமையோர் துதிசெய்யமன்றுணின்று நிருத்தஞ் செய்யும்

தேவர்களாயுள்ளோர்கள் தோத்திரம் பண்ணத் திருவம்பலத்தின் கண்ணே நின்று திருக்கூத்தாடல் செய்தருளுமவனது

பூங்கமலமலர்த்தாள்கள்சிரத்தின்மேலும்புந்தியினு முறவணங்கிப் போற்றச் செய்வாம்.

பொலிவினையுடைத்தாகிய தாமரைமலர்போன்ற ஸ்ரீபாதங்களை இந்நூல்செய்து முடிவதுபொருட்டாக வென்னுதலைமேலு மனத்தினு மழுந்தவைத்துத் தோத்திரம் பண்ணுகின்றேன்.

ஓங்கொளியாய் என்பதற்கு அந்தப்பரமசிவமானது பரையினது சொரூபமாகிய பேரொளியாயிருக்குமென்று பொருட்கூறியதேதென்னில்? அஃதாவது, ஆய்என்ற விகாரச்சொற்கொண்டே அந்தப்பராசத்தியுடம்பாகப் பரமசிவனிற்கையாலே யப்படிச் சொல்லப்பட்டதெனவறிக. இதற்கு வழியேதென்னில்? தனக்கென்றொருநிறமில்லாத சுத்தபடிகமானது கூடினதினிறமாயிருந்தாற்போலத் தனக்கென்றொரு சொரூபமில்லாத அந்தப்பரமசிவமானது தனது பரையினது சொரூபமாகிய பேரொளி யாகையாலேயும் அந்தச்சத்திடமாக விச்சாஞானக்கிரியா சொரூபனாகையாலேயும் அப்படிச்சொல்லப்பட்டதெனவறிக.

இதற்கு. பி - ம். சிவஞானசித்தியாரில். "பொன்மைநீலாதிவன்னம் பொருந்திடப் பளிங்கவற்றின், றன்மையாய் நிற்குமாபோற் சத்திதன் பேதமெல்லா, நின்மலன் குணமாய்த் தோன்றி நிலைமையொன்றுமே நிற்பன், முன்னருட்சத்திதன்பால் முகிழ்க்குந்தான முளையானன்றே." எ - து. கண்டுகொள்க. அன்றியு மந்தப்பரமசிவமானது தனக்கென்றொரு சொரூபமாயிராதென்பதற்கு. பி - ம் சித்தியாரில். "குறிப்படியினின் றட்டகுண மெட்டுச்சித்தி" என்னுஞ்செய்யுளில் "மேலொடுகீழில்லா, விருத்தாயதோர் குணமில்லான் றன்னை யொருவருக்கு நினைப்பரியா னொன்றுமில்லான்." எ - ம்.

கண்டுகொள்க. அன்றியு மிந்நூலினும் "பலகலை" என்னுஞ்
செய்யுளிலே "பதிபாலேயதுதா னிலவுமருவுருவின்றிக் கு
ணங்குறிகளின்றி நின்மலமாய்" எ-ம் தேவாரத்தினும "இன்
னதன்மையனென் றறியொண்ணு வெம்மானை" எ-ம். திருவா
சகத்தினும் "ஒருநாம மோருருவ மொன்றுமிலார்" எ-ம்.
இப்பொருட்பற்றி யெனவறிக.

அன்றியு மந்தப்பரமசிவமானது அப்படிப் பேரொளி
யாயிருக்குமென்றது. அதுசோமசூரியாக்கினி நக்ஷத்திரங்க
ள்முதலாயுள்ளவையிற்றுக்கு மொளிகளையுங் கொடுப்பதா
ய் சக்ஷுரிந்திரியத்தை மறைக்கப்பட்ட புறவிருளைப்போல
ன்றி மற்றுள்ள விடயவிந்திரியங்களையு மறைப்பதாய் ஆன்
மாக்களுடைய விச்சாஞானக்கிரியைகளை மறைக்கப்ப
ட்ட பேரந்தகாரமாகிய ஆணவமலத்தைநீக்குகையாலே அப்
படிச்சொன்னதெனவறிக. அப்படிச்சிவன்பேரொளியுமா
யிருப்பனென்பதற்கு பி-ம். தேவாரம். "காரொளிய திரு
மேனிச் செங்கண்மாலும்" என்னுந் திருப்பாட்டிலே "பே
ரொளியைப் பெரும்பற்றப்புலியூரானை" எ-து. கண்டுகொ
ள்க. அன்றியும் திருவாசகத்தில். "வெளிவந்திலேனை விதிவி
சுண்டாய் மெய்ச்சுடருக்கெல்லா மொளிவந்த பூங்கழல்"
எ-ம். கோவைத்திருவாசகத்தில். "உருகுதலைச்சென்ற வுள்
ளத்து மம்பலத்தும் மொளிபே, பெருகுதலைச்சென்று நின்
றோன்" எ-ம். கண்டுகொள்க. அன்றியும் சிவனை சோமசூரி
யாக்கினி நக்ஷத்திரங்கள் முதலாயுள்ளவையிற்றுக்கு மொளி
களைக் கொடுப்பானென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "நாய
கன் கண்ணையப்பா னாயகி புதைப்ப வெங்கும், பாயிருளாகி
மூடப் பரிந்துலகினுக்கு நெற்றித், தூயநேத்திரத்திலே
சுடரொளிகொடுத்த பண்பிற், றேயமா ரொளிகளெல்லாஞ்
சிவனுருத் தேசதென்றார்" எ-து. கண்டுகொள்க.

இனி யருண்ஞான மூர்த்தியாகி. எ - கு. ஞானமொன்றையுஞ் சொல்லவிச்சாஞானக்கிரியா சொரூபனென்று பொருட்கூறிய தேதென்னில் ஞானமுண்டான விடத்திலே இச்சையுங் கிரியையு முண்டாகையா லப்படிச்சொன்ன தெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில் "எதநிறஞானமுள்ள தத்திற மிச்சைசெய்தி, வைத்தலான் மறைப்பின்ஞான மருவிடுங்கிரியை யெல்லாம்" எ - து. கண்டுகொள்க.

இனி திங்கள்கங்கை திகழரவம் வளர்சடைமேற் சேரவைத்து. எ - கு. இவைகளைப் பொருந்தவைத்து என்றதேதென்னில்? பாம்புஞ் சந்திரனுந் தம்மிற் பகையாயிருக்கவு மவையிற்றைப் பகையறவைக்கையா லெனவறிக. இதற்கு. பி - ம். தேவாரத்தில். "பாம்பொடுதிங்கட் பகைதீர்த் தாண்டாய்" எ - து. கண்டுகொள்க.

நிருத்தமென்றது - பஞ்சகிருத்தியத்தை யெனவறிக. இதற்கு. பி - ம். சித்தியாரில் "உலகமேயுருவமாக யோனிகளுறுப்பதாக, விலகுபேரிச்சாஞானக் கிரியையுட்கரணமாக, வலகிலா வுயிர்கட்கெல்லா மிருபயனுக்கியைந்து, நலமிகு தொழில்களோடு நாடகநடிப்பனுதன்" எ - து. கண்டுகொள்க. பவத்தொடர்ச்சி நீங்க நிருத்தஞ்செய்யுமென்றது மிம்பொருட்பற்றி யெனவறிக. அப்படிச் சிவன் பஞ்சகிருத்தியஞ்செய்யவே யான்மாக்கள் மலபரிபாகம்பெற்று முத்தியைப்பெறுவார்களென்பதற்கு பி - ம். சித்தியாரில் "சொன்னவித் தொழில்களென்ன காரணந்தோற்ற மென்னில், முன்னவன் விளையாட்டென்று மொழிதலு மாமுயிர்க்கு, மன்னிய புதிமுத்தி வழங்கவு மருளான்முன்னே, துன்னிய மலங்களெல்லாந் துடைப்பதுஞ் சொல்லலாமே" எ - து, கண்டுகொள்க.

இனி சிரத்தின்மேலும் புந்தியினு மறவணங்கிப் போற்றல்செய்வாம். எ - று. வஸ்துவென்றுயிருக்க. சிரத்தின்மேலும் புந்தியினுமென்று இருவகையான தேதென்னில் திக்கையிலுண்டான சகளத்தையுந் தியானத்தி லுண்டான நிஷ்களத்தையு மெனவறிக. அவையாவன, சகளமென்றது ஆசாரியமூர்த்தியாகி வந்து அறிவித்துத் திருவடியை வைத்ததென வறிக. நிஷ்களமென்றது உயிர்க்குயிராய் நின்றறிவிக்கிறபேரறிவை யெனவறிக. இதற்கு பி-ம். சித்தியாரில். "என்னையிப்பவத்திற்சேரா வகையெடுத்தெனசித்தத்தே, தன்னைவைத்தருளினாலே தாளிணை தலைமேற்சூட்டும்." எ - ம். திருக்களிற்றுப் படியாரில் "சிந்தையினுமென்றன் சிரத்தினிலுஞ் சேரும்வகை, வந்தவனை மண்ணிடையும் வாராமற்-றந்தவனை." எ - ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது நின்மல சொரூபியா யிருக்கப்பட்ட பரமசிவமானது தனதுபரையினது சொரூபமாகிய பேரொளியுமா யிச்சா ஞானக் கிரியாசொரூபியுமாய்த் திருவம்பலத்தின் கண்ணே நின்று திருநடஞ்செய்து யவ்தரத்தை நோக்கி யிந்நூற்செய்து முடிவது பொருட்டாகத் தோத்திரம்பண்ணு முறைமையை யறிவித்தது. (௧)

---

வேறு— இது நிட்களபரமசிவனைத் துதித்த லுணர்த்திற்று.

ஓங்கொளியாய் - அநாதிமலவிருளை நீக்குதலி னெல்லாவொளியினு முயர்ந்த வொளியாய்,— அருண்ஞான மூர்த்தியாகி - அநாதிமலமுத்தனாதலிற் றன்னுடைய கருணையான ஞானமே திருமேனியாகவுடைய நிட்கள சிவனானவன,— உலகமெல்லா மளித்தருளு முறைமையம்மைகாண - பிரபஞ்சத்

தைதயெல்லா முண்டாக்காநின்ற கிரியாசத்தியான உமையெ ன்னுந் திருநாமத்தைப்பெற்ற வெல்லாவுயிர்க்குந் தாயான வர்களை,—தேங்கமழ்மலர்தழி திங்கள்கங்கை திகழாய ம்வளர்சடைமேற் சேரவைத்து - மணநாறுகின்ற விரிந்த கொன்றைமாலையினையு ஞானசந்திர கலையினையுங் கங்காந தியினையும் விளங்காநின்ற பாம்பினையு நீண்டசடையின்மேல் பொருந்தவைத்து,—நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்கமன் றுணின்று - விட்டுநீங்குதற்கரிய பிறவித்தொடர்ச்சி தன்னு டனே கூடினோரை விட்டுநீங்கும்படி சிற்றம்பலத்தின்கணிலை பெற்று,—இமையோர் துதிசெய்ய நிருத்தஞ்செய்யும்-தேவர் கள் துதிப்ப ஞானக்கூத்தை யாடியருளும்,—பூங்கமலமலர்த் தாள்கள்-பொலிவினையுடைய தாமரைமலர்போன்ற சீர்பாத ங்கள்,—சிரத்தின்மேலும் புந்தியினு முறவணங்கிப் போற்ற ல்செய்வாம் - எம்முடைய தலைமேலு மிதயத்துள்ளும் பொரு ந்தும்படி வணக்கஞ்செய்து துதிப்பாம். எ-று.

ஆதி என்பதும்பெயர். இனியருளாயெனை மாறி யொளியை யெழுவாயாக்கலுமாம். செய்யுந்தாள்களென்புழி முதலொ டுசினைக் கொற்றுமைகருதி முதல்வினை சினைமேலேற்றப்பட் டது.

---

இங்ஙனந் திருநடஞ் செய்தருளுகிற சிவனுக்குண்டான கிருத்தியங்களுக் கெல்லா முடனா யிருக்கப்பட்ட பராசத் தியை நோக்கித் தோத்திரம் பண்ணுவா னெடுத்துக்கொண் டருளியது.

பரந்தபரா பரையாகி பராசத்தி பராஞானங்
கிரியைபரா போகரூபந், தருங்கருணை யுருவாகி விசுத்
தசத்தந் தனுகரணை புவனபோ கங்கடாங்க, விரிந்த
வுபா தானங்கள் மேவியொன் றாய் விமலமா யையங்

தொழிற்கும் வித்தாய்ஞாலத், தரந்தைகெட மணிமன்று ளாடல்காணு மன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம். (உ)

புத்தியு முத்தியும் பொருந்திநின் றளிக்குஞ்
சத்திதன் பேதத் தகைமை சாற்றியது.

| | |
|---|---|
| (இ-ள்) பரந்த பராபரை | எங்கும் பரிபூரணமாயிருக்கிற மேலான பராசத்தியானது |
| ஆதி | திரோத சத்தியுமாய் |
| பரனிச்சை பரஞானங் கிரியை | பரனுடைய விச்சா சத்தியென்றும் மேலான ஞானசத்தியென்றுங் கிரியாசத்தியென்றும் |
| பரபோக ரூபந் தருங் கருணையுருவாகி | மேலான சிவபோகத்தைத் தன்னடியார்க்குக் கடாக்ஷித் தருளுகிற காருண்ணிய சத்தி யிப்படி யிச்சா ஞானக்கிரியா சொரூபமாகி. இந்தப் பதத்துக் கிதுவன்றியு மேலான சுகசொரூபத்தைத் தன்னடியார்க்குக் கடாக்ஷித்தருளுகிற காருண்ணிய கர்த்தாவுக்குத் திருமேனியுமாய் என்பாருமுளர். |
| விசுத்தா சுத்தத் தனுகரண புவன போகங் கடாங்க விரிந்த வுபாதானங் கண்மேவி | சுத்தமாயையிலுண்டான தனுகரணபுவனபோகங்களையு மசுத்தமாயையிலுண்டான தனுகரண புவனபோகங்களையுந் தருகிற்பதாகப் பரந்துவிந்து மோகினி மானென்கின்ற மூன்றுபாதானங்களையும் பொருந்தி |
| ஒன்றாய் | இங்ஙனம் பெயருந் தொழிலும் பலவாயிருந்துந் தானொன்றா யிருப்பதாய் |

| | |
|---|---|
| விமலமாய் | இந்த வுபாதானங்களோடு கூடி யிருந்தாலுந் தானின்மலமாயிருப்பதாய் |
| ஐந் தொழிற்கும் வித்தாய் | சிவன்செய்யப்பட்ட சிருஷ்டி திதி சங்காரந் திரோபாவ மநுக்கிரக மென்னப்பட்ட பஞ்ச கிருத்தியங்களுக்குங் காரணமாய் |
| ஞாலத் தரந்தைகெடமணிமன்றுளாடல்காணும் | பிரபஞ்சத்தி லுள்ளார் பிறவிக்கிலேச நீங்குகைப்பொருட்டாக அழகிய திருவம்பலத்தின்கண்ணே சிவனைத் திருக்கூத்துக்கண்டருளும் |
| அன்னையருட்பாதமலர் சென்னிவைப்பாம். | இந்த வியல்புகளையுடைய வுலகமாதாவினது கிருபைபொருந்தின ஸ்ரீபாதகமலத்தை யெனதுதலைமேலே வைத்துக்கொள்ளாநின்றேன். எ-று. |

நு-ம். பரந்தபராபரை. எ-கு. பூரணமாகிய மேலான பராசத்தியென்றதேதென்னில்? பூரணகர்த்தாவாகிய பரமசிவனுக்குச் சத்தியாய் நிற்கையாலெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "எத்திறனின்முனிச னத்திறமவளுநிற்பள்." எ-து. கண்டுகொள்க.

இனி ஆதியென்றதைத் திரோதசத்தியென்றது திரோதசத்திக்கு ஆதியென்றபேரான தேதெனனில்? அந்தத்திரோத மலதரசத்தியாகி யொரவதரத்திலே தோன்றுகையாலெனவறிக.

இனி மற்றுள்ள விச்சாஞானக் கிரியாசத்திகளைப் பரனதிச்சை பரஞானங் கிரியையென்று இந்தச்சத்திகளுக்குச் சிவனைக்கூட்டிச் சொன்னதேதெனனில்? சிவனுக்கு இந்தச் சத்திகள் இச்சாஞானக்கிரியாசத்திகளாய் நிற்கையாலெ‌ன

யறிக. அவையாவன? சிவன் ஆன்மாக்களை யிரக்ஷிக்கவேணு மென்று திருவுளத்திலேயொருநினை வெழுந்திருந்த வவதரத்துக் கிச்சாசத்தியாகையாலும் அதிலேயொரு அறிவெழுந்திருந்த வவதரத்துக்கு ஞானசத்தியாகையாலும் அந்தஆன்மாக்களைப் பிரபஞ்சகாரியப்படுத்து மவதரத்துக்குக் கிரியா சத்தியாகையாலு மப்படிச்சொன்ன தெனவறிக. இங்ஙனஞ்சொன்னதற்கு பி-ம். சித்தியாரில். "ஒன்றதா யிச்சாஞானக் கிரியையென் றொருமூன் றாகி, நின்றிடுஞ் சத்தியிச்சை யுயிர்க்கருணை சமாகு, நன்றெலாஞானசத்தி யானயந்தறிவனாத, னன்றருட் கிரியைதன்னா லாக்குவ னகிலமெல்லாம்." எ-து. கண்டுகொள்க.

இனி பரபோகரூபந் தருங்கருணை யுருவாகி. எ-கு. மேலான சுகசொரூபமாகிய சிவபோகத்தைத் தன்னடியார்க்குக் கடாக்ஷித்தருளுகிற சத்தியென்று பொருட்கூறியதற்கு பி-ம். தத்துவவிளக்கத்தில் "பவமேவியநெறி பந்திக்குமீசன் பசுக்கடம்மை" யென்னுஞ் செய்யுளில் "சத்திகண்ணாற் சென்று சார்ந்து பின்னர்ச், சிவமேவுவரென்றுகாண் கொச்சைக்காவலன் சித்திரப்பே" எ-ம். இந்நூலினும் "முன்னைத் தகைவிலா மலங்கள்வாட்டி யத்தனைபருளும்." எ - ம். திருவாசகத்தினும் "அவனருளாலே யவன்றாள்வணங்கி" எ-ம். கண்டுகொள்க.

இனி விசுத்தாசுத்தத்தனுகரண புவனபோகங்கடாங்க விரிந்த வுபாதானங்கள். எ-கு. விந்து மோகினி மானென்று பொருட்கூறிய தேதெனின்? விந்துவென்றது சுத்தமாயையிற் றோன்றப்பட்ட விந்துசத்தியெனவறிக. மோகினியென்றது அசுத்தமாயையெனவறிக. மானென்றது அவ்வியத்தமாகிய பிரகிருதிமாயை யெனவறிக. என்னுமுபாதான மூன்று

க்கும். பி-ம். சித்தியாரில் "மந்திரமத்துவாவின் மிருத்தொருவடிவமாகத், தந்ததெ னாணுக்கென்னிற் சகத்தினுக்குபாதானங்கள், விந்துமோகினிமான் மூன்று மிவற்றின்மேலாகி விந்துச், சிந்தையாதிதமான சிவசத்தி சேர்ந்துநிற்கும்." எ-து. கண்டுகொள்க.

இனி ஒன்றாய். எ-து. பெயருந்தொழிலும் பலவாயிருந்துந் தானொன்றாயிருப்பதாயென்று பொருட்படுத்தினதற்கு பி-ம். சித்தியாரில் "சத்திதான பலவோவென்னிற் றானொன்றேயனேகமாக வைத்திடுங்காரியத்தால்" எ-து. கண்டுகொள்க.

இனி ஐந்தொழிற்கும் வித்தாய் எ-து. சிவன்செய்யுங் கிருத்தியங்களுக்கெல்லா மிந்தச்சத்தி காரணமா யிருப்பளென்று பொருட்கூறிய தேதென்னில்? சிவன்யாதாமொன்றைச் செய்யுமிடத்து இந்தச் சத்தியைக்கூடாமற் செய்யானுகையா லப்படிச்சொன்னதெனவறிக. இதற்கு பி-ம். திருக்களிற்றுப்படியாரில் "நங்கையினு லுமனைத்துஞ் செய்தாற்போலுடனைத்து, நங்கையினுற் செய்தளிக்கு நாயகனை" எ-ம். "நேரிழையா, டன்வசனேயிருப்பானுன்" எ-ம். சித்தியாரினும் "அவளால்வந்த வாக்கமிவ்வாழ்க்கையெல்லாம்." எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

இனி அன்னையருட்பாதமலர் சென்னிவைப்பாம். என்ற பதத்தில் அன்னையென்றதை யுலகமாதாவென்று பொருட்கூறியதேதென்னில் இந்தச்சத்தி சர்வான்மாக்களையுந் தொற்றுவித் தூட்டியுறக்கி யநுக்கிரகித்து நிற்கையா லப்படிச் சொன்னதெனவறிக. இதற்கு பி-ம். சித்தியாரில் "பேசரிய வுயிரையெலாம் பெற்றுநோக்கிப் பெரும்போக மவையளித்துப் பிறப்பினையு மொழித்திட், டாசகலுமடியருளத் திட்டனு

டனிருக்கு மன்னையருட்பாதமலர் சென்னிவைப்பாம்." என் பதனுள் "ஆசகலுமடியருளைத் தப்பனுட னிருக்குமன்னை." எ-து. கண்டுகொள்க,

இதனாற்சொல்லியது பராசத்தியானது திரோதசத்தி யுமா யிச்சாஞானக்கிரியாசத்தியுமாய்ச் சிவனுக்குத் திருமே னியுமாய்ச் சுத்தமாயையு மசுத்தமாயையுமாகிய விந்துமோ கினிமானென்கிற வுபாதானங்களையுங் கூடிநின்று காரியப்ப டுத்திச் சிவன்செய்யும் பஞ்சகிருத்தியங்களுக்குங் காரண மா யான்மாக்கள் ஜநநநீங்குதைப் பொருட்டாகத் திருவம் பலத்தின்கண்ணே சிவனைத்திருக்கூத்தாக் கண்டருளுகிற ப ராசத்தியைநோக்கித் தோத்திரம்பண்ணின முறைமையை யறிவித்தது.

இவையிரண்டும் வழிபடு தெய்வவணக்கம். (௨)

---

வேறு—இஃதந்தப் பரமசிவன்செய்கின்ற பஞ்சகிருத்தியங் கட் கெல்லா முதலான பராசத்தியைத் துதித்த துணர்த்திற்று.

பரந்தபராபரை - எங்கும்வியாபகமான மேலான பராசத் தி,—ஆதி- திரோதானசத்தி,—பரனதிச்சை - பரமசிவனுடைய விச்சாசத்தி,— பரஞானம் - மேலான ஞானசத்தி,—கிரியை - கிரியாசத்தி,—பரபோகரூபந்தரும் - ஆன்மாக்களுக் கநாதியிலு ண்டான மேலான வநுபவசொரூபத்தைக் கொடுக்கும்,—கரு ணையுருவாகி - கருணைவடிவாய்,—விசுத்தாசுத்தத் தநுகரணபுவ னபோகங்கடாங்க-சுத்தாசுத்தங்களான தநுகரண புவனபோ கங்களைத் தரித்தற்கு,—விரிந்தவுபாதானங் கண்மேவி - விரிந்த விந்து மோகினி மான் மூன்றையும் பொருந்தி,—ஒன்றாய் விமல மாய்-எவற்றிற்குமொருமுதலாய் நின்மலமாய்,—ஐந்தொழிற்கும் வித்தாய் - பஞ்சகிருத்தியங்களுக்குங் காரணமாய்,—ஞாலத்த ரங்கைக்கெட-பூலோகத்தி லுள்ளாருடைய பிறவித்துயர்கெட,—

மணிமன்றுளாடல்காணு மன்னை - அழகியசிற்றம்பலத்து ளாடுத லைக்கண்டருளு மெவ்வுயிர்க்குந் தாயானவள்,— அருட்பாதமர் சென்னிவைப்பாம். - அவளுடைய கிருபையாகிய சீர்பாதமலர் களைச் சென்னிமேல்வைத்து வணங்குவாம. எ - று.

படைப்புமுதலிய வைந்துவிதசத்தியு நிவிர்த்திமுதலியகலைகளிற் பதிதலிற் சாந்தியானவாதி திரோதாயியாம். பராபரையாதி யிச்சை ஞானங் கிரியையாகிய வன்னையெனக் கூட்டுக. இனிப் பரைமுதலிய வைந்துமாகிக் கருணையுருவாகியெனவாகி யென்பதை யீரிடத்துமேற்றலுமொன்று. இன்னும் பராபரை யாதியிலே பரனதிச்சாஞானக் கிரியைகளே கருணையுருவா யாடல்காணு மன்னையென விருபெயராக்கலுமொன்று. பரனதுவென்னு முருபு பரைமுதலியவற்றோடியையும்.

---

இங்ஙனஞ் சொல்லப்பட்ட பரமேஸ்வரியோடும் பரமேஸ்வரன் கூடின வவதாரத்துத் திருவவதாரஞ் செய்தருளின மூத்த நாயனாரை நோக்கித் தோத்திரம் பண்ணுகின்றது.

நலந்தரநா விருந்தமிழின் செய்யுட்குற்ற நண்ணா
மவையூறு நவியாமைகருதி, யிலங்குமிரு குழைய
ருகு பொருதுவரிசிதறி யிணைவெல்க ளிகழ்ந்தகயற்
கண்ணியொடுமிறைவன், கலந்தருள வருமானை முக
த்தான்மும்மைக் கடமருவி யெனவிலவு கணபதியின
ருளா, லலந்துமது கரமுனிவர் பரவுவளர்கமல மனை
யதிரு வடியிணைக ளினைதல்செய்வாம். ( )

சொற்றருநூலிற் குற்றமணுகா வகை
பொற்புறுகரிமுக னற்பதம்பணிந்தது.

(இ - ள்) நல இந்நூலுக் கெல்லா நன்மைகளுமுண்டாம்
ந்தரநால் படியும்

இருந்தமிழின் செய்யுட் குற்றநண்ணாமல்

பெரிய தமிழாகிய தொல்காப்பிய முதலாயுள்ள விலக்கணங்களி னீக்கப்பட்ட பஞ்சவதிகார குற்றங்களும்வந்து பொருந்தாதபடியும்

இடையூறுகலியாமைகருதி

இந்நூல்செய்து முடிகைக்கு இராஜீகதெய்வீகங்களிலு லொருவிக்நங்களும் வராமலும் விசாரித்து

இலங்குமிருகுழையருகு பொருதுவரிசிதறியிணைவேல்களிகழ்ந்த கயற்கண்ணி யொடுமிறைவன் கலந்தருள வருமானைமுகத்தான்

விளங்கப்பட்ட விரண்டு மகரக்குழையளவுஞ்சென்று மோதிச் செவ்வரிபரந்து தனக்குவமையாகச் சொல்லப்பட்ட வேல்களையும் பழித்த கயல்போன்ற கண்ணினையுடைய பரமேஸ்வரியோடும் பரமேஸ்வரன் கூடியருளவெழுந்தருளின யானைமுகத்தினையுடைய

மும்மைக் கடமருவியெனநிலவு கணபதியினருளால்

இரண்டு கன்னங்களாலும் பிறவாற்றாலும் பாயுமதமானது மலையிமேல நின்று மருவிபாய்ந்தாற் போல வென்னும்படி பொருந்தப் படாநின்ற விக்னேஸ்வர னநுக்கிரகத்தாலே

அலந்து மதுகரமுனிவர் பரவவளர்கமல மனையதிருவடியிணைகணினைதல் செய்வாம்.

முனிவராகிய வண்டுகளாசைப்பட்டுத் தோத்திரம்பண்ண நிறம்வளராநின்ற செவ்வித் தாமரைமலர்போன்ற வவனது ஸ்ரீபாதங்களைச் சிந்தியாநின்றேன். எ - று.

று - ம். நலந்தரநூல் எ - கு. நன்மையுண்டாகவென்றதேதென்னில்? சைவசித்தாந்த வத்தத்துக்கு மலைவுவராமலென்றதெனவறிக.

இருந்தமிழின் செய்யுட்குற்ற நண்ணாமல் எ - கு. பஞ்சவதிகார குற்றங்களும் பொருந்தாமலென்றதேதென்னில் எழுத்தும் சொல்லும் பொருளும் யாப்பு மலங்காரமு மென்னப்பட்ட இலக்கணவிதிகளுக்குக் குறைவுபடாமலென்றதெனவறிக.

இடையூறு நலியாமை. எ-கு. இராஜீக தெய்வீகங்களினாலிடையூறுவராமலென்றதேதென்னில்? இராஜீகமென்றது படைக்கலங்களினாலுண்டான விக்கிநமெனவறிக. தெய்வீகமென்றது பசிகளினாலு நோய்களினாலு முண்டான விக்கினமெனவறிக.

வருமானைமுகத்தான். எ - கு. எழுந்தருளின யானைமுகத்தானென்றதேதெனனில் எழுந்தருளினதென்றது திருவவதாரஞ்செய்ததெனவறிக.

இதனாற்சொல்லியது இந்நூற்செய்து முடியுமிடத்து இந்நூலுக்கு நன்மையுண்டாம்படியு மிலக்கணவிதியி லுண்டான குற்றங்கள் பொருந்ாதபடியு மிடையூறுவாராதபடியும் விசாரித்து விக்நேஸ்வரனை நோக்கித் தோத்திரம்பண்ணு முறைமையினையறிவித்தது. (௩)

---

வேறு—இஃது தந்தசக்தியுடனே சிவன்கூடினவிடத் தவதரித்தவிநாயகனைச் சிறப்பாகத் துதித்த துணர்த்திற்று.

நலந்தரநூ லிருந்தமிழின் செய்யுட்குற்ற நண்ணாமை - பெரிய தமிழ்நூற் செய்யுளிடத்துப் பஞ்சவதிகாரக் குற்றம்பொருந்தாமலையற்றுட் கூறியநன்மைதருதற் பொருட்டும்,—இடையூறு நலியாமை - இந்நூன்முடியுமளவு மிடையே தீங்குவந்து வருத்தாமலும்,— கருதி - நினைத்து,— இலங்குமிரு குழையருகு பொருது - விளங்காநின்ற விரண்டு மகரக்குழையளவுந்

சென்றுயுத்தம்பண்ணி,—வரிசிதறியிணைவேல்க ளிகழ்ந்த - செ வ்வரியாரந் திரண்டுவேல்களைப் பழித்த,—கயற்கண்ணியொடு மி றைவன் கலந்தருள - கயற்கண்ணியாகிய வுமையொடு மிறைவன் கூடிப்பெறுதலான்,—மும்மைக்கடமருவியென நிலவானைமுகத் தான் வருங்கணபதியின் - மூவகைமதமு மருவிபோல விளங்க ப்படாநின்ற வானைமுகத்துடனே யவதரித்தருளின விநாயகனு டைய,—மதுகரமுனிவர்பரவ வருளா லலர்ந்துவளர் - வண்டுக ளாகிய விருடிகள்பரவுதல்செய்யக் கருணையால் விரிந்துவளராநி ன்ற,—கமல மனைய திருவடியிணைக ணினைதல் செய்வாம். - தாம ரைப்பூவையொத்த சிர்பாதங்களைத் தியானிப்பாம். எ-று.

முகத்தானாகிய கணபதியெனினுமாம். இருந்தமிழ்நூற் செ ய்யுளின் குற்றநீங்குமை நலந்தரவெனமாறுக. உம்மைகடொக் கன. வேல்களையென விரண்டாமுருபுவிரிக்க. மும்மைக்கடம் யானைக்கடை. பிள்ளையார்க் கருமதமையுள. ஒருமதப் பிருமதக்க டவுளென்றார் பிறவாசிரியரும். கன்னியொடுமும்மை சிறப்பு. முகத்தானொடுவாயிற்று.

---

இன்னமு மிந்நூல்செய்து முடிக்கு விக்கினங்கள் வாரா மல் விநாயகனுக்குப்பின்பு திருவவதாரஞ் செய்தருளின சுப்பிர மணியனை நோக்கித் தோத்திரம் பண்ணுகின்றது.

வளநிலவு குலவமர ரதிபதியாய்நீல மயிலேறி வ
ருமீச னருண்குமார மதலை, யவர்பல கலையங்க மார
வாய்ந்துணர்ந்த வகத்தியனுக் கோதுரைக்கு மொன்
னாவிறைவனென்று, வுயருருவதாரு மெனதிடம்மை
யேய்ங்க வொன்றிரண்டு கூறுபட வொளிதிகழ்வேலு
கந்த, களபமலி குறமகடன் மணிமுலைகள் கலந்த கந்
தன்மல ரடியிணைகள் சிந்தைசெய்வாம். (௩)

அருமறைச்சிரப்பொரு ளகத்தியற்குரைத்த
முருகனை திருபதம் பரிவுடன்மொழிந்தது.

(இ - ள்) வளநில வு குல வமராதிபதியாய் — புநூமைபொருந்தியிருக்கிற தேவர்கள்கூட்டத்திற்குக் கர்த்தாவாயிருக்கப்பட்ட

நீல மயி லேறி வரு மீச னருள் ஞானமதலை — நீலநிறத்தை யுடைய மயிலை வாகனமாக வுடையனுமாய பரமேஸ்வரன் தந்தருளும் ஞானப்பிள்ளை

அளவில்பல கலையங்க மாரணங்களுணர்ந்த வகத்தியனுக் கோத்துரைக்கு மன்னல் — அளவில்லாத பலகலையாகிய ஞானங்களையும் சிக்ஷை நிருத்தம் சந்தசு சோதிடம் கற்பம் வியாகரணம் என்னப்பட்ட வாறங்கமாகிய அங்கமும் இருக்கு எசூர் சாமம் அதர்வணம் என்னப்பட்ட நாலுவேதமு மோதியுணர்ந்த அகத்திய மஹாவிருஷிக்குப் பிரணவ சொரூபத்துக்கு வியாக்கியானஞ் செய்தசுவாமி

விரலெண்ணவுளமருவு சூரனுரமென திடம்பையோங்க லொன்றிரண்டுகூறுபடவொளிதிகழ்வேலுகந்த — பிறருடைய வெற்றியினை விசாரியாத மனத்தினையுடையசூரபத்மாவினுடைய மார்பையும் என்னுடைய பிறவிக் கிலேசத்தினையும் அசுர ரொதுங்கப்பட்ட கிரவுஞ்ச பாவதத்தையும் ஒவ்வொன்று இவ்விரண்டு கூறுபடத்தக்கதாகப் பிரகாசம்விளங்காநின்ற வேலினை திருவுளம் வைத்தருளின

களபமலி குறமகடன் மணிமுலைகள் கலந்தகந்தன்-அறுவயம் — வள்ளிநாச்சியாருடையகளபச்சேறு மிகவும்பொருந்தின வொளிமையுடைய திருமுலைத்தலங்களிலே முயங்கியருளின சுப்ரமணியப்பிள்ளையாரது

சூரமகடன் களபமலி மணிமுலைகள் கலந்தகந்தன்

மலரடியிணைக நீசிந்தைசெய்வாம். — தாமரைமலர்போன்ற ஸ்ரீபாதங்களையுமி ந்நூல் விக்னமறச்சென்று முடிவதுபொருட்டாக நினையாநின்றேன். எ-று.

ற - ம். தேவர்களுக்கதிபதியென்றது அவர்களுக்குக்கத்தாவாகையா லெனவறிக.

நீலமயிலேறிவருமென்றது அஞ்ஞானமாகிய விருட்சியைவிட்டுத் தோய்வறநிற்கையா லெனவறிக.

ஞானமதலையென்றது ஒருவரறிவியாமற் றானே யறிகைக்குண்டான மஹத்துவத்திறுலெனவறிக.

இடும்பை யிரண்டுபடவென்றது பிறவித்துக்கமாகிய விடும்பை ஆன்மாவினோடுங் கூடிநின்று ஜநநமரணப்படுத்தி வருகையிலுலே அருளோடுங்கூடி வழிபடுமவதாரத்து அதுநீங்குகையாலெனவறிக.

ஒளிநிகழ்வே லுகந்தவென்றது தன்னைவழிபடு மடியார்க்குண்டான துக்கங்களை ஒழிக்கவேணுமென்று திருவுள்ளத்தடைத்து வேலையெடுக்கையினு லெனவறிக.

இதனுற்சொல்லியது இந்நூலிடையூறுவாராமல் முடியவேண்டி ஈசனருள் ஞானமதலையாகிய சுப்ரமணியப் பிள்ளையாரை நோக்கித் தோத்திரம்பண்ணு முறைமையை யறிவித்தது. (௩)

---

வேறு—இவ்விதந்த விநாயகனுக்குப்பின் அவதரித்த பிள்ளையாரைத் துதித்தலுணர்த்திற்று.

வளநிலவு குலவமராதிபதியாய் — செல்வம் விளங்கிய நல்லதேவர்களுக்குச் சேனுபதியாய்,— நீலமயிலேறிவரு மீசன

ருண் ஞானமுதலை-நீலநிறத்தையுடைய மயிலேறி வரங்கொடுத்தற் கெழுந்தருளிவருகின்ற சர்வேஸ்வரனாகிய ஞானப்பிள்ளை,—அளவில்பலகலைகளு மாரணங்களுணர்ந்த வகத்தியனுக் கோத்துரைக்குமண்ணல்-பொருளுக்களவிறந்த பலநூல்களு மாறங்கமும் வேதங்களுமறிந்த வகத்தியமுனிவனுக்கு வேதப்பொருளை யுபதேசிக்குங் குரவன்,—விறலென்று வளமருவு சூரனும்—எண்ணப்படாத வீரப்பாட்டை யுள்ளத்திற் கண்டே யெப்பொழுதும் மமதையால் வைத்திருக்குஞ் சூரனுடைய மார்பும்,—எமதிடும்பை - எம்போல்வாருடைய பிறவித்துன்பமும்,—இகல்-கிரவுஞ்சகிரியும்,—ஒன்றிரண்டுகூறுபட—வொளிதிகழ்வேலுகந்த-இவைமூன்று மொவ்வொன் றிரண்டுகூறுபடும்படி யொளிவிளங்கிய வேலையுயர்த்துவிட்டு,—களபமலி குறமகடன் மணிமுலைகள் கலந்தகந்தன் மலரடியிணைகள் சிந்தைசெய்வாம்-குறமகளான வள்ளிநாயகியுடைய பலகூட்டுச்செறிந்த வழகிய திருமுலைகளைக்கூடியருளின கந்தனென்னுந் திருநாமத்தை யுடையவனுடைய மலர்போலுந் திருவடியிணைகளைச் சிந்திப்பாம். எ-று.

முதலை யீன்ற முருகனென்னும் பெயர்மாத்திரையாய் வருமென்னும் பெயரெச்சத்திற்கு முடிபாயின்றது. அதிபதியாய்வருமென்க. முதலை யானையாகிய கந்தனெனக்கூட்டுக. என்றுவிறலெனவுங் குறமகடன் களபமலி மணிமுலைக ளெனவுமாறுக. உவந்தமென்று பாடமாக்கி வேலிலே திருவுளமகிழ்ந்தவ னென்பாருமுளர். அயிற்குலவேல் போர்க்குமரரென்பது நல்லேந்திய வரென் றுரைக்கப்பட்டது. உரம்-இடும்பை. இகலென்னுஞ் செய்யென்னின் னொகை தொக்குநின்றது. உகந்த கலந்தகந்தனென்க.

இந்நான்குசெய்யுளுக்கும் யாமென்னுந் தோன்றாவெழுவாய் வருவிக்கப்பட்டன.

இந்நூ லருளிச்செய்கிற வத்தமுண்டான முறைமை யெப்படியென்றுவினவப் பாரம்பரியமாக வுபதேசஞ்செய்தருளின சந்தானகுரவர் திருமுடியடைவு மே லருளிச்செய்கின்றது.

தேவர்பிரான் வளர்கயிலைக் காவல்பூண்ட திருநந்தி யவர்கணத்தோர் செல்வர் பாரிற், பாவியசத்திய ஞான தரிசனிகளடிசேர் பரஞ்சோதிமாமுனிகள் பதியாம்வெண்ணெய், மேவியசீர் மெய்கண்ட திறலான் மாறு விரவுபுக ழருணந்தி விறலார்செல்வத், தாவிலருண் மறைஞான சம்பந்தரிவரிச் சந்தானத் தெமையாளுந் தன்மையோரே. (௩)

ஆதிமாமுனிவர்க் கம்பிகா பதியருள்
கோதிலாஞானக் குருமரபுரைத்தது.

(இ-ள்) தேவர்பிரான் வளர்கயிலைக் காவல்பூண்ட திருநந்தி — தேவர்களுக்குக் கர்த்தாவாகிய ஸ்ரீகண்ட பரமேஸ்வரனெழுந்தருளியிருந்துள்ள மிக்க கைலாயத்திருமலையைக் காக்கிறதே விரதமாகப்பூண்ட ஸ்ரீநந்திகேஸ்வரநாயனார்,

அவர்கணத்தோர் செல்வர் — அவரது திருவடியைப்பெற்ற மஹாவிருடிகளி லொப்பில்லாத ஞானச் செல்வத்தையுடைய சநத்குமாரபகவான்

பாரிற் பாவிய சத்தியஞான தரிசனிகள் — அவர்திருவடியைப்பெற்றுப் பூமியிலே யெழுந்தருளின சத்தியஞானதரிசனிகள்

அடிசேர் பரஞ்சோதிமாமுனிகள் — அவரது ஸ்ரீபாதத்தைப்பெற்ற பரஞ்சோதிமாமுனிகள்

பதியாம் வெண்ணெய்மேவிய சீர்மெய்கண்டதிறலான் (அநுவயம்) சீர் வெண்ணெயாம்பதிமேவிய மெய்கண்டதிறலான் — சிறப்புமிக்க திருவெண்ணெய்நல்லூரே திருப்படை வீடாகவுடைய மெய்கண்டதேவநாயனார்

மாருவிரவுபுகழருணந்தி — அவரது திருவடியைப்பெற்ற அழியாதபுகழைக்கலந்த அருணந்திதேவநாயனார்

விறலார் செல்வத் தாவிலருண் மறைஞானசம்பந்தர் — அவரது திருவடியைப்பெற்று வெற்றிபொருந்தின செல்வமாகிய குற்றமில்லாத வருளைப்பெற்ற மறைஞானசம்பந்தநாயனார்

இவரிச்சந்தானத் தெமையாளுந்தன்மையோரே. — இவர்களாறுதிருப்பெயருமிந்தமெய்கண்டசந்தானத்து எம்மை யடிமையாக வேவற்செய்வித்துக்கொள்ளு முறைமையினை யுடையோர்கள். எ-று.

ௗ-ம். தேவர்பிரானென்றது பிரம விஷ்ணுக்கள் முதலாயுள்ள தேவர்களுக்குங் கத்தாவெனறதெனவறிக.

வளர்கயிலையென்றது உயர்ந்த கைலையென்றதெனவறிக.

அந்தக் கைலையைக் காவல்பூண்ட திருநந்தியென்ற தேதெனில் சிலாதரமுனி புத்திரனில்லாமற் றவஞ்செய்யுமவதரத்து அவனுக்குச் சிவன் முன்னின் றுனக்குவேண்டிய தேதென்று கேட்டருளத் தேவரீரைப்போலச் சாவா மூவா வியல்பினையுடைய புத்திரன் வேண்டுமென்றுகேட்ப அப்படிப்புத்திரனாகக் கொடுத்தருளியபடி வருகையாலே அவர் கன்மபூமியிலே யிருக்கவொ

ண்ணுதென்று திருவுள்ளத்தடைத்தருளி யவர்க்கு நந்திகேஸ்வரநாயனாரென்று ஞானாபிடேகஞ்செய்து மற்றுள்ள விருடிகளுக்கு ஞானோபதேசங் கொடுக்கக்கற்பித்து அவர்க்குக் கைலாயத் திருமலையுங் காக்கிறது விரதமாக வன்றே கொடுத்தருளினதெனவறிக.

மெய்கண்டதிறலானென்றது உண்மைஞானமாகிய சத்தியத்தைத் தரிசித்தசாமர்த்தியத்தை யுடையவனென்றதெனவறிக.

விறலார்செல்வம். எ-து. வெற்றிபொருந்தின செல்வமென்றது அருட்செல்வத்தையெனவறிக. அருட்செல்வமென்றதேதெனில் அருட்செல்வ மேற்பட்ட செல்வமானமையாலும் அருட்செல்வமுடையவர்கள் பொருட்செல்வங் கொள்ளாதபடியாலு மப்படிச்சொன்னதெனவறிக. என்னு மிவ்விரண்டினுள்ளும் அருட்செல்வம் பொருட்செல்வத்தினு மேற்பட்டதென்பதற்கு பி-ம். திருவள்ளுவப்பயனில் "அருட்செல்வஞ் செல்வத்துட்செல்வம், பொருட்செல்வம் பூரியார்கண்ணுமுள" என்னும் பொருட்பற்றிநின்றதெனவறிக. அன்றியும் அருட்செல்வமுடையவர்கள் பொருட்செல்வங் கொள்ளார்களென்பதற்கு. பி-ம். தேவாரத்தில் "துகிலுடுத்துப் பொன்பூண்டு திரிவார்சொல்லுஞ் சொற்கேட்கக்கடவோமோ துரிசற்றோமே." எ-ம். பெரியபுராணத்தில் "கேடுமாக்கமுங் கெட்டதிருவினார், ஓடுஞ்செம்பொனு மொக்கவே நோக்குவார்." எ-ம். சித்தியாரில். "ஓட்டிற்றமணியத்திற் சமபுத்திபண்ணிச் சங்கரனோ, டொக்கவுறைந் தவனியவனை யிவனவனைவிடாதே யுடந்தையாய்ச் சிவன்றோற்ற மொன்றுமே காண்பர்" எ-ம். கண்டுகொள்க.

இச்சந்தானமென்ற சுட்டுகொண்டே மற்றுள்ளசந்ததிகளுக்கு மிப்படிப் பாரம்பரியமாக ஆசாரியமரபுண்டானமையா லிந்த மெய்கண்ட சந்ததியென்று பொருட்படுத்தினதெனவறிக.

இதனாற்சொல்லியது இந்த மெய்கண்டசந்ததிக்குச் சைவ சித்தாந்தவாக்கம் பாரம்பரியமாக வுபதேசஞ்செய்தருளின சந்தானகுரவர் தொழுந்தினை யறிவித்தது. (௫)

---

வேறு—இது மெய்கண்டசந்ததியின் சம்பிரதாயத்தைத் தன்முகத்தாலு முபதேசத்தாலுந் திருவுளம்பற்றின சந்தானகுரவர் திருமுடியடைவு வுணர்த்திற்று.

தேவர்பிரான் வளர்கயிலை காவல்பூண்ட திருநந்தி—ஸ்ரீகண்ட பரமேஸ்வரனிருந்தருளாநின்ற கைலாசமலைக்குக் காவல்பூண்ட சிறப்பினையுடைய நந்திகேஸ்வரபகவான்,—அவர்கணத்தோர்செல்வர் - அவருடைய கூட்டத்தி லொருசெல்வரான சனற்குமார முனிகள்,—பாரிற்பரவிய சத்தியஞான தெரிசனிகள் - இவ்வுலகத்தின்கண்ணே யுண்மைஞானத்தை விரித்த சத்தியஞானதெரிசனிகள்,—அடிசேர்பரஞ்சோதி மாமுனிகள் - அவருடைய திருவடியைச்சேர்ந்த பரஞ்சோதிமாமுனிகள்,—பதியாம்வெண்ணெய் மேவியசீர் மெய்கண்டதேவன் - தனக்கெப்பதியும் பதியாயினுந் திருவெண்ணெய்நல்லூரே பதியாகப் பொருந்தின சிறப்பினையுடைய மெய்கண்டதேவனென்று ஞானவிரன்,—மாருட்புகழ்விரவருணந்தி—ஒப்பிலாதபுகழ்பொருந்திய வருணந்திதேவன்,—விறலார்செல்வத் தாவில்லருள் மறைஞானசம்பந்தன் - ஞானவிரம்நிறைந்த செல்வத்தையுடைய கெடாத திருவருளையுடைய மறைஞானசம்பந்தன்,—இவரிச்சந்தானத் தலைமையாருந் தன்மையோர் - ஆகிய விவ்வெழுதரவரு மிந்தச்சந்தானத்திலே பெம்மையாரு மியல்புடையார். எ-று.

அடிசேரென்பதனை யெங்குந் தந்துரைக்க. நந்தியவரென வொருமைப்பன்மை மயங்கிற்று. பதியாம்வெண்ணெயென்பதூஉம் பாடம். செவ்வெண்ணின் றொகை விகாரத்தாற் றொக்கது.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட வாசாரியரில் பிற்கூறிய மறைஞானசம்பந்தநாயனார் தம்மையிரக்ஷித்த வாசாரியராகையாலவரை நோக்கித் தனித்தொருசெய்யுளாகத் தோத்திரம் பண்ணுகின்றார்.

பார்திகழு வளர்சாம வேதமல்கப் பராசரமாமுனிமரபு பயிலஞானச், சார்வுதர வந்தருளி யெம்மைமையாண்ட சைவசிகா மணிமருதத் தலைவனங்கண், கார்மருவு பொழில்புடைசூழ் மதில்மீதேமதியங் கடவாமை நெடுங்கொடியின் காந்தளையுங்கடந்தைக், சீர்திருமறைஞான சம்பந்தனெந்தை திருவாரு மலரடிகள் சென்னிவைப்பாம். (௮)

மன்னியவொருபொருள் வடிவுகொண்டருபதந்து
சென்னியின்வைத்த தேசிகன்வணக்கம்.

| | |
|---|---|
| (இ-ள்) பார்திகழ | பூமி விளங்குவதாகவும் |
| வளர்சாமவேதமல்க | ஆயிரஞ் சாகைகளாக விரியப்பட்ட சாமவேதம் வர்த்தியாநிற்கவும் |
| பராசர மாமுனி மரபுபயில | பராசரப்பிரமவிருஷி கோத்திரந்தழைக்கவும் |
| ஞானச் சார்வுதரவந்தருளி யெம்மையாண்ட சைவசிகாமணி | ஞானவொழுக்க முண்டாம்படி யொழுங்கருளி யொன்றுக்கும் பற்றறவெனை யடிமையாகக் கொண்டருளின சைவசமயத்துக்கே கிரீடமாணிக்கம் |
| மருதத்தலைவன் | மருதூர்க்குக் கர்த்தாவானவன். |
| அந்தண் காரமருவு பொழில்பு | அழகினையுங் குளிர்ச்சியினையுமுடைய மேகம்பொருந்தப்பட்ட சோலைப் பக்கங்களிலே |

| | |
|---|---|
| டைசூழ்மதின்மீதே மதியங்கடவாமை நெடுங்கொடியினை காந்தகையுங் கடந்தைச் சீர்நிலவு மறைஞானசம்பந்தன் | சூழ்ந்த பெரியமதிலுக்குமேலே சந்திரனோடாமல் நெடியகொடியினது கைகளாலே தகையப்பட்ட சிறப்பையுடையதிருப்பெண்ணாகடத்துச் சிறப்புவிளங்காநின்ற மறைஞானசம்பந்தனென்கின்ற திருநாமத்தினையுடைய |
| எந்தை திருவளரு மலரடிகள் சென்னி வைப்பாம். | எம்முடைய சுவாமியது அழகுவளராநின்ற தாமரைமலர்போன்ற ஸ்ரீபாதங்களை யெனது தலைமேலே வைத்துக்கொள்ளாநின்றேன். எ-று. |

று-ம். பார்திகழ. எ-கு. பூமிவிளங்கவென்றதேதென்னில்? பிரபஞ்சத்திலுண்டான ஆன்மாக்களுக்கு ஞானம் பிரகாசிக்க வென்றதெனவறிக.

சாமவேதமல்க. எ-கு. சாமவேதம் வர்த்திக்க வென்றதேதென்னில்? மற்றுள்ள வேதமூன்றினு மிந்நூல் செய்துடையார்க்கு இதுபாரம்பரியமாக அதிகரித்து வருகையாலெனவறிக.

பராசரமாமுனி மரபுயில. எ-கு. பராசரப்பிரமவிருஷி கோத்திரந்தழைக்க வென்றதேதென்னில்? அநாதியேயிந்நூல் செய்துடையா ராசாரிய ரந்தக்கோத்திரமாய் வருகையாலெனவறிக.

ஞானச்சார்புதரவந்தருளி. எ-கு. ஞானவொழுங்குண்டாக வென்றதேதென்னில்? இந்நூல் செய்துடையாரை ஞானவுபதேசத்தைச் செய்து அந்தவொழுங்கிலே நிறுத்துகையாலெனவறிக.

மருதூரென்றும் பெண்ணாகடமென்றும் திருப்பதிவீடிரண்டாக வேண்டுவானேனென்னில்? மருதூர் திருவவதாரஞ்செ

ய்தலூரெனவறிக." பெண்ணாகட மாசாரிய ரபிடேகஞ்செய்தலூரெ னவறிக.

இதனாற்சொல்லியது இந்நூல் மலைவறச்சென்று முடியவே ண்டித் தம்மையிரக்ஷித்த வாசாரியரைநோக்கி வழிபடுமுறைமை யை யறிவித்தது. (௬)

---

வேறு—இஃது இவ்வாசிரியர் தமக்கு நேரேகுரவரான மறை ஞானசம்பந்தமுனிகளைச் சிறப்பாகத் துதித்தலுணர்த்திற்று.

வளர்சாம வேதமல்க - ஆயிரஞ்சாகை வளர்கின்றசாமவே தம் பொலிவுபெறவும்,— பராசரமாமுனிமரபு பயில - பராச ரப்பிரமவிருடிகோத்திர மிடையறாது நிலைபெறவும்,—ஞானச் சார்புதர - எம்போல்வார்க்கு ஞானமாகிய பற்றுக்கோடுதர வும்,—பார்திகழவந்தருளி - நிலவுலகத்தின்கண்ணே திருமேனி கொண்டு விளங்க வெழுந்தருளிவந்து,— எம்மையாண்ட சைவ சிகாமணி - எம்மை யடிமையாகக்கொண்ட சைவசூளாமணி,— மருததலைவன் - மருதூர்க்கிறைவன்,—அந்தண் கார் மருவுபொ ழில்புடைசூழ் மதின்மீதே - அழகிய குளிர்ந்தமேகம்பொருந்திய சோலை புடைசூழப்பட்ட மதிலின்மேலே,—மதியம் கடவாம னெடுங்கொடியின் கரந்தகையுங் கடந்தைச்சீர்நிலவு - சந்திரன் கடவாதபடி நெடுங்கொடிகளாகிய கைகள்தகையுஞ் சிறப்புவிள ங்கிய பெண்ணாகடமென்னுந் திருநகரையுடைய,— மறைஞானச ம்பந்தன்-மறைஞான சம்பந்தனென்னுந் திருநாமத்தையுடையா ன்,—எந்தை - எம்முடையவத்தன்,—திருவளரு மலரடிகள் செ ன்னிவைப்பாம் - அவனுடைய வழகுவளராநின்ற மலர்போலுந் திருவடிகளை யாந் தலைமேற்புனைவாம். எ-று.

செயவென்னும் வினையெச்ச வடுக்குக்களினும்மை தொகப் பட்டு வந்தருளியென்னும் வினையோடு முடிந்தன. பார்திகழவெ

ன்பதற்குப் பூலோகம் விளங்கவுமென்று செவ்வேயுரைப்பினு மாம். பயிலுத விடையருமை சேர்நிலவுகடந்தையெனா மொழிமா றுக. கொடியின் இன் அல்வழிச்சாரியை, கண்ணின்வலை கலந் தென்றாற்போல.

---

இந்நூலருளிச்செய்கிற வத்தமேதென்று வினவுதற்குத்தா மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளி
யாய்ப் புகழளவைக் களவாகிப் பொற்பணிபோலபே
தப், பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ்சொ
ற்பொருள்போற் பேதாபேதமு மின்றிப் பெருநூல்
சொன்ன, வறத்திறனால் விளைவதா யுடலுயிர்கண்ண
ருக்க னறிவொளிபோற் பிரிவருமத் துவிதமாகுஞ்,
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ்சைவ சித்தா
ந்தத் திறனிங்குத் தெரிக்கலுற்றாம். (எ)

வளம்பயினூலின் மதிப்புடன்வருக்கு
விளம்புபொருளின் மேன்மையைவிரித்தது.

| | |
|---|---|
| (இ-ள்.) புறச்சமயத் தவர்க்கிருளாய் | பரசமயிகளாயுள்ள லோகாயிதன்முதல் பாஞ்சராத்திரியீறாகச் சொல்லப்பட்ட சமயிகளுக்குத் தெரியாததாய் |
| அகச்சமயத் தொளியாய் | உட்சமயமாயுள்ள சைவமுதல் வைரவமீறாகச் சொல்லப்பட்ட சமயங்களாறுக்குஞ் சைவத்திற் பேதமாயுள்ள சமயிகளெட்டிப் பெயர்க்கு மறியப்படுவதாய் |
| புகழளவைக் களவாகி | சர்வராலும்புகழ்ந்து சொல்லப்பட்ட வளவைப் பிரமாணங்களினாலே யளவிடப்படுவதாய் |

**பொற்பணி போலபேதப்பிறப்பிலதாய்**

கத்தாவும் பிரபஞ்சமும் பொன்னென்றுய்ப் பணிபலவாறாற்போல விருக்குமென்கிற வபேதசித்தாந்தமு மடாததாய்

**இருள் வெளி போற்பேதமுஞ் சொற் பொருள் போற்பேதாபேதமுமின்றி**

கத்தாவும் பிரபஞ்சமு மிருளும் வெளியும் போல வொன்றோடொன்று கூடாமல் வேறுயிருக்குமென்கிற பேதவாதிகள் சித்தாந்தமும் சொல்லும் பொருளும்போலச் சத்தத்தைச் சொன்னபொழுது அந்தச்சத்தந்தானேயத்தமாய்த்தோன்றியும் அத்தத்தைக்கண்டபொழுது அந்தச்சத்தம் வேறாயும் அத்தம்வேறாயும் ஒன்றுமாயிரண்டுமா யிருந்தாற்போலக் கத்தா பிரபஞ்சமுமாயல்லவுமா யிருப்பானென்கிற பேதாபேதவாதிகள் சித்தாந்தமு மடாததாய்

**பெருநூல் சொன்ன வறத்திறம் விளைவதாய்**

பெரியநூலாகிய வேதாகமங்களிற்சொல்லப்பட்ட சரிதை கிரியா யோகங்களை யநுட்டித்ததனாலே யுண்டாகப்படுவதாய்

**உடலுயிர்கண்ணருக்கனறிவொளிபோற்பிறிவருமதத்துவிதமாகுஞ் சிறப்பினதாய்**

யாதாமொன்றை யறியுமிடத்து உடலுமுயிருந் தன்னிலொன்றுபட்டறியு மறிவைப் பிரிக்கவொண்ணாதாற்போலவும் யாதாமொன்றைக் காணுமிடத்துக் கண்ணினொளியு மாதித்தப்பிரகாசமுந் தன்னிலொன்றுபட்டுநிற்குந் தன்மையைப் பிரிக்கவொண்ணாதாற்போலவும் கத்தாவையும் பிரபஞ்சத்தையுந் தன்னிற்பிரித்தற்கரிதாய அநந்நியமாயிருக்கிற சிறப்பினையுடைத்தாகிய

வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத்தி றனிங்குத் தெரிக்கலுற்றும்.

வேதத்தின்முடிவிற்றெளிவாயுள்ள சைவசித்தாந்தத்தி னுண்மையாகிய வத்துத்தை யிந்நூலிலே விளங்கச் சொல்லாநின்றேன். எ-று.

வேதத்தின்முடிவிற் றெளிவென்றது வேதாந்த முடம்புஞ் சித்தாந்த முயிருமாய் நிற்கையாலெனவறிக.

நு-ம் புறச்சமயிகளுக் கிருளென்றதேதென்னில்? அவர்கள் திரிபதார்த்த நிர்ணயமுடையவர்களல்லவாகையாலுஞ் சிவனைக்கத்தாவென்று கொள்ளுகை யில்லாதவர்களாகையாலுமெனவறிக.

அகச்சமயிகளுக் கொளியென்றதேதென்னில்? இவர்கள் பதி பசு பாச மென்று முண்டென்று நாட்டுகையாலுஞ் சிவனைக் கத்தாவாகக் கொள்ளுகையாலுமெனவறிக. இவர்களும் அம்மாத்திர மொழிந்து சைவசித்தாந்த வுண்மைக் குரியவர்களல்ல வெனவறிக. அஃதெங்கே காணப்பட்டதென்னில்? சங்கற்பநிராகரணத்தில் ஐக்கியவாதிமுதல் சிவாத்துவிதியாகிய சைவர்முடிவாகவுள்ள பேதமெட்டினுமுண்டானவத்தங்களை மறுத்தவொழுங்கிலே கண்டுகொள்க.

அளவைகளினு லளவிடப்படுவதாயென்றதேதென்னில் அளவைப்பிரமாணமாகிய காண்டல் கருதல் உரையென்னப்பட்ட பிரத்யக்ஷம் அநுமானம் ஆகமம் என்கின்ற மூன்று வகையினாலும் அளவிட்டறியப்படுவதாயென்றதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "அளவைகாண்டல் கருதலுரையபாவம்பொருளொப்பாறென்ப, ரளவைமேலு மொழிபுண்மையைதிகத்தோடியல்பெனநான், களவைகாண்ப ரவையிற்றின் மேலுமறைவ ரவையெல்லா, மளவைகாண்டல் கருத

துரை யென்றிம்மூன்றி நடங்கிடுமே." எ-து. கண்டுகொள்க. என்னவே சித்தாந்தம் இம்மூன்றுவகையாலு மறியப்படுமென்பது கருத்து.

இனிபொற்பணிபோல பேதப்பிறப்பிலதாய் எ-கு. பொன்னிலேநின்றும் பணிபலவாறுபோலக் கத்தாவினிடத்திலே பிரபஞ்ச முண்டாமென்கிற அபேதசித்தாந்தமு மடாததாயென்றதேதென்னில்? கத்தாவோவென்றுற் சித்தாயிருப்பாரொருவன். பிரபஞ்சமோவென்றுல் ஜடமாயிருப்பதொன்று. ஆகையாற் சித்தினிடத்து ஜடந்தோன்றுதது கொண்டே சிவனிடத்துப் பிரபஞ்சந்தோன்று தென்றதெனவறிக.

இருள்வெளிபோற் பேதமும். எ-கு. இருளும்வெளியும் போலக் கத்தாவும் பிரபஞ்சமுந் தன்னில் வேறுயிருக்குமென்கிற பேதசித்தாந்தமு மடாததாயென்றதேதென்னில் இந்தப்பிரபஞ்சங் காரியப்படுமிடத்துக் கத்தாவாலே காரியப்படவேண்டுகையா லப்படிவேறென்று சொல்லவொண்ணுதெனவறிக.

இனி சொற்பொருள்போற் பேதாபேதமும் எ-கு. சொல்லும் பொருளும்போலக் கத்தாவும் பிரபஞ்சமுந் தன்னிலொன்றுமா யிரண்டுமா யிருக்குமென்கிற பேதாபேதசித்தாந்தமு மடாதது॥யென்றதேதென்னில்? சித்தாயுள்ள சிவனிடத்து ஜடமாயுள்ள பிரபஞ்சந் தோன்றுதாகையா லொன்றென வொண்ணுதென்றும் ஜடமாயுள்ளபிரபஞ்சஞ் சித்தாயுள்ளசிவனாலே காரியப்படவேண்டுகையால் வேறெனவொண்ணுதென்றுஞ் சொன்னதெனவறிக.

பெருநூல்சொன்ன வறத்தினுல் விளைவதாய். எ-கு. அறத்தினுலென்றதை குருபூசை சிவபூசை மஹேசுவரபூசைகளினு லுண்டாவதா யென்னவுமாமெனவறிக. இதற்கு சி-ம். சித்தியாரில் "புண்ணிய மேனேக்குவிக்கும் பாவங்களைக்

கும் புண்ணியனைப்பூசித்த புண்ணியத்திருவே, நண்ணியஞானத்திரு விரண்டினையுமறுத்து" எ-ம். "தாபரசங்கமங்களென்றிரண்டுருவினின்று, மாபரன்பூசைகொண்டு மன்னுயிர்க்கருளை வைப்பன்" எ-ம். கண்டுகொள்க. இதிற்றாபரமென்றது இலிங்கமூர்த்தமெனவறிக. சங்கமமென்றது குருவையு மஹேஸ்வரரையு மெனவறிக.

இனி யுடலுமுயிருங்கூடின வழியையுங் கண்ணுமருக்கனுங்கூடின வொளியையும் பிரிக்க வொண்ணாதாற்போலக் கர்த்தாவையு மான்மாக்களையும் பிரிக்க வொண்ணாதாய் அத்துவிதமாயிருக்குமென்றதேதென்னில்? சிற்றறிவாயுள்ள வான்மாக்களைப் பேரறிவாயுள்ள சிவனறிவிக்குமிடத்து இரண்டறிவையும் பிரிக்கவொண்ணாதென்றதெனவறிக.

அத்துவிதமென்றதேதென்னில்? ஒன்றுமல்ல இரண்டுமல்ல வென்றதெனவறிக. அஃதாவது ஒன்றல்ல வென்றது ஆன்மாவுஞ் சிவமு மொன்றல்லவென்றதெனவறிக. இரண்டல்லவென்றது ஆன்மாக்கள் ஜீவிக்குமிடத்துச் சிவனறிவிக்கவறிந்து பிரிவறின்று ஜீவிக்கையா மெனவறிக. இதற்கு பி-ம். இருபாவிருபஃதில். "ஒன்றாகாம லிரண்டாகாம லொன்றுமிரண்டு மின்றாகாமல்" எ-து. கண்டுகொள்க.

சிறப்பென்றது அத்தத்தின்மான்மியமெனவறிக.

வேதத்தின் முடிவிற் றெளிவென்றது சொல்லியங்க பொருளெனவறிக. இதற்கு பி-ம். கோயிற்புராணத்தில். "ஆரணங்கள் முடிந்தடத்தானந்த வொளியுலகிற், காரணங்கற்பனை கடந்தகருணை" எ-ம். இந்நூலினும் "இங்கிது வென்றது கடந்த வியல்பினனும்" எ-ம். கண்டுகொள்க.

அன்றியும் வேதாந்தத் தெளிவென்றதை வேதாந்தப் பொருளாயிடப்பட்ட சித்தாந்தமென்பாருமுளர். அஃதத்த

மன்று. அதுவெவனென்னில் வேதாந்தமுடம்படுஞ் சித்தாந்தமு யிருமாய் நிற்கையா லப்படி நீக்கஞ் சொல்லவொணாதென்றதெனவறிக. இதற்கு. பி - ம். இந்நூலில் "வேதத்தலை தருபொருளாய்." எ-து கண்டுகொள்க.

சைவசித்தாந்தமென்றதேதென்னில்? சைவமென்றது சிவாகமத்தையெனவறிக. சித்தாந்தமென்றது அந்தச்சிவாகமத்தின் கருத்தாகிவந்த அத்தத்தையெனவறிக.

இதனாற்சொல்லியது இந்நூலிலேசொல்லுகிற வத்தமானது புறச்சமயமாகிய லுலகாயிதனுக்கும் புத்தரிற் சௌத்ராந்திகன் யோகாசாரன் மாத்மிகன் வைபாடிகன் ஆகப்பேர் நால்வருக்கும் அமணரில் நிகண்டவாதி ஆசீவகன் ஆகப்பேர் இருவருக்கும் மீமாங்கிசரில் பட்டாசாரியன் பிரபாகரன் நையாயிகன் ஆகப்பேர் மூவருக்கும் ஏகம்பிரமவாதியான மாயாவாதி பாற்கரியன் நிரீச்சுரசாங்கியன் ஆகப்பேர் மூவருக்கும் வைணவராகிய பாஞ்சராத்திரிக்கும் ஆக இங்ஙனஞ் சொல்லப்பட்ட சமயமாறினாற் பேதமாகச்சொல்லும்பேர் பதினாலுக்குந் தெளிவில்லாததா யிருக்குமென்னு முறைமையும் உட்சமயமாகிய சைவம் பாசுபதம் மாவிரதம் காளாமுகம் வாமம் வைரவமென்னப்பட்ட சமயமாறுக்கு முதற்கூறப்பட்ட சைவத்திற் பேதமாயுள்ள ஐக்கியவாதி பாஷாணவாதி பேதவாதி சமவாதி சங்கிராந்தவாதி ஈஸ்வரவிகாரவாதி பரிணாமவாதி சிவாத்விதியாகிய சைவர் ஆகப்பேர் எட்டுக்குந் தெளிவா யிருக்குமென்னு முறைமையும் அளவைப்பிரமாணமாகச் சொல்லப்பட்ட பிரத்தியக்ஷம் அநுமானம் ஆகமமென்கின்ற மூன்றுவகையினாலு மளவிட்டப்பட்டிருக்குமென்னு முறைமையும் பொன்னும் பணியும்போலிருக்குமென்கிற அபேதசித்தாந்தங்களும் இருளும் வெளியு

ம்போலென்கிற பேதசித்தாந்தங்களும் சொல்லும்பொருளும்போலென்கிற பேதாபேத சித்தாந்தங்களும் ஆக மூன்றுவகையு முன்னெண்ணப்பட்ட அகச்சமயத்தினும் புறச்சமயத்தினு மடங்கியிருக்கையா லந்தவத்தங்களுமல்லவா யிருக்குமென்னு முறைமையும் இந்தச் சைவசித்தாந்தஞ் சிவபுண்ணியத்தினாலே யுண்டாவதாய் வேதத்தின் முடிவிற் றெளிவுமா யத்துவிதமுமா யிருக்கிறதே சைவசித்தாந்தமென்னு முறைமையு மறிவித்தது. (௭)

---

வேறு—இது நூற்கருத்துணர்த்திற்று.

புறச்சமயத் தவர்க்கிருளாய்-உலகாயதன் புத்தன் சமணன் மீமாம்சன் மாயாவாதி பாஞ்சராத்திரியென்னும் புறச்சமயிக ளறுவர்க்குமிருளாய்,— அகச்சமயத் தொளியாய் - சைவம் பாசுபதம் காளாமுகம் வயிரவம் வாமம் மாவிரதம் என்னு முட்சமயிகளறுவர்க்கும் விளக்கமாய்,—புலனளவைக்களவாகி - சொல்லப்பட்ட காட்சிமுதலிய வளவைகட்கு மட்டாய்,—பொன்பணிபோல்பேதப் பிறப்பிலதாய் - பொன்னும்பணியும்போற் பேதமில்லாத தோற்றமிலதாய்,—இருள்வெளிபோற் பேதமுஞ் சொற்பொருள்போற் பேதாபேதமுமின்றி - இருளும வெளியும்போலப் பேதமுஞ் சொல்லும் பொருளும்போலப் பேதாபேதமு மில்லாமல்,— பெருநூல் சொன்ன வறத்தினால் விளைவதாய் - வேதாகமங்கள் சொல்லப்பட்ட சிவதன்மங்களின் கூற்றினாலே யுண்டாவதாய்,— உடலுயிர்கண்ணருக்க னறிவொளிபோற் பிரிவரு மத்துவிதமாகுஞ் சிறப்பினதாய்-உடலுமுயிருங் கூடியவிடத் தறிவுங் கண்ணு மாதித்தனுங் கூடியவிடத் தொளியும்போல வேற்றுமையில்லாத வத்துவிதமாகுஞ் சிறப்பினை யுடையதாய்,—

வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத் திறனிங்குத் தெரிக்கலுற்றாம் - வேதத்தின் முடிவிலே தெளிவான சைவசித்தாந்தத்தி னுண்மையை இந்நூலுள் விளங்கச்சொல்லுவாம். எ-று.

புறமுமகமுமான சமயிகள் பன்னிருவர் கருத்துக்களை விரிந்தநூலிற் கண்டுகொள்க. ஈண்டுரைப்பிற் பெருகும். அபேதங்கொள்ளிற் பொன்னும்பணியு மற்றொன்றாற்போல வெல்லார்க்குஞ் சுகதுக்கங்க ளொத்தல்வேண்டும். பேதங்கொள்ளி லிருளுமொளியும்போலச் சிவனுமுயிரு மெக்காலமும் பேதமேயாதலின் வேதாகமங்களிற் சாயுச்சியமென்று சொல்வது பயனிற் சொல்லாம். பேதாபேதங் கொள்ளின மோக்ஷஞ் சாதிக்கவேண்டுவதில்லையாம். ஆகையா லவைமூன்று நீக்கப்பட்டன.

---

இங்ஙனஞ் சொல்லிவந்த வத்தத்தைப் பெறுகிற ஆன்மாக்க ளெத்தனைவகைப்பட் டிருப்பார்களென்றும் அவர்களுக்கு இந்தவத்தத்தைச் சிவன் கடாக்ஷிக்கிற முறைமையெப்படியென்றும் வினவின வவதாரத்து மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

மூவகையா ருயிர்வர்க்க மனைத்தார்க்கு மூலமலத் தார்மூன்று முடையாரன்றே, இவைகமா மெனவுருவாய் வந்துநாதன் றிருநோக்காற் பரிசத்தாற் றிகழும்வாக்காற், பாவனையான் மிகுநூலா லியோகப்பண்பாற் பரவிவரு மவுத்திரியாற் பாசநாச, மேவவரு ளுதவுமவுத் திரியிரண்டிற் றிறனும் வியன்கிரியை ஞானமென விளம்புமாறே. (அ)

மூவகையுயிரின் முறைமையுமவர்க்குக்
காவலனருள்புரி கடனுநவின்றது.

(இ-ள்.) மூவகையாருயிர்வர்க்கம். (அறுவயம்.) ஆருயிர்வர்க்க மூவகை

நிரம்பியிருக்கிற வான்மாக்கள் மூன்று வகைப்பட்டிருப்பார்கள். அஃதாவது

மலத்தார்

ஆணவமல மொன்றையுடைய விஞ்ஞானகலரென்றும்

கன்ம மூலமலத்தார்

கன்மமலமும் ஆணவமலமுமுடைய பிரளயாகலரென்றும்

மூன்றுமுடையார்

ஆணவமலமுங் கன்மமலமு மாயாமலமுமுடைய சகலரென்றுஞ் சொல்லப்பட்டிருப்பார்கள். அவர்களுக் கிந்த மலங்களெந்தவவஸ்தையிலே யுண்டானதோவென்னில்?

அன்றே

இவை யநாதியேயுள்ளதாயிருக்கும். அவர்களுக்கிந்த மலங்க ணீங்கும்வழி யெப்படியோவென்னில்?

திவக மாமேனியுருவாய்வந்து நாதன் (அறுவயம்.) நாதன் திவக மாமேனியுருவாய்வந்து

சிவன் இந்த மூவகையான்மாக்களுக்கு முண்டான மலங்களைப் பாகம் வருத்துவித்து யாதாமொரு பக்ஷிகளை மிருகங்களைப் பிடிக்கவேண்டினவர்க ளதற்கதற்கேற்ற பார்வையைக் காட்டிப் பிடித்தாற்போல ஒருமலத்தையுடைய விஞ்ஞானகலருக்கு மிரண்டுமலத்தையுடைய பிரளயாகலருக்கு மூன்றுமலத்தையுடைய சகலருக்கு மவரவர்நின்ற நிலைக்குத் தக்கதாகத் திருமேனிகொண்டு ரக்ஷிக்குமிடத்து விஞ்ஞானகலரும் பிரளயாகலரு மிந்தப்

பூததேக சம்பந்தமற நிற்கையாலவர்களை நிராதாரமாகிய திருமேனிகொண்டு ரக்ஷித்து இந்தச் சகலரை யிரக்ஷிக்குமிடத் திவர்க ளிந்தப்பூததேக சம்பந்தமாய் நிற்கையா லவர்களைப்போலச் சாதாரமாகிய மானுடச்சட்டை சாத்தி வந்திரக்ஷிக்கும். இவ்வண்ண மிரக்ஷிக்குமிடத்து

திருநோக்காற் பரிசத்தாற்றிகழும் வாக்காற் பாவனையான் மிகுநூலா விபோகப்பண்பாற்பரவிவரு மவுத்திரியாற் பாசநாச மேவ வருளுதலும்

திருநோக்காற் றிருக்கண் சாத்தியும் ஸ்ரீபாத ஸ்ரீஹஸ்தங்களால் பரிசித்தும் விளங்க வுபதேசித்தும் தன்னைப்போல நின்மலமாகப் பாவித்தும் மஹத்தாகிய நூலுரைத்துக்காட்டியும் பொருளோடு கூட்டியும் குண்டமண்டலமிட்டுச் செய்யுந்தீக்கைகளாலும் பாசநாசமாம்படி பொருந்த ஞானத்தையுண்டாக்கும். இவையிற்றில்

அவுத்திரி யிரண்டுதிறனும்

ஔத்திரியாகியதீக்கை யிரண்டுவகைப்பட்டிருக்கும். அஃதாவது

வியன்கிரியை ஞானமென விளம்புமாறே.

வியப்பத்தையுடைய கிரியாவதியென்றும் மனோபாவத்தாற்செய்கிற ஞானவதியென்றும் சிவாகமங்கள்சொல்லும். எ-று.

று-ம். மூவகை யாருயிர்வர்க்கம். எ-கு. ஒருமலத்தையுடைய விஞ்ஞானகலரென்று மிரண்டுமலத்தை யுடைய பிரளயாகலரென்று மூன்றுமலத்தையுடைய சகலரென்றும் பொருட்கூறியதற்கு வகையேதென்னில் முற்கூறியவொருமலத்தையுடைய விஞ்ஞானகலராவார் பக்குவரென்று மப

க்குவரென்று மிரண்டுவகைப்பட்டிருப்பார்கள். இதிற்பக்குவரானவர்கள் மலபரிபாகத்தின் மிகுதியாலே சிவனுடைய அனுக்கிரகத்தைப்பெற்றுச் சாயுச்சியத்தை யடைவார்களெனவறிக. மற்ற அபக்குவர்களும் மலபரிபாகத்தின் மந்தத்தாலே சிவனுடைய வநுக்கிரகத்தைப்பெற்றும் அதிகாரமலத்தோடுங் கூடியிருப்பார்கள். அவர்களுமனுசதாசிவரென்று மட்டவித்தேசுரரென்றுஞ் சத்தகோடி மஹாமந்திரேசுரரென்று மூன்றுவகைப்பட்டிருப்பார்கள். இதில் அனுசதாசிவர் சிவனுடைய வநுக்கிரகத்தைப்பெற்று சாதாக்கியதத்துவத்திலே யிருப்பார்கள். மற்ற அட்டவித்தேசுரர்களுஞ் சுத்தமாயாகிருத்தியத்துக் கதிகாரமாய் மயேசுரதத்துவத்திலே யிருப்பார்கள். சத்தகோடிமஹாமந்திரேசுரர்களு மட்டவித்தேசுரராலே பிரேரிக்கப்பட்டுச் சுத்தவித்யா தத்துவத்திலே யிருப்பார்கள். அவர்களு மிருவகைப்படுவர்கள். அஃதாவது மூன்றரைக்கோடிபேர் சிவன்குருமூர்த்தத்தை யதிட்டித்துச் சகலரையிரக்ஷிக்குமிடத்து அதற்குக்காரணமாக விருந்து மஹாபிரளயகாலத்திலே மோக்ஷத்தை யடைவார்கள். மற்றைய மூன்றரைக்கோடி பெயருஞ் சிவன்குருமூர்த்தத்தை யதிட்டியாமல் நிராதாரமாய்நின்று விஞ்ஞானகலரையும் பிரளயாகலரையு மநுக்கிரகிக்குமிடத்து அதற்குக்காரணமாயிருந் ததிகாரத்திலுள்ள வைராக்கியத்தாலே சிருட்டிக்குப்பின்பாக மோக்ஷத்தையடைவர்களெனவறிக. இங்ஙனங் கூறிவந்தவகைகளுக்கு. பி-ம். தத்துவவிளக்கத்தில் "அறிந்தவர் நிர்ந்தத்துகளினர் நிராத்துகளர்முன்னர்ச், செறிந்தவர் விஞ்ஞைக்கு நாயகரெண்ம ரெனச்சிறந்தோர், பிறிந்தவர்மந்திர ராமெழுகோடியர் பேரொளியான், மறிந்நதிரைப்புனல் வெங்குருவாணர்வகுத்தவரே." எ-று. கன்

டுகொள்க. இங்ஙனங்கூறப்பட்ட விஞ்ஞானகலரில் முந்கூறிய அபக்குவர் தன்மை யெங்ஙனே யென்னில் கேவலத்திலான்மாநிற்குந் தன்மைபோல ஒருவடிவுமற்று ஆணவமலசொரூபராய்ச் சுத்தமாயையிலே தோற்றமுமொடுக்கமு மாகையாற் சுத்தமாயையிலே ஆணவமலபரிபாகம் வருமளவும் பெத்தராயிருப்பார்களெனவறிக. இவர்களுக் கிந்தவிஞ்ஞானகலப் பிராப்தி யெதனாலுண்டான தென்னில் ஞானமற்றறவாலும் யோகத்தாலும் அகம்பிரமமென்கிற ஞானத்தாலுங் கன்மக்ஷயம்வந்துஞ் சிவஞானம் பிரகாசியாதபடியாலே ஆணவமோசனம் பிறவாமல் வந்துகூடினநிலையெனவறிக. இந்தவிஞ்ஞானகல சத்தத்துக்குப் பொருளாவது அகம்பிரமமென்கிற விசிட்டஞானத்தாலே மாயாகாரியமான கலாபந்த மற்றவர்களெனக்கொள்க.

இங்ஙனங் கூறிவந்தவகையில் அணுசதாசிவர்க்கும் அட்டவித்தேசுரருக்கும் சத்தகோடி மஹாமந்திரேசுரருக்கும் வயிந்தவ சரீரமெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில் "வித்தைகளவித்தையீசர் சதாசிவரென்றிவர்க்கு வைத்தாறு பதங்கள்வன்னம் புவனங்கண்மந்திரங்க, டத்துவஞ்சரீரம் போகங் கரணங்கடாமெலாமு, முய்த்திடும்வயிந்தவந்தானுபாதானமாகிநின்றே." எ - று. கண்டுகொள்க.

இனி இரண்டுமலத்தையுடைய பிரளயாகலர்தன்மை யெங்ஙனேயென்னில் அவர்களும் பக்குவரென்றும் அபக்குவரென்று மிரண்டுவகைப்படுவர்கள். அதில் பக்குவரானவர்களை மலபரிபாகத்தின் மிகுதியாலே சிருட்டிகாலத்திலே சிவனிரட்சித்தருளுவன். இவர்களும் பரமுத்தி பெற்றவர்களென்று மபரமுத்திபெற்றவர்களென்று மிரண்டு வகைப்படுவர்கள். இவர்களில் பரமுத்திபெற்றவர் மலபரிபாகத்

தின் மிருதியாலே சாயுச்சியத்தைப் பெற்றவர்களெனவறிக.
மற்ற அபரமுத்திப்பெற்றவர்கள் சிவனாலே யநுக்கிரகத்
தைப்பெற்று மலபரிபாகத்தின் மந்தத்தாலே யதிகாரமலத்
தோடுங்கூடி அட்டவித்தேசுரராலே பிரேரிக்கப்பட்டுப் பிர
கிருதிமாயைக்குக் கீழுண்டான கிருத்தியங்களும் பண்ணிக்
கொண்டு கலாமத்திமத்திலே யிருப்பர்களெனவறிக. அப்ப
டிப் பிரகிருதிமாயையோடுங் கூடியிருந்தாற் சகலரைப்போ
லக் கலாதியால் வாதைப்படார்களோவென்னி லதுவுண்
டாகாது. அதுவென்போலவென்னில் பாம்பினிடத்திலுண்
டான விடமானது பிறரைவருத்தலுஞ்செய்து மந்தப்பாம்பை
வருத்தாதுபோல வெனவறிக. இந்தப்பிரளயாகலர்க்கு ஆ
ணவமலமுங் கன்மமலமுமென்று சொல்லியிருக்க மாயாமல
சம்பந்தம் வருவானேனென்னில் அவர்களிற்சிலர் முற்செய்
த தபோபலத்தாலாணவமலமுங் கன்மமலமும் பரிபாகமா
கிற வவதாரத்திலே விஞ்ஞானகலரில் மந்திரேசுரர் பதத்தை
ப்பெற்றுச் சுத்தவித்தையை யார்ஜித்திருந்து சிவனாலே யதி
காரத்தைப்பெற்று அந்தவதிகார நடத்தவேண்டுகையாலே
யசுத்தமாயையோடுங் கூடி நடத்தினாலு மதிற்றோய்வற நிற்
பர்களெனவறிக. அஃதெங்ஙனே யென்னில் சிவன்பிரபஞ்ச
த்தை நடத்துகைச்செய்தே யதிற்றோய்வற நின்றாற்போல
வெனவறிக. அவர்களாவது மண்டலரெட்டு குரோதனரெ
ட்டு வீரரொன்று ஸ்ரீகண்டரொன்று உருத்திரர்நூறு ஆக
நூற்றிருபத்தெட்டுப் பெயரெனவறிக. இதற்கு. பி - ம்.
தத்துவவிளக்கத்தில் "பெற்றதவப்பயனாற் பிரளயாகலரிற்
சிலரைக், குற்றமில் மந்திரநாயகராக்குமெங் கொச்சையர்
கோன், மற்றவர் மண்டலர் குரோதாதியர் வீரர் ஸ்ரீகண்டர்
நூற்றுருத்திர ரெட்டெட்டொன்றொன்று நூற்றெண்ணிவர்
க்கே. எ - று. கண்டுகொள்க.

இங்ஙனங்கூறப்பட்ட பிரளயாகலரிற் பக்குவரானவர்கள் கன்மத்துக்கீடாகச் சிருட்டிகாலத்திலே சூக்குமதேகத்தோடுங்கூடிச் சகலராயும் விடுவர்களெனவறிக. இதற்கு. பி - ம். தத்துவவிளக்கத்தில். "வகுத்தவரிற்பவ னுதிப் பூரணையர் மற்றவர்பின், தொகுத்தவரிற்பந்த முற்றினர் தூய நெறிச் செல்வர்பின்பால், மிகுத்தவர்தாம்புரி யட்டகத்தோடும் வினைவழியிற், பகுத்தபிறப்பிற் சகலர் முப்பாசமும் பற்றினரே." எ - து. கண்டுகொள்க.

இனிச் சகலருடையதன்மை யெங்ஙனே யென்னில் அவர்களு மாணவமாயைகாமியமென்னு மூன்றுமலத்தோடுங்கூடி யண்டஜஞ் சுவேதஜமுற்பிஜஞ் சராயுஜமெனகிற நால்வகைத்தோற்றத்திலே சுரர் நரர் மிருகம் பசு பக்ஷி தாபர நீருறைவனவாகிய வெழுவகைப் பிறப்பினையுமெடுத்து இருநூற்றிருபத்துநாலு புவனங்களினு முழன்று திரியுமவதாரத்திலே யிருவினையொப்பு மலபரிபாகமு முண்டாய்ச் சத்திநிபாதம் விளைந்து பக்குவப்பட்ட வான்மாக்களுக்குச் சிவனவர்களைப்போல மானிடச்சட்டை சாத்திக்கொண்டுவந்து உண்மைஞானத்தைக் கடாக்ஷித்துத் தனது பூரணஞானத்தோடுங் கூட்டிக்கொள்ளுவனெனவறிக. இதற்கு. பி - ம். தத்துவவிளக்கத்தில் "எண்ணும் வினைப்பயனுற் புவனந்தொறும் போகமென்று, நண்ணிவருஞ் சகலர்க்கொருகால நயந்ததங்ஙனே, பண்ணியகன்மந் துலையொத்துச்சத்தி நிபாதமுறக், கண்ணியலுங்குருவாய்க் காழிவேந்தன் கதிதருமே." எ - து. கண்டுகொள்க.

இனி தீவகமாமெனவுருவாய்வந்து. எ - கு. மூவகையான்மாக்களையுங் கத்தா விரக்ஷிக்குமிடத்து விஞ்ஞானகலரையும் பிரளயாகலரையும் நிராதாரமாகநின்று ரக்ஷித்தருளுவ

னென்றுஞ் சகலரைச் சாதாரமாகவந் திரக்ஷித்தருளுவ
னென்றும் பொருட்கூறியதற்கு. பி-ம். சித்தியாரில். 'உரை
தருமிப் பசுவர்க்கமுணரின்மூன்று முயரும் விஞ்ஞானகலர்
பிரளயாகலர்சகலர், நிரையின்மல மலங்கன்ம மலங்கன்ம
மாயை நிற்குமுதலிருவர்க்கு நிராதாரமாகிக், கரையிலருட்
பரன் றுவிதாசத்திநிபாதத்தாற் கழிப்பன்மலஞ் சகலர்க்கு
க்கன்மவொப்பிற், றரையிலாசான் மூர்த்தியாதாரமாகித் த
ரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபாதத்தால்." எ-ம்.
சிவார்ச்சனபோதத்திலும். "வைத்தமல மலங்கன்ம மலங்
கன்மமாயை மருவவிஞ்ஞானகலர் பிரளயாகலர் சகல, ரித்
தகைமையிவர்க்கிச விவையகலவருளா லியற்றுவதோர் செ
ய்தி யிரண்டாகுந்திவிரதச், சத்தியினால் முன்னிருவர்க்கா
சான்மூர்த்தி தரியாதேதான்பண்ணு நிராதாரந்தரிதது, வித்
தகமா மந்தத்திவிரத்தாற் பின்னர் விளம்புவர்க்குச் செய்தி
யுஞ் சாதாரமன்றே." எ-ம். கண்டுகொள்க.

அன்றியு மூவகையான்மாக்களையு மவரவர்நின்றநிலையி
லே சிவன் கூடிநின் றிரக்ஷித்தருளுவனென்று பொருட்கூறிய
தற்கு. பி-ம். போற்றிப்பஃறொடையில். "நன்னெறிவிஞ்ஞா
னகலர் நாடுமலமொன்றினையு, மந்நிலையே யுள்ளின் றறுத்த
ருளிப் - பின்னன்பு, மேவாவிளங்கும் பிரளயாகலருக்குத்
தேவாய்மலமிரண்டுந் தீர்த்தருளிப் - பூவலயந், தன்னின்று
ங்காச் சகலர்க்கவர்போல, முன்னின்று மும்மலந்தீர்த்தா
ட்கொள்கை - யன்னவனுங், காதிகுணமாதலினு லாடுந்தி
ருத்தொழிலுஞ், சோதிமணிமிடற்றுஞ் சுந்தரமும் - பாதியா
ம், பச்சையிடமும் பவளத்திருச்சடைமேல், வைச்சநதியு
மதிக்கொழுந்து - மச்சமுற, வாடுமாவு மழகார்திருநுதன
மேல், நீடுருவவன்னி நெடுங்கண்ணுங்-கேடிலயங், கூட்டுந்

தமருகமுங் கோலவெரியகலும், பூட்டரவக்கச்சும் புலியதளும்-விட்டின்ப, வெள்ளத்தழுத்தி விடுந்தாளினுமடியார், உள்ளத்தினும் பிரியாவொண்சிலம்புங் - கள்ளவினை, வென்று பிறப்பறுக்கச் சாத்தியவீரக்கழலு, மொன்று முருத்தோன்றுமனுள்ளடக்கி - யென்று, மிறவாதவின்பத் தெனையிருத்த வேண்டிப், பிறவாமுதல்வன்பிறந்து." எ-து. கண்டுகொள்க. அன்றியுமவரவர் நினைறநிலைக்குத் தக்கதாகத் திருமேனி கொண்டிரக்ஷிப்பன். எ-கு. பி-ம். பூசாகரணத்தில். "எவ்வுலகத்துமூர்த்தி யேதுகொண்டிவனியங்கு மவ்வுலகத்து மேனியதுகொண்டங்கமருமீசன்" எ-து. கண்டுகொள்க.

இனி திருநோக்காலென்ற பதந்தொடங்கிப் பரவிவருமவுத்திரியாலென்ற பதமுடிவாகிய வெழுவகைத் தீக்கைக்கும் வகையேதென்னில் திருநோக்காலென்றது மச்சமானது சினையைப்பார்த்துநிற்க வந்தச்சினை யந்தமச்சத்தின் சொரூபம்பெற்றாற்போல வாசாரியனுண்மையிலே சித்தத்தைவைத்து ஞானதிட்டியாலே பார்க்குமவதாரத்து அத்துவாக்களிற்கட்டுண்ட கன்மங்களைத்தகித்து இராகுவினாலே விழுங்கிவிடப்பட்ட சந்திரனைப்போல மலத்திரயங்களின் மறைப்புண்டுகிடந்த வான்மாவையு மந்தமலங்களினீக்குகையெனவறிக.

இனி இரண்டாவது பரிசத்தாலென்ற தீக்கையும் பஞ்சபிரமஷடங்கங்களின் சொரூபமாயிருக்கிற ஸ்ரீபஞ்சாக்கரத்தை வலக்கையிலேநெதித்து இந்தப்பிரார்த்தவாதனையை நீக்குவது பொருட்டாகச் சீடனுடையதலையிலே சோதிமயமாகவைத்து அந்தச்சோதியையு மவனுடையவுள்ளும் புறம்பும் பூரணமாகத்தியானித்து அந்த ஸ்ரீஹஸ்தத்தாலே யவனுடையவுடம்பிற் பஞ்சகலாத் தானங்களையும் பரிசித்து வாதனையை யொழிக்குமது வெனவறிக.

இனி மூன்றாவது திகழும்வாக்காலென்றது வாசகதீக்கையெனவறிக. அஃதாவது பதி பசு பாசத்தினுண்மையான ஸ்ரீபஞ்சாக்கரத்தை ஞானவொளியுடனேகூட வுபதேசிக்கையெனவறிக.

இனி நான்காவது பாவனையாலென்றது சிடனைத்தன்னைப்போல நின்மலமாகப்பாவித்துப் பிரபஞ்சப்பற்றற மலத்திரயங்களிற்றோய்வற நிறுத்துகையெனவறிக.

இனி ஐந்தாவது மிகுநூலாலென்றது இந்த முறைமைகளெல்லாமிவனுக்குச்சந்தேகந் தீரச் சாத்திரங்களிலேயொப்புக்கொடுத்துக் கேட்டல் சிந்தித்தல் தெளிதலாயுள்ள மூவகையினு நிறுத்துகையெனவறிக.

இனி யாறாவது யோகப்பண்பாலென்றது அட்டாங்கயோகத்தினாலே மனோவிகாரத்தையடக்குவித்து நிட்டையைப்புரிவிக்கையெனவறிக.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட தீக்கை யறுவகையும் பக்குவர்க்குச் செய்யுமதெனவறிக.

இனி யேழாவது ஔத்ரியென்ற தீக்கை குண்டமண்டலமிட்டக்கிலிகாரியமுஞ்செய்து பாசக்ஷயம் பண்ணுவதெனவறிக. இது அபக்குவர்க்குச்செய்யுந் தீக்கையெனவறிக. அதுவும் ஞானவதியாகவுங் கிரியாவதியாகவுஞ் செய்யப்படுமெனவறிக. இதற்கு பி-ம். சித்தியாரில், "பலவிதமாசான் பாசமோசனந்தான் பண்ணும்படி நயனத்தருள் பரிசவாசகமானதமு, மலகில் சாத்திரமியோக மவுத்திராதியனேக முளவவற்றி னவுத்திரியிரண்டுதிரமா, மிலகுஞானங்கிரியையெனஞானமனத்தா லியற்றுவது கிரியையெழிற்குண்டமண்டலாதி, நிலவுவித்துச்செய்தல் கிரியாவதிதானின்னு நிர்ப்பீசஞ் சபீசமென விரண்டாகிநிகழும்." எ-ம். "பாலரொடு

வாலீசர் விருத்தர் பனிமொழியார் பலபோகத்தவர் வியாதிப்பட்டவர்க்குப் பண்ணுஞ், சீலமது நிர்ப்பீசஞ் சமயாசாரந் திகழ்சுத்தி சமயிபுத்திரர்க்குநித்தத் தேனுமதிகாரத்தையியற்றித்தானு மெழிலிரதிகாரையென நிலநிரண்டாய்விளங்குஞ், சாலநிகழ் தேகபாதத்திரோடு சத்தியநிர்வாணமெனச் சாற்றுங்காலே." எ-ம். சிவார்ச்சனாபோதத்தில். "செய்யும்வகை யிரண்டுபடியாகுந்தெரிற் றிகழ்ஞானவதி கிரியாவதியென்றுசெப்பி, யுய்யும்வகை யுவந்து மனோபாவகத்தான்மலங்க ளோட்டுவது ஞானவதி யொண்கிரியாவதிதான், வையநிகழ் குண்டமண்டலமிட்டு மற்று மருவுதிருமேற்கட்டி கட்டிவளர்தருப்பை, கொய்யுமலராற்செய்த மாலைகளுந்தூக்கிக் கும்பகலசங்களுங்கொண் டியற்றுவன குறித்தே." எ - ம். கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது ஆன்மவர்க்க மூன்றுவகைப்பட்டிருக்குமென்று மவர்களுக்கிந்தமல மநாதியென்று மிந்த மலங்களைச் சிவனீக்குமிடத்து விஞ்ஞானகலருக்கும் பிரளயாகலருக்கும் நிராதாரமாய்நின்று போக்குவனென்றுஞ் சகலருக்கு மானிடச்சட்டைசாத்தி யாசாரிய மூர்த்தியாகிவந்து மலங்களைநீக்கி யிரக்ஷிப்பனென்னு முறைமையு மறிவித்தது. (அ)

---

வேறு—இஃதந்தப்பேற்றைப் பெறுகின்றவுயி ரித்துணைப்பகுதியுடையனவென்பதூஉஞ் சகலர்க்குப் பரமசிவனநுக்கிரகிக்கு முறைமையு முணர்த்திற்று.

மலத்தார்கன்ம மூலமலத்தார் மூன்றுமுடையார்-ஆணவமலமொன்றேயுடைய விஞ்ஞானகலர், ஆணவமலமுங் கன்மமலமுமுடைய பிரளயாகலர், மூலமலங் கன்மமல மாயாமலமெனனு

மூன்றுமலமுடைய சகலர் ஆக,—ஆருயிர்வர்க்க மூவகை-நிறைந்தவான்மவர்க்க மூன்றுவிதப்பட்டிருக்கும்.—அன்றே - இவர்க்கிவையுணர்த்தியே.— நாதன்றீவகமாமென வுருவாய்வந்து-அம்மூவகையாருட் பக்குவரான சகலர்க்குப் பரமசிவன் பார்வையிட்டு மற்றொன்று பிடிக்குமாறுபோலத் திருமேனி கொண்டுவந்து,—திருநோக்காற் பரிசத்தாற் றிகழும்வாக்காற் பாவனையான் மிகுநூலால் யோகப்பண்பாற் பரவிவரு மவுத்திரியாற் பாசநாசமேவவருளுதவும் - சிவத்தியானம் பண்ணி விழித்துப் பார்க்கின்ற சக்ஷு தீக்ஷையாலுஞ் சிவஹத்தம் வைக்கின்ற பரிசதீக்ஷையாலு மூலப்பிரமாங்கங்களைத் தானுச்சரிக்கின்ற வாசகதீக்ஷையாலுங் குண்டமண்டலாதியெல்லா மனோபாவகத்தாற் கற்பித்துச்செய்கின்ற மானததீக்ஷையாலும் விசேஷசமயானந்தரங் காமிகமுதலிய மிக்கசித்தாந்த சாத்திரங்களை யுபதேசிக்கின்ற சாத்திரதீக்ஷையாலுந் தாரணைமுதலியயோகங்களை யுபதேசிக்கின்ற யோகதீக்ஷையாலுஞ் சொல்லப்பட்டு வருகின்ற குண்டமண்டலாதிகளால் வெளிப்படச்செய்கின்ற மூவகையவுத்திரிதீக்ஷையாலு மும்மலங்களுநாசத்தையடைய வனுக்கிரகத்தைக் கொடுப்பன்,—அவுத்திரி-நிருவாணமான வவுத்திரிதீக்ஷையானது,—வியன்கிரியைஞானமென விளம்புமாறிரண்டுதிறமாம்-பெரியகிரியாவதி ஞானாவதியென்று சொல்லும்படி யிரண்டுகூறும். எ-று.

பண்பு-முறைமை. பின்வந்தவவுத்திரி யேற்புழிக்கோடலானிருவாணமாயிற்று. நாதனுதவுமென வினையும். ஞானத்தாற் கலாதியற்றவர்கள் விஞ்ஞானகலர். பிரளயத்திலே உடலையற்றவர்கள் பிரளயாகலர். கலாதிகூடினவர்கள் சகலர் எனக்கொள்க. இதனைப் பவுஷ்கரத்திலே "ஸகலாகலத்யேதந" என்பதனாலறிக. தீவகமா மென்றமையான் முன்னும்பின்னும் வருவழிக்கொளாஅலென்னுந் தந்திரவுத்தியாற் சகலர்க்கென்பது பெற்றாம். இனி

த்தீவகமாமென்பதைச் சுடராக்கி விஞ்ஞானகலரிற் பக்குவர்க்கு ஞானச்சுடராய் வந்தென்று முருவாயென்பதற்குப் பிரளயாகலரிற் பக்குவர்க்கு அநந்ததேவநாயனாராக வந்தென்றுந் தீவகமாமெனவுருவாயெனக்கூட்டி முன்னுரைத்தவா றுரைத்துத் திருநோக்குமுதலியவற்றைச் சகலர்க்காக்கிப் பாசநாச மேவவருளுதவுமென்பதை மூவர்க்குமாக்கி முடிப்பினுமாம். ஆகவெனவொருசொல் வருவிக்க. பக்குவாபக்குவ பேதங்களாலே விஞ்ஞானகலர் நால்வர். பிரளயாகலர் மூவர். சகலர் மூவராகப் பதின்மராவாரெனவறிக. விரிக்கிற்பெருகும்.

---

கர்த்தா விங்ஙன மாசாரியமூர்த்தமாய்வந் திரக்ஷிக்குமிடத்துண்டான தீக்கை யெத்தனைவகைப்பட் டிருக்குமென்று வினாயதற் குத்தர மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

விரும்பிய மந்திராதிகார மர்ச்சனாதிகார மேவு
மியோகாதிகார மெனச்சமய விசேடம், வரும்பொ
ருவி னிருவாண மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் பு
வனங்க டத்துவங்கள் கலைக, ளிரங்கடைவிற் றொகைய
தினொன் றெண்பத்தொன் றைம்பத்தொன் றிருநூ
ற்றோ டிருபத்து நாலாறுறைந்திடப், பரந்தநெறி யாறு
வகையு மொருவிநினைவரிதாம் பரபதத்து ஞேபிர்விர
வப் பயிற்றுமன்றே. (க)

தக்கசரிதைக்கிரியை யோகத்தன்மையு
மிக்கஞான விதியையும்விரித்தது.

(இ-ள்.) சிவபுண்ணியத்துக் குரியவர்கள் சர்வரும்

| | |
|---|---|
| விரும்பிய மந்திராதிகாரம் | விரும்பி யிச்சிக்கப்பட்ட மந்திரங்களை யதிகரிக்கை |
| அர்ச்சனாதிகாரம் | பூசைகளை யதிகரிக்கை |

| | |
|---|---|
| மேவுமியோகாதிகாரம் | பொருந்தப்பட்ட யோகங்களையதிகரிக்கை |
| எனச்சமய விசேடம்வரும் | இங்ஙனஞ் சொல்லப்பட்ட மூன்று பாதமுஞ் சமயதீக்கையினும் விசேடதீக்கையினு முண்டாகாநிற்கும் |
| பொருவி னிருவாணம் | ஒப்பில்லாத நிருவாணதீக்கையாவது |
| மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்க டத்துவங்கள் கலைகள் | மந்திரங்களென்றும் பதங்களென்றும் அக்கரங்களென்றும் புவனங்களென்றும் தத்துவங்களென்றும் கலைகளென்று மிங்ஙனஞ் சொல்லப்பட்ட வகைகளாறுக்கும் |
| இரங்கடை விற்றொகை | கூறுமடைவிற்றொகையாவது |
| பதினொன் றெண்பத் தொன்றைம்பத் தொன்றிருநூற்றேடிருபத்து நாலாறைந்தில் | மந்திரங்கள் பதினொன்றென்றும் பதமெண்பத்தொன்றென்றும் அக்கரமைம்பத்தொன்றென்றும் புவனமிருநூற்றிருபத்துநாலென்றும் தத்துவ முப்பத்தாறென்றும் கலைகளைந்தென்றும் ஆக விங்ஙனம் |
| பரந்தநெறி யறுவகையு மொருவி | விரிந்தவழியாறுபிரகாரமாகிய வத்துவாக்களையும் விட்டுநீங்கி |
| நினைவரிதாம்பரபதத்து ளுயிர் விரவப் பயிற்று மன்றே. | மனத்தினால் நினைத்தற்கரிதாகிய மேலான சிவபதமாகிய சாயுச்சியத்திலே யான்மாவைப் பொருந்தும்படி செய்விக்கும். எ-று. |

௫-ம். விரும்பிய மந்திராதிசாரம். எ-கு. சர்வரும் விரும்பியிச்சிக்கப்பட்ட மந்திரங்களென்றதேதென்னில்? ஞானவான்களன்றியே மற்றுள்ளவர்களு மதிகரிக்கையா லப்படிச் சொன்னதெனவறிக.

இனி அர்ச்சனாதிகாரம். எ-கு. பூசைகளையதிகரிக்கை யென்றதேதென்னில்? குருபூசை சிவபூசை மகேசுரபூசை முதலாயுள்ளவையிற்றையெனவறிக.

இனி மேவும்யோகாதிகாரம். எ-கு. பொருந்தப்பட்ட யோகங்களை யதிகரிக்கையென்றதேதென்னில்? இயமம் நியமம் ஆதனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி என்னப்பட்ட அட்டாங்கயோகங்களும் அன்றியும் ஆதாரயோக நிராதாரயோகமென்னும் யோகங்களுமெனவறிக.

இனிச் சமயவிசேடம்வரும். எ-கு. இங்ஙனஞ் சொல்லப்பட்ட தீக்கைகளிரண்டினுள்ளு மூன்றுபாதமு மடங்குமென்றதேதென்னில்? சமயதீக்கையில் சரிதையொன்றுமெனவறிக. விசேடதீக்கையிலே கிரியையும் யோகமுமடங்கி வருகையா லப்படிச் சொன்னதெனவறிக. அப்படிச் சமயதீக்கைக்குச் சரிதையொன்றுமாயிருக்க விசேடதீக்கைக்குக் கிரியையும்யோகமுமா யொருதீக்கையிலே இரண்டுபாதமு மடங்கி நின்றவழி யெங்ஙனேயென்னில்? விசேடதீக்கைக்குப் பூசைகளை யதிகரிக்கை வேண்டுகையாற் பூசைகளை யதிகரிக்குமிடத்துப் பிராணாயாமமும் அந்தர்யாகமுமாகிய வுட்பூசையுஞ் செய்யவேண்டுகையா லவையிரண்டும் யோகத்தி லடங்கிவருகையாலே விசேடதீக்கைக்குக் கிரியையும் யோகமுங் கூடி-வருமென்றதெனவறிக. இதற்கு. பி-ம். ஞானவந்திரட்டையில். "மற்றதனிற் தர்ப்பணாதி சரிதைகிரியை பூசை மருவுபிராணாயாம மன்னிவளர்யோகம்" எ-து. கண்டுகொள்க. சமயத்துக்குத் தர்ப்பணமுதலானதொழிலும் விசேடத்துக்குப்

பூசைகளும் பிராணாயாமமுதலான யோகங்களுங் கூடிவருகை யாலே யப்படிச் சொல்லப்பட்டதெனவறிக.

இனிப் பொருவினிருவாணம். எ-கு. ஒப்பில்லாத நிருவாண தீக்கை யென்றதேதென்னில்? நிருவாண தீக்கை சாயுச்சியத்துக் கேதுவாகுகையாற் சாயுச்சியத்திற்கு வேறொப்பில்லாதபடியா லே யப்படிச் சொல்லப்பட்டதெனவறிக.

இனிஇரங்கடைவிற்றொகை. எ-கு. இரங்குத லோசையென் றும் ஓசைசொல்லென்றும் சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். இந்நூலில். "ஆசுறுநிரோத மேவாதகனு மாசிவமுன்னாக வோ சைகொள்" எ - து. கண்டுகொள்க.

இனி மந்திரம் பதினொன்றென்றதேதென்னில்? ஈசானமு தல் அத்திரமுடிவாகிய மந்திரங்களை யெனவறிக.

பதமெண்பத்தொன்றென்றதேதென்னில்? பிரணவமாகிய ஓங்காரமுதல் நமோநமாந்தமெனவறிக.

அக்கர மைம்பத்தொன்றென்றதேதென்னில்? அகாரமுதல் க்ஷகாரமுடிவெனவறிக.

புவன மிருநூற்றிருபத்துநா லென்றதேதென்னில்? அநாசி ருத்திரமுதல் காலாக்கினியந்தமெனவறிக.

தத்துவ முப்பத்தாறென்றதேதென்னில்? பிருதிவிமுதல் நாதமுடிவாகிய தத்துவங்களை யெனவறிக. அவையாவன ஆன்ம தத்துவ மிருபத்துநாலும் வித்தியாதத்துவமேழும் சிவதத்துவ மைந்துமெனவறிக.

கலைகளைந்தென்றதேதென்னில்? நிவிர்த்திகலை பிரதிட்டா கலை வித்யாகலை சாந்திகலை சாந்தியாதீதகலையென்னும் கலைக ளெனவறிக.

இனி பரந்தநெறி யறுவகையு மொருவினினைவரிதாம் பரபத ப்த்துளுயிர் விரவப்பயிற்றுமன்றே. எ - கு. ஆறுவழியாக விரிய

பட்ட அத்துவாக்களை விட்டுநீங்கி மேலான சிவபதத்திலே யா
ன்மாபொருந்தும்படி செய்விக்குமென்று பொருட்படுத்தினத்து
க்கு வழியேதென்னில் ஒருபுற்றிற்கிடக்கும் பாம்பினை யோட்டிவி
டவேண்டினவர்க ளந்தப்புற்றில் நிலைகுலையத்தக்க வுபாயஞ்செ
ய்யவே யந்தப்புற்றைவிட்டுப் பாம்பு தானேபோனாற்போல ஆ
சாரியனுஞ் சீடனைக் கலாசோதனைசெய்து திருநோக்கத்தினாலே
பார்க்கவே ஆன்மாக்களும் அத்துவாக்களைவிட்டுநீங்கித் திருவரு
ளைப்பொருந்திச் சாயுச்சியத்தை யடையுமென்றதெனவறிக. இத
ற்கு. பி - ம். சித்தியாரில் "மூன்றுதிறத் தனுக்கள்செய்யுங் கன்
மங்கட்கு மூன்னிலையா மூவிரண்டாமத்துவாவி, லூன்றமுறைய
வையருத்தி யறுத்துமலமுதிர்வித் தரும்பருவ மடைதலுமே யா
சானாகித், தோன்றிநுகராதவகை முற்செய்கன்மத் தொகையறுத்து
ங்கத்துவா தொடக்கறவேசோதித், தேன்றவுடற்கன்மமனு பவ
த்தினாலறுத்திங் கினிச்செய்கன்ம மூலமலஞானத்தாலழிப்பன்,
எ - ம். இருபாவிருபஃதினும். "அத்துவாமெத்தி யடங்காவினை
களுஞ் சுத்திசெய்தனையே." எ - ம். "காரார்கிரகக்கலியாழ்வெ
னைநின் பேராவின்பத்திருத்தியபெரும" எ - ம். ஞானாமிர்தத்தி
னும். "என்னையன்னதாய்த் தொன்முதுபிறவி - யுறைபோக்கொ
ழியக் குலமுழுதும்வினையி - ஞானவொள்வாள் பூமுகமழுங்கத்-
தோன்றுசினந்தணியாத் தண்டாச்சீற்றத்து-மறவினையல்லையோ
நீயேயிறைவ". எ - ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது சமயதீக்கையினும் விசேடதீக்கையி
னுஞ் சரிதையுங் கிரியையும் யோகமுமடங்குமென்றும் நிருவாண
தீக்கையிலே சாயுச்சியமென்னு முறைமையு மறிவித்தது. (கூ)

---

கேறு—இஃ தங்ஙனமனுக்கிரகம் பண்ணுதற்குக் கருவியா
கிய வெழுவகையான திட்சைகளில் வைத்த வவுத்திரிதிட்சை முப்

பகுதிற்றென்று மவற்றுண் மூன்றும்பகுதியான நிருவாணஞ் சாயுச்சியத்தை யடைவிக்குமென்று முணர்த்திற்று.

சமயவிசேடம் - சமயவிசேடமாகிய திட்சைகளிரண்டும்,—விரும்பியமந்திராதிகார மர்ச்சனாதிகார மேவும்போகாதிகாரமெனவரும் - விரும்பப்பட்ட மந்திரங்களுக்கதிகாரம் அர்ச்சனைக்கதிகாரம் அதற்கினமாகப் பொருந்தப்பட்ட யோகத்துக்கதிகாரமென்று சொல்லப்பட்டுவரும்,—பொருவினிருவாணம் - ஒப்பற்ற நிருவாண திட்சையானது,—மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைக ளிரங்கடைவிற்றொகை- மந்திரங்கள் முதலாகச் சொல்லப்பட்ட நிரனிரைத்தொகையான,—பதினொன் றெண்பத்தொன் றைம்பத்தொன் றிருநூற்றிருபத்து நாலாறுமைந்தில் - இவ்வெண்கிளையுடைய,— பரந்த நெறி யறுவகையு மொருவி - மந்திரங்கள் பதங்களாலும் பதங்கள்வன்னங்களாலும் வன்னங்கள் புவனங்களாலும் புவனங்கள் தத்துவங்களாலும் தத்துவங்கள் கலைகளாலும் வியாத்தமானவத்துவா வாறுகூற்றையுநீக்கி,—நினைவரிதாம் பரபதத்து ளுயிர்விரவப் பயிற்றும் - நினைத்தற்கரிய மேலான லயதத்துவத்திலே யான்மாப் பொருந்தும்படி பண்ணும். எ-று.

எனவே சமயஞ்சரியாதிகாரம். விசேடங் கிரியாயோகங்கட்கதிகாரம். நிருவாண ஞானாதிகார மென்பதாயிற்று. அதிகாரம் - யோக்யம். கிரியாயோகமிரண்டற்கு மதிகாரமொன்றென்பதறிவித்தற்கு மேவுமென் றடைகொடுத்தார். அதிகாரமென்பதற் கதிகாரிக்கையென் றுரைப்பாருமுளர். அன்று-ஞ-அசை.

---

இங்ஙனஞ் சொல்லப்பட்ட தீக்கை மூன்றினுள்ளு நிருவாணதீக்கையிலேயே சாயுச்சியமென்றருளிச்செய்து மற்றுண்டான சமயதீக்கைக்கும் விசேடதீக்கைக்குஞ் சரிதைகிரியாயோகமென்னுந் தொழில்களைக் கற்பித்தொழிய அந்த ஞானதீக்கைபோல

வொருபயன்களை யருளிச்செய்யாத தேதென்று வினயதற்குத்தரமே லருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

கிரியையெனு மருவுமவை யாவுஞானங் கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்குமுண்மைச், சரிதைகிரியாயோகத் தன்மையோர்க்குச் சாலோக சாமீப சாரூபங்கள், மருவியிடு முயர்ஞான மிரண்டாமாறு மலமகல வகலாத மன்றுபோதத், திருவருளொன் றொன்றதனைத் தெளியவோதுஞ் சிவாகமமென் றுலகறியச் செப்புநூலே. (௧௦)

மூவிதமான முத்திப்பதமு
மேவியவருளுமெய் யாகமமென்றது.

(இ - ள்.) கிரியையெனமருவுமவையாவுஞானங் கிடைத்தற்குநிமித்தமெனக் கிளக்கும்

சிவத்தொழிலாகப் பொருந்தப்பட்டவை யனைத்தும் ஞானமுண்டாகைக் கேதுவென்று சிவாகமங்களிற் சொல்லப்பட்டிருக்கும். அப்படியாகில் அந்தநிருவாண தீக்கையுள்ளவர்களைப்போல விவர்களுக்குஞ் சாயுச்சிய முண்டோவென்னில் அப்படியாகாது. பின்னையெங்ஙனே யென்னிற்

உண்மைச் சரிதை கிரியாயோகத் தன்மையோர்க்குச் சாலோக சாமீப சாரூபங்கள் மருவியிடும்

சிவாகமங்களா னிச்சயித்து அறுதியிடப்பட்ட சரிதைத்தொழிலுங் கிரியைத்தொழிலும் யோகத்தொழிலும் வழுவறச்செய்யு மவர்களுக் கந்தந்த வொழுங்கிலே சாலோகபதஞ் சாமீபபதஞ் சாரூப பதமென்னும் பதமுத்திகளுண்டாய்வரும். அப்படியானால் முன்னே சிவத்தொழில்களினாலே ஞானமுண்டாமென்று சொல்லி யிப்போது பதமுத்

திகளுண்டாமென்று சொல்லலாமோ வென்னில் அப்படி ஞானத்துக் கேதுவாமென்று சொன்னது மந்தந்தத்தொழில்களினாலே பதமுத்திகளைப்பெற்று ஞானத்துக்கேதுவாமென்று சொன்னதாயிருக்கும். அப்படி யுண்டாகியஞானந்தான் முற்கூறிய சரிதைகிரியாயோகங்களைப்போலப் பலவழியா யிருக்குமோ வொருவழியா யிருக்குமோவென்னில்

உயர்ஞான மிரண்டாம் — மேலானஞானமு மிரண்டுவகைப்பட்டிருக்கும். அஃதெப்படியென்னில்

மாருமலமகல வகலாத மன்னு போதத் திருவருளொன்று — அநாதியேதன்னைவிட்டு நீங்காத ஆணவமல மறைப்புவிட்டு நீங்கும்படி தன்னைவிட்டு நீங்காத திருவருளோடுங்கூடி யிரண்டறநின்றநுபவிக்கிற ஞானமொன்று

ஒன்றதனைத் தெளிய வோதுஞ்சிவாகமம் — மற்றொரு ஞானமாவது அந்தத்திருவருண்ஞானத்தைத் தெளியவறிந் தநுபவிக்கத்தக்கதாகச் சிவாகமங்களை யோதி யுணர்ந்தது

என்றுலகறியச்செப்புநூலே. — என்றிங்ஙன முயர்ந்தோ ரறியத்தக்கதாக நூல்கள்சொல்லும். எ - று.

நு - ம். கிரியையென்றது தொழில்களுக்கெல்லாம் பொதுப்படச்சொல்லியிருக்கச் சிவத்தொழிலொன்றையுஞ் சொல்லவேண்டுவா னேனென்னில் இதுசிவனைப் பெறுகைக்குத் தொழில் சொல்லுகையால் சிவத்தொழிலென்று சொன்ன தெனவறிக.

உண்மைச்சரிதை கிரியாயோகம். எ-கு. சிவாகமஞ்சொன்ன முறைமைக்குத் தவறுவராம லெனஉதேதென்னில் திருவலகு திருமெழுக்கு திருநந்தனவன முதலாயுள்ள சரிதைத் தொழில்களுக்குஞ் சிவபூசை குருபூசை மகேசுரபூசை முதலான பூசைத்

தொழில்களுக்கும் ஆதாரயோக மட்டாங்கயோக முதலான யோகத்தொழில்களுக்குந் தவறுவராம லென்றதெனவறிக. இவை மூன்றுக்கும். பி-ம். சித்தியாரில். "தாதமார்க்கஞ்சாற்றிற் சங்கரன்றன்கோயிற் றலமலகிட்டிலகுதிரு மெழுக்குஞ்சாத்திப், போதுகளுங்கொய்து பூந்தார்மாலைகண்ணி புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்துபாடித், திதிறிருவிளக்கிட்டுத் திருநந்தவனமுஞ்செய்துதிருவேடங்கண்டா லடியேன்செய்வ, தியாது பணியீரென்று பணிந்தவர்தம்பணியு மியற்றுவதிச் சரிதைசெய்வோ ரீசனுலகிருப்பார்" எ-று. சரிதைக்குக் கண்டுகொள்க "புத்திரமார்க்கம் புகலிற் புதியவிரைப்போது புகையொளி மஞ்சனமமுது முதல்கொண்டைந்து, சுத்திசெய்தாதனமூர்த்தி மூர்த்திமானுஞ் சோதியையும் பாவித்தாவாகித்துச் சுத்த, பத்தியினாலருச்சித்துப் பரவிப்போற்றிப் பரிவினொடு மெரியில்வரு காரியமும் பண்ணி, நித்தலு மிக்கிரியையினை யியற்றுவோர்க ணின்மலன்ற னருகிருப்பர் நினையுங்காலே." எ-று. கிரியைக்குக் கண்டுகொள்க. "சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளியிரண்டுஞ் சலிப்பற்று முச்சதுரமுதலாதாரங்க, ளகமார்க்கமறிந்தவற்றி னரும்பொருள்க ளுணர்ந்தங் கணைந்துபோய் மேலேறி யலர்மதிமண்டலத்தின், முகமார்க்கவமுதுடல முட்டத்தேக்கி முழுச்சோதி நினைந்திருந்தன் முதலாகவினைக, ளகமார்க்கவட்டாங்க யோகமுற்று முழைத்தலுழந் தவர்சிவன்ற னுருவத்தைப் பெறுவர் "எ-று. யோகத்திற்குக் கண்டுகொள்க.

உயர்ஞானம். எ-கு. மேலான ஞானமென்றதேதென்னில் அந்தஞானத்துக் குரித்தானவர்கள் நூல்களை யோதியுணர்ந்து சமயபேதங்களையு மறிந்து மேலான பதி பசு பாசங்களையுந் தரிசித்துச் சாலோகமாதியான பதமுத்திகளையுங் கடந்து மேற்பட்ட சாயுச்சியத்தைப் பெறுகையாலே யப்படிச்சொன்ன தெனவறிக.

இதற்கு. பா-ம். சித்தியாரில். "சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத சாத்திரங்கள் சமயங்க டாம்பலவு முணர்ந்து, பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம் பதி பசு பாசந் தெரிந்து பரசிவனைக்காட்டு, நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான ஞேயமொடு ஞாதிருவு நாடாவண்ணம், பின்மார்க்கச் சிவனுடனாம் பெற்றி ஞானப் பெருமையுடையோர் சிவனைப்பெறுவர்காணே" எ-து. ஞானத்துக்குக் கண்டுகொள்க.

என்றிப்படியிருக்க இந்த ஞானத்தை யுயர்ஞான மிரண்டாமென்று கூறியதற்குத் திருவருள்ஞான மொருஞானமென்றும் சிவாகமங்களை யோதியறிகிறஞான மொருஞானமென்றும் பொருட்படுத்திக் கூறினதற்கு வழியேதென்னில், திருவருள்ஞானமாவது முதலிகள் மூவர் காரைக்காலம்மை முதலாயினோர்க் குண்டாகிய ஞானமெனவறிக. சிவாகமங்களை யோதியறிந்து வருகிற ஞானமாவது ஸ்ரீநந்திதேவநாயனார் முதலாயுள்ள சமயக்குரவர்களுக்குண்டாகிய ஞானமெனவறி. இவையிரண்டிற்கும். பா-ம். சித்தியாரில் "பண்டைநற் றவத்தாற்றோன்றிப் பரமனைப் பத்தி பண்ணுந், தொண்டரைத்தானே தூய கதியினிற்செலுப்பன்மார்க்கர், கண்டதுவோதிவீடு காதலிப்பவர்கட்கீசன், பண்டரீ கத்தான் சேரும் பரிசினைப் புகலலுற்றும். எ-ம். போதமிகுத் தோர்தொகுத்த வேதனைக்கே பொருந்தினோ ரிவர்க்கன்றிக் கதிப்பாற்செல்ல, வேதநெறியெனுமவர்கட் குறிய முன்னோ னிறைவனருணந்தி தனக்கியம்பநந்தி, கோதிலருட் சநற்குமாரர்க்கூறக் குவலயத்தி லவ்வழியெங் குருநாதன்கொண்டு, தீதகலமொழிகளித்த ஞானநூலை தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தியென்றே" எ-ம். கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது சரியை கிரியா யோகங்களை முற்றச்செய்தவர்களுக் கந்தந்தமுறைமையிலே சாலோக சாமீப சாரூபமெ

அப்படிச்சிவாகமங்க ளுண்டாயிருக்கச்செய்தே யிந்தத்தமிழ்நூல்களை யிப்பொழுது செய்யவேண்டுங் காரணமேதென்றுவினவ இந்தத்தமிழ்நூல்களி லுண்டாகிய வத்தங்களும் அந்தச்சிவாகமத்தி னத்தந்தாளுயிருக்குமென்று மிந்தத்தமிழ்நூல்களும் பாரம்பரியமாக வருகிறதென்று மருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

தெரித்தகுரு முதல்வருயர் சிவஞானபோதஞ்
செப்பினர்பின் பவர்புதல்வர் சிவஞானசித்தி, விரித்
தனர்மற் றவர்கடிரு வடிகள்போற்றி விளம்பியநூ ல
வையிரண்டும் விரும்பிநோக்கிக், கருத்திலுறை திரு
வருளு மிறைவனாலுங் கலந்துபொது வுண்மையென
க் கருதியானு, மருத்திமிக வுரைப்பன்வளர் விருத்த
நூறு மாசில்சிவப் பிரகாச மாகுமன்றே. (கக)

உன்னரும்பொருளை யுரையானுணர்த்திய
முன்னவரருளா னூற்பெயர்மொழிந்தது.

(இ - ள்.) தெரித்த குரு முதல்வருயர்சிவஞான போதஞ் செப்பினர்

முற்கூறப்பட்ட ஆசாரியரில் விசேடத்துவத்தையுடைய மெய்கண்டதேவ தம்பிரானார் மேலான சிவஞானபோதமாகிய மூலக்கிரந்தம் பன்னிரண்டினு முள்ள அத்தத்தைத் தமிழாகவிரித்துப் பன்னிரண்டு சூத்திரமாக வகுத் தந்தநூலின்பெயராலே சிவஞானபோதமென்று செய்தருளினார். அன்றியுந் தமிழாகிய சிவஞானபோதமொன்றிலேயு மேற்றிப் பொருளுரைப்பினுமாம்

பின்பவர் புதல்வர் சிவஞான

அதற்குப்பின்பாக அவரது திருவடியைப் பெற்ற சண்பையர் தலைவனாயனாராகிய அரு

| | |
|---|---|
| சித்திவிரித்தனர் | ணந்திதேவ தம்பிரானார் சிவஞானசித்தியென்னு நூலை விரித்துச்செய்தருளினார் |
| மற்றவர்கடிருவடிகள் போற்றி | அந்த விரண்டு தம்பிரானார்கள் திருவடியையுந் துதித்து |
| விளம்பிய நூலிவை யிரண்டும் விரும்பிநோக்கி | அவர்க ளருளிச்செய்யப்பட்ட நூல்களிரண்டினையு மாசையோடு மாராய்ந்துபார்த்து அதிலுண்டானவத்தமும் அதுவுமன்றி |
| கருத்திலுறை திருவருளுமிறைவ னூலுங் கலந்து | என்னுடைய இதயத்திலே பொருந்திநின்று நிகழ்த்துகிற திருவருளையுந் தம்பிரானா ரருளிச்செய்த சிவாகமத்திலுண்டாகிய அத்தத்தையும் இந்நூலிலேவிரவி |
| பொதுவுண்மையெனக்கருதி | இந்நூற்செய்யுமிடத்துப் பொதுவென்றுமுண்மையென்று மிரண்டுபகுதியாகவிசாரித்து |
| யானுமரித்தி மிகவுரைப்பன் | ஒன்றுக்கும் பற்றாதநானும் ஆசைமிகுதியாலே யொருசாத்திரமாகச் சொல்லுவன் |
| வளர் விருத்த நூறும் | சிறப்பு வளரப்பட்ட விருத்தப்பாவாகிய செய்யுள் நூறும் |
| ஆசில்சிவப்பிரகாசமாகுமன்றே. | இந்நூலுக்குத் திருநாமங் குற்றமற்ற சிவப்பிரகாசமாம். எ - று. |

று - ம். உயர் சிவஞானபோதமென்றதை மேலான சிவஞானபோதமென்றதேதென்னில் மற்றுள்ள சமயங்களிற் சொல்லப்பட்ட அத்தங்க ளெல்லாத்தினு மேற்பட்ட உண்மைஞானத்தைச் சொல்லுகையா லெனக்கொள்க.

சிவஞானசித்தியை விரியச்செய்தாரென்றதேதென்னில் முன்கூறப்பட்ட நூலாகிய சிவஞானபோதம் சொற்சுருங்கி அத்தமாழ்ந்திருக்கையாலே யதைச் சிவஞானசித்தியிற் சொல்லு மத்தம் விரியச்செய்கையினா லெனக்கொள்க. இதற்கு. பி-ம். சித்தி

யாரில். "குவலயத்தினவ்வழியெங் குருநாதன்கொண்டு தீதகல வெமக்களித்த ஞானநூலைத் தேர்ந்துரைப்பன் சிவஞானசித்தி யென்றே. எ-று. கண்டுகொள்க.

கருத்திலுரை திருவருளும் என்றது உயிர்க்குயிராய் நின்று நிகழ்த்துகிற அநுபவஞானத்தை யெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "அந்நியமிலாமையானு மறிவினுணிற்றலானு முன்னிறீ வெல்லாமுண்ணின் றுணர்த்துவனுதலானும்" எ-ம். "மதியருங் கணையரவம் போற்றோன்றுமான் மாவிலரனே" எ-ம். ப்ரசாகரணத்தில். "ஞாலிக் குயிரினிற் குளிருமன்றே" எ-ம். வருமேதுக் களைக் கண்டுகொள்க.

இனி யிறைவநூலுங் கலந்தென்றது அந்த விரண்டுநூலினும் வாராதஅத்தங்களைக்கூட்டி அநுபவமாக வருளிச்செய்கையினாலெனக்கொள்க.

பொதுவென்றது பதி பசு பாசங்களைச் சாமாந்யமாக வருளிச்செய்கையினாலெனக்கொள்க.

உண்மையென்றது ஆன்மதரிசனம் சிவதரிசன முதலாயுள்ளவற்றை யநுபவமாக வருளிச்செய்கையினாலெனக்கொள்க.

வளர்வித்த நூலுமென்றது இந்நூலாராயுந்தோறு மாராயுந்தோறு மத்தமென்மேலும் வளருகையாலெனக்கொள்க. இதற்கு. பி-ம். திருவள்ளுவப்பயனில். "நவிறொறு நூனயம்போலும்." எ-று. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது இந்நூலிலே முன்னூலாகிய சிவாகமத்தினத்தமும் வழிநூலாகிய சிவஞானபோதத்தினுஞ் சிவஞானசித்தியினு முண்டான வத்தமுங் கருத்திலே கூடிநின்று காரியப்படுத்துகிற அநுபவஞானத்தினையுங் கூட்டிச்செய்தோமென்னு முறைமையை யறிவித்தது. (௧௧)

வேறு—இது அபரஞானமான சிவாகமப்பொருளைத் தமிழ்ப்படுத்திய முறைமையும் பெயரும் வகையுந் தொகையும் யாப்புமுணர்த்திற்று.

தெரிதருகுருமுதல்வர் - இந்தசம்பிரதாய வுண்மையை முன்னம்விளக்கிய முதலாசிரியரான மெய்கண்டதேவநாயனார்,—உயர்சிவஞானபோதஞ் செப்பினர் - மேலான சிவஞானபோதமென்னும் ஸ்ரீநந்திகேசுர வாக்கியத்தைத் தமிழாக வருளிச்செய்தார்,—பின்பவர் புதல்வர் சிவஞானசித்திவிரித்தனர் - பின்பவருடைய சிஷ்யரான வருணந்திதேவநாயனா ரந்நூற்பொருளைவிரித்துச் சிவஞானசித்தியாராக வருளிச்செய்தார்,— மற்றவர்கள் திருவடிகள்போற்றி - அவ்விரண்டுநூலுஞ் சுருங்கியும் விரிந்து மிருக்கின்றமையி னவ்விரண்டு நாயன்மாருடைய ஸ்ரீபாதங்களைவணங்கி,—விளம்பியநூலவை யிரண்டும் விரும்பிநோக்கி - அவர்களருளிச்செய்த வந்நூ லிரண்டையும் விரும்பி யாராய்ந்துபார்த்து,—கருத்திலுறை திருவருளு மிறைவநூலுங் கலந்து - என்னுடையகருத்திற்பதிந்த வவர்களுடைய திருவருளையுஞ் சிவாகமங்களையுங்கூட்டி,—ஆசில்சிவப்பிரகாச மாகுமென்று - குற்றமில்லாத சிவப்பிரகாசமென்று பெயரிட்டு,— வளர்விருத்தநூறும் - வளர்கின்ற விருத்தச்செய்யு ணூற்றையும்,—பொதுவுண்மை யெனக்கருதி - பொதுவென்று முண்மையென்று மிரண்டாகவிசாரித்து,—யானும் - ஒருபொருளல்லாதயானும்,—அருத்திமிகவுரைப்பன் - புல்லறிவாசை மிகுதலாலே சொல்வேன். எ - று.

யானுமென்ற உம்மை இழிவு. ஆசின்மை சிவத்தின்மேற்று. இந்நூலுணர்ந்தார்க்குச் சிவம்பிரகாசமாதலி னுண்மேலேற்றித் தற்புகழ்தலாம். அந்நூலிரண்டையுஞ் சிவாகமங்களையு மாராய்ந்தென்பார் கருத்திலுறை திருவருளு மிறைவனூலுங் கலந்தென்றுபசரித்தார். அந்நூலின்கருத்தி லுறையருளுமென்பாருமுளர்.

அப்படியே யிங்ஙனம் பழையதாகவருகிறநூலு மிப்பொழுது செய்யப்பட்ட புதுநூலுந் தன்னிலொக்குமோவென்று வினவ அஃதிரண்டு மொருவகையத்தமாறாற் கொள்ளப்படுமென்னு முறைமையு மிந்நூல்கொள்ளும் பகுதியுடையவர்கள் முறைமையு மவையடக்கமு மேலருளிச்செய்வானெடுத்துக்கொண் டருளியது.

தொன்மையவா மெனுமெவையு நன்றாகா வின்று தோன்றியநூ லெனுமெவையுந் தீதாகா துணிந்த, நன்மையினோர் நலங்கொண்மணி பொதியுமதன் களங்க நவையாகா வெவ்வுண்மை நயந்திடுவர் நடுவாங், கன்மையினோர் பழமையழ காராய்ந்து தரிப்பர் தவறு நலம் பொருளின்கட் சார்வாராய்ந்தறித, வின்மையினோர் பலர்புகழி லேத்துவரே திலருற் றிகழ்ந்தனவே யிகழ்ந்திடுவர் தமக்கெனவொன் றிலரே. (கஉ)

சான்றோர்செய்தியுஞ் சால்பிலார்தன்மையுந்
தோன்றுமாறு சொல்லவையடக்கம்.

(இ-ள்.) **தொன்மையவா மெனுமெவையு நன்றாகா** — நூல்கள் பழையதேயாயினும் பதி பசு பாசத்தினுண்மையைத் தெரியச்சொல்லாதபோது எவராலே சொல்லப்பட்டதாயினு நன்மையுண்டாகாது.

**இன்றுதோன்றிய நூலெனுமெவையுந் தீதாகா** — இப்பொழுது புதிதாகச் சொல்லப்பட்ட நூலாயினும் பதி பசு பாசங்களைத் தெரியச்சொல்லுமாயின் அந்தநூலுக்குக் குற்றமுண்டாகாது. ஆகையா லிவையிரண்டினும் புதுநூல்கொள்ளுமிடத்து

**துணிந்தநன்** — சித்தாந்த வழக்கினையறிந் துறுதிவந்த

மையினார்

நல்லோர்கள் நூலின் புதுமைகொள்ளோர்கள். அதென்போலவென்னில்

நலங்கொண் மணிபொதியுமதன் களங்கநீவயாக வெணவுண்மை நயந்திடுவர்

நல்லவிரத்நமானது பொல்லாததொன்றிலே பொதிந்திருந்தாலு மிரத்தநமறிந்தவர்கள் பொதிந்ததின் குற்றம்பாராம லிரத்நத்தினையே கொண்டாற்போலப் பொருளினுண்மையைக் கைக்கொள்வார்கள். அன்றியும்,

நடுவாந் தன்மையினார்

மத்திமராயுள்ளவர்க ளுத்தமரைப்போல நூலைக்கண்ட மாத்திரத்திலே பொருளைக் கொள்ளமாட்டார்கள். ஆதலாலே

பழைமையழகாராய்ந்து தரிப்பர்

பழையதாயுள்ள வாகமங்களி னத்தத்தையு மிப்பொழுதுண்டான நூலினத்தத்தையு மாராய்ந்து பார்த்துக்கொள்ளும் பகுதியினாற் கொள்ளுவார்கள். இவையிரண்டுபகுதியுமன்றி

தவறுநலம் பொருளினைக்கட் சார்வாராய்ந்தறித லின்மையினார்

நூலுக்குண்டாகிய குற்றமிது குணமிதுவென்று பொருளினிடத்திலே பொருந்தினமுறைமையை யாராய்ந்துபார்த் தறியமாட்டாத வறிவீனராயுள்ளவர்கள்

பலர்புகழி லேத்துவர்

நூலின்பயனறிந்த உத்தமர் கொண்டாடினாற் கூடியிருந்து கொண்டாடுவார்கள்

ஏதிலருற்றிகழ்ந்தனரே லிகழ்ந்திடுவர்

இந்நூற்செய்தற்குப் பொறாமையாக அந்நிய ரிகழ்ந்துரைக்குமிடத்து அதற்குங் கூடி யிகழ்ந்துரையாநிற்பார்கள். அவர்களாரோவென்னில்

தமக்கென நன்றுதீதென் றறியத் தனக்கெனவோ ரொன்றிலரே. ரறிவில்லாதவர்கள். எ-று.

று-ம். எவையு நன்றாகா வென்றதுகொண்டே பழைய நூல்களிற் குற்றங்குறையு மெனக்கொள்க.

ஏவையுந்தீதாகா வென்றதுகொண்டே புதியநூல்களில் நன்மைகுறையு மெனக்கொள்க.

களங்கநவை என்றிருமையைக் குற்றமாகச் சொன்னதேதென்னில் இரத்நத்தைப் பொதியப்பட்டது குற்றமுடையதாகிலு மிரத்நத்தைக் குற்றமாகக் கொள்ளார்களென்றதெனவறிக.

உண்மை நயந்திடுவரென்றதை நூலின் புதுமை விசாரியாமற் பொருட்கொள்ளுவார்களென்றது அத்தத்தின மஹான்மியங் கண்டுகொள்வார்களென்றதெனக்கொள்க.

தமக்கென வொன்றிலரே என்றதை தமக்கென வோரறிவில்லாதவர்களென்றதேதென்னில் முன்ஞானத்திற் றமக்கென்ன ஒருதவமில்லாதவர்களென்றதென்னவு மாமெனக் கொள்க.

இதனாற் சொல்லியது இந்நூற்கொள்ளுமிடத்து அறிவானுயர்ந்த பெரியோர்கள் கொள்ளுமுறைமையு மத்திமராயுள்ளவர்கள் கொள்ளுமுறைமையு மறிவீனராயுள்ளவர்கள் கொள்ளுமுறைமையுஞ் சொல்லி அவையடக்கமு மறிவித்தது. (௧௨)

---

வேறு—இஃதவையடக்க முணர்த்திற்று.

தொன்மையவாமெனு மெவையுநன்றாகா-பழையனவாகுமென்று சொல்லப்படு மெத்துணைச்சிறப்புடைய நூல்களும் பதி பசு பாசங்களை விளங்கச்சொல்லாவாயி னன்மையா

கா,—இன்றுதோன்றிய நூலெனு மவையுந் தீதாகா - இப்பொழுதுண்டான நூலென்று சொல்லப்படு மொத்துணைச் சொல்லிழி புடைத்தாயினு மவைகளை விளங்கச்சொல்லுமாயிற் றீமையாகா,—துணிந்த நன்மையினோர்-தெளிந்த உத்தமரானவர்கள்,—நலங்கொண்மணி பொதியு மதனகளங்கம்-நல்லகுணத்தைக் கொண்டிருக்கின்ற மணியைப் பொதியுங் குற்றம்,—நவையாகா தெனவுண்மை நயந்திடுவர்-பொதியப்படுமணியின குற்றமாகாதென்று கருதி யப்பொருளி னுண்மைத்தன்மையை விரும்புவர்கள். அதுபோல், இந்நூலுந் திரிபதார்த்தத்தைச் சொல்லுகையாதலிற் சொற்குற்றமும் புதுமையுங்கொள்ளாது பொருளுண்மையே கொள்வர்,—நடுவாந்தன்மையினோர் பழமையழ காராய்ந்துதரிப்பர் - இனி மத்திமமான முறைமையையுடையவர்க ளுத்தமரைப்போலப் பொருளின்மை தீமை கேட்டமாத்திரத்தி லறுதியிடமாட்டா ராகையாலே பண்டுள்ள நூல்களி னழகைப்பார்த்தவையிரண்டு மொப்பிற்கொள்வர்,—தவறுநலம் பொருளின்கட் சார்வு - உத்தமரைப்போலக் குணமுங் குற்றமும் பொருளினிடத்துச்சார்தலை,—ஆராய்ந்தறித லின்மையினோர்-ஆராய்ந்தறிதலு மத்திமரைப்போல வொப்புமைநோக்கி யறிதலுமில்லாத வதன்மர்கள்,—பலர் புகழினைத்துவர்-இந்நூலையறிவுடையோர் பலருமிருந்து கொண்டாடிற் கூடியிருந்து கொண்டாடுவர்,—ஏதிலருற் றிகழ்ந்தனரே லிகழ்ந்திடுவர்-இதனைப்பரசமயிக ளிகழ்ந்துரைக்கிற் கூடியிருந் திகழ்ந்துரைப்பர்கள்,—தமக்கெனவொன் றிலர் - தமக்கெனவோரறிவில்லாதாராகையால்.

நன்றுதீதென்னு மொருமைகள் பண்பின்மேனின்றன.

இனி யவையுநன்றாகா வவையுந்தீதாகா - நல்லதென

ருந் தியதே திதாமெனக் குறிப்பாலுரைப்பினுமாம். உற்று-கூடி. உற்றேறத்துவர் உற்றிகழ்ந்திடுவரென்க. பொதியுங்கள ங்கமத னையையாகாவென வன்வயமாக்குக. சார்வறிதலா ராய்ந் தறிதலென வறிதலை யிரண்டிடத்து மேற்றுக. மேற் பதி பசுபாசந்தெரித்தலென வதிகாரப்பட்டு வருதலானு மு வமையானும் பதிபசு பாசங்களைச் சொல்லாதாயினென் றுரைத்தாம்.

—0—

இவை பன்னிரண்டும் பாயிரம்.

நூல்.

# பொது.



இங்ஙனம் பாயிர மருளிச்செய்து மேல் முதற்சூத்திர மாகிய பதிலிலக்கண மருளிசசெய்வா னெடுத்துக்கொண்டருளியது.

இந்தப்பதியிலக்கணத்தில் முதற்சூத்திர நின்றமுறைமை யெங்ஙனேயெனில் பதியிலக்கணமாக வருத்த "பலகலை" என்ற விருத்தந்தொடங்கி "ஏற்றவிவை" என்னும் விருத்தமுடிவாகிய செய்யுளாறும் சிவஞானபோதத்தினுஞ் சிவஞானசித்தியினும் முதற்சூத்திரத்தில் வருங்கருத்தாகையா லப்படிச் சொன்னதெனவறிக. அப்படி யந்தநூல்களிற் முதற்சூத்திரத்தி லுண்டானகருத்து இந்தவிருத்தமாறினு நின்றதற்கு வழியேதெனிற்? சிவஞானபோததிற் முதற்சூத்திரமாகிய:—"அவனவளது வெனுமவை மூவினைமையிற், றோற்றிய திதியேயொடுங்கி மலத்துளதாம், மீந்தமாதியென் மனார் புலவர்" என்னுஞ் சூத்திரத்துக்குக் கருத்து சங்காரகாரணனை முதலாகவுடைத் திவ்விலகமென்பதனால் சிவனே கத்தாவென்னுங் கருவைப்பற்றி இந்நூலினுமிச்செய்யுட்களாறினுள்ளும் "பீடுபெறநிறுவியவை யொடுக்குமேனி" எ-ம். "அவையெங்கடவுடானே யந்தமுறவழித்திடுவன்." எ-ம். ஏற்றவிவை யரனருளின் றிருவிளையாட்டாக வியம்புவர்கள்." எ-ம் சிவனே கத்தாவென்று வருகையாலும். சித்தியாரில் முதற்சூத்திரத்தின் விருத்தங்களில் "சிவனரு வுருவுமல்லன்" என்னும் விருத்தத்திற் கருவைப்பற்றி இந்நூலினும் "பலகலை" என்றவிருத்தத்தில் "பதிபரமே யதுதானிலவு

மருவுருவின்றி” என்று வருகையாலும் “பொன்மை நீலாதி வண்ணம்” என்னும் விருத்தத்திற் கருவைப்பற்றி இந்நூலினும் “நீடுபராசத்தி” என்னும் விருத்தம் வருகையாலும் “குறித்தொன்றாகமாட்டா குறைவிலாதலானும்” என்னும் விருத்தத்தின் கருவைப்பற்றி இந்நூலினும் “இங்கிதுவென்றுரையா கடந்தவியல்பினானும்” என்னும் விருத்தம்வருகையாலும் “ஒருவனோடொருத்தி” என்னும் விருத்தத்தின் கருவைப்பற்றி இந்நூலினும் “உலகமெலா மொருவனோடொருத்தி” என்னும் விருத்தம்வருகையாலும் “தோற்றுவித்தளித்துப் பின்னுந் துடைத்தரு டொழில்கண்மூன்றும் போற்றவேயுடைய னீசன்” எ-ம். “உரைத்தவித் தொழில்கண்மூன்றும் மூவருக்குலக மோத வரைத்தொரு வனுக்கேயாக்கி வைத்ததிங்கென்னை” எ-ம் வரும் விருத்தங்களின் கருவைப்பற்றி இந்நூலினும் “கந்தமலரயன்படைக்கும்” என்னும் விருத்தம் வருகையாலும் “சொன்னவித் தொழில்களென்ன காரணந்தோற்றமென்னின் முன்னவன் விளையாட்டென்று மொழிதலுமாம்” எ-ம். “அழிப்பிளைப்பாற்றல்” எ-ம். வரும் விருத்தங்களின் கருவைப்பற்றி இந்நூலினும் “ஏற்றவிவை யரனருளின் றிருவிளையாட்டாக வியம்புவர்கள்” என்னும் விருத்தம்வருகையாலும் இந்தப்பதி யிலக்கணமாக வருளிச்செய்த விருத்தமாறு மந்நூல்களிற்கருத்து ஒத்துவருகையால் முதற்சூத்திரமாக நின்றதெனவறிக. இங்ஙனம் சித்தியாரில் முதற்சூத்திரத்தில் விருத்தங்களா யெடுத்துகாட்டின செய்யுட்களை விருத்தங்கடோறு முடியவொட்டிக் கண்டுகொள்க.

மேல் முதற்சூத்திரமாக வகுத்த பதியிலக்கணமாகிய செய்யுளாறினுள்ளும் முற்கூறிய பலகலையென்ற விருத்தத்துக்குத் தொந்தனை வருமாறு.—முன்னே பாயிரத்திற்கூறிய

தெரித்தகுரு முதல்வ ருயர் சிவஞானபோதஞ் செப்பினர் பின்பவர்புதல்வர் சிவஞானசித்தி விரித்தனர் என்றும் இறையனூலுங்கலந்து என்றும் வரப்பட்ட முன்னூல் வழிநூல்களினு மிப்பொழுது கூறப்பட்ட இந்தச்சார்புநூலானு மருளிச் செய்கிற வத்தமேதென்றுவினவ மேலருளிச்செய்வானெடுத்துக்கொண்டருளியது.

பலகலை யாகமவேதம் யாவையினுங்கருத்துப் பதிபசுபா சந்தெரித்தல் பதிபரமே யதுதா, னிலவுமரு வுருவின்றிக் குணங்குறிகளின்றி நின்மலமா யேகமாய் நித்தமாகி, யலகிலுயிர்க் குணர்வாகி யசலமாகி யகண்டிதமா யானந்த வுருவாயன்றிச், செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப்பெரிதாய்த் திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்துளோரே. (க)

விதிப்படி முதனூல் விளம்புமுப்பொருளின்
பதித்திரந்தெரிந்து பாரித்துரைத்தது.

| | |
|---|---|
| (இ - ள்.) பலகலை யாகமவேதம் யாவையினுங்கருத்து | பலகலைஞானங்களாகச் சொல்லப்பட்ட ஆகமங்களுக்கும் வேதங்களுக்கும் இவையிற்றின்விரிந்த நூல்களுக்கும் துணிவாவது |
| பதிபசுபாசந் தெரித்தல் | பதியையும் பசுவையும் பாசத்தையுங் கூறுசெய்தல். இவையிற்றின் முதற்கூறப்பட்ட பதியின்றன்மை யெங்ஙனே யெனின் |
| பதிபரமே | அந்தப்பதியாவது எல்லாவற்றிற்கு மேலாயிருப்பதொன்று |
| அதுதான் | அந்தப் பரமேயென்று சொல்லப்பட்ட பதியானதி னியல்பு யெங்ஙனேயெனின் |

| | |
|---|---|
| நிலவுமருவுருவின்றி | விளங்கக் காணப்படுவதுங் காணப்படாததுமல்லவாய். நிலவுமென்றது பொருந்தவெனவுமா மெனவறிக. |
| குணங்குறிகளின்றி | ஒருகுணங்களு மோரடையாளங்களுமில்லையாய் |
| நின்மலமாய் | மலரகிதமாய் |
| ஏகமாய் | ஒன்றாயிருப்பதாய் |
| நித்தமாகி | அழியாததாய் |
| அலகிலுயிர்க்குணர்வாகி | எண்ணிறந்த வான்மாக்களுக்கு மறிவாய் |
| அசலமாகி | சலிப்பற்றதாய் |
| அகண்டிதமாய் | கண்டிக்கப்படாததாய் |
| ஆநந்தவுருவாய் | இன்ப சொருபமாய் |
| அன்றிச்செலவரிதாய் | மாறுபட்டவர்களுக்குச் சென்று கூடுதற்கரிதாய் |
| செல்கதியாய் | வழிபட்டவர்களுக்குச் சென்று பொருந்துகைக் கிடமாகிய முத்திநெறியாய் |
| சிறிதாகிப்பெரிதாய் | அணுவுக்கணுவாய் மகத்துக்கு மகத்தாய் |
| திகழ்வதுதற்சிவமென்பர் | இப்படி விளங்காநின்றது உண்மையான சிவமென்று சொல்லுவார்கள் |
| தெளிந்தோரே: | சித்தாந்தத் தெளிவுவந்த பெரியோர்கள். எ - று. |

று-ம். பலகலை. எ-கு. வேதாகமங்களைச் சொல்லாமலவையிற்றைத்தவிர வேறே சில நூல்களென்று சொல்லுவாருமுளர். அப்படியானாலு மிந்தச்செய்யுளில் பலகலையை மூ

ந்தக்கூறி யாகமமும் வேதமும் பிற்படக் கூறுகையாலே
யாது பொருளல்லவெனவறிக. அல்லது பின்னை யெங்ஙனே
யென்னில் வேதாகமங்களு மவையிற்றினின்றும் விரியப்பட்
ட நூல்களு மென்பதொழிந்து வேருகச்சொல்லவொண்ணு
தெனவறிக. அதற்கு வழியேதென்னில் கலைஞானமென்பது
சர்வநூலுக்கும் பொதுப்பெயராகையா லப்படிச் சொன்ன
தெனவறிக அதற்கு. பி-ம். சித்தியாரில். "வேதசாத்திரமிரு
தி புராணகலைஞானம்" எ-ம். சங்கற்ப நிராகரணத்தில்.
"பெருங்கடலுதவுங் கருங்கடுவாங்கிக் - கந்தரத்தமைத்த
வந்தமில்கடவுள் - பாலரையுணர்த்து மேலவர்போலக்-கே
ட்போர்களைக் கோட்படுபொருளா-லருளியகலைக ளலகில
வதனுல்" எ-ம் திருவருட்பயனில். "நற்குஞ்சரக்கன்று நண்
ணிற்கலைஞானங் கற்குஞ்சரக்கன்றுகாண். எ-ம். இந்நூலி
னும் அருங்கலைகள் முதிர்ந்துளோரே" எ-ம் வருமேதுக்களை
க் கண்டுகொள்க.

யாவையினும். எ-கு. வேதத்தினு மாகமத்தினும் விரியப்
பட்டது மற்றுள்ள நூல்களெல்லாமென்று பொருட்படுத்தி
னத்துக்கு. பி-ம். சித்தியாரில் "வேதநூல்சைவநூ லென்றி
ரண்டே நூல்கள் வேறுளைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்
கள்" எ - து. கண்டுகொள்க.

பதிபரமே. எ-கு. எல்லாவற்றிற்கு மேற்பட்ட பொரு
ளென்றதேதென்னில் அண்டாண்ட பகிரண்டங்களுக்கு மப்
பாற்பட்ட பொருளென்றதெனவறிக. இதற்கு. பி-ம். திருப்
பல்லாண்டில். "அண்டங்கடந்த பொருளளவில்லதோ ரான
ந்த வெள்ளப்பொருள்" எ-து கண்டுகொள்க.

நிலவு மருவுருவின்றி. எ-கு காணப்பட்ட பொருளுமல்
ல் காணப்படாத பொருளுமல்லவென்றதேதென்னில் காண
ப்படும் பொருளென்றால் தோன்றிநின் றழியப்படும் பொரு

ளாம். காணப்படாத பொருளென்றால் முயற்கோடுபோலவு மாகாயப் பூப்போலவு மில்லாத தொருபொருளாமென்ற தெனவறிக. இவை யிரண்டுக்கும் பி-ம். சித்தியாரில். "அறிதரும் பொருளோவீச னறிவுறாதவனேவென்னி, லறிபொருள் சித்தசத்தா மறியாததின்றா மெங்குஞ், செறிசிவமிரண்டு மின்றிச் சித்தொடு சத்தாய் நிற்கும்." எ - று. கண்டுகொள்க. இதி லாகாயப் பூப்போலக் காணாதபொருளாம். எ-கு பி-ம். சித்தியாரில். "வானத்தினாரார் பூந்தொடையு மாமைக்கெழு மயிர்கயிறும் போலும்." எ-று. கண்டுகொள்க.

அன்றிச் செலவரிதாய்ச் செல்கதியாய். எ-கு. வழிபடாதவர்கள் சென்று கூடுதற்கரிதாயென்றும் வழிபட்டவர்கள் சென்று கூடுதற்கெளிதாயென்றும் பொருட்படுத்தினதுக்கு வழியேதென்னில் சிவாகமஞ்சொன்ன வொழுங்கிலே நின்று அநுட்டியாதவர்களுக்குக் கூடலரிதென்று மநுட்டித்தவர்களுக்குக் கூடலெளிதென்றுஞ் சொன்னதெனவறிக. இவை யிரண்டுக்கும். பி - ம். சித்தியாரில் "இறைவனாவான்" என்றசெய்யுளில். "மறையாகமங்களாலறிவெல்லாந்தோற்றும் வரைவின்வழி வருவோர்க்கும் வாராதோர்க்கு, முறைமையினா லின்பதுன்பங் கொடுத்தலால்." எ-று. கண்டுகொள்க.

சிறிதாகிப பெரிதாய். எ-கு. அணுவுக்கணுவாய் மஹத்துக்கு மஹத்தாயென்றதேதென்னில் சர்வான்மாக்களுக்கு மெடுக்கப்பட்ட அச்சுக்களுக்கெல்லா மதற்கதற்குத் தக்கதாகக் கூடிநின்று சேட்டிப்பிக்கையா லப்படிச்சொன்னதெனவறிக. இதற்கு. பி ம். இருபாவிருபஃதில். "யாவரியாவையு மியாங்கணுஞ்சென்று-புக்குழிப்புக்கு." எ-று. கண்டுகொள்க.

தற்சிவம். எ-று. உண்மையான சிவமென்ற தேதென்னில் ஒரு விகற்பங்களுமின்றித் தற்சுபாவமாய் நின்ற சொரூபத்தைச் சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில்: "நிறுத்துவதோர் குணமில்லான் றன்னையொருவர்க்கு நினைப்புரியாறொன்றுமிலான்" எ-து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது பலகலைஞானமாகச் சொல்லப்பட்ட வேதாகமபுராண சாத்திரங்களெல்லாம் பதிபசு பாசத்தினுண்மையைச் சொல்லுமென்று மிதிற்பதியானது நிஷ்கள சொரூபியாய் நிற்குமென்னுமுறைமையு மறிவித்தது. (க)

---

வேறு— இதுமுதல் ஏற்றவினை என்னுஞ் செய்யுளீறாகிய வாறுதிருவிருத்தங்களாலு முதனூலாகிய சிவஞானபோதத்தின் முதற்சூத்திர முணர்த்துவா னெடுத்துக்கொண்டார். அவற்றுளிது பதி பசு பாசமென்னு முப்பொருளில் வைத்துப் பதியிலக்கண முணர்த்திற்று.

பலகலை யாகமவேதம் யாவையினுங்கருத்துப் பதி பசு பாசந்தெரித்தல்-ஆகமவேதங்கண் மற்றைப் பலநூல்களெல்லா வற்றினுந் தாற்பரியமாவது பதிமுதலிய பதார்த்தங்களைப் பகுத்துக்கூறுதல்,—பதிபரமே - அவற்றுட்பதியாவது ஏனை யிரண்டற்கு மேலா யிருப்பதொன்றே.—அதுதான்-அந்தப்பதிதான்,—நிலவுமரு வுருவன்றி -விளங்கப்பட்ட நிட்களமுஞ் சகளமுமல்லதாய்,—குணங்குறிகளின்றி - தத்துவாதீத மாகையாலே முக்குணங்களு மோரடையாளமு மில்லதாய்,—நின்மலமாய்- அநாதியிலே படிகம்போல வழுக்கில்லதாய்,—ஏகமாய் - ஒருமுதலாய்,—நித்தமாகி- தோற்றமின்றி யிருப்பதாய்,—அகண்டிதமாய் - ஞானசொரூபமாகையாலே யொன்றினாலே கண்டிக்கப்படாததாய்,—ஆனந்தவு

ருவா யன்றிச் செலவரிதாய்-அறிவுருவானா லன்றிக் கிட்டுத
ற்கரியபொருளாய்,—செல்கதியாய்-அறிவுருவானாற்சென்ற
டையப்படும்பேறாய்,—சிறிதாகி-அணுவுக்கணுவாய்,— பெரி
தாய்-மகத்துக்கு மகத்தாய்,—திகழ்வது-விளங்குவதாயிரு
க்கும்,—தத்-அந்தப்பொருளை,—தெளிந்துளோர் சிவமென்
பர்-அறிவாற் றெளிந்தோர் சிவமென்று சொல்வர். எ-று.

தற்சிவமென்பது வடசொல்லா யெழுவாய்க்கு மிரண்
டாவதற்கும் பொதுவாய்நிற்கும். தேர் முதலானவை யொரு
வனான் முடியாமையிற் பிரபஞ்சமு மநேகங் கருத்தாக்க
ளா லுண்டாகவேண்டுமென்னு மநேகசுரவாதி மதமும் ஓ
ராத்மா முத்தனானா லவனிடத்திலே கருத்தா தன்னதிகார
த்தை வைத்துத் தான்பரமற்றிருப்பன்; அவனு மப்படி யொ
ருவனிடத்திலே வைத்துப் பரமற்றிருப்பனென்னும் பிரவா
கேசுரவாதிமதமும் ஏகமாயென்றதனான் மறுக்கப்பட்டன.
என்னை? தேர்முதலானவை யநேகர் கூடியு மோர்கருத்தா
வினைவலான் முடியுமாதலின் முன்னையோன்மதமும் ஈசுர
ன் சத்திக்கொருகாலமுங் குறைவில்லை யாதலானும் ஒருகா
லத்தி லநேகர் முத்தரானால் ஒருவனிடத்திலே வைத்தல் கூ
டாதாதலானும் மற்றையவன்மதமு மறுக்கப்படுமெனக்கொ
ள்க. நித்தமாயென்றதனாற் கருத்தா க்ஷணிகனெனும் பௌ
த்தன் முதலியோர்மதம் மறுக்கப்பட்டன. என்னை? க்ஷ
ணிகமா யிருப்பதொன்றுக்குப் பிரபஞ்சகிருத்திய நடத்தல்
கூடாமையின். அலகிலுயிர்க்குணர்வாகி யென்றதனால் மாயா
வாதி சிவாத்வைதி மதங்களு மறுக்கப்பட்டன. என்னை? ஆ
த்மாக்க ளநாதியே பாசபந்தமாதலின். இனி ஆனந்தவுருவா
யென்பதற்குச் சுகசொரூபமாயென்றும் அன்றிச் செலவரிதா
யெனப் பிரித்து மாறுபட்ட சமயிகள் செல்லுதற்கு வழியா
யென்று முறைப்பாருமுளர். ஆனந்தவுருவாயன்றிச் செலவ

ரிதாயென்றதனாற்றானே ஆனந்தவுருவானாற் செல்லப்படுமென்றிருக்கச் செல்கதியாமென்றல் புனருத்தியென்று வலியுறுத்தற்பொருட்டு. மலத்தினீங்குதலேயறிவுரு. ஆனந்தங் கதியென்னவறிவழிகை வீடென்கையூனம் என்றிதற்குமுன்னூலினுங் கூறினமையானானந்த மீண்டறிவென்றேகொள்க.

---

இங்ஙன நிஷ்களசுபாவமா யிருக்கப்பட்ட சிவன் பிரபஞ்சசிருஷ்டியை நடத்துமுறைமை யெங்ஙனேயென்று வினவத் தனது சத்திகளிடமாகத் திருமேனிகொண்டு நடத்துவனென்னு முறைமையை மேலருளிச்செய்யா னெடுத்துக் கொண்டருளியது.

நீடுபராசத்திநிக ழிச்சாஞான நிறைகிரியைதரவ
தனைநிமலன்மேவி, நாடரியகருணைதிரு வுருவமாகி ந
வின்றுபலகலைநாத விந்துவாதி, கூடுமொளிவளர்குடி
லைமாயைமேவிக் கொடுவினைகொ டனுகரணபுவன
போகம், பீடுபெறநிறுவி யவையொடுக்குமேனி பிற
ங்கியநிட்கள சகளப்பெற்றியாமே. (௨)

முன்னருட்சத்தி மூவிதமான
தன்மையினிட்கள சகளமுரைத்தது.

| | |
|---|---|
| (இ-ள்.) நீடுபராசத்தி | அந்தநிஷ்கள சுபாவமாயுள்ள சிவத்துடனே நிலைபெற்றுள்ள மேலானசத்தியானது அந்தச்சிவனுக்குத் திருமேனியாக |
| நிகழிச்சாஞான நிறைகிரியைதர | விரிந்து தோன்றப்பட்ட விச்சாசத்தியென்றும் ஞானசத்தியென்றும் நிறைந்த கிரியாசத்தியென்றும் ஒன்றிலேயொன்று கவுண்டாக்க |
| அதனைநிமலன்மேவி | அந்தச்சத்திகளை நிமலனாகிய சிவன் பொருந்தி |

| | |
|---|---|
| நாடரிய கருணை திருவுருவமாகி | குறித்தற்கரிய காருண்ணியத்தினாலே யப்படி யிச்சாஞானக்கிரியா சொரூபனுமாய் |
| நவின்று பல கலைநாத விந்துவாதி கூடுமொளிவளர்குடிலை. அனுவயம். ஒளிவளர் குடிலைகூடுநாதவிந்துவாதி பலகலைநவின்று | பிரகாசம் வளராநிற்கிற குடிலையாகியசுத்தமாயையைப்பொருந்தி நாதவிந்துமுதலான தத்துவங்களையுந் தோற்றுவித்துப் பலகலையாகிய வேதாகமங்களையு மருளிச்செய்து |
| மாயை மேவிக் கொடுவினை கொண்டனுகரண புவன போகம் நீடுபெறநிறுவி | அசுத்தமாயாகாரணத்தையும் பொருந்திக் கொடியவினைக்குக் கொள்கலமாகவிருக்கிற சகலராயுள்ள வான்மாக்களுக்குத் தனுகரண புவனபோகங்களையும் பெருமைபெறநிறுத்தி |
| அவை யொடுக்கும் | இங்ஙனஞ் சொல்லப்பட்டவற்றை யெல்லாந் தோற்றினமுறைமையிலே யொடுக்குவிக்கும் |
| மேனி | திருமேனியானது |
| பிறங்கிய நிட்கள சகளப்பெற்றியாமே. | விளங்கப்பட்ட நிஷ்களமென்றுஞ் சகளமென்றுஞ் சொல்லுமுறைமையினை யுடைத்து. எ - று. |

று - ம். நிடுபராசத்தி. எ - கு. அந்தச்சிவத்துடனே நிலைபெற்றுள்ள சத்தியென்று பொருட்படுத்தினதற்கு வழியேதென்னில் அந்தப்பராசத்தியானது அந்தப்பரமசிவனைப்போலே தனக்கொருபோக்குவரவின்றியே யெப்பொழுது

மொருதன்மையாய் நிற்கையாலே யப்படிச் சொன்னதென வறிக. இதற்கு. பி - ம். சித்தியாரில். "எத்திறநின்றானீச னத் திறமவளுநிற்பள்." எ-து. கண்டுகொள்க.

ஒளிவளர்குடிலை என்றதைப் பிரகாசத்தினையுடைய மாமாயையென்றதேதென்னில் சிவன் கொள்ளப்பட்ட திருமேனியெல்லா மதனிடமாகக் கொள்ளுகையாலெனவறிக.

நிட்கள சகளப் பெற்றியாமே என்றதை இங்ஙனஞ் சொல்லப்பட்ட திருமேனி நிஷ்களமுமாஞ் சகளமுமாமென்றதேதென்னில் தோற்றுகிற திருமேனி சகளமாமென்று மொடுக்குகிறதிருமேனி நிஷ்களமாமென்றுஞ்சொன்னதென வறிக.

இதனாற்சொல்லியது சிவன் பிரபஞ்சசிருஷ்டியாகச் சகளீகரிக்குமிடத்துத் தனது சத்திவடிவாகத் திருமேனிகொண்டு சுத்தமாயையைப்பொருந்தி யதிலுண்டான நாதவிந்துமுதலான தத்துவங்களையுந் தோற்றுவித்துப் பலகலை ஞானமாகிய வேதாகமங்களையு மருளிசெய்து அசுத்தமாயையி லுண்டான தனுகரண புவனபோகங்களையு நடத்தி மீளவுமொடுக்குவனென்று மிங்ஙன நடத்துகிறதிருமேனி சகளமென்று மொடுக்குகிறதிருமேனி நிஷ்களமென்றும் வருமுறைமையை யறிவித்தது. (உ)

---

வேறு—இஃது தந்தப் பரமசிவன் பிரபஞ்சத்தை நடத்துமுறைமை யுணர்த்திற்று.

நீடுபராசத்தி நிகழிச்சாஞான நிறைகிரியைதர வதனைநிமலன்மேவி—நிலைபெற்ற மேலானசிவசத்தி தன்னிடத்துண்டான விச்சாசத்தியையுஞானசத்தியையு நிறைந்திருக்கின்றகிரியாசத்தியையுமுண்டாக்க வந்தச்சத்தியை நின்மலனான சிவன்பொருந்தி,—

நாடரியகருணை திருவுருவமாகி-குறித்தற்கரிய கருணையே திருமேனியாகக்கொண்டு,--வளர்குடிலை மேவி-பெரிய குடிலையைப்பொருந்தி,--நாதவிந்துவாதி-நாதவிந்துமுதலிய தத்துவங்களையும்,-ஒளிகூடுந் தனுகரணபுவனபோகம் - விஞ்ஞானகலர்க் கொளிபொருந்திய தனுகரண புவனபோகங்களையும்,—ஈடுபெற நிறுவி - பெருமைபெறப் படைத்துநிறுத்தி,—நவின்று பலகலை - விந்துவிலேநின்றுஞ் சூக்குமைமுதலிய நாலுவாக்குக்களையு மைம்பத்தோ ரக்கரங்களையும் படைத்து அக்ஷரங்களைமாறி மாறிப் புணர்த்துப் பதங்களையாக்கி யவற்றை மாறிமாறிப்புணர்த்து வாக்கியங்களையாக்கி யவற்றை மாறிமாறிப்புணர்த்துச் சந்தோபேதங்க ளாக்கி யவற்றால் வேதாகமாதிகளை யங்ஙன மருளிச்செய்து,—மாயைமேவி - அதோ மாயையைப் பொருந்தி,—கொடுவினைகொ டனுகரணபுவனபோகம் ஈடுபெறநிறுவி - பிரளயாகலர்க்குஞ் சகலர்க்குங் கொடியவினைகளைப் பொருந்தி யிருக்கின்ற தனுவாதிகளைப் பெருமைபெறப் படைத்து நிறுத்தி,—அவை யொடுக்கும் - அவற்றை மீண்டு மவ்வெல்லைகளிலே யொடுக்குவன்,—மேனி - அவற்றை யொடுக்குவிக்குந் திருமேனியுந் தோற்றுவிக்குந் திருமேனியும்,—பிறங்கிய நிட்கள சகளப்பெற்றியாம்-நிரனிரையாக வுயர்ந்த நிட்களமுஞ் சகளமுமான முறைமையாம். எ - று.

நிட்களசகளமெனப் பின்வருதலி னவற்றிற்கேற்பப் பொதுவாய்நின்றமேனி யொடுக்குவிக்குமேனி தோற்றுவிக்குமேனி யெனப் பகுக்கப்பட்டது. இனி நிறுவியொடுக்குதற் கேதுவானமேனி யென வெச்சமாக்கி யெதிர் நிரனிரையாக வுரைப்பினுமாம். நிறுவியெனவே படைப்புமடங்கிற்று. பரமசிவனுக்கிந்த மேனி யிரண்டு முபசாரமே.

---

அப்படி யும்முடையசிவன் சகளீகரிக்குமிடத் தவனைப்பிர

மா சிருஷ்டிக்கிறதொழியத் தானே சகளீகரிப்பானென்னலா மோவென்ற பாஞ்சராத்திரியைநோக்கி யருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

ஈங்கிதுவென் றதுகடந்த வியல்பினனு மீறுமுதனடுவொன் றுமிலமையானு, மோங்கிவளர் ஞானமயனாதலானு முண்மைபிறர்க் கறிவரிய வொருமையானுந் தாங்கரிய வெறுப்பினொடு விருப்புமெல்லாஞ் சார்வரிய தனிமுதல்வ னாதலானு, நீங்கலரு முயிர்க்குயிராய் நிற்றலானு நிறுத்திடுவ னினைந்தவுரு நிமலன் றானே. (௬)

துடைப்பவனுருவாய்த் தோன்றுவதன்றிப்
படைக்கவரிதாம் பரிசினையுரைத்தது.

(இ - ள்.) ஈங்கிதுவென்றது கடந்த வியல்பினனும் — இவ்விடத் திதுவென்று ஆன்மபோதத்தாற் குறிக்கப்பட்டதற் கப்பாற்பட்டிருக்கிற முறைமையினையுடையவனாகையாலும்

ஈறுமுத னடுவொன்று மிலாமையானும். அநுவயம். முதனடுவீ றொன்றுமிலாமையானும் — தோன்றிநின் றழியப்பட்ட முதலுநடுவுமுடிவு மில்லாதவனாகையாலும்

ஓங்கிவளர் ஞானமயனாதலானும் — மிக்குவளராநின்ற அறிவேவடிவாக வுடையவனாகையாலும்

உண்மை பிறர்க்கறிவரிய வொருமையானும் — தன்னுண்மையைப் பிறராலறிதற்கரிய நிலைமையினை யுடையவனாகையாலும்

தாங்கரிய வெறுப்பிறொடுவிருப்புமெல்லாஞ்சார்வரிபதனிமுதல்வருதலானும் — ஆன்மாக்களைப்போலப் பொறுத்தற்கரிய பிரியாப்பிரியங்களெல்லாம் பொருந்துதற்கரிய வொப்பில்லாத முதலியாதலானும்

நீங்கலரு முயிர்க்குயிராய் நிற்றலானும் — தன்னைவிட்டுப் பிரிந்து தனித்தொருமுதலாய்நில்லாத சர்வான்மாக்களுக்கும் பிராணனாய் நிற்கையாலும்

நிறுத்திடுவனினைந்தவுரு நிமலன்றானே. — இங்ஙனஞ்சொல்லிவந்த முறைமைகளை யுடையவனாதலாலே யவனுக்கொருவரொருவடிவு கொடுக்கவேண்டுவதில்லை தனக்குத்தானே பொருந்தினவடிவை யெடுத்துக்கொள்ளுவன். எ - று.

று - ம். இந்தச்செய்யுளுக்கிட்ட தொந்தனையிலே சிவனையும் பிரமா சிருஷ்டிப்பானென்று பாஞ்சராத்திரிசொன்னானென்பதற்கு பி-ம். சித்தியாரில். "உந்தியிலயனையீன்றங் கவனைக்கொண்டுலகுண்டாக்கி, யந்தநல்லுலகழிக்க வரனையுமாக்குவித்துத், தந்திடுஞ்சகத்தினுக்குத் திதிகத்தாதானேயாகி, வந்திடுந்தோற்றமீறு நிலைமையும் பண்ணுமாயன." எ - து. கண்டுகொள்க.

அவனப்படிச் சொன்னதனை மறுத்ததற்கு. பி-ம். சித்தியாரில். "அயன்றனைப் பயந்தானென்று மரியயன் சிரஞ்சேதிப்பப், பயந்திடான்றலைமாறனும் படைத்திடான் சிரத்தைக்கிள்ளுந், சயந்தருமரனைத்தந்தா னயனென்கை தப்பேயன்றோ, தியங்கிடாதுணராயெல்லாஞ் சிவன்செய லென்றுதேர்ந்தே." எ - து. கண்டுகொள்க.

இனி ஈங்கிதுவென்றது கடந்தவியல்பினன். எ-கு. ஆன்மபோதத்தாற்சுட்டி யறிதற்கரியவனென்று பொருட்கூறியதற்கு:

பி-ம். சித்தியாரில். "குறித்ததொன் றுகமாட்டாக் குறைவிலது கலானும்." எ-ம். "தன்னறி வதனாற்காணுந் தகைமையனல்லனீசன்". எ-ம். கண்டுகொள்க.

ஈறுமுதனடுவொன்று மிலாமையான். எ-கு. தோன்றிநின் றழிதலில்லாதவனென்ற தேதென்னில் ஆன்மாக்களைப் போல யோனி சம்மந்தமுள்ளவ னல்லவென்ற தெனவறிக.

ஓங்கிவளர்ஞானமயன். எ-கு. மிக்குவளராநின்ற வறிவென்ற தேதென்னில் அண்டாண்ட பகிரண்டங்களுக் கெல்லா மப்பாலுமிப்பாலு முண்டாகிய வியல்புகளையெல்லா மறியப்பட்ட பேரறிவனாகையா லெனவறிக.

உண்மைபிறர்க்கறிவரிய வொருமையான். எ-கு. தன்னுண்மை பிறருக்கறிய வரியவனென்ற தேதென்னில் பிரமவிஷ்ணுக்கள் முதலாயுள்ளவர்களுக்குந் தன்னையறிதற்கரியவ னென்றதெனவறிக. இதற்கு. பி-ம். கோவைத் திருவாசகத்தில். "நடனாம் வணங்குந் தொல்லோனெல்லை நான்முகன்மாலறியாக், கடனாமுருவத்தரன்." எ-து. கண்டுகொள்க.

நிறுத்திடுவனினைந்தவுரு நிமலன்றானே. எ-கு. தனக்குப் பொருந்தினவடிவு தானே யெடுத்துக்கொள்ளுவனென்ற தேதென்னில் பத்தியினால் வழிபடுவோர்க்கு அதற்கதற்குத்தக்க திருமேனிகொண் டிரக்ஷிக்கையாலெனவறிக. இதற்கு. பி-ம். பூசாகரணத்தில். "எவ்வுலகத்துமூர்த்தி யேதுகொண்டவனியெங்கு, மவ்வுலகத்துமேனி யதுகொண்டங் கமருமீசன்." எ-து. கண்டுகொள்க. அதுவன்றியு மந்திரங்களிரத்தமாகவும் பதங்கள் தசையுநரம்புமாகவும் வன்னங்கள் தொக்காகவும் புவனங்களுரோமமாகவும் தத்துவங்க ளத்திமச்சைசுக்கிலமுதலான தாதுக்களாகவும் கலைகளைந்தாகிய சாந்தியாதீதகலைமுதல் திருமுடியாகவும் திருமேனியாகக்கொண்ட அத்துவாமூர்த்தி யென்னவு

மாமெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில், "அத்துவாமூர்த்தி
யாக வுரைகுவ தென்னையென்னி னித்தனாய் நிறைந்தவற்றி னீங்
கிடா நிலைமையானுஞ் சித்துட னசித்துக்கெல்லாஞ் சேட்டித னா
தலானும், வைத்ததா மத்துவாவும் வடிவென மறைகளெல்லா
ம்" எ-து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது நின்மலசொரூபனாகிய சிவன் வாக்கு
மனாதீத னாகையாலுந் தோன்றிநின் றழியாதவனாகையாலும்
ஞானசொரூப னாகையாலுந் தனக்குப்பொருந்தின திருமேனி
தானேயெடுத்துக் கொள்ளுவனென்னு முறைமையை யறிவித்
தது. (௩)

---

வேறு—இதுவுமதனை யொருவகையா னுணர்த்திற்று.

ஈங்கிதுவென்றது கடந்த வியல்பினானும் - காட்சிமுதலிய
வளவைக் கடந்தவனாதலி னிவ்விடத் திதுவென்று சுட்டிக்கா
ட்டுமதனைக் கடந்தவியல்பாலும்,—ஈறுமுதனடுவொன்று மிலா
மையானும் - சர்வவியாபகனாகையா லவனுக்கு முதனடுவிறுதிக
ளொன்றுமில்லாத தன்மையாலும்,—ஓங்கிவளர் ஞானமய னாத
லானும் - சடமானபிரபஞ்சஞ் சேதனனையன்றி நடவாமையிற்
கன்மகாலேசுர வாதிகளைப்போலவு மன்றி வயிந்தவ சரீரங்
கொள்வனென்னி னன்மாக்களி லொருவனாதலி னிதுவுமன்றி
யவன் மிகுத்துவளர்கின்ற ஞானசொரூப னாகையாலும்,—உண்
மைபிறர்க் கறிவரிய வொருமையானும் - தானிரண்டறக்கலந்து
நிற்கையாலுந் தன்னுண்மையைத் தானே மூர்த்திகரித் தெழுந்த
ருளிவந்து பரஞானத்தா லறிவிக்கப்படு மவர்க்கன்றி மற்றைய
வர்க் கறியவொண்ணாத வொப்பற்ற தன்மையுடைய னாதலானு
ம்,—தாங்கரிய வெறுப்பினொடு விருப்புமெல்லாஞ் சார்வரிய த
னிமுதல்வ னாதலானும் - நின்மலனாகையாலே பொறுத்தற்கரிய
வெறுப்பும் விருப்புமாகிய வெல்லாம் பொருந்துதற்கரிய வொப்

யில்லாத தலைவனுகையாலும்,—நீங்கலரு முயிர்க்குயிராய் நிற்ற லானும் - விட்டு நீங்குதற்கரிய வாத்மாக்களுக் கெல்லாம் பிரா ணனாய் நிற்கையாலும்,—நிமலனினைந்த வுருத்தானே நிறுத்திடு வன் - நின்மலனான பரமசிவன் றன்னுடைய திருவுள்ளத்துக் குப் பொருந்தினதொரு திருமேனியைத் தானேதனதாகநிறுத்து வான். எ - று.

மேனி தனக்கெனக்கொண்டு தானேயென்பர். ஒருமை மூ றைமை யென்பாருமுளர்.

---

இங்ஙனங்கூறிவந்த செய்யுட்களில் பலகலையென்ற விருத் தமுதலாகிய செய்யுள்மூன்றினுள்ளு மொருகத்தாதவை யுண்டெ ன்று நாட்டி அவனிஷ்கள சொரூபியா யிருப்பனென்று மவன் பிரபஞ்சத்தை நடத்துவது பொருட்டாகத் தனது சத்தியிடமா கச் சகளீகரித்து நடத்துவனென்று மப்படியவன் சகளீகரிக்குமி டத்துத் தனக்குப் பொருந்தின திருமேனிதானு யெடுத்துக்கொ ள்ளுவனென்றுஞ் சொல்லுகிறதென்ன? அப்படி யொருகத்தாவி ல்லை யென்று மிந்தப் பிரபஞ்சமு மொருகாலத்திலு மழியாம னி த்தமா யிருக்குமென்றுஞ் சொல்லுகிற வுலோகாயதனை நோக்கி யிந்தப்பிரபஞ்ச மநித்தியமென்று மிந்தப்பிரபஞ்சத்தைத் தோ ற்றுவித்து நடத்தி யொடுக்குகைக் கொருகத்தாவுண்டென்று மேல் மறுத்தருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

உலகமெலா மொருவனே டொருத்தியொன் றென் றுளதாகி நின்றளவி லொடுக்கும்பின்னு, மலம தனுலுளதாகு முருவமாறி வருவதுபோவது செல்வ தாதலானு, மலைவிலசே தனமாயை யாதலானு மனு க்களுரு வடையுமறி விலாமையானு, நிலவுதொழின் மருவியுரு நிற்றலானு நின்றவையு மளித்திடுவ னிம லன்றானே. (சு)

ஒருவனொருத்தி யொன்றென்றுணர்வரு
முருவமவனால் வந்ததென்றது.

(இ - ள்.) உலகமெலாமொருவனோ டொருத்தி யொன்றென் றுளதாகிநின்றளவி லொடுங்கும்

நீநித்தியமென்ற பிரபஞ்சமனைத்து மவனென்று மவளென்று மதுவென்றுந் தோன்றிநின்றெல்லையிலேயழிபாநிற்கும். ஆகையாலே இந்தப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கவுந் திதிக்கவுஞ் சங்கரிக்கவுமொரு கத்தாவேண்டுமென் றறிவாயாக. அப்படியும்முடைய கத்தாவாலே சங்காரப்பட் டொடுங்கின பிரபஞ்ச மீளவுந் தோன்றுவா னேனென்னில்

பின்னுமலமதனு ளதாகும்

ஆன்மாக்களுக்கு ஆணவமலபரிகம் வருகைப்பொருட்டாக மீளவுந் தோன்றாநிற்கும். அஃதாவது இந்தப் பிரபஞ்சமென்றது ஆன்மாக்களும் பாசங்களுங் கூடியே பிரரபஞ்சமாகையா லவையிற்று ளான்மாக்க ளநாதியே மலசகசராகையாலே யந்த மலபாகம்வந்தே முத்தியைப் பெறவேண்டுகையா லந்தமலபாகம் வருமிடத்து மாயாசரீரங்களை யெடுத்துக் கன்மங்களைப் புசித்தே மலபாகம் வரவேண்டுகையா லந்தமுத்தியைப் பெறுமளவுஞ் சங்காரகாலம் மாயாகாரணத்திலே யொடுங்கியுஞ் சிருஷ்டிகால மந்தக்காரணமாயையினின்றுந் தோன்றப்பட்ட காரியமாயையாகிய கலையாதி தத்துவங்களோடு மொக்கத்தோன்றி ஜீவித்து வருகையாலே யப்படிச் சொன்னதெனவறிக. அப்படி யான்மாவென்பது மொன்றுண்டா யதனை மறைக்கப்பட்ட ஆணவமலமென்பது மொன்றுண்டா யந்த மலபாகம் வருகைப் பொருட்டாக வொடுங்கின பிரபஞ்ச மீளவுந் தோன்றுமேயாகி லதுதானே யொடுங்கியுக்தோன்றியும் வாராதோ அதற்குக் கத்தாவென்றொருவன் வேண்டுமென்றதேதென்னில்

உருவமாறி வருவதுற போவதுற செல்வ தாதலாலும் — ஆன்மாக்கள் கன்மத்துக்கீடாக வச்சுமாறித் தேகத்தை வந்தெடுத்தும் பிராரத்தந் தொலைந்தவாறே யந்தத்தேகத்தை விட்டுப் போயும் புண்ணியபாவங்களுக் கீடாகச்சுவர்க்க நரகங்களிலே சென்றநுபவிக்கையினாலும். அன்றியும்

அலைவில் லசேதனமாமையாதலாலும் — இந்தமாயாரூபங்கள் ஜடமானபடியாலே யிவையிற்றுக் கியக்கமுமறிவு மில்லாதபடியினாலும். அன்றியும்

அறுக்காளுருவமையுமறிவிலாமையாலும் — ஆன்மாக்கள் கன்மத்துக்கீடாக வொவ்வொரு சரீரங்களை யெடுக்குமிடத்து அந்தச் சரீரங்களிலே சென்று பொருந்துகைக்குத் தங்களுக்கென்ன வோரறிவில்லாத படியாலும். அன்றியும்

நிலவுதொழின் மருவியுரு நிற்றலானும் — ஆன்மாக்கள் கன்மத்துக்கீடாக வப்படியெடுக்கப்பட்ட சரீரங்களோடுங் கூடிநின்று பொருந்தப்பட்ட தொழில்களிலே யாதாமொரு தொழில்களைச்செய்து நிற்கையாலும் இவையெல்லாந் தாமாகக் காரியப்படமாட்டாதது கொண்டே

நின்றவையுமளித்திடுவனிமலன்றானே. — தனக்கொருபோக்குவர வின்றியே நின்றெல்லாவற்றையுஞ் செய்வித் திரக்ஷித்தருளுவனிமலனுடைய சிவன்றானே. எ – று.

று – ம். இக்தசெய்யுளிலே [illegible] தெய்வந்தனையிலே உலகாயதன் கர்த்தாவில்லையென்று [illegible] யிந்தப்பிரபஞ்ச மொருகாலத்திலு மழியாமலி நித்தியம [illegible] மென்றுமென்றுஞ் சொன்னதனைமறுத்து உலகமெல்லா [illegible] ருவனாலொருத்தி யொன்றெ

ன்றுளதாகி நின்றளவிலொடுங்கும். எ - கு. பொருட்கூறியவிடத்து இந்தப்பிரஞ்ச மவனவளதுவாய் நின்று காரிப்பபடுமிடத்துத் தோன்றிநின் றழிகையாலே இவையிற்றைக காரியப்படுத்துச் சிருஷ்டித்துந் திதித்துஞ் சங்கரித்தும்வருகைக் கொருகத்தா வேணுமென் றவனை மறுத்ததற்கு. பி-ம். சித்தியாரில் உலகாயதன் மறுப்பாகிய செய்யுளில். "பூதமானவைநித்தமென்று புகன்றதென்னையுருக்களா, யாதலோடழிவாகுமாதலி னாக்குவோர் வரவேண்டிடுங், காதலோடு கடாதிமண்கொ டியற்றுவோருளர் கண்டனஞ், சிதறிலெழுந்தகொப்பு ணிகழ்ந்த மாருதச்செய்கையே." எ - ம். "பூதமானவைகாரியங்கள் பொலிந்துமன்னியழிந்திடு, மாதலாலொரு நாதனிங்குள னென்றறிந்துகொளையனே, பேதமான கடாதிமண்ணினில் வந்தவாறு பிரித்திடிற், கோதிலாத குலாலனால்வரு செய்கையென்று குறிப்பரே." எ-ம். வருமதுகண்டுகொள்க.

அன்றியுஞ் சுபக்ஷத்திலும் உலகாயதன்கருத்தை மறுத்தவிருத்தத்தில். "ஒருவனோ டொருத்தியொன்றென் றுரைத்திடு முலகமெல்லாம், வருமுறைவந்துநின்று போவதுமாதலாலே, தருபவனொருவன்வேண்டுந் தான்முதலீறுமாகி, மருவிடுமநாதிமுத்தச் சித்துருமன்னிநின்றே." எ-து. கர்த்தாபிரஞ்சத்தை நடத்துவனென்பதற்குக் கண்டுகொள்க.

இனிப் பிரபஞ்சந் தோன்றியுமழிந்தும் வருமென் றவனைமறுத்ததற்கு. பி-ம். சித்தியாரில். "உதிப்பதுமீறுமுண்டென் றுரைப்பதிங் கென்னைமுன்னோர், மதித்துலகநாதியாக மன்னியதென் பரென்னி, விதர்க்கயானதுமாறுதி யெடேனிப் பூதாதியெல்லாம், விதிப்படிதோன்றிமாயக் காணலான்மேதினிக்கே." எ-து. கண்டுகொள்க.

இனி யிந்தப்பிரபஞ்சமாவது ஆன்மாக்களும் பாசங்களுங்

கூடியே பிரபஞ்சமென்று பேர்பெற்று நின்றதென்று விதப்பாகப் பொருட்கூறியதற்கு. பி-ம். தத்துவவிளக்கத்தில். "கருமவிபாச மசேதனங்கட்டுண்பர் சேதனரென், றிருமையில்லைய மடங்குமென்றெண்ணுக." எ-து, கண்டுகொள்க.

இனி யப்படி யொடுங்கின பிரபஞ்ச மீளத்தோன்றுவானேனென்று உலகாயிதன் வினயதற் குத்தரமாகப் பின்னு மலமுளதாகும். எ-கு. ஆன்மாக்களநாதியே மலசகசராகையாலே யந்தமலபாகம் வருகைப்பொருட்டாகப் பிரபஞ்ச மீளவுந்தோன்றுமென்று விதப்பாகப்பொருட்கூறியதற்கு. பி-ம். சிவஞானபோதத்தில். "அவனவளதுவெனுமவை மூவினைமையிற், றோற்றியதிதியேயொடுங்கி மலத்துளதாம்." எ-ம். "இலயித்ததன்னி லிலயித்ததாமலத்தால்." எ-ம். வருமதுகண்டுகொள்க.

அன்றியு மாணவமலபாகம் வாராத ஆன்மாக்கள் மாயாரூபங்க ளொடுக்குங்காலங் காரணமாயையிலே யொக்கவொடுங்கியும் தோன்றுங்கால மந்தமலபாகம் வருகைப்பொருட்டாக மீளவுமந்தக் காரணமாயையினின்றுங் காரியமாயையோடே யொக்கத்தோன்றுவார்க ளென்றும் விதப்பாகப் பொருட்படுத்தினதற்கு. பி-ம். சித்தியாரில். "உயிரவை யொடுங்கிப்பின்னு முதிப்பதெ னரன்பாலென்னிற், செயிருறுமலத்தினுகுஞ் சிதைந்ததேதென்னிற் சித்தத், துயர்வொழிகாரியங்க ளழியுங் காரணங்கிடக்கும், பயிருருகாரியம்பின் பண்டுபோற் பண்ணுமீசன்" எ - து கண்டுகொள்க.

இந்நூலினும். "மற்றத் தோற்றமலபாகம்வர" என்பது மிப்பொருட்பற்றி யெனவறிக. இங்ஙனமான்மாவுக்குத் தோற்றஞ் சொல்லவே யுடம்போடுங்கூடித் தோன்றுகையால் பிரபஞ்சத் தோற்றஞ் சொல்லுகை கருத்தெனவறிக.

இனி யந்த ஆணவமலபாகம் வருமிடத்து மாயாரூபங்களை

யெடுத்தே மலபாகம் வரவேணுமென்பதற்கு. பி - ம். சித்தியாரில். "எழுமுடல் கரணமாதி யிவைமல மலமலத்தாற், கழுவுவ னென்றுசொன்ன காரண மென்னையென்னிற், செழுநவையறு வைகாணி யுவர்செறிவித்தழுக்கை, முழுவதுங் கழிப்பன்மாவை கொடுமல மொழிப்பன் முன்னோன்." எ-று. கண்டுகொள்க.

இனி யப்படிப் பிரபஞ்சந் தோன்றுமிடத்துத் தானேதோன்றுதோ கத்தாவும் வேணுமோவென லுலகாயதன் வினவுதற்குத்தரமாக வுருவமாதி யென்ற பதந்தொடங்கி மற்றுள்ள பதங்களுக்கெல்லாம் பொருட்கூறுமிடத்து மாயாகன்மங்கள் ஜடமானபடியாலு மான்மாக்கள் தங்களுக்கென்ன வோரறிவில்லாதபடியாலு மவையிரண்டைக் கூட்டிக் காரியப்படுத்துவது சிவனே யென்றும், நின்றவையு மளித்திடுவ னிமலன்றானே. எ - டு. சர்வமுஞ் சிவனே செய்வித் திரக்ஷித்தருளுவ னென்றும் பொருட்கூறியதற்கு. பி-ம். சித்தியாரில், "உலகுடல்கரணங்கால முறுபலநியதிசெய்தி, பலவிவை கொண்டுகன்மம் பண்ணுவதுண்பதானூ, விலவிடா விவைதான்சென்று நினைந்துயிர் நிறுத்திக்கொள்ளா, வலகிலாவறிவருளனை யனைத்திடு மருளாருமே." எ-று. கண்டுகொள்க.

ஆக விங்ஙனங்கூறிவந்த பதங்களி லுருவமாதி வருவது போவது செல்வது, எ - டு. பொருட்கூறுமிடத்து வருவது சிருஷ்டியென்றும் போவது சங்காரமென்றுஞ் செல்வது திதியென்றும் பொருளுரைப்பாருமுளர், அது பொருளல்ல வெனவறிக. அதுவேனென்னில் இச்செய்யுளின் முதற்பதத்தில் உளதாகிநின்றளவின்மொழியுங்கும். எ - டு. தோன்றிநின் றழியுமென்று சிருஷ்டியுந் திதியுஞ் சங்காரமுமாகப் பொருட்கூறி யிதற்குமப்படிப் பொருளுரைக்கில் ஒருசெய்யுளிலே யிரட்டித்த பொருள்கூறுகை வழக்கல்லாதபடியா லப்படிச் சொன்னதெனவறிக. ஆகையால்

செல்வதென்றது ஆன்மாக்கள் கன்மத்துக்கீடாகச் சுவர்க்கநரகங்களிலே செல்வார்களென்பதே பொருளெனவறிக.

அன்றியும், அணுக்களுருவடையு மறிவிலாமையாலும். எ-று. பூதவணுக்கள்நாலு மான்மவணுவொன்றும் ஆகவைந்தணுவுந் தம்மிற்கூடி யுருப்படுமென்று பொருளுரைப்பாருமுளர். அப்படியாயினும் அணுக்களுருவடையு மென்றசொல்லுக்கு அந்த அணுக்களென்றது வேறே யோருடம்பிலே சென்று பொருந்துமென்று பொருளாமொழிய வவைதம்மிற்கூடியுடம்பாமென்று பொருளாகாதபடியால் ஆன்மாக்களாகிய வணுக்கள் வேறே யோருடம்பிலே சென்று பொருந்துமென்பதொழிய ஆன்மவணுவும் பூதவணுநாலுந் தம்மிற்பொருந்திக் காரியப்படுமென்பது இந்தப்பதத்துக் காகாதென்றதெனவறிக. அணுக்களென்பது ஆன்மாக்களென்பதே யிந்தப் பதத்துக்குச் சொல்லப்படுமென்பதற்கு இந்நூலிற் பின்சென்ற நூலாகிய திருநெறிவிளக்கத்தினும் இந்த விருத்தத்துக் கெதிரடை விருத்தமாகிய "வையமெலா மாணவ பெணவி யென்னத்தோன்றி வல்வினையா லுழன்றொடுங்கி மலத்தாற் பின்னு, மெய்யணையும் வெகுவித ரூபங்கண்மாறி விடுவதுபற்றுவதாகி விரிதலாலும், பொய்யணையமாயை சடமாதலாலும் போதமுருவறிந்து பொருந்தாமையாலுஞ், செய்வினைசெய்துயிருருவிலிற்றலாலுஞ் சகமுழுது நின்றுசிவன் செய்வன்காணே" என்னுமிதில் போதமுருவறிந்து பொருந்தாமையாலும் என்றபதத்தை யணுக்களுருவடையு மறிவிலாமையாலு மென்றபதத்துக்குக் கண்டுகொள்க. இந்தத் திருநெறிவிளக்கம் பின்னூலாயிருக்க விதனை யெதுகாட்டிய தேதென்னில் இந்தச் சிவப்பிரகாசத்துக்குப் பின்சென்ற நூலாகையால் சத்தம் வேறுபட்டும் அர்த்தமொன்றுபட்டும் வருகையாலே யதுகாட்டவேண்டியதெனவறிக. இந்நூலி லிவையந்த விடமெல்லா மிதுவேகருத்தென்

பது கண்டுகொள்க. அன்றியும் அணுக்களென்பதை ஆன்மாக்க
ளென்று தனித்துஞ் சொல்லப்படு மென்பதற்கு. பி-ம். தத்துவ
விளக்கத்தில் "அமையாநிலமை யணுக்களோர்மூன்று வகைய
வைதாங் கமையாநிறைந்த விஞ்ஞானகலர் பிரளயாகலர் சக
லர்." எ - ம். "மூவகைடணுக்களுக்கு முறைமையால் விந்து ஞா
ன மேவின" என்று சித்தியாரினுங் கண்டுகொள்க. ஆகையா லிந்
தப்பதத்துக் கணுக்க ளுருவமையுமென்றது ஆன்மாக்களென்
பதே துணிவெனவறிக.

அன்றியும் நிலவுதொழின் மருவியுருநிற்றலானும். எ-கு. அறு
வகைத் தொழிலிலே பொருந்தப்பட்ட தொருதொழிலைச்செய்து
நிற்றலானு மென்று பொருளுரைப்பாருமுளர். அப்படி யறுவ
கைத்தொழில் மானுடர்க்கொழிப மற்றுள்ள வான்மாக்களுக்குப்
படாதாகையா லிவ்விடத்துச் சர்வான்மாக்களையு நோக்கிப் பொ
துப்படக் கூறுகையாலே நிலவுதொழிலென்பது பொருந்தப்ப
ட்ட தொழிலென்று பொருட்படுத்துகையே வழக்கெனவறிக. அ
றுவகைத் தொழிலென்றால் மானுடர்க்கென்றதேதென்னில் அறு
வகையாவது உழவுதொழில் வரைவு வாணிபம் வித்தை சிற்பம்
ஆகையா லப்படிச்சொன்னதெனவறிக.

என்றிங்ஙனங் கூறப்பட்ட செய்யுளில் உலகமெலா மொரு
வனொ டொருத்தி யொன்றெனு ளதாகின்றளவி லொடுக்கு
மென்ற பதமொன்றையும் உலகாயதனை மறுத்ததாக்கி மற்றப்ப
தமைந்தும் மற்றுள்ள புறச்சமயிகளை மறுத்ததாகப் பொருளு
ரைப்பாருமுளர்; அதுபொருளல்ல வெனவறிக. அதுவேனென்
னில் இச்செய்யுள் பதந்தோறு மொருவன் கருத்தைப்பற்றித்
தொடர்ந்து சொல்லுகையாலும் இச்செய்யுளுக்குக் கருத்தாகச்
சேர்த்த குறட்பாவும் உலகாயத னொருத்தன் கருத்தைப்பற்றி நி
ற்கையாலு மப்படிச் சொன்னதெனவறிக. அப்படி மற்றுள்ள

சமயிகளை மறுத்துக் கூறப்படாதானா லுலகாயத னொருவனையு நோக்கிச் சிவனையும் ஆன்மாவையும் ஆணவமலத்தையுங் கன்மமலத்தையுங் கூறவேண்டுங் காரணமேதென்னில் அவையிற்றை யவனில்லையென்று சொல்லுகையா லப்படிச்சொன்னதென வறிக. அவையிற்றை யவனில்லையென்று சொன்னதற்கு. பி-ம். சித்தியாரில். "இப்படியென்றிக்கன்ம முயிரிறைவேறுண்டென்று, செப்பிடுமிவர்க்குமண்ணோர் செய்திடுங் குற்றமென்னோ, வொப்பிலா மலடிபெற்ற மகனொரு முயற்கொம்பேறி, தப்பிலாகாயப்பூவைப் பறித்தமைசாற்றினாரோ" எ-று. அவன்மதத்திலே கண்டுகொள்க.

இனி யவையெல்லா முண்டென்றுநாட்டி யவனைமறுத்துக் கூறினதற்கு. பி-ம். சித்தியாரில். "அநாதியே லமைவின்றெனின்மல மாயைகன்ம மணுச்சிவ, னநாதிகன்மமணுக்கள்செய்ய வறிந்துகன்மமுடற்செயா, வநாதிகாரியமாமுடற்க ளசேதனம் மணையாவறிந், தநாதியாதியமைக்கவேண்டு மமைப்பினோடு மநாதியே." எ-று அவன் மறுப்பிலே கண்டுகொள்க.

ஆகையா லிச்செய்யு ளிங்ஙனங் கூறிவந்த வுபமானங்களினாலும் பிரமாணங்களினாலு முலகாயதனை நோக்கி மறுத்ததென்பதை யநுபவத்தாற் கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது இதற்கு முன்னர்ச்செய்யுட்களிலே யுண்டென்றுநாட்டப்பட்ட கத்தாவை யில்லையென்று மிந்தப்பிரபஞ்ச நித்தியமென்றுங் கூறிய வுலகாயதனை நோக்கி மறுத்து இந்தப்பிரபஞ்ச மவனவளதுவாகத் தோன்றிநின்றழிகையாலே யிவையிற்றைக் காரியப்படுத்துகைக் கொருகத்தாவுண்டென்று முறைமையையறிவித்தது. (௯)

வே-று.—இது உலகாயதன் முதலியோரை மறுத்துப் பதியு ண்மை யுணர்த்திற்று

உலகமெலா மொருவனோடொருத்தி யொன்றென்றுளதாகி நின்றளவிலொடுங்கும்- உலகாயதன் பிரபஞ்சந்தானே யியல்பாகியுண்டாங்கர்த்தா வென்னையெனில் இயல்பொருபடிக்கா யிருத்தல்வேண்டும் அப்படியன்றிப் பிரபஞ்சமெல்லா மவனவளதுவெனக் கன்மத்துக்கீடாகத்தோன்றி நிலைபெற்று மீளத்தோன்றின வெல்லைகளிலே யொடுங்கும். ஆனால் ஒடுங்கின பிரபஞ்சம் பின்னு முண்டாவதென்னையெனில்,—பின்னு மலமகற்றுதலுளதாகும்-பின்பு மலமேதுவாக ஒடுங்கின வெல்லைகளிலே நின்று முண்டாகாநிற்கும். இனிப் பட்டாசாரிய னச்சுமாறுதென்பன் அப்படியன்றிப் புழுவேட்டுவாளியாறுற் போலவு மயிற்குட்டி-வண்டாறுற்போலவும்,—உருவமாறிவருவது செல்வது போவதாதலானும் - ஆத்மதேகங்கள் கன்மத்துக்கீடாக மாறி மாறித்தோன்றுவது நிற்பது மழிவதுமாகையானும். இனி நிரீச்சுரசாங்கியன் புருடன் சந்நிதியிலே மாயைதானே தனுவாதிகளாய்த்தோன்றுமென்பன். அப்படியன்றி,—அலைவின்மாயை யசேதனமாதலானும்-சலனமில்லாதமாயை சடமாதலாற் றுணைவடிவாக மாட்டாமையானும்,—அணுக்க ளுருவடையு மறிவிலாமையானும்-அந்த ஆத்மாக்களும் மலசத்தாகையா லோருடம்பை யெடுக்கத் தறிவின்மையானும். இனி யந்தப்பட்டாசாரியன் வினைதானே சரீரத்தைக் கொடுக்குமென்பன். அப்படியன்றி,—நிலவுதொழின் மருவியுருநிற்றலானும் - மாயையிடமாக விளங்காநின்ற கன்மமானதோருடம்பிலே பொருந்தி ஜடமாய் நிலைபெறுகையானும்,—நிமலன்றனே நின்றதையுமளித்திடுவன்-நின்மலனான சிவன்றனே விகாரமறநின்று எல்லாவற்றையு முண்டாக்குவன். எ-று

அளவு எல்லை நிலவுதொழின் மருவியுரு நிற்றலானுமென்ப

தற்கு ஆத்மாக்கள் பொருந்தின தொழிலைச்செய்து ஒரு—ம்பிலே நிற்கையுண்டாகையாலு மென்பாருமுளர். செல்வது-நிகழ்வது, இவ்வாசிரியர்தாமே செல்காலத் தற்பங்கொடுதிக்குமிறையென்றார் பிறிதினும்.

---

அப்படியிங்ஙனக்கூறப்பட்ட முன்னர்ச்செய்யுள் முடிவிலே நின்றவையுமளித்திடுவ னிமலன்றானே என்றதற்கு சர்வமுஞ் சிவனேசெய்விப்பனென்று நீர் சிவனொருவன்மேலேயும் வைத்துச்சொல்லுகிறதென்ன, இந்தப்பிரபஞ்சத்தைப் பிரமா சிருஷ்டிப்பனென்றும் விஷ்ணு விரக்ஷிப்பனென்று முருத்திரன் சங்கரிப்பனென்று மூன்றுதொழிலுக்கு மூவரையுமென்றல்லோ சொல்லுவது என்கிற பாஞ்சராத்திரியைநோக்கி மூன்றுதொழிலுக்குஞ் சிவனேகத்தாவென்னு முறைமையை மேலருளிச்செய்வானெடுத்துக்கொண்டருளியது.

கந்தமல ரயன்படைக்கு முலகமெல்லாங் கண்ணளிக் கும்மனைவையுங் கடவுடானே, யந்தமுற வழித்திடுவ னாதலாலே யயனரியு மவனேவ லதிகாரத்து, வந்தமுறை தன்னிலே மன்னுவிப்பனெல்லாம் வருவிப்பன் விகாரங்கண் மருவான் வானின், முந்திரவி யொளிமுளரி யலர்வுமொன்றலர்வான் முகையாமொன் றொன்றலரு முறையினாலே. (ரு)

படைப்புநிலையவன் படைப்பாதலிற்
றுடைப்பவன் முதலெனத் தோன்றவுரைத்தது.

(இ-ள்) கந்தமலரயன்படைக்கு முலகமெல்லாங் கண்ணளித்திடும் மணம்பொருந்திய தாமரைமலரிலே யிருக்கப்பட்ட பிரமாவுலகங்களனைத்தையுஞ் சிருஷ்டிப்பன், அந்தவுலகங்களை விஷ்ணுவிரக்ஷியாநிற்பன்,

அவை யெங்கடவுடானேயந்தமுறைவழித்திடுவன்

அவர்களாற் படைத்தளிக்கப்பட்ட வுலகங்களைச் சேர வெம்முடைய கத்தாவாகிய வுருத்திரன் முடிந்துபோம்படி சங்கரிப்பன்.

ஆதலாலே

அந்தத்தொழில்களைச் சிவனப்படிச் சங்கரிக்கையாலே

அயனரியுமவனருய ரதிகாரத்துறவந்தமுறை

அந்தப் பிரமவிஷ்ணுக்களு மந்தச்சிவனுடைய மிக்கவாக்கினைவழியிலே வருகிறமுறைமையினையுடைய வதிகார கர்த்தாக்களாயிருக்கும். அப்படியாகு லந்தத் தொழில்களும் பிரமவிஷ்ணுக்களும் அநாதியேயுடையதோ வெம்முடைய கத்தாவாகிய சிவன்கொடுத்ததோ வென்னில்?

தன்றொழிலே மன்னுவிப்பன்

எம்முடைய சிவன் றனக் குண்டான தொழில்களிலே யந்தப் பிரமவிஷ்ணுக்களையு நிறுத்துவன். அவை யப்படியெம்முடைய சிவனுடைய தொழிலேயானால் அவையிற்றை யவனழிப்பானேனென்னில்?

எல்லாம் வருவிப்பன்

அப்படி யவனழித்தாலுந் தன்னுடைய கிருத்தியங்களை நடத்தவேண்டுங் காலத்தாக் கெல்லாவற்றையு மீளவுமுண்டாக்கியுங் கொள்ளுவன். அப்படியானா லொருத்த னொருதொழில் செய்யமாட்டுகிறானில்லை. பலதொழிலு மொருவன் செய்வனோ வெம்முடைய சிவன் விகாரப்படானோ வென்னில்?

விகாரங்களின் மருவான்

அப்படியெம்முடைய சிவன் பலதொழிலு நடத்தினாலு மவனுக்கு விகாரங்களுண்டாகாது. அதுவென்போலவென்னில்?

வானின் முந்திரவியெதிர்முளரியலர்வுறு மொன்றலர்வான் முகையா மொன்றொன்றுலருமுறையினுமே.

ஆகாசத்திலே தோன்றிச் செல்லுமாதித்தன்சந்நிதியிற் றாமரையானது முதிர்ச்சிக்குறை யொப்புக்கிடாகக் காரியப்படுமிடத் தொன்றலராநின்றது ஒன்றலருகைக்குப் பக்குவமாகாநின்றது ஒன்றுலராநின்றது இப்படித்தாமரை மூன்று தொழிற்பட்டு நிற்கச்செய்தே யாதித்தனுக்கு விகாரமில்லாதாற்போல. எ - று.

று-ம். இந்தச் செய்யுளுக்கிட்ட தொந்தனையிலே சிருஷ்டிக்குந் திதிக்குஞ் சங்காரத்துக்கும் பிரமா விஷ்ணு வுருத்திரனையுஞ் சொல்லியிருக்க வும்முடைய சிவனொருவனையுங் கர்த்தாவென்பானேனென்று பாஞ்சராத்திரி வினாவினானென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "உரைத்தவித் தொழில்கண்மூன்று மூவருக்குலகமோத, வரைத்தொருவனுக்கேயாக்கி வைத்ததிங்கென்னை யென்னில், விரைக்கமலத்தோன் மாலு மேவலான் மேவினோர்கள், புரைத்ததிகாரசத்தி புண்ணியநண்ணலாலே" என்று அவன வினாயதற் குத்தரமாகக் கூறியது கண்டுகொள்க.

இனி கந்தமலரயன். எ-ரு. பூவுக்குப் பெயர்கூறுமலமலரொன்று பொதுவாகச்சொல்லி யிருக்கத் தாமரைமலரொன்று பொருட்கூறியதேதென்னில் பிரமாவுக்கிருப்பிடந் தாமரைமலரொன்று நூல்களிற் சொல்லிவருகையாலே ஆசரணைபற்றி யழைத்துப் பொருட்கூறியதெனவறிக. அப்படிவருமதற்கு. பி-ம். "அலரோனெடுமாலமரர்கோன்." எ - ம். "பூ

வார்திசைமுகன்." எ-ம். முளரியான். எ-ம். தாமரையோன்.
எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

இனி யவையெங்கடவுடானே யந்தமுறைவழித்திடுவன்.
எ-கு. அவையென்ற சுட்டுக்கொண்டே அந்தத் தொழில்களுக்
குக் கத்தாவாயுள்ள பிரம விஷ்ணுக்களையு மழிப்பனென்
னவு மாமெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "இறுதியா
ங்காலந்தன்னி லொருவனே யிருவர்தாமு, முறுதியாய்நின்
றெனி லிறுதிதானுண்டாகாதா, மறுதியிலரனேயெல்லா
மழித்தலா லவனுலின்னும், பெறுதுநாமாக்கநோக்கம் பேர
திகாரணத்தாலே." எ-ம. "அழிப்பரி யேவலென்று யரிதனை
யழிக்குமன்றங், கழிப்பது தவிர்க்கமாட்டா னங்கருமழித்
தேயுண்டா, னழிப்பரியேவலென்றங் கரைந்தது மழிந்தக
ன்றே, வழித்திடு மரனேயாக்க நோக்குமாக்குவானே."
எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

இனி அயனரியு மவனருய ரதிகாரத்து வந்தமுறை.
எ-ம் எல்லாம் வருவிப்பன். எ-ம். வருகையாலே யந்தந்
தத்தொழில்களை யன்றியே யந்தந்தத்தொழில்களுக்குக் கத்
தாவாயுள்ள பிரம விஷ்ணுக்களையுஞ் சிவனே யுண்டாக்குவ
னென்னவு மாமெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "தே
வர்கள் சகலம்போலச் சிலர்வயிற்றுதித்தமாலைத், தேவெ
ன்றே வையஞ்சாக்கச் சுவேச்சையாற் சநித்தானென்பீர்,
பூவன்பின் படைக்கமாட்டா தானடி போற்றியேதக், சோ
மந்த முகத்திற் றோன்றிச் சிருட்டியைக் கொடுத்தல்கூறு
ம்." எ-று. கண்டுகொள்க.

இனி யெங்கடவுடா னென்றதுகொண்டே சிவனைத்
தானென்றதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "நாரணா
னயனையீன்று மயனுநாரணனையீன்றுங், காரணமொருவரு

க்கங் கொருவர்தா மிருவருக்கும், வாரணமுரித்தவள்ளல் காரணமெனலுமன்றே, வாரண முரைக்கும்பக்கத் தவர்களு மறைந்தாரன்றே." எ-று. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது பிரம விஷ்ணுக்களுடைய சிருஷ்டியையுந் திதியையுஞ் சிவனே யழித்துப்போடுவனென்று மீளவுமுண்டாமிடத்துச் சிவனே யுண்டாக்குவனென்றும்வரு முறைமையை யறிவித்தது. (௫)

---

வேறு—இது பாஞ்சராத்திரியை மறுத்துச் சங்காரகர்த்தாவே படைப்புமுதலியவற்றிற்குங் கர்த்தாவென்பதூஉ மவனிருவிகாரியாய் நின்றே செய்வனென்பதூஉ முணர்த்திற்று.

உலகமெல்லாங் கந்தமல ரயன்படைக்கும் - பிரபஞ்சமெல்லாம் பிரமதேவன் படைப்பன்,—கண்ண னளித்திடும்- அவனாற் படைக்கப்பட்ட பிரபஞ்சத்தைப் புருஷோத்தம னிரட்சிப்பன்,—அவை யெங்கடவுடானே யந்தமுறவழித்திடுவன் - அவையிற்றை யெம்முடைய சுவாமி தானே தன்னை யொழிய மற்றெல்லா மறுதிபொருந்தும்படி யழிப்பன்,—ஆதலாலே யயனரியு மவனதுய ரதிகாரத்து-ஆகையாலே பிரமவிஷ்ணுக்களு மவனுடைய மேலானவதிகாரத்திலே பொருந்துவார்கள்,—வந்தமுறை தன்றொழிலே மன்னுவிப்பன்- இப்படிவந்த முறைமைகளெல்லாந் தன்னுடைய தொழிலாகவே நிலைபொருந்துவன்,—எல்லாம் வருவிப்பன் - மீண்டு மொடுங்கின முறைமையிலே யுருவமுமுண்டாக்கா நிற்பன்,- விகாரங்கள் மருவான - இப்படிச்செய்கையிலுந் தானொருவிகாரங்கள்பொருந்தான,—எந்தப்படியெனின்? வானின் முந்திரவியெதிர்முளரியலர்வுறுமொன்று - வானிடத் தியங்குமாதித்தன் சந்நிதியிலே நேர்பட்ட தாமரையொன்றலராநிற்கு

ம்,—அலர்வானமுகையாமொன்று-அலர்தற்குப் பக்குவமாக முகுளிதமாகா நிற்குமொன்று,—ஒன்றுமாரும்-ஒன்றலராநிற்கும்,—முறையினும்-இப்படியிவை யாதித்தனாற் காரியப்பட்டுவருகையினு மாதித்தன் கருத்தி லிவையில்லாததுபோலப் பிரபஞ்சஞ் சிவனாற்காரியப்பட்டு வருகையிலுஞ் சிவன்கருத்தில் விகாரமில்லாமை யிந்தமுறைமைபோலவாம். எ - று.

இன் உவமையுருபு. பொருந்துமென்னுந்தொழி லாகவெனவும் வருவிக்க. மூன்று சந்நிதி. வானிடத்தெல்லாக் கிரகங்களினு முந்திரவியென்றுமாம்.

---

அப்படி யிந்தத்தொழில்களை யும்முடையகர்த்தா வென்னபயனைக் கருதிச் செய்கின்றானென்ற புத்தனைநோக்கி மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

ஏற்றவினை யரனருளின் றிருவிளையாட்டாக வி யம்புவர்க ளணுக்களிடர்க் கடனின்று மெடுத்தே, யூ ற்றமிக வருள்புரிதலேதுவாக வுரைசெய்வ ரொடுக்க மிளைப் பொழித்தன் மற்றைத், தோற்றமலபாகம்வர க் காத்தல்போகந் துய்ப்பித்த றிரோதாயி நிறுத்தலா கும், போற்றலரு மருளருளை யன்றிமற்றுப் புகன்ற வையு மருளொழியப் புகலொணாதே.

மன்னுயிர்க்கிரங்கி வகுத்தவைந்தொழிலு
முன்னவனருளெனு முறைமைமொழிந்தது.

| | |
|---|---|
| இ-ள். ஏற்ற வினை யரனரு ளின் றிருவிளை யாட்டாக விய ம்புவர்கள் | இங்ஙனம் பொருந்தப்பட்ட தொழில்க ள் தம்பிரானா ரனுக்கிரகத்தாலே செய்யுந் திருவிளையாட்டென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். அப்படியானாலும்மு டைய கர்த்தாவானவன் பாலரைப்போலப் |

பயனற்றகாரியஞ் செய்வானேனென்னில்? அப்படியல்ல எம்முடைய கர்த்தாவானவன் அந்தத்தொழில்களைப் பாராமலெளிதாகச்செய்கையினாலே விளையாட்டென்றதாம். அவனவையிற்றை யேதுகாரியமாகச் செய்கிறானென்னில்

அணுக்களிடர்க் கடனின்று மெடுத்தே யூற்றமிக வருள்புரித லேதுவாகவுரைசெய்வர்

ஆன்மாக்களைத் துக்கசாகரமாகிய ஜநநக்கடலிலேநின்றுங் கரையேற்றித் தனது நிலைபேறுயுள்ள திருவடியிலே கூட்டிக் கொள்ளுகை காரணமாகவென்று சொல்லுவார்களறிவாலுயர்ந்த பெரியோர்கள். அப்படி யுர்முடையகர்த்தா வனுக்கிரகஞ் செய்கிறவனேயானால் சங்கரிப்பானேனென்னில்

ஒடுக்க மிளைப்பொழித்தல்

அப்படிச் சங்கரிக்கிறது ஜன்மத்தினாலலைப்புண்ணு மான்மாக்களை யிளைப்பாற்றுகை. அப்படி யிளைப்பாறிக்கிடவாமல் மீளவுந் தோற்றுவிப்பானேனென்னில்

மற்றைத்தோற்றமல பாகம் வர

மீளவுஞ் சிருஷ்டிக்கிறது மலநீங்காதபடியாலே அந்த மலநீங்குகைப்பொருட்டாகத் தனுகரண புவனபோகங்களோடு கூட்டுகிறதாயிருக்கும். அப்படிச சிருஷ்டித்தபோதே யந்தமலத்தைப் பாகம்வருத்தித் தன்னிடத்திலே கூட்டிக்கொள்ளாமல் நெடுங்காலந் திதியென்கிறதொழிலிலே நிறுத்துவானேனென்னில்

காத்தல் போகந் துய்ப்பித்தல்

அப்படி நெடுங்காலந் திதியென்கிற தொழிலிலே நிறுத்தினது ஆன்மாக்களுக்குக் கன்மங்கள் மிகுதியாயிருக்கையினாலே யந்தக்கன்மங்களைப் புசிப்பித் தியல்பிலே மலபாகம்வருத்துகிறதாயிருக்கும். அப்படிச் செய்கிற கத்தா மறைப்பானேனென்னில்

திரோதாயி நிறுத்தலாகும்

திரோதமாகிய மறைப்பாவது அந்தப் போகங்களைப் புசிப்பித்துக் கன்மங்களைத் தொலைவிக்கத்தக்கதாக அளவுகளிலே நிறுத்தினதாயிருக்கும். அப்படியானா லநுக்கிரகமேதென்னில்

போற்றலரு மருளாருளே

சொல்லுதற்கரிய அநுக்கிரகமாவது ஆன்மாக்களைத் தனது திருவடியிலே கூட்டிக்கொள்ளுவதா னநுக்கிரகமாயிருக்கும். இதுவொழிந்து முன்சொல்லப்பட்ட நாலுதொழிலுமேதென்னில்

அன்றி மற்றுப்புகன்றவையு மருளொழியப் புகலொணாதே.

இவ்வநுக்கிரகமன்றி முன்சொல்லப்பட்ட சிருஷ்டிதிதிசங்காரந் திரோபாவமென்னப்பட்ட நாலுந் தனதுதிருவடியிலே கூட்டிக்கொள்ளுதலை நிமித்தமாக மலபாகம்வருத்துகிற வநுக்கிரகமொழிய மற்றொன்றுக்குச் சொல்லவொண்ணாது.

எ - று.

று - ம். அரனருளின் றிருவிளையாட்டு என்றதை உம்முடையகர்த்தா பாலரைப்போலப் பயனற்ற காரியஞ்செய்வானென்று புத்தன்சொன்னா னென்றதற்கு. பி-ம். சித்

திப்பாரில். "பெறுவதிங் கென்படைத்துப் பெற்றது விளையாட்டென்னிற், சிறுமழவிறையதாகுஞ் செய்திடுங் கன்மத்தென்னி, லுறும்பெறுங்கனமஞ் செய்வோர் முனபுளராவருண்மை, யறிவுறின் ஞாலமெல்லா மநாதியென் றறிந்திடாயே" எ-து. அவன் மதத்திலே கண்டுகொள்க.

இனியிந்தத் தொழில்களைப் பாராமற்செய்ததுகொண்டே யவனுக்கிது விளையாட்டாமென் றுத்தரமாகக் கூறினத்துக்கு பி-ம். திருவாசகத்தில் "ஆர்த்தபிறவித் துயர்கெட நாமார்த்தாடுந், தீர்த்தனற்றில்லைச் சிற்றம்பலத்தே தீயாடுங், கூத்தனிவ்வானுங் குவலயமுமெல்லோமுங், காத்தும்படைத்துங் கரந்தும்விளையாடி, வார்த்தையும்பேசி" எ-ம். "ஐயா நீயாட்கொண்டருளும் விளையாட்டில்". எ-ம், வருமேதுக்களைக் கண்டுகொள்க.

அன்றியும் சிவனே பஞ்சகிருத்தியஞ் செய்வனென்பதற்கு. பி-ம். திருவாசகத்தில். "போற்றி யெல்லாவுயிர்க்குந் தோற்றமாம் பொற்பாதம்-போற்றி யெல்லாவுயிர்க்கும்போகமாம் பூங்கழல்கள்-போற்றியெல்லாவுயிர்க்கு மீறாமிணையடிகள் -போற்றிமானான்முகனுங் காணாதபுண்டரிகம்-போற்றியாமுய்யவாட் கொண்டருளும் பொன்மலர்கள்" எ-து. கண்டுகொள்க. இதனுள்தோற்றமாம் பொற்பாதம். எ-து. சிருஷ்டியெனவறிக. போகமாம் பூங்கழல்கள். எ-து. திதியெனவறிக. ஈறாமிணையடிகள். எ-து. சங்காரமெனவறிக. மால்நான்முகனுங்காணாத புண்டரிகம். எ-து. திரோபாவமெனவறிக யாமுய்ய வாட்கொண்டருளும் பொன்மலர்கள். எ-து. அநுக்கிரகமெனவறிக. ஆக ஐந்துகிருத்தியத்துக்குமிங்ஙனங் கண்டுகொள்க.

அன்றியுங் கர்த்தா விந்தத்தொழில்களிலே யான்மாக்களைக் கூட்டிப் பஞ்சகிருத்தியப் படுத்துமிடத்துப் பாராம

வெளிதாக விளையாட்டாகச் செய்வனென்று மப்படிச்செய்யவே ஆன்மாக்களுக்குண்டான மலபாகமும் வந்து திருவடிக்கு முரித்தாவார்க ளென்பதற்கு. பி - ம். சித்தியாரில். "சொன்னவித் தொழில்களென்ன காரணந் தோற்றவென்னின், முன்னவன் விளையாட்டென்று மொழிதலு மாமுயிர்க்கு, மன்னியபுத்திமுத்தி வழங்கவு மருளான்முன்னே, துன்னியமலங்களெல்லாந் துடைப்பதுஞ் சொல்லலாமே" எ-து. கண்டுகொள்க.

"அணுக்களிடர்க் கடனின்று மெடுத்தே யூற்றமிக வருள்புரித லேதுவாக வுரைசெய்யர்." எ - கு. ஆன்மாக்களை ஜநநக்கடலிலே நின்றுங் கரையேற்றித் தனது திருவடியிலே கூட்டிக்கொள்ளுகை நிமித்தமாகக் கர்த்தா விந்தத்தொழில்களைச் செய்வனென்று புத்தனைநோக்கிச் சொன்னதற்கு. பி-ம். சித்தியாரில். "அநாதிமுத்த னாய்ப்பரனா யசலனா யெல்லா வறிவுதொழி லனுக்கிரக முடையவனாய்க்கன்ம, றாறு இருமற்றொத்தவிடத்தே சத்திநிபாத நுழைவித்து மலங்களெலா நுங்கநோக்கி, மருதிகரணங்களெலா மடக்கித்தன்னை வழிபடுநல் லறிவருளி மாக்கருணைச் சையா, லிருது பிறப்பினின்று மெடுத்துமாறா வின்பமுத்திக் கேகைப்பனெங்கண்முத்தி யிதுவே" எ - து. அவன்மறுப்பிலே கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது உம்முடையகர்த்தா விந்தத்தொழில்களென்னபயனைக் கருதிச்செய்கிறானென்ற புத்தனைநோக்கி யான்மாக்களை மலபாகம்வருத்தித் தனது திருவடியிலே கூட்டிக்கொள்ளுகைப் பொருட்டாக வென்றும் அப்படிச் செய்யுமிடத்துப் பாரமலெளிதாக விளையாட்டாகச் செய்வனென்றும் வருமுறைமையை யறிவித்தது. (௬)

---

வேறு—இது தம்மிறைவ னெந்தப்பயன் குறித்துச் செய்கின்றானென்னும் புத்தனைக்குறித்துக் கிரீடபிரமவாதி மாயாவாதிகள் கருத்தையு மெடுத்துக்காட்டி யுத்தர முணர்த்திற்று.

அரனருளி னேற்றவினை-பரமேசுரன் காருண்யத்தினாலே மேற்கொண்ட விவற்றை,—திருவிளையாட்டாக வியம்புவர்கள்-கிரீடப்பிரமவாதி மாயாவாதி முதலான சித்தாந்திகள் பிரமத்தின் விளையாட்டென்று சொல்லுவார்கள்,—அணுக்களிடர்க் கடலினின்று மெடுத்தே-சைவசித்தாந்திகள் ஆத்மாக்களைத் துன்பத்திற் கேதுவான பிறவிக்கடலினின்று மெடுத்து,—ஊற்றமிக வருள்புரித லேதுவாக வுரைசெய்வர்-நிலைபெற மிகவுண்டாம்படி யருளைக்கொடுக்கையே காரணமாகச் சொல்லாநிற்பர்கள். அஃதெப்படியென்னில்,—ஒடுக்குமிளைப் பொழித்தல்-சங்கார மாத்மாக்களாயிளைப்பாற்றுவிக்கையா யிருக்கும்,—மற்றைத் தோற்றமல பாகம்வர-மீண்டுபடைத்தல் அவ்வாத்மாக்களைப்பற்றிய மலத்துக்குப் பக்குவமுண்டாக வேண்டியாயிருக்கும்,—காத்தல் போகந்துயப்பித்தல்-இரட்சிக்கிறது கன்மந்தொலைத்தல் காரணமாகப் போகத்தை யேருமற்குறையாமற் புசிப்பிக்கையாயிருக்கும்,-திரோதாயி நிறுத்தலாகும்-மறைப்பை யுண்டாக்குதல் புசிக்குமளவு மவ்விடயங்களிலே சுவைபிறக்கும்படி நிறுத்துகையாயிருக்கும்,—போற்றலரு மருளருளே-புகழ்தற்கரிய வநுக்கிரக மனுக்கிரகமே,—அன்றிமற்றுப் புகன்றவையு மருளொழியப் புகலொணாதே - இதுவன்றி முன்சொல்லப்பட்ட நான்கு மனுக்கிரகமென்று சொல்வதன்றி விளையாட்டென்று சொல்லவொண்ணா. எ - று.

அணுக்களெனவிரண்டாமுருபுவிரிக்க. எழுத்தேயென்னு மேகாரம் அருள்புரிதனமே லேற்றப்பட்டு பிரிநிலையாய் நின்றது. அருளே ஏகாரந்தேற்றம். மற்று வினைமாற்று.

☞ முதற்சூத்திரமாகிய பதியிலக்கண முற்றும்.

---

இங்ஙன முதற்சூத்திரமாகிய பதியிலக்கண மருளிச்செய்து மேலிரண்டாஞ் சூத்திரமாகிய பசுவிலக்கணமும் பாசவிலக்கணமு மருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

இதற்கு வழியேதென்னில் முதற்சூத்திரமாகிய பதியிலக்கணத்தில் முதல்விருத்தமாகிய "பலகலை" என்றசெய்யுளில் "பசுபாசந் தெரித்தல்" என்றபதத்துக்குப் பொருள் பதியையும் பசுவையும் பாசத்தையும் பிரித்துச்சொல்லியறிகிறதே பயனென்றமையால் பதியிலக்கணமாகிய "ஏற்றவிவை" என்றசெய்யுள் முடிவாகிய விருத்தமாறுக்கு மேலாகப் பசுவிலக்கணமும் பாசவிலக்கணமுங் கூறுமதே வழியாகையால் சிவன் ஆன்மாக்களை மாயாகன்மங்களோடுங் கூட்டிக் காரியப்படுத்தி மலபாகம்வருத்தி முத்திக் கேதுவாக்குவ னென்னப்பட்ட பசுவிலக்கணமும் பாசவிலக்கணமுமாகிய "எண்ணரிதாய்" என்ற விருத்தந்தொடங்கி "அரிவையரின் புறுமுத்தி" என்னும் விருத்தமுடிவாகிய செய்யுள் முப்பத்திரண்டு மிரண்டாஞ்சூத்திரமாக வகுத்ததெனவறிக.

இந்தச் செய்யுட்கள் முப்பத்திரண்டு மிரண்டாஞ்சூத்திரமாக நின்றதற்கு வழியேதென்னில் சிவஞானபோதத்தினுஞ் சிவஞானசித்தியாரினும் இரண்டாஞ் சூத்திரத்துக் குண்டான கருத்து இந்தச்செய்யுட்களினும் வருகையாலிவையிற்றையும் இரண்டாஞ்சூத்திரமாக வகுத்ததெனவறிக. அ.

துவெங்ஙனேயெனின் சிவஞானபோதத்தி லிரண்டாஞ்சூத்திரமாகிய "அவையேதானே யாயிருவினையிற், போக்குவரவு புரியவாணையி, னீக்கமின்றி நிற்குமன்றே." எ-ம். சிவஞானசித்தியாரி லிரண்டாஞ் சூத்திரமாகிய உலகெலா மாகிவேறு முடனுமா யொளியாயோங்கி, யலகிலா வுயிர்கள்கன்மத் தாணையி னமர்ந்துசெல்லத், தலைவனாயிவற்றின் றன்மைதனக்கெய்த லின்றித்தானே, நிலவுசீரமல னாகி நின்றனனீங்காதெங்கும்." எ-ம். இரண்டு செய்யுட்களினும் வருங்கருத்து இந்நூலினும் "எண்ணரிதாய்" என்னும் விருத்தம் வருகையாலும் சித்தியாரில் இரண்டாஞ் சூத்திரத்தில் மலமாயைகன்மங்களின் காரணகாரியத்துக்கு வரும் விருத்தங்களில். "ஒன்றதா யநேகசத்தி யுடையதாய்." எ-ம். ஆணவமலத்திற்குச் சொல்லும் விருத்தத்தின் கருவைப்பற்றி இந்நூலினும் "ஏகமாய்த்தங்கால வெல்லைகளின் மீளு மெண்ணரிய சத்தியதாய்." எ-ம். இந்த ஆணவமலத்தைத் திரோதாயி பாகம்வருத்துகைக்கு. "ஏயுமும் மலங்கடத்தந் தொழிலினை யியாற்றவேவுந், தூயவன் றனதோர்சத்தி திரோதான கரியதென்றும்." வரும் விருத்தத்திற் கருவைப்பற்றி இந்நூலினும் "பாகமாம்வகைநின்று திரோதானசத்தி பண்ணுதலான் மலமெனவும்பகர்வர்." எ-ம். வருகையாலும், இனி யசுத்தமாயா காரணத்துக்குச் சொல்லப்பட்ட "நித்தமாயருவாய்" என்னும் விருத்தத்தின் கருவைப்பற்றி இந்நூலினும் "உருவாதி சகலிதமாய்" என்னும் விருத்தம் வருகையாலும் இங்ஙனஞ் சொல்லப்பட்ட மாயையென்றொரு முதலில்லையென்றுஞ் சிவன்வேண்டுவதில்லை கன்மங்களான யான்மாக்களைக் காரியப்படுத்துமென்றுஞ் சொல்லுகிற சமயிகளை மறுத்து மாயையுண்டென்று மிந்தமாயையுங் கன்மமும் ஜடமா

கையாற்றானே காரியப்படமாட்டாது இவையிற்றைக் கூட்டிக் காரியப்படுத்துகைக் கொருகர்த்தா வுண்டென்றும் வருங்கருத்தாகிய "உலகுடல் கரணங்கால முறுபலநியதிசெய்தி, பலவினை கொண்டுகன்மம் பண்ணுவதன்பதாறு, விலவிடா திவைதாஞ்சென்று நினைந்துயிர் நிறுத்திக்கொள்ளா, நலகிலாவறிவலானை யணைத்திடு மருளினாலே." என்னும் விருத்தத்தின் கருத்தைப்பற்றி இந்நூலினும் "எனைய திதுவெனில்". எ-ம். "படைத்ததொருபடி". எ-ம். "அல்லலன்மிக வுயிர்க்கிவைதான்." எ-ம். வரும்விருத்தங்கள் மூன்றும் வருகையாலும், அன்றியும் ஆன்மாக்களுக்கு மூன்றுமலமு மநாதியென்பதற்குச் சிவஞானபோதத்தி லிரண்டாஞ் சூத்திரத்து வெண்பாவில் "நெல்லிற்குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ், சொல்லிற்புதிதன்று தொன்மையே." எ-ம். சித்தியாரினும். "மும்மலநெல்லினுக்கு முளையொடு தவிடுமிப்போல், மம்மர்செய் தனுவினுண்மை வடிவினை மறைத்துநின்று" எனனும் இவ்விரண்டினுள்ளு முள்ள கருத்தைப்பற்றி இந்நூலின் முற்கூறிய "அல்லலன்மிக" என்னுஞ் செய்யுண் முடியிலே நெல்லின்முளை தவிடுமிப்போ லநாதியாக" எ-ம். வருகையாலும், முற்கூறிய அசுத்தமாயையின் காரியமாயுள்ள கலையாதித்தத்துவங்களின் றோற்றங்களையுங் காரியப்படுகையுஞ் சொல்லப்பட்ட "மாயையிற் காலமோடு" என்னும் விருத்தந் தொடங்கி "குறிகொள்வச் சிரத்திரோடு" என்னும் விருத்த முடிவாகிய செய்யுள் பதினைந்தினு முண்டாகிய தோற்றத்தின கருத்தைப்பற்றி இந்நூலினும் "அருத்தியிகுங்கலை காலம்" "மன்னிய கன்மேந்திரியம்" என்னும் விருத்தமிரண்டும் வருகையாலும் கன்மத்தின் காரணகாரியத்துக்கு "தன்மமோடதன்மமாகி." எ-ம். "இருவினையநாதி." எ-ம். "உடற்செயல்கன்மம்."; எ-ம். "மேலைக்குவித்துமாகி." எ-ம். "முற்செய

ல்விதியை.” எ-ம். வரும்விருத்தங்களின் கருவைப்பற்றி இந் நூலினும் “நண்ணியிடும்.” எ-ம். “கன்மமேநி.” எ-ம். “மேலைக்குவருவினை.” எ-ம். “உற்றதொழில்.” எ-ம். வரும்விருத்தநாலும் வருகையாலும் இங்ஙனஞ் சொல்லப்பட்ட மலங்களின் றொகையாகிய “மலமாயைகன்ம மாயேயந் திரோதாயி மன்னிச் சலமாரும் பிறப்பிறப்பிற்றங்கி” என்னும் விருத்தத்தின் கருவைப்பற்றி இந்நூலினும் “மோகமிகவுயிர்கடொறு மூட னாய்நிற்கும்” என்னும் விருத்தம் வருகையாலும் இங்ஙனஞ் சொல்லப்பட்ட மலமைந்தினுள்ளும் ஆணவமலம் ஆன்மபோதத்தை மறைக்குமென்றும் அப்படி யாணவமலமென்ப தொன்றில்லை மாயாசரீரங்களே யான்மபோதத்தை மறைக்குமென்றும் மாயாகாரியமான கலையாதி தத்துவங்களினாலே சிவன் ஆணவமலத்தைப் பாகமாக்குவ னென்றும் வருங்கருத்தாகிய “போதகாரியமறைத்து நின்றது புகல்மலங்காண்.” எ-ம் “மலமெனவே றொன்றில்லை மாயாகாரியமதென்னில்.” எ-ம் “மாயையே யான்மஞானக் கிரியையை மறைத்துநிற்கும்.” எ-ம் “பருதியை முகின்மறைப்பப் பாயொளி பதுங்கினாற்போல்.” எ-ம். “எல்லாமாய்த் தத்துவங்களிசைந்ததெனணுவுக்கு.” எ-ம். “எழுமுடல் கரணமாதி” என்னும் விருத்தத்தில் “மாயைகொடு மலமொழிப்பன் மூன்றோன்.” எ-ம். வரும் விருத்தங்களின் கருவைப்பற்றி இந் நூலினும் “ஓங்கிவரும் பலவுயிர்கள்” என்னும் விருத்தந் தொடங்கி “புகலு மலமொழிதற்குக் கலாதி முதன்மாயை பொருந்திவிடு மரனருளால்.” என்னும் விருத்த முடிவாகிய செய்யுளீறும் வருகையாலும் அந்தக்கலையாதி தத்துவங்களோடு மான்மாக்கள் கூடிப் பிரபஞ்ச காரியப்படுகைக்கு முற்கூறிய “மாயையிற் காலமோடு” என்னும் விருத்தந்தொடங்கி “இரக்தரமாகி வான்முன்” என்னும் விருத்தமுடிவா

கிய செய்யுள் பதின்மூன்றினுட் டத்துவங்கள் காரியப்படுங்
கருத்தைப்பற்றி இந்நூலினும் "இத்தகைமை யிறையருளா
ல்" என்னும் விருத்தத்தில் "சுத்தமாயை வைத்தகலைதான்
மூலமலஞ் சிறிதே நீக்கி" என்னும் பதந்தொடங்கி "முந்திய
வைம் பூதங்கள் வாளுதியாக" என்னும் விருத்தமுடிவாகிய
செய்யுளேழும் வருகையாலும் அன்றியும் தத்துவ முப்பத்
தாறின் றொகைக்கு மூவகைத் தத்துவங்களுக்கும் ஆன்மாக்
கள் யோனிவிட்டு யோனிபற்றி ஜநநமரணப்படுகிறதற்கும்
நால்வகைத் தோற்றத்துக்கு மெண்பத்துநான்கு நூறாயிர
யோனிபேதத் தொகைக்கும் சித்தியாரில் வரும் விருத்தங்க
ளாகிய 'சுத்தத்துவங்க ளென்று முன்னமே சொன்ன
வைந்து, மித்தகைமையி னியம்பு மிவை முப்பத்தொன்று
மாகத் தத்துவமுப்பதாறும்." எ-ம். 'ஐந்து சுத்தத்தினகி
ழே ழசுத்தா சுத்தமசுத்தந், தந்திடும்புமான்கி ழெண்மூன்
றுயதத்துவஞ் சீவர்க்கும்." எ-ம். சிவஞானபோதத்தி லிர
ண்டாஞ்சூத்திரத்து வெண்பாவில் 'அரவுதன்றோலுரிவு மக்
கனவும்வேறு, பரகாயம்போய்வருமப்பண்பும்." எ-ம். சித்
தியாரில். 'பன்னக மண்டசங்கள் பரகாயந் தன்னிற்பாய்
வோர், துன்னுதோல் முட்டையாக்கை துறந்துசெல் வது
வேபோல." எ-ம். "அண்டசஞ் சுவேதசங்க ளுற்பீசஞ் சரா
யுசத்தோ, டெண்டருநா லெண்பத்து நான்குநூறாயிரத்தா,
லுண்பெய்யோனி". எ-ம். வரும் விருத்தங்களின் கருவைப்
பற்றி இந்நூலினும் "இந்நிலையிலைந்து சுத்தம்" எ-ம். தோற்
றியிடுமண்டசங்கள்." எ-ம். விருத்தமிரண்டும் வருகையா
லும் அன்றியும் இங்ஙன மான்மாக்கள் பிரபஞ்சகாரியப்பட்டு
மலபாகம்வந்து முத்திக்கேதுவாவார்க ளென்பதற்கு சித்தி
யாரில். 'அரன்விதி யருளதென்றே யறைந்தன மதுவுமுன்
னே, தரைநரகந் துறக்கந் தனுகரணாதியெல்லாம், வருவதுஞ்

செய்தநாதி மலங்களெம் மருந்தாற்றீர்த்துப், பாகதி யது வுந்தந்து பாதபங்கயமுஞ் சூட்டும்.' எ-ம். வரும்விருத்தத்தின் கருவைப் பற்றி இந்நூலினும் 'இனையபலபிறவிகளின்.' எ-ம். 'நாடியசத்திநிபாதம்.' எ-ம். 'அரிவையரின்புறுமுத்தி.' எ-ம். விருத்தமூன்றும் வருகையாலும் 'எண்ணரிதாய்' என்ற விருத்தந்தொடங்கி 'அரிவையரின்புறுமுத்தி' என்னும் விருத்தமுடிவாகிய செய்யுட்களித்தனைக்கு முன்னுள்ள நூல்களிலிரண்டாஞ் சூத்திரத்திற் செய்யுட்களேனுங்காட்டி வருகையால் இவையுயிரண்டாஞ் சூத்திரமாக நின்றதெனவறிக. அப்படியானு லிந்நூலில் இரண்டாஞ் சூத்திரமாக வகுத்தசெய்யுள் முப்பத்திரண்டினுள்ளுஞ் சுத்தமாயா காரண காரியத்துக்கு வகுத்த 'உன்னலரும் பரசிவன்றனருளாலேநாத முதிக்குமிகுங் குடிலைதனில்.' எ-ம். வாக்குகளுதுக்கும். 'வந்தடைந்து பின்னமாய்' எ-ம். வரும்விருத்தங்களிரண்டுக்கும் ஏதுக்காட்டாததேதென்னி லந்தச் சுத்தமாயையின் பிரசங்கஞ் சித்தியாரில் முதற்சூத்திரத்திலே வருகையாலே யதற்கு யேதுக்காட்டினதில்லை யெனவறிக. அப்படிச் சுத்தமாயையைச் சித்தியாரில் முதற் சூத்திரத்திலே சொல்லியிருக்க இந்நூலிரண்டாஞ் சூத்திரத்திலே கூட்டுகைக்கு வழியேதென்னி லந்தச் சுத்தமாயையானது சிவன் கொள்ளப்பட்ட திருமேனிக் குடம்பாய்நிற்கையாலு மலங்களொடுங்கூடி வருகையாலும் சித்தியார் செய்தருளினவர் அந்நூலின் முதற்சூத்திரம் பதியிலக்கண மாகையா லந்தப்பதியாகிய சிவனுக்குச் சுத்தமாயை திருமேனியென்னுங் கருத்தைப்பற்றி 'வித்தையோடீசர்சாதாக் கியஞ்சத்தி சிவங்களைந்துஞ், சுத்தத்துவஞ்சிவன்றன் சுதந்தரவடிவமாகும்.' எ-ம். சுத்தமாயையை முதற் சூத்திரத்திலே கூட்டியருளிச் செய்தாரெனவறிக. இந்தச் சிவப்பிரகாசஞ் செய்தருளின

வர் சுத்தமாயையை மலமாயை கன்மங்களை வகுத்தருளிச் செய்து சொல்லுகிற வொழுங்கிலே கூட்டி யருளிச்செய்கையினாலும் அன்றியு மலத்தொகைக் கருளிச்செய்த விருத்தமாகிய 'மோகமிக வுயிர்கடோறும்' என்னும் விருத்தத்தின் முடிவிலே 'தேகமுறு கரணமொடு புவனபோகச் செயலாருமாமாயைத் திரட்சியொன்றென், றுகமல மைந்தென்பர்'. எ-ம். வருகையாலும் இரண்டாஞ் சூத்திரத்தின் கருவைப் பற்றிச் சிவனான்மாக்களை மாயாகன்மங்களோடுங் கூட்டிக் காரியப்படுத்தி மலபாகம் வருத்து முறைமையைச் சொல்லுகையாலு மிந்தச் சுத்தமாயை மலத்தோடுங் கூடிவருகையாலிதனை யிரண்டாஞ் சூத்திரத்திலே கூட்டப்பட்டதெனவறிக. அப்படிச் சுத்தமாயையை மலத்தோடுங் கூட்டுகைக்கு அநுபோகமேதென்னில் முத்தியைப்பெறு மான்மாக்களுக்குத் தத்துவ முப்பத்தாறு நீங்கியே முத்தியென்னும் விதியைப்பற்றித் தத்துவ முப்பத்தாறினுள் சுத்த தத்துவங்களும் கூடிவருகையா லவையு நீங்கியே முத்தியைப் பெறவேண்டுமென்பதைப்பற்றி யப்படி வைக்கப்பட்டதெனவறிக. அப்படியானால் இந்நூல் சித்தியாரைப் பின்சென்ற நூலாயிருக்கச் சுத்தமாயையைச் சிவனுக்குத் திருமேனியென்று அந்நூல் முதற் சூத்திரத்திலே சொல்லியிருக்க அதனை யிந்நூலின் மலத்தோடுங் கூட்டி வேற்றுமைகூறுதற்கு விதியேதென்னில் சித்தியார் வழிநூலாகையாலு மிந்நூல் சார்புநூலாகையாலும் "இருவர்நூற்கு மொருசிறைதொடங்கித் திரிபுவேறுடையது புடைநூலாகும்" என்பதைப்பற்றி யப்படிவேற்றுமை கூறினதெனவறிக. ஆக விங்ஙனங் கூறிவந்தவகைகளால் "எண்ணரிதாய்" என்னும் விருத்தந்தொடங்கி "அரிவையரின் புறுமுத்தி" என்னும் விருத்தமுடிவாகிய செய்யுள் முப்பத்திரண்டு மிரண்டாஞ்சூத்திரமாக நிற்குமென்பதை யநுபவத்தாற்கண்டுகொள்க.

இங்ஙன மிரண்டாஞ் சூத்திரமாக வகுத்த செய்யுள் முப்பத்திரண்டினுள்ளு முதல் விருத்தமாகிய "எண்ணரிதாய் நித்தமாய்" என்னும் விருத்தஞ் சிவஞானபோதத்தி லிரண்டாஞ் சூத்திரமாகிய "அவையேதானே" என்ற முதற்செய்யுளின் கருத்தைப் பற்றி நிற்குமேயானால் அந்நூலில் இந்தச்சூத்திரத்தில் வருஞ்செய்யுட்களின் கருத்து அந்தச் சூத்திரத்துக்கு அதிகாரமாகிய முதற்செய்யுளிலே நின்றாற்போல் இந்நூலினு மிங்ஙன மிரண்டாஞ் சூத்திரமாக வகுத்த செய்யுட்களில்வருங்கருத்து "எண்ணரிதாய்" என்னும் விருத்தமாகிய முதற்செய்யுளிலே வருமுறைமை யெங்ஙனேயென்னில் அஃதாவது "எண்ணரிதாய் நித்தமாய்" என்றதற்குமேலாக "இருண்மலத்துளழுந்தி" என்றது ஆன்மாக்களுக்கு ஆணவமல மறைப்புக்குச் சொன்ன "ஏகமாய்" என்னும் விருத்தம் வகுத்தசெய்யுள் முப்பத்திரண்டினுள்ளு முதல்விருத்தமாகிய "எண்ணரிதாய் நித்தமாய்" என்னும் விருத்தம் சிவஞானபோதத்தி லிரண்டாஞ் சூத்திரமாகியதின் கருவைப்பற்றி நிற்கையாலும் "இருவினையின் றன்மைகளுக் கீடானவாக்கை யண்ணலருளானண்ணி" எ-து. சிவனருளாலே யான்மாக்கள் மாயாகன்மங்களோடுங் கூடுவார்களென்பதற்குச்சொன்ன "உன்னலரும் பரசிவன்றனருளாலே" என்னும் விருத்தந்தொடங்கி "மோகமிக" என்னும் விருத்தமுடிவாகிய செய்யுட்களின் கருவைப்பற்றிநிற்கையாலும் "அவையவராயதனா லங்கினிகழ்போகங்க ளருந்துமாற்றாற் புண்ணியபாவம் புரிந்து போக்குவரவுடைத்தாய்." எ-து. ஆன்மாக்கள் கேவலசகலப்பட்டும் யோனிவிட் டியோனி பற்றி ஜநநமரணப்பட்டும் வருவார்களென்பதற்குச் சொன்ன "ஓங்கிவரும்பலவுயிர்கள்" என்னும் விருத்தந்தொடங்கி "இனையபலபிறவிகள்" என்னும் விருத்தமுடிவாகிய செய்யுட்களின் கருவைப்பற்றி நிற்கையாலும் "புணருமிருண் மலபாகம் பொருந்தியக்காலருளா லுண்ணிலவு மொளியதனா லிருளகற்றிப்பாத

முற்றிடு நற்பசுவர்க்கம்." எ-து. ஆன்மாக்கள் மலபாகம் வந்து திருவருளுண்டாய் முத்திக்கேதுவாவார்க ளென்பதற்குச் சொன்ன "நாடியசத்திநிபாதம்" "அரிவையரின்புறமுத்தி" என்னும் விருத்தங்களின் கருவைப்பற்றி நிற்கையாலும் "எண்ணரிதாய்" என்னும் விருத்தம் இங்ஙன மிரண்டாஞ் சூத்திரமாக வகுத்த செய்யுட்களுக்கு அதிகாரமாக நின்றதெனவறிக.

இங்ஙனங் கூறப்பட்ட எண்ணரிதாயென்ற செய்யுள் முதற் சூத்திரமாகிய பதியிலக்கணத்துக்கு மேலாகப் பசுவிலக்கணமாகநிற்கையா லந்தப்பசுவினிலக்கண மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

எண்ணரிதாய் நித்தமா யிருண்மலத்தி னழுந்தி
யிருவினையின் றன்மைகளுக் கீடாயாக்கை, யண்ணா
ருவா னெண்ணி யவையவா யதனுலகினிகழ் போக
ங்க ளருந்துமாற்றாற், புண்ணிய பாவம்புரிந்து போ
க்குவர வுடைத்தாய்ப் புணருமிருண் மலபாகம் பொ
ருந்தியக்கா லருளா, லுண்ணிலவு மொளியதனா லிருளா
கற்றிப்பாத முற்றிடுநற் பசுவர்க்க மெனவுரைப்ப ரு
ணர்ந்தே. (எ)

எண்ணிலாவுயிர்க ளிறந்துபிறந்தொருகா
னண்ணிடுமரனடி யருளாலென்றது.

| | |
|---|---|
| (இ-ள்) எண்ணரிதாய் | ஆன்மாக்க ளிலக்கத்தினு ளளவுபடுத்துதற்கரிதாய் |
| நித்தமாய் | ஒருகாலத்தினு மழியாததாய் |
| இருண் மலத்தினழுந்தி | அஞ்ஞானமாகிய ஆணவமலத்தினாலே மறைப்புண்டுகிடந்து |

**இருவினையின் றன்மைகளுக் கிடானயாக்கை யன்ன லருளா னண்ணி**

அவரவர்களுக்குண்டான புண்ணியபாவங்களுக்கிடானதோ ருடல்களைத் தம்பிரானார் காருண்ணியத்தினாலேபொருந்தி

**அவையவராய்**

அவனவளதுவாகிய வந்தவுடம்பென்னத் தானென்னத் தோன்றாமற் பிறிவற்றுநின்று

**அதனா லலகி லிகழ் போகங்க ளருந்துமாற்றாற் புண்ணியபாவம் புரிந்து**

அந்த வுடம்புகளோடுங் கூடுகையாலே யெண்ணிறந்தபோகங்களைப் புசித்து அந்தப் புசிப்பாலுண்டாகிய ஹிதாஹிதங்களினாலே மீளவும் புண்ணிய பாவங்களை யார்ஜித்துக்கொண்டு அதனாலே

**போக்குவரவுடைத்தாய்**

இறந்து பிறந்துவருவதாய்

**புணரும்**

இங்ஙனம் பொருந்திவராநிற்கும். இப்படிவரச்செய்தே

**இருண்மலபாகம் பொருந்தியக்கா லருளாலுண்ணிலவு மொளி**

அநாதியே யான்மாவை மறைக்கப்பட்ட ஆணவமலமானது க்ஷயம்வந்த வவசரத்துச் சிவனுடையவருளாலேயந்தவான்மாவினிடத்திலே ஞானம்பிரகாசியாநிற்கும். அன்றியும், புணரு மிருண்மலபாகமென்று பதங்கூட்டி யான்மாக்களோடுங்கூடி நிற்கிற வாணவமலமென்று பொருளுரைப்பினுமாம்

**அதனா லிருளகற்றிப் பாதமுற்றிடு நற்பசுவர்க்கம்**

அங்ஙனம் பிரகாசிக்கப்பட்ட ஞானத்தினாலே யந்தவாணவமல மறைப்பைநீங்கிச் சிவனுடைய திருவடியிலே பொருந்திடும் பக்குவப்பட்ட சுத்தான்மாக்கள்

என வுரைப்ப என் றிங்ஙனஞ்சொல்லுவார்க ளறிவாலு ருணர்ந்தே. யர்ந்தபெரியோர்கள். எ-று.

று-ம். எண்ணரிதாய். எ-கு. ஆன்மாக்களை யிலக்கத்தினு லளவுபடுத்துதற்கரிதென்றதேதென்னில் ஒவ்வொரு யோனிவர்க்கங்கடோறுமுண்டான வான்மாக்களை யளவுபடுத்தப்படாததி கொண்டே எண்பத்துநான்கு நூறாயிர யோனிபேதத்திலுண்டான வான்மாக்களையு மளவுபடுத்தப் படாதபடியாலும்; அன்றியு மவதரந்தோறுந் திருவடியிலே கூடினவான்மாக்கள் மீளவும் ஐ நநங்களில் வாராதிருக்கவும் பிரபஞ்சகாரியப்பட்டு வருகிற வா ன்மவர்க்கந் தொலையாததுகொண்டு மப்படிச் சொன்னதெனவறிக. இதற்கு. பி - ம். கோயிற்புராணத்தில். "எத்தகையபோகங்க ளெவற்றினுக்குங் காரணமாய், வைத்தபடி யிடம்போதாவகைநெருங்கு மன்னுயிர்கள்." எ-ம். "கற்பங்கடோறு நடஞ்செய்கழலணைந்தோர் கணிப்பில்லார்." எ-ம். வருமதுகண்டுகொள்க.

இனி நித்தமாய். எ-கு. ஒருகாலத்தினு மழியாதென்றதேதென்னில் பதிபசுபாச மென்னப்பட்ட முதல்மூன்று நித்தியமென்று நூல்கள்சொல்லுகையாலு முத்தியிலு மான்மாக்களுக் கழிவில்லாதபடியாலு மப்படிச்சொன்னதெனவறிக. இங்ஙனம் பதிபசுபாச மூன்று மநாதியென்பதற்கு, பி-ம். திருமந்திரத்தில் "பதிபசுபாச மெனப்பகர் மூன்றும், பதியினைப்போற் பசுபாசமநாதி" எ-து. கண்டுகொள்க. அன்றியும் முத்தியிலுமான்மாக்க ளழியாதென்றதற்கு. பி-ம். உண்மைவிளக்கத்தில். "முத்திதனின் மூன்று முதலுமொழியக்கேள், சுத்தவனுபோகத்தைத் துய்த்தலணு-மெத்தனவே, யின்பங்கொடுத்தலிறை யித்தைவிளைவித்த ன்மல, மன்புடனே கண்டுகொளப்பா." எ-று. கண்டுகொள்க. அன்றியும் சித்தியாரினும் "கரும்பைத்தேனைப்பாலைக் கனியமு

ணைதக் கண்டைக்கட்டியை யொத்திருப்பனந்த முத்தியினிற்கலந்
தே" என்றமையால் ஆன்மாவில்லாதபொழுது அநுபவிப்பானி
ல்லாதாகையா லநுபவமுண்டானதுகொண்டே யான்மாவுமுண்
டென்பதை யநுபவத்தாற் கண்டுகொள்க.

• இனி யிருண்மலத்திலழுந்தி. எ-கு. ஆன்மா வாணவமலத்
தான் மறைப்புண்டுகிடக்குமென்றதேதென்னில் கேவலப்பட்டு
மாயைதாரகமாக வொடுங்கிக் கிடக்குமவதரத்து கலையாதிதத்து
வங்களாயுள்ள காரியமாயையுநீங்கி யாணவமலமறைப்பாகக் கி
டக்கையாலே யப்படிச்சொன்ன தெனவறிக. இதற்கு. பி-ம்.சித்
தியாரில் "அறிவிலன் மூர்த்தனித்த னராகாதிகுணங்களோடுந்,
செறிவிலன்கலாதியோடுஞ் சேர்விலன் செயல்களில்லான், குறியி
லன்கர்த்தாவல்லன் போகத்துக் கொள்கையில்லான், பிறிவிலன்
மலத்தினோடும் வியாபிகேவலத்திலான்மா." எ-ம். 'மும்மலநெ
ல்லினுக்கு முளையொடுதவிடுமிப்போன், மம்மர்செய் தணுவினு
ண்மை வடிவினைமறைத்துநின்று.' எ-ம். கண்டுகொள்க.

இனி யவையவராய். எ-கு. அவனவளதுவாயென்ற தேதெ
ன்னில் உயர்திணை யஃறிணையாகிய யோனிபேதங்களினுள் அவ
னென்றது ஆண்பாலெனவறிக அவளென்றது பெண்பாலெனவ
றிக அதுவென்றது ஆணும்பெண்ணுமல்லாத அலியெனவறிக. உ
யர்திணை யஃறிணை யென்றதேதென்னில் உயர்திணையாவது தெய்
வயோனி மானுடயோனியெனவறிக. அஃறிணையென்றது மற்றுள்
ள யோனிகளையெனவறிக.

இனி யிருண்மலபாகம் பொருந்தியக்கா லருளாலுண்ணில
வுமொளி. எ-கு. மலபாகம்வந்த ஆன்மாக்களிடத்திலே சிவனரு
ளாகிய ஞானம் பிரகாசிக்குமென்றதேதென்னில் பக்குவப்பட்ட
சுத்தான்மாக்களுக் கிருளாகிய வஞ்ஞானநீங்கி யொளியாகிய ஞா
னம்பிரகாசிக்கையாலே யப்படிச் சொன்னதெனவறிக. இதற்கு

பி-ம். கோவைத்திருவாசகத்தில். "உருகுதலைச்சென்ற வுள்ளத் துமம்பலத்தும் மொளியே, பெருகுதலைச்சென்று நின்றேன்." எ-து. கண்டுகொள்க.

இனி யதனாலிருளகற்றிப் பாதமுற்றிடு நற்பசுவர்க்கம் எ-கு. அந்தஞானத்தினாலே சிவனுடைய ஸ்ரீபாதத்தையடையும் பக்குவப்பட்ட சத்தான்மவர்க்கமென்றதேதென்னில் அங்ஙனம் பக்குவப்பட்ட ஆன்மாக்களிடத்தில் பிரகாசிக்கப்பட்ட சிவனருளாகிய ஞானமேபற்றாக அந்தச்சிவத்தோடுங் கூடுகையாலப்படிச் சொன்னதெனவறிய. இதற்கு. பி-ம். தத்துவவிளக்கத்தில். "பவமேவியநெறி பந்திக்குமீசன் பசுக்கடம்மை யவமேவியநெறிப் போகங்களால்முற்ற வந்திலேட, தவமேவியநெறி சத்திகண்ணுற்சென்று சார்ந்துபின்னைச், சிவமேவுவ ரென்றுகாண் கொச்சைக்காவலன் சித்திரிப்பே." எ-று. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது ஆன்மவர்க்க மெண்ணிறந்திருக்குமென்றும் நித்தமாயிருக்குமென்றும் ஆணவமலத்தான் மறைப்புண்டு கேவலப்பட்டுக் கிடக்குமென்றும் புண்ணியபாவங்களுக் கீடான சரீரங்களையெடுத்து மலபாகம்வந்தவாறே சிவனருளாகிய ஞானத்தினாலே சிவனைப்பெறுமென்றும் வருமுறைமையை யறிவித்தது. (எ)

---

வேறு—இதுமுத லிவையபரென்ப தீறாகிய செய்யுண் முப்பத்திரண்டினாலு மிரண்டாஞ் சூத்திரமாகிய பசு பாசங்களி னிலக்கண முணர்த்துவான் றொடங்கினார். அவற்று ளிது பசுவிலக்கண முணர்த்திற்று.

நற்பசுவர்க்கம்-நன்றான வாத்மவர்க்கமானது,—எண்ணரி தாய்-எண்ணவரியதாய்,— நித்தமாய்-அழியாததாய்,— இருண்மலத்திலழுந்தி-ஆணவமலத்தாலே மறைப்புண்டு,—இருவினையின்

றன்மைகளுக் கிடானயாக்கை-அந்தமல பக்குவமாவதற்குப் புண்ணியபாவங்களுக் கிடானவுடம்பை,— அண்ணலருளானண்ணி-கந்தாவின் காருண்ணியத்தினாலே பொருந்தி,—அவையவராய்-அஃறிணை யுயர்திணைகளாய்,—அதனால்-அவ்வுடம்பினாலே,- அலகிலிகழ் போகங்க ளருந்துமாற்றாற் புண்ணியபாவம் புரிந்து- எண்ணிறந்த போகங்களைப் புசிக்கின்ற வழியாலே மீண்டும் புண்ணிய பாவங்களை யார்ஜித்து,—போக்குவரவுடைத்தாய் புணருமிருண் மலபாகம் பொருந்தியக்கால்-அநாதியிலே தாம்பிர காளிதம்போலப் பொருந்திய மலத்துக்குப் பாகம்வந்தவிடத்து,— அருளாலுண்ணிலவு மொளியதனா லிருளகற்றி - தீட்சையினாலே தனக்குள்ளே விளங்குகின்ற சிவஞானத்தாலே யந்தமலத்தைப் போக்கி,—பாதமுற்றிடும் - அவ்வண்ண றிருவடியைப்பொருந்தும்,—எனவுணர்ந் துரைப்பர் - என் றறிந்து சொல்லுவர் பெரியோர். எ - று.

அவையாய் அவராய் எனவிவையிரண்டு மீண்டுத் திணைமாத்திரம் விளக்கிநின்றன. வர்க்கம்-சாதியொருமை. பெரியோரென்ப தவாய்நிலையான் வந்தது. எண்ணெனக் கடைகுறைந்து நின்றது. எண்ணவரிதாமெனினுமாம். எண்ணரிதா யென்றதனான் மாயாவாதி சிவாத்துவிதி யொன்றென்னுமதமும் நித்தமாயென்றதனாலே க்ஷணிகமென்னும் புத்தர்மதமும் இருண்மலத்தி லழுந்தியென்றதனா லாத்மாச் சுத்தனென்னுமைக்யவாதிமதமு மறுக்கப்பட்டன.

பசுவிலக்கண முற்றிற்று.

---

இங்ஙனம் பசுவிலக்கண மருளிச்செய்து பதிபசுபாசந் தெரித்தலென்னும் விதியைப்பற்றி மேற் பாசவிலக்கணங்கூறுமதே முறைமையாகலான் முற்கூறிய வான்மாக்களோடு மநாதியே கூடியிருக்கப்பட்ட மலமாயாகன்மங்களி னியல்பைக்கூறுமிடத்து

ஆணவ மாயை காமியமென்னு மொழுங்கைப்பற்றி முந்த வான்மாக்களை மறைக்கப்பட்ட ஆணவமலத்தினியல்பும் அந்தமலத்தின் மறைப்பைநீக்குகிற திரோதாயியி னியல்பு மருளிச்செய்வானெடுத்துக்கொண் டருளியது.

ஏகமாய்த் தங்கால வெல்லைகளின் மீளு மெண்ணரிய சத்தியதா யிருளொளிர விருண்ட, மோகமாய்ச் செம்பினூறு களிம்பேய்ந்துதித்த மூலமலமா யறிவு முழுதினையுமறைக்கும், பாகமாம் வகைநின்று திரோதானசக்தி பண்ணுதலான் மலமெனவும் பகர்வரதுபரிந்து, நாகமா நதிமதியம் பொதிசடையா னடிகணணுகும்வகை கருணைமிக நயக்குந்தானே. (அ)

மோகமாமூல மலத்தின்முறைமையும்
பாகமாந்திரோதப் பகுதியும்பகர்ந்தது.

| | |
|---|---|
| (இ - ள்) ஏகமாய் | ஆணவமலமானது எண்ணிறந்த வான்மாக்களோடுங் கூடிநின்று மறைத்துந் தானொன்றாயிருப்பதாய் |
| தங்கால வெல்லைகளின் மீளு மெண்ணரிய சத்தியதாய் | ஆன்மாக்களுடைய பக்குவா பக்குவங்களுக்குத் தக்கதாக அவரவரிடங்களிலே மறைத்துநின்று அந்தந்த ஆன்மபோதங்களின் மீட்சியிலே நீங்குவதாயிருக்கிற தன்காரியமான வெண்ணிறந்த சத்திகளையுடையதாய் |
| இருளொளிர விருண்ட மோகமாய் | செறிந்தவிருளும் வெளியென்னும்படி நின்று ஆன்மாக்களுக்கு மிக்கமறைப்புகள் செய்யுமதாய் |
| செம்பினூறு களிம்பேய்ந்துதித்த மூலமலமாய் | செம்பினுடன்கூடி யிருக்கப்பட்ட காளிதமானது அந்தச் செம்புள்ளவன்றே யதனைமறைத் துள்ளும்புறம்புங்கலந்து வெட்டுவாய் |

தோறு நின்றுற்போல வான்மபோதத்தோடு ங் கலந்து மறைந்துநிற்கிற அழியாதவநாதிமலமாய்

அறிவு முழுதி லையு மறைக்கும்

இங்ஙனமான்மாவி னிச்சாஞானக் கிரியைகள் சற்றும் ஜீவியாதபடி மறைத்துநிற்கும். இங்ஙன மாணவமலத்தி னியல்பை யருளிச்செய் திந்தமலத்தைப் பாகம்வருத்துகிற திரோதாயி சத்தியினியல்பு மேலருளிச்செய்கின்றது

பாசமாம் வகை

அந்த ஆணவமலமானது க்ஷயமாம்படி

நின்று திரோதானசத்தி பண்ணுதலான்

சிவனுடைய வருட்சத்தியானது அந்த வாணவமலத்தோடுங் கூடித் திரோபவித்துநின்று காரியப்படுத்துகையால்

மல மெனவும் பகர்வர்

இந்தத் திரோதாயி சத்தியை யந்த மலத்தோடுங் கூட்டி மலமென்றும் பெரியோர்கள் சொல்லுவார்கள். இங்ஙன மலமெனவுமென்ற வும்மைகொண்டே யந்தத் திரோதாயிசத்தியே யருளென்பது துணிவு. இங்ஙனந் திரோதமாய்நின்று காரியப்படுத்தி மலபாகம் வருந்தின வருளானது இங்ஙனம் மலபாகம் வந்த ஆன்மாக்களுக் குண்டாக்கும் பயனே தென்னில்

அதுபரிந்து

அந்தவரு ளவர்களிடத்திலே கிருபைஜநித்துநின்று

ஈகமா நதிம தியம்பொதி ச

பாம்பினையு மஹத்தாயிருக்கிற கங்கா பரமேஶ்வரியையுஞ் சந்திரனையுஞ் சூழ்ந்திருக்கப்

| | |
|---|---|
| டையானடிகண | பட்ட திருச் சடாபாரத்தையுடைய தம்பிரா |
| ணுகும்வகை கரு | னார் திருவடிகளிலே பொருந்து முறைமை |
| ணை மிக நயக்குந் | யை யுண்டாக்குந் தனது காருண்ணியத்தினு |
| தானே. | லே. எ - று. |

ரு - ம். ஏகமாய். எ-கு. ஆணவமல மொன்றாயிருக்கவு மெ
ண்ணிறந்த வான்மாக்களையுங் கூடிநின்று மறைக்குமென்றதற்கு
வழியேதென்னில் இருளானது தாமொன்றாயிருந்தும் பலகண்க
ளையு மறைத்தாற்போல வெனவறிக. அப்படி மலமொன்றாயிருந்
தும் பலவான்மாக்களையு மறைக்குமென்பதற்கு. பி-ம். திருவரு
ட்பயனில் "பலரைப்புணர்ந்து மிருட்பாவைக் கொன்றுங்-
கணவர்க்குந் தோன்றாதகற்பு" எ - ம். இந்நூலினும். "மோகமிக
வுயிர்க டொறு முடனாய்நிற்கு மூலவாணவமொன்று". எ-ம். வரு
மேதுக்களைக் கண்டுகொள்க.

இனி தங்காலவெல்லைகளின் மீளும். எ-கு. ஆன்மபோதங்
களின் மீட்சியிலே நீங்குகிற சத்திகளென்றதேதென்னில் போத
த்தின் மீட்சியாவது பிரபஞ்சத்தைப் பொய்யென்று கண்டு நீங்
குகை யெனவறிக. இதற்கு. பி - ம். சித்தியாரில் "ஆசைதரு மூல
கமெலா மலகைத்தேராமென வறிந்தகல வந்திலையேயாகும்".
எ-று. கண்டுகொள்க.

அப்படி மலமொன்றாயிருக்கவு மந்தமலத்தின்சத்திக ளெ
ண்ணிறந் திருக்குமென்றதேதென்னில் அந்த மலத்தோடுங்கூடி-
யிருக்கப்பட்ட வான்மாக்க ளெண்ணிறந் திருக்கையாலு மந்த
வான்மாக்கடோறும் வெகுவிதமான சத்திகள்பதிந்து நிற்கையா
லு மப்படிச் சொன்னதெனவறிக. அப்படி யான்மாக்கடோறு
மந்தமலத்தின் சத்தி வெகுவிதமாகப் பதிந்து நிற்குமென்றத
ற்கு. பி-ம். தத்துவவிளக்கத்தில். " கதிதருங்காழிமன் கட்டும
ப்பாசங்கள் மூன்றவைதான், பொதிதருமாணவம் போகஞ்செ

யிகன்மமு மாயையுமா, முதியதுதாமென்று முன்பினிலாதது சேதனன்கண், ணதிகமறைப்பன வாயிரகோடி விருத்திகளே" எ-து. கண்டுகொள்க.

இனி இருளொளிர விருண்டமோகமாய். எ - கு. செறிந்த விருளும் வெளியென்னும்படி யிருளாயிருக்கு மந்த மலமென்றதேதென்னில் இருளானது பண்டபதார்த்தங்களை மறைத்துந் தான்தோன்றி நிற்கையாலும் இந்த மலமானது தன்னையுங் காட்டாமல் பொருளையுங் காட்டாமல் நிற்கையாலு மப்படிச் சொல்லப்பட்டதெனவறிக. இதற்கு. பி-ம். திருவருட்பயனில். "ஒருபொருளுங்காட்டா திருளுருவங்காட்டு- மிருபொருளுங்காட்டாதிது". எ-து. கண்டுகொள்க.

இனி செம்பினூறுகளிம்பேய்ந்து நித்தமூலமலமாய். எ - கு. செம்பிற் காளிதம்போல வொருகாலத்தினு மழியாத வநாதிமலமென்றதேதென்னில் செம்பென்கிற பொருளுள்ளளவுங் காளிதநின்றாற்போல ஆன்மபோதமுள்ளமட்டு மந்தமலத்தின் மறைப்புப்போகாதென்றதெனவறிக. இதற்கு. பி - ம். தத்துவவிளக்கத்தில். "விருத்திகளான் மறைக்கின்றவவ்வாணவம் வெங்குருமன், கருத்தியநான்முறை தேரிற்கலந்துட னுயனுவை, யருத்தியநஞ்செனன மோகஞ்செய்தாசை யநுபவத்திற், பெருத்திடச் செம்பினிற் காளிதம்போலப் பிணைந்துளவே." எ - து. கண்டுகொள்க.

நித்தமூலமலமென்றது முத்தியினு மலமழியாதென்றதெனவறிக. இதற்கு. பி - ம். உண்மைவிளக்கத்தில். "முத்திதனின் மூன்று முதலும்." என்றசெய்யுளின் முடிவிலே "இத்தையினை வித்தன் மலம்." எ-து. கண்டுகொள்க.

இனி அறிவு முழுதினையுமறைக்கும். எ - கு. ஆன்மாவினிச் சாஞானக்கிரியைகளைச் சற்றும் ஜீவிக்க வொட்டாதபடி மலம

றைக்குமென்று பொருட்படுத்தினத்துக்கு. பி – ம். சித்தியாரில். "சிவனுமிச்சாஞானக் கிரியையாற்சிவனையொப்ப, ஞவனென்றி டிலநாதி மலமிவற்றினைமறைக்கும்." எ–து. கண்டுகொள்க.

இனி பாகமாம்வகைநின்று திரோதானசத்தி பண்ணுதலா ல். எ–கு. சிவனுடைய வருட்சத்தியானது திரோதாயியாய் நின்று மலங்களைக் காரியப்படுத்துமென்று பொருட்படுத்தினத்துக்கு. பி–ம். சித்தியாரில். "ஏயுமும்மலங்கடத்தந் தொழிலினை யியற்ற வேவுந், தூயவன்றனதோர்சத்தி திரோதானகரியதென்றும்." எ–து. வருமது கண்டுகொள்க.

இனி அதுபரிந்து நாகமாநதிமதியம் பொதிசடையா னடிக ணணுகும்வகை கருணைமிக நயக்குந்தானே. எ – கு. அந்தவருளா னது திரோதமாய்நின்று ஆன்மாக்களுக்கு மலபாகம் வருத்தி மீ ளவும் பழையவருளாய்க் கிருபைஜநிக்குமென்றது தெங்ஙனேயெ ன்னில் மாதாவானவள் பிள்ளைகளிடத்திற் குற்றங்கண்டு கோபி த்து மீளவுங்குணங்கண்டவாறே பிரியப்பட்டாற்போல வெனவ றிக. இதற்கு. பி–ம். திருவாசகத்தில். "பேதித்துநம்மை வளர்த் தெடுத்த பெய்வளைதன்–பாதத்திறம்பாடி யாடேலோ." எ – ம். இந்நூலினும். "முற் சினமுருவுதிரோதாயி கருணையாகி". எ – ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது ஆணவமலமான தான்மாவை மறைக் குமுறைமையு மந்தமலத்தை யருட்சத்தியானது திரோதாயியாய் நின்று பாகம்வருத்தி மீளவும் பழையவருளாய்க் கிருபைஜநித்து அப்படி மலபாகம்வந்த வான்மாக்களைச் சிவனுடைய திருவடியி லே கூட்டுவிக்குமுறைமையு மறிவித்தது. (அ)

———o———

வேறு—இதமுறையே யுணர்த்துவா னின்ற வைவகைப்பா சங்களு ளாத்மாக்களை யனாதியே கூடிநின்று ஜனனமரணங்களை

விளைக்கின்ற மூலமலத்தின் றன்மையினையு மதனைப் பாகம்வருத்துகையா னுபசரித்துப் பாசமென்னப்பட்டத் திரோதானசத்தியின் றன்மையினையு முணர்த்திற்று.

ஏகமாய்-சடமுமா யநேகமானாற் கடாதிகளைப்போல வனித்தமாதலாற் பலவன்றி யொன்றாயிருப்பதாய்,—தங்கால வெல்லைகளின்மீளு மெண்ணரிய சத்தியதாய்-ஒன்றே சர்வாத்மாக்களையு மறைக்கி லொருவனுக்குப் பாசமோசனமுண்டாக வெல்லார்க்கும் மோக்ஷமுண்டாதல்வேண்டும் அது கூடாதாதலிற் றத்தம் பரிபாகமான காலவரையறைகளிலே திரும்பத்தக்க வளவிறந்த சத்திகளையுடையதாய்,— இருளொளிரவிருண்ட மோகமாய்-இருளெல்லாப்பொருளையு மறைக்கையிலுந் தன்னைக் காட்டிநிற்கும் இது சர்வாத்மாக்களை மறைத்து அவர்களையுந் தன்னையுங்காட்டாதாகையா லிருளும் வெளியென்னும்படிக் கிடாக விருண்ட மயக்கத்தையுடையதாய்,—செம்பிலுறு களிம்பேய்ந்து-செம்பிற்பொருந்திய களிம்புபோன்று,—நித்தமூலமலமா யறிவுமுழுதினையு மறைக்கும்-அழியாத பிரதானமலமா யாத்மாக்களுடைய விச்சாஞானக்கிரியைக ளெட்டங்கலையுமறையாநிற்கும்,—திரோதாயிசத்தி-திரோதானசத்தி யானது,—நின்று-ஆத்மாக்களோடு நின்று,—பாகமாம்வகை பண்ணுதலால்-அந்தவாணவமலம்பக்குவமாகும்படி யது மறைத்தற் கனுகூலஞ்செய்தலால்,—மலமெனவும் பகர்வர்-அந்தச் சத்தியை மலமென் றுபசரித்துச்சொல்லுவர்கள்,—அதுதானே-அங்ஙன மறைத்தற்கனுகூலமான சத்திதானே,—நாகமா நதிமதியம் பொதிசடையா னடிகணணுறும்வகை - பாம்பு முதலிய வற்றைப் பொதிந்த சடையினையுடைய சிவனுடையதிருவடிகளை யவ்வாத்மாக்கள் சேரும்படி பக்குவம் வந்துழிப் பண்ணி,—மிகப்பரிந்து கருணைநயக்கும்-பெருகவும்பரிந் திரக்கமாய் மகிழும். எ - று.

தானேயென்றதை யசைநிலையாக்கவும். பரிந்து பொதிசடையென் றியைப்பினுமாம். காளிதஞ்செம்பினுடன் சகசமாயிருந்து மிரதக்குளிகையாற் றீருமதுபோல மூலமலமு மாத்மாக்களுடன் சகசமாயிருந்துஞ் சிவசத்தியாற் போக்கப்படுமாதலி னஃதற்கஃ துவமையாயிற்று. இந்தமல மாத்மாவினுடைய ஞானசத்தியை மறைத்தலாற் சகசமே, ஆகந்துகமலமன்று. சகசமாவது கூடவுதித்தது. ஆகந்துகம் வந்துகூடியது. சகசமெனி னக்கினிக்கு வெம்மையும் புனலுக்குத் தண்மையும்போலும் குணமாதலிற் குணமழியிற் குணியுமழியுமன்றேயெனின் அற்றன்று. செம்பிற்குக்களிம்பும் அரிசிக்குத் தவிடும்போலுங் குற்றமே, அவற்றின்குணமன்று. களிம்புந்தவிடும்போகச் செம்பிற்கும் அரிசிக்குங்கேடில்லை. அதுபோலச் சகசமலமான வாணவமலத்தை நீக்கக் கேடின்று. ஆதலாற் சகச மிருவிதமெனக்கொள்க. இந்த வாணவமலம் மாயாகாரியமெனின் மாயாகாரிய மாகந்துகமாதலி னாகாது. மாயையெனின்மாயை தன்காரியத்தினாலே மலத்தைநீக்கி யாத்மாவினுடைய ஞானத்தைவிளக்குதலி னதுவுமன்று. மாயை தன்காரியத்தால் விளக்கினாலுங் காரணரூபத்தான் மறையாதோவெனின் காரியத்திலில்லாது காரணத்தினுமில்லை; அக்கினி காரியமான தீபத்தாலும்விளக்கிக் காரணமான தன்னாலும் விளக்குதலின். ஆயின் மாயை காரணரூபத்தால் விளக்குமோவெனின் அப்படி விளக்காது. ஆத்மாக்களை விஷயங்களிலே மோகிப்பிக்கும் ஆணவமலம்போல முழுதும்மறையாது. ஆதலான் ஆணவமிருளு மாயை விளக்கும்போலு மெனக்கொள்க. ஆயி னிதனை மலமென்பதென்னையெனின் அதற்குப்பரிகார மேலே மோகமிகவென்றுஞ் செய்யுளிற்காட்டுதும். இனி ஞானபாவமெனின் பாவமொரு திரவியமல்லாதபடியாலே மறைக்குந் தொழிலைச் செய்யமாட்டாது. கடத்தினுடையபாவஞ் ஜலகக்ரகணம் பண்ணமாட்டா

மைபோல். ஆதலான் ஞானபாவமுமன்று. ஞானத்தினுடைய பி
ராகபாவமெனிற் பிராகபாவ மனாதியான ஞானத்தான்முடிவு. ஆ
தலான் முடிவுள்ளதற்குத் தோற்றமுண்டு. உண்டாகவேதோன்
றி யழியு மாதலா னதுவுமன்று. அன்னியதா ஞானமெனின் ஒன்
றையொன்றாகக் கருதுதலேயன்னியதா ஞானமாதலி னம்மாறாட்
டமோ ரேதுவின்றிவாராது. சுத்தி வெள்ளியாகத் தோன்றும்
போது கண்ணின் குற்றத்தாலன்றித் தோன்றாதவாறுபோல
வாதலி னிதுவுமன்று. இனி ஆத்மாவின் குணமெனிற் சித்தா
னவாத்மாவின்குண ஞானமன்றிச் சடமாயிராது, தீயின்குண
ம் வெம்மையன்றிச் சீதமாகாவாறுபோல. ஆதலா லதுவுமன்று.
இந்த வாணவமலத்திற்குப் பரியாயநாமங்கள் பசுத்துவம் பசு
நீகாரம் மிருத்தியு மூர்ச்சை மலம் அஞ்ஞானம் அவித்தை
ஆவிருதிருக்கு இலணிபாவம் மூலம் க்ஷயம் பாசம் அசுத்தி
பந்தனம் வியாகாதம் களங்கம் மோகம் கேவலம் ஆவர
ணம் தமசு சடம் படலம் நிரோதம் ஆச்சாதனம் இவை
முதற் பிறவுமுள. இந்த மூலமலஞ் சகலரெனப்பட்ட வாத்
மாக்களுக்குக் கருவிகூடிய சகலாவத்தையிலே யராகமுத
லிய கருவிகளிலே யாவேசித்து மோகம் மதம் அராகம்
விஷாதம் சோஷம் வைசித்திரியம் அரிஷம் என்னு மெ
ழுவிதங்களையுஞ் செய்விக்கும். இவற்றுள் மோகமாவது
அதிபாதகமுதலிய பஞ்சபாதகங்களை யாசிரியனாலுணர்ந்
திருப்பினு மவ்வுணர்ச்சிகள் சிறிதும் விளங்காதபடி யிழப்பி
த் தவற்றை நன்றென்று செய்விப்பது. மதமாவது தான்போ
கித்துப் புணர்ந்த வரைவின்மகளிரை யருவராமற் பார்த்தி
வவடிவத்திரீயென்று மிவளினரியபே றெமக்கில்லையென்று
மதிப்பிப்பது. விஷாதமாவது ஒருவன்வாஞ்சித்துப் புணர்
ந்த மகளிரைப் பிரிந்தபோது மிகவும் வருந்தியழுது மனோ

னுக்குஞ் செய்விப்பது. அராகமாவது ஆசிரியனாலே தரும
நூல்களைக் கேளாதா னொருவனுக்குச் சிவத் திரவியமுதலி
யவற்றை வவ்வுதற்கு வாஞ்சையைச் செய்விப்பது. சோஷ
மாவது அந்த மனோதுக்கத்தாலே யுடம்புலரும்படி யாகா
ரத்திலே கருத்தின்றிச் செய்விப்பது. வைசித்திரியமாவது
நமக்குப் பரமசிவ னொருவிதமான விருவினைப்பயனையுந் தெ
ய்வீக முதலிய மூவகையாலே தருவனென்னு முணர்வை யி
ழப்பித்து இவனென்னைத் தாழ்வித்தான் வாழ்வித்தான் யா
னிவனைத் தாழ்வித்தேன் வாழ்வித்தே னென்பிப்பது. அரிஷ
மாவது மனைமுதலிய வளங்களைக் கண்டுகளித் தெமக்கினி
யென்னகுறை யென்பிக்கை. அநாதியிலே யணுக்களைப் பொ
ருந்திநிற்கையா லாணவமெனப் பெயராயிற்று.

---

இங்ஙனஞ் சொல்லப்பட்ட வருளாகிய திரோதாயிசத்
தியந்த வாணவமலத்தைப் பாகம்வருத்து முறைமை யெங்
ஙனேயென்று வினவ அந்தத் திரோதாயி சத்தியானது இச்
சாஞானக் கிரியாசத்திகளைத் தோற்றுவித்து அவையிற்றைக்
கொண்டே சுத்தமாயையிலு மசுத்தமாயையிலு முண்டான த
னுகரண புவனபோகங்களைத் தோற்றுவிக்குமிடத்து அவை
யிற்சேரு மான்மாக்களைக் கூட்டிக் கன்மத்தைப் புசிப்பித்து
மலபாகம் வருத்தவேண்டுகையா லதில் சுத்தமாயையினே
ற்ற முந்தவருளிசெய்வா னெடுத்துக்கொண்டருளியது.

உன்னலரும் பரசிவன்ற னருளாலேநாத முதிக்
குமிகுங் குடிலைதனில் விந்துவருநாதந், தன்னிலுதி
ஞொளிவளருஞ் சதாசிவராமவ்விற் றயங்கவரு மீசவி
த்தை தனையளிப்பரதனுன், மன்னுவரிவ் வகையைய
ர்வாய்மையினுன்முன்னே வந்திடுமென் றுரைசெய்த

விந்துவழாவகையே, மூன்றுதவு சூக்குமாதி யொருநான்குமென்று மொழிந்திடுவ ரருங்கலைகண் முதிர்ந்துளோரே. (சு)

வைத்தமாமாயையின் வாக்குநான்குஞ்
சுத்ததத்துவமைந்துந் தோன்றுமென்றது.

| | |
|---|---|
| (இ-ள்.) உன்னலரும் பரசிவன்றனருளாலே நாதமுதிக்குமிகுங் குடிலைதனில். அநுவயம். உன்னலரும் பரசிவன்றனருளாலே மிகுங் குடிலைதனினாதமுதிக்கும் | மனத்தினா னினைத்தற்கரிய பரமசிவனுடைய பராசத்தியாலே குடிலையாகிய மாமாயையிலே நாததத்துவந்தோன்றும் |
| விந்துவருநாதந்தன்னில். அநுவயம். நாதந்தன்னில் விந்துவரும் | முற்கூறிய நாதத்திலே விந்துதத்துவந் தோன்றும் |
| அதிலொளிவளருஞ் சதாசிவனாம் | அந்த விந்துவிலே பிரகாசமிக்க சாதாக்கிய தத்துவந்தோன்றும் |
| அவரிற்றயங்கவருமீசர் | அந்தச் சாதாக்கியத்திலே விளக்கமாக வருமீசுரதத்துவந் தோன்றும் |

| | |
|---|---|
| வித்தை தனை<br>யளிப்பர் | அந்தவிசுரருஞ் சுத்தவித்தையைத் தோ<br>ற்றுவிப்பர் |
| அதனான்மன்<br>னுவரிவ்வகை<br>யையவர். அநுவ<br>யம். அதனாலிவ்<br>வகையையவர் ம<br>ன்னுவர் | முற்கூறிய வகைகளாற் குடிலையுபாதா<br>னமாக விந்தத்தத்துவங்க ளைந்துந் தோ<br>ன்றின வொழுங்கிலே தத்துவகர்த்தாக்க<br>ளைவருந் தோன்றி யிந்தத்தத்துவங்களோ<br>டும் பொருந்தியிருப்பர்கள் |
| வாய்மையி<br>னான் முன்னை<br>வந்திடுமென்று<br>ரை செய்தவிந்<br>து | உண்மையாக முன்பே நாதத்தினிலே தோ<br>ன்றுமென்று சொல்லப்பட்ட விந்துவிலே |
| வழா வகை<br>யே முன்னுதவு<br>சூக்கு மாதி<br>யொருநான்கும்<br>அநுவயம். வ<br>ழாவகையே சூ<br>க்குமாதி யொ<br>ருநான்கும்முன்<br>னுதவும் | தப்பாத முறைமையினாலே சூக்குமைமு<br>தலாகிய வாக்குகணாலையு முற்கூறிய சிவச<br>த்திகடோற்றுவிக்கும் |
| என்றுமொழி<br>ந்திடுவ ரருங்க<br>லைகண் முதிர்ந்<br>துளோரே. | என்றிங்ஙனஞ் சொல்லுவர்க ளரியநூல்<br>கலையுணர்ந்த பெரியோர்கள். எ-று. |

று - ம். உன்னலரும் பாசிவன். எ-கு. மனத்தினாலினை த்தற்கரிய பரமசிவனென்று பொருட்கூறிய தேதென்னில் அ

ந்த நிஷ்களசொரூபியாயிருக்கின்ற பரமசிவனை ஆன்மபோதத்தாற் சுட்டியறிய வொண்ணாதபடியாலே யப்படிச்சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "தன்னறிவதனாற்காணுந் தகைமையனல்லனீசன்." எ-ம். கோயிற்புராணத்தில். "காரணங்கற்பனை கடந்தகருணை" எ-ம். இந்நூலினும். "நாடரியகருணை." எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

பரசிவன்றனருளாலே. எ-கு பரமசிவனுடைய பராசத்தியாலே குடிலையிலே நாதந்தோன்றுமென்று பராசத்தியின்மேல்வைத்துப் பொருட்படுத்தினதற்கு வழியேதென்னில் அந்தப் பரமசிவமானது பிரபஞ்சத்தைக் காரியப்படுத்துமிடத்துத் தனதுசத்தியைவிரித்து அதுவேயுடம்பாகநின்று காரியப்படுத்துகையா லப்படிச்சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "முன்னருட்சத்திதன்பான் முகிட்சுந் தான்முளையானன்றே" எ-ம். இந்நூலினும். "நீடுபராசத்தி நிகழிச்சாஞான நிறைகிரியைதரவதனை நிமலனமேவி, நாடரிய கருணைதிரு வுருவமாகி" எ-ம். ஞானபூசைத்திருவிருத்தத்தில். "இன்புருவச் சிவன்படைத்தற் கிச்சைகாலத் திசைவுழிவித்தியாதேகி யாகியெழிற்கிரியை, முன்பெருகக் குடிலையினையடைந்துநாத முந்துவிந்தக் காமனுநன் மொழிமுறையேயவருந்துத், தன்பொருவில் மந்திரத்தாற் சதாசிவாதியுதவி." எ-ம். வருமது கண்டுகொள்க.

இங்ஙனஞ்சொல்லப்பட்ட சிவசத்திகளாலே குடிலையிலே தோன்றுமென்ற நாதவிந்து முதலாகிய தத்துவங்களுக்கு வகுப்பேதென்னில் நாதமென்றது சர்வான்மாக்களுக்கு மறிவை யெழுப்புவித்துநிற்கிற ஞானமெனவறிக. விந்துவென்றது சர்வான்மாக்களுக்கு முண்டாகிய தொழிலை யெழுப்

புவித்துநிற்கிற கிரியையெனவறிக. சாதாக்கியமென்றது அந்தஞானமுங் கிரியையுமாகிய நாதவிந்துக்களிரண்டுங்கூடின வவதரமெனவறிக. ஈசுரமென்றது கிரியையேறி ஞானங்குறைந்துநின்ற வவதரமெனவறிக. சுத்தவித்தை யென்றது ஞானமேறிக் கிரியைகுறைந்துநின்ற வவதரமெனவறிக. இவையிற்றுக்கு. பி-ம். தத்துவவிளக்கத்தில். "ஐந்தவத்தத்துவ மைந்தாவன சிவதத்துவத்தோ, டைந்தவச்சத்தி சதாசிவமீசனும் வித்தையுமென், றோர்ந்தறிவித்தினுக் குண்ணெகிழ்ப்பானது சத்தியத்திற், போந்தெழுமங்குர மைமுகத்தோனென்று போற்றுவரே." என்றதை இந்தத் தத்துவங்களைந்துஞ் சிவசத்தியாலே குடிலையிலே தோறுமென்பதற்குக் கண்டுகொள்க. இந்தத் தத்துவங்க ளேறியுங் குறைந்துமொத்துநின்றதற்கு. பி-ம். தத்துவவிளக்கத்தில். "போற்றும்பரத்திற் பொதிகின்றஞானங் கிரியைபெற்றுத், தோற்றுஞ்சதாசிவ முன்னதைஞானங் கிரியைகுன்றிற், றேத்திய வித்தை யிவற்றின்றிரிவு மகேசன்மயல், மாற்றுஞ்சிரபுரத் தெங்கோனெறியில் வகுத்தனவே." எ-ம். சித்தியாரிலும் "ஞானமேயானபோது சிவன்றெழுஞ்ஞானமொக்கில், லீனமில்சதாசிவன்பே ரீசனுந்தொழிலதேறி, ஊனமேற்கிரியைவித்தை யுருத்திரனிலையபோக, மானபேரதிகாரத்தோ டதிகரணத்தனுமே". எ-து. கண்டுகொள்க.

இவையிற்றின் முற்கூறிய விந்துவுநாதமுஞ் சர்வான்மாக்களுக்கு மறிவையுந் தொழிலையு முண்டாக்குமென்று முன்சொன்னதற்கு. பி-ம். சித்தியாரில். "மூவகையணுக்களுக்கு முறைமையால் விந்துஞான மேவினதில்லையாகில் விளங்கியஞானமின்றும்". எ-து. கண்டுகொள்க.

அதனால் மன்னுவரிவ்வகையைவர். எ-கு. முற்கூறியவ

கையாற் குடிலையுபாதானமாகத் தத்துவங்களுந் தோ
ன்றினவொழுங்கிலே தத்துவகத்தாக்களாவருந்தோன்றி யி
ந்தத்தத்துவங்களோடும் பொருந்திநிற்பார்களென்று பொ
ருட்படுத்தினதுக்கு வழியேதென்னில் முற்கூறியவகையா
வது அந்தச்சிவமுஞ் சத்தியுங் குடிலையிலே பொருந்தினவ
விதாரத் தந்தக் குடிலையுபாதானமாகச் சிவதத்துவங்களோ
ன்றுகையா லந்தச்சிவமுஞ்சத்தியு மந்தத்தத்துவங்க ளுட
ம்பாகவு மதிஷ்டித்துத் தத்துவகத்தாக்களுமாய்நிற்கை
யாலே யப்படிச் சொன்னதெனவறிக. அதற்கு வழியேதென்
னில் நாததத்துவ முடம்பாகச் சிவமதிஷ்டித்து நிற்கையா
லும் விந்துதத்துவ முடம்பாகச் சத்தியதிஷ்டித்து நிற்கை
யாலு மந்தநாதமும் விந்துவுங்கூடின சாதாக்கியமுடம்பாக
அந்தச்சத்தியுஞ் சிவமுங்கூடி சதாசிவமாக அதிஷ்டித்து நி
ற்கையாலுங் கிரியையேறி ஞானங்குறைந்து ஈசுரமுடம்பாக
மகேசுரமதிஷ்டித்து நிற்கையாலு ஞானமேறிக் கிரியைகு
றைந்து சுத்தவித்தையுடம்பாக உருத்திரனதிஷ்டித்து நிற்
கையாலுந் தத்துவங்க ளுடம்பாகத் தத்துவகத்தாக்கள்
பொருந்திநிற்பார்க ளெனவறிக. என்றிங்ஙனந் தத்துவமுட
ம்பாகத் தத்துவகத்தாக்கள் பொருந்திநிற்பார்களென்பத
ற்கு. பி-ம். சித்தியாரில். "வித்தையோடீசர் சாதாக்கியஞ்ச
த்தி சிவங்களைந்துஞ், சுத்ததத்துவஞ்சிவன்றன் சுதந்தரவ
டிவமாகு, நித்தமென்றுரைப்பர்கால நீங்கியநிலைமையாலே,
வைத்திலர்முற்பிற்பாடு வருவித்தார் கருமத்தாலே." எ-து.
கண்டுகொள்க. என்றிங்ஙனஞ் சிவன்றன் சுதந்தரவடிவமா
குமென்று சிவமொன்றையுஞ் சொல்லியிருக்கச் சத்தியையு
ங்கூட்டித் தத்துவகத்தாவாகச் சொன்னதேதென்னி லந்த
ச்சிவமுஞ்சத்தியும்பின்னமற்றிருக்கையால் சிவத்தைச்சொ

ல்லைவ சத்திக்கு மாமென்பதுகருத்து. அப்படிச் சத்திசிவ மிரண்டும் பின்னமற்றிருக்கு மென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "சத்திதானாதமாதி தானாகுஞ் சிவமுமந்த, சத்திதானாதியாகுந் தருவடிவானவெல்லாஞ், சத்தியுஞ்சிவமுமாகுஞ் சத்திதான் சத்தனுக்குச், சத்தியாஞ்சத்தன் வேண்டிற் றெல்லாமாஞ்சத்திதானே". எ-று. கண்டுகொள்க. என்றிங்ஙன முற்கூறிய வகைகளால் நாதவிந்து விரண்டுதத்துவமும் ஐந்தாக விரிகையால் சத்திசிவமிரண்டுந் தத்துவகத்தாக்களைவராகநிற்பதை யநுபவத்தாற் கண்டுகொள்க. என்றிப்படித் தத்துவமென்றுந் தத்துவகத்தாக்களென்று மிருவகையாயிருக்கத் தத்துவங்களின்பேர் தத்துவகத்தாக்களுக்குச் சொல்லியும் தத்துவகத்தாக்களின்பேர் தத்துவங்களுக்குச் சொல்லியும் வருகைக்கு வழியேதென்னில் தத்துவங்களுடம்புந் தத்துவகத்தாக்களுயிருமாய் நிற்கையாலே உடம்புக்கிட்டபேர் உயிருக்குநின்றாற்போலத் தத்துவங்களின்பேர் தத்துவகத்தாக்களுக்கு நிற்கையாலும் விளக்குச் சுடரெரியுந்தகளி விளக்கென்று பேர்பெற்றாற்போலத் தத்துவகத்தாக்களின்பேர் தத்துவங்களுக்கு நிற்கையாலு மப்படிச்சொன்னதெனவறிக.

இனி விந்துவழாவகையே முன்னுதவுஞ்சூக்குமாதி யொருநான்கும். எ-கு. விந்துவிலேநின்றுந் தோன்றப்பட்ட வாக்குகளையுஞ் சிவசத்திக டோற்றுவிக்குமென்று பொருட்படுத்தினத்துக்கு வழியேதென்னில் அந்தவிந்துவானது ஜடமானபடியால் அது தானாகத் தோற்றுவிக்கமாட்டாதாகையா லப்படிச் சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "விந்துவின்மாயையாகி" என்ற விருத்தத்தில். "விந்துதன்பால் வைகரியாதி." எ-ம். "சிவன்றன் சந்நிதி த

ன்னின்றே." எ-ம். வருகையா லப்படிச்சொன்னதென யறிக. சந்நிதியென்றது அந்தச்சிவனுடைய சத்தியையென வறிக.

அன்றியும் முன்னுதவு சூக்குமாதி யொருநான்குமென்ற வும்மைகொண்டே வேறேயுஞ் சிலதோன்றுமென்பது கருத்தெனவறிக. அஃதாவது முன்சொன்னவிந்துவிற் றோற்றமாகிய வாக்குகளுமன்றியே ஐம்பத்தோரக்கரமும் எண்பத்தொருபதமுஞ் சப்தகோடி மஹாமந்திரங்களும் வேதாகமபுராணசாத்திரங்களும் விஞ்ஞானகலர் பிரளயாகலருக்குத் தனுகரண புவனபோகங்களுந் தோன்றுமென்பது கருத்தாகையா லப்படிச்சொன்னதெனவறிக. இவையிற்றுக்கு பி-ம். கோயிற்புராணத்தில். "சததிகளிற்கருத்திருத்தித் தாவிலருமாமாயை,யுட்டுத்தனிநாதாதி வைவகையுமுதிப்பித்து,வைத்தெழுத்து மொழி மறைநூன் மந்திரமே முதலான, சுத்தவழிவிரித்தசுத்த தத்துவங்கடோகுமுதலில்". எ-ம். சித்தியாரில். "வித்தைகளவித்தையீசர் சதாசிவரென்றிவர்க்கு,வைத்துறும்பதங்கள்வன்னம் புவனங்கண்மந்திரங்க,டத்துவஞ்சரீரம்போகங் கரணங்கடாமெலாமு,மூய்த்திடும் வயிந்தவந்தா னுபாதானமாகின்றே". என கண்டுகொள்க. வயிந்தவமென்றது குடிலையாகிய சுத்தமாயையை யெனவறிக. சுத்தமாயை படங்குடிலாதற்போலக் காரணமுங்காரியமுமாகநிற்கையால் சுத்தமாயைச்சொல்லவே அதனகாரியமாகிய விந்துவுக்குமாமென்பது கருத்தெனவறிக.

இனி அருங்கலைகண் முதிர்ந்தனோரே. எ-கு. அரியநூல்களை யுணர்ந்த பெரியோர்களென்று பொருட்படுத்தினதேதென்னில் அரியநூல்களை யுணர்ந்தவர்க ளிங்ஙனங்கூறிய பொருளுக்கு மாறுபாடுசொல்லுவர்க ளென்பதனு லப்படிச்

சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "சுத்தவ டிவியல்பாக வுடையசோதி." என்னுட் விருத்தத்தில் "பித்த ர்குணமதுபோல வொருகாலுண்டாய்ப் பின்னொருகாலறிவி ன்றிப் பேதையோராய்க், கத்திடுமான்மாக்களுனைக் கட்டி ற்பட்டோர் கனகவரை குறித்துப்போய்க் கடற்கேவீழ்வா ர்". எ-து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது மேலான சிவசத்திகளாலே சுத்த மாயையிலேநின்று நாதவிந்துமுதலான தத்துவங்டோன்று மென்றும் அந்தத் தத்துவங்களுடம்பாக முற்கூறிய சிவசத் திகளிரண்டுந் தத்துவகத்தாக்களாக வதிஷ்டித்து நிற்பர்க ளென்றும் அதிலே விந்துசத்தியிடமாகச் சூக்குமை பைசந் திமத்திமை வைகரியென்னும் வாக்குகண்முதலானவைக ளெ ல்லாந் தோன்றுமென்று முறைமையு மறிவித்தது. (கூ)

———o———

வேறு—இனிபாசங்களு ளிருவிதமாயையு மாயேயமுஞ் செய்யுளேழிநு லுணர்த்துவான் ளொடங்கினூர் அவற்றுளிது சுத்தமாயையு மூலமலந் திரோதாயியாலே பாகம்வருதல் கா ரணமாக வதனினின்றுந் தோற்றிய சுத்ததத்துவமைந்தும் வாக்குகள்நான்கு முணர்த்திற்று.

உன்னலரும் பரசிவன்ற னருளாலே-நினைத்தற்கரிய பர மசிவனுடைய பராசத்தியாகிய வருளாலே,—மிகுங்குடிலை த னிலுதமுதிக்கும்- மகாமாயையிலே நின்று நாததத்துவந் தோன்றும்,—விந்துவரு நாதந்தனனில்-அந்த நாதத்திலே விந்துச்சத்திதோன்றும்,—அதிலொளிவளருஞ் சதாசிவர்-அ ந்தவிந்துவிலே யொளிமிகுந்த சதாசிவதேவர் தோன்றுவர்,— ஆமவரிற் றயங்கவருமீசர்-தோன்றிய வந்தச்சதாசிவரிடத் திலே விளங்கித்தோன்றிய வீசுரதேவர்,—வித்தைதனையளிப் பர்-உருத்திரதேவரைக் கருத்தாவாகவுடைய சுத்தவித்தை

யை யுண்டாக்குவர்,—அதனாலிவ்வகையையவர் மன்னுவர்-அப்படித்தோன்றிய முறைமையாலே நாதம் விந்து சதாசிவ ரீசுர ருருத்திரரென்னு மைவருஞ் சிவஞ் சத்தி சாதாக்கிய மீசுரஞ் சுத்தவித்தை யென்னு மைந்து தத்துவங்களினு நிலைபெறுவர்கள்,—வாய்மையினான் முன்னே வந்திடுமென் றுரைசெய்தவிந்து-உண்மையான் முன்னேதோன்றுமென்று சொன்ன விந்துவானது,— வழாவகையே-கெடாத முறைமையிலே,—முன்னுதவுஞ் சூக்குமாதி யொருநான்கும்-ஆதியிலே சூக்குமைமுதலிய வாக்கு நான்கையுந் தோற்றுவிக்கும்,—என்றருங்கலைகண் முதிர்ந்துளோர் மொழிந்திடுவர்-என்றரிய சிவாகமங்களைக்கற்று முதிர்ந்தோர் சொல்வர். எ-று.

தோன்றுவரென்பது சொல்லெச்சம். இனிச் சதாசிவராமிவரிற் றயங்கவருமீசரென் றொருபதமாக்கி அதினொளிவளருஞ் சதாசிவராகிய விவரிடத்தென் றுரைப்பினுமாம். இப்பொருட்டுச் சுட்டுச் சிறப்பின்வந்தது. சதாசிவதேவநாயனார் சிவமுதலீசுராந்தம் வியாத்தராதலி னென்றறிக. நாதம்விந்து சதாசிவரீசுர ரென்பன வதிட்டான வதிட்டேயமாக வாகு பெயராய்த் தத்துவங்களையு முணர்த்திநின்றன. ஈண்டுநாதமென்றது சிவதத்துவம். விந்துவென்றது சத்திதத்துவம். பரநாதமும் பரவிந்துவுஞ் சிவதத்துவத்திலுஞ் சத்திதத்துவத்திலுமடங்கும். இந்தக்குடிலை பரமசிவனுக்கு லயபோகாதிகார மூன்றுக்குமிடமாய்ச் சுத்தமாய்ச் சேடமாயவனுக்குப் பரிக்கிரகசத்தியாய் நித்தியமாய் மேலானகாரணமாமாயையா லொன்றாய்ச சுத்தாசுத்தமான தத்துவத்தாவிகமிரண்டிலும் வியாத்தமாயிருக்கும். இதிற்சிவசத்தியதிட்டிக்கையாலே சிவமுதலிய தத்துவங்களைந்துங் கலையைந்துந் தோன்றின. எப்படியெனின் ஞானசத்தி யதிட்டானத்தா

லே சிவதத்துவமுங் கிரியாசத்தி யதிட்டானத்தாலே சத்தி
தத்துவமு மிவையிரண்டுஞ் சமமாக வதிட்டித்தபோது ச
தாசிவதத்துவமு ஞானங்குறைந்து கிரியையதிகமாக வதிட்
டித்தபோது ஈசுரதத்துவமுங் கிரியைகுறைந்து ஞானமதிக
மாக வதிட்டித்தபோது சுத்தவித்தியாதத்துவமுந் தோன்
றும். இனி ஞானசத்தி யதிட்டானத்தாலே குடிலையினின்றும்
பரநாதமுங் கிரியாசத்தி யதிட்டானத்தாலே பரவிந்துவு
ந்தோன்றும். சிவஞ்சத்தி நாதம் விந்துவாகிய நான்குஞ்சிவ
னுக்கு நிட்களமான திருமேனியென்றும் லயத்தானமென்றுஞ்
சொல்லப்படும். சதாசிவதத்துவஞ் சகளநிட்களமான திரு
மேனியென்றும் போகத்தானமென்றுஞ் சொல்லப்படும். இ
ந்தச் சதாசிவதத்துவத்திலே யக்ஷரசொரூபமாய்ச் சகள
மாயிருக்கிற வபரநாதமு மபரவிந்துவு மநுசதாசிவர்களுமட
ங்கும். ஈசுரமுதலியநான்குஞ் சகளமான திருமேனியுமா
யதிகாரத்தானமுமாயிருக்கும். முன்சொன்ன விந்துவிலே நி
ன்று முற்றும்மை யொரோவழி யெச்சமுமாகுமெனறாதலு
லைம்பத்தோரக்ஷரமுஞ் சப்தகோடி மகாமந்திரங்களு மிரு
பத்தெட்டு திவ்யாகமங்களு நாலுவேதமுந் தோன்றுமென
வுமறிக. ஈசுரதத்துவத்திலே யட்டவித்தியேசுரருஞ் சுத்தவி
த்தையிலே சத்தகோடி மகாமந்திரங்களுஞ் சத்தரூபமான
வைம்பத்தொருபத மந்திரங்களு மாகமங்களும் வேதங்க
ளுமடங்கும். இனி யவனிட்களமும் நிட்களசகளமுஞ் சக
ளமுமாக மூவிதமான திருமேனி கொண்டபொழுது பராச
த்தியும் மூவகைப்படும். எப்படியெனின் அவன் சிவமு நாத
முமாக நிட்களமானபோது சத்தியும் விந்துவுமாக நிட்களை
யாயிருக்கும். அவன் சதாசிவமாக நிட்களசகளமாயிருந்த
போது மனோன்மணியாக நிட்கள சகளையாயிருக்கும். அவ

ன் ஈசனுருத்திரன் மாலயனாகச் சகளனானபோது மகேசை யுமை திருவாணியாகச் சகளையாயிருக்கும். இனி கலைகளாந் தில் நிவிர்த்தியாவது தன்னிடத்திலே பொருந்தினவாத்மாக்களையுடைய சங்கற்பத்தை விடுவிக்கையா னிவர்த்தியென்றுபெயராயிற்று. பிரதிட்டையாவது தன்னைப்பொருந்தினவாத்மாக்களுக்குச் சங்கற்பவிருத்தியை நிலைபெறுவிக்கையாற் பிரதிட்டையாயிற்று. வித்தையாவது அந்தச்சங்கற்ப விருத்தியி னிலைபெற்ற வாத்மாக்கட் கனைத்தறிவையும் விளக்குதலால் வித்தியாகலையாயிற்று. சாந்திகலையாவது அந்த ஞானத்தாலே யாத்மாக்க ளிராகத் துவேஷமின்றி யிருந்தபடியாலே விகற்பஞானஞ் சாந்தமாயிருக்கையாற் சாந்திகலையென்றாயிற்று. அதீதகலையாவது அந்த விகற்பஞானஞ் சாந்தமானதென்கிற நினைவுங் கடந்து பரமாகாசரூபமாய் நிற்கையா லதீதகலையாயிற்று. இந்தக் கலைகளுந் தத்துவமும் புவனமு மற்ற ரூபமும் வாக்குநான்கு மட்சரங்களும் பதங்களு மந்திரங்களும் வேதங்களுஞ் சத்தரூபமுமாயிருக்கும். ஆகையாலே மஹாமாயை சத்தார்த்தரூபமாக விரண்டுவடிவாயிருக்கும். படங்குடிலானாற்போ லென்றறிக. இதன்விரிவை யாகமங்களிற் காண்க.

---

இங்ஙனஞ் சுத்தமாயா காரணகாரியத்தினியல் பருளிச்செய்து மேல் அசுத்தமாயாகாரணத்தி னியல்பை யருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

உருவாதி சதுவிதமா யொன்றொன்றொவ்வா
வுண்மையதாய் நித்தமா யொன்றாயன்று, மருவா
கிக் கன்மமா ரணுக்களியாக்கு மாவார மாயசித்தா
யசலமாகி, விரிவாய தன்செயலின் வியாபியாயெல்

லாம் விரிந்தவகை புரிந்தடைவின் மேவியவையொ டுங்க, வருகால முயிர்களெல்லா மருவிடாமாய்மலமா ய் மன்னியிடு மரனருளான் மாயைதானே. (க0)

உன்னியசகலர்க் குடம்புமுதலாய்
மன்னியவசுத்த மாயையைவகுத்தது.

(இ-ள்.) உருவாதி சதுவிதமாய்

தேகமுதலானவை நாலு பிரகாரமாவ தேதென்னில் தனுவென்றுங் கரணமென் றும் புவனமென்றும் போகமென்றும் வரு ம். அவையாவன: தனுவென்றது பஞ்சபூ தங்களுமவையிற்றின் காரியங்க ளிருபத் தைந்துங்கூடின பூததேகத்தை யெனவறி க. கரணமென்றது உட்கரணங்கள் புறக் கரணங்களெனவறிக. புவனமென்றது க ன்மம் புசிக்கைக்குண்டான விருப்பிடத் தையெனவறிக. போகமென்றது இவனுக் குப்புசிப்பாயுள்ள சத்தாதி விடயங்களை யெனவறிக

ஒன்றொன்றொவ்வா வுண்மையதாய்

அவைநாலினு மொன்றையொன் றொவ் வா முறைமையினை யுடைத்தாய். ஒன்றை யொன்றொவ்வா முவறமையாவது தனுப் போலல்லகரணம் கரணம்போலல்ல புவ னம் புவனம்போலல்ல போகம் எனவறிக.

நித்தமாய்

ஒருகாலத்தினு மழியாததாய். ஒருகாலத் தினு மழியாததாவது தன் காரியமாயுள்ள வை சங்காரகாலத்தழியினு மப்பொழுதும ழியாமல் நிலைபேறாய் நிற்பதாயென்றதெ னவறிக

**ஒன்றாய்**

அப்படிதனுகரண புவனபோகங்களாய் நின்றுங் காரியப்பட்டும் மூலகாரணமொன்று யிருப்பதாய்

**என்றுமருவாகி**

எக்காலமுமருபமா யிருப்பதாய். எக்காலமாவது அந்தத் தனுகரணபுவனபோகங்களாகப் பிரபஞ்சகாரியப் படுங்காலத்து மவையொழிந்தகாலத்துந் தான் கட்புலனுக்குத் தெரியாதாகையாலே யெனவறிக

**கன்மமாரனுக்க ளியார்க்குமாவாரமாய்**

கன்மமானது பொருந்தநின்று புசித்து முடிந்துபோம்படிக் கேதுவாயுள்ளவான்மாக்களுக்கெல்லாந் தாரகமாய். அஃதாவது ஆன்மாக்கள் கனமந்தொலைந்தே முத்திபெறவேண்டுகையா லந்தக்கன்மமானது முடிந்துபோம்படி புசிக்குமிடத்து மாயாசரீரமேடுத்து அதனோடுங் கூடிநின்று புசித்துத் தொலையவேண்டுகையா லிந்த மாயை யந்தக் கன்மங்களுக்கேற்ற சரீரங்களைக்கொடுத்து நிற்கையா லப்படிச் சொன்னதெனவறிக

**அசித்தாய்**

சித்தல்லவாய். சித்தல்லவாவது இந்த மாயை யப்படி யான்மாக்களுக்குத் தாரகமாயிருந்துந் தனக்கென்னவோ ரறிவுமில்லையாய்ச் சுத்தஜடமுமா யிருக்கையாலெனவறிக

**அசலமாகி**

சலநமில்லாததாய். சலநமில்லாததாவது எண்ணிறந்த வான்மாக்களுக்கு மெடுக்கு மெடுக்கும் ஜநநங்கடோறு மறைகத

ற்கேற்ற வெகுவிதமான சரீரங்களைக்கொடுத்துந் தான் சலிப்பற்றுநிற்கையா லெனவறிக

விரிவாயதன் செயலின் வியாபியாய்

பரப்பாயுள்ள தன்செயலாலே சுத்தமாயைக் கப்பாலளவும வியாபகத்தையுடையதாய். சுத்தமாயைக் கப்பாலென்றது அதனைப்போல வியாத்தமன்றியே தன்காரியமாயுள்ள முப்பத்தொன்றுக்குமுள்ள வியாத்தந் தனக்கு முடையதென்றதெனவறிக

எல்லாம் விரிந்தவகைபுரிந்தடைவின்மேவி

தன்காரியமாயுள்ளவையெல்லாந் தோன்றினவடைவிலே தானு மொக்கக்கூடிநின்று. தன்காரியமாவது கலையாதிமண்ணீறாந்த மளவாகவுள்ள முப்பத்தொருதத்துவமு மவையிற்றி லடங்கிவரப்பட்ட நால்வகைத்தோற்றமு மெழுவகைப்பிறப்பு மெனவறிக

அவை யொடுங்கவருகால முயிர்களெல்லாமருவிடமாய்

அந்தக் காரியங்களெல்லாந் தன்னிடத்திலே யொடுங்கத்தக்கதாகவருகிற சங்காரகால மந்தக் காரியரூபத்தைப்பற்றிநின்ற வான்மாக்களுக்குந் தன்னிடத்திலே பொருந்துகைக் கிடமுமாய். அனாதியுமிதனை எல்லாம்விரிந்தவகை புரிந்தடைவினமேவி யவை யொடுங்கவருகால முயிர்களெல்லா மருவிடமாய் எனவொருருபதமாக்கி இதற்குத் தனதிடத்திலே தோன்றப்பட்டவெல்லா மொடுங்குங்காலந் தோன்றினவடைவிலே யொன்றிலே யொன்றாகப்பொருந்தியவையெல்லாந் தன்னிடத்திலே யொடுங்கத்தக்கதாக வரு

கிற சங்காரகால மந்தப் பிரபஞ்சரூபத்தைப்பற்றி நின்ற வான்மாக்களுந் தன்னிடத்திலே பொருந்துகைக்கு மிடமு மாய் என்று பொருளுரைப்பினு மமையும். ஆன்மாக்கள் பொ ருந்துகைக் கிடமென்ற தெத்தாலென்னில் ஆனமாக்க ளநா தியே மலசகசராகையாலே யந்த ஆணவமலபாகம் வந்தே சிவனுடைய திருவடியைக் கூடவேண்டுமாகையால் அவ்வள வும் ஒடுக்கமின்றிப்பொழித்தல் மற்றத் தோற்றமலபாகம்வர. எ-ம். மாயைகொடு மலமொழிப்பன் முன்றோன். எ-ம். நூ ல்களிலே சொல்லிவருகையால் ஒடுங்குங்காலங் காரணமா யையிலே யொடுங்கியுந் தோன்றுங்காலங் காரியமாயையோ டுந் தோன்றியும் வருகையா லப்படிச் சொன்னதெனவறிக.

மலமாய் — எண்ணப்பட்ட மலங்களிலே தானுமொ ருமலமாய். எண்ணப்பட்டமலமாவது ஆ ணவம் மாயை காமியம். எ-ம். அன்றியும் மலமாயைகன்ம மாயேயந் திரோதாயி எ-ம். எண்ணப்பட்ட மலங்களிலே தானு மொருமலமா யென்றறிதெனவறிக.

மன்னியிடும் — இங்ஙன நிலைபெற்றுவறும். நிலைபெரு வது இந்தமாயையானது சிருஷ்டிகாலத்து க்குஞ் சங்காரகாலத்துக்குந் தனக்கொரு போக்குவரவின்றியே தன்னுடைய வியாத் திநிலைகுலையாமல் அசைவற்றுநிற்கையாலே யப்படிச் சொன்னதெனவறிக.

அரனருளான் மாயைதானே. — இங்ஙன நிலைபெற்றுவருகிறதுதா னுரா லேயென்னில் தம்பிரானுர் காருண்ணியத் திருலே நிலைபெறறுவரும் அசுத்தமாயை தான். எ - று. அரனருளா லென்பதற்குக்

தம்பிரானார் சத்தியாலேயென்று பொரு
ளுரைப்பினுயா மெனவறிக.

விதப்பு. இங்ஙனஞ் சங்காரகால மான்மாக்கள் காரண மாயையிலே யொடுங்குவார்களென்று சொல்லியிருக்கக்கே வலக்கூறு சொல்லுமிடத்து "மலத்திரோடும் வியாபிகேவலந் தி லான்மா." எ-ம். "மலமன்றியொன் றுமில்லை "எ-ம். "இயல்பால். எ-ம். கேவலத்திலாணவமலமொழிய மற்றொன் றுமில்லை." எ-ம். நூல்களிற் சொல்லுவானேனென்னில் அஃதாவது ஆணவமலத்துக்குச் சுபாவஞ் செம்பைக் காளிதமறைத்தாற் போலவு மக்கினியைக் காட்டமறைத்தாற்போலவு மான்மபோதத்தைமறைத்து அறியாமையைப்பண்ணிநிற்பதாதலாற் கேவலத்தி லறிகருவியாயுள்ள தத்துவங்களுநீங்கி யறியாமையே வடிவாய்க்கிடக்கையா லப்படிச்சொன்னதெனவறிக. அப்படியானா லந்தவாணவமலமறைப்புத்தாரகமாகாதோ சங்காரகாலத்துக்கு ஆன்மாக்கள் மாயைதாரகமாக வொடுங்குவார்க ளென்பானேனென்னில் அப்படியாணவத்தால் மறைப்புண்டுகிடந்தாலும் அந்தமறைப்புத் தாரகமாகா தென்றபடியால் மாயைதாரகமாக வொடுங்கவேண்டுகையாலே யப்படிச் சொன்னதெனவறிக. அப்படியாணவமல மறைத்தாலுமாயை தாரகமாக வொடுங்குகைக்கு வழியேதென்னில் முற்கூறியவுபமானத்தில் காளிதத்தால் மறைப்புண்டசெம்பு மிருக்கும் பொழுது பூமிமுதலான தாரகங்களைப்பற்றி யிருந்தாற்போலவு மற்றக்காட்டமு மப்படிக்கு பூமிமுதலான தாரகங்களைப்பற்றி யிருந்தாற்போலவு மான்மாநித்திரையிற் கேவலப்பட்டுக்கிடக்குமவதரத்து ஜீவிக்குங் கருவிகளெல்லாநீங்கி யாணவமலத்தான் மறைப்புண்டு உடல்தாரகமாக மூலாதாரத்திலே யொடுங்கிக்கிடக்கையாலுஞ் சங்காரகேவலத்துக்கு மப்ப

டிமாயையிலே யொடுங்குமென்று சொன்னதெனவறிக. அப்படிநித்திரையிற் கேவலத்துக்கு ஆன்மாவுடல்தாரகமாக வொடுங்குமென்பதற்கு. பி - ம். சிவஞானபோதத்தில். "அவ்வுடலினின்றுயிர்ப்ப வைம்பொறிகடாங்கிடப்பச், செவ்விதினவ்வுடலிற் சென்றடங்கி" எ-ம். சித்தியாரில் "உடலினிலஞ்சவத்தை யுறுமுயிர்காவலாக." எ - ம். இருபாவிருபஃதில். "உடலகத்துமூலத் தொடுங்க." எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

அன்றியும் கேவலத்தி லாணவமலமன்றியே மாயாகாரணமுண்டெனபதற் கநுபவமேதென்னில் அந்தவாணவமல மறைப்பாக மூலாதாரத்திலே யொடுங்கிக்கிடக்கு மவதரத்து அவ்விடத்திலே காரியமாயையாயுள்ள கலாதி தத்துவங்கடோன்றி யந்தவாணவமல மறைப்பை நீக்குகையாலே மூலையுள்ளவிடத்திலே கிழங்குண்டென்று கண்டாற்போலக் கலாதி தத்துவங்கடோன்றுகைக்குக் காரணமாயுள்ள மாயையு மவ்விடத்திலே யுண்டென்பது கண்டுகொள்க. அப்படி கேவலத்தில் மாயையிலே நின்றுங் கலையாதி தத்துவங்க டோன்றுமென்பதற்கு. பி - ம். திருமந்திரத்தில். "மாயையெழுப்புங் கலாதியை மற்றதி, லேயவராகாதி யெய்துந் துரியத்துத், தோயுஞ்சுழுனை கனவொடுந் துன்னியே, யாயினனந்தச் சகலத்துளானே." எ - று. கண்டுகொள்க. என்னவே துரியத்தி லராகாதி யென்பது கொண்டே யதீதத்திற் கலாதிகளென்பது கண்டுகொள்க. அன்றியும் சித்தியாரிலும், "மாயையிற் காலமோடு நியதிபின் கலாதிதோன்றும்." எ - ம். "மாயையின் வயிற்றுண்மன்னி வருஞ்செயல்ஞானமிச்சை, யேயுமக்கலாதிமூன்று மேகதேசத்தினேய்ந்து." எ - ம். வருவதுமிப் பொருள்பற்றி யெனவறிக.

அப்படி கேவலத்தில் மலமுமாயையுங்கூடி நிற்குமேயானால் மலத்தை யிருளென்று மாயையை யொளியென்று நூல்களிற்

சொல்லியிருக்க விருளாகிய கேவலத்திலே யொளியாகிய மாயை
யுங் கூடிநிற்குமென்னலாமோவென்னில் அப்படி யொளியென்று
சொல்லப்பட்டது அந்தக்காரண மாயையிலே நின்றுந் தோன்றி
யாணவமல மறைப்பை நீக்கப்பட்ட கலையாதி தத்துவங்களா
கிய காரியமாயையை யெனவறிக. அப்படி யாணவமலமறைப்பை
நீக்குகிற கலையாதி தத்துவங்களை யொளியென்பதற்கு. பி - ம்.
சித்தியாரில் "போதகாரிய மறைத்து நின்றது புகல்மலங்கா,
ணோதலாங் குணமுமாக வுயிரினுள் விரவலாலே, காதலாலவித்
தைசிந்தத் தருங்கலையாதிமாயை, யாதலா லிரண்டுஞ் சோதியிரு
ளென வேறுமன்றே". எ - ம். இந்நூலினும். "புகலுமலமொழி
த்தற்குக் கலாதிமுதல் மாயைபொருந்தியிடும்." என்றசெய்யுளில்
"இகலிவரு மிவையுணரி லிருள் வெளியாந் தன்மை பெய்தும்"
எ - ம். கண்டுகொள்க. அன்றியு மிச்செய்யுளின் கருத்தாகிய
"மலநிலையொதுங்க மாயாகாரியங்-குலவிடுமிருளொளி குறிபித
ற்கென்றது." எ-ம். கலையாதி தத்துவங்களை யொளியென்பதற்
குச் சிவஞானபோதத்தினும். "கலையாதிமன்னுந் தங் காரிய
மைமாயை, நிலையாவாந்திபமேபோல" எ-ம். "மாயாதனுவிள
க்காய்" எ-ம். திருவருட் பயனிலும். "விடிவாமளவும் விளக்க
னையமாயை வடிவாகி" எ-ம். வருமேதுக்களையுங் கண்டுகொள்க.
ஆகவிங்ஙனங் கலையாதி தத்துவங்களாகிய காரிய மாயையை
யொளியென்றது கொண்டே யான்மாக்கள் கேவலத்தில் மாயா
காரணந் தாரகமாக வொடுங்குவார்களென்பதை யநுபவத்தாற்
கண்டுகொள்க.

அப்படி நித்திரையிற் கேவலத்துக்கு ஆன்மாக்கள்மாயையி
லே யொடுங்குவார்க ளென்பதுகொண்டே சங்கார கேவலத்துக்
கும் மாயையிலே யொடுங்குவார்களென்று சொல்லலாமோ வென்
னில் முன்னே நித்திரையிற் கேவலத்துக்கு மலமன்றி யொன்று

மில்லையெனு மியல்பா யென்று ஆணவ மறைப்புக்குச் சொன்ன தைச் சங்காரகேவலத்துக் குபமானமாகக் கேட்கையா லிதற்கு மப்படிச் சொல்லப்படுமெனவறிக. அனாதியு நித்திரையிற் கேவலம்போலவிருக்குஞ் சங்காரகேவலமுமென்பதற்கு. பி-ம். தத்துவவிளக்கத்தில். "எல்லியிலித்திரைப்போ லிளைப்பாற்று மணுக்களையே." எ-ம். இந்நூலினும். "நீக்கமிலதீதமாக நிறைந்தசேவலமாநீர்மை". எ-ம். கண்டுகொள்க. ஆகையாலான்மாக்களுக்கு ஆணவமலம்போலமாயையும் அநாதிகாரணமாகையால் மலமறைக்கமாயைதாரகமாக வொடுங்குவார்களென்பதை யநுபவத்தாற் கண்டுகொள்க.

அப்படியானால் ஒருமலத்தையுடைய விஞ்ஞானகலர் அந்தவாணவ மலமொன்றோடு நின்றாற்போலச் சகலருங்கேவலத்துக்கு ஆணவமல மொன்றோடுங்கூடி நில்லார்களோ வென்னில் அந்தவொருமலத்தையுடைய விஞ்ஞானகலரும் அந்தவாணவமலபாகம்வருமிடத்து ஜீவிக்குங்காலஞ் சுத்தமாயா காரியத்தோடுங்கூடி ஜீவித்தும் ஒடுங்குங்காலம் அந்தச் சுத்தமாயா காரணத்திலே யொடுங்கியு நிற்கையால் அவர்களுக் காணவமல மொன்றென்று சொல்ல வேண்டுவதில்லையெனவறிக. அவர்களுஞ் சுத்தமாயையோடுங்கூடி வருவார்களென்பதற்கு. பி-ம். சித்தியாரில் "வித்தைகளவித்தையீசர் சதாசிவ ரென்றிவர்கள், வைத்துறும்பதங்கள்வன்னம் புவனங்கண்மந்திரங்க, டத்துவஞ் சரீரம் போகங் கரணங்கடாமெலா மூல, மாய்த்திடும்வயிந்தவந்தா னுபாதானமாகி நின்றே". எ-ம். தத்துவப் பிரகாசத்தினும் விஞ்ஞானகலருக்கு ஆணவமலமன்றியே திரோதமுஞ் சுத்தமாயையு முண்டென்பதற்கு. பி-ம். "இவ்வுயிர்கள் மூவகையாம் விஞ்ஞானகலர்க ளொழிற்பிரளயாகலர்கள் சகலர்களென்றிவரி, னவ்வகையே யாணவமு மாணவமும் வினையு மாணவமும் வினையு மாயையுமென்றுறுஞ்,

செவ்வையிலே திரோதமுடன் சுத்தமாயை சேர்மூவகைக்கு முள." எ-ம். நூல்களிற் சொல்லிவருகையா லவர்களு மாணவ மலமொன்றோடுங் கூடிநின்றாலுஞ் சுத்தமாயையாலே காரியப்ப ட்டுப் பாகம்வரவேண்டுகையால் சகலரும் மாயையிலே யொடுங் கியுந் தோன்றியும் வருவார்களென்பதே துணிபெனவறிக.

இனி யிந்தச்செய்யுளுக்குப் பதந்தோறும் பொருட் படுத்தி வந்த வவதரத்து அவையொடுங்கவருகால முயிர்களெல்லா மரு விடமாய். எ-கு. அந்தக்காரியரூபங்கள் காரணத்திலே யொடுங் குவதான சங்காரகாலம் அந்தக்காரிய வுருவத்தைப்பற்றி நின்ற வான்மாக்களு மந்தக் காரணத்திலே யொடுங்குவர்க ளென்று பொருட்படுத்தினத்துக்கு. பி-ம். தத்துவ விளக்கத்தில். "புல் லியபாசங்க ளுய்த்திடப்போகம்புமானுகர்ந்து, செல்லியகாய த் துறுஞ்செல்லனீங்கிச் சிரபுரக்கோன், சொல்லிய மண்முத லா யினமாயையி லேதொகுத்தங், கெல்லியினித்தினைப்போ லிளைப் பாற்று மணுக்களையே." எ-து. கண்டுகொள்க.

அன்றியுமந்தப் பதத்துக்கு ஆணவமலபாகம் வாராதவான் மாக்கள் ஒடுங்குங்காலங் காரணமாயையிலே யொடுங்கியுந் தோ ன்றுங்கால மந்தவாணவமலபாகம் வரக் காரிய மாயையோடுந் தோன்றியும் வருமென்று பொருட்படுத்தினத்துக்கு. பி-ம். சித் தியாரில். "உயிரவையொடுங்கிப்பின்னு முதிப்பதெ னரன்பாலெ ன்னிற், செயிருறுமலத்தினுருஞ் சிதைந்ததே தென்னிற்சித்தத், தயர்வொழிகாரியங்க ளழியுங் காரணங்கிடக்கும், பயிறருகாரிய ம்பின் பண்டுபோற் பண்ணுமீசன்." எ-று. கண்டுகொள்க. எ ன்றிங்ஙன முதாரணமாகக்காட்டின விந்தச்சித்தியாரின் செய்யு ளிலே ஆன்மாக்க ளாணவ மலபாகம் வருமளவுஞ் சங்காரகால மாயா காரணத்திலே யொடுங்கியுஞ் சிருஷ்டிகால மாயாகாரியந் தோடு தோன்றியும் வருவார்களென்பதற்குப் பொருளாவது:—

உயிரவை யொடுங்கிப்பின்னு மூதிப்பதென் னரன்பாலென்னில். எ-து. உம்முடையகத்தாவி னுக்கினையின் பகுதியாலே சங்கார காலம் பிரபஞ்சமுமழிந்து ஆன்மாக்களு மொடுங்குமேயாமாகில் மீளவுந்தோன்றுவா னேனென்று நீகேட்கில்,—செயிருறு மலந் திருகும். எ-து. அப்படித்தோன்றுகிறது குற்றம் பொருந்தின வாணவமலபாகம் வாராத வான்மாக்கள் அந்த மலபாகம் வருகைப்பொருட்டாக மீளவுமாயையிலே தோன்று நிற்பர்கள்,—சிதைந்த தேதென்னில் எ-து. அப்படியான்மாக்கள் மாயையிலே தோன்றுவார்களாகில் உம்முடைய கத்தாவாலே சங்காரகாலத் திலழிக்கப்பட்ட தேதென்று நீகேட்கில்,—சித்தத் தயர்வொழி காரியங்களழியும். எ-து. சித்தமாகிய வான்மாவை அயர்வாக மறைக்கப்பட்ட வாணவமலத்தைப் பாகம் வருத்துகைக்குத் தத்துவமாயுள்ள காரியமாயையழியும். அப்படியழிந்துபோன காரிய மாயை மீளவுஞ் சிருஷ்டியிற் றோன்றுகைக்கு வழியேதென்று நீ கேட்கில்,—காரணங்கிடக்கும். எ-து. அப்படிக் காரியங்களன்றியு மழிந்தும் வருகைக்குபாதானமாயுள்ள காரணமாயை சங்காரகாலத்திலு மழியாமற் கிடக்குமாகையாலே,—பயிறருகாரியம்பின் பண்டுபோற் பண்ணுமீசன், எ-து. ஆன்மாக்கள்போகம் புசிக்கதற்குடம்பாகப் பொருந்தப்பட்ட காரியமாயையை முன்பு போல வந்தக் காரணமாயையிலே நின்றுஞ் சிருஷ்டிப்பன் சிவன்றான். எ-று. என்று பொருளுரைத்துக் கொள்க. அன்றியும் சிவாகமதில் "மாயாதத்வம் ஜகத்பீஜ மவிநாஶ்யசிவாத்மகம், விஶ்வேவகமமலம் ஸூக்ஷ்ம மநாஸ்தவ்யய மீஶ்வரம்". "தத்தேகம் சிவம்பீஜம் ஜகத்சித்ர சத்திமது,சத்காரியா திகாராந்த சம்ரோதிவியாபிமீஶ்வரம்" எ-து. கண்டுகொள்க.

எல்லாம் விரிந்தவகை புரிந்தடைவின் மேவியவை யொடுங்க வருகாலமுயிர்களெல்லா மருவிடமாய். எ-கு. ஆன்மாக்கள்

சங்காரகாலங் காரணமாயையிலே யொடுங்குவர்க ளென்பது வ
ழக்கல்லவென்று எல்லாம் விரிந்தவகை புரிந்தடைவின் மேவிய
வையொடுங்க வென்றுபதமுறித்து அதனைச் சங்காரகாலமாக்கி
வருகால முயிர்களெல்லா மருவிடமாயென்ற பதத்தைச் சிருஷ்
டிகாலமாக்கிப் பொருளுரைப்பாருமுளர். அதுவழக்கல்லவென
வறிக. அதுவேனென்னி லிந்தச் செய்யுளுக்குப் பதந்தோறும் ய
கரவொற்றுமுடிவாகப் பதமுறித்து வருகையாலும் ஒடுங்கவெ
ன்று பதமுறியாதபடியாலும் அன்றியும் முன்னர்ப் பதங்களெல்
லாஞ் சிருஷ்டியைச் சொல்லிவந்து மேற் சங்காரத்தைச் சொல்
லி முடித்துவிடுகிறதொழிட மீளவுஞ் சிருஷ்டியைச்சொல்ல வழ
க்கல்லாதபடியாலும் அன்றியுமிச்செய்யுள் காரண மாயையைச்
சொல்லுகையாலதனுடைய செய்தியைக் கூறுகிற தொழிபக் கா
ரியமாயையின் பிரசங்க மிவ்விடத்துக் கூறப்படாதாகையாலும்
ஒடுங்கவென்று பதமுறித்து வருகால மென்பதைச் சிருஷ்டிகா
லமென்று பொருட்படுத்துகை வழக்கல்ல வெனவறிக. ஆகை
யால் அவையொடுங்க வருகால முயிர்களெல்லா மருவிடமாய் எ
ன்றொருபதமாக்கிச் சங்காரகால மான்மாக்கள் மாயையிலே
யொடுங்குவர்க ளென்பதே சித்தாந்த வழக்கெனவறிக. அன்றி
யும் இந்தப் பதத்துக் கிதுவே வழக்கென்பதற்கு முற்கூறிய வுப
மானங்களன்றியே இந்நூலைப் பின்சென்ற நூலாகிய திருநெறிவி
ளக்கத்தினு மிந்தச் செய்யுளுக் கெதிரடை விருத்தமாகிய "மெய்
யாதி நால்வகையா யொன்றுக்கொன் றெவ்வாவெகுவிதமா யே
கமாய் வீதலகன் றருவா, யெய்யாமல் வினையிலுழ லாருயிர்க
ளைக்கு மிருப்பாகி யசேதனமாய்ச் சலிப்பிலதாய்த் தனது,
பொய்யாய நிலைபளவும் பூரணமாயாவும் பொருந்தவடை வேயு
ரிந்து பொருந்திவினை யொன்றுஞ், செய்யாதவிறுகாலஞ் சேதன
ங்கட் கெல்லாஞ் சேர்விடமா மாயையெனச் செப்புநூலே"என்

டாதனுள் "வினையொன்றுஞ் செய்யாத விறுகாலஞ் சேதனங்கட்கெல்லாஞ் சேர்விடமாமாயை" என்றபதத்தை அவையொடுங்க வருகால முயிர்களெல்லா மருவிடமாய் என்றபதத்துக்குக் கண்டுகொள்க. அதற்கு வழியேதென்னில் வினையொன்றுஞ் செய்யாத விறுகாலம். எ-து. சங்காரகால மாகையாலும், சேதனங்கள் எ-து. ஆன்மாக்களாகையாலும், சேர்விடம். எ-து. ஒடுங்குமிடமாகையாலும், மாயை. எ-து. அசுத்த மாயாகாரண மாகையாலும் சங்காரகால மான்மாக்கள் மாயையிலே யொடுங்குவர்களென்னும் பொருட் பெற்று நிற்கையா லந்தப்பதத்துக் குவமிக்கப்பட்டதெனவறிக. இந்தத் திருநெறிவிளக்கம் பின்னூலாயிருக்கவு மிதனை யெடுக்காட்டிய தேதென்னி லந்நூல் சிவப்பிரகாசத்தைப் பின்சென்ற நூலா யிருக்கையினாலு மன்றியும் விருத்தந்தோறும் விருத்தந்தோறுஞ் சத்தம்பேதித்து வருகையேயன்றி யத்தமொன்றுபட்டு வருகையாலு மதுகாட்ட வேண்டிஉருவாதி சதுவிதம். எ-கு. மெய்யாதி நால்வகையாயென்ற சத்தம்போல அவையொடுங்க வருகால முயிர்களெல்லா மருவிடமாய். எ-கு. வினையொன்றுஞ் செய்யாத விறுகாலஞ் சேதனங்கட்கெல்லாஞ் சேர்விடமாம் என்பது காட்டவேண்டி யெடுத்துவாகவிட்டதெனவறிக. ஆகையால் முற்கூறிய வுபமானங்களினாலு மேதுக்களினாலு மான்மாக்கள் சங்காரகாலம் ஆணவமலத்தால் மறைப்புண்டு மாயையிலே யொடுங்குவர்களென்பதே சித்தாந்த வழக்கென்பதை யநுபவத்தாற் கண்டுகொள்க. இதுவே பொருளென்பதற்குக் கற்பகாலத்துப் பிரமாவுக்கு மாயையிலே யொடுக்கமென்பதற்குச் சூதசங்கிதை யென்னுங் கிரந்தத்திற் கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது அசுத்தமாயையானது சிருஷ்டிகாலந் தன்னிடத்திலே நின்றுந் தோன்றப்பட்ட காரியங்க ளோடே

கூடி நிற்குமென்று மந்தக் காரியங்களெல்லாந் தன்னிடத்திலே யொடுங்கத்தக்கதாக வருகிற சங்காரகால மந்தக் காரியரூபத் தைப்பற்றி நின்ற வான்மாக்களுந் தன் னிடத்திலே பொருந்து கைக்குத் தாரகமா யிருக்குமென்றும் வருமுறைமையை யறிவித் தது. (௧0)

---

வேறு—இஃ தசுத்தமாயையை யுணர்த்திற்று.

மாயை - அசுத்தமாயையானது,—உருவாதிச துவிதமாய்-தனுகரண புவனபோகமென்னு நான்குவிதமாய், — ஒன்றொன் றொவ்வா வுண்மையதாய்-அவைதா மொன்றையொன்றொவ்வா தமுறைமையினை யுடையதாய்,—நித்தமாய்-அழியாததாய்,—ஒ ன்றாய்-ஒருமுதலேயாய்,—என்றுமருவாகி-எக்காலமுந்தோன்று ததாய்,—கன்மாந்த மணுக்களியார்க்கு மாவாரமாய்-கன்மந்தொ லையுமளவு மாத்மாக்க ளெல்லாவற்றிற்கும் விஷயங்களிலே யறி வை மயக்குவதாய்,— அசித்தாய்—சடமாய்,—அசலமாகி-சலன மற்றதாய்,—விரிவாயதன்செயலில் வியாபியாய் - தோன்றிப்ப ரந்த தன்னுடைய காரியமான தத்துவ மூப்பத்தொன்றினும் வியாத்தத்தை யுடைத்தாய்,—எல்லாம் விரிந்தவகைபுரிந்து-அச் சகலமுந்தோன்றின கூற்றிலே நின்று,—அடைவின்மேவி-அடை விலேபொருந்தி,—அவையொடுங்க வருகால முயிர்களெல்லாம ருவிடமாய் - அந்தத்தத்துவங்க ளொடுங்கவருகிற சங்காரகாலத் திலே யவ்வுயிர் நிலைகளெல்லா மங்குராதிவித்திடத் தடங்குமா றுபோலப் பொருந்துதற்கிடமாய்,—மலமாய்-ஆத்மாக்களுள்ள படி காணமல் பொய்யை மெய்யென்றுகாண மயக்குமலமாய்,— அரனருளான் மன்னியிடும் - சிவ னனுக்கிரகத்தா னிலைபெ றும்.எ-று.

கன்மாந்த மாவாரமா யென்பதற் கன்னியவுதாரணம் கரும

த்ததிகாராந்தத்தளவும் விதிமுறைகொடுக்கும் வியப்பிற்றனதென் பதென்றறிக. கன்மமாரனுக்களென்றுபாடமோதிக் கன்மத்தைப் பொருந்திவருகிறவென் றுரைப்பாருமுளர். உயிர்களென்பதாகு பெயர். உயிர்களைத்தன்வசமாய் மயக்குதலின் மாயையெனப் பெய ராயிற்று. அதுதான் காரணரூபத்தான் மோகிப்பிக்குங் காரியரூப த்தாற் பயன்படும். நூலுருகப்பயன்படாது காரியமான படத்தா ற்பயன்படுமத்தனை. இதன்படைப்புச் சூக்குமந்தூலமென் றிருவி தமாம். கலைமுதலான காரண முப்பத்தொன்றுஞ் சூக்குமசிரு ஷ்டி தனுபுவனபோகமூன்றுந் தூலசிருஷ்டியெனவறிக. பூதங்க டன்மாத்திரை யாங்காரம் புத்தி பிரகிருதி கலாதிகளாகவிவையா றுமொன்றுக்கொன்று சூக்குமமாயிருக்கும். இன்னுமிதன்விரிவை யாகமங்களிற்காண்க.

---

இங்ஙனஞ் சொல்லப்பட்ட தேகாதிபிரபஞ்சந் தோன்றுமி டத்தும் பரப்பிரமத்திலே நின்றுந்தோன்றி யதிலேயொடுங்கும தொழிந்து அப்படி யசுத்தமாயாகாரணமென் றொருமுதல் நாட் டிக்கொள்ள வேண்டுவதில்லையென்கிற மாயாவாதியை நோக்கிச் சித்தாயுள்ள பிரமத்தினிடத்து ஜடமாயுள்ள பிரபஞ்சந் தோன் றாதென்று மறுத்தருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

எண்ணிலிதுவெளியுலகுக்குபா தானமில்லையிறை
வனலதெனிற்சித்துச்சித்தினிடத்துதியா, மன்னியுள
தென்முதல்வனென்கொலென்னின் மாயைதானசித்
துருவாய்மருவமாட்டா, தன்னவனுமிதுவொழியவா
க்கமாட்டா னசத்தனுமெனினதுவுமவன்போனித்த,
முன்னவனவ்வசித்தைவிரித்தெவையுமாக்கு முதன்
மையதுகொடுத்ததென மொழிந்திடாரோ. (௧௧)

உலகுபிரமத் துதித்தொடுங்கிடுமெனுங்
கலதிதன்மொழியைக் காட்டிமறுத்தது.

(இ-ள்.) என்னை யிதுவெனிற்

பிரபஞ்சந் தோன்றுகைக்கு இங்ஙனஞ் சொல்லப்பட்ட மாயாகாரணமென் றொருமுதலை நாட்டிக்கொள்ளவேண்டுவ தில்லையென்று நீசொல்லில்

உலகுக் குபாதானமில்லை

பிரபஞ்சந் தோன்றுகைக் கிந்தமாயையன்றி வேறொரு காரணமுமில்லையாம்.

இறைவ னல தெனின்

கத்தாவல்லவோ பிரபஞ்சந் தோன்றுகைக்குக் காரணமென்று நீசொல்லில்

அசித்துச் சித் தினிடத்துதியா

அசேதனமாயுள்ள பிரபஞ்சஞ் சேதனமாயுள்ள கத்தாவினிடத் துத் தோன்றாது. ஆகையால் மாயை வேண்டுமெனவறிக.

மன்னியுளதே தன் முதல்வனென்கொ லென்னின்

அப்படி மாயையென்பதொன்று நிலைபெற்றுடையதாகில் தலைவனாயுள்ள கத்தா வென்னகாரணத்துக்கென்று நீகேட்கிறாயாமாகில்

மாயைதா னசித்துருவாய் மருவமாட்டாது

அந்த மாயையானது ஜடமாயிருந்தபடியாலே தானே யுருக்களாகப் பொருந்தமாட்டாது. ஆகையாலே கத்தாவேண்டுமெனவறிக.

அன்னவனு மிறொழிய வாக்கமாட்டா னைசத் தருமெனின்

அந்தக்கத்தாவு மிந்தமாயையைக்கொண்டல்லது பிரபஞ்ச நடத்தமாட்டான். ஆனபடியாலே யவனுஞ் சத்திஹீனனாயவனென்று நீ சொல்லில்

அதுவு மவன் போனித்தம்

அந்தமாயையு மவனைப்போலே நித்தியமாயிருப்பதொன்று. ஆகையாலே

முன்னவனவ்

அநாதியா யிருக்கப்பட்ட கத்தாவுந் தன்

வசித்தை விரித்தெவையு மாக்கும்

னைப்போலே யநாதியா யிருக்கப்பட்ட காரணமாயையிலே நின்றுங் காரியமாயையா யிருக்கிற பிரபஞ்சத்தை விரிவிலே தோற்றுவித்துச் சர்வத்தையு முண்டாக்குவன். அதுகொண்டே

முதன்மை யது கொடுத்த தெனமொழிந்திடாரே.

அப்படி யந்த மாயையைக்கொண்டு கத்தா பிரபஞ்சத்தை யுண்டாக்கிற சாமார்த்தியமும் அந்த மாயைதா னுண்டாக்கினதென்று பெரியோர்கள் சொல்லார்கள். எ-று. என்னவேமுதன்மையது கொடுத்ததென மொழிந்திடாரே. எ-து. அதனு லரூபமா யிருக்கப்பட்டமாயையிலேநின்று முரூபமாயிருக்கிற பிரபஞ்சத்தை யுண்டாக்கிறகத்தா வந்தமாயை யில்லாதபொழுது முண்டாக்கிக் கொள்ள வல்ல னென வறிக.

உதாரணம். கத்தாவினிடத்திலே பிரபஞ்சந்தோன்றி யொடுக்குமதொழிந்து மாயாகாரணமென வொன்றுண்டென்ன வேண்டுவதில்லையென்று மாயாவாதிசொன்னதற்கு. பி-ம். சித்தியாரில். "தாங்குமுலகுக்குபாதானஞ் சத்தாஞ் சிலம்பிநூறன்பால், வாங்கிவைத்துக்காப்பதுபோல் வையமெல்லாந்தன்பக்க, லோங்கவுதிப்பித்துளதாக்கி நிறுத்தியொடுக்கத்திலதாக்கு, மாங்குவந்தவாறதனுற் சத்தாஞ் சகத்தினமைவெல்லாம்". எ-து. கண்டுகொள்க. அசித்தாயுள்ளபிரபஞ்சஞ் சித்தாயுள்ள கத்தாவினிடத்துத் தோன்றுதென்று அவனை மறுத்ததற்கு. பி-ம். சித்தியாரில். "மாயநூலது சிலம்பிவாயினிடை வந்தவாறதனைமானவே, யாயவேயுலகமானதும் பிரமமதனிலேயெனி லடங்கினை, நேயமாகுமொருசித்துமத்துட விலாததென்றுபினியபிம்பினீ, பேயனேகட

பிருத்திவில்வந்தது பிறப்பதாவதிலேபேசிலே". எ-து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது அப்படி மாயாகாரணமென்றொரு முதலில்லை கர்த்தாவினிடத்திலே பிரபஞ்சந் தோன்றுமென்ற மாயாவாதியைமறுத்துச் சித்தாயுள்ள சிவனிடத்திலே ஜடமாயுள்ள பிரபஞ்சந் தோன்றாதாகையால் மாயையுண்டென்னு முறைமையையறிவித்தது. (கக)

---

வேறு—இது சிவாத்துவிதி மாயாவாதிகளை மறுத்து மாயையுண்டென்ப துணர்த்திற்று.

என்னை யிதுவெளி னுலகுக்குபாதானம்-இந்தமாயைதானெதற்கென்று நீசொல்லில் பிரபஞ்சத்திற் கொருதாரகமாம்,—இல்லையிறைவனலதெனின்-அங்ஙனந் தாரகமாக மாயையென வொன்றுவேண்டுமோ கருத்தாவினிடத்திலே பிரபஞ்சஞ் சிலந்தியிடத்து நூறோன்றி யொடுங்கினாற்போலவுங் கடலிற்றிரைதோன்றி யொடுங்கினாற் போலவும் வானிடத்து மின்னு மிடியுந் தோன்றி யொடுங்கினாற்போலவுந் தோன்றி யொடுங்கு மாதலா லிறைவனல்ல துபாதானமில்லையென்று நீசொல்லில்,—அசித்துச் சித்தினிடத்துதியா-அசித்தான பிரபஞ்சஞ் சித்தாகிய சிவனிடத்துத்தோன்றுகாண் பொன்னிற்களிம்புதோன்றுமையின், — மன்னியுளதேன் முதல்வனென்கொலென்னின்-மாயை யிப்படி நிலைபெற்றுள்ளதாயிற் கருத்தா வென்னை யென்று நீசொல்லின்,—மாயைதான் சித்துருவாய் மருவமாட்டாது-அதுதான் சடமாகையாற்றானே தனுவாதிகளாய் பொருந்தமாட்டாது,—அன்னவனு மிதுவொழியவாக்கமாட்டான்-அந்தக் கருத்தாவு மிந்தமாயையைக்கொண்டன்றி யொன்றை யுண்டாக்க மாட்டான்,—அசத்தனாமெனின்-ஆனாலிவன் சத்தியீனனாவனென்று நீசொல்லின், — அதுவுமவன்

போனித்தம்-அந்த மாயையு மவனைப்போல வநாதியேயாதலிற் புதிதாகவொன்றை யுண்டாக்கிக்கொள்ள வேண்டுவதில்லை, — முன்னவனவ்வசித்தைவிரித் தெவையுமாக்கும் - கருத்தா வந்தமாயையை விரியப்பண்ணி யெவற்றையு முண்டாக்குவன்,—முதன்மையது கொடுத்ததென மொழிந்திடாரே-ஆதலாலே கர்த்தவ்வியத்தை யந்த மாயை கொடுத்த தென்று பெரியோர்கள் சொல்லார். எ-று.

இது வென்னையென்று மிறைவனல தில்லை யுபாதான மென்று மாயைமன்னியுளதேலென்று மொழிமாற்றுக.

---

அப்படியே பிரபஞ்சத்தை யும்முடையகத்தாவே காரியப் படுத்துவனுமாகிற் சர்வான்மாக்களையு மொருதன்மையாகச் செய்யாதிருப்பானேனென்ற பட்டாசாரியனைநோக்கி மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

படைத்தொருபடியின் றிப் பறவைபசுநராய்
ப் பண்ணியதென் முன்னைவினைப் பான்மையென்ப
ரடுத்தவினையுளதாயி னிறையேயெனி லசேதனமற்
றவையாவிக்கமைத்ததாகு மெடுத்தவினையுருவுறுவ
துயிரேற்றாலோ யிருவினைக்குத்தக்கவுட லெய்துமென்
னிற், சடத்திரளுங்கத்தாவாயதிவொன்றில்லாத் தன்
மையனுங் கூடவொருசங்கையின்றே. (கஉ)

பல்லுருவாகப் படைப்பதற்கேது
தொல்லைவினையின் றொடர்ச்சியைச்சொன்னது.

(இ - ள்.) ப உம்முடையகர்த்தா படைக்குமிடத்துச் சர்
டைத்தொரு ப வான்மாக்களையு மொருதன்மையாகப் படை
டியின்றிப் பற யாமல் நரர் மிருக பசு பக்ஷி தாபராதிகளாயு

*வைபசு நரராய்ப் பண்ணியதென்*

ள்ள நால்வகைத்தோற்றமு மெழுவகைப் பிறப்புமாகச் சிருஷ்டிப்பானேனென்று நீ கேட்கிறாயாமாகில்

*முன்னை வினைப் பான்மையென்பர்*

ஆன்மாக்கள் முன் ஜநநத்திற்செய்த வினையின்பகுதிக் கீடாக வென்று சொல்லுவர்கள் பெரியோர்கள்.

*அடுத்த வினையுளதாயி னிறையே னென்னில்*

ஆன்மாக்கள்செய்த புண்ணியபாவங்களுக் கீடாகச் சரீரங்க ளுண்டாமாகி லந்தக்கன்மமே யமையாதோ கத்தா வொருவன்வேறுமோ வென்னில்

*அசேதன மற்றவை யாவிக் கமைத்ததாகும்*

அந்தக் கன்மங்களுக் கறிவில்லாத படியாலே தானுக வுடம்புகளை யுண்டாக்க மாட்டாதாகையால் கத்தா வான்மாக்கள்செய்த வினைக்கீடான வுடம்புகளை யுண்டாக்கினதாம்.

*எடுத்தவினை யுருவுறவ துயிரோற் றுனே யிருவினைக் குத் தக்க வுடலெய்து மென்னில்*

அந்தக்கன்மத்துக் கீடாக வெடுக்கப்பட்ட சரீரத்திலே நின் றநுபவிக்கிற தான்மாவேயாகில் தான்செய்த புண்ணிய பாவங்களுக்கீடான சரீரத்தைத் தானே யெடுத்துக் கொள்ளுமென்னில்

*சடத் திரளுங் கத்தாவா யறிவொன் றில்லாத் தன்மையனுங் கூடவொரு சங்கையின்றே.*

ஜடமாயுள்ள வுடலினது கூட்டங்களுங் கத்தாவல்லனுமாய்த் தானேயறிகைக்கோரறிவில்லாதவான்மாவுந் தம்மிற்கூடி யறிகைக் கோர்காரணமுமில்லை. எ-று. என்னவே சிவனே சர்வமுமறிந்துநின் றான்மாக்கள்செய்த கன்மத்துக்கீடான சரீரங்களைக் கொடுப்ப னென்பது கருத்து.

வி-பு. படைத்ததொரு படியின்றிப் பறவைபசு நரராய்ப் பண்ணியதென் என்று பட்டாசாரியன்கேட்டது பிரபஞ்ச மொருவழிப்பட் டிராததுகொண்டே கத்தா படைக்கிற படைப்பால் பக்ஷபாதியாவனென்பது அவனுக்குக்கருத்து. என்னவே பிரபஞ்ச மநாதியே யுடையதென்பது மது வொருவர் படைக்க வேண்டுவதில்லை யென்பது மவனுக்குப்பக்ஷம். இதற்கு. பி-ம். சித்தியாரில். "போக்கொடுவரவுகால மொன்றினிற் புணர்வதின்றி, யாக்க வேறொருவரின்றி யநாதியா யணுக்களாகி, நீக்கிடா வினையிற்கூடி நிலமுதலாகநீடி, யூக்கமாருலகமென்று முள்ளதென்றுரைக்காலமே". எ-து. கண்டுகொள்க. அதனை முன்னைவினைப்பான்மையென்ப ரென்றுமறுத்ததற்கு அடுத்தவினையுளதாகி லிறையேயென்று மீளவுமவன் சொன்னதற்கு. பி-ம். சித்தியாரில். "செயல்களே பலத்தைச்செய்யுந் தெய்வம் வேண்டாவிங்கென்னின், முயலுமிச்செயல்களிங்கே முழுவது மழியுமெங்கே, பயனளிப்பவ னழிந்தே பலன்களைப்பண்ணுங்கெட்டே, வயலிடுந்தழையுந் தின்னுமருந்தும்பின்பலிக்குமாபோல்". எ-து. கண்டுகொள்க.

இனி யசேதனமற்றவைபாவிக் கமைத்ததாகும் என்றுமறுத்ததற்கு எடுத்தவினை யுருவுறுவதுயிரோற்றனே யிருவினைக்குத் தக்கவுட லெய்துமென்று மீளவுமவன்சொன்னானென்பதற்கு. பி-ம். சித்தியாரில் 'நித்தமாயெங்குமுண்டாய் நீடுயிரறிவுதானாய்ப், புத்திதானாதியாயகருவியின் புறத்ததாகிச், சுத்தமா யருவமாகித்தொல்லைவல்வினையின்றன்மைக், கொத்ததோருருவம்பற்றிப்புலன்வழியுணர்ந்துநிற்கும்". எ-து. கண்டுகொள்க.

என்றிங்ஙனம் பட்டாசாரியன் சொன்னதை, சடத்திரனுங் கத்தாவா யறிவொன்றில்லாத் தன்மையனுங் கூடவொருசங்கையின்றே என்றவனை மறுத்ததற்கு. பி-ம். சித்தியாரில். "உலகுடல் கரணங்கால முறும்பல நியதிசெய்தி, பலவிவைகொண்டு

கன்மம் பண்ணுவதன்பதாஞ், னிலவிடா வினைதாஞ்சென்று நினைந்துயிர் நிறுத்திக்கொள்ளா, வலகிலாவறிவனானை யணைத்திடு மருளினாலே". எ-து. கண்டுகொள்க.

ஆனபடியினாலே சிவன் ஆன்மாக்கள்செய்த கன்மங்களை யறிந்து அதற்கதற்கேற்ற சரீரங்களைக் கூட்டிப்புசிப்பிக்கையாலே பக்ஷபாதியல்ல நடுவனென்பதற்கு. பி-ம். இருபாவிருபஃதில். "வாக்குமனமும் போக்குளதனுவுஞ்-சொல்லுநினைவுஞ் செய்யுஞ்செயலு-நல்லவுந்தீயவு மெல்லாமறிந்து-முறைபிறழாமற் குறைவுநிறை வின்றாய்க்-காலமுந்தேசமு மாலறவகுத்து-நடுவுநின் றருத்தலி னடுவனாகுதியே". எ-து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது பிரபஞ்ச நித்தியமாயிருப்பதொன்றென்று மதுதானே காரியப்படுமதொழிந்து கத்தா வேண்டுவதில்லையென்று மான்மாத் தானேசெய்த கன்மத்துக்கீடான சரீரத்தைத் தானே யெடுத்துக்கொள்ளு மென்றுஞ் சொன்ன பட்டாசாரியனை மறுத்துக் கன்மமுஞ் சரீரமும் ஜடமானபடியாலு மான்மா தனக்கென்ன வோரறிவில்லாதபடியாலு மிவையிற்றைக்கூட்டிக் காரியப் படுத்துகிறது சிவனே யென்னு முறைமையை யறிவித்தது. (௧௨)

———0———

வேறு—இஃது லோகாயதன்முதலியோரை மறுத்துக் கருத்தாகன்மத்துக்கீடக மாயையை வியத்திப்படுத்துவனென்ப துணர்த்திற்று.

படைத்ததொரு படியின்றிப் பறவைபசுநரராய்ப் பண்ணியதென் - கருத்தாவே படைப்பானாயி னிங்ஙனம் படைக்கப்பட்ட பிரபஞ்சத்தை யொருபடியாகப் படையாமற் பறவைமுதலியனவாகப் படைக்கவேண்டிய தென்னையென் றுலகாயதன்சொல்லில்,— முன்னைவினைப் பான்மையென்பர்-

ஆத்மாக்கள் முன்செய்தகன்மத்துக் கிடாகவென்று சொல்லுவர் பெரியோர்,—அடுத்தவினை யுளதாயி னிறையேனெனில் - முன்கூடின கன்மமுண்டாயிற் பின்னைக் கருத்தாவென்னை தானென்று நிரீச்சுராசாங்கியன சொல்லில்,—அசேதனம் - அக்கன்மஞ்சடம்,—மற்றவையாவிக் கமைத்ததாகும்—கருத்தா வந்தவுடம்புகளைப் படைத்தது முன்னாரார்ஜித்த கன்மபலங்களைப்புசிக்கு மாத்மாக்களுக்காயிருக்கும்,—எடுத்தவினை யுருவுறுவதுயிரேல் - முன்னார்ஜித்த கன்மபலத்தையோ ருடம்பிலேநின் றனுபவிப்ப தாத்மாவாயின்,—தானேயிருவினைக்குத்தக்க வுடலெய்துமென்னில் - ஆத்மாத்தானே புண்ணியபாவங்களின் முறைமைக்கிடான உடம்பைப் பொருந்துமென்று பின்னுஞ்சொல்லில்,—சடத்திரளுங்கருத்தாவாயறிவொன்றில்லாத் தன்மையனுங் கூடவொரு சங்கையின்றே - சடமான மாயாகாரியத்தின் றிரட்சியுங் கருத்தாவல்லாய்த் தானே யறிகைக்கோ ரறிவுமில்லாத முறைமையினையுடைய வாத்மாவும் பொருந்துதற் கொரு பிரமாணமில்லை. எ - று.

காரணமில்லை யென்பாருமுளர். என்னிலென்பது முன்னுங் கூட்டப்பட்டது எடுத்தவினையாகுபெயர்.

---

அப்படியே கன்மத்துக்கிடாக ஆன்மாக்களுக்குக் கர்த்தா மாயாசரீரங்களைக் கூட்டிப் புசிப்பிக்கு மவதாரத்துக் கன்மமுண்டாயே மாயாசரீரமுண்டானதோ மாயாசரீரமுண்டாயே கன்மமுண்டானதோ வென்றுவினவ மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

அல்லலம்பிக வாபிரக்கிவைதா னணைத்ததீச னரு வினைக ளருந்துதற்கோ வினையோவன்றிச், சொல்லி வரு மாயையோ வணுவைமுந்தச் சூழ்ந்ததெனு மூ

னைமுதலோர் துடக்கிலார்பா, லொல்லைவரு மெனி
னுளதா முயிருண்டாவே யுளதுமல மலமுளதா யொ
ழிந்தவெல்லா, நெல்லின்முளை தவிடுமிபோ லநாதி
யாக நிறுத்திடுவ ரிதுசைவ நிகழ்த்துமாறே. (௧௩)

சாலியின்முளையுந் தவிடுமியும்
போலமும்மலமும் புராதனமென்றது.

(இ-ள்.) அல்லன்மிக வுயிர்க்கிவைதானனைத்த திசனருவினைகளருந்துதற்கோ — துக்கமிகவுண்டாக வான்மாக்களுக்கிந்தவுடம்புகளைத் தம்பிரானார் கூட்டினது அருபமாயிருக்கிற கன்மங்களைப் புசித்தற்கோ அப்படியாமானால்

வினையோ வன்றிச் சொல்லி வருமாயையோ வணுவை முந்தச் சூழ்ந்தது — கன்மமோ அதுவொழிந்து சொல்லப்பட்டுவருகிற மாயையோ ஆன்மாவை முந்த வந்து பொருந்தினது.

எனுமுறை — என்றுசொல்லுகிறது

முதலோர் தொடக்கிலார்பா லொல்லைவரு மெனினுளதாம் — அநாதியே யொருதொந்தனையு மில்லாதாரிடத்திலே மாயாகன்மங்களுண்டானா லல்லவோ அதற்குத்தாமுளதாவது. இந்த மாயையுங் கன்மமு மொழிய வேறுளதேதெனனில்

உயிருண்டாவேயுளதுமலம் — ஆன்மாவென்றுண்டு அன்றேயுள்ள தாணவமலமும். அப்படியானால் மாயையுங் கன்மமும் பின்புண்டானதோவெனனில்

மலமூன்றா — அந்தவாணவமல மூண்டாகவே மற்றுமொழிந்தவெல் — ளாயாமாயாமமுங் கன்மமலமும்
லாம்

நெல்லின் மு — நெல்லிலே யுண்டாகப்பட்ட மூளையுங்
ளை தவிடுமிபோ — தவிடு மூமியு மொக்கவுண்டானாற்போல,
லநாதியாகநிறு — வினையு மநாதியென்று பெரியோர்களிச்
த்திடுவர் — சயிப்பர்கள்

இதுசைவ நி — இப்படிச்சிவாகமஞ்சொல்லும். எ - று.
கழ்த்துமாறே.

வி - பு. அல்லன்மிக வுயிர்க்கிவைதா னனைத்ததீச னருவினைக ளருந்துதற்கோ என்று நிகண்டாவாதி சொன்னானென்னவுமாம். அதுவெங்ஙனேயென்னில் கத்தா கிருபாமூர்த்தியாகையாலே யவனுன்மாக்கள் துக்கங்களை யநுபவிக்கத்தக்கதாக வுடம்புகளைக்கூட்டான் ஆன்மா தானேசரீரத்தோடுங்கூடி யநுபவிக்குமென்பது கருத்தாகையாலும் அன்றியுங்கத்தா பொன்னெயில் வட்டத்திலே பிரபஞ்சந்தோய்வற்றிருப்பானென்கையாலு மெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில் "அந்தவாய்மொழியி னுலவன்சரண மாதியோக முதலானது, விந்தமாநில மயங்கிடாதவகை யிங்கியம்பினளிதன்பொருள், வந்தகாலமுயிர் கன்மகன்மியற மற்றும் விண்மருவு புற்கலம், பந்தம்விடுறே டநாதியாயிவை படைப்பதின்றியுள பத்துமே." எ-ம். "கருவிகண்படு துடக்கொழிந்துவரு காலமூன்றுநிகழ் காரியம், பெருகநின்றெருகணத்திலேயுணர் பெருந்தவக்கடவுள் பீடுனை, மருவநின்றுவழிபட்டவர்க்கு மலேவுற்றவர்க்கு மனமொத்திடும், குரிசிலெங்களிறையென்று பின்னுநிகழ் குற்றமின்மையது கூறுவான்"

இது கத்தா விகாரமற்றிருப்பானென்றவன் சொன்னானென்பதற்குக் கண்டுகொள்க.

இனியுயிருண்டாவே யுளதுமலம் எ-து. ஈஶ்வரவைக்கியவாதியை நோக்கிச் சொன்னதெனவுமா மெனவறிக. அதற்கு வழியேதென்னில் ஆணவமலமென்பதொன்றில்லை மாயையுங் கன்மமுமேயுள்ளது என்பதவன் கருத்தாகையாலப்படிச் சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சங்கற்பநிராகரணத்தில் "மாயை - யுருவிருவினையால் வருமிருவினையு - மூருவாலன்றி மருவாதிவற்றின் - முந்தியதேதோ வந்தனைவதற்கோ - ரேதுவேண்டும்" என்றவன் வினவியதற்குத்தரமாக ஆணவமலமுண்டென்று காட்டுதற்கு "மூலமலத்தாற் சாலுமாயை - கருமத்தளவிற் றருமுருவிறைவன்" என்றுமவனைநோக்கிக் கூறியது கண்டுகொள்க.

இனி நெல்லின்முளை தவிடுமிபோல் என்றுபமானங்கூறிய வகையேதென்னில் முளை கன்மத்துக் குவமையெனவறிக. தவிடு ஆணவமலத்துக் குவமையெனவறிக. உமி மாயைக் குவமையெனவறிக. அரிசி யான்மாவுக் குவமையெனவறிக. என்றிங்ஙனங் கூறப்பட்ட வுபமானத்துக்கு. பி-ம். திருமந்திரத்தில் "ஆணவமாயையுங் கன்மமுமாமலங், காணுமுளையுந் தவிடுமியான்மாவுந், தாணுவொவ்வாமலே தண்டுலமாய்நிற்கும், பேணுவாய்மற்றுநின் பாசம்பிரித்தே" எ-ம். வீட்டுநெறிப்பாலினும் "ஆணவம்பிண்டி யருமாயைதானுமி, காமியமுக்கென்று காண்" எ-ம். கண்டுகொள்க. அன்றியும் நெல்லின்வரு தவிடுமிபோலென்று பாடமோதுவாருமுளர். அப்படிப்பாடமானால் நெல்லிலேவருகிற முளையென்று பொருளுரைத்துக்கொள்க.

இதனாற்சொல்லியது கத்தா வான்மாக்கள் கன்மங்

தொலையவேண்டிச் சரீரங்களைக்கூட்டிப் புசிப்பிப்பனென்றும் அப்படிப் புசிப்பிக்குமிடத்து மாயையோகன்மமோ முந்தக்கூடினதென்று கேட்க ஆன்மாவுள்ளவன்றே யாணவமலமுமுண்டென்றும் ஆணவமலமுள்ளவன்றே மாயாகன்மங்களு மநாதியென்றும் வருமுறைமையை நெல்லிலே முளையுந்தவிடு முமியு மநாதியாகுற்போல விருக்குமென் றறிவித்தது. (கங)

---

வேறு—இதுகன்மத்துக்கிடாகக் கருத்தா சரீரத்தைக் கூட்டுவிப்பனென்னி லந்தக்கன்மமோ சரீரமோ முந்தினதென்னும் வினாவிற் குத்தரமுணர்த்திற்று.

ஈசன்முன் - உம்முடைய சுவாமிதான்;—உயிர்க்கல்லன் மிகவணைத்தது - ஆத்மாக்களுக்குத் துனபமிகவுண்டாக விவ்வுடல்களைக் கூட்டியது,—அருவினைக ளருந்துதற்கோ-நீங்குதற்கரிய வினைப்பயன்களைப் புசித்தற்காகவோ. அங்ஙனமாகுக.—வினையோவன்றிச் சொல்லிவருமாயையோ வணுவைமுந்தச் சூழ்ந்தது - இந்தக்கன்மமோ விதுவன்றிச் சொல்லப்பட்டுவரு மாயையோ வாத்மாவை முற்பட்டுப்பொருந்தியது,—எனுமுரை - என்றுசொல்லுஞ்சொல்,— முதலோர் தொடக்கிலார்பா லொல்லவரு மெனினுளதாம் - முன்பே யொருமலமு மில்லாதாரிடத்தில் விரையப்பொருந்துமென்றுமுண்டாம், அத்தனையாயி னத்தொடக்கேதெனில்,—உயிருண்டாவே யுளதுமலம்-ஆத்மாவென்றுண்டு அன்றே யாணவமலமுண்டு. ஆனால் மாயையுங்கன்மமும் பின்புளவானவோ வெனில்,—மலமுளதா வொழிந்தவெல்லாம்-ஆணவமலமுண்டாகவே யொழிந்தமாயையுங் கன்மமும்,—நெல்லின்வரு தவிடுமிபோ லநாதியாக நிறுத்திடுவர் - நெல்லிடத்

துண்டான தவிமிழுமியு மங்கெல்லிற் கருதிசம்பந்தமானாற்
போல வருதியாகச்சொல்வர், — இதுசைவநிகழ்த்துமாறே-
இது சிவாகமிகள் சொல்லுமுறைமை. எ - று.

அருந்துதற்கோவென்னுமோகார மூடம்பாட்டுவிறு. மற்றையோகார மிரண்டு மறியான்விறு.

---

இங்ஙனஞ் சொல்லிவந்த வசுத்த மாயாகாரணத்தினின் றுண்டாக்கப்பட்ட காரியமாயுள்ள தத்துவங்களின் றோற்ற மருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

அருந்திமிகுங் கலைகால நியதியுடன் வித்தை யரா
கமிவை யனந்தரான் மாயைதனிலாகு, மூருத்திரரா
ற் கலைதனிற் பிரகிருதிகுணங்க ளுளவாகு மாங்கா
ரம் புந்திதனிலுதிக்குந், தெரித்தவிது திரிவிதமாந்
தைசதவைகாரி திகழ்தருபூ தாதியெனத் திருந்திய
சாத்துவிதம், விரித்தகுணா மனம்புத்தி யிந்திரியமென்
று விளம்பியசோத் திராதிமுதல் விளங்கியிடும்விரிந்
தே. (கச)

கன்றியமாயையிற் கலைமுதலாக
வொன்றுதத்துவம்பதி னைந்துற்பவித்தது.

(இ-ள்.) அருந்திமிகுங் கலைகால நியதியுடன் வித்தை யராகமிவை யனந்தரான் மாயைதனிலாகும். அருவபம். மாயைத

அதோமாயையிலே நின்றும் அனந்ததேவ நாயனாருளருளாலே புசிப்பை மிகவுண்டாக்குங் கலையுங்காலமு நியதியோடே வித்தையும் அராகமுந் தோன்றும். அருந்திமிகு மென்பதற்கு ஆசைமிகவுண்டாக்குமென்னவு மாமெனவறிக.

னிலனந்தராலருத்தி மிருங் கலைகால நியதியுடன் வித்தை யராக மிவையாகும்.

உருத்திரராற் கலை யதனிற் பிரகிருதி குணங்களுளவாகும்

உருத்திரதேவநாயனா ரருளினாலே முற்கூறிய கலையிலே மூலப்பிரகிருதி குணசொரூபங்களாகத் தோன்றும். குணசொரூபங்களாவன? சாத்துவிதகுணமென்றுமிராசதகுணமென்றுந் தாமதகுணமென்றும் பெயராய் அந்தக்குணங்களேற்றக்குறைவின்றித் தம்மிலொத்து நின்றவிடஞ் சித்தமென்றும் ஒருகுணமேறினவிடம் புத்தியென்றும் வருமெனவறிக. ஆகையால் பிரகிருதிதத்துவந் தானே சித்தமும் புத்தியுமாய் நிற்குமெனவறிக. இதனை மேல்நுட்பத்தில் காட்டுகிற உதாரணத்திலே கண்டுகொள்க.

ஆங்காரம் புந்திதனி லுதிக்கும்

அகங்காரதத்துவமு முற்கூறிய புத்திதத்துவத்திலே தோன்றும். என்றிங்ஙனங் கூறப்பட்ட முன்னர்ப்பதத்திலே புத்திக்குத் தோற்றஞ் சொல்லாமலிருக்கவு மிந்தப்பதத்திலே யாங்காரம் புத்தியிலேதோன்றுமென்பது கொண்டே பிரகிருதிதானே குணசொரூபங்களாய்ச் சித்தமும்புத்தியுமாய் நிற்குமென்பதை யநுபவத்தாற் கண்டுகொள்க.

தெரித்தவிது திரிவிதம்

இங்ஙனஞ் சொல்லப்பட்ட வாங்கார மூன்றுவகையாயிருக்கும். அஃதெங்ஙனே யென்னில்

தைசத வைகாரி திகழ்தரு பூதாதி யென. அநுவயம். திகழ்தரு தைசத வைகாரிபூதாதி

விளக்கத்தையுடைய தைசதயாங்கார மென்றும் வைகாரியாங்காரமென்றும்பூதாதியாங்காரமென்றும் பொருளுடைத்தாம். இவையிற்றுள் தைசதம் அறிவென்றறிக. வைகாரி தொழிலெனவறிக. பூதாதியுருவமெனவறிக.

திருந்திய சாத்துவிதம் விரித்தகுண மனம்புத்தியிந்திரிய மென்று விளம்பிய சோத்திராதிமுதல் விளங்கியிடும் விரிந்தே. அநுவயம். திருந்திய சாத்துவிதம் விரித்தகுணமுதல்விளங்கியிடு மனம் புத்தி யிந்திரிய மென்றுவிளம்பிய சோத்திராதி விரிந்தே.

நன்மைபொருந்தின வறிவாகிய சாத்துவிதகுணம் விரிந்துபொருந்தின முந்தக்கூறிய தைசதவாங்காரத்திலே மனதும் ஞானேந்திரியமாகிய சோத்திராதிகளைந்தும் பிரகாசித்து விரிந்துதோன்றும். எ-று. முதல் விளங்கியிடுமென்றதை முந்தக்கூறின தைசதவாங்காரமென்றதென வறிக. அஃதாவது ஆங்காரந் தோன்றினவொழுங்கு தைசத வைகாரி பூதாதி யென்றமையால் தைச வாங்கார முந்தக்கூறுகையா லப்படிச் சொன்னதெனவறிக.

ந-ம். அருத்திமிருங் கலைகாலம். எ-கு. புசிப்புமிகவுண்டாக்குங் கலாதிகளென்று பொருட்கூறியதே தென்னில் ஆ

ன்மாக்கள் புசிப்புக்கீடாக கலாதிகள்தோன்றுகையா லப்ப டிச் சொன்னதெனவறிக. அன்றியும் அருத்தி மிகு மென்றது ஆசை மிகவுண்டாக்கு மென்றதேதெனில் இங்ஙனஞ் சொல்லப்பட்ட தத்துவங்களிலராகத்துவங் கூடத்தோன்றுகை யால் அராக மிச்சையை யெழுப்புகையால் ஆசையை மிகவு முண்டாக்குமா மெனவறிக.

இனி யுருத்திராரற்கலையதனிற் பிரகிருதிகுணங்க ளுளவாகும். எ-கு. கலையிலே பிரகிருதிகுணங்கள் தோன்றுமென்று சொல்லியிருக்க வந்தக்குணங்கள் தம்மிலொத்தவிடஞ் சித்தமென்றும் ஒருகுணமேறினவிடம் புத்தியென்றும் விதப்பாகப் பொருட்படுத்துகைக்கு வழியேதென்னில் பிரகிருதிதத்துவ முபாதானமாக வான்மதத்துவ மிருபத்துநாலுந் தோன்றுமென்று முன்னூல்களிற் சொல்லி யிருக்கையா லதிலேசித்தமும் புத்தியுமொழிய மற்றுள்ள தத்துவங்களின்தோற்ற மேற் சொல்லுகையாலே அந்தச்சித்தமும் புத்தியு மிந்தக் குணபேதத்தி லடங்கிவருகையாலே இந்நூற்செய்தருளினவர தனையடக்குவாய்செய் தருளிச்செய்ததை விரித்துப் பொருட்படுத்தின தெனவறிை அப்படிப் பிரகிருதி தத்துவங் குணசொரூபங்களாகத்தோன்ற வந்தக்குணங்கள் தம்மிலொத்தவிடஞ் சித்தமென்றும் அதிலேயொருகுண மேறினவிடம் புத்தியென்றும் பொருட் கூறியதற்கு. பி-ம். தத்துவ விளக்கத்தில். "கூறியமூலப்பகுதியிற்றோன்றுங் குணமவைதான், றேறியசாத்திகராசததாமதமென்றுசெப்பு, மூறியமுக்குணமொத்தவைமூன்று முயர்விழிவற், றேறியக்காற்புத்தி தத்துவமாகுமென் றெண்ணுவரே." எ-ம் சித்தியாரிலும். "சித்தமாமவ்வியத்தஞ் சிந்தனையதுவுஞ்செய்யும்." எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

இனிசர்வமுஞ் சிவசத்திகளாலே தோன்றுமென்று நூல்களிற் சொல்லியிருக்க விந்தத்தத்துவங்கள் அனந்ததேவநாயனாராலும் உருத்திரதேவ நாயனாராலுந் தோன்றுமென்றதற்கு வழியேதென்னில் அஃதாவது விஞ்ஞானகலரில் அபக்குவரான அஷ்டவித்தேசுரராகிய அனந்தன் சூக்குமன் சிவோத்தமன் ஏகநேத்திரன் ஏக வுருத்திரன் திரிமூர்த்தி சிகண்டன் சிகண்டி என்னப்பட்ட வெண்மருக்குஞ் சிவ னாசாரியகிருத்தியமுமுண்டாக்கி யவர்களுக்குப் பிரபஞ்சநடத்து மதிகாரமுங் கொடுத்தருளுகையி லவர்களி லனந்ததேவ நாயனாருக்கு முருத்திரதேவ நாயனாருக்கு மந்தவதிகாரங் கொடுத்ததெனவறிக. என்றிங்ஙனஞ் சொல்லப்பட்ட வெட்டுப்பேரும் விஞ்ஞானகலரி லபக்குவரென்பதற்கும் அவர்கள் சிவனுடைய வாக்கினை வழியே நடத்துமதிகார முடையவர்களென்பதற்கும். பி-ம். தத்துவவிளக்கத்தில். "அறிந்தவர்திர்ந்த துகளினர்தீராத் துகளர்முன்னர், செறிந்தவர்விஞ்ஞைக்கு நாயகரெண்மரெனச்சிறந்தோர், பிறிந்தவர்மந்திர ராமெழுகோடியர் பேரொளியால், மறிந்ததிரைப்புனல் வெங்குருவானவர் வருத்தனரே." என்பதனுள் விஞ்ஞைக்கு நாயகரெண்மரென்பதனை யிதற்குக்கண்டுகொள்க.

இனியாங்காரம் புந்திதனிலுதிக்குந் தெரித்தவிது திரிவிதமாம். எ-து. புந்தியிலே யாங்காரமொன்றாய்த்தோன்றி மூவகையாங்காரமாக விரிந்ததற்கு வழியேதென்னில் இந்த வாங்காரங் காரியப்படுத்துமவதரத்து முற்கூறிய குணங்களோடுங்கூடிக் காரியப்படவேண்டுகையா லந்தக்குணங்களு மூவகையாகையாலே யிதனையுமப்படி மூவகையாகச்சொன்னதெனவறிக. அதற்குவழியேதென்னில் சாத்துவிதகுணமறிவும் இராசதகுணமவிகாரமும் தாமதகுணம் மயக்கமு

மாயையாலும் தைசதவாங்காரம் விளக்கமும் வைகரியாங்காரந்தொழிலும் பூதாதியாங்கார முருவமு மாயையாலு மந்தந்தவகைகளிலே கூடிநின்று காரியப்பட்டதெனவறிக, இவைதம்மிற்கூடிக் காரியப்படுந் தோற்றங்களினுங் கண்டுகொள்க. அஃதாவது அறிவாகிய சாத்துவிதகுணமும் விளக்கமாயுள்ள தைசதவாங்காரமுங்கூடி அறிவாயுள்ள மனத்தையு ஞானேந்திரியமாகிய சோத்திராதிகளைந்தையுந் தோற்றுவிக்கையாலு மேல்வருகிறசெய்யுளிலே விகாரமாயுள்ள இராசதகுணமுந் தொழிலாயுள்ள வைகாரியாங்காரமுங் கூடித் தொழிலாயுள்ள கன்மேந்திரியமாகிய வாக்காதிகளைந்துந் தோன்றுகையாலு மயக்கமாகிய தாமதகுணமும் உருவமாகிய பூதாதியாங்காரமுங்கூடிப் பூதங்களுக்குக் காரணமாகிய சத்தாதிகள் தோன்றுகையாலு மப்படிச்சொன்னதெனவறிக. எனறிங்ஙன மறிவுந் தொழிலு மயக்கமுமுண்டாகையால்சாத்துவிதகுணமுந்தைசதவாங்காரமுமறிவைப்பற்றி நின்றதெனவறிக. இராசதகுணமும் வைகரி யாங்காரமுந் தொழிலைப்பற்றி நின்றதெனவறிக. தாமதகுணமும் பூதாதியாங்காரமும் மயக்கமாகிய வுருவத்தைப்பற்றி நின்றதெனவறிக. ஞானேந்திரியமாகிய சோத்திராதிகள் அறிவைப்பற்றி நிற்கையாவது சோத்திராதிகளாயுள்ள செவி மெய் கண் நா நாசியென்னப்பட்ட விந்திரியமைந்துஞ் சத்த பரிச ரூப ரச கந்தங்களைக் கொள்ளுமிடத்துச் சரீரந்தொழிற்பட்டு ஜீவியாம லறிவாய் நிகழுகையா லப்படிச்சொன்னதெனவறிக.

இனி கன்மேந்திரியமான வாக்காதிகள் தொழிற்படுகையாவது அவை காரியப்படுமிடத்துச் சரீரந்தொழிற்பட்டு நின்று காரியப்படுகையா லப்படிச்சொன்னதெனவறிக.

இனி யிங்ஙனஞ்சொல்லப்பட்ட தத்துவங்கள் மாயையிலே தோன்றுமிடத்துச் சித்தியாரில் காலமுதலாகத் தோன்றுமென்று சொல்லியிருக்க விந்நூலிற் கலைமுதலாகத் தோற்றஞ்சொன்னதே தெனில் சித்தியார் செய்தருளினவர்பிரபஞ்சத்தோற்றஞ் சொல்லுகையால் காலமுண்டாகவே பிரபஞ்சந்தோன்றுகையாலே காலமுதலாகச் சொன்னதெனவறிக. இந்நூல்செய்தருளினவர் ஆன்மாக்களுக்கு உணர்த்து முறைமையைச்சொல்லுகையாலே யுணர்த்துகைக்குக் கலை முந்தி யெழுப்பவேண்டுகையால் கலையை முந்திக்கூறியதெனவறிக. அப்படி வேற்றுமைகூறியதேதென்னி லிது சார்புநூலாகையால் "திரிபுவேறுடையது புடைநூலாகும்" என்னும் விதியைப்பற்றி யெனவறிக. அன்றியும் இந்தத்தத்துவத்தோற்றம் அனந்ததேவநாயனு ரொருவர் நடத்துகையாலப்படி முன்பின்கூறியதெனவுமாமெனவறிக.

இதனாற்சொல்லியது இந்த வசுத்தமாயையில் நின்று தோன்றப்பட்ட தத்துவங்களிலிந்தச்செய்யுளில் காலமு நியதியுங் கலையும் வித்தையுமாரகமும் ஆகவைந்தும் பிரகிருதி குணங்களாகிய அவ்வியத்தமுஞ் சித்தமும் புத்தியும் ஆக மூன்றும் புத்தியிலே ஆங்காரமும் ஆங்காரத்திலே மனதும் ஞானேந்திரியமாகிய சோத்திராதிகளைந்தும் ஆகவேமுங்கூடி ஆகத்தத்துவம் பதினைந்துந் தோன்றுமுறைமையை யறிவித்தது. (கச)

---

வேறு—இஃதசேதாமாயாசிருஷ்டி யுணர்த்திற்று.

மாயைதனில் - அசுத்தமாயையி—த்திலே,—அனந்தரால் - அனந்ததேவரருளாலே,—அருத்திமிகுங்கலைகால நியதியுடன்வித்தை யராகமிவையாகும் - ஆசைமிகுதற்குக் காரணமான கலைகாலநியதிவித்தை யராகமாகிய விவையைந்து

முளவாகும்,—உருத்திராற் கலையதனிற் பிரகிருதிகுணங்க
ளுளவாகும் - உருத்திரதேவரருளாலே முன்சொன்னகலையி
லே மூலப்பிரகிருதிதோன்றி யதினின்றுங் குணங்கடோன்
றும். இக்குணத்தின் ஏற்றந்தானே சித்தம் புத்திகளின்
ஏற்றமும்,—ஆங்காரம் புத்தியினிலுதிக்கும் - புத்தியினின்
று மாங்காரந்தோன்றும்,—தெரித்தவிது திகழ்தரு தைசத
ம்வைகாரி பூதாதியெனத் திரிவிதமாம் - சொல்லப்பட்ட வி
ந்தவாங்காரமானது விளங்கிய தைசதவாங்காரமும் வை
காரியாங்காரமும் பூதாதியாங்காரமு மென மூவிதமாம்,—
முதல் - முதற் சொல்லப்பட்ட தைசதவாங்காரத்திலே,—
திரிந்தியசாத்துவிதம் விரித்தகுணம் - நல்ல சாத்துவிதமாக
க் கீர்த்திக்கப்பட்ட குணத்தையுடைய,—மனம்புத்தி யிந்தி
ரியமென்று விளம்பியசோத்திராதி - மனமு ஞானேந்திரிய
மென்று சொல்லப்பட்ட சோத்திராதியைந்தும்,—விரிந்து
விளங்கியிடும் - விரிந்துதோன்றும். எ - று.

புத்தி - ஞானம். காலதத்துவந் தோற்றத்தின் முதன்
மையாயிருக்க ஈண்டுக்கலையை யெடுத்துச்சொல்லியது ஆத்
மாவிற்குக் கேவலத்திருளைநீக்கி ஞானக்கிரியைகளை முற்ப
ட ஜனிப்பித்தலின். காலந்தோன்றியதினின்று பின் னிய
தியு மதினின்று பின்கலையுந் தோன்றி யக்கலையினின்று வித்
தையு மதினின்றராகமுந் தோன்றும். இங்ஙனந்தோன்றுதலி
ற் சமுசயமாகவந்து மாயையிலாகுமென்றார். செய்யுளாதலி
ற் செவ்வெண்ணின்றொகை தொக்குநின்றது. குணதத்துவ
த்துக்குத் தோற்றஞ்சொல்லவே சித்தம்புத்தியென்னு மிர
ண்டின் ஏற்றமுஞ் சொன்னதா மென்றதென்னை? குணங்
களின் சமமு மேற்றக்குறைச்சலுஞ் சித்தம் புத்தியாதலின்,
இராசதமுந் தாமதமுங்குறைந்து சாத்துவிதமேலிட்ட வவ

தாரம் புத்தியென்பதனாலு மிதற்கு முன்னூலிற் சித்தமா மவ்வியத்தஞ் சிந்தனையதுவுஞ் செய்யுமென்றும் புத்தி யவ்வியத்திற்றோன்றி யென்று மிவை யிரண்டிற்கும் பிரகிருதியுற்பத்தித் தானமாகச் சொன்னதனாலுமறிக.

---

இங்ஙனம் பதினைந்து தத்துவத்திற்குத் தோற்றமருளிச்செய்து மேற்பதினைந்து தத்துவத்திற்குத் தோற்றமருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

மன்னியகன் மேந்திரிய மானவிராசதஞ்சேர்
வாக்காதி வைகாரி மருவிவருஞ்சத்தந், தன்னைமுத
லாகியதா மதமிகுமாத்திரையின் றருமிதனின் வான
னில மனல்புனல்மண்சத்த, முன்னதனில் வெளியாதி
யொன்றொன்றாகு முறையினுறு மிருமையயன் முடி
வான்மேல், யுன்னுசதா சிவாதி யதிபதிகளோடுக்
க முதித்தவடை வெனவுரைப்ப ருணர்ந்துளோரே.

பின்னுமைவந்து பிறக்குநெறியுஞ்
சொன்னவாறொடுக்கமுந் தோற்றமுஞ்சொன்னது.

(இ-ள்.) மன்னிய கன்மேந்திரியமான விராசதஞ்சேர் வாக்காதிவைகாரிமருவிவரும். அநுவயம். மன்னிய கன்மேந்திரியமானவாக்காதி யிராசதஞ்சேர் வைகாரி மருவிவரும்

நிலைபெற்றுவருகிற கன்மேந்திரியமாகிய வாக்காதிகளாயுள்ளவை யைந்து மிராசதகுணத்தைப்பொருந்தி யிருக்கிற வைகரியாங்காரத்திலே பொருந்தித் தோன்றும். பொருந்தித் தோன்றுமென்றது வைகரி தொழிலாகையாலுங் கன்மேந்திரியந் தொழிற்பட்டுவருகையாலு மிந்தக்கன்மேந்திரியம் வைகரியாங்காரத்திற் றோற்றமாகையாலு மப்படிச் சொன்னதெனவறிக.

**சத்தந்தன்னை முதலாகிய தாமதமிருமாத்திரையின்றரும். அந்நுவயம். சத்தந் தன்னை முதலாகிய மாத்திரை தாமத மிகுபின் றரும்**

சத்தமென்கின்ற விடயத்தை முதலாகவுடைய தன்மாத்திரைகளைந்துந் தாமதகுணத்தை மிகுத்திருக்கிறபிற்பட்ட பூதாதியாங்காரத்திலே தோன்றும். பின்றருமென்றதைப் பிற்பட்ட வாங்காரமெனவறிக. அஃதாவது, முன்னர்ச்செய்யுளாங்காரத்தினது தோற்றஞ்சொல்லுமிடத்துத் தைசதவைகாரி நிகழ்தரு பூதாதியென்று பூதாதியாங்காரத்தைப் பிற்படக்கூறுகையாலப்படிச் சொன்னதெனவறிக. அன்றியும் பூதாதி யாங்காரத்திலே தன்மாத்திரைகளாகிய சத்தாதிகளைந்துந் தோன்றுமென்றதும் பூதாதியாங்கார முருவத்தைப்பற்றி நிற்கையாலுஞ் சத்தாதிகள் பூதரூபங்கள் தோன்றுகைக்குக் காரணமாகையாலு மெனவறிக.

**இதனில்**

இங்ஙன முற்பதத்திலே சொல்லப்பட்ட தன்மாத்திரைகளாகிய சத்தாதிகளைந்தினும்

**வானனிலமனல்புனல்மண்**

ஆகாயம் வாயு தேயு அப்பு பிருதிவி யென்னப்பட்ட பூதங்களைந்துந் தோன்றுமிடத்து

**சத்த முன்னதனில்**

சத்தமுதலாயிருக்கப்பட்ட முற்கூறிய தன்மாத்திரைகளைந்தினும்

**வெளியாதி**

ஆகாயமாதியாக

**ஒன்றொன்றாகும்**

ஒன்றிலே யொன்றாகவுண்டாம். அஃதாவது சத்தத்திலே யாகாயந்தோன்றும் பரிசத்திலே வாயுதோன்றும் உருபத்திலே தேயுதோன்றும் இரசத்திலே அப்புதோன்றும்

கந்தத்திலே பிருதிவிதோன்றும் என்றதெனவறிக

முறையினுறு மிருமையயன் முடிவாமுன்னே யுன்னுசதாசிவராதியதிபதிகள். அநுவயம். முன்னே யுன்னு சதாசிவராதி யிருமையயன் முடிவாயதிபதிகள் முறையினுறும்

அநாதியே யெண்ணப்பட்ட சதாசிவமுதல் பெரியபிரமாவீறாக அதிதேவதைகளாவாரு மந்தந்தவொழுங்கிலே பொருந்துவார்கள். அந்தந்தவொழுங்காவது ஆகாசத்துக்குச் சதாசிவமும் வாயுவுக்கு மகேசுரமும் தேயுவுக்கு வுருத்திரனும் அப்புவுக்கு விஷ்ணுவும் பிருதிவிக்கு பிரமாவுமெனவறிக.

ஒடுக்கமுதித்த வடைவென வுரைப்ப ருணர்ந்துளோரே.

இங்ஙனந் தோற்றமாகச் சொல்லிவந்த தத்துவங்களுக்குந் தத்துவகத்தாக்களுக்கும் ஒடுக்கமுந் தோன்றின வொழுங்கிலே யென்று சொல்லுவார்கள் அறிவாலுயர்ந்த பெரியோர்கள் எ - று.

று-ம். மன்னிய கன்மேந்திரிய மென்றதை நிலைபெற்ற கன்மேந்திரியமென்று பொருட்கூறியதேதென்னில் ஆன்மா வொருசரீரசம்பந்தியாய் நிற்குநாளெல்லா மிந்திரியங்கள் விடப்படாமனிற்கையாலே யப்படிச்சொன்னதெனவறிக. இந்தவாக்காதிகளைக்கன்மேந்திரியமென்ற தேதென்னில் கன்மந் தொழிலென்னும் பொருளைப்பற்றித் தொழிற்பட்டு ஜீவிக்கையாலே யப்படிச் சொன்னதெனவறிக. தொழிற்படுகையாவது வாயுங் காலுங் கையும் மலம்பிரிக்கிற துவாரமுஞ் சலம்பிரிக்கிற துவாரமும் வசன கமனதான விசர்க்கானந்த மென்னும் விடயங்களோடுங் கூடி ஜீவிக்குமிடத்

துச் சரீரந்தொழிற்பட்டு ஜீவிக்கையாலே யப்படிச்சொன்னதென வறிக. வாக்காதியைந்தினும் வாக்கென்றவிந்திரியத்தை வாயென்றதற்கு. பி-ம். "கைகாலவைதரு வாயொடுபாயு ருபத்தமென்றுங் கவையே." எ-ம். சித்தியாரில் "வாயாதிசோத்திராதி புறத்துவாழ்கருவியாகும்". எ-ம். வருமதுகண்டுகொள்க.

இனி இராசதஞ்சேர் வாக்காதிவைகாரிமருவிவரும். என்பதற்கும். சத்தந்தன்னை முதலாகிய தாமதமிகு மாத்திரைபின்றருமென்பதற்கும் நுட்பம் முன்னர்ச்செய்யுளில்வந்த விதப்பிலே கண்டுகொளக. அந்த நாமதகுணத்திற் றோன்றப்பட்ட சத்தாதிகளைந் தையுந் தன்மாத்திரைகளென்று பெயர்கூறியதேதென்னில் அந்தந்தவிந்திரியங்களுக்குத் தக்கதாக நின்று காரியப் படுகையாலு மப்படிக்காரியப்படுமிடத்துத் தத்தங்குணங்களுக் கேற்றக்குறைவின்றிநிற்கையாலு மப்படிச் சொன்னதெனவறிக.

இனி சத்தமுன்னதனில் வெளியாதி யொன்றொன் றுறும். எ-கு. சத்தாதிகளைந்தினும் பூதாதிகளைந்தந்தோன்றுமென்பதன்றியே சத்தத்திலே பரிசமும் பரிசத்திலேயுருவமும் உருவத்திலேயிரதமும் இரதத்திலேகந்தமுமாக வொன்றிலே யொன்றுகத்தோன்றுமென்றும் அன்றியும் ஆகாயத்திலே வாயுவும் வாயுவிலே தேயுவும் தேயுவிலேயப்புவும் அப்புவிலே பிருதிவியுமாக வொன்றிலேயொன்றுகத் தோன்றுமென்றும் பொருளுரைப்பாருமுளர். அன்றியும் பூதங்களைந்துகளு மொவ்வொருகுணங்க ளேறியிருக்குமென்பாருமுளர். ஒவ்வொருகுண மேற்றமாவது ஆகாசத்துக்குச்சத்தமும், வாயுவுக்குச் சத்தமும் பரிசமும், தேயுவுக்குச் சத்தமும் பரிசமும் ரூபமும், அப்புவுக்குச்சத்தமும் பரிசமும் ரூபமும் இரதமும், பிருதிவிக்குச் சத்தமும் பரிசமும் ரூபமும் இரதமுங் கந்தமு மெனவறிக. ஆக விங்ஙனங்கூறப்பட்ட மூவகையாயுள்ளபொருளு மப்படியுண்டாளு லுஞ் சத்தமுன்னதனில் வெளியாதி யொன்றொன் றுறும். எ-கு. சத்தாதிகளைந்தினும் வெளியாதி யைந்து

பூதங்களுந் தோன்றுமென்பதொழிய வந்தப்பொருள்க ளிந்தச்ச
த்தத்துக் ககப்படாதெனவறிக. அப்படிச்சத்தாதிகளெங்கினும் பூ
தங்களெந்துந் தோன்றுமென்பதொழிய மற்றுப் பொருள்க ளிந்த
ச்செய்யுளுக் ககப்படாதென்பதற்கு இந்நூலைப்பின்சென்ற நூலா
கிய திருநெறிவிளக்கத்தில் இதற் கெதிரடை விருத்தமாகிய. "ஏ
ண்ணியகன்மேந்திரிய மென்று சொல்லப்பட்ட விராசதமார்வாக்
காதி யெய்திடும்வைகரியி, னெண்ணியிடும்பூதாதி தாமதன்மாத்தி
ரையா னவிலுறுசத்தாதியினைநல்கியிடுஞ்சத்தக், கண்ணதனில்வெ
ளிபரிசங் காலுருவந்தன்னிற் கனலிரதத்தேபுனனற் கந்தத்தேத
ரையா, மண்ணிறுதிகலைமுதலா வந்தவகைடங்கு மாலயனுந்திக
ள்வடிவும் வந்தமைபோலொடுங்கும்." இந்தச்செய்யுளில் சத்தாதி
களெந்தினும் வெளியாதியாகிய பூதமைந்துந் தோன்றுமென்றபடி
யா லதற்கு மிப்படிக்கண்டுகொள்க. அன்றியுந் தத்துவவிளக்கத்
தினும். "கொள்ளுமத்தத்துவம்." என்ற செய்யுளின்பிற்பதத்தில்.
"பின்,றெள்ளியதன்மாத்திரையின், வருஞ்சேர்ந்ததன்மாத்திரையி
னெள்ளியபூதங்களைந்துக்குமாமென்ப ருற்பவமே." என்பதனு
லுஞ் சத்தாதிகளெந்தினும் வெளியாதியாயுள்ள பூதங்களைந்துந்
தோன்றுமென்பதே யந்தப்பதத்துக்குப் பொருளெனவறிக.

இந்த மாயாகாரியமான தத்துவ முப்பத்தொன்றென்று நூ
ல்களிற் சொல்லியிருக்க முன்னர்ச்செய்யுளிற் றோன்றுந்தத்துவம்
பதினைந்து மிந்தச் செய்யுளிற்றோன்றுந் தத்துவம் பதினைந்தும்
ஆகதத்துவ முப்பதொழியப் புருடதத்துவ மொன்றுக்குந் தோ
ற்றஞ்சொல்லாததேதென்னில் அது தத்துவசமுகத்திற் றோற்றமா
கையால் "ஐவகையாலுறுபயன்க ளுகரவருங்கால மதுபுருடதத்
துவமென் றறைந்திடுவரறிந்தோர்" என்று காரியப்படுமவசரத்து
த் தோற்றமாகையா லிவ்விடத்துச் சொன்னதில்லை யெனவறிக.
அன்றியு மொடுக்கஞ்சொல்லுமவசரத்தும் "தத்துவ மெண்மூன்

றுஞ்சென் றுன்மதத்துவத் தொடுங்கும் வித்தையி லொடுங்குமா றும்'' என்றமையால் வித்தையா தத்துவமேழாயிருக்கவும் வித்தையிலொடுங்குமாறு மென்றதுகொண்டே புருடதத்துவத்துக் கொடுக்கஞ் சொன்னதில்லை யெனவறிக.

இதனாற்சொல்லியது இராசதகுணத்தைப்பொருந்தின வைகரியாங்காரத்திலே கன்மேந்திரியங்களாகிய வாக்காதிக ளைந்துந் தோன்றுமென்றும் தாமதகுணத்தைப் பொருந்தின பூதாதியாங் காரத்திலே தன்மாத்திரைகளாகிய சத்தாதிகளைந்துந் தோன்று மென்றும் அந்தச்சத்தாதிகளைந்தினும் பூதங்களைந்துந் தோன்று மென்றும் அந்தப்பூதங்களுக்கு அதிதேவதைகள் சதாசிவமுதல் பிரமாவீறாகிய தெய்வங்களென்றும் இவையிற்றுக்கொடுக்கமுந் தோன்றினவடைவிலே யென்றும் வருமுறைமையை யறிவித்தது.

உருவாதியென்ற விருத்தமுந லிந்தவிருத்தமுமாகிய செய்யுளாலும் அசுத்தமாயா விலக்கணம்.

---

வேறு — இந்தத்தோமாயா சிருஷ்டியு மிருவிதமாயா சிருஷ்டிகளான கருவிகளி னொடுக்கமு முணர்த்திற்று.

வைகரி-வைகாரியாங்காரத்திலே,— இராசதஞ்சேர் மன்னியகன்மேந்திரியமான வாக்காதி மருவிவரும் - இராசதகுணத்தைப்பொருந்தின நிலைபெற்ற கன்மேந்திரியங்களான வாக்குபாதம்பாணி பாயுவுபத்தங்களான வைந்துந் தங்கள்விடயங்களோடுபொருந்தித்தோன்றும்,— பின்-முன்னைந்தைசதம்வைகாரி திகழ்தரு பூதாதியென வகுத்தவற்றுட் பின்னாகிய பூதாதி யாங்காரமானது,—தாமதமிகு சத்தந் தன்னைமுதலாகிய மாத்திரைதரும்- தாமதகுணமிக்க சத்தத்தை முதலாகவுடைய மாத்திரைகளைந் தையுந்தரும்,—அதனில் - அந்தச் சத்தமுதலிய தன்மாத்திரையிலே,— வானனிலமனல்புனல்மண்-ஆகாயமுதலிய வைந்துபூதங்

களும்,—முறையினுறும் - நிரைத்தவண்ணமே தோன்றும்,—அத னில் - அந்தப்பூதத்திலே,—சத்தமுன் - சத்தமுன்னாகிய மாத்தி ரைகளைந்தும்,—வெளியாதி யொன்றொன்றாகவுறும்-ஆகாய முத லாக வொவ்வொருகுணம் மேன்மேலும் பொருந்தும்,—அதிபதி கள்-அப்பூதங்கட்குத் தெய்வங்கள்,—இருமையயன் முடிவா-பெ ரியபிரமனீறாக,—முன்னே யுன்னுசதாசிவராதி - பஞ்சமூர்த்திக ளின் முதன்மையாக முந்தநினைக்கப்படுஞ் சதாசிவதேவர் முத லியோர்களாயிருக்கும்,—ஒடுக்க முதித்தவண்ணவுரைப்ப ரு ணர்ந்துளோரோ-இனித் தத்துவங்களொடுங்குமுறைமையுந் தோ ன்றின முறைமையென்று சொல்லுவர் பெரியோர். எ-று.

காரணத்திலுள்ளது காரியத்துஞ்சேர்தலின் மனமுதலிங்ங னந்தோற்றஞ்சொல்லியதத்துவங்கட்குங் குணமடைகொடுத்தா ர். முன்னுலிருங்குணரூபமாகி யிசைந்திமெங்குமென்றதனாலெண் ணறிக. சமவேதமாயிருக்கிற ஞானக்கிரியாசத்திகளுக் கபிவேகஞ் சகமாகையாலெனின் வியாபாரத்துக்கபிவியஞ்சகங்க ளாகையா லே ஞானேந்திரியங் கன்மேந்திரியமெனப் பெயர்பெற்றனவென் றறிக. முறையினுறுமென்ப திரிட்த்துங்கூட்டுக. தன்மாத்திரைபூ தமெனச் சாதியொருமையாகச் சொல்லப்படுதலி னதனிலென் றார். இனி யாகாயமுதலாக வொவ்வொரு குணமேறுமென்றதெ ன்னை? ஆகாயமொன்றுக்குமே சத்தகுணமுள்ளது. மற்றைநாலுக் குமில்லை. ஆகாயத்தினுடைய வாசரியத்தாலே யுண்டானததனை யென்று வைசேடிகன் முதலியோர்சொல்லின் ஆகாயத்துக்கெதி ரொலி. வாயுக்குச்சகசகாதியொலி. அக்கினிக்குத் தமதமாதியொ லி. அப்புவுக்குச் சலசலாதியொலி. பிருதிவுக்குக் கடகடாதியொ லி. இப்படிப் பிரத்தியட்சமாக வெவ்வேறு சத்தங்கேட்கப்படு கையா லவர்மதமுமடாது.

---

இங்ஙனஞ் சொல்லிவந்த மாயையா லுண்டான சரீரத்தை

யான்மாக்கள்பொருந்திக் கன்மத்தைப் புசிக்கையினாலே யந்தக் கன்மத்தினியல்பு மேற்செப்பு ஞான்கிறு லருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

நண்ணியிடு முருவதனுக்கேதுவாகி நானாபோகங் களாய்நாசோற்பத்தி, பண்ணிவருமாதலாலநாதியாகிப் பலவாகியணுக்கடோறும்படர்வதாகி, யெண்ணிவருமனவாசகன்மத்தாலியற்று மியல்பினதாய்மதிக தமாயிருபயனும்பாவ, புண்ணியமாய்ப்புலர்காலைமாயை மேவிப் பொருந்துமிதுகன்மமலம்புகலுமாறே.

திங்குநலனுஞ் செய்தவாறடையும்
பாங்குறுவினையைப் பாரித்துரைத்தது.

| | |
|---|---|
| (இ-ள்.) நண்ணியிடு முருவதனுக்கேதுவாகி | ஆன்மாக்களெடுக்கப்பட்ட வுடம்புகளுக்கு முன்னிலைக்காரணமாய். அஃதாவது, ஆன்மாக்கள் யாதாமொரு சரீரங்களை யெடுக்குமிடத்து முற்செய்த கன்மங்களுக் கேதுவாக வெடுக்கையினாலே யப்படிச்சொன்னதெனவறிக |
| நானாபோகங்களாய் | பலவிதமான புசிப்புகளை யுண்டாக்குவதாய்.பலவிதமாவது ஆன்மா விந்திரியங்களைக் கொண்டு விடயங்களைக்கொள்ளுமிடத் தொவ்வொரு விடயங்களிலே வெகுவிதமான கன்மங்களைப் புசிக்கையினாலே யப்படிச் சொன்னதெனவறிக |
| நாசோர்பத்தி பண்ணிவரும் | ஜநநத்தையு மரணத்தையு முண்டாக்கிவரும். அஃதாவது, ஆன்மாக்கள் கன்மத்துக்கீடாக வெடுத்தவுடலுக்கு நாசமு மேலெடுக்கு |

முடனுக்குற்பத்தியு முண்டாக்கி வருமென்றதெனவறிக. அன்றியும் புசித்த கன்மத்துக்கு நாசமு மேற்புசிக்குங் கன்மத்துக் குற்பத்தியு மாமெனவறிக

ஆதலா லநாதியாகி

ஆகவிங்ஙனம்வருகிற தநாதியேயுள்ளதாய். அநாதியென்றது ஆன்மாவுள்ளவன்றே யிந்தக் கன்மமுள்ளதென்ற தெனவறிக

பலவாகி

பலபேதங்களா யிருப்பதாய். பலபேதங்களாவன ஆன்மாக்கள் கன்மத்துக் கீடாக வெடுக்குமுடல்களுக் கந்தந்தவுடம்புறும் வடிவு நிறம் சாதி ஒழுக்கம் நெறி உணவு சுகம் துக்கம் ஆயுள் என்றிங்ஙனம் பலவகையாகை யாலே யப்படிச் சொன்னதெனவறிக

அணுக்க டொறும் படர்வதாகி

ஆன்மாக்கடோறுஞ் சென்று பொருந்துவதாய். அஃதாவது, ஆன்மாக்க ளெடுக்குமெடுக்கு மச்சுகடோறு மதற்கதற்கேற்ற புசிப்புகளைக்கொடுத்து நிற்கையாலே யப்படிச்சொன்னதெனவறிக

எண்ணிவரு மனவாசகன்மத்தா லியற்று மியல்பினதாய்

நினைக்கப்பட்டுவருகிற மனதினாலும் வாக்கினாலுங் காயத்தினாலுஞ் செய்யப்பட்டவியல்பினையுடையதாய். அவையாவன, மனதினானினைக்கை வாக்கினாற்சொல்லுகை காயத்தினாற்செய்கை யெனவறிக

மதிகதமாய்

நிற்குங்காலம் புத்தியிலேநிற்பதாய். புத்தியிலேநிற்பதாவது யாதொன்றிலே புத்திநிச்சயிக்குமிடத்துக் கன்மத்துக்கீடாக நிச்சயிக்கையா லப்படிச்சொன்னதெனவறிக

இருபயனும் பாவ புண்ணிய மாய் — இருவகைப்பயனுகச் சொல்லப்பட்ட புண்ணியபாவங்களாய். இருவகைப்பட்ட பயனுவது ஹிதாஹிதங்களிலே விருப்பு வெறுப்புண்டாய் அதனுலே புண்ணிய பாவங்கள் கட்டுப்பட்டு அதனுலே யின்ப துன்பங்களாகிய சுவர்க்கநரகங்களை யநுபவிக்கையாலே யப்படிச்சொன்னதெனவறிக. இங்ஙனஞ்சிருஷ்டிகாலம் பிரபஞ்சங் காரியப்படுமெனவறிக.

புலர்காலை மாயைமேவிப் பொருந்தும் — சங்காரகால மாயாகாரணத்திலே சென்று பொருந்தும். அஃதாவது, முற்கூறிய பிரபஞ்சமு மதனேடுங்கூடிநிற்கு மான்மாக்களு மாயாகாரணத்திலே யொடுங்குகிற சங்காரகாலம் இந்தக்கன்மமு மந்தக் காரணமாயையிலே சென்று கூடுகையா லப்படிச்சொன்னதெனவறிக. அன்றியும் பொருந்துமென்ற பதத்துக்கு வேறுபொருட்கூறவேண்டுகி லந்தமாயாகாரணத்திலே யொடுங்கினவான்மாக்களையுங் கூடுமென்று பொருளுரைப்பினுமாம். அஃதெங்ஙனே யெனின் இந்தக்கன்மங் காரியப்படுங்காலத்து அணுக்களோடும் படர்வதாகி என்றமையா லொடுக்குங்காலத்து மொக்கவொடுங்குமென்னுங் கருத்தையும்பற்றி யப்படிச் சொன்னதெனவறிக.

இது கன்மமலம் புகலுமாறே. — இங்ஙனஞ் சொல்லப்பட்டது கன்மமலத்தின் முறைமையாம். எ-று. இந்தப்பதத்துக்குப் புகலுமென்று முன்னேவைத்துப் பொருளுரைத்ததெனவறிக. அல்லதூஉம் இதுகன்மமலத்தைச்சொல்லும் வழியாமென்று பொருளுரைப்பினுமமையும்.

வி-பு. புலர்காலமென்றசொல் சிருஷ்டிகாலத்துக்கும் படுமென்று இச்செய்யுளைச் சிருஷ்டியொன்றையுநோக்கிச்சொன்ன

தென்பாருமுளர் அதுபொருளல்லவெனவறிக. அதுவேனென்னில் புலர்காலென்றசொல் அழிதலாகையால் சங்காரமென்பதே பொருளெனவறிக. அன்றியும் யாதாமொன்றைச் சொல்லு மிடத்துத் தோற்றமு மொடுக்கமுஞ்சொல்லவேண்டுகையால் மற்றுள்ளபக்கமெல்லாஞ் சிருஷ்டியைச்சொல்லிப் புலர்காலே மாயைமேவி என்றபதத்தைச் சங்காரகால மாயாகாரணத்திலே கன்மங்கூடுமென்பதே பொருளெனவறிக. அப்படிப் புலர்காலமென்பது சிருஷ்டிக்கும் படுமென்று பொருளுரைத்த தெதைப்பற்றி யென்னில் திருவாசகத்தில். "ஒண்ணித்திலநகைடா யின்னம் புலர்ந்தின்றோ." எ-ம். "போனதிசைபகரா தின்னம்புலர்ந்தின்றோ." எ-ம். வருமேதுக்களைப்பற்றிப் புலர்காலஞ் சிருஷ்டிகாலமென்றதெனவறிக. அதுவும் புலர்தலுலர்தலாகையால் சங்காரகாலத்துக்குச் சொல்லப்படுமென்பதே பொருளெனவறிக. புலர்தல் சங்காரமென்பதற்கு. பி-ம். காளத்தியந்தாதியில். "அலரோனெடுமா லமரர்கோன்மற்றும், பலராய்ப்படைத்துங் காத்தாண்டும் புலர்காலத், தொன்றாகிமீண்டும் பலவாகிநிற்கின்றான், குன்றாத சீர்கயிலைக்கோ." எ-து. கண்டுகொள்க. இதனுள் புலர்காலத்தொன்றாகி. எ-து. சங்காரகாலமென்பதற்குக் கண்டுகொள்க. ஆகையாலிங்ஙனம் புலர்காலமென்பது சங்கார காலத்துக்குச் சொல்லுமதே பொருளெனவறிக. இச்செய்யுளில் புலர்காலமாயைமேவி என்பதைச் சங்காரகாலத்துக் காரணமாயையிலே கன்மங்கூடுமென்பதற்குச் சொல்லுமதே வழக்கெனவறிக. அது வழக்கென்பதற்கு இந்நூலைப்பின்சென்ற நூலாகிய திருநெறிவிளக்கத்திலு மிச்செய்யுளுக் கெதிரடை விருத்தமாகிய. "தொல்குரம்பைகாரணமாய்த் தொகையளவுபடாத துன்பமுடனின்பமாய்த் தோற்றமுட்டீறு, மல்கியிடும்வழியதனு னித்தமாகி மண்ணுயிர்கடொறுமருவிப் பின்னுமற்றுப், பல்விதமாயுளைநினைவு தொழிலாற்செய்யும் பண்பினை

தாய்ப் புத்தியினில்வந்தமையும் பான்மை, நல்வினைதீவினையாகிக் கடைநாண் மாயை நண்ணியிடு மிதுகன்மநாட்டிலன்றே." என்பதனுள் கடைநாளென்றது சங்காரகால மாயையால் இந்நூலில் நண்ணியிடுமுருவதனுக் கேதுவாகி என்றசெய்யுளுக்கு இந்தத் திருநெறிவிளக்கத்தின் செய்யுளைப் பதந்தோறும் அந்தப் பதத்தையுவமித்துக்கொண்டு புலர்காலைமாயைமேவி என்றதற்குக் கடைநாண்மாயை நண்ணியிடுமென்ற பதத்தைக் கண்டுகொள்க. ஆகையாலிச்செய்யுளில் புலர்காலமென்றது சங்காரகாலமே பொருளென்பதை யநுபவத்தாற் கண்டுகொள்க. அப்படியானால் மாயையுங் கன்மமுங்கூடினால் ஆன்மாவுக்கு ஜீவிப்புண்டாமென்று நூல்களிலே சொல்லியிருக்க ஒருஜீவிப்புமற் றொடுங்கிக் கிடக்கிற சங்காரகால மாயையிலே கன்மமுங் கூடுமென்னலாமோ வென்னில் அப்படிஜீவிக்குமென்றதுஞ் சிருஷ்டிகாலங் காரியமாயையாகிய கலையாதிதத்துவங்களோடுங் கூடினவிடத்து ஜீவிப்புண்டாமென்கிறதொழியக் காரணமாயையோடுங் கூடினவிடத்து ஜீவிப்பில்லையெனவறிக. அதற்கநுபவமேதென்னில் ஒருவிதையிலே முளையுண்டானாலு மந்தவிதையைவிட்டு முளைதோன்று மவதரத்து ஜீவிப்புண்டாமதொழிந்து அவ்வளவு மந்தவிதைக்குள் முளையடங்கிக்கிடந்து ஜீவியாமற் கிடக்குமதுபோல வெனவறிக. அப்படியானா லிந்தக்கன்மமு மாயையைப்போலே தனித்தொரு முதலாயிருக்கச் சிருஷ்டிகாலமுஞ் சங்காரகாலமு மாயையோடுங்கூடி நிற்குமென்பானேனென்னி லப்படியே கன்மந் தனியேயொருமுதலாயிருந்தாலு மற்றுள்ளமலங்களைச் சார்ந்துநிற்பதொழியத் தனித்துநில்லாதாகையா லப்படிச்சொன்னதென வறிக. அப்படிக் கன்மமலமானது மற்றுள்ள மலங்களையுஞ் சார்ந்துநிற்குமென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "இருவினையநாதியாதி யியற்றலானுகர்வா லந்தம், வருமலஞ்சார்ந்துமாயா வுருவுகண் மருவியார்த்துத், திரு

செயன் முறைமையாலே தான்பலபேதங்காட்டி, யருவதாய்நின்ற
ரன்ற ஞானையினமர்ந்துசெலலும்." எ-து. கண்டுகொள்க. இதி
ல் மாயாவுருவுகள் மருவியார்த்து என்றமையால் சிருஷ்டிகாலங்
காரியமாயையோடுங் கன்மங்கூடிநின்று காரியப்படுமென்பதொ
ழியக் காரணத்திலுங் கூடிநிற்குமென்பதற்கு வழியே தென்னில்
ஆன்மாக்களுக்கு மும்மலங்களுங் கூடிநிற்கும் அது "மும்மல நெ
ல்லினுக்கு முளையொடு தவிடுமிப்போல்" என்றமையால் கன்மத்
துக்குவமை முளையும் மாயைக்குவமை யுமியுமாதலா லந்தநெல்லி
லுமிபோனால் முளைஜீவியாதாற்போலக் கன்மமு மாயையாதார
மாக வொடுங்கி மீளவு மாயையாதாரமாக ஜீவிக்குமென்பதை ய
நுபவத்தாற் கண்டுகொள்க. அன்றியும் அந்தநெல்லு மக்கினியினு
லே வெதுப்புண்டவவதரத்து உமிகிடந்தாலு முளையெழாதாகை
யாற் கன்மமில்லாதபொழுது மாயையும் ஜீவிப்பற்றுப்போமென்
பதை யநுபவத்தாற் கண்டுகொள்க. ஆகையால் கன்மத்துக்கிடா
க மாயையுண்டாமென்றும் மாயைக்கிடாகக் கன்மமுண்டாமென்
று மிரண்டு மொன்றைவிட் டொன்று நில்லாதென்று நூல்களிற்
சொன்னது மிப்பொருட்பற்றி யெனவறிக.

இனியிங்ஙனஞ் சொல்லப்பட்ட கன்மமானது அருபமுமாய்
ஜடமுமாயிருக்க அணுக்கடொறும் படர்வதாகி யென்று அறிவாயு
ள்ளவான்மாவை ஜடமாயுள்ள கன்மம்பொருந்துமென்பதற்கு வ
ழியேதென்னில் அந்தக்கன்மமானது ஜடமாயிருந்தாலு மான்மா
வை முத்தியிலேவிட்டு நீங்குவதொழிந்து மற்றவிடமெல்லா மா
ன்மாவை விடப்படாததாகையா லப்படிச்சொன்னதென வறிக.
இப்படிக்கன்மம் ஜடமாயிருந்தும் ஆன்மாவை விடப்படாதெ
ன்பதற்கு. பி-ம். திருக்களிற்றுப் படியாரில் "இன்றிங்கசேதன
மா மிவ்வினைக ளோரிரண்டுஞ், சென்று தொடருமவன் சென்றி
டத்தே." எ-து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது கன்மமலமானது சிருஷ்டிகால மான்மாக்க ளெடுக்கப்பட்ட தேகங்களுக்கெல்லா முன்னிலையுமாய்ப் புசிக்கப்பட்ட போகங்களுக்கெல்லாங் காரணமுமாய்த் திரிவித கரணங்களினாலே புண்ணியபாவங்களை யிபற்றுவித்து அதனாலே ஜநநமரணங்களை யுண்டாக்குவித்துநின்று சங்காரகால மாயாகாரணத்தோடுங்கூடிநிற்குமென்னுமுறைமையை யறிவித்தது.(கஎ)

---

வேறு— இனிக்கன்மமலத்தை நான்குசெய்யுளானுணர்த்துவான் றொடங்கினா ரவற்றுளிது கன்மமலத்தின் றன்மை பொதுவகையா னுணர்த்திற்று.

கன்மமலம்-கன்மமலமானது,—நண்ணியிடு முருவதனுக்கேதுவாகி- ஆத்மாக்கள் பொருந்தப்படுமுடம்பிற் கோர்காரணமாய்,—நானாபோகங்களாய்-நானாவிதமான போகங்களையுடையதாய்,—நாசோற்பத்தி பண்ணிவரும்-நாசத்தையு முற்பத்தியையும் பீஜாங்குரநியாயமாக வுண்டாக்கிவரும்,-- ஆதலாலனாதியாகி-ஆகையினாலேதொன்றுதொட்டுவருவதாய்,—பலவாகி - பலவிதப்படுவதாய்,—அணுக்கடோறும் படர்வதாகி - சிருஷ்டிகாலத்துடலெடுக்குமிடத்துச் சூக்குமமாயாத்மாக்கடோறுஞ்செல்வதாய்,—எண்ணிவருமனவாசகன்மத்தா லியற்றுமியல்பினதாய்-நினைவுபாரந்தமனவாக்குக்காயங்களா லுண்டாக்கத்தக்க முறைமையையுடையதாய்,—மதிகதமாய்-திதிகாலத்தி லாத்மாக்களுக்கு ஜீவிதமாகப் புத்தியையடைந்திருப்பதாய்,—இருபயனும் பாவபுண்ணியமாய்-இரண்டு பிரயோசனமான சுவர்க்கநரகங்க ளுண்டாதற்குக்காரணமான புண்ணியபாவங்களாய்,—புலர்காலை மாயைமேவிப்பொருந்தும்-ஒடுங்குங்காலத்தி லசுத்தமாயையிலேயொன்றுபட்டுப்பொருந்தும்,—இது புகலுமாறு-இஃதாகமங்களிற் சொல்லும்படி. எ-று.

புண்ணியபாவமாயெனமாறுக. மேவிப்பொருந்தும் என்றது குழிந்தாழ்ந்தகண்போலநின்றது. நாசோற்பத்தி பண்ணிவருமெ ன்பதற் கழிவதுமாவதுமா யென்றுரைப்பாருமுளர். அதற்குப்ப ண்ணியென்னும் பொருள்படாமை யெனவறிக. வாச வடசொற் றிரிவு. கன்மமாகுபெயராய்க் காயத்தின்மேனின்றது.

இங்ஙனமநாதியாகச் சொல்லப்பட்ட கன்மமானது ஒவ் வோருடம்புகளோடுங்கூடிக் காரியப்படுமிடத்து மூவகைக்கன்ம மாக நின்று காரியப்படுமுறைமையை மேலருளிச்செய்வா னெடு த்துக்கொண்டருளியது.

கன்மநெறிதிரிவிதநற்சாதியாயுட்போகக் கடன தெனவருமூன்றுமுயிரொன்றிற்கலத்த, ெறுன்மைய தாமல்லதுணவாகாதாலுந் தொடங்கடைவினைடையா தேதோன்றுமாறித், தன்மைதருதெய்விகமும்பவுதி கமான்மிகமாந்தகையிலுமசேதனசேதனத்தாலுஞ் சாரு, நன்மையொடுதீமைதருசேதனனுக்கிவனூ னூடினுதனாழ்வினையாநனுகுந்தானே. (௧௭)

ஆயுவும்போகமுஞ் சாதியுமாய்வினை
மாயையுருவில் மருவுமென்றது.

(இ-ள்.) கன்மநெறிதிரிவிதம் — ஆன்மாக்களுக்குவந்துகூடுங் கன்மத்தின் வழி மூன்று பிரகாரமா யிருக்கும். அவையாவன

நற்சாதியாயுட்போகக் கடனதெனவரும் — நல்லசாதி பொல்லாச் சாதியென்றும் நிறை வாயுள் குறைந்தவாயுள்என்றும் நல்லபோ கம் பொல்லாப்போகம்என்றும்வாராநிற்கும். இவை யெப்பொழுதுண்டானதென்னில்

| | |
|---|---|
| மூன்று முயி ரொன்றிற் கலந் த தொன்மை | இந்தக் கன்மங்கள் மூன்றும் ஓரான்மாவி லேகூடுகிற தநாதியேயுள்ளதாம். சாதியுமாயு ளு முன்னேயுள்ள ஊழானாலும் போக மிப் பொழுதுண்டான முயற்சியல்லவோ வென் னில் |
| அது முதலா து ணவாகா | அந்தப்புசிப்பு ஊழ்வினையாலல்ல துண்டா காது. அதுதான் முன்பே யார்ச்சித்த முறை யிலே வருமோ முற்பிற்பாடாக மாறிவருமோ வென்னில் |
| தானும் | அப்படியார்ச்சித்த வொழுங்கிலே வருகிற துமுண்டு. அன்றியும் |
| தொடங்கடை வி னடையாதே தோன்றுமாறி | அப்படிவாராமல் வன்மைமென்மைகளுக் கிடாக மாறிவருகிறதுமுண்டு. அப்படி வருகி ற கன்மத்தின் விதி யெங்ஙனேயென்னில் |
| தன்மைதருதெ ய்விக முற்பவுதி கமான்மிகமாந் த மையினுறும் | இயல்பிலே வரப்பட்ட கன்மங்கள் தெய் வத்தாலும் பஞ்சபூதங்களாலும் ஆன்மாக்க ளாலும்வரும். அவைவருமிடத்து |
| அசேதன சே தனத்தாலுஞ் சா ரும் | அறிவில்லாதவையாலும் அறிவுள்ளவையா லும் வரும். ஆகையால் |
| நன்மை யொடு தீமை தருசேத னனுக் கிவணூறு டில் | இங்ஙன நன்மைதீமைகளைப் பொருந்திவ ருகிற ஆன்மாவுக் கிவ்விடத்திற் புசிப்பை வி சாரிக்கில் |
| அது ஊழ்வினை யாகனுருந்தானே | முன்ஜநநத்திற் புசிக்கச்செய்தே யேறின வாகாமியந்தானே இந்தஜநநத்துக்குப் புசிப் பாவந்து பொருந்தும். எ-று, |

௩-ம். மூன்றுமூயிரொன்றிற்கலத்தல். எ-கு. ஓரான்மாவி னிடத்திலே மூன்றுகாரியநிற்குமென்று பொருட்கூறியதேதென் னில் ஆன்மாக்கள் யாதாமொரு சரீரங்களைக் கன்மத்துக் கீடாக வெடுக்குமிடத்து யாதாமொரு சரீரவர்க்கங்களும் வயதுகளும் பு சிப்புகளுமல்லாம லெடாதாகையாலே யப்படிச் சொன்னதென வறிக.

இனியதூழல்ல துணவாகா எ-கு. இப்பொழுதுண்டான பு சிப்புகளூ மூழாலொழிய வுண்டாகாதென்று பொருட்கூறியதற்கு வழியே தென்னில் ஆன்மாக்கள் யாதாமொரு கன்மங்களைப் புசி க்குமிடத்து வந்துகூடினத்துக்குந் தவறுவருகையாலு நினையாத து வந்துகூடுகையாலும் ஊழாலல்லது புசிப்புண்டாகாதென்ற தெனவறிக. இதற்கு. பி-ம். திருவள்ளுவப்பயனில். "ஊழிற்பெ ருவலியாவுளமற்றொன் று-சூழினுந்தான் முந்துறும்" எ-து. கண்டு கொள்க.

இனிதொடங்கடைவி னடையாதேதோன்றுமாறி. எ-கு. க ன்மத்தின்வழி வன்மை மென்மைகளுககீடாக மாறிவருகிறது மு ண்டென்று பொருட்கூறிய தேதென்னில் முந்தச்செய்த கன்மம் பிற்பட்டும் பின்புசெய்தகன்ம முற்பட்டும் வருகையாலே யப்படி ச்சொன்னதெனவறிக. அதுவெங்ஙனேயென்னில் ஒருவன் பயிர் செய்யுமிடத்து முந்தவல்விதையை விதைத்துப் பின்பு இளவிதை யைவிதைத்தாலும் அந்தவிளவிதை முந்தப் பயன்படுமாறுபோல க் கன்மத்தின்மிகுதி முந்தப்பயன்படுமெனவறிக.

இனி தன்மைதருதெய்விகமுற் பவுதிகமான்மிகமாம். எ-கு. தெய்வத்தாலும் பஞ்சபூததாலும் ஆன்மாக்களாலும் வருமென் றதற்கு வழியேதென்னில் தெய்விக கன்மமாவது மாதாவின் கரு ப்பக்கோளகையிலே யிவனிருக்குமிடத் துண்டான விதனம் ஜந நமரணத்திலுண்டான விதனம் யமதண்டம் நரகவேதனை இவை

முதலாகவுள்ளவையிற்றிலே துக்கப்படுதலெனவறிக. இனிபஞ்ச
பூதங்களால் வருகிறபௌதிககன்மமாவது குளிர் வெப்பம் மழை
காற்று மின் இடி சுவர்விழுதல் கல்விழுதல் இவைமுதலாக வுள்
ளவையிற்றிலே துக்கப்படுதலெனவறிக. இனி ஆன்மீககன்மம் ஆ
ன்மாக்கள் வருவையாவது சரீரத்தினாலும் மனத்தினாலுந் துக்க
ப்படுகை. இதற்குவழியேதென்னில் தந்தஞ் சரீரத்தி லுண்டான
வியாதிகளினாலும் மிருகங்களினாலும் பறவைகளினாலும் இரா
க்ஷதராலும் பசாசுகளாலும் கள்வராலும் மற்றுள்ளமனிதராலும்
இவைமுதலாயுள்ள சரீரதுக்கங்களெனவறிக. இனி மற்றமனோ
துக்கமாவது பிறருடைய கல்வியுஞ் சௌந்தரியமுஞ் செல்வமுங்
கண்டு பொறாமை அபிமானங்கெடுதல் எழுந்தது புத்தியாகச்செ
ய்தல் கோபியாய்த்திரிதல் என்னுமிவைமுதலாயுள்ளவை யெனவ
றிக. மற்றச்சுககன்மங்களும் இங்ஙனஞ்சொல்லிவந்த வொழுங்
கிலே கண்டுகொள்க. ஆக விங்ஙனஞ் சொல்லப்பட்ட மூவகை
துக்கமாகிய கன்மங்களுக்கு பி-ம். ஞானாமிர்தத்தில் "ஆதிதெய்
வீக மாதிபௌதிக- மாதியத்தியான்மீகமென்ன - வோதியதுக்க
மூன்றி னத்தியான்மீக - மெய்யின்மனத்தி லெய்திவிரண்டே-வளி
யிற்பித்தில் விளைபாவிளையி - னானுதொழுனையி லுதிக்கக்கோ
ட்டில் - வெற்பிற்குலையின் மக்களின்விலங்கி-னலகையிற்கள்வரி
ம் பறவையியினிருதரில் - மைந்தரின்மகளிர் மணந்திடைதணப்
பிற் - பேரறம்வளர்ப்பிற் பெருந்திருநுகர்விற்-சீரியயாக்கை மா
துயர்மாசு - மனத்துறு துயர நினைப்பருஞ்சோக - மறிவுருவாக்க
மடைவனற்பொறாமை - மான்மாக்காலம் பூணுதமறுத்த - விச்
சைடைநினைத விருஞ்சினமிகுத்த - வினையவைமுதலா நினைவருந்
திரத்த - வாதிபௌதிகஞ் சீதமாமழை - யுருப்பவிர்வேனி லுட்
குவருகடுங்கா - லிருள்கிழிடுமின் பெருவிறலசனி - மன்னுயிர்க்
குழுகண் டுன்னியாறருந்த - லாதியாயவீவருந்திறத்த - வாதிதெ

ய்விகம் பேதையாவையின் - கருக்குழியழுங்கல் பிறப்புறும்போது - திரைவருந்திமை வரைவில்பேதமை - மடங்கலாருயிர் தொடங்கினவவ்வலி - யாவரும் விழையாக் கொள்வாய்நிரயத்து-வீழ்ந்தனவொழாஅ வான்கழிதுன்ப - மினையமாலைய துயரிடைவிளைநகர் - கருங்கைக்கைமைக் களிறுதைத் திரும்புலப்-பெரும்படைவிரிந்து சூழ்ந்திருந்தா - நாற்கதிப்பவனி யுலா-யார்த்தவீழ்திரம் பிற் போற்றுமதி புரிந்தே" எ-து. கண்டுகொள்க. அன்றியும் இங்ஙனங் கூறிவந்த மூவகைதுக்கஞ் சிவாகமத்தில் கிரந்தத்திலேயெடுத்து சதிர்த்தின சங்கிரகத்திலே சேர்ந்த கிரந்தத்தினுங் கண்டுகொள்க. அந்தக் கிரந்தத்தினத்தமும் முற்கூறிய ஞானாமிர்தத்தினத்தமும் ஒப்புநோக்கிக் கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது கன்மமானது காரியப்படுமிடத்து ஆயுளும் போகமும் சாதியுமாகநின்று காரியப்படுமென்றும் அது ஆழ்வினையாலொழிய வராதென்றும் அது வருமிடத்து ஆர்ஜித்தவொழுங்கிலே வருமென்றும் அன்றியும் வன்மைமென்மைகளுக்கீடாக மாறியும் வருமென்று மது தெய்விககன்மமாகவும் பௌதிககன்மமாகவும் ஆன்மீககன்மமாகவும் வருமென்றும் புண்ணியபாவங்களுக்குடனாய் நிற்கிற வான்மாக்களுக் கிவையெல்லா மூழ்வினையால்வருமென்றும் வருமுறைமையை யறிவித்தது. (கஎ)

---

வேறு—இஃதந்தக்கன்ம முடனேறு நின்று காரியப்படுமுறைமை யுணர்த்திற்று.

கன்மநெறி-கன்மத்தின்வழி,—நற்சாதி யாயுட்போகக் கடனதெனத் திரிவிதம்-நல்லசாதி வாழ்நாள் புசிப்பான முறைமையை யுடையதென்னும்படி மூன்றுவிதமாம்,—வருமூன்று முயிரொன்றிற் கலத்தலுண்மையது-இங்ஙனம் வருமூன்றுமோராத்மாவிலே கூடிப்போதுகிறது பழையதாயிருக்

கும்,—ஊழல்ல துணவாகாதானும்-அதுதான் முறையிலன்றி
ப் புசிக்கலாகாதாயினும்,—தொடங்கவைவி னையாதே
தோன்றுமாறி-ஆர்ஜித்த முறையிலே கூடாமல் வன்மை மெ
ன்மைகட் கிடாக மாறிக்கூடும்,—தன்மைதரு தைவிகமுற்
பூவுதிக மான்மிகமாந் தகையினுறு மசேதன சேதனத்தாலு
ஞ்சாரும்-இயல்பாகிய வாதிதைவிக முதலாக வாதிபவுதிக
மாதியாத்மிகமான கூறுபாட்டாற் பொருந்துகின்ற வசேத
ன சேதனங்களாலுஞ் சுகதுக்கமாய்ப் பொருந்தும்,—நன்
மையொடு தீமைதரு சேதனனுக் கிவனுறுகுடில்-இப்படி நன்
மை தீமைகளைச் செய்துவருகின்ற வாத்மாவுக் கிவ்விடத்து
ப் புசிப்பை விசாரித்துப்பார்க்கில்,—அதனூழ்வினையா னனு
குந்தானே - அந்தக் கனமங்களைப் புசிக்கு முறைமையிலே
மேலுஞ் சனனமுண்டாகைக்குக் கன்மமுண்டாகா நிற்கு
ம். எ - று.

மேலும் சேதனத்தாலுமென்ற வும்மை இறந்தது தழீஇ
யவெச்சவும்மை. மாறித்தோன்றுமெனக. தெய்வத்தால் வ
ருவது தைவிகம். பூதத்தால் வருவது பௌதிகம். ஆத்மாக்
களால் வருவதாத்மிகம். இவற்று ளாத்மிகமிருவிதம். அவை
சாரீரகமு மானசமு மெனவாம். சாரீரகமாவது குன்மங்
காசமுதலான வியாதிகளால்வருவது. மானசமாவது சோ
கம் அசூயை மாச்சரியங்களால் வருவது. ஒடு எண்ணொடு.

---

இங்ஙன மெடுத்தவுடலிலே புசிக்கிறதெல்லா மூழேயாக
லாய் மேலைக்கு ஜநநத்துக்கேதுவாகிய ஆகாமியமுண்டாகி
றவகை யெப்படியென்றுவினவ மேலருளிச்செய்வா னெடுத்
துக்கொண்டருளியது.

மேலைக்கு வருவினையே தெண்ணிலங்கண் விருப்
புவெறுப் பெனவுறியவ் வினையுமெல்லா, மூலத்த வி

னைப்பயில்வா மென்னினாமேன் முற்றியதன் பயனு
னக்கு முளைக்குமென்பர், ஞாலத்து வினைகளிரு திற
னாகும்புந்தி நண்ணாத வினைநணுகும் வினையெனவொ
ன்றிரண்டாம், மேலைத்தா னிதமகித மாமிதனால்வழுவா
தெய்திபிடும் புண்ணியபாவங்களென்றே. (கஅ)

மன்னியவிருப்பு வெறுப்பால்வல்வினை
பின்னும்விளையும் பெற்றியையுரைத்தது.

| | |
|---|---|
| (இ-ள்.) மேலைக்குவருவினையேதென்னில் | இந்தவுடலிலுண்டாகிய புசிப்பெல்லா மூழேயாகில் மேலைக்கு ஜநநமுண்டாகத் தக்க கன்மத்துக்கேது வெப்படியென்னில் |
| அங்கண்விருப்பு வெறுப்பெனவறி | அந்தவூழாகிய சுகதுக்கம் புசிக்கிறவவஸரத்திலே யுண்டாகிய பிரியாப்பிரியங்கள் வித்தாக மேலைக்கு ஜநநமுண்டாமென வறிவாயாக |
| அவ்வினையுமெல்லா மூலத்த வினைப் பயில்வாமென்னில் | அப்படிப்பிரியாப் பிரியப்பட்டுப் புசிக்கிறது முன்னைவினையின்பகுதி யல்லவோ வென்னில் அப்படியானாலும் |
| நாமேன முற்றியதன் பயனுனக்குமுளைக்குமென்பர் | நாமுன்புபண்ணின கன்மமல்லோவிப் பொழுது புசிக்கிறோமென்று விசாரியாமல் நாம்செய்தோம் பிறர்செய்தாரென்று நீசுட்டுகையாலே யந்தச் சுட்டாலுள்ள பயன் மேலைக்குற்பவிக்குமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். ஆகையால் |
| ஞாலத்து வினைகளிருதிறனாகும் | பிரபஞ்சத்திற் புண்ணியபாவங்க ளிரண்டுவகைப்பட்டிருக்கும். அஃதெங்ஙனேயென்னில் |

புத்திகண்ணு தவினை நணுகும் வினையெனவொன்றிரண்டாம்

புத்திபூர்வமாகச் செய்ததென்றும் அபுத்திபூர்வமாகச் செய்ததென்று மிரண்டுவகைப்பட்டிருக்கும். அன்றியும் புத்திக்குப் பொருந்திய காரியமென்றும் பொருந்தாத காரியமென்றுஞ் சொல்லவுமாம். அதனை விசாரிக்குமிடத்து

ஏலத்தானிதமகிதமாம்

அநாதியே ஹிதமென்று மஹிதமென்று மிரண்டுவகையாம்

இதனால்வழுவாதெய்திடும் புண்ணியபாவங்களொன்றே.

இந்தஹிதத்தாலுந் தப்பாமற்பொருந்தியிடும் புண்ணியகன்மமும் பாவகன்மமும். எ - று.

வி - பு இப்பொழுது புசிக்கிறதெல்லா மூழ்முயற்சியாலும் மேலைக் காகாமியமுண்டாகிற தெப்படியென்று கேட்டதற்கு இந்தப்பிராரத்தம் புசிக்கச்செய்தே யுண்டான விருப்பு வெறுப்பாகிய ஹிதாஹிதங்களாலே ஆகாமியங் கட்டுப்படு மென்று ஆசாரியர் விடைகொடுத்ததற்கு. பி-ம். சித்தியாரில். "முற்செயல்விதியையிந்த முயற்சியோடூட்டுவிக்கு மிச்செயல்பலிக்குமாறென் னிதமகிதங்கண் முன்னை, நற்செயலாலு விங்கு மவைசெயின்மேலைக்காகும், பிற்செயாதவையுண்டே லின்றுபின்னொடருஞ்செய்தி." எ - ம். அங்ஙன் விருப்பு வெறுப்பு மநாதியே தொன்றுதொட்டு வருமென்பதற்கு. பி - ம். சித்தியாரில். "மேலைக்குவித்துமாகி விளைந்தவை யுணவுமாகி, ஞாலத்துவருமாபோல நாஞ்செயும்வினைகளெல்லா, மேலைத்தான்பலமாச்செய்யு மிதமகிதங்களெல்லா, மூலத்ததாகியென்றும் வந்திடுமுறைமையோடே." எ-ம். கண்டுகொள்க. அப்படி முன்புசெய்த கன்மத்துக்கிடானவல்லோ விப்பொழுது புசிக்கிறேமென்று விசாரியாமல் நான்செய்தேனென் றெ

செய்தாரென்று சுட்டும்வகையாலந்தச்சுட்டாலுள்ள பயன் மேலைக்கு வினையாமென்பதற்கு. பி ம். சித்தியாரில் "யான் செய்தேன் பிறர்செய்தா ரென்னதியானென்னுமிக்கோணை ஞானவெரியால்வெதுப்பிநிமிர்த்துத், தான்செய்வதின்றிட வத்தத்துவன்றானே தனையளித்துமுன்னிற்கும் வினையொ ளித்திட்டோடி, நான்செய்தேனெனுமவர்க்குத்தானங்கின்றி நண்ணுவிக்கும்போகத்தைப் பண்ணுவிக்குங்கன்ம, மூன்செய்யாஞானந்தா னுதிப்பினல்லா லொருவருக்குமியானென திங் கொழியாதன்றே." எ-து. கண்டுகொள்க.

ஞாலத்துவினைகளாகிய விருவகைப்பயனாகிற புண்ணியபாவங்கள் புத்திபூர்வத்தாலும் அபுத்திபூர்வத்தாலு முண்டாமென்றதேதென்னில் அபுத்திபூர்வமாவது ஒருபொல்லாங்குகளிலாவது நன்மைகளிலாவது மனதும்வாக்குந் தன்னையறியாமலோடினாற் பின்பு நம்மையறியாம லிப்படிவந்ததாயிருந்ததெனக் கொள்கை. புத்திபூர்வமாவது வொருவர்க்கொரு நன்மை தீமைகளைச் செய்யுமிடத்து இவர்களுக்கென்னபொல்லாங்குசெய்வோமென்றுமென்னநன்மை செய்வோமென்று மனதும்வாக்குங் காயமுங்கூடி நினைத்துஞ் சொல்லியுஞ் செய்தும்வருகை யெனவறிக.

இதனாற்சொல்லியது இந்தவுடலிலே புசிக்கிறதெல்லாம் பிராரத்தமானால் மேலைக்காகாமிய முண்டாம்வழி யெப்படியென்று வினவ இப்பொழுது புசிக்கிறது முன்புள்ள ஊழ்வினையின் பயனல்லோவென்று விசாரியாமல் நான்செய்தேன் பிறர்செய்தாரென்ற விருப்பு வெறுப்பாகிய சுட்டால் மேலைக்கு ஜநநமுண்டாமென்று மவைவருமிடத்துப் புத்திபூர்வத்தாலு மபுத்திபூர்வத்தாலும் வருமென்னு முறைமையையு மறிவித்தது. (௧அ)

வேறு—இது முன்னர் மேலைக் காகாமியமாய்ப் பொருந்துமென்பதை யாசங்கித்தெப்படி பொருந்துமென்பானுக்குத்தர முணர்த்திற்று.

மேலைக்கு வருவினையெதென்னி லங்கண் விருப்புவெறுப்பெனவறி-முன்பு நானார்ச்சித்த கன்மமிப்போது புசித்துவிடுவேனா யிருந்தது மேலுமொரு சனனமுண்டாகைக்கு வருகின்ற வினை யெந்தவினை தானென்று கேட்கி லிப்பொழுது புசித்துவிடுவே னென்றாயே யப்படி புசிக்கு மவ்விடத்திலே யுண்டான விதாகிதங்களால் வரும் வினையென்றறிவாயாக,—அவ்விளைவுமெல்லா மூலத்த வினைப்பயில்வா மென்னின்-அங்ஙனம் மிதாகிதத்தாலுண்டான சகலவினைகளு முன்புள்ள புண்ணியபாவங்களின் றொடர்ச்சியாமெனின்,—நாமென முற்றியதன் பயனுனக்கு முளைக்குமென்பர்-நாமென்னு மமதைதானே மேலுமொரு பிறப்புண்டாகைக்கு முதிர்ந்ததன்பயனாகிய கன்மமுளைக் குண்டாமென்ப ருயர்ந்தோர்,—புந்தி நண்ணாத வினை நணுகும் வினையெனவொன் றிரண்டாய் ஞாலத்து வினைக ளிருதிறமாகும்-அபுத்தி பூர்வமான கன்மமும் புத்தி பூர்வமான கன்மமுமென ஒருகன்மந்தானே யிரண்டாய்ப் பிரபஞ்சத்திலே செய்து போதுகின்ற கன்மங்களெல்லா மிரண்டுவகையாம்,—ஏலத்தா னிதமகிதமாம்-அங்ஙனமாயிடத்திற் பொருந்தத் தானிதமு மகிதமுமாகாநிற்கும்,—இதனால் வழுவாதெய்தியிடும் புண்ணியபாவங்களென்றே-இந்த விதாகிதத்தாலே தப்பாமற் புண்ணியகன்மம் பாவகன்மமென்று பொருந்தும். எ-று.

விருப்பு வெறுப்பும் விளைவு மாகுபெயர். அவ்வினையு மென்பதூஉம் பாடம். எல்லாமும் எனமாறுக. இரண்டாமென்று பாடமோதுவாருமுளர். என்றேயெய்தியிடு மெனக்கூட்டுக.

இங்ஙன முண்டாகப்பட்ட வாகாமியத்தாற் புண்ணிய பாவங்களுண்டாம் வழியெப்படியென்று மதுபோம்வழியெப்படியென்றும் வினவ மேலருளிச்செய்வா னெடுத்துகொண்டருளியது.

உற்றதொழி னினைவுரையி னிருவினையுமுளவா
மொன்றொன்று லொழியாது மொழியாதுன்னின், மற்
றவற்றி னொருவினைக்கோர் வினையால்வீடு வைதிக
சைவம் பகரு மரபிலாற்றப், பற்றியது கழியுமிது வி
னையாலேற்கும் பான்மையுமாம் பண்ணுது பலிக்குமு
ன்னருஞ், சொற்றருநூல் வழியின்வழி மிகுதிசோருஞ்
சோராதங் கதுமேலைத் தொடர்ச்சியாமே. (கசுூ)

ஒழியாவிருவினை யொன்றினுலொன்றிங்
கழியாதநுபவ மாகுமென்றறு.

(இ - ள்.) உற்றதொழி னினைவுரையி னிருவினையுமுளவாம் — பொருந்தப்பட்ட வுடம்பின்றொழிலாலு மனதினினைவாலும் வாக்கின்சொல்லாலும் புண்ணியபாவங்க ளிரண்டுமுண்டாம். அப்படியுண்டாமிடத்து ஒருகன்மங்கொண்டொரு கன்மத்தைப் போக்கிக்கொள்ளலாமோ இரண்டு மிரண்டாக அநுபவிக்க வேணுமோ வென்னில்

ஒன்றொன்று லொழியாது மொழியாதுன்னில் — புண்ணியத்தாற் பாவமும்போகாது பாவத்தாற் புண்ணியமும் போகாது ஆகையாலே விசாரிக்குமிடத்துப் புசிப்புந்தவிராது. அப்படியானுல் ஒருவர்செய்த பாவகனமங்களைப் போக்கிக்கொள்ளுகைக்கு வழியில்லையோவென்னில்

மற்றவற்றி னொருவினைக் கோர் வினையால் வீடு வைதிக சைவம் பகரும்

அப்படிச் செய்யப்பட்ட வினைகளில் ஒருவினையைக் கொண் டொருவினையைப் போக்குதற்குபாயம் வேதாகமங்கள்சொல்லாநிற்கும்

மரபிலாற்றப் பற்றி யது கழியும்

அந்த வேதாகமங்கள் சொன்னமுறைமையிலே செய்தாற் கூடினகன்மங்க ணீங்கும். அப்படிச் செய்யமாட்டாதவர்களுக் கிந்தத்தோஷங்கள் நீங்கும்வழி யெங்ஙனேயென்னில்

இது விலையா லேற்கும் பான்மையுமாம் பண்ணுது பயலிக்கும்

இந்தத் தோஷங்கள் நீங்குகைக்குத் தான் செய்துகொள்ளமாட்டா வில்லையாகிலுஞ் சிலதிரவியங்களைக் கொடுத்துச் செய்யவல்லவர்களைக்கொண்டு செய்வித்துக் கொள்ளுகையாலே தான்செய்யாதிருக்கிலுந் தனக்குப்பயனாகப் பலிக்கும். இங்ஙனமுண்டான தோஷங்களைப் போக்கிக்கொள்ளலாமென் றிருக்கச்செய்தே யொன்றொன் றுலழியாதென்ற தேதென்னில். அஃதாவது

முன்னஞ் சொற்றரு நூல் வழியின் வரின் மிகுதி சோரும்

முன்னே சொல்லப்பட்ட வேதாகமங்களின் முறைமையிலே யொருவன் றன்செய்த தோஷத்துக்குத்தக்க பிராயச்சித்தஞ் செய்தாலுமந்தத்தோஷத்தின் கௌரவங்கெட்டுத் தோஷமாத்திர நிற்கும். அதேதென்னில் ஒருவன்பிரமஹத்தி கோவதைமுதலாயுள்ள தோஷங்கள் செய்து

அதற்குத்தக்க பிராயச்சித்தஞ் செய்தாலு நரகவேதனைக்கு
ள்ள கௌரவங்கெட்டுக் கொலைதோஷமாத்திர நிற்குமென
வறிக. அப்படிக் கொலைமாத்திரமாகநின்றதே துசெய்யுமெ
ன்னில்

| | |
|---|---|
| சோராதங்க | நீங்கிப்போகாத கன்ம மேலுடலெடுங் |
| துமேலைத் தொ | கைக்குத் தொடர்ந்தனையாம். எ - று ஆகை |
| டர்ச்சியாமே. | யினாலே ஒன்றொன்றா லழியாதெனக்கொ |
| | ள்க. |

௫ - ம். உற்றதொழி லினைவுரையாகிய மனவாக்குக் காயங்
களா லுண்டாகிய கன்மங்களாவன? அருணினைவு பொறை பிறர்
பொருள்விரும்பாமை செய்நன்றிமறவாமை அபிமானம்பேணல்
அழுக்காறின்மை அவாவறுக்கை பிறர்விதனங்கண்டிரங்குதல் பி
றருக்கு அறிவுஞ் செல்வமு மழகும் மோக்ஷமுமாகிய விவைநான்
குந் தம்மினு மிகுதியாக வேணுமென்று விரும்பிநினைக்கை ஆக
விவையித்தனையும் மனதினுண்டாகிய நல்வழிநினைவெனவறிக. இ
வையித்தனைக்கு மாறுபட்டநினைக்கை தீவழிநினைவெனவறிக. இனி
வாக்கினா லுண்டாகிய கன்மமாவது தன்மம் ஞானங்கூறுதல் புற
ங்கூறாமை உண்மையே சொல்லுதல் நூலுரைகூறல் இனியனசொ
ல்லுதல் கடுஞ்சொல்விடுதல் வேதாகமங்களை யோதல் ஆகவிவை
யித்தனையும் வாக்கினாலுண்டாகிய நல்லுரையெனவறிக. இவையி
ற்றுக்கு மாறுபட்டக்கூறுகை தீவசனங்களெனவறிக. இனிகாய
த்தினாற் செய்யுங் கன்மமாவது அரிதாயதவங்களைச் செய்தல் பூ
சைகளோமங்கள்செய்கை பகுத்துண்ணல் பூமரங்கள் தோப்பு
கள்வைக்கை பிறர்மனைவிழையாமை குளம்வெட்டுகை கூவறோ
ண்டல் தன்மசாலை பள்ளிக்கூடம் திருக்கோயிலெடுக்கை மடங்
கட்டுகை ஆக விவையித்தனையுங் காயத்தினாற்செய்யு நற்றொழில்க
ளெனவறிக. இவையிற்றுக்கு மாறுபாடாகச் செய்கையெல்லாந்

தீவழித்தொழிலெனவறிக. இங்ஙனமனத்தினு னினைத்தும் வாக்
கினாற் சொல்லியுங் காயத்தினாற் செய்தும் வருமென்பதற்கு,
பி-ம். ஞானாமிர்தத்தில் "பொய்ப்பொறிபுணர்க்கு முப்பொறியு
ள்ளு - முள்ளச்செய்தி தெள்ளிதிற்கிளப்பி - னிருவர் காட்சி யரு
ளொடுபுணர்தல் - பெரும்பொறைதாங்கல் பிறன்பொருள்விழை
யாமை - செய்தநன்றறிதல் கைதவங்கடிதல் - பால்கோடாது ப
கலிற்றோன்றல் - மானமதாணி யாணிற்றுங்க - லழுக்காறின்மை
யவாவிற்றீர்த - லருந்துயருயிர்கட் கிருந்தகாலை - யழறோய்வன்
ன ராகியானக் - கழலுநெஞ்சிற் கையற்றிளைத்தல் - பன்னருஞ்சி
றப்பின் மன்னுயிர் துடக்கிற் - கறிவும்பொறியுங் கழிபெருங்கவி
னும்-தெறற்கருந் துறக்கமு மறப்பவாங்குத் - தம்பினும்வேண்
டு மெண்ணரும்பெருங்குணம் - வாக்கொடுசிவணிய நோக்கினமக்
கொள - வறம்பெரிதுரைத்தல் புறங்கூறாமை - வாய்மைகல்வி த்
மையிற்றிறம்ப - லின்மொழியிசைத்தல் வன்மொழிமறுத்த-லறி
வுநூல்விரித்த லருமறைகழற - லடங்கியவுரைதல் கடுஞ்சொல்வி
டுதல் - பயனீன்றபடிக்கல் படிற்றுரைகெடுதல் - காயத்தியைந்த
வீயாவினையு - ளருந்தவந்தொடங்க றிருந்தியதானங் - கொடை
யுடம்படுதல் படையுடம்படாமை - யமரர்ப்பேணலாகுதியருத்த-
லொழுக்கமோம்பும் விழுப்பெருங்கிழமை - யுடம்பிடியேந்தியு-
றணிந்திடுமா - றடைந்தகாலை யவணியருயர்ந்தோ - ராலலர்தெரி
ந்து மாருயிர்பெரும்பிறிதாகலி - னிரும்பிணமிசைஞரி றொராங்
குபட்டா - ரைம்பெரும்பாதகத் தாழ்ந்த - லிந்தியப்பெரும்ப
டை யிரியநூறும்-வனற்றறுகண்மை வாளினிட்டாங்கு-நோவன
செயினு மேவனவிழைத-றவச்சிறிதானு மிகப்பலவிருந்து - பாத்
துண்செல்வம் பூக்கமழிரும்பொழி - றன்மனைக்கிழத்தி யல்லதை
ப்பிறர்மனை - யன்னையிற்றீரா நன்னராண்மை - கார்கோளன்ன
கயம்பலகிளைத்தல்- கூவறொட்ட லாதுலர்சாலை - யறங்களைநாவி
னுன்றோர்பள்ளிக் - கடவுட்கண்ணியத் தடவுநிலைகோட்ட-மினை

யைமுதலா நிலைவருந்திறத்த - புறத்தனமாதோ வறத்துறைமறத்துறை - யிவற்றுவழிபடா தெதிர்வனகெழீஇ - யுளூற்றென்மொழிப வுணர்ந்திசினோரே." எ-து- கண்டுகொள்க.

ஒருவினைக்கோர் வினையால்வீடு என்றது சமயாசார முதலாயுள்ளத்துக்குத் தவறுவந்தா லதற்குப் பிராயச்சித்தஞ்செய்து கொள்ளவுமா மென்றதெனவறிக.

இதனாற்சொல்லியது மனவாக்குக் காயங்களினாலே கன்மமேறுமென்றும் அப்படியேறினகன்மங்களை நீக்கிக்கொள்ளுகைக்குப் பிராயச்சித்தமு மந்தப்பிராயச்சித்தத்தாற் போகாத கன்மத்துக்கு மேலும் ஞானதொந்தனை யுண்டாமென்னு முறைமையையு மறிவித்தது. (கக)

---

வேறு— இது கன்மத்துக்கு மாயையுபாதானமான முறைமையும் அக்கன்மம் வாதியாதபடிக் குபாயமுண்டென்பதூஉ முணர்த்திற்று.

இருவினையு முற்றதொழினினைவுடனாலுளவாம் - அந்தப்புண்ணியபாவங்களான விரண்டுவினைகளு மெய்மனமொழிகளான முப்பொறிகளிற் பொருந்திய தொழிலு நினைவு முரையுமான விம்மூன்றினாலே வருவனவாம்,— ஒன்றொன்றாலழியாது - ஒருவினையா லொருவினைபோகாது,— உன்னினொழியாது - விசாரித்துப்பார்க்கிற் புசிப்புத்தவிராது, — மற்றவற்றி னொருவினைக்கோர் வினையால்வீடு-அவ்விருவினைகளு ளொருவினையா லொருவினைக்கு விடுதலையும்,— வைதிகசைவபகரும் - வேதாகமங்கள்சொல்லும். ஒழிதலெப்படியெனில்?—மாயிலாற்றப்பற்றியதுகழியும்-அவை சொன்ன முறையிலேசெய்தாற் கூடின பாவகன்மநீங்கும்,— இது - இங்ஙனம் புண்ணியத்தாற் பாவமொழிகை,— விலைடாலேற்றும்பான்மையுமாம் - விலைக்குக்கொள்ளு முறைமையுடையதாம்,—பண்ணுதுபலிக்கும் - இப்படி சாந்திபண்ணு,இருப்பினும்

அபுத்திபூர்வமாகப் பாவமொழிகைக்கேற்ற புண்ணியமுஞ் சித்திக்கும். ஆனா லிந்தமுறையிலே பாவமடங்கலையும் போக்கிவிடலாமோவென்னில்?—முன்னஞ்சொற்றருநூல்வழியின் வரின் மிருதிசோரும்-இறைவன் முக்காலத்திலே திருவுளம்பற்றின வேதாகமங்களின் முறைமையிலேசெய்தான் மிருந்த கன்மங்கள்போம்,—சோராதங்கதுமேலைத் தொடர்ச்சியாமே - அவ்விடத்தும் போகாதகன்மம் புசிப்பிக்கவேண்டுகையாலே மேலைக்குச் சம்பந்தமாம். எ-று.

வீடுநட்டபின் வீழ்வில்லையென்பதுபோல நினதுபான்மை யாகுபெயர். அங்குச்சோராதெனமாறுக. ஒன்றொன்று லழியாதென்பதற்கு மனமொழிமெய்களிலே யொன்றாற் செய்தகன்ம மொன்றாற்போகாதென் றுரைப்பாருமுளர். இந்தக்கன்மம் பீஜாங்குரநியாயமாகப் பிரவாகரூபியாயிருக்கும். இன்னுந்திட்டகன்மம் அதிட்டகன்மம் அனியதகன்மமென மூவிதமாம். திட்டகன்மமாவது ஔடதப்பிரயோகத்தாலு மரசராலும் பகைவராலே யபிசாரமாகப் பிரயோகிக்கப்பட்ட மந்திரங்களாலு மிம்மையிற்பலிப்பது. அதிட்டகன்மமாவது சுவர்க்க நரகங்களிலே அனுபவிக்கப்படுவன. அனியதகன்மமாவது அசுவமேதமும்பிரமகத்தியு மொருகாலத்திற் செய்யப்பட்டுப் பக்குவம்வந்தவிடத் தொருங்கே யிரண்டும்புசிக்கப்படாமையிற் கருத்தா வின்னகாலத்தி லிதுவென் றறுத்திப்புசிப்பிக்குமது. இனிமூன்றும்பத்தி திட்டாதிட்டம். அதாவது ஒருவனிம்மையிற்செய்த அசுவமேதபல னிம்மையிலே பலிப்பது வென்பதுமொன்று. கன்மங்களை மாயையிலே பொருந்திப் பக்குவப்பட்டுச் சிருஷ்டிகாலத்திலே புசிக்கப்படும். இதன் விரி வாகமங்களிற்காண்க.

மாயையென்பதுதொட்டு-துகாறும் பஞ்சமலங்களின் காரணகாரியங்க ளுணர்த்திற்று.

இங்ஙனம் பஞ்சமலங்களின் காரண காரியங்களை ஏகமாய் என்னும் விருத்தந்தொடங்கி யிவ்வளவு மருளிச்செய்து மேலிந்தப் பஞ்சமலங்களின் றொகையு மிவையிற்றுடன்கூடி நிற்கு மான்மாக்களுக் கிவைநீங்கியே யருளைப் பெறவேணுமென்னு முறைமையு மருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

மோகமிகவுயிர்கடோ றுமூடனாய்நிற்குமூலவாண
வமொன்றுமுயங்கிநின்று, பாகமிகவுதவுதிரோ தாயி
யொன்று பகர்மாயையொன்றுபடர்கன்மமொன்று,
தேகமுறுகரணமொடுபுவனபோகச் செயலாருமாமா
யைத்திரட்சியொன்றென், றாகமலமைந்தென்பரைந்
துமாறு தருளென்பதரிதென்பரறிந்துளோரே. (உ0)

அலக்கண்படுமுயிர்க் கைந்துவகையா
மலத்தின்பகுதியை வனப்புறவகுத்தது.

| | |
|---|---|
| (இ-ள்.) மோகமிகவுயிர்கடோறுமூடனாய்நிற்குமூலவாணவமொன்று | அறியாமை மிகவுண்டாம்படி யான்மாக்கடோறுஞ் சகசமுமா யநாதியுமா யிருக்கப்பட்ட வாணவமலமொன்று |
| முயங்கிநின்று பாகமிக வுதவுதிரோ தாயியொன்று | அந்தவாணவ மலத்தோடுங்கூடிநின்று அது பக்குவமா மளவு மான்மாவை மறைத்து அந்த மலத்தைப் பாகம்வருத்துகிற திரோதமலமொன்று |
| பகர்மாயையொன்று | ஆன்மாக்களுக்குத் தனுவாதிகளைக் கொடுக்குமென்று சொல்லப்பட்டுவருகிற மயக்கத்தைச்செய்யும் அசுத்தமாயாகாரண மலமொன்று |

பட்ட கன்ம மொன்று — ஆன்மாக்கடோறும் விரிந்து அநுபவமாய் நிற்குங் கன்மமலமொன்று

தேகமுறு கரணமொடு புவன போகச் செயலாரு மாமாயைத் திரட்சியொன்று — ஆன்மாக்களெடுக்கப்பட்ட பூததேகமாகிய தனுவு மதனோடுற்றிருக்கப்பட்ட கரணமு மதனோடுங் கூடிவரும் புவனமும் போகமு மான்மாக்களோடுங் கூடிக் காரியப்படு மவதரத்து அவையிற்றைமுற்கூறிய அசுத்தமாயாகாரணத்திலே நின்று சிவசத்திகடோற்றுவிக்கு மவதரத்து அவையிற்றோடும் பொருந்திநடத்தப்பட்ட சுத்தமாயையின் றிரட்சியாகிய சுத்ததத்துவங்களென்னு மலமொன்று. அன்றியு மிந்தப்பதத்துக்குப் பொருள்சொல்லு மிடத்து வித்தைகளவித்தையீசர் சதாசிவனென்ற

விஞ்ஞானகலர்க்குத் தனுகரண புவனபோகங்களைக் கொடுத்து நிற்கிறசுத்தமாயை யெனபாருமுளர். அஃதிவ்விடத்துச் சொல்ல வேண்டுவதில்லை யெனவறிக. அதற்குக்குற்றமே தென்னில் இச்செய்யுள் சகலனைநோக்கிப் பஞ்சமலங்களின் றொகை சொல்லுகையாலும் இந்தச்செய்யுளில் விஞ்ஞானகலர் பிரசங்கமில்லாதபடியாலும் பஞ்சமலங்கள் விஞ்ஞானகலர்க்கில்லாதபடியாலு மப்படிச் சொல்லப்படாதெனவறிக

என்றுகமல மைந்தென்பர் — ஆகக்கூட்டி யிங்ஙனஞ் சொல்லப்பட்ட மலமைந்தென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். ஆகையால்

ஐந்தாமாறு தருளென்ப தறிந்தென்ப ரறிந்தோரே. — இங்ஙனஞ் சொல்லப்பட்ட மலமைந்தையும் விட்டுநீங்காம லான்மாக்களுக்குத் திருவருளுண்டாகாதென்று பெரியோர்கள்சொல்லுவார்கள். எ - று.

ரு-ம். மோகமிகவுயிர்கடோறு முடனாய்நிற்கு மூலவாணவமொன்று. எ-கு. ஆணவமலமொன்றாயிருக்க வான்மாக்கடோறுங்கூடிநின்று மறைக்குமென்று பொருட்படுத்துகைக்கு வழியேதென்னில் இருளானதொன்றாயிருந்தும் பலகண்களையு மறைத்தாற்போல ஆணவமலமு மப்படியொன்றாயிருந்தாலும் பலவான்மாக்களையு மறைக்கு மென்றதெனவறிக. இதற்கு. பி-ம். திருவருட்பயனில் "பலரைப்புணர்ந்து மிருட்பாவைக்குண்டோவுறுங் கணவர்க்குந்தோன்றாதகற்பு." எ-து. கண்டுகொள்க.

இனி முயங்கிநின்று பாகமிகவுதவு திரோதாயி யொன்று. எ-கு. அருளாகியதிரோதசத்தி யான்மாக்களை மறைக்கப்பட்ட விருளாகிய ஆணவமலத்தோடுங் கூடிநின்று பாகம்வருத்துமென்று பொருட்கூறியதேதென்னில் காணுங்கண்ணை மறைக்கப்பட்ட படலத்தைநீக்கப்பட்டவௌஷதமானது கண்ணோடுங்கூடிநின்று விதனமாக்கி அந்தக்கண்ணைத்தெரிவித்தாற்போல சிவனுடையவருளானது திரோதமாய்நின்று ஆன்மாக்களை மறைக்கப்பட்ட ஆணவமலத்தைப் பாகம்வருத்தி அந்தமலபாகம் வந்தவாறேயான்மாக்களுக்கு ஞானம்பிரகாசிக்கையா லப்படிச்சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில் "ஏயுமும்மலங்கடந்தந் தொழிலினையியற்றவேவுந், தூயவன்றனதோர் சத்தி திரோதானகரியதென்னும்" எ-ம். இந்நூலினும் "மூர்ச்சினமருவுதிரோதாயி கருணையாகி" எ-ம். வருமேதுக்களைக்கண்டுகொள்க.

இனி பகர்மாயையொன்று. எ-கு. அசுத்தமாயாகாரண மலமொன்றென்று பொருட்கூறியதேதென்னில் ஆன்மாக்கள் சங்காரப்பட்டொடுங்கு மவதரத்துத் தாரகமாய் நின்றுஞ் சிருட்டிகால மான்மாக்களுக்குத் தனு கரண புவன போகங்களாகிய கலையாதி தத்துவங்கள் தன்னிடத்திலே தோன்றுகைக்குபாதானமுமாயிருக்கிற காரணமாயை யென்றதெனவறிக. இதற்கு. பி-ம். தத்து

வவிளக்கத்தில் "ஓதியவல்வினையூட்டக்கருவியுடம்புலக, மாதிய
போகமு மாய்நின்றமாயை மயக்குவித்தே, போதந்தரும்பொரு
ளாகிநிற்கும்புவ னாதிகளுக், காதியுமாய்விரிந் தந்தமுமாகி யொடு
ங்கியதே" எ-ம். சித்தியாரில் "நித்தமா யருவாயேக நிலையதா ய
கிலத்துக்கோர், வித்துமாய் சித்தாயெங்கும் வியாபியாய் விமல
னுக்கோர், சத்தியாய்ப் புவனபோகந் தனுகரணமு முயிர்க்காய்,
வைத்ததோர்மலமாய் மாயைமயக்கமுஞ்செய்யுமன்றே" எ-ம். இ
ந்நூலினும் "உருவாதி சதுவிதமாய்" என்னும்விருத்தமு மாகவி
ங்ஙனம் வருமேதுக்களைக்கண்டுகொள்க.

இனி படர்கன்ம மொன்று. எ-கு. எங்கும்விரிந்திருக்கப்ப
ட்ட கன்மமலமொன்றென்று பொருட்கூறியதே தென்னில் ஆன்
மாக்க ளெடுக்கப்பட்ட அச்சுக்கடோறுங் கூடிநின் றவரவர்க்கு
ண்டான புண்ணியபாவங்களுக்கிடான புசிப்புகளைக்கொடுத்து நி
ற்கையா லப்படிச்சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். தத்துவவி
ளக்கத்தில் "பிணைந்தவக்கன்மம் பெருகியவாசை யனுநுகர்தற்,
கணைந்தன கன்ம மிருவகைத்தாமறம் பாவமென்ப, தணந்துமணந்
துந்தன் சார்பினிற்றோன்றுமன் சந்நிதியா, லுணர்ந்தவர் வித்
தும் விளைவுமொப்பாமென வோதுவரே." எ - ம். சித்தியாரில்.
" இருவினை யநாதியாதி யியற்றலா னுகர்வானந்த, வருமலஞ்சார்
ந்து மாயாவுருவுகண் மருவியார்த்து" எ-ம். இந்நூலினும் "அனு
க்கடோறும் படர்வதாகி." எ - ம். வருமேதுக்களைக் கண்டுகொ
ள்க.

இனி தேகமுறு கரணமொடு புவனபோகச் செயலாரு மா
மாயைத் திரட்சியொன்று. எ-கு. ஆன்மாக்களுக்குண்டான தனு
கரண புவனபோகங்களை நடத்துகிற சுத்தமாயையின் றிரட்சியா
கிய சுத்தத்துவமல மொன்றென்று பொருட்கூறியதேதென்னில்
அசுத்தமாயா காரியமாகிய கலையாதி தத்துவங்களைப் பிரேரிக்கப்

பட்ட சுத்தமாயாகாரியமாகிய சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் சத்தி சிவமென்னப்பட்ட சுத்ததத்துவங்களைந்து மொருமலமெ ன்றதெனவறிக. அவையிற்றைப் பிரேரிப்பித்ததுகொண்டே சுத் ததத்துவங்களை மலமென்னலாமோவென்னி லப்படிச் சொல்லப் படுமெனவறிக. அதற்கு வழியேதென்னில்? சிவனுடைய வருட் சத்தியானது திரோதமாய்நின்று மலத்தைக் காரியப்படுத்த அது மலமென்று பெயர்பெற்றாற்போல விதற்கு மப்படிச் சொல்லப் படுமெனவறிக.

இனி யைந்துமாறு வருளென்ப தறிதென்ப ரறிந்தோரே எ-று. இங்ஙனஞ் சொல்லப்பட்ட மலங்களைந்து நீங்கிறலொ ழிய வான்மாக்களுக் கருளுண்டாகாதென்று பொருட்கூறியதே தென்னில்? இந்தமலங்க ளைந்தோடுங்கூடி நிற்குமளவு மான்மா க்களுக்கு ஜநநந் தொலையாதது கொண்டே யப்படிச் சொன்ன தெனவறிக. இதற்கு பி-ம். திருவாசகத்தில் "மலங்களைந்தாற் சுழல்வன் றயிரிற்பொரு மத்துறவே." எ-து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது ஆன்மாக்களோடு மநாதியாய் மறைக் கப்பட்ட வாணவமல மொருமலமென்றும் அதனோடுங்கூடி யந்த மலத்தைப்பாகம்வருத்துவதான திரோதாயி யொருமலமென்றும் மதனோடுங்கூடிவருகிற வசுத்தமாயாகாரணமலமொன்றென்றும் அதனோடுங்கூடி விரிந்து வரப்பட்ட கன்மமல மொன்றென்றும் அதனோடுங் கூடிவரப்பட்ட வசுத்தமாயாகாரியமாகிய தனுகர ணபுவனபோகங்களை நடத்துகிற சுத்தமாயாகாரியமாகிய சுத்தத த்துவங்க ளொருமலமென்றும் ஆகவிங்ஙனஞ் சொல்லப்பட்ட மலங்களைந்து நீங்காம லான்மாக்கள் முத்தியைப் பெறுகைக்கு வழியுண்டாகாதென்றும் பெரியோர்கள் சொல்லுவார்களென்னு முறைமையை யறிவித்தது. (உ०)

---

வேறு—இது அம்மலங்களின் பெயருந்தொகையும் அவைநீங்கியன்றி முத்தி வாயாதென்பதூஉ முணர்த்திற்று.

மோகமிக வுயிர்கடொறு மூடனாய்நிற்கு மூலவாணவமொன்று-மறைப்புமிகும்படி யுயிர்கடோறு மநாதியிலே கூடிநிற்கு மூலமாகிய வாணவமலமொன்று,— மூயங்கிநின்று பாகமிகவுதவுதிரோதாயியொன்று-அந்த வாணவமலத்தைப்பொருந்திநின்று பக்குவத்தை மிக உண்டாக்குகின்ற திரோதானசத்தியொன்று,—பகர்மாயையொன்று - தனுவாதிகட்குக்காரணமாகச் சொல்லப்பட்ட மாயாமலமொன்று,—படர்கன்மமொன்று-புண்ணியபாவங்களாக விரிந்த கன்மமலமொன்று,—தேகமுறுகரணமொடு புவனபோகச் செயலாரு மாமாயைத்திரட்சியொன்று - தனுவுங்கரணமும் புவனமும் போகமுமாய்நடக்குந் தொழினிறைந்த பெரிய மாயாகாரியமான மாயேயமலமொன்று,—என்று - என்றிவ்வொன்றாகவெண்ணி,— ஆகமல மைந்தென்பர் - பின்னொருதொகையாக மலமைந்தென்பர்,—ஐந்துமாற தருளென்ப தரிதென்ப ரறிந்துளோரே - அவ்வைந்துமலமு மொழியாமலருள் பெறுதல் கூடாதென்று சொல்லுவர் அறிவுடையோர் எ-று.

ஒடுஎண்ணொடு. ஒன்றாகமலமைந்தென்று பாடமாகில் என்றென்னு மிடைச்சொல் வருவிக்க. மாறதென்னு மெதிர்மறை வினையெச்சம்பெறுதலென்னு மவாய் நிலையான்வந்த வினைப்பெயரிற் பெறுதலென்னும்வினையோடுமுடிந்தது. அரிதென்பது மனக்கவலைமாற்றலரிதென்பதுபோலவினைப்பொருட்டாய்நின்றது. அருளென்பது அருளென்றுயர்ந்தோராலெடுத்துரைக்கப்படுவது. மலமாவதழுக்கு. ஆத்மாக்களுடையஞானக்கிரியைகளை மறைக்கையினாலே யாணவமலத்தை மலமென்பதனுமதம். ஏனை நான்கையு மலமென்பதென்னையெனில்

மலபாகத்தின்பொருட்டுக்கருவிகளைக்கூட்டி யாத்மாக்களைப் பொய்யை மெய்யென்றுமயக்கிப் போகங்களை யனுபவிக்கையாலே யுபசரித்துத் திரோதாயியான சிவசத்தியைமல முளதாவொழிந்தவெல்லா நெல்லின்வரு தவிடுமிபோலரூ தியாகலானவை யொன்றிற்கொன்றேதுவாக மாயையினையுங் கன்மத்தையு மாயாகாரியமாதலின் மாயேயத்தையுமலமென்றார். அதோமாயையைக் காரியங்களின் மிகுதிபற்றி மாமாயையென்றார். மும்மல நெல்லினுக்கென்றும் மாயையின் காரியத்தையென்று மிகுதற்கு முன்னாலினு மலங்களைந்தாற் சுழல்வனென்னுந் திருவாக்கினு மலமென்றமையறிக.

---

இங்ஙனஞ் சொல்லப்பட்ட பஞ்சமலங்களோடுங் கூடிநிற்கிறவான்மாக்க ளவையிற்றைநீங்கி யருளைப்பெறுகைக்கு வழியெங்ஙனமேனையென்றுவினவ அந்தமலங்கள் காரியப்பட்டுப் பாகம்வந்தே யருளைப்பெறவேண்டுகையா லவைகாரியப்படுகைக்கு வழியாகக் கேவல சகல சுத்தமென்று மூன்றவத்தையை வைத்துக்கொண் டிதிற் கேவலாவத்தையை முந்த வருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

ஓங்கிவரும் பலவுயிர்கண் மூன்றவத்தைப்பற்றி யுற்றிடுங் கேவலசகல சுத்தமெனவுணர்க, வீங்குவருங் கலாதியொடு குறியுருவமொன்று மின்றிமல மொன்றியொன்று மில்லையெனுமியல்பா, யாங்கறிவை யறிவரிய வறிகருவியணையா தாதலினு மிருண்மருவு மலர்விழிபோலதுவாய், நீங்கும்வகை யின்றிநித்த வியாபகமாயங்கணிற்பது கேவலமென்றுநிகழ்த்துமாலே. (உக)

ஆருயிர்மூவகை யவத்தையுமதிற்
கூறிருளவத்தைக் குறியிதுவென்றது.

| | |
|---|---|
| (இ-ள்.) ஓங்கி வரும் பலவுயிர்கள் மூன்றவத்தைப்பற்றி யுற்றிடும் | அநாதியே நிலைபெருகி யெண்ணிறந்து மிக்குவருகிற வான்மாக்கள் மூன்றுவகைப்பட்டிருப்பதாகிய வவத்தைகளோடுங் கூடி யநுபவியாநிற்பர்கள். அதுவேதென்னில் |
| கேவல சகல சுத்தமென வுணர்க | கேவலாவத்தை யென்றுஞ் சகலாவத்தையென்றுஞ்சுத்தாவத்தையென்றுமறிக. இவையிற்றின் முற்கூறிய கேவலாவத்தையாவது |
| ஈங்கு வருங் கலாதியொடு குறியுருவமொன்று மின்றிமலமன்றியொன்று மில்லை யெனுமியல்பாய் | இவ்விடத்து விளங்காநின்ற கலையாதி தத்துவங்களோடுங் கூடியறியப்பட்ட வொருநினைவுகளு மொருகாட்சிகளு மில்லாமலறியாமையாயுள்ள வாணவமலமொழிய வேறொன்று மில்லையென்றுற்போலு மியல்பாயிருப்பதாய் |
| ஆங்கறிவை யறிவரியன் | அவ்விடத்திலான்மா சிற்றறிவா யறியப்படும்பொருளாகிய தன்னையு மறியமாட்டானாய் |
| அறிகருவி யணையா | அறிகருவிகளாகிய சுத்ததத்துவங்களு மவ்விடத்துப் பொருந்தாது |
| ஆதலிலிருண்மருவு மலர் விழிபோலதுவாய் | அப்படி நிற்கையாலே யிருளைப்பொருந்திநின்று விழித்து ஜீவிக்கிறகண்ணானது அந்த விருளின்வடிவு தானாய்நின்றுற்போல |
| நீங்கும் வகையின்றி | அந்த மலத்தைவிட்டு நீங்குகைக்கோருபாயமு மில்லையாய் |

| | |
|---|---|
| நித்த வியாபகமாய் | அவ்விடத் தழியாம லந்தமலத்தோடும் வியாபித்திருப்பதாய் |
| அங்க ணிற்பது கேவலமென்று நிகழ்த்துநூலே. | அப்படிக்கேவலத்துக்குத் தலமாயுள்ள வவ்விடத்திலே முற்கூறிவந்தபடியே நிற்கிற வதனையே கேவலாவத்தை யென்று சொல்லும் திவ்வியாகமம். எ-று. |

நு-ம். ஓங்கிவரும்பலவுயிர்கள். எ-கு. அநாதியேநிலைபெற்று மிக்குவருகிற வான்மாக்க ளென்று பொருட்கூறியதே தென்னில் அநாதியென்றது சிவனுள்ளவன்றே யான்மாக்களு முண்டாகையா லநாதியென்ற தெனவறிக. நிலைபேறென்றதுஞ் சிவனைப்போல வொருகாலத்தினு மழியாமலிற்கையா லெனவறிக. மிக்க வுயிரென்றது பிரம விஷ்ணுக்கள் முதலாயுள்ள வானமாக்களைப் பற்றி யெனவறிக.

இனி மூன்றவத்தை. எ-கு கேவலமென்றுஞ் சகலமென்றுஞ் சுத்தமென்றும் பொருட்கூறியதே தென்னில் கேவலமென்றது மாயாகருவிகளாயுள்ள காரிய மாயையுநீங்கி யாணவமலததான் மறைப்புண்டு காரணமாயை தாரகமாக வொடுங்கின வவதரத்தை யெனவறிக. இனி சகலமென்றது அப்படிநீங்கப்பட்ட தத்துவ முப்பத்தாறுடுங்கூடி ஜீவித்துநின்ற வவதரத்தை யெனவறிக. இனி சுத்தமென்றது முற்கூறிய கேவலசகல மிரண்டு நீங்கிச் சிவனுடைய வருள் காட்டாகச் சென்று அந்தச்சிவத்தோடுங் கூடிநின்ற வவதரமெனவறிக. இங்ஙனஞ் சொல்லப்பட்ட வவத்தை மூன்றுக்கும் பி-ம். சித்தியாரில் "கேவல சகலசுத்த மென்று மூன்றவத்தையான்மா, மேவுவன் கேவலந்தன் னுண்மைமெய்ப் பொறிகளெல்லாங், காவலன் கொடுத்தபோது சகலனு மலங்களெல்லா, மோவின போதுசுத்த முடையனுற் பவந்துடைத்தே." எ-து. கண்டுகொள்க.

இனி ஈங்குவருங்கலாதி. எ-ரு. இவ்விடத்து விளங்கப்பட்ட கலாதிகளொன்று சுட்டிப் பொருட்கூறியதேதென்னில் ஆசாரியனருளிச்செய்யச் சீடன்கேட்டிருக்குமவதரங் கருவிகளோடுங் கூடியிருந்து கேட்டறிந்து வருகையாலிவ்வி டமென்ற சுட்டுக் கருவிகளோடுங் கூடியிருந்து ஜீவித்துவருகிற சகலாவத்தை யெனவறிக.

இனி குறியுருவமொன்றுமின்றி. எ-கு ஒரு நினைவுகளுமொருகாட்சிகளு மில்லை யென்று பொருட்கூறிய தேதென்னில் இவன்சகலனாகி நின்று ஜீவிக்குமவதரத்து உட்கரணங்களினாலே நினைத்தும் புறக்கரணங்களினாற் கண்டுங் கேட்டும் வருகையா லந்தக்கேவலத்துக்கு அவையில்லாதபடியாலே யப்படிச் சொன்னதெனவறிக. என்றிங்ஙனங் கேவலப்பட்டுக் கிடக்குமிடத்துக் காரியமாயையாயுள்ள கலையாதிதத்துவங்களோடுங்கூடி ஜீவிக்கிற குணங்குறிகளு மில்லையென்பதற்கு. பி-ம். சித்தியாரில் "அறிவிலன் மூர்த்தனித்தனராகாதி குணங்களோடுஞ், செறிவிலன் கலாதியோடுஞ் சேர்விலன் செயல்களில்லான், குறியிலன் கத்தாவல்லன் போகத்துக் கொள்கையில்லான், பிறிவிலன் மலத்தினோடும் வியாபி கேவலத்திலான்மா" எ-து. கண்டுகொள்க.

இனி மலமின்றியொன்று மில்லையெனு மியல்பாய். எ-கு. கேவலத்துக்கு ஆணவமல மொன்று மொழிந்து மற்றொன்று மில்லையென்றாற்போலு மியல்பா யிருப்பதாய் என்று சந்தேகமாய் பொருட்படுத்தினத்துக்கு வழியேதென்னில் மலமன்றியொன்று மில்லையெனும் என்ற உம்மைகொண்டும் இயல்பாயென்றவையச்சொற்கொண்டும் செத்தமனிதரைப்போலக் கிடக்கின்றார்கள் பட்டமரம்போலே நிற்குது எனறசொல் அவையிற்றுக் குயிருண்டென்பதை விளைத்துநின்றாற்போல அதுவு மாணவமலமன்றியே மற்றுள்ளமலங்களு முண்டென்ப

தை விளைத்து நிற்கையா லப்படிச்சொன்னதெனவறிக. அஃ
தெங்ஙனேயென்னில் கேவலத்திலான்மா ஆணவமல மறைப்
பாக வொடுங்கு மிடத்து மாயைதாரகமாக வொடுங்குகை
யா லப்படிச் சொன்னதெனவறிக. அவ்விடத்து மாயையுண்
டென்பதற்கு அநுபோகமேதென்னில் நித்திரையிற் கேவல
ப்பட்டுக் கிடக்குமிடத்து உடல்தாரகமாகக் கிடக்கச்சே
கூப்பிட்டெழுப்பவு மெழுந்திராமற் கிடந்து அந்தவுடலைத்
தட்டியெழுப்பு மிடத்துக் கலாதிக ளெழுந்திருக்கையா லந்
தக்கலாதிகள் மாயையிற் றோற்றமாகையால் காரியமுள்ளவி
டத்திலே காரணமுண்டான தாகையாலே கேவலத்திலாண
வமல மறைக்க மாயைதாரகமாக ஆன்மா வொடுங்குமென்ப
தை யநுபவத்தாற் கண்டுகொள்க. அப்படி நித்திரையிற் கே
வலப்பட்டுக்கிடக்குமிடத் துடம்புதாரகமாக வொடுங்குமெ
ன்பதற்கு. பி-ம். சிவஞானபோதத்தில். "அவ்வுடலினின்று
யிர்ப்ப வைம்பொறிகடாங்கிடப்ப, செவ்விதி னவ்வுடலிற்
சென்றொடுங்கி." என்பதனுள் "செவ்விதினவ்வுடலிற் சென்
றொடுங்." எ-ம். போற்றிப் பஃறொடையினும். "மூலவருங்
கட்டினுயிர் மூடமாயுட்கிடப்ப." எ-ம். கண்டு கொள்க. எ
ன்றிங்ஙனநித்திரையிற் கேவலத்துக்குமலமறைக்க உடல்தா
ரகமாக மூலாதாரத்திலே யொடுங்கினாற்போலச் சங்கார
கேவலத்துக்கு மாயாகாரணந் தாரகமாக வொடுங்குமென்
பது கண்டுகொள்க. ஆகையா லாணவத்துக்கு மறைக்கை
யேதொழில் மாயைக்குத் தாரகமாகநிற்கையே தொழிலென
வறிக. அப்படியாணவத்துக்கு மறைப்பே தொழிலென்பதற்
கு. பி-ம். தத்துவவிளக்கத்தில். "சேதனன்கண் ணிகம
றைப்பன வா[illegible]ரகோடி விருத்திகளே." எ-ம். சித்தியாரில்.
"போதகாரியமறைத்து நின்றது புகல்மலங்காண்." எ-ம்.
"முன்னைமலத்தினிருள் மூடாவகை." எ-ம். இந்நூலினும்

"செம்பிலுறு களிம்பேய்ந்து நித்தமூலமலமா யறிவுமுழுதினையு மறைக்கும்." எ-ம். ஞானத்தின்கண்ணை மறைத்த கடியதொழி லாணவத்தால்." எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க. இனி மாயைதாரகமாக நிற்குமென்பதற்கு," பி-ம். தத்துவவிளக்கத்தில். "புல்லியபாசங்க ளுய்த்திடப்போகம் புமானுகர்ந்து சொல்லியகாலத் துறுஞ்செல்லனீக்கிச் சிரபுரக்கோன், சொல்லியமன்முதலாயினமாயையி லேதொகுத்தங், கெல்லியி னித்திரைப் போலினைப்பாற்று மணுக்களையே." எ-ம். இந்நூலினும். "உருவாதி சகலிதமாய்." என்ற இருபத்திரண்டாஞ்செய்யுளிலே "ஒடுங்கவருகால மூயிர்களெல்லா மருவிடமாய் மலமாய் மன்னியிடுமரனருளான் மாயைதானே" எ-அ. கண்டுகொள்க.

இனி ஆங்கறிவையறிவரியன். எ-து. கேவலப்பட்டுக் கிடக்குமவ்விடத் தான்மா அறியப்படும்பொருளா யிருக்கிற தன்னை யறியமாட்டானென்று பொருட்கூறியதேதென்னில் அப்படிக் கேவலத்திலான்மாவுக் கறிவாயுள்ளதா மிப்படி யறிவற்றுக் கிடக்கிறோமேயென்கிற நினைவுமில்லாததுகொண்டே யப்படிச்சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "அறிவில னமூர்த்தனித்த னராகாதிகுணங்களோடுஞ், செறியிலன் கலாதியோடுஞ் சேர்விலன் செயல்களில்லான்." எ-ம். "அறிந்திடுந்தன்னையுந் தானறியாமையானும்." எ-ம். கண்டுகொள்க.

இனி அறிகருவியணையா. எ-து கேவலமாகிய வவ்விடத்துச் சுத்ததத்துவங்களும் பொருந்தாதென்று பொருட்கூறியதேதென்னில் அப்படிச் சுத்ததத்துவங்களைக் கூடினவிடம் சகலமாகையா லப்படிச சொன்னதெனவறிக. அதுவெங்ஙனேயென்னில் அப்படிக் கேவலப்பட்டுக் கிடக்குமிடத்துச் சிவசத்திக ளக்குச்சுத்ததத்துவங்களைக்கொண் டசுத்

தமாயாகாரணத்திலே நின்றுங் கலையாதி தத்துவங்களைத் தோற்றுவித் தான்மாக்களோடுங்கூடிக் காரியப்படுத்துகை யா லதுசகலமாகையாலே யந்தக்கேவலத்திற் சுத்ததத்து வங்களும் பொருந்தா தென்றதெனவறிக. இதற்கு. பி - ம். இந்நூலில். "இத்தகைமை யிறையருளால்" என்னும் விருத்த த்தையொட்டிக் கண்டுகொள்க.

இனிஇருள்மருவு மலர்விழிபோலதுவாய். எ-கு. இருளை ப்பொருந்தினவிழி யந்தவிருளின்வடிவு தானாய்நின்றாற்போ லவென்று பொருட்கூறிய தேதென்னில் குற்றமறக்காணுங் கண்ணானது இருளோடுங்கூடின வவதரத்து வேறொன்றுங் காணமல் அந்தவிருளின்வடிவு தானாய்நின்றாற்போல வறி வாயுள்ள வானமாவுங் கேவலப்பட்டு மலத்தினால் மறைப்பு ண்டுகிடக்குமிடத்து அந்தமலந் தன்னைப்போல வறியாமை யே வடிவாய்க்கிடக்கையா லப்படிச்சொன்னதெனவறிக. அப்படிக் கண்ணை யிருள்மறைத்தாற்போல வான்மாவையுங் கேவலத்தி லாணவமலமொன்று மறைக்குமென்று திருஷ் டாந்தமா யிருக்கக் கேவலத்தி லாணவமலமறைப்பதன்றி யே மாயைதாரகமாக வொடுங்குமென்ற தேதென்னில் அப் படி யிருளினால் மறைப்புண்டு அந்தவிருளின்வடிவு தானாய் நின்ற கண்ணிற் சோதியாயுள்ள பிரபையுந் தனக்குடம்பா யிருக்கப்பட்ட துவளை தாரகமாக நின்றாற்போல வாணவ மலத்தான் மறைப்புண்டு கேவலப்பட்டுக் கிடக்கு மான்மாவு மாயைதாரகமாகக் கிடக்குமென்பதை முற்கூறிய வகைக ளினாலு மநுபவத்தினாலுங் கண்டுகொள்க. அப்படிக்கேவல த்தி லாணவமலமன்றியே மற்றுள்ளமலங்களு முண்டென்ப தற்கு. பி-ம். சித்தியாரில். "மும்மல நெல்லினுக்கு முளையொ டு தவிடுமிப்போல், மம்மர்செய் தணுவினுண்மை வடிவினை ம றைத்துநின்று." எ-து. கண்டுகொள்க.

இனி நித்தவியாபகமாய் எ-கு. அழியாத வியாபகத்தை யுடையதாயென்று பொருட்கூறியதேதென்னில் அப்படி யாணவமலத்திருலே மறைப்புண்டு மாயைதாரகமாகக் கிடந்தாலு மவ்விடத்தி லான்மாவழியதுஞ் செய்யாம லந்தமலந் தன்னைப்போல வறியாமையாய் வியாபித்திருக்குமென்ற தெனவறிக. இதற்கு பி-ம். சித்தியாரில். "மலத்திறேடும் வியாபி கேவலத்திலான்மா." எ-து. கண்டுகொள்க.

இனி அங்கணிற்பது கேவலம். எ-கு. கேவலத்துக்குத் தலமாயுள்ள வவ்விடமென்று பொதுப்படப் பொருட்கூறியதேதென்னில் நித்திரையிற் கேவலத்துக் குடல்தாரகமாகவு மூலாதாரமிடமாகவுஞ் சங்காரகேவலத்துக்குக் காரணமாயை தாரகமாகவு நிற்கையா லப்படிச்சொன்னதெனவறிக. என்னுமிவை யிரண்டுக்கும். பி-ம். இருபாவிருபஃதில். "கடலமுதேவெண்ணெய்க் கரும்பேயென்கண்ணே - யுடலகத்து மூலத் தொடுங்க." எ-து. நித்திரையிற் கேவலத்துக்குக் கண்டுகொள்க. ஆன்மாக்கள் இந்நூலில் "ஒடுங்க, வருகால முயிர்களெல்லா மருவிடமாய் மலமாய் மன்னியிடு மரனருளான் மாயைதானே." எ-ம். தத்துவவிளக்கத்தில். "சொல்லியமண்முத லாயினமாயையி லேதொகுத்தங், கெல்லியினித்திரைப் போலிளைப்பாற்று மணுக்களையே." எ-ம். சங்கார கேவலத்துக்குக் கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது கேவலசகலசுத்தமென்று மூன்றவத்தைப்படுமிடத்து அதில் கேவலாவத்தையாவது மாயாகருவிகளெல்லாங் கழன்று ஆணவமலத்தான் மறைப்புண்டு மாயைதாரகமாக வொடுங்குவர்களென்னு முறைமையை யறிவித்தது. (உ௯)

---

வேறு—இனிக் கேவல சகலசுத்தமென்னு மவத்தை மூன்றினையு முணர்த்துகின்றவர் முதற் கேவலாவத்தையினையு மூலமலமென்ப தொன்றில்லையென்னும் புறமதத்தூடணங்களையுஞ் செய்யுணான்கி னுணர்த்துவான் றொடங்கினார் அவற்றுளிது கேவலாவத்தையை யுணர்த்திற்று.

ஓங்கிவரும் பலவுயிர்கள் மூன்றவத்தைப்பற்றியுற்றிடும்-எண்ணிற் களவுபடாமையி னுயர்ந்துவரு மாத்மாக்களெல்லா மூன்றவத்தையைப் பொருந்தியுழுந்தும்,—கேவலசகலசுத்த மெனவுணர்வர்-அவற்றைக் கேவலாவத்தை சகலாவத்தை சுத்தாவத்தையென்று பெரியோரறிவர்கள்,—கேவலம் - அம்மூன்றினுட் கேவலாவத்தையாவது,—ஈங்குவருங்கலாதியொடு குறியுருவமொன்றுமின்றி - அவ்வுயிர்க ளிவ்விடத்திற் பரந்தகலாதிகளுடனே யோரடையாளமு மொருவடிவுமில்லாமல்,— மலமன்றி யொன்றுமில்லை யெனுமியல்பாய்-ஆணவமலமொழிந்து வேறொன்று மில்லையென்னு முறைமையினை யுடையவாய்,—அறிகருவி யணையாவாதலினால்-அறிதற்கேதுவாகிய கருவிகள் கூடாவாதலாலே,— ஆங்கறிவை யறிவரிதாய்-அவ்விடத் தொருபொருளையு மறியக்கூடாமல்,—இருண்மருவு மலர்விழிபோலதுவாய்-இருளைப்பொருந்திய விரிந்தகண்க ளவ்விருடானாய் நின்றாற்போ லவ்வாணவமலந்தானாய்,— நீங்கும்வகை யின்றி-அதனைச் சிறிதும் விட்டு நீங்குமுறைமை யில்லையாய்,—நித்த வியாபகமாய்-அழியாத வியாபகமுமாய்,—அங்கணிற்பது-அவ்விடத்து நிற்கின்றது,—நாளிகழ்த்து மென்று - திவ்வியாகமங்கள் சொல்லும். எ - று.

நிற்பதென்பது தொழின்மேனின்ற வொருமை. நிகழ்த்தலீண்டுச் சொல்லுதல். அறிவரியவென்ற பாடத்திற்கு ஆ

யென்னுஞ் சொல்வருவிக்க. அறிவையென்பதி லறிவு ஆகுபெயர். அறிகருவி சுத்ததத்துவ மென்பாருமுளர்.

---

அப்படி யாணவமலமென்ப தொன்றில்லை மாயாமலமுங் கன்மமலமுமேயுள்ளது ஆன்மாவு மநாதியே சுத்தனென்கிற ஐக்கியவாதிமத மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

இன்மைமல மாயைகன்ம மென்றிரண்டேயிறை
தா னிலங்குபல வுயிர்களுமுன் புரிந்தவிருவினையின்,
றன்மைகளா லவர்களுக்குந் தனுகரணபுவனந் தந்
திடுமிங் கதனாலே யிருபயனுஞ்சார்ந்து, கன்மமொரா
நேராக நேராகன்மருவக் கடவுளரு ளாலவையுங் க
ழித்திடுவனதனாற், பின்மலமா னவையனுகா பெரு
கொளிமுன்புளதே பெற்றிடுமென் றித்திறமென் பே
சுமாறே. (உஉ)

மலமெனவேறில்லை மாயையுங்கன்மமு
நிலவிடுமுயிர்க்கெனு மவர்நெறியுரைத்தது.

(இ-ள்.) இன்மைமலம் — அப்படி யாணவமலமென்ப தொன்றில்லை. பின்னை யுள்ளதேதென்னில்

மாயை கன்மமென்றிரண்டே — மாயா மலமென்றுங் கன்மமலமென்று மிரண்டுமேயுள்ளது. ஆனாலிவை யான்மாவினிடத்திலேவந்து பொருந்தினமுறைமை யெங்ஙனேயென்னில்

இறைதா னிலங்கு பலவுயிர்களு முன்புரிந்த விருவினையின்ற — சுத்தாவானவன் சுத்தராயிருக்கப்பட்ட வான்மாக்கள் முன்னேசெய்யப்பட்ட புண்ணியபாவங்களுக் கிடாகச் சர்வர்க்கு முடம்புகளையுந் தத்துவங்களையு மிருப்

ன்மைகளா லெவர்களுக்குத் தனுகரண புவனந் தந்திடும் — பிடங்களையும் புசிப்புகளையு முண்டாக்குவன். புசிப்பென்றது கூட்டுப்பொருளெனவறிக. அது ஒழிவுகொண் டறியப்பட்டது

இங்கதனாலேயிருபயனுஞ் சார்ந்து — இவ்விடத் தந்தவுடம்பு முதலானவற்றாலே புண்ணியபாவங்களைப் பொருந்தியநுபவித்து மேலார்ச்சித்து மிப்படிப் பிறந்திறந்துவருகிற வவதரத்திலே

கன்மமெலா நேராக நேராதன்மருவ — கன்மங்களெல்லாம் வெட்டின வில்லையாம்படி துலையொத்த வவதரத்து

கடவுளருளாலெவையுங் கழித்திடுவன் — கத்தாவுந் தனது காருண்ணியத்தினாலே யந்தக்கன்மங்களையு மாயையையும் போக்குவன்

அதனாற்பின் மலமானவை யணுகா — ஆகையாலே யான்மாவுக்குப் பின்பு மாயாகன்மங்கள் பொருந்ாது

பெருகொளி முன்புளதேபெற்றிடும் — ஆன்மாவும் பழையபிரகாசத்தை யுடைத்தாம்

என்றித்திறமென் பேசுமாறே. — என்றிப்படி நீசொல்லுகிறமுறைமை யெப்படியிருக்கது.

வி - பு. ஈசுரவைக்கியவாதி யப்படியாணவமலமென்பதொன்றில்லை சுத்தனாயிருக்கிற வான்மாவை மாயையுங் கன்மமும் பின்புவந்து மறைக்குமெனவுரைனென்பதற்கு. வி - ம். சங்கற்பநிராகரணத்தில். "கருமுகிலடர விரிதருகதிர்போன்-றறிவாருயிரிற் பிரியாதேயும்" எ ம். சித்தியாரில். "மல

மௌனவேறொன்றில்லை மாயாகாரியமதென்னி, லிலகுயிர்க்கிச்சாஞானக் கிரியைகளெழுப்புமாயை, விலகிடுமலமிவற்றை வேறுமென்றதுவேருகி, யுலகுடல்கரணமாகி யுதித்திடுமுணர்ந்துகொள்ளே" இது மறுப்பென்பது கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது ஈசுரவைக்கியவாதி யாணவமலமில்லையென்று மாயாகன்மங்களே யுள்ளனென்றுஞ் சுத்தராயுள்ள வான்மாக்கள்செய்த புண்ணியபாவங்களுக் கீடாகக் கத்தா வுடம்புமுதலாயினவற்றைக் கொடுக்க வதனாலே ஜநநமரணப்பட்டுக் கன்மவொப்புவந்து ஆன்மாப் பண்டுபோலே சுத்தருமென்றுஞ் சொன்னமுறைமையும் இது சித்தாந்தவழக்கல்லவென் றவனை மறுத்த முறைமையு மறிவித்தது.

---

வேறு—இது மலமில்லையென்னு மைக்கியவாதி பாசுபதிகள்கருத்து மறுத்துணர்த்திற்று.

மலமின்மையே - கேவலாத்வைதிக ளிருளென்ற வாணவமல மில்லாமைதானே,—மாயைகன்ம மென்றிரண்டே-மாயையுங்கன்மமுமெனு விரண்டே யுள்ளன,—இறைதானிலங்கு பலவுயிர்களு முன்புரிந்த விருவினையின் றன்மைகளாலெவர்களுக்குந் தனுகரணபுவனந் தந்திடும் - அவ்விரண்டுமுன்மையாற் கருத்தாவானவன் விளங்காநின்ற பலவாத்மாக்களு முற்சனனங்களி லார்ச்சித்த புண்ணியபாவங்களின் முறைமைகட் கீடாக வெல்லாவுயிர்களுக்குந் தனுவாதிகளைக் கொடுப்பன்,—இங்கிதனாலே - இப்படி வினைக்கீடாக விறைவன் கொடுக்குமிதனாலே,—இருபயனுஞ் சார்ந்து - மீளவும் புண்ணியபாவங்களை யார்ச்சித்துப் பொருந்துதலால்,—கன்மமெலா நேராக நேராதன்மருவ - அந்தக் கன்மங்களெல்லாந் துலையொக்கச் செவ்வாதலைப் பொருந்தினவிடத்து,—கடவுளருளாலெவையும் கழித்திடுவன் - அவ்விறைவன்றன்

கருணையாலே யக்கன்மங்க ளெல்லாவற்றையும் போக்குவன்,—அதனாற் பின்மலமாணவை யணுகா - ஆதலாற்பின்பந்த மலமிரண்டும் பொருந்தா,—பெருகொளி முன்புளதே பெற்றிடும் - உயிர்களும் முன்புள்ளபிரகாசத்தையேபெறும்,—என்றித்திறமென் பேசுமாறே - என்றிப்படி ஐக்கியவாதியும் பாசுபதியுஞ் சொல்லும்படியென். எ - று.

பயன் காரணத்தை யுணர்த்துகின்ற வாகுபெயர். ஆதாரவாதேய வொற்றுமையாற் புவனஞ் சொல்லவே போகமுமடங்கிற்று. இரண்டேயென்னுந் தேற்றேகாரம் இன்மையிலுஞ் சேர்க்கப்பட்டது. இங்கிதுவென்பது இங்கிவை யுங்குவைபோ லொருசொல்லாய்நின்றது. சார்ந்து சாரா.

---

அப்படி நான்சொன்ன வத்தத்தை இத்திறமென் பேசுமாறே என்று உதாசனமாகச் சொல்லவேண்டுவா னென்று ஈசுரவைக்கியவாதி கேட்க அப்படியாணவமலமில்லை மாயையுங் கன்மமுமேயுள்ளதென்று நீ சொல்லுகிறது கொட்டைமுந்தினதோ பனைமுந்தினதோ வென்கிற அருவழக்கிலே வருமென்று மறுத்து மேலாணவமலமுண்டென்னு முறைமையை யருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

மாயைமுத லெனவினையின் பான்மைமுதலெனவே மன்னுபனை விதைமரபின் மயங்குமலஞ்சுத்தற், கேயுநெறி யென்கொலதை னியல்பாயின்முத்தி யென்பதென்மற் றிவையிரங்க விருங்கலாதியுணர்வாய், மேயபின் றன்னுருவம் விளங்காமைவிளக்கு மிகுமுலகந் தனிலென்னி லிவைவிடுங்காலுணர்வுட், டோயுநெறி யிலதாத லறியாமையெனநீ சொல்லியது மலமென்பர் துணிந்துளோரே. (உ௬)

அறிவுறுங்கலாதியா லறியாநிலையைச்
செறிவுறும மலச் செய்தியாமென்றது.

(இ - ள்.) மாயைமுதலென வினையின் பான்மை முதலெனவே — அநாதியிற் சுத்தனான வான்மாவினிடத்திலே யிந்த மாயாகன்மங்கள் கூடுமிடத்து மாயாதேகமுண்டாகக் கன்மமுண்டானதோ கன்மமுண்டாக மாயாதேகமுண்டானதோ வித்திலெதுதான் முந்தினதென்னுமிடத்து

மன்னு பனைவிதை மரபின்மயங்கும் — நிலைபெறுகட்பொருந்தப்பட்ட பனைமுந்தவுண்டாக விதையுண்டானதோ விதைமுந்தவுண்டாகப்பனையுண்டானதோவென்று மயங்குந் தன்மைக் கொக்கும். இந்தக்குற்றமன்றியும்

மலஞ் சுத்தற்கேயு நெறி யென்கொல் — நீசொன்னமாயாமலமுங் கன்மமலமுஞ் சுத்தனான வான்மாவினிடத்திலே பொருந்துகைக்குக் காரணமேதாம்

அதனியல் பாயின் — அதற்கு வேறொருகாரணமுமில்லை அது வியல்பாகவந்து கூடுமாயின்

முத்தியென்பதென் — அப்படி யியல்பேயாயில் வீடுபேறுண்டென்று சொல்லவேண்டுவதில்லை. அதுவேனென்னிற் சுத்தனாயிருக்கப்பட்ட வான்மாவை மாயாகன்மங்க ளியல்பாகச்சென்று பொருந்துமாகிற் சாயுச்சியம்பெற்ற விடத்தினு மாயாகன்மங்கள்சென்று பொருந்துகைக்கு வழக்குண்டாம். அதுகொண்டே முத்தியுண்டென்று சொல்லவேண்டுவதில்லையென்றதென வறிக. ஆகையால்

மற்றிவைவிடுக — (மற்றுவினைமாற்று.) நீசொல்லுகிற வினையிற்றை விடுவாயாக. அன்றியும்

இருங்கலாதியு ளார்வாய் மேயபி ன் றன் னுருவம் விளங்காமை — பெரியகலாதியாயுள்ள தத்துவங்கள் முப்ப த்தொன்று முனக்கறியும்பகுதிக் குதவியாகப் பொருந்தி ஜீவிக்குமவதரத் தான்மரூபத்தை யறியாமலிருப்பானே னென்னில்

விளக்கு மிகு மூலகத்தனில் — ஆன்மரூபந் தெரியாதபடி மாயாகருவிகளை மறைத்துத் தன்வடிவை மிகுதியாக விளக்கிக் கொண்டு நிற்கும் பிரபஞ்சத்திலே

என்னி லிவை விடுங்கா லுணர் வுட் டோயுநெறி யிலது — அப்படியானு லந்தத் தத்துவங்களை நீங்கி னவிடத்திலு மறிவிரேனுடுங் கூடிப் பற்றுநெ றியில்லாம லிருப்பானேன்

ஆதலறியாமை — அப்படியானதறியாமையாலென்று நீசொல் லில்

எனநீசொல்லி யது மலமென்பர் துணிந்துளோரே — என்றுநீ சொல்லப்பட்ட விதனையே யாண வமலமென்று சொல்லுவர்கள் நூலினையுணர் ந் தறுதிப்பட்ட பெரியோர்கள். எ-று.

உதாரணம். தாலமீ ஜந்நியாயமாகியகொட்டைமுந்தினதோ ப ழமுந்தினதோ வென்பதுபோல மாயைமுற்பட்டதோ கன்மமு ற்பட்டதோவென்று ஈசுரவைக்கியவாதியை மறுத்ததற்கு. பி-ம். சங்கற்பநிராகரணத்தில். "சுத்த-வறிவெனிற்பாசஞ் செறியாமா யை-யுருவிருவினைபால் வருமிருவினையு-முருவாலன்றி மருவாதிவ் ற்றின் - முந்தியதேதோ வந்தனைவதற்கோ - ரோதுவேண்டும்." எ - து. கண்டுகொள்க.

இனிஇயல்பாயின் முத்தியென்பதேதென்று மறுத்தது வெ ள்ளைப்புடவைக் கழுக்கேறினாற்போல முத்தியினு மாயாகன்மங் கள் மீளவுங்கூடுமென்றதெனவறிக. பி-ம். சங்கற்பநிராகரணத் தில். "தானியல் பென்னில் வீடுற்றவரினுங் கூடக்கூடும்." எ-து. கண்டுகொள்க.

இனி என்னீசொல்லியது மலமென்பவொன்று மறுத்ததற்கு.
பி-ம். சங்கற்பநிராகரணத்தில். "அறிவிலாமை யென்றனையது ம
லமாக் - குறிகொளாள ரறைகுவரன்றே." எ-து. கண்டுகொ
ள்க.

இதனாற்சொல்லியது ஆணவமலமென்ப தொன்றில்லை சுத்
தனாயுள்ளவான்மாவை மாயாகன்மங்க ளியல்பாகவந்து பொருந்
துமென்ற வைக்கியவாதியை நோக்கி யப்படி-யானால் கொட்டை
முந்தினதோ பனைமுந்தினதோவென்கிற அருவழக்கிலே வருமெ
ன்று மியல்பாயின் முத்தியைப்பெற்றவிடத்தும் மீளவுமாயாகன்
மங்கள் கூடுமென்றுமறுத்து ஆணவமலமுண்டென்று நாட்டின
முறைமையு மறிவித்தது. (௨௬)

———o———

வேறு—இது விருவுத்தரமாக வவருளொருவனைமறுத்து ம
லமுண்டென்ப துணர்த்திற்று.

மாயைமுதலென விணையின்பான்மை முதலெனவே மன்னுப
னாவினதமரபின்மயங்கும் - முன் சுத்தனாயிருக்கிறவனை மாயையு
ங் கன்மமுங் கூடுமென்று நீசொல்லுதலின் மாயைமுந்தியதுகன்
மத்தின் பகுதிமுந்தியது என்றொன்றுசொல்லவே நிலைபெற்ற நா
ல:ீ ஜதியாயமாக மயங்கும்,— மலஞ்சுத்தற்கேயுநெறியென்கொல்
அதுவனறிச் சுத்தரானவர்களுக்கு நீசொல்லியமலங்கள் பொருந்
தியபடியெப்படி,—அதனியல்பு - அஃதவ்வாத்மாவினியற்கையா
ம்,—ஆயின் - அதனியல்பாயின், முத்தியென்பதென் - ஆறுவிய
ல்பான தழியாமையின் வேதாகமங்களில் வீடென்னுஞ்சொல்லு
ருவதென்,—மற்றிவைநிற்க—அதனானீசொல்லு மிவையொழிக,—
இருங்கலாதியுணர்வாய்மேயபின்-பெரியகலாதிக ளிவனுக்கறிவை
யுண்டாக்குவதாகக் கூடியபின்,—திருமுலகந்தன்னில் - பெரியபி
ரபஞ்சத்திலே,—தன்னுருவை விளங்காமையினக்கும் - ஆத்மா
வினுடைய சொரூபந்தோன்றுதபடி யப்பிரபஞ்சத்தை விளக்கி

நிற்கும்,—எனின் - என்று நீசொல்லில்,—இவைவிடுங்காலுணர்வுட்டோயு நெறியிலதாதலென - இக்கலாதிகள்நீங்கின வதீதத்திலுள்ளே யறிவுபொருந்து முறைமையில்லாமையுமன்,— அறியாமை - அவ்விடமறியாமைகாணும்,—என நீசொல்லியது மலமென்பர் துணிந்துளோரே - என்றுநீசொல்லியவிதனைக்கா ணவமலமென்றுசொல்லுவ ரறிவாற்றெளிந்தோர். எ-று.

என்னென்பதனை யிலதாதலென்பதினுங்கூட்டுக. மற்றவை.

---

அப்படியே யோராணவ மலமென்ப தொன்றுண்டாறுமென்றாற் காணப்படாதோவென்று மீளவு மைக்கியவாதிவினவ அந்தவாணவமலமானது திருவருட்பிரகாச முண்டானவர்களாலே காண்கிறதொழிய வுன்றாற் காணப்படாதென் றவனை மறுத் தருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

அந்நியமா னவையுணர்த்தி யநந்ியமாய்நிறைந்த வறிவறியா மையினானு மருணிலவுங்காலந், தன்னில்வ னேயாவு மாய்நின்றதொன்மை தாமுணர்த லானு முயிர் தானெனவொன்றிலதாய், மன்னியிடு மலமாயை கன்மங்கண்மாறி வந்திடும்பங் கிதுவன்றா தாதலினான்மனத்தா, லுன்னரிய திருவருளை யொழியமலமுளதென் றுணர்வரிதா லதனுண்மை தெரிவரிதாமுனக்கே.

(உச)

பற்றுதல்விடுதல்மற் றவற்றுளதொன்று
யுற்றிடுமலமுண ருணர்வரிதென்றது.

(இ-ள்.) அந்நியமானவையுணர்த்தி யநந்தியமாய்நிறைந்தவறிவறியாமையினானும் தனக்குவேறானபிரபஞ்சத்தை யறிவித்துத் தனக்குவேறற நிறைந்துநிற்கிற திருவருளைத் தானறியாதபடியாலும்

*அருணிலவுங் காலந்தன்னிலவனே யாவுமாய் நின்ற தொன்மை தாமுணர்தலானும்*

அந்தத் திருவருட்பிரகாசமுண்டான காலத்தாந் தன்னிடத்திலே நிற்கிற சிவமுதலுனே யெவ்விடத்தினு நிறைந்து நிற்கிற பழைமையைத் தானறிகையாலும்

*உயிர்தானெனவொன் றிலதாம் மன்னியிடுமலம்*

ஆன்மாவென்றொரு முதலில்லையென்னும்படி நிலைபெற்றுநிற்கு மாணவமலமானது. ஆணவமென்றொன்றுவேணுமோ மாயைதான்மறையாதோவென்னில்

*மாயை கன்மங்கண் மாறிவந்திடும்*

மாயாமலமுங் கன்மமலமுங் காரணத்தினுங் காரியத்தினும் விட்டும்பற்றியும்வரும்.

*இங்கிது வழுவாது*

இவ்விடத்திந்த மாயையுங்கன்மமு மாறிவருகிறதும் மலமெவ்விடத்துஞ் சகசமாயான்மாவோடு நிலைபெற்றுநிற்கிறதுந் தப்பாது.

*ஆதலினுன் மனத்தா லுன்னரியதிருவருளொடுறிய மலமுளதென் றுணர்வரிது*

இப்படியாணவமலஞ் சகசமாய் நிலைபெற்றுள்ளதாகையான் மனத்தினு லினைத்தற்கரிய திருவருட்பிரகாசித்தகாலத்தல்லது ஆணவமலமொன்றுண்டென்றறியப்படாது. (ஆல் அசை.)

*அது னுண்மை தெரிவரிதா முனாக்கே.*

அந்தத் திருவருளுனக் கில்லாதபடியாலே யந்த வாணவமலத்தினுண்மை யுன்னாலறியப்படாது. எ-று.

வி-பு. அந்நியமானவையுணர்த்தி யநந்நியமாய்நிறைந்த வறிவறியாமையினுனுமென்றது ஐக்கியவாதியைமறுத்திப்பொழுதிந்த மாயாகன்மங்கள்கூடின சகலத்துத் தேகாதிபிரபஞ்சத்தையறிந்து மிந்த மாயாகன்மங்கள் கூடுவதற்குமுன்பு நிகழ்த்தலென்று சொ

ன்னவதரத் தான்மாவினோடைக்கியமா யெங்கு நிறைந்துநிற்கிற
திருவருளைத் தரிசியாதிருந்தபடியா லு மநாதியே யக்கினியைக் கா
ட்டமறைத்து நின்றாற்போல ஆன்மாவென்றொரு முதலில்லையெ
ன்னும்படி யாணவமல மறைக்கையினாலுமெனவறிக. என்றிங்ஙன
ன மவனைமறுத்ததற்கு. பி-ம். சங்கற்ப நிராகரணத்தில் "முன்
பு நன்றுடனொன்றியகாலை - யின்பமெய்துதற் கிலதுபிராகபி-னீ
யலைபொருதமாயாவாதி - யாயினையமையும்." எ-ம். "மூலமலத்
தாற் சாலுமாயை - கருமத்தளவிற் றருமுருவிறைவன்." எ-ம்.
கண்டுகொள்க.

இனிமாயைகன்மங்கள் மாறிவந்திடுமென்பது மிந்தவாணவ
மலம்போல மாயாமலமுங் கன்மமலமு மான்மாவை யநாதியே ப
ற்றிநிற்கவு மவையிற்றின்காரியங்கள் விட்டும் பற்றியும் வருமென்
றதெனவறிக. அப்படிக் காரணமலமூன்று மான்மாவையநாதியே
கூடிநிற்குமெனபதற்கு. பி-ம். சித்தியாரில். "மும்மலநெல்லினு
க்கு முளையொடுதவிடுமிப்போன், மம்மர்செய்தணுவினுண்மை வ
டிவினைமறைத்துநின்று." எ-து. கண்டுகொள்க. அப்படியந்தயா
ணவமல மநாதியே யான்மாவை மறைத்துநிற்க மாயாகாரியமான
கலையாதி தத்துவங்க ளந்தமறைப்பை நீக்குமென்பதற்கு. பி-ம்.
சித்தியாரில். "போதகாரியமறைத்து நின்றதுபுகல்மலங்கா, ணோ
தலாங்குணமுமாக வுயிரினுள்விரவலாலே, காதலாலவித்தைசிந்து
த் தருங்கலையாதிமாயை, யாதலாலிரண்டுஞ்சோதி யிருளென வே
றுமன்றே." எ-ம். "மலமெனவேறொன்றில்லை மாயாகாரியமதே
ன்னி, னிலகுயிர்க்கிச்சாஞானக் கிரியைகளெழுப்புமாயை, விலகி
டுமலமிவற்றை.', எ-ம். "பருதியை முகின்மறைப்பப் பாயொளி
பதுங்கினாற்போ, லருவுயிர்மறைக்கின்ஞானக் கிரியைகளொளிக்
குமாகுங், கருதிடுமிச்சாஞானக்காரியக்காயம்பெற்றால், மருவிடு
முயிர்க்குக்காயம் வந்திடாவிடின்மறைப்பே.' எ-ம். கண்டுகொ
ள்க.

இதனாற்சொல்லியது ஆணவமலமில்லையென்ற வைக்கியவாதியைநோக்கி அந்தமலமுண்டென்று அநுபவத்தினாற் காட்டியமுறைமையுமந்தமலமுந் திருவருட்பிரகாசமுள்ளவற்கொழிய காணப்படாதென்னு முறைமையு மறிவித்தது. (உ௭)

வேறு— இதுவுமது.

மலம் - இந்தவாணவமலமானது,—அன்னியமானவை யுணர்த்தி - தான்பக்குவமாமளவு முயிர்கட்கு வேறாய்ப் பொருளல்லாத பிரபஞ்சத்தைப் பொருளென்னும்படி யறிவித்தலால்,—அந்நியமாய் நிறைந்தவறி வறியாமையினாலும் - அவ்வுயிர்கடமக்கு வேறன்றிப் பரிபூரணமாய்நிற்கின்ற ஞானத்தையறியாதபடியாலும்,—அருணிலவுங்காலந்தன்னி லவனேயாவுமாய்நின் றதொன்மை தாமுணர்தலாலும்-அந்த வருள்விளங்குங்காலத்திற் கருத்தாவே சர்வமுமாய்நின்ற பழமையை யவைகடாமறிகையாலும், உயிர்தானென வொன்றிலதாமன்னியிடும் - அவ்வருள் பிரகாசிக்குமளவு மாத்மாவென வொருபொருளில்லையாக வது தானேயாய்நிலைபெற்றுநிற்கும்,—மாயைகன்மங்கண்மாறிவந்திடும் - மாயையுங் கன்மமுஞ் சிருஷ்டி சங்காரங்களிலே பற்றுவது விடுவதாயிருக்கும்,—இங்கிதவழுவாது-இந்தவாணவமலமப்படி பற்றுவது விடுவதாகாது,—ஆதலினான் மனத்தாலுன்னரிய திருவருளையொழிய மலமுளதென் றுணர்வரிதாம் - ஆகையினாலே மனத்தாலினைத்தற்கரிய திருவருளைக்கொண்டறிதலன்றி யாணவமல முண்டென்றொருவர்க்கு மறியக்கூடாது, — அதனுண்மை தெரிவரிதாமுனக்கே - ஆகையினாலே மலத்தி னுண்மைத்தன்மை யுனக்கறியக்கூடாது. எ-று.

இங்கிது ஒருசொல். உணர்த்தி யுணர்த்த தாவிகாரம்.

இப்படியுண்டென்று காட்டப்பட்ட வாணவமல நீங்கும்வ

றியேதென்றுவினவச் சிவன்றன்னருளாலே மாயாகாரியமாகிய கலையாதித்தத்துவங்களைக்கூட்டி மலபாகம்வருத்தவனென்னுமுறைமையை மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

புகலுமல மொழிதற்குக் கலாதிமுதன் மாயை
பொருந்தியிடு மரனருளாற் போதந்தீபஞ், சகலமெ
லா முடனுய வாறுபோலத் தருமருளை மலமுயிர்கள்
சாராமன் மறைக்கு, மிகவிவரு மிவைபுணரி னிருள்வெ
ளியாந்தன்மை யெய்துமிவை தன்செய்தி யிலங்குமவி
ந்து, பகர்வரிய வுணர்வாகி யொளியாயுள்ளப் பான்
மையினு லொருநாதம் படருந்தானே. (உரு)

மலநிலையொதுங்க மாயாகாரியங்
குலவிடுமிருளொளி குறிப்பிதற்கென்றது.

(இ-ள்.) புகலுமலமொழிதற்குக் கலாதிமுதன் மாயை பொருந்தியிடு மரனருளால் — முன்னேசொல்லப்பட்ட வாணவமலத்தைப் போக்குதற்குக் கலையாதி தத்துவங்களாகிய காரியமாயை யான்மாவோடுங்கூடுந் தம்பிரானார் காருண்ணியத்தினாலே. அதுவென்போல வென்னில்

போதந்தீபஞ் சகலமெலா முடனுயவாறுபோல — ஆன்மபோதம் ஜீவிக்குமிடத்து விளக்கானது பிரகாசித்தெரியுங்கால் தகளியுந் திரியு நெய்யுங் கூடிப்பிரகாசித்தெரிந்தாற்போல. அப்படி யான்மாவையுங் கருவிகளையு மந்த வருளேகூட்டி ஜீவிப்பிக்குமாகி லந்தவருளை யிந்தவான்மாவாலறிந்து கூடப்படாதோ வென்னில்

தருமருளை மலமுயிர்கள் சாராமன் மறைக்கும் — அப்படிக் கூடிநின்றறிவிக்கிற திருவருளை யான்மா வறியாதபடி யாணவமலமானது மறைத்துநிற்கும்

இகலி வருமி வை யுணரி னிருள்வெளியாந் தன்மை யெய்தும்.

இங்ஙன மாறுபட்டுவருகிற வாணவமலமு மாயாகாரியமும் விசாரித்துப்பார்க்குமிடத் திருளையு மொளியையு முவமிக்கிற குறியை யுடைத்தா யிருக்கும்.

• இவை தன்செய்தி

இந்தமலங்களின் முறைமை யிப்படியாயிருக்கும். அன்றியு மிந்தப்பதத்துக்கு இங்ஙனஞ் சொல்லப்பட்ட செய்யுளெந்துங் கேவலத்தின் முறைமையாமென்று பொருளுரைப்பினுமாம். அஃதாவது "ஓங்கிவரும் பலவுயிர்கள்" என்ற செய்யுளில் "ஈங்குவரும்" என்ற பதந்தொடங்கி யிவ்வளவுங் கேவலாவத்தையின் முறைமையைச்சொல்லுகையிலு லெனவறிக. மேற்சகலாவத்தைக்குச் சுத்தமாயையிற் காரியமாகிய விந்துசத்தியிற்றோற்றமாகிய வாக்குகள் காரியப்படுமுறைமை யருளிச்செய்கின்றது.

இலங்கும் விந்துபகர்வரியவுணர்வாகி யொளியாயுள்ளப்பான்மையினு லொருநாதம் படருந்தானே

விளங்காநின்ற விந்துசத்தி சொல்லுதற்கரிதாகிய வறிவுடாய் விளக்கமுமா யான்மாக்களிடத்திலே யவரவர்களுக்குண்டான கன்மங்களுக்கீடாக வாக்குகளைத் தோற்றுவிக்கைப் பொருட்டாக வொருநாதத்தை யுண்டாக்கும். எ – று.

உ-ம். புகலுமலமொழித்தற்குக் கலாதிமுநஞ் மாயைபொருந்நிடும். எ-கு. ஆணவமலபாகம் வருகைக்கு மாயாகாரியங்களான்மாவைவந்து பொருந்துமென் றைக்கிய வாதியை மறுத்தற்கு. பி-ம். சிவஞானபோதத்தில் "மாயா தனுவிளக்காய்" எ-ம். சித்தியாரில். "எழுமுடல் கரணமாதி யிவைமல மலமலத்தாற், கழுவுவனென்றுசொன்ன காரணமென்னை யென்னிற், செழுநவையறுவைசாணி யுவர்செறிவித் தழுக்கை, முழுவதுங் கழிப்பன்

மாயை சொடுமலமொழிப்பன் மூன்னேன்." எ-ம். கண்டுகொள்க.

இனி தருமருளை மலமுயிர்கள் சாராமன்மறைக்கும். எ-கு. அருளானது விகாரப்படாது நிர்விகாரியாயிருக்கும், ஆன்மாத் தானேவிகாரப்பட்டறியுமென்கிற வவிகாரவாதியைநோக்கி மறுத்துச் சொன்னதாகவுமாம். இதற்கு. பி-ம். சங்கற்ப நிராகரணத்தில். "நீர்நிழலனைய சீர்பெறுகடவுளைச் - சேர்ந்தவர்க்கின்பம் வாய்ந்திடுமென்றனை - பாதவமென்றுஞ் சேதனமின்மையி-னிழைத்தோர்வம்பி னென்பதுந்துன்பம் - விளைத்தோர்தம்மில் வெறுப்புமொன்றிலதே." எ-து. கண்டுகொள்க.

இனி இருள்வெளியாந் தன்மையெய்தும். எ-து. ஆணவமலத்துக் கான்மாவைமறைக்கிறது சுபாவம் மாயாகாரியமான கலாதிகளுக் கந்தமறைப்பை நீக்குகிறது சுபாவம்என்றுபொருட் கூறியதற்கு. பி-ம். சித்தியாரில். போதகாரிய மறைத்து நின்றது புகல்மலங்கா, ளோதலாங் குணமுமாக வுயிரினில் விரவலாலே, காதலா லவித்தைசிந்தத் தருங்கலை யாதிமாயை, யாதலாலிரண்டுஞ்சோதி யிருளென வேறுமன்றே." எ-து. கண்டுகொள்க.

இனி இலங்கும் விந்து பகர்வரிய வுணர்வாகி. எ-கு. விளக்கத்தைச்செய்கிறவறிவுமாயென்று பொருட்கூறிய தேதென்னில்? இது மூவகை யான்மாக்களுக்கு மறிவைக் கொடுக்கையினாலேயெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "மூவகை யணுக்களுக்கு முறைமையால் விந்துஞான, மேவின தில்லையாயின் விளங்கிய ஞானமின்றாம்." எ-து. கண்டுகொள்க.

இனி உள்ளப்யான்மையினு லொருநாதம் பட்டும். எ - து. சூக்குமை வாக்கெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "சூக்குமைவாக்கதுள்ளோர் சோதியாயழிவின்றி." எ - து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது ஆணவமலநீங்குதற்கு மாயாகாரியமானகலையாதிதத்துவங்களைச் சிவன்கூட்டுவனென்றும் அப்படிக்கூட்டியறிவிக்கிறசிவனை யான்மாவறியாதபடி யாணவமலமறைக்குமென்னு முறைமையும்இங்ஙனங் கேவலாவத்தையைமுடித்துமேற்சகலாவத்தையிற் சூக்குமை வாக்குத்தோற்றுமுறைமையு மறிவித்தது. (உரு)

---

வேறு—இது சகசமலநீங்குதற் காகந்துகமலம்வேண்டுமென்பதூஉஞ் சகலாவத்தை நிகழ்தற்குச் சுத்தமாயையிற்றோன்றிய வாக்குநாலிற் சூக்குமைவாக்கு மூலாதாரத்தைப்பொருந்திய விந்துவினின்றுந் தோன்றுமென்பதூஉ முணர்த்திற்று.

புகலுமல மொழித்தற்கு - அங்ஙனஞ் சொல்லப்பட்ட வாணவமலம்போக்குதற் பொருட்டாக,—அரனருளால்-கருத்தாவினருளினாலே,—கலாதிமுதன் மாயைபொருந்தியிடும் - கலாதிமுதலிய மாயாகாரியங்க ளாத்மாக்களைப்பொருந்தும்,—போதம்-சுத்தமிச்சுராசுத்தமென்று பின்னமாயிருக்கிற தத்துவங்களா லவ்வுயிர்கட் கறிவுவிளங்கும்படி, — தீபஞ்சகலமெலா முடனுயவாறுபோலும் - தீபமானது சகலமாய தண்டு தகழி நெய் திரி யெல்லாவற்றுடனும் பிரகாசமானபடிபோலும்,—தருமருளை மலமுயிர்கள் சாராமன்மறைக்கும் - இப்படி கூட்டுகின்றவருளை யாத்மாக்கள் பொருந்தாதபடி யவ்வாணவமலமறையாநிற்கும்,—இகலிவரு மிவையுணரி னிருள்வெளியாந்தன்மை-இப்படி மாறுபட்டுவரு மாணவமு மாயையும் விசாரிக்குமிடத்தி லிருளும் வெளியுமான முறைமையாயிருக்கும்,—எய்தும்வகைதன்செய்தி - இப்படிபொருந்திப்போதுகின்ற தனித்தனிற்கனுதியே முறைமை,— இலங்கும் விந்து - இனிச்சகலாவத்தை நிமித்தமாக மூலாதாரத்திலே விள

ங்காநின்ற விந்துக சத்தியிலேநின்றும்,—பகர்வரிய வுணர்வாகி யொளியாய் - சொல்லுதற்கரியவறிவாய் விளக்கமாய்,—உள்ளப் பான்மையில்-ஆத்மசொரூபத்தி னியல்பேதுவாக,—ஒருநாதம்ப டரும்-ஒப்பற்ற சூக்குமைவாக்குப் புறப்பட்டுத் துரியத்திற்செல் லும். எ-று.

விந்துவினெனவிரிக்க. தான்அசை. நாதமென்று சூக்குமை க்கும் விந்துவென்று பைசந்திக்கும்பெயர். இதற்குமுன்நூலி ன வ்வு—னுவ்வுமவ்வு மனம் புத்தியாங்காரங்கள் செவ்விய விந்து நாதஞ்சித்தமோடுள்ளமாகு மென்பதனாலே நாதமுள்ளத்தையதி ஷ்டித்து நின்றுவிளக்குமென்பதறிக. உள்ளப்பான்மையினாலொ ருநாதம் படருமென்றார், உள்ளமாவ தாத்மா. இச்சாஞானக்கிரி யைகளைவிளக்குங் கலைமுதலிய கருவிகளின் சமூகமாதலி னுள் ளப்பான்மையினா லென்றதற் கவ்வாறுரைத்தாம். காலோத்தரா கமத்தில் என்றதனாலுள்ள மாத்மவிக்ரகமாம். சூக்குமைமுதலிய வாக்குநான்கு மொன்றிலொன்றாகவு மொன்றுகலொன்று தூலமா கவும் பிறத்தலி னொருநாதமென்றார். பான்மையினாலென்பது ம ழையினாற் றெய்வம் பராவினா ரென்றதுபோலநின்றது. விந்துப் படருந்தானே என்பதற்குச் சிலர்விந்துவிலேநின்றுஞ் சூக்குமை வாக்குத்தோன்றி யுணர்வாயொளியா யாத்மாவின் பகுதியாலே யொருநாதமாய்த் துரியத்தானத்தைப் பொருந்துமென்றும், சிலர் விந்துச்சத்தி யறிவாயறிவிப்பதுமா யாத்மாவின் பகுதியாலே நாலுவாக்கையுந் தோற்றுவித்தற்பொருட்டு அதிலேயொருநாதந் தோன்றுமென்று முரைப்பர். இனி அருளாற்போலும்என ஒருப தமாக்கிக் கருத்தாவா லிவன்போதஞ் சீவிக்கும்படி விளக்கைக் கொண்டு பலபொருளையுங் காண்பதுபோலு மென்றும் இகலில ருந்தன்மை என்பதற் கிப்படி மாறுபட்டுவருகிற வாணவத்தையு மருளையும் விசாரிக்கிலென்று முரைப்பாருமுளர். சகலமாகுபெயர்.

மேற் பைசந்தி மத்திமை வைகரியென்னும் வாக்குகள்மூன்றுங் காரியப்படுமுறைமை யருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

வந்தடைந்து பின்னமாய் வன்னங்கடோற்றம்
வருமடைவு படவொடுக்கி மயிலண்டசலநேர், சிந்தை
தனி லுணர்வாகும் பைசந்தியுயிரிற் சேர்ந்துவரு ம
வைமருவு முருவெவையுந்தெரித்து, முந்தியிடுஞ் செ
வியிலுறு துள்ளுணர்வாயோசை முழங்கியிடு மத்திமை
தான் வைகரியிலுதானன், பந்தமுறு முயிரணைந்து வ
ந்தமொழிச்செவியின் பாலணைய நினைந்தபொருள் ப
கருந்தானே. (உசா)

சூக்குமைமுதலாச் சொற்பதமீரு
வாக்கிடும்வாக்கி னடைவினைவகுத்தது.

| | |
|---|---|
| (இ-ள்.) வந்தடைந்து | அந்நாதமாகிய வறிவுதானேவடிவாகச் சூக்குமைவந்து உந்தித்தானத்திலே பொருந்தி |
| பின்னமாய் வன்னங்கடோற்றம் வருமடைவு படவொடுக்கி | வெவ்வேறாய்வருமக்கரங்களினுடைய சொரூபங்கடோன்றுமுறைமை தெரியாதபடி மறைத்துநிற்கும் |
| மயிலண்டசலநேர் | மயில்முட்டைக்குள் ஜலமானது புறம்பே மயிலினிறமாய்ச் சொரூபீகரித்துத்தோன்றச்செய்தே யுடைத்தால் ஜலமாய் விடுமாப்போல |
| சிந்தைதனி லுணர்வாகும் பைசந்தி | பைசந்தி வாக்கானது ஆன்மாவினிடத்திலே நினைவுமாத்திரமாய் நிற்கும் |

உயிரிற் சேர்ந்துவரு மவைமருவு முருவெவையுந்தெரித்து முந்தியிடுஞ் செவியினுருதன்னுணர்வா யோசை முழங்கியிடு மத்திமைதான்

மத்திமைவாக்கானது மேற்சொல்லப்போகிற வக்கரங்களினுடைய சொரூபங்களைப் பிராணவாயுவோடுங்கூடி யொழுங்குபடநிறுத்திச் செவிக்குங்கேளாதே யான்மாவினிடத்திலே யுள்ளறிவுமாய்த் தொனியுமுண்டாய் முற்பட்டுநிற்கும்

வைகரியினுதானன் பந்த முறுமுயிரணைந்து வந்தமொழிச் செவியினபாலணைய நினைந்தபொருள் பகருந்தானே.

வைகரிவாக்கானது முற்கூறிய பிராணவாயுவோடுங்கூடிவந்து உதானவாயுவிலேயும்பந்தித்துச் செவிப்புலனிடத்திலே கேட்கத்தக்கதாக நினைவினுண்டான வசனத்தைச் சொல்லும். எ-று.

நு-ம். இங்ஙனஞ் சொல்லப்பட்ட வாக்குகளுக்குத் தானமும் வடிவுமாவது சூக்குமைக்குத்தான நாபியடியு நாதத்துவம் வடிவுமெனவறிக.

பைசந்திக்குத்தானம் உந்தியும் பிராணவாயு வடிவுமெனவறிக.

மத்திமைக்குத்தான நெஞ்சுங்கண்டமுமாய்நின்று பிராணவாயுவடிவுமெனவறிக.

வைகரிக்குத்தானம் தாலுமூலமும் பிராணவாயுவு முதானவாயுவும் வடிவெனவறிக.

ஆக விங்ஙனஞ்சொல்லப்பட்ட வாக்குகளுனுக்கும். பி-ம். சித்தியாரில். "சூக்குமைவாக்கதுள்ளோர் சோதியாயழிவதின்றி"

எ-ம். "வேற்றுமைப்பட்ட வன்னம்." எ-ம். "உள்ளுணர்வோ சையாகி." எ-ம். "வைகரி செவியிற்கேட்பதாய்." எ-ம். வரும் விருத்தநாலையு மொட்டிக்கண்டுகொள்க. இந்தவைகரிவாக்குக் காரியப்படு மிடத்து நாக்கு உண்ணாக்கு பல்லு உதடு மூக்கு இவை யோடுங்கூடி நின்று காரியப்படுமென வறிக. இவையிற்றுக்கு. பி-ம். நேமிநாதத்தில். "உந்தியிற்றோன்றி யுதானவளிபிறந்து, கந்தமலிநெஞ்சுதலைகண்டத்து - வந்தபின், றசிநாவண்ணமிதழெயிறு மூக்கென்னப், பேசுமெழுத்தின் பிறப்பு." எ-து. கண்டு கொள்க.

ஆக விங்ஙனஞ் சொல்லப்பட்ட விந்தவாக்குகளுலுந் தோன்றுகைக்குக் காரணமாகப் பஞ்சமையென்றொரு வாக்குண்டென்று மதற்குத்தானம் மூலாதாரமென்று மதுபிரணவ சொரூபமாயிருக்குமென்றுஞ் சொல்லுவாருமுளர். அதனையாராய்ந்து கண்டு கொள்க.

இந்தவாக்குகள் காரியப்படு மிடத்துச் சாந்தியாதீதமுதலான கலைகளோந்தோடும் பற்றுக்கோடாகநின்று காரியப்படுமென வறிக. அப்படிக் காரியப்படுமிடத்துப் பராசத்தியுந் திரோதசத்தியு மிச்சாசத்தியு ஞானசத்தியுங் கிரியாசத்தியுங் கூடிநின்று காரியப்படுத்து மெனவறிக.

இதில் சூக்குமைவாக்குக்குச் சாந்தியாதீதகலையுஞ் சாந்திகலையும் பற்றாகநிற்கப் பராசத்தியுந் திரோதசத்தியுங் காரியப்படுத்து மெனவறிக.

இனி பைசந்திவாக்குக்கு வித்தியாகலை பற்றாகநிற்க விச்சா சத்தி காரியப்படுத்துமெனவறிக.

இனி மத்திமைவாக்குக்குப் பிரதிட்டாகலைபற்றாகநிற்க ஞானசத்தி காரியப்படுத்துமெனவறிக.

இனி வைகரிவாக்குக்கு நிவிர்த்திகலைபற்றாகநிற்கக் கிரியாசத்திகாரியப்படுத்துமெனவறிக.

அன்றியு முற்கூறியபஞ்சமையென்னும் வாக்குக்கூட்டுகில் பராசத்தியுஞ் சாந்தியாதீதகலையு மதற்குக் கூட்டிக்கொள்க.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட வாக்குகளுளுங் கலைகளாந் நிஞேடுங்கூடிக் காரியப்படுமென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "நிகழ்ந்திடும்வாக்குநான்கு நிவர்த்தாதிகலையைப்பற்றித், திகழ்ந்திடுமைஞ்சதாக." எ-து. கண்டுகொள்க. இதனுள் நிகழ்ந்திடும்வாக்குநான்கு மென்றதுகொண்டே நிகழாதவாக்குமொன்றுண்டென்பது கருத்தாகப் பஞ்சமையென்னும் வாக்குண்டானதெனவறிக. இங்ஙனங் கூறப்பட்டவையிற்றில் சத்திக ளிவையிற்றைக்காரியப்படுத்துமெனவறிக. இதற்கு. பி - ம். இந்நூலில். மேல்வருகிற "இத்தகைமை யிறையருளால்" என்னும் விருத்தத்தை முடியவொட்டிக் கண்டுகொள்க.

இனி யுயிரிற்சேர்ந்தவருமமைமருவும். எ-து. உயிரென்பது கொண்டே ஆன்மாவென்பாருமுளர்; அது பிராணவாயுவெனவறிக. அப்படிப் பிராணவாயுவை யுயிரென்பதற்கு. பி-ம். சித்தியாரில் வாக்குகள் காரியப்படுமிடத்துச் சொன்னவிருத்தத்தில். "உள்ளுணர்வோசையாகிச் செவியினி லுறுதல்செய்யா, தொள்ளியபிராணவாயு" எ-ம். "ஐயமில்பிராணவாயு வடைந்தெழுந்தடைவுடைத்தாம்." எ-ம். கண்டுகொள்க. உயிர்வாயுவென்றுஞ் சொல்லுமென்பதற்கு. பி-ம். "உயிரொலிவங்கூழ் சலநம்வாதம் வளிமாருதம்." என்னுமிலக்கணங்களினுங் கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது சூக்குமைவாக்கு நாதவடிவாக வந்து வைவந்துகூடி யாதாமொன்றைச் சொல்லுமிடத்துப் பைசந்திவாக்கானது அந்தவசனத்துக்குரித்தாகிய வக்கரங்களை மயில்முட்டையில் ஜலம்போலத் தோற்றுவித்து நிற்குமென்றும் மத்திமை வாக்கானது பிராணவாயுவையுங் கூடி யுள்ளே தொனியாய் நிற்குமென்றும் வைகரிவாக்கானது பிராணவாயுவோடு உதானவாயு

வையுங் கூடிச் செவிப்புலனுக்குக் கேட்பதாக வசனிக்குமென்றும் வருமுறைமையை யறிவித்தது. (உ௬)

---

வேறு— இஃ தேனைவாக்குமூன்றின் காரியப்பாடு முணர்த்திற்று.

பைசந்திவந்து - பைசந்திவாக்கான தந்நாதத்திலேதோன்றி,—அடைந்து - சுழுத்தித்தானத்தைப் பொருந்தி,—பின்னமாய் - வெவ்வேறாய்,—வன்னங்கடோற்றம் வருமடைவுபடவொடுக்கி - அக்கரங்கடோன்றுகின்ற முறைமை தெரியாமற் றன்னுள்ளேயொடுக்கி,—மயிலண்டசலநேர் - மயில்முட்டையிற் சலமொப்பாய்,—சிந்தைதனி லுணர்வாகும் - சித்தத்திலே யறிவாய்நிற்கும்,—மத்திமைதான் - மத்திமைவாக்கானது,—உயிர்ற்சேர்ந்துவருமவைமருவு முருவெவையுந்தெரித்து-பிராணவாயுவுடனேபொருந்திவருகின்ற வவ்வக்கரங்கள் பொருந்திய சொரூபங்களெல்லாவற்றையு மவற்றின் பொருள்களையும் புந்தியிலே யொழுங்குபடநிறுத்தி,—முந்தியிடுஞ்செவியிலுறாது - ஞானேந்திரியங்களின் முற்பட்டுவருஞ் செவிக்குக் கேளாமல்,—உள்ளுணர்வாயோசை-உள்ளேயறியத்தக்க தொனியாய்,—முழங்கியிடும் - கண்டத்திலே முழங்காநிற்கும்,—வைகரியினுதானன் பந்தமுறமுயிரணைந்து வந்தமொழி - வைகரியிலே யுதானவாயுவானது சுழுமுனையிற்சேரும் பிராணவாயுவோடு கூடுதலாலே வந்தசத்தமானது,—செவியின்பாலணைய-சொல்வோன் செவியினிடத்திலே பொருந்தும்படி,—நினைந்தபொருள் பகருந்தானே - அவ்வைகரியான தவனினைந்த பொருளைச்சொல்லும். எ-று.

தான் அசை. நேராயெனவிரிக்க. இந்தவாக்குநான்குஞ் சுத்தாத்துவாவிற் சூக்குமமாகவு மிச்சிராத்துவாவிற் றூலமாகவு மசுத்தாத்துவாவிற் றூலதரமாகவுஞ் சீவிக்குமெனவறிக. பைசந்தி

சித்தத்தை யதிஷ்டித்து விளக்குதலிற் சிந்தைதனி லுணர்வாகு மென்றார்.

---

இவ்வாக்குக ணாலோடுங்கூடி யான்மா வருளாலேகாரியப்படுமிடத்துச் சுத்ததத்துவங்களாந்தினாலே காரியப்படுமென்று மந்தச் சுத்ததத்துவங்களிலேயசுத்தமாயையிற் றோற்றப்பட்ட கலையாதிதத்துவங்களிற் கலையும் வித்தையுங் காரியப்படுமுறைமையு மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

இத்தகைமை யிறையருளா லுயிரறியுமறிவுக் கீடாக வாடாதே யீரிரண்டிலுரைத்த, வித்தைமுத லீலவரான் விளங்குஞான மேவியிடுமெனவுமைப்ப ரசுத்தமாயை, வைத்தகலை தான்மூல மலஞ்சிறிதே நீக்கி மருவும்வகை தெரிவிக்கும் வாயில்களின் பயனைப், புத்திதர வித்தையிடை நின்றறிவையுயிர்க்குப் பொருந்தியிடும் வகைபுணரும் புனிதசத்தி புணர்ந்தே. (உ௭)

சுத்ததத்துவத்தாற் றொல்லுயிருணர
வைத்திடுங்கலைவித்தை மருவுமென்றது.

(இ-ள்.) இத்தகைமையிறையருளா லுயிரறியுமறிவுக்கீடாகவாடாதே யீரிரண்டி-ல். அநுயவம். இத்தகைமைவாடாதே யீரிரண்டி லிறையருளா லுயிரறியுமறிவுக்கீடாக

இந்தமுறைமையாலே கெடாதேவருகிற வாக்குகளாலினுங்கூடித் தம்பிரானார் காருண்ணியத்தினாலே யான்மாவறியுமறிவுக்குத்தக்கதாக

உரைத்த வித்தைமுத லவரான் விளங்கு ஞானமேவியிடு மெனவுரைப்பர்

முன்னே சுத்தமாயையிற் றோற்றமாகச் சொல்லப்பட்ட சுத்தவித்தை ஈசுரன் சாதாக்கியஞ் சத்தி சிவமென்கிற தத்துவங்களைந்திலும் பிரகாசிக்கிறவறிவு பொருந்தியிடுமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். அன்றியும்,

அசுத்த மாயை வைத்த கலைதான் மூலமலஞ்சிறிதே நீக்கி மருவும் வகை தெரிவிக்கும் வாயில் களின் பயனை

அசுத்தமாயையிலே யுண்டாகப்பட்ட கலையானது அந்தச்சுத்தத்துவத்திற் சத்திதத்துவ முதவியாகக்கொண் டான்மாவை மறைக்கப்பட்ட வாணவமலத்தைச் சற்றேபொதுக்கி யிந்திரியங்களின் பயனாகிய விடயங்களையான்மாப்பொருந்தும்படி யெழுப்புவிக்கும்

புத்திதர வித்தையிடை நின்றறிவை யுயிர்க்குப் பொருந்தி யிடும் வகைபுணரும். அநுவயம். வித்தையிடை புத்திதர வுயிர்க்கு நின்றறிவை பொருந்தியிடும் வகைபுணரும்

சுத்தமாயையிற் றோற்றமாயுள்ள சுத்த வித்தை யுதவியாகக்கொண்டு சொல்லப்பட்ட வசுத்தமாயையிற் றோற்றமாயுள்ள வித்தையானது அந்தவிடயங்களை யான்மாக்கொள்ளுமிடத் தின்னதென்று நிரூபித்தறியத்தக்க ஞானத்தை யான்மாவுக்கும் விடயங்களுக்கு நடுவேநின்று அறிவுண்டாம்படி கூட்டும். இது தான் கூட்டுமுறைமை யாராலே யென்னில்

புவிதசத்தி புணர்ந்தே.

சுத்தனாகிய சிவனுடையசத்திக டொழிலாகப் பூண்டுநின்றுசெலுத்த வதனோடுங் கூடிக் கொண்டுநின்று. எ-று.

ரு - ம். உரைத்த வித்தைமுதலைவரான் விளங்குஞானம்.
எ-கு. சுத்ததத்துவமைந்தினாலு மான்மாக்களுக்கு ஞானமுண்டாமென்கிற தெங்ஙனே யென்னில் சிவசத்திகள் சுத்ததத்துவங்களைக் காரியப்படுத்தச் சுத்ததத்துவங்க ளசுத்தமாயையிற் கலாதிகளைக் காரியப்படுத்த அவையிற்றினாலே யான்மாக்களுக் கறிவுண்டாமென்றதெனவறிக. அஃதாவது கிரியாசத்தி சத்திதத்துவத்தை யெழுப்பச் சத்திதத்துவங் காலமுநியதியுங் கலையையுமெழுப்பக் கலை தழற்பொடி நீங்கினாற்போல வாணவமலத்தைச் சிறிதே நீக்கி யந்தக் கலையே வழிவாக வான்மாவுக்குச் சிறிதறிவையுண்டாக்க ஞானசத்தி சுத்தவித்தையை யெழுப்ப சுத்தவித்தை வித்தையையெழுப்ப வித்தை யான்மாவுக் கறிவையுண்டாக்குமென்றதெனவறிக.

இனி புத்திதர வித்தையிடைநின்று எ-கு. புத்திதரவென்பதை புத்திதத்துவமென்பாருமுளர், அதுபொருளாகாதெனவறிக. "புந்தி பஞ்சாசற்பாவகமும் பண்ணிவிக்குந் தானே" என்று புத்திதத்துவத்தின் காரியப்பாடு பின்பேவருகையா லதனை யிவ்விடத்துக் கூறவேண்டுவ தில்லையெனவறிக. ஆகையால் புத்திதரவென்பதை யான்மா வந்தவிடயங்களை நிரூபித்தறியவென்று பொருட்கூறுமதே வழியெனவறிக.

இதனாற்சொல்லியது முன்னர்ச்செய்யுளிற் கூறிய வாக்குகளாலு. மான்மாக்களறியுமிடத்துச் சிவதத்துவங்களினாலே யறியுமென்று மவையாலே யசுத்தமாயையிற் கலையும் வித்தையுங் காரியப்படுமுறைமையையு மறிவித்தது. (உஎ)

———0———

வேறு—இது சுத்த தத்துவமைந்தும் வாக்குநாலையுங் கொண்டாத்மாவுக் கறிவையுண்டாக்கு முறைமையு மசுத்த மாயா தோற்றமான கலைவித்தைகளின் காரியப்பாடு முணர்த்திற்று.

இத்தகைமை - இந்தமுறைமையிலே,—உரைத்த வீரிரண்டின் - சொல்லப்பட்ட நாலுவாக்கிலுலே,—வித்தைமுதலைவரால் - சுத்தவித்தை முதலான தானங்களிலே யிருக்குமைவராலே,—உயிரறிய மறிவுக்கிடாக - ஆத்மாக்க ளறிகிற வறிவுக்கிடாக,—இறையருளால் - பரமசிவனருளினுலே,—வாடாதே-கெடாதே,—விளங்குஞான மேவியிடுமெனவுறைப்பர் - விளங்காநின்ற ஞான மவ்வுயிர்க்குப்பொருந்து மென்று பெரியோர்சொல்வர். அஃதெப்படியெனின் நாததத்துவ மூலாதாரத்தையும் விந்து நாபியையுஞ் சாதாக்கிய மிதயத்தையு மதிட்டித்துச் சூக்குமைமுதலான மூன்றையும் பிரேரிக்கும், ஈசுரமுஞ் சுத்தவித்தையுந் தன்செவி பிறர்செவிகட்குக்கேட்கும் வைகரி யிருவிதத்தையுங் கண்டத்தையு முகத்தையு மதிட்டித்துக்கொண்டு பிரேரிக்குமெனவறிக. இனி,—அசுத்தமாயை வைத்தகலைதான் மூலமலஞ் சிறிதேநீக்கி மருவும்வகை தெரிவிக்கும் - அசுத்தமாயை யுண்டாகிய கலையான தாணவமலத்தைச் சற்றே நீக்கி யாத்மாவுக்குக் கிரியாசத்தி பொருந்துமுறைமையை விளக்குவிக்கும்,—வித்தை-வித்தையானது,—வாயில்களின்பயனைப் புத்திதர - இந்திரியங்களின் விடயங்களைப் புத்திகிரகித்துத் தன்பாற்கொடுக்க,—இடைநின்று-தாளுத்மஞானத்துக்கும் புத்திக்கு மிடையேநின்று.—அறிவைப்பொருந்தியிடும் வகையுயிர்க்குப்புணரும் - விடயஞானத்தை யாத்மாப்பொருந்தி யறியும்படி யவ்வாத்மாவுக் கந்தரங்கமாகப் பொருந்தும். இவை தாமாகச் செய்யவல்லனவோ வெனின்,—புனிதசத்திபுணர்ந்தே-சுத்தனுடைய சத்தியைக் கூடிநின்றே செய்யும். எ - று.

புனைந்தகலைதெரிவிக்கும் எனமுடிக்க. அந்தரங்கமாக வெனவும் கிரியாசத்தியெனவும் வருவித்துரைக்க. கலை வித்தையினு மாத்மாவுக்கந்தரங்கமான கருவியாதலிற் போகங்

களுக் காதாரமாயிருக்கும். மட்குட மக்கினியிற்காய்ச்சின போது மெழுகுகூட்டுகைக்கு யோக்கியமானாற்போல வாத்மாவுங் கலையைப்பொருந்தினபொழுது போகங்களைப் புசிக்கைக்குப் பாத்திரமாவன். கலையாலே கிரியாசத்திவிளங்கவே ஞானசத்தியும் விளங்குமாயினு மந்தஞானசத்தி யொருகாரணங் கூடாமல் விடயங்களைக் கிரகிக்கமாட்டாமையாலே விடயங்களை யறிவது பொருட்டாகக் கலையினின்றும் வித்தைதோன்றிற்று. ஆத்மா விந்திரியங்களைப்பொருந்திச் சத்தாதிவிடயங்களைக் கிரகிக்குமிடத்துப் புத்திகருவி, புத்தியிற்பொருந்திய விடயங்களை யறியுமிடத்து வித்தைகருவி யெனவறிக.

---

மேல் அராகதத்துவமு நியதிதத்துவமுங் காலதத்துவமுங் காரியப்படுமுறைமை யருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

பேசரிய வராகந்தன் கன்மத்துக்கீடாய்ப் பெற்
றதனி லாசைதனைப் பெருகுவிக்குநியதி, தேசமிகு ம
ரசர்தரு மாணைசெய்தி செய்தவரைத் துய்ப்பிக்குஞ்
செய்கைபோல, நேசமுறுந் தங்கன்ம நிச்சயித்துநிறு
த்து நிகழ்காலங் கழிகால மெதிர்காலமென்றே, யோ
சைதர வருங்கால மெல்லைபலம்புதுமை யுறுவிக்கு மி
றைசத்தி யுடனாய்நின்றே. (உஅ)

மாலுறுமராகமு மன்னியநியதியுங்
காலமுமூன்றின் கருத்தையுமுரைத்தது.

(இ-ள்.) பேச சொல்லுதற்கரிய வராகதத்துவமான்
ரிய வராகந்தன் மாக்கள்செய்த கன்மத்துக்கிடாகப் பெற்
கன்மத்துக்கீ றதிலே நின்றும் பெருகுதற்காசையை மி
டாய்ப்பெற்றத கவு முண்டாக்கும்

னிலாசதனைப் பெருகுவிக்கும்

நியதி தேசமி குமரசர்தருமா னைசெய்தி செய்தவரைத் துய்ப்பிக்குஞ் செய்கைபோல நேசமுறுந் தங்கன் மநிச்சயித்து நிறுத்தும்

நியதிதத்துவமானது பொதுவாக விராஜ்ஜியம்பண்ணு மிராஜாவினுடைய வாக்கினையைக்கொண்டுலகி லான்மாக்களை யெல்லைவிட்டுக்கடவாதபடி யந்தவாக்கினையிலேநிறுத்தி நடத்து மந்திரியைப்போல விவ்வான்மாக்கள்செய்த கன்மத்தின் வழியன்றி யேரக்குறையப் போகாதபடி யறுதியாக நிறுத்தும்

நிகழ் காலங் கழிகாலமெதிர் கால மென்றே யோசைதரவருங்கால மெல்லை பலம் புதுமையுறுவிக்கும்

காலதத்துவமானது நடக்கிறகால மென்று மிறந்தகாலமென்றும் வருகிறகாலமென்றுஞ் சொல்லப்பட்டுப் போனகாலத்திலுண்டாகியவெல்லையு நடக்கிறகாலத்திலுண்டாகிய பலத்தையும் வருகிறகாலத்திலுண்டாகியபுதுமையு முண்டாக்கிநிற்கும். இவைதானுராலே யுண்டாக்குமென்னில்

இறைசத்தியுடனுய்நின்றே.

கத்தாவினுடைய திருவருளான சத்திகூடிநின்றுகாரியப்படுத்தும். எ - று.

று - ம். பேசரியவராகம். எ-து. ஆசையின்மிகுதி சொல்லுதற்கரிதென்றதெனவறிக.

கழிகாலத்துக் கெல்லையென்றது ஆண்டு திங்கள் நாளெனவறிக. நிகழ்காலத்துக்குப் பலனென்றது தனக்கநுபவமான புசிப்பாயுள்ள விடயங்களையெனவறிக. எதிர்காலத்துக்குப் புதுமையென்றது தானறியாததன்றி யறிந்தவற்றையும் புதுமை யென்றதெனவறிக.

இனி இறைசத்தியுடனாய்நின்றே. எ - து. இச்சாசத்தி ஈசுரதத்துவத்தை யெழுப்ப ஈசுரதத்துவ மராகதத்துவத்தை யெழுப்ப அராகதத்துவ மான்மாவுக் கிச்சையையெழுப்பு மென்றதெனவறிக

இனி நியதி யாதாமொருபொருளை நிச்சயிக்குமிடத்துக் கிரியாசத்தி சத்திதத்துவத்தைக்கொண்டு நியதியையெழுப்ப நியதி யாதாமொரு பொருளை நிச்சயிக்கு மென்றதெனவறிக.

இனி காலங்கூட்டுமென்றது கிரியாசத்தி தத்துவத்தைக்கொண்டு காலத்தை யெழுப்பக் கால மான்மாப்புசிக்கு மவதரங்களைக் கூட்டுமென்றதெனவறிக.

இதனாற்சொல்லியது ஆன்மாவுக் கராகதத்துவங் கன்மங்களுக்கிடாகப் பெற்றதைச்சிறிதாக்கிப் பெருததிலேயாசையை மிகவுமுண்டாக்குமென்று நியதிதத்துவ மிராஜாக்கினைபோலக் கன்மத்தை நிச்சயித்து நிறுத்துமென்றுங் காலதத்துவங் கழிகாலத்திலொல்லையு நிகழ்காலத்திற பலத்தையு மெதிர்காலத்திற் புதுமையு முண்டாக்குமென்றும் வருமுறைமையை யறிவித்தது. (உ௮)

---

வேறு—இது கால நியதி யராகமென்னு மூன்றின் காரியமு முணர்த்திற்று.

பேசரியவராகம்-சொல்லுதற்கரிய வராகதத்துவமானது,—தங் கன்மத்துக்கிடாப் பெற்றதனி லாசைதனைப் பெருகுவிக்கும்-ஆத்மாக்க டங்களுடைய கன்மத்துக்கிடாகப் பெற்றதிலே யாசையைமிகுவிக்கும்,—நியதி - நியதியானது,—தேசமிகு மரசர்தருமாணை - தேசங்கண் மிகுத்த வரசராற் கற்பிக்கப்பட்ட வாணையானது,—செய்தி செய்தவரைத் து

ப்பிக்குஞ் செய்திபோல - யாதொரு தொழிலைச்செய்தவரை யத்தொழிற்கேற்ற பயன்களைப் புசிப்பிக்கு முறைமைபோல,—நேசமுறுந் தங்கன்ம நிச்சயித்து நிறுத்தும் - ஆத்மாக்கண் முன்னே விருப்பமுற்றுச்செய்த கன்மங்களை நிச்சயம்பண்ணி நிறுத்தும்,— நிகழ்காலங் கழிகால மெதிர்காலமென்றே யோசைதர வருங்காலம்-இறப்பு நிகழ் வெதிர்வெனச் சொல்லவருங் காலதத்துவ மானது,— இறைசத்தியுடனாய்நின்று - சிவசத்தியுடன் கூடிநின்று,—எல்லைபலம் புதுமையுறுவிக்கும் - இறந்தகாலத் தெல்லையினையு நிகழ்காலத்திற் பலத்தினையு மெதிர்காலத்திற் புதுமையினையும் பொருந்துவிக்கும். எ-று.

நிகழ்காலமெனச் செய்யுளின் றொடையின்பநோக்கி முதலின்றது. செய்திதொழில். ஆணைசெய்தென்று பாடமோதி யரசர் தாங்கற்பித்த வாணைகளைச் செலுத்தி யவ்வவர்செய்த வறுவகைத்தொழிலான் வந்த பயன்களை யவ்வரைப்புசிப்பிக்கு முறைமைபோல வென்பாருமுளர். கலையினாலும் வித்தையினும் பிரகாசிக்கப்பட்ட கிரியாசத்தி ஞானசத்திகளையுடைய வாத்மாவுக்குப் போகத்திலாசையை யெழுப்புதல் காரணமாக வித்தையினின்று மாராகந்தோன்றிற்று. இனி யராகதத்துவம் வேண்டுமோ விடயந்தானே யாசையை யெழுப்பாதோவெனின் விடயங்களை யுள்ளபடி யறிந்திருக்கையினும் விரத்தர்க் கவற்றிலாசையற்றிருக்கையாலே விடய மாசையையெழுப்பமாட்டாது. ஆயிற் புத்திகுணமான வவ்வயிராக்கியந்தானெழுப்பாதோ வெனின் அது புத்தியின் வாதனையாதலா னாத்மாக்களை விடயங்களிலே செலுத்தமாட்டாது, பாண்டத்திற் பற்றிய பெருங்காயவாசனை யோர்காரியத்திற்குச் செயற்படாமையின். இன்னு மந்தவாதனைதா னோர்காலத்திலே தனித்தனியே யனந்தமாசையையெ

மூப்பும் அவற்றை யிவனொருகாலத்திலே யறியமாட்டானாத லா லாசையை யெழுப்புதற் கராகதத்துவம் வேண்டுமென்ப தாம். இனி நியதியில்லாதபோதொருவன் செய்தகன்மத்தை யொருவனனுபவித்தல்கூடும், அரசராணை யில்லாதபோதொ ருவன்செய்த போகத்தைப் பலவாறொருவ னனுபவிப்பனா தலின். ஆயிற் கன்மந்தானேநியதியாதொவெனி னதுபோக த்தைக் கொடுக்குமன்றி நியமிக்கமாட்டாது. சிவசத்தி நிய மியாதோவெனின் அஃதியாதானு மோர்தத்துவத்தை யிடை யிட்டன்றி யோர்காரியத்தை நடத்தாது, நடத்தின்மற்றொரு தத்துவமும் வேண்டாவாய் முடிகையாலே நியதி தத்துவ நியமிக்கவேண்டும். இவனுக்கு விருப்பமின்றி யிருக்கவுஞ் சூ லைமுதலிய பிணிகளைத் தப்பாதுபுசிப்பித்து நிறுத்துவது நிய தியெனக்கொள்க. இனி வால யவ்வன விருத்தங்களை விளைப் பித்து நிற்கையானும் பிறப்புக்களை யுண்டாக்குதலானு மாறி ருதுக்களினு மவ்வப் பலங்களைத் தப்பாது விளைவிக்கையா லுங் காலதத்துவம் வேண்டும். இதனாற் காலதத்துவ மில்லை யென்னு மூலகாயதனும் புத்தனு நிராகரிக்கப் பட்டார்கள். இந்தக்காலம் பூத பவிஷ்ய வர்த்தமானமென மூவகைப்படு தலாலே இதனை நித்தியமென்ற நையாயிகன் வைசேடிகன் மதங்களு நிராகரிக்கப்பட்டன. என்னை? நித்தியமாயுள்ள தொன்றாயிருக்கவேண்டு மாகையாலுஞ் சேடமாய்ப் பலவா யிற் கடாதிகளைப்போல வழியுமாதலானுமென்க. உறுவிக்கு மிறைசத்தியுடனாய்நின் றென்றதனாற் காலேசுரவாதியு நிரா கரிக்கப்பட்டான், சேடந் தானாகப் பிரவர்த்திக்க மாட்டா தாகையா லெனவறிக். பெற்றதனி லாசைதனைப் பெருகுவிக் குமென்பதற்குப் பெற்றதனில்நின்று பெறாததற் காசையை யுண்டாக்கு மென்பாருமுளர்.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட தத்துவ மைந்துங் காரியப் படுகிற சமூகந்தானே புருட தத்துவமென்றும் பிரகிருதி தத்துவங் காரியப்படு மவதரத்து மூன்றுகுணமாக நின்று காரியப்படு முறைமையு மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

ஐவகையா னுறுபயன்க ளுகரவருங்கால மதுபுருட தத்துவமென் றறைந்திடுவ ரறிந்தோர், மெய்வகைய கலாசுத்தி தனினிதற்குஞ்சுத்தி மேவியிடும் வகைதானும் விரும்பியநூல்விளம்புஞ், செய்வகையின் றொடர்ச்சியினுக் தோன்றுவிக்குங்குணத்தின் சேர்வுபுரி பிரகிருதி திரிகுணமாமவைதா, னிவ்வகையிற் சாத்துவித ராசததாமதமா யியம்புவர்க ளொன்றிரண்டு குணமேற்கவுடைத்தே. (உகூ)

புகன்றவற்றால்வரு புருடதத்துவமு
மகன்றமானு மதன்குணம்விரித்தது.

(இ-ள்.) ஐவகையா னுறுபயன்கணுகரவருங் கால மதுபுருட தத்துவமென் றறைந்திடுவ ரறிந்தோர் — ஆன்மாவானது காலம் நியதி கலை வித்தை யராக மிவையைந்துந் தனக்குடம்பாகக்கொண் டிந்திரியங்களுடனேகூடிச் சத்தாதிவிடயங்களைப் புசிக்கவருகிறவவதரத்தைப் புருடதத்துவமென்று சொல்லுவார்கள் பெரியோர்கள்

மெய்வகைய கலாசுத்தி தனினிதற்குஞ்சுத்தி மேவியிடும் வ — உண்மையாகச் சொல்லப்பட்ட மந்திர முதலானவைந்து நிவர்த்திமுதலான கலைகளைந்தினுமடைந்து சுத்திபண்ணுமிடத்திந்தப்புருட தத்துவத்தையுஞ் சுத்திபண்

னைதானும் விரும்பிய நூல்விளம்பும்

ணப்படுமென்று நம்மால் விரும்பப் பட்ட திவ்வியாகமங்கள் சொல்லும். அன்றியும், மெய்வகையகலாசுத்தி. எ-கு. மெய்யாகியசரீரத்திலைவகைப்பட்ட கலாசோதனை செய்யுமிடத்து மெனவறிக

செய்வகையின்றொடர்ச்சியிங்குத் தோன்றுவிக்குங் குணத்தின் சேர்வுபுரி பிரகிருதிதிரி குணமாம்

ஆன்மாக்கள் முன்ஜநநத்திற் செய்த கன்மத்துக்கேதுவாயுள்ள சுகதுக்கங்களையிப்பொழு துண்டாக்குங் குணங்களின்வடிவாய்ப்பொருந்துகிற பிரகிருதி மூன்றுவகையாகிய குணமாம்

அவைதான் இவ்வகையிற் சாத்துவிதராசத தாமதமாயியம்புவர்கள்

அந்தக்குணங்களின் பெயராவன? இந்த முறைமையிலே சாத்துவிதகுணமென்று மிராசதகுணமென்றுந் தாமதகுணமென்றும் பெரியோர்கள் சொல்லுவார்கள்

ஒன்றிரண்டு குணமேற்க வுடைத்தே.

இந்தக் குணங்கள் மூன்றுக்கு மொவ்வொன்றுக்கிவ்விரண்டுகுணமாக வாறுகுணமு மநாதியே பொருந்து மியல்பினையுடைத்து. எ-று.

ரு-ம். மெய்வகையகலாசுத்தி. எ-கு. மெய்யாகியசரீரத்தி லைவகைப்பட்டகலாசோதனைசெய்யுமிடத்து மென்னவுமாமென்று பொருட்கூறியதேதென்னில் ஆசாரியன் தீக்ஷை செய்யுமவதாரத்துக் கலாசோதனைசெய்யவேண்டுகையாலதற்கு நிவர்த்திமுதலான கலைகளைந்தினையுஞ் சீடன்சரீரத்திலேயைவகைப்படுத்திச் செய்யவேண்டுகையாலப்படிச்சொன்னதெனவறிக.

அதற்குவகை யெங்ஙனேயெனின் மூலாதாரந்தொடங்கி யுந்திக்குமே லெண்விரலளவு நிவர்த்திகலைக் கெல்லையெனவறிக. அதற்குமண்டலம் அக்கினிமண்டலம். ஆதாரம் மூலாதாரமுஞ் சுவாதிட்டானமும். அக்கரம் அகாரம். பிரகாசஞ் சொரிதழற்கொழுந்து. மலம் மாயாமலம். அவத்தை சாக்கிரம். மாத்திரை-ரு. மந்திரம் இருதயமுஞ் சத்தியோசாதமும். பதம் ஓம்நமோ முதல் மாதேவாந்தமாக-உஅ-ம். வன்னம் க்ஷகாரமொன்றும். புவனம் காலக்கினிமுதல் வீரபத்திரர் முடிவாகிய-ள அ-ம். தத்துவம் பிருதிவியொன்றும். தெய்வம் பிரமா. தொழில் சிருஷ்டி. என்றிங்ஙன நிவர்த்திகலைக்குக் கண்டுகொள்க.

இனி பிரதிஷ்டாகலைக்கு ஹிருதயந்தொடங்கி கண்டத்தளவு மெல்லையெனவறிக. அதற்கு மண்டலம் ஆதித்தமண்டலம். ஆதாரம் மணிபூரகம். அக்கரம் உகாரம். பிரகாசம் அக்கினியு மாதித்தனுங் கூடின பிரகாசம். மலம் கன்மமலம். அவத்தை சொப்பனம். மாத்திரை-உ. மந்திரம் சிரசும் வாமதேவமும். பதம் மஹேசுரமுதல் அருபுனிமுடிவாகிய-உக-ம். வன்னம் ஐ௦ முதல் ய௦ அந்தம்-உச-ம். புவனம் அமரேசர் முதல் சிகண்டிமுடிவாகிய-ருக-ம். தத்துவம் ப்ருதிவி நீங்கலாக ஆன்மதத்துவம்-உரு-ம். தெய்வம் விஷ்ணு. தொழில் திதி. என்றிங்ஙனம் பிரதிஷ்டா கலைக்குக் கண்டுகொள்க.

இனி வித்யாகலைக்குக் கண்டத்துக்குமேல் தாலுமூலத்தளவு மெல்லை நாலங்குலமெனவறிக. அதற்குமண்டலம் ஆதித்தமண்டலம். ஆதாரம் அநாகதம். அக்கரம் மகாரம். பிரகாசம் மின். மலம் மாயேயமலம். அவத்தை சுழுத்தி. மாத்திரை-க. மந்திரம் சிகையு மகோரமும். பதம்வியாபினிமுதல்

தியானகாரியமுடிவாகிய - உ0-ம். வன்னம் ஞ0 முதல் ஙு0 அந்தமாகிய - எ-ம். புவனம் தியானமுதல் வாமமுடிவாகிய- உஎ - ம். தத்துவம் வித்யாதத்துவம் - எ - ம். தெய்வம் உருத்திரன். தொழில்சங்காரம். என்றிங்ஙனம் வித்யாகலைக்குக் கண்டுகொள்க.

இனி சாந்திகலைக்குத் தாலுமூலத்துக்கு மேற் புருவமத்தியத்தளவு மெல்லை நாலங்குலமெனவறிக. இதற்கு மண்டலம் சோமமண்டலம். ஆதாரம் விசுத்தி. அக்கரம் விந்து. பிரகாசம் விளக்கொளி. மலம் திரோதாயி. அவத்தை துரியம். மாத்திரை - ϑ. மந்திரம் கவசமுந் தற்புருடமும். பதம் நித்திய நியோகினிமுதல வியோம வியாபினி முடிவாகிய. கக-ம். வன்னம் ம0 முதல் க0 அந்தமாக - ௲ - ம். புவனம் வெி முதல் சதாசிவமுடிவாகிய - கஅ-ம். தத்துவம் சுத்தவித்தையும் ஈசுரமும் சாதாக்கியமும். தெய்வம் மஹேசுரம். தொழில் திரோபாவம். என்றிங்ஙனஞ் சாந்திகலைக்குக் கண்டுகொள்க.

இனி சாந்தியாதீதகலைக்கு புருவமத்தியத்துக்குமேல் மூன்றங்குலமெல்லையெனவறிக. இதற்குமண்டலம் சோமமண்டலம். ஆதாரம் ஆக்கினை. அக்கரம் நாதம். பிரகாசம் வாளொளி. மலம் ஆணவமலம். அவத்தை துரியாதீதம். மாத்திரை - ஙு. மந்திரம் நேத்திரமும் அஸ்த்ரமும் ஈசானமும். பதம் பிரணவ மொன்றும். வன்னம் க0 முதல் - கசு அந்தம் கசு - ம். புவனம் நிவர்த்திமுதல் சமானாந்தமுடிவாகிய- கரு - ம். தத்துவம் சத்தியுஞ் சிவமும். தெய்வம் சதாசிவம். தொழில் அநுக்கிரகம். என்றிங்ஙனஞ் சாந்தியாதீதகலைக்குக் கண்டுகொள்க.

ஆக விங்ஙனங் கலைகளைந்துக்கும் கண்டுகொள்க.

இங்ஙனங் கூறிவந்த பொருள்களிற் கலாசோதனைக்கு மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள் என்று சொல்லியிருக்க விவைநீங்கலாக மற்றுள்ள ஆதாரமுதலான பொருள்கள் கூறவேண்டிய தேதென்னில் அஃதாவது கலாசோதனை செய்யுமிடத்துச் சரீரத்திலேவகைப்படுத்திச் செய்யவேண்டுகையா லந்தத் தத்துவங்களோடு நிற்கும்பொருள்களை வகுத்துக்கூறியதெனவறிக. இதற்கு. பி - ம். சித்தியாரில். "மந்திரங்கள்முதலைந்துங் கலையைந்தில்வியாத்தி." என்னும் விருத்தமுதலாகிய செய்யுள் மூன்றிலும் பிரசாதவகவலினும் தத்துவப்பிரகாசத்தில் "இவ்வகைய மனவிகற்ப மெட்டுமேவி லெழுவிலகாரமுஞ் சொரிதழல் மாத்திரையும் எ-ம். விருத்தமுதலாகிய செய்யுளொட்டினுங் கண்டுகொள்க.

இனி ஒன்றிரண்டு குணமேற்க வுடைத்தே. எ - கு. ஒவ்வொரு குணத்திதே யிவ்விரண்டுகுணமேற்க வுண்டாமென்று பொருட்கூறியதற்கு வகுப்பேதென்னில் சாத்துவிதத்திலிராசதமுஞ் சாத்துவிதத்திற்றுமதமும் இராசதத்திற் சாத்துவிதமு மிராசதத்திற்றுமதமும் தாமதத்தி லிராசதமுந் தாமதத்தில் சாத்துவிகமும் என்றிங்ஙனங் கண்டுகொள்க. இதற்கு. பி - ம். சித்தியாரில். "வருங்குணவடிவாய்மூலப் பிரகிருதிகலையிற்றோன்றித், தருங்குண மூன்றுமொன்றிற் றுன்மூன்றாய்மும்மூன்றாகி, யிருங்குணரூபமாகி யிசைந்திடுமெங்குமான்பாப், பெருங்குணவடிவாய்ப்போக சாதனம்பெத்தமாமே." எ - று. கண்டுகொள்க. குணத்தின் சேர்வுபுரிபிரகிருதி என்பதற்கு மிந்தப்பிராமணத்திலே கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது காலமு நியதியுங் கலையும் வித்தையு மராகமுங்கூடின சமூகந்தானே புருடதத்துவமென்றும் தீக்ஷையிலே கலாசோதனை செய்யுமிடத் திந்தப்புருட-

தத்துவத்துக்குஞ் சோதனை பண்ணவேண்டுமென்றும் குண சொரூபமாயுள்ள பிரகிருதிதானே மூன்றுகுணமாகக் காரியப்படுமென்னு முறைமையு மறிவித்தது. (௨௬)

---

வேறு—இது புருடதத்துவத்தின் சொரூபமும்பிரகிருதியின் சொரூபமுங் குணங்களின் வகையு முணர்த்திற்று.

ஐவகையாலுறுபயன்க ளுகரவருங்கால மதுபுருடதத்துவமென் றறைந்திடுவ ரறிந்தோர் - கலாதிகளைந்தினாலும் பெந்திக்கப்பட்டுச் சோத்திராதிகளாற் பொருந்தப்பட்ட விடயங்களைப் புசிக்கவருகிறவவதரத்திலே பும்சதத்துவமென் றொருமலமுண்டா யவ்வாத்மாப் புருடதத்துவமாமென் றறிந்தோர் சொல்வார்கள்,—மெய்வகைய கலாசுத்திதனினிதற்குஞ்சுத்தி மேவியிடும்வகைதானும் விரும்பியநூல் விளம்பும் - மெய்யின் கூறுபாடாகிய கலைகளைச் சோதிக்குமிடத்தி லிந்தப் புருடதத்துவத்திற்குஞ் சுத்திபொருந்து முறைமையினையும் விரும்பப்பட்ட இவ்வாகமங்கள்சொல்லும்,—செய்வகையின் றொடர்ச்சியினுக்குத் தோற்றுவிக்குங் குணத்தின் சேர்வுபுரி பிரகிருதி திரிகுணமாம் - ஆத்மாக்களுக்குப் போகத்தைச்செய்யுங் கருவிகளின்றொடர்ச்சியை யினுக்குத் தோற்றுவிப்பதான குணத்தின் கூட்டமாகக் கடவுளாற்செய்யப்படும்பிரகிருதியானது பிரிவின்கண் மூன்றுகுணமாம்,—அவைதாம் - அந்த மூன்றுகுணங்கடாம்,—சாத்துவித ராசத தாமதமாய் - சாத்துவிதகுணம் ராசதகுணம் தாமதகுணமாய்ப் பிரிக்கையாலே,—இவ்வகையா வியம்புவர்கள் - இந்தக்கூறுபாட்டாற் பெயர்சொல்லுவார்கள்,— ஒன்றிரண்டுகுண மேற்கையுடத்தே-அவற்று ளொவ்வொன்றுதானே யிவ்விரண்டுகுணங்களைப் பொருந்துகையுடைத்து எ - று.

ஆய் ஆகவெனத் திரிக்கப்பட்டது. ஏற்கவென்று பாடங் கொள்வாருமுளர். வித்தியாகலையைச் சோதிக்குங்கால் வித்தியாதத்துவங்களான கலாதிகளைந்தனையுஞ் சோதனை பண்ணினதே புருடதத்துவத்துக்குச் சுத்தியென்று நூல் சொல்லுதலிற் கலாதிசுத்திதனி னதற்குஞ் சுத்திவிளம்புமென்றார். முன்னூலிற் றொழிலறிவிச்சைமூன்றுமென்றுசொல்லவேண்டிப் பஞ்சகஞ்சுகஞ் சொல்லியதென்னை? மதங்காகமத்தின் மூன்றெனவும் பௌஷ்கரமுதலியவற்றி லைந்தெனவுஞ் சொல்லியவாகமபேதமெனவறிக. அதுவுஞ்சிருட்டிபேதமே. பிரகிருதி யரும்பின்மணம் விளங்கா தடங்கிநிற்றல்போல முக்குணங்களும் விளங்காதடங்கி நிற்கின்ற சொரூபமவ்வியத்தமா மென்ப தறிதற்குக் குணத்தின் சேர்வுபுரி பிரகிருதியென்றார். அதுதானே நாட்பூவின்மணம் விரிந்தாற்போலக் குணத்திரயமும் விளங்கிநிற்கு முருவமே குணமாதலிற் பிரகிருதி திரிகுணமாமென் றொற்றுமையாற் கூறினார். இந்தப்பிரகிருதிதான் மாயையென்று பெயர்பெற்று வித்தியாதத்துவங்களு ளேழாவதாகிநிற்கும். அதுதான் பஞ்சகஞ்சுகளுள புருடனுக்குப் போக்கியமான புத்தியாதிகளை ஜனிப்பிக்கு முபாதானமாகையா லதற்கு வேறுதொழி லில்லையெனக்கொள்க. தோற்றுவிக்கும் பிரகிருதியென வினையும். சேர்வாகவெனவிரிக்க. புத்திமுதலியன புருடனுக்குப் போக்கியமாதலிற் செய்வகையின் றொடற்சியென்பதற் கவ்வாறுரைத்தாம். முக்குணங்களும் புத்தியையு மகங்காரத்தையும் பற்றிநின்று விளங்கும் தனித்துநின்றுவிளங்கா வெனக்கொள்க. இனிப் புத்திக்குக் காரணமாயிருக்கின்ற குணதத்துவமே யவ்வியத்தமென்று சாங்கியர்சொல்வர், அஃதடாது. குணங்கள் பலவகையாலே யொன்றினது காரியமாயிருக்குமாதலி னவற்றிற்குக் காரணமொன்றாயிருக்கின்ற மூலப்பிரகிருதியே

யவ்வியத்தமாம். அவரிப் பிரகிருதியை நித்தியமென்பதூஉம டாது. என்னை ? இஃது தாத்மாக்கடோறும் வேறுபட்டுப் பலவாயிருக்கையாற் கடாதிகளைப்போல வனித்தமாதலின். ஆகவே யிதற்குக்காரண மாயை யெனவறிக.

---

இங்ஙனஞ்சொல்லப்பட்ட குணமூன்று மொன்பதுவகையாக் காரியப்படுகைக்கு வகுப்பெங்ஙனேயென்று வினவ வவை காரியப்படுமுறைமையு மேல் புத்திதத்துவங் காரியப்படுமுறைமையு மளிருச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

அலகில்குணம் பிரகாசம் லகுதைவியாபிருதி யடர்ச்சிமிகுங் கௌரவ மந்நியம்மிவையடவே, நிலவியிடு மும்மூன்று மூயிரொன்றிற்கலந்தே நிற்குமிவை நிறைபுலனின் பயனெவையுங்கவருங், குலவிவரு போகங்கொ ளிடமாமாறுக் குறைவிலொளி யாமலகில் புலனிடத்திரெருமை, பலவகையு முடையதாய்ப் பானருமாறப்புந்தி பஞ்சாசற் பாவகமும் பண்ணுவிக்குந்தானே. (௫0)

விளம்பியகுணநவ மாகவிரிந்தும்
வளந்திகழ்புத்திமையம் பதுவகைத்தென்றது.

| | |
|---|---|
| (இ-ள்.) அலகில்குணம் | எண்ணிறந்திருக்கப்பட்ட விந்தக்குணத்தின் விரிவைச் சொல்லுமிடத்து முன்சொல்லப்பட்ட பிரதானமான குணமூன்று மொழிந்து ஏறினகுண மாறுக்கும் வகையாவன? |
| பிரகாசம் | பிரகாசமாயிருக்கும். அஃதாவது சாத்துவிதத்திலே யிராசதங்கூடினால் அந்தச்சாத்துவிதத்தைப் பிரகாசித்துக்கொண்டுநிற்கு மென்றதெனவறிக |

**லகுதை**

நொய்தாயிருக்கும். அஃதாவது சாத்துவிதத்திலே தாமதங்கூடினால் நல்லொழுங்குகளை மறைத்துக்கொண்டந்தப்பிரகாசத்தை நொய்தாக்கிக்கொண்டு நிற்குமென்றதெனவறிக

**வியாபிருதி**

தெரியாமல் மறைத்துநிற்கும். அஃதாவது இராசதத்திலே தாமதங்கூடினால் நல்லொழுங்குகளை மறைத்துக்கொண்டு நிற்குமென்றதெனவறிக

**அடர்ச்சியிகும்**

செறிவித்துநிற்கும். அஃதாவது இராசதத்திலே சாத்துவிதங்கூடினால் நன்மைகளைச் செறிவித்துநிற்கு மென்றதெனவறிக

**கௌரவம்**

பெருமையை யுண்டாக்கும். அஃதாவதுதாமதத்திலே யிராசதங்கூடினால் கர்வத்திலே பெருமையைப் பண்ணி நிற்குமென்றதெனவறிக

**அந்நியம்**

நல்லநியமமல்லாதனதைச் செய்வித்துநிற்கும். அஃதாவது தாமதத்திலே சாத்துவிதங்கூடினால் அந்நிய நியமங்களைச் செய்வித்துக்கொண்டு நிற்குமென்றதெனவறிக

**இவை யடைவே நிலவியிடும்**

இந்தக்குணங்களிங்ஙனஞ்சொன்ன முறைமையிலே பொருந்திநிற்கும். இவை வெவ்வேறாய்நிற்குமோ கூடிநிற்குமோ வென்னில்

**மும்மூன்று முயிரொன்றிற் கலந்தேநிற்கும்**

இவை யொன்பதுகுணமு மொரு ஆன்மாவிலே கூடிநிற்கும். ஒன்பதுகுணமாவது சாத்துவிதத்திற் சாத்துவிதமென்றும் சாத்துவிதத்தி விராசதமென்றும் சாத்துவிதத்திற் றாமதமென்றும், இராசதத்தி லிராசதமென்றும் இராசதத்திற் சாத்துவிதமென்றும் இராசதத்

திற் றாமதமென்றும், தாமதத்திற் றாமதமென்றும் தாமதத்திற் சாத்துவிதமென்றும் தாமதத்தி லிராசதமென்றும் இங்ஙன மொன்பதுவகைப்படும். அதற்குவகையேதென்னில் சாத்துவிதத்திற் சாத்துவிதமாவது துறவும் சாந்தமும் மோக்ஷத்திலே மிகுந்தஊக்கமு மாகையெனவறிக. சாத்துவிதத்தி லிராசதமாவது துறவுஞ் சாந்தமு மிடையேநழுவ முத்தியில்முயலுகையுமா மெனவறிக. சாத்துவிதத்திற் றாமதமாவது துறவும் சாந்தமு மோக்ஷத்திலே முயலுகையுமன்றி விடயவிருப்பமு முண்டாகையெனவறிக. இனி யிராசதத்தி லிராசதமாவது தன்மத்தி லாசையோடுங்கூடி யிடைவிடாமற் செய்கையெனவறிக. இராசதத்திற் சாத்துவிதமாவது யாவர்க்குங் கிருபையோடே யறங்களைச்செய்கை யெனவறிக. இராசதத்திற் றாமதமாவது இவையிற்றினையிகழ்தலும் பாவத் தொழில்களைச் செய்தலு மெனவறிக. இனி தாமதத்திற் றாமதமாவது மயக்கமு மிகழ்ச்சியும் பாவமு மாசையும் பயமு முறக்கமு மெனவறிக. தாமதத்தி லிராசதமாவது தகாதனசெய்தலு முண்ணாதனவுண்ணலுங் களிப்பும் வெகுளியுமெனவறிக. தாமதத்திற் சாத்துவிதமாவது வேதாகமங்களில் விருத்தமாயிருக்கிற கிருத்தியமான சிறுதேவதைகளைப் பிரதிட்டித்தி பண்ணுகையெனவறிக. இப்படி யெண்ணிறந்தகுணங்களை யுடைத்தாகையாலே யலகில் குணமென்று சொல்லப்பட்டதெனவறிக. இங்ஙனங் குணபேதங்களாகக் கூடிநின்றுசெய்யுமிடத்து

| | |
|---|---|
| இவை நிறைபு ணின் பயனெ வையுங் கவரும் | இந்தக்குணங்களொன்பது நிறைந்துநிற்கிற விந்திரியங்களின் பயனான விடயங்களைத் தன்னிடத்திலே கவர்ந்துகொள்ளும் |
| குலவி வரு போகங்கொளிட மா மாருக்குறை விலொளியாம் | சர்வராலுங் கொண்டாடப்பட்டு வருகிற புசிப்புகளை யான்மாக்கொள்ளுகிறவிடமுமா யுடல்முழுதும்விட்டு நீங்காதகுறைவற்ற பிரகாசமுமாய் நிற்கும். இவ்வளவும் வித்தியாத |

த்துவத்தின் கலைதொடங்கிப் பிருகிருதி மாயையாகியகுணங்கள் காரியப்படுகையை யருளிச்செய்து மேலான்மதத்துவத்திற் புத்திதத்துவங் காரியப்படுகையை யருளிச்செய்கின்றது

அலகில் புலனிடத்தி னொருமை பலவகையுமுடையதாய்ப் பரனருளாற் புந்தி பஞ்சாசற்பாவகமும் பண்ணுவிக்குந் தானே.

எண்ணிறந்த விருத்தியாகியவிடயங்களை யிந்திரியங்களைக்கொண் டான்மாக் கொள்ளுமிடத்து நிச்சயித்தலைப் பலவகையானு முண்டாவதாய்ச் சிவனுடைய வநுக்கிரகத்தினாலே புத்தியானதைம்பதைம்பதுபேதங்களை யொவ்வொரு குணங்க டோறுஞ் செய்து நிற்கும். எ-று.

ரு-ம். இந்தப்புத்தியின் விருத்தி யெங்ஙனே யென்னில் அவ்வியத்தமாவது மூன்றுகுணங்களுந் தோன்றாமல் வடவித்துப் போலேயிருந்த வவதரமெனவறிக. குணதத்துவமாவது வடவித்திலேநின்று மங்குரந் தோன்றினாற்போல வவ்வியத்தத்திலே மூன்றாய்த்தோன்றிச் சமமா யலைவறநின்றவவதரமெனவறிக. வேறுபட்ட குணங்களையுடைத்தா யேற்றக்குறைச்சல் புத்திமுதலான தத்துவங்களெனவறிக. புத்தி தத்துவமாவது இராசதமுந் தாமதமுங்குறைந்து சாத்துவிதகுணமேலிட்ட வவதரமெனவறிக. இந்தப்புத்தியினது காரியமாவது தன்ம ஞான வைராக்கிய வைஸ்வரியமென்னும் அதன்ம அஞ்ஞான அவைராக்கிய அவைஸ்வரியமென்று மெட்டுவகையாம். இதில் தன்மத்திலேநின்றும் பத்துபாவகந்தோன்றும். ஞானத்திலேநின்று நூற்றெண்பதுபாவகந் தோன்றும். வைராக்கியத்திலே நின்று மறுபத்துநாலுபாவகந் தோன்றும். ஐஸ்வரியத்திலே நின்று நூற்றெழுபத்தாறு பாவகந்தோன்றும். எ-ம். மற்றவதன்மத்திலேநின்று முப்பத்தெட்டுபாவகங்

தோன்றும். அஞ்ஞானத்திலேநின்று முப்பத்தெட்டு பாவகந்தோன்றும். அவைராக்கியத்திலேநின்று நூறுபாவகந் தோன்றும். அநைஸ்வரியத்திலேநின்று மெட்டுபாவகந்தோன்றும். ஆகபுத்தியினுடையகாரிய மறுநூற்றிருபத்து நாலெனவறிக. அப்படியிருக்க இந்நூலிலே பஞ்சாசற்பாவகமென்று நானூற்றைம்பதாகச் சொல்லுவா னேனென்னி லப்படியுஞ் சிலவாகமங்களிலே சொல்லுகையாலெனவறிக. அன்றியும் பஞ்சாசற்பாவகமுமென்ற வும்மைகொண்டே மற்றதுமுண்டெனவறிக.

இனி புத்திதத்துவத்தை, அலகில்புலனிடத்திலொருமை பலவகையுமுடையதாய் என்றதேதென்னில் அது கன்மாகன்மங்களுமுடையதாய் சத்தாதிவிடயங்களிலே நிச்சயித்தலுமுடையதாயின்பதுன்பங்களிலே மோகத்தையு முடையதாய் அறிவுதொழில்களுமுடையதாய் நிற்கையினாலே யப்படிச் சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "சித்தமாமவ்வியத்தஞ் சிந்தனையதுவுஞ்செய்யும், புத்தியவ்வியத்திற்றோன்றிப் புண்ணியபாவஞ்சார்ந்து, வத்துநிச்சயமும்பண்ணி வருஞ்சுகதுக்கமோகப், பித்தினின் மயங்கிஞானக் கிரியையும்பேணிநிற்கும்." எ-து. கண்டுகொள்க.

இனி புந்தி பஞ்சாசற்பாவகமும் பண்ணுவிக்கும். எ-கு. புத்திதத்துவமானது குணங்களோடுங்கூடிச் சம்பந்தமா யிருக்கையினாலே யொருகுணத்துக் கைம்பதுவகையாக வொன்பதுகுணத்துக்கு நானூற்றைம்பதுவகையாகப் பேதித்ததெனவறிக. என்றிங்ஙனம் புத்திகுணத்தோடு சம்பந்தமாய்நிற்கு மென்பதற்கு. பி-ம். தத்துவவிளக்கத்தில். "எண்ணியபுத்தியில் முக்குணஞ் சேரியல் பாற்கரந்து" எ-து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது குணதத்துவ மொன்பதுவகையாகக் காரியப்படுமுறைமையும் புத்திதத்துவ மொன்பதுகுணத்துக்கு

மொவ்வொருகுணத்துக் கைம்பதைம்பதாக நானூற்றைம்பது பா வகமாகக் காரியப்படுமுறைமையு மறிவித்தது. (௩௦)

---

வேறு—இது மேலொன்றிரண்டுகுண மேற்கை யுடைத்தெ ன்றவை யிவையெனக் குணதத்துவத்தின்காரியமும் புத்திதத்து வத்தின்காரியமு முணர்த்திற்று.

அலகில்குணம் - குணமெண்ணிறந்தன,—அடைவே - முன் னர்ச்சாத்துவித ராசத தாமதமென்றமுறையே,— பிரகாசம்லகு தை - சாத்துவிதகுணத்திலே பிரகாசமானஞானமும் லகுதையா கிய மனமொழிமெய்களிற் பிரவித்தியின் மெத்தனவும்,—வியாபி ருதியடர்ச்சி - இராசதத்திலே வியாபிருதியாகிய முப்பொறிகளி ன்மிகுத்த வியாபாரமு மடர்ச்சியாகிய குரூரமான வுளைசிந்தனை செயல்களும்,—மிகுங்கௌரவமன்னியம் - தாமதத்திலே மிக்க கௌரவமாகிய மமதையும் அந்நியமாகிய தகாதகாரியத்தைச் செ ய்யவேண்டுமென்னுஞ் சங்கற்பமும்,—இவை நிலவியிடும் - என விவை யொவ்வொன்றிற் கிவ்விரண்டாக விளங்கியிடும்,—மும் மூன்று மூவிரொன்றிற் கலந்தேநிற்கும் - இவை யொன்பதுகுண மு மொவ்வோருயிர்தோறுங் கூடிநிற்கும்,—இவை - இம்மூன்று குணங்களுள்,—நிறைபுலனின் பயனெவையுங் கவரும் - எதிர்நி ரனிரையாகத் தாமதநிறைந்த விந்திரியங்களின் விடயங்க ளெல் லாவற்றையுங் கைக்கொண்டு மடங்கும்,—குலவிவரு போகங்க ளிடமாம் - இராசதகுணங் கொண்டாடப்பட்டுவரும் போகங்க ளை யாத்மாக்கொள்கைக் கிடமான வியாபாரத்தை யுடைத்தாம்,- மாறுக் குறைவி லொளியாம் - சாத்துவிதம் போகம் புசிக்கைக் கொருப்படுவிக்க வொழியாத மிக்க பிரகாசமாயிருக்கும்,—புத் தி - புத்தியானது,—அலகில்புலனிடத்தி லொருமை - எண்ணிற ந்தவிடயங்களைப் புசிக்கிறவிடத்தில் நிச்சயம்பண்ணுகின்ற வெ

ருமைப்பாடு,—பலவகையு முடையதாய் - அனேக விதங்களையுமுடைத்தாய்,—அரனருளால் - சிவனனுக்கிரகத்தாலே,—பஞ்சாசற்பாவகமும் பண்ணுவிக்குந்தானே - ஐம்பது பாவகத்தையும், முற்றும்மையொரோவழி யெச்சமுமாதலி லறுநூற்றிருபத்திரண்டு பாவகத்தையும் பண்ணும். எ-று.

தான்அசை. அலகிலென்பது இரவினிளிவந்ததி லென்றாற்போனின்றது. ஒருமை பலவகையும் என்பதற்குப் புசிக்குமிடத்து ஒன்றுபலவிதமா யென்றுரைப்பாரும் பிரகாசம்லகுதை யென்பவற்றை சாத்துவிதத்தில் ராசதஞ் சாத்துவிதத்திற் றமதமென்றுரைத் தேனையவற்றையு மிவ்வா றுணைப்பாருமுளர். சாத்துவிதம் பதினைந்துவிதமாம். அவை சாதிநெறிநிற்றல், பெரியோரைப் பேணல், கற்றறிவுடைமை, இனியவைகூறல், தற்புகழாமை, உள்ளதே வருமென மகிழ்ந்திருத்தல், நடுநிலைமை, சுத்தநியமம், பொறை, கடைப்பிடி, பிறர்க்கிதகாரியஞ்செய்தல், இந்திரலோகாதிகளில்வாஞ்சை, பிறர் தன்னைப்புகழக்காற் றன்றன்னையிகழ்தல், அடக்கமுடைமை, தன்பாலிரந்தார்க் கிரங்குதல் எனவறிக. இராசதமொன்பது விதமாம். அவை சூரனுகை, குரூரமுடைமை, ஊக்கமுடைமை, மானமுடைமை, வயிராக்கியம், பலம், வன்கண்மை, போகியாதல், இடம்பத்தனமான கூடாவொழுக்கம், எனவறிக. தாமதகுணமொன்பதுவிதம். அவை, அழத்தகாதனவற்றிற்கழுகை, கல்வியிலாதாவருகை, இழந்தாரைச் சேர்ந்துவாழ்தல், கோளுரை, மடமை, பேருறக்கம், நன்மைசெய்தற் கிளைக்கை, குலங்குண மீகை யிரக்கங்களா லெனக் கியாருமிணையில்லையென்கை, திருடுதல், எனவாம். ஆகமுப்பத்துமூன்றெனவறிக. முக்குணங்களுமொன்று மேலிட்டு மற்றையிரண்டு மடங்கிச் சிறிதுவிளங்கும். ஒருவனுக்கு முக்குணங்களு மொத்துவிளங்குத லில்லையெனக்கொள்க. சாத்துவிக விராசத தாமதங்களா லடைவே வீடுஞ் சுவர்க்கமு நரகமும்பெறுவர். சாத்துவிகத்திற் சாத்துவிக

முதலிய வொன்பதுபேதமு மந்தமுப்பத்துமூன்று ளடங்கும். விரிக்குறைபெருகும். இங்ஙனம்பெருகுதலி னலகில்குணமென்றார். இனிச்சித்தம்புத்தியின்விகற்ப மெப்படியெனின் அவ்வியத்தமாவதாதலின்வித்துப்போல முக்குணங்களு மடங்கிநிற்கும். அவைதாங் குணதத்துவமாவது. வித்தினின்று மங்குரந்தோன்றினாற்போல வவ்வியத்திலேநின்று மூன்றாய்த்தோன்றிச் சமமாயலைவறநின்றவவதரம், அதுவேசித்தம். இவற்றி னேற்றக்குறைச்சலே புத்திதத்துவம், அது இராசதமுந் தாமதமுங்குறைந்து சாத்துவிதமேலிட்டவவதரம். இஃது தருத்திமிகுமென்றதிலு முறைத்தாம். புத்தியின்காரியந் தன்மஞானவைராக்கிய வைஸ்வரியநான்கும், அதன்மாதி நான்கு மெட்டாம். இவற்றுடன்தன்மத்தினின்றும் பத்து பாவகமும் ஞானத்திநின்று நூற்றெண்பது பாவகமும் வைராக்கியத்திநின்று மறுபத்துநான்கு பாவகமும் ஐஸ்வரியத்தினின்றுசத்தியென்று பெயரையுடைய நூற்றெழுபத்தாறு பாவகமும் இனியதன்மத்திற் பத்தும் அஞ்ஞானத்தி லறுபத்தாறும் அவைராக்கியத்தினாறும் அனைஸ்வரியத்தி லெட்டும் ஆகப் புத்தியின் பாவகமறு நூற்றொருபத்துநான்கு வகையிற்காண்க. விரிவை யுரைப்பிற் பெருகும்.

---

மேல்ஆங்காரமு மனமுஞ் சித்தமுங் காரியப்படுமுறைமையை யருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

ஆனதனு வதனிலுறு மனிலனையுமியக்கி யாங்
கார நிங்காத வகந்தைக்குவித்தா, யானலது பிறரொ
ருவ ரெனையொப்பார்புவியி லில்லையெனு மியல்பினா
தா மிந்திரியம்புலன்க, டானுகரு மளவிலதின் முந்தி
யுறுமிச்சை தானுருவாய்ச் சங்கற்ப சதாகதியுந்தந்து,
மானதமா னதுநிற்குஞ் சிந்தைநிலைவையம் வந்துதரு
மனமொழிய வகுப்புறுதே. (௩௧)

அகந்தைக்கிடமா மாங்காரத்துட
னிகழ்ந்தெழுமனஞ்சித்த மிவ்வகைத்தென்றது.

(இ-ள்.) ஆனதனு வதனிலுறு மனிலனையு மியக்கி யாங்கார நீங்காதவகந்தைக்கு வித்தா யானலதுபிறரொருவரை னையொப்பார் புவியினில்லையெனு மியல்பினதாம்

ஆங்காரதத்துவமான தான்மாக்கள் கன்மத்துக்கிடாகவுண்டானசரீரத்திலே பொருந்திப்போதும் வாயுவையு மியங்கும்படி நிறுத்தி நீங்காதமமதைக்கு மூலமுமாய் நானேயொழியப் பிறரொனக்கொப்பார் பூமியி லில்லையெனு மியல்பினையுடையநாய்நிற்கும். இனி மனது காரியப்படும்வகையாவது

இந்திரியம் புலன்க டானுகருமனவிலதின் முந்தியுறுமிச்சை தானுருவாய்ச் சங்கற்ப சதாகதியுந்தந்து மானதமானது நிற்கும்

இந்திரியங்களானது விடயமாகிய புலன்களைப் புசிக்குமிடத் ததற்குமுந்திச்செல்லுமதாயிருக்கிற விச்சையே தனக்குவடிவாய்த் தனக்குவேண்டினதிலே சதாகாலமுஞ் சங்கற்பித்துக்கொண்டுநிற்கு மனதானது. இனிச் சித்தங்காரியப்படும் வகையாவது

சிந்தைநினைவு

சித்தமானது நினைவுமாத்திரமாய் நிற்கும். இங்ஙனமிவை காரியப்படுமிடத்து

ஐயம்வந்ததரு மனமொழிய வகுப்புறுதே.

யாதாமொன்றின்மேலே செல்லுமிடத்து ஆமோவல்லவோவென் றையப்பாட்டையுமுடைய மனதாலொழிய வவை காரியப்படமாட்டாது. எ-று.

இதனாற்சொல்லியது யானெனதென்னு மமதையையுடைய வாங்காரமு மாமோவல்லவோவென்கிற சந்தேகத்தினையுடைய ம

னது நினைவுமாத்திரமாயிருக்கிற சித்தமுங் காரியப்படுமுறைமையை யறிவித்தது. (௫௧)

---

வேறு—இது ஆங்காரமு மனமுமான விரண்டின்காரியமுஞ் சித்தத்தின் காரியமு மதன்சொரூபமு முணர்த்திற்று.

ஆங்காரம் - ஆங்காரதத்துவமானது,—ஆனதனுவதனி லுறு மனிலனையுமியக்கி - வினைக்கீடாக வுடம்பிலேநிற்கும் பிராணவாயுவையுஞ்செலுத்தி,—நீங்காதவகந்தைக்குவித்தாய் - நீங்காதமமதைக்குமூலமாய்,—எனையொப்பார் யானலதுபிறர்புவியி லொருவரில்லையெனு மியல்பினதாய் - என்னையொப்பவர் யானொழிந்து பிறர்புவியி லொருவருமில்லையெனு மியல்பினை யுடையதாய்,—இந்திரியம் புலன்கடாநுகருமளவில் - இந்திரியங்களும் விடயங்களும் புசிக்கவும் புசிக்கப்பட்டவுமாகின்றவளவிலே,—அதின் முந்தியுறுமிச்சை தானுருவாய் - அவ்விடயத்திலே முற்பட்டுப் பொருந்துகின்ற விச்சை தானே வடிவாகநிற்க,—மானதமானது சங்கற்பசதாகதியுந் தந்துநிற்கும்-மனத்தத்துவமானது ஒன்றைச் சங்கற்பிக்கையு மனவரதசலனத்துவமுந் தந்துநிற்கும்,—சித்த நினைவு-சித்தமானது நினைவுமாத்திரமே,—ஐயம்வந்துதரு மனமொழியவகுப்பொணாதே - சந்தேகத்தை வந்துண்டாக்குகின்ற மனத்தையொழிய வேறாகவகுத்துக் கூறவொண்ணாது. எ-று.

இவ்விரண்டி னொற்றுமை கருதி மனம் புத்தியாங்காரமே யெனமூன்றே யந்தக்கரணமென்று பிறவாசிரியர் நூலிற்கு மிதற்கு மாறுபாடின்மைகாண்க. எனையொப்பார் யானென விடும்பாலுமயங்கிய தமைதியாற்கொள்க. அலதென்பது அன்றியென்னும் வினையெச்ச வாய்பாடு. விடயமொவ்வொன்று மனுபவித்தலின திலென்றார். நுகருமென்பது செய்வதற்குஞ் செயப்படுபொருட்கு மொப்பநின்று இந்திரியம் புலன்களென்னு மெழுவாய்கட்கு முடி-

பாயிற்று. இனித்தாமென்பதை இந்திரியங்களி லேற்றிப் புலன்க
ளையெனவிரிக்கினுமாம். உருவாகவென்பது கடைகுறைபப்பட்
டுக் காரணகாரியங்களன்றி நிற்குமென்னும் பிறவினைகொண்டது.
சதாகதியுமென் றோதுவாருமுளர். சங்கற்பமுஞ் சலமுந் தன்னொ
டுசேர்ந்த வுபாதியா லாத்மாவுக் குண்டாக்கலிற் றந்துநிற்குமெ
ன்றார். இனி ஆங்காரமானது ஜீவனஞ் சங்கற்பங் கர்வமென
மூன்றும், அவற்றுள்ஜீவனம் பிராணதிவாயுவினாலே யன்னபானா
திகளைக்கிரகிக்கை. சங்கற்பமாவது எவற்றினும் பிரவர்த்திப்பிக்
கை. கர்வமாவது யானல்லதில்லையென்கை. புத்தியுமாங்காரமு
நிச்சயிக்கும் வியாபாரத்தா லொக்குமாதலிற் புத்தியொன்று ம
மைபாதோவெனிற் புத்தியானது கிரகிக்கப்படும் விடயங்களை
வெகுமுகமாக வறுதியிடுவதாயிருக்கும். ஆங்காரம் புத்தியாலே
புறம்பேநிச்சயித்துக் கிரகிக்கப்பட்ட விடயங்களை யுள்ளே யாத்
மாவினிடத்திலே கூடி நான்செய்தேனென்று நிச்சயம்பண்ணி நி
ற்கும். இனிமனமு மிருவகைப்படும். ஒன்றுள்ளே சங்கற்பவிகற்
பங்களைப்பண்ணும். ஒன்று புறம்பேநின்று இந்திரியங்கட்கு விர
கைக்கொடுக்கும். இந்தச்சங்கற்ப மொருகாரியத்திலே யொருமை
ப்படாடு. இந்திரியங்களும் விடயங்களு மாத்மாவுங் கூடியிருப்பி
னு மனம் வேறொன்றிலே புரிந்தபோ திந்திரியங்கள் சேஷ்டிக்க
மாட்டா. இதுவே சேஷ்டிப்பித்தல் வேண்டுமெனவறிக.

---

மேல்சோத்திராதியுஞ் சத்தாதியும் வசனாதியும் வாக்காதியு
மாகத் தத்துவமிருபதுங் காரியப்படுமுறைமையை யருளிச்செய்
வா னெடுத்துக்கொண்டருளியது.

சொன்னமுறை செவிதுவக்கு நோக்குநாக்குந்
துண்டமிவை யைந்திற்குந் தொகுவிடயமாக, மன்னி
யசத் தப்பரிச ரூபரசகந்த மருவியிடு மிவையடைவே
வாக்குப்பாதம், பின்னர்வரு பாணிமிகு பாயுவினோ

டுபத்தம் பேசலுறு மைந்திற்கும் பிறங்கொலிகொள் வசன, முன்னரிய கமனதான விசர்க்காநந்த முற்ற தொழில் பெற்றிடுவ துண்மையாமே. (௩உ)

ஞானமுங் கன்மமு நண்ணுமிந்திரியமு
மூனமில்விடயமுந் தொழிலுமுறைத்தது.

(இ-ள்.) சொன்னமுறைசெவி அவக்கு நோக்கு நாக்குத் துண்டமிவை யைந்திற்குந் தொகுவிடயமாக — முன்சொல்லிவந்த முறைமையிலே யுட்கரணங்களன்றியே புறக்கரணமாயுள்ள சோத்திரம் தொக்கு சக்ஷு சிங்ஙுவை ஆக்கிராணமென்னு மிவையைந்துக்குங் கூடத்தக்க விடயமாக

மன்னிய சத்தப்பரிசரூபரசகந்தமருவியிடும் — நிலைபெற்ற சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்த மிவையைந்தும் பொருந்தியிடும்

இவையன்றே வாக்குப்பாதம் பின்னர் வருபாணி மிகுபாயுவிறே டுபத்தம் பேசலுறு மைந்திற்கும் — வாக்கும் பாதமும் பின்வரப்பட்டபாணியும் மிகுதலையுடையபாயுவும் இதனோ டுபத்தமுமென்று சொல்லப்பட்ட கன்மேந்திரியமைந்திற்கும்

பிறங்கொலிகொள்வசன முன்னரிய கமனதான விசர்க்காநந்த முற்ற தொழில் — விளங்கப்பட்ட வோசையையுடைய வசனமும் நினைத்தற்கரிய கமனமும் தானமும் விசர்க்கமும் ஆநந்தமுமென்று பொருந்தப்பட்டவைந்துதொழிலு மடைவே யுண்டாகிறது முறைமையாம். எ-று.

பெற்றிடுவ தண்
மையாமே.

நு-ம். வாக்கென்றது வாயெனவறிக.

இவையடைவே என்றதற்கு வகையாவது சோத்திரத்தின் வழித்து வாக்கு. தொக்குவின்வழித்துப்பாதம். சக்ஷுவின்வழித்துப் பாணி. சிங்நுவையின் வழித்துப் பாயுரு. ஆக்ராணத்தின்வழித்து உபத்தம். என்னு மிவையிற்றைக் காரியப்படுத்துமவதாரத்திலுங் கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது புறக்கரணமாயுள்ள ஞானேந்திரியமாகிய சோத்திராதியு மதன்விடயமாகிய சத்தாதியுங் கன்மேந்திரியமாகிடவாக்காதியு மதன்தொழிலாகிய வசனாதியும் ஆகவிருபதுங் காரியப்படு முறைமையை யறிவித்தது. (௩௨)

---

வேறு—இது இந்திரியம்பத்தின் காரியமு முணர்த்திற்று.

சொன்னமுறை - புத்தியிந்திரியமென்று மன்னியகன்மேந்திரியமென்று முன்னர் சொன்னவாறே,—செவி துவக்கு நோக்கு நாக்குத் துண்டமிவை யைந்திற்கும் - செவிமுத லாக்கிராணமீறான விந்திரியங்களைந்துக்கும்,—தொகுவிடயமாகமன்னிய - கூடுகின்ற விடயங்களாக நிலைபெற்ற,—சத்தப்பரிச ரூபரசகந்தமிவையடைவே மருவியிடும் - சத்தமுதற்கந்தமீறாகிய விவையடைவேபொருந்தும்,—வாக்குப்பாதம் பின்னர்வருபாணி மிகுபாயுவிலேுபத்தம் பேசலுறு மைந்திற்கும்-வாக்குப்பாதமென்னுங்காற் பின்வருகின்றபாணி மிக்கபாயுவுட னுபத்தமாகச் சொல்லுகின்ற வைந்திற்கும்,—பிறங்கொலிகொள்வசன முன்னாரிய கமனதான விசர்க்கானந்த முற்றதொழில்-பெரியவோசை பொருந்திய வசனமுதலானந்தமீறாகவுற்றவிடயமாகிய,—இவையடைவே-இவையைந்து மடைவிலே,—பெற்றிடுவ தண்மையாமே - பெறுகின்றதியல்பாம். எ-று.

இனிச்சாருவாகனு நியாயவைசேடிகனுஞ் சோத்திராதியைந் துமொவ்வொருவிடயங்களைக் கிரகிக்கையினாலே யவ்விடயங்கள் பூதங்களின் குணமாகையினாலே பூதங்களேயென்று சத்தாதிகளைக்கிரகிக்கு மத்தனை ஞானேந்திரியம் வேண்டாமென்று சொல்வன். பூதங்களே யிந்திரியங்களாயிற் றத்தங்குணங்களொன்றையுமே யறியவேண்டும். அப்படியின்றி யிந்தவிந்திரியங்க ளன்னியபூதங்களையு மவற்றின் குணங்களையும் போக்குவரவான கன்மங்களையுமா யுண்டென்ப தும் போ லுஞ் சாதிகளையுங் குணகுணிகளுடைய நிமித்தசம்பந்தங்களையு மறிகையாலே ஞானேந்திரியம் பூதகாரியமல்ல. இனி வசனாதிகிரியைகளைச் செய்கையாலே கன்மேந்திரியமுமுண்டு. இஃதின்றே லொருதொழிலுங் கூடாது. ஆனாற்றொழிலுக்குக் கன்மேந்திரியமே துவேற் புருவமுதலிய வுறுப்புக்கள் துடிக்கின்றது தொழிலன்றோ, யத்தொழிற்கு விந்திரியமுண்டாகில் வேண்டும். அப்போதிந்திரியம் பலவென்னினொன்று லோகாயதன்சொல்லில் துவக்கிந்திரியஞ் சர்வாங்கமும் வியாபித்துநிற்குமாப்போல வெல்லாவிந்திரியங்களு முடலெங்கும் வியாபித்துநிற்கும். அன்றிப் பாணிக்கு தானமே தொழிலாயிருக்க முடவனொருவன் கையானடக்கும். காலிரண்டும் பாதவிந்திரியமின்றிக் கமனக்கிரியை நிகழாது. ஆதலாலே புருவமுதலிய துடிக்குந்தொழில்களெல்லாம் பாணிமுதலியவற்றின் வியாபாரமென்றறிக. இவை தொழிலுடன் கூடியிருக்கையா லிராசதகுணஞ்சேர்ந்தது. இவை யடைவேயென்ப திட்டத்து மேற்றப்பட்டது.

---

மேற்பூதங்களைந்துங் காரியப்படுமுறைமையை யருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

முந்தியவைம் பூதங்கள் வானாதியாக முயங்கியநற் செவிநாசி கண்ணுமெய்ம்முறையா, லிந்தவயி னின்றுவரு மைம்புலனுமுயிர்தா மெய்தும்வகை தம்மு

ருவி னிலங்கியிடும்புறத்தும், வந்தடைய விடங்கொடுக்கு நிரந்தரமாய்வாலம் வாயுமிகச் சுலித்தெவையுந் திரட்டுந்திவெம்மை, தந்தவைசுட் டொன்றுவிக்கு நீர்குளிர்ந்துபதமே தருமுரத்துத் தரிக்குமிரு தாணிதானே. (கக)

ஒன்றுமைம்பூதங்க ளுள்ளும்புறம்பு
நின்றுகாரியப்படு நெறியிதுவென்றது

(இ-ள்.) முந்தியவைம்பூதங்கள் வானுதியாக — தத்துவங்களெல்லாவற்றினு முந்தத்தரிசநப்பட்டுவருகிற ஆகாசமாதியான பூதங்களைந்தினும்

முயங்கிய நற்செவி நாசி கண்ணை — பொருந்தப்பட்ட சோத்திரமுத லாக்கிராணமீறாகவுள்ள விந்திரியங்களைந்துமிடமாக

மெய்ம் முறையா லிந்தவயி னின்றுவரு மைம்புலனும் — உண்மையாக வடைவே யிந்த விடயங்களிலே நின்றுகூடாநிற்கும் விடயங்களைந்தும். அன்றியும் இந்தப்பதத்துக்கு இந்திரியங்களைந்திற்கு மடைவிலே பொருட்சொல்வேண்டுகில் முயங்கிய நற்செவிமெய்கண்ணசி முறையானிந்தவயினின்று வருமைம்புலனும் என்றுபாடமோதி பொருட்படுத்துமிடத்து பொருந்தப்பட்ட நன்மைப்பகுதியினையுடைய சோத்திரம் தொக்கு சக்ஷுசிங்நுவை ஆக்கிராண மிவையடைவேநின்று வருகிற சத்தாதியாகிய விடயங்களைந்துமென்று பொருட்படுத்திக்கொள்க

உயிர்தா மெய்தும்வகை தம்முருவி னிலங்கி யிடும் — ஆன்மாக்கள் பொருந்தும்படி தந்தாஞ்சரீரங்களிலே விளங்காநிற்கும்

| | |
|---|---|
| புறத்தும் | உள்ளன்றியே புறம்பேயும் பூதங்கள் ஜீவிக்கும்படியாவது |
| வந்தடைய விடங்கொடுக்குநிரந்தரமாய்வானம் | ஆகாசமானது சர்வமுந் தன்னிடத்திலேவந்து பொருந்துகைக் கிடத்தினையுங் கொடுத்து வெளியாய்நிற்கும் |
| வாயுமிகச் சலித்தெவையுந் திரட்டும் | வாயுவானதெல்லாத்தையு மிகுதியாக வியக்கிவித்துக் கூட்டும் |
| தீவெம்மைதந் தவைசுட்டொன்றுவிக்கும் | அக்கினியானது உஷ்ணத்தையு முண்டாக்கித் தன்னோடுங்கூடினவையிற்றையுஞ் சுட்டொன்றுபடுத்தும் |
| நீர் குளிர்ந்து பதமேதரும் | அப்புவானது தன்னோடுங்கூடினவையிற்றைக் குளிர்வித்து நெகிழ்ச்சியாக்கும் |
| உரத்துத் தரிக்கு மிகுதரணி தானே. | பிருதிவியானது கடினமா யெல்லாவற்றையுந் தாங்கிநிற்கும். எ - று. |

நு-ம். முந்திய வைம்பூதங்கள் தம்முருவினிலங்கியிடுமென்றது ஆன்மாக்கள் சோத்திராதிகளைக்கொண்டு சத்தாதிகளை யறியுமிடத்துப் பூதங்களிடமாகநின்று கொள்ளவேண்டுகையா லெனவறிக. அதற்குவகையாவது ஆகாசமிடமாகநின்று சோத்திரத்தைப்பொருந்திச் சத்தத்தை யறிவன். வாயுவிடமாகநின்று தொக்கைப்பொருந்திப் பரிசத்தையறிவன். தேயுவிடமாகநின்று சக்ஷுவைப்பொருந்தி யுருவத்தையறிவன். அப்புவிடமாகநின்று சிங்ஙுவையைப்பொருந்தி இரதத்தையறிவன். பிருதிவியிடமாகநின் முக்கிராணத்தைப் பொருந்தி கந்தத்தையறிவன். இப்படி ஞானேந்திரியங் காரியப்பட்டாற்போல வாகாசமாதியான பூதங்களிடமாகநி

ன்று கன்மேந்திரியமான வாக்காதிகள் காரியப்படுமுறை மையை யநுபவத்தாற் கண்டுகொள்க.

தம்முருவினென்றது பூதரூபமென்றுமாம்.

புறத்துமென்ற வும்மைகொண்டே வுள்ளுமப்படிக் காரியப்படுமென்றதெனவறிக.

இதனாற்சொல்லிய தான்மாசத்தாதிகளை யறியுமிடத்துப் பூதங்களிடமாகநின்றறியுமென்று மந்தப்பூதங்கள் காரியப்படுமிடத் துள்ளும்புறம்புமாகநின்று காரியப்படுமென்றும் வருமுறைமையை யறிவித்தது. (ருரு)

---

வேறு—இது முறையே பூதங்களின் காரியப்பாடுணர்த்திற்று.

முந்தியவைம் பூதங்கள் வானாதியாக - தத்துவங்களை யெண்ணுங்கான் முந்தியெண்ணப்படும் பஞ்சபூதங்களு மாகாச முதலாகக்கொண்டு,—முயங்கியநற் செவிநாசி கண்ணுமெய்ம் முறையால் - நற்செவி மெய் கண் நா நாசி முறையால் முயங்கிய நல்ல சோத்திரந் தொக்கு சிங்ஙுவை யாக்கிராண மென்று சொல்லப்பட்ட ஞானவிந்திரியமைந்து மடைவே பொருந்தற்காதாரமாக,—இந்தவழி னின்றுவரு மைம்புலனு முயிர்தாமெய்தும்வகை - இந்த விந்திரியங்களிடத்திலே நிலைபெற்றுவரு மைந்துபுலன்களையு மாத்மாக்களனுபவிக்கும்படி,—தம்முருவி னிலங்கியிடும் - தங்கள்சொருபத்தோடே விளங்காநிற்கும்,— புறத்தும்வந்தடைய விடங்கொடுக்கு நிரந்தரமாய்வானம் - புறம்பேயு மாகாசமானது மற்றைப் பூதமெல்லாந் தன்னிடத்திலே வந்தடைய வெளியா யிடங்கொடாநிற்கும்,—வாயு மிகச்சலித்தெவையுந் திரட்டும் - வாயுவானது மிகவுஞ் சலனமா யெல்லாவற்றையுந் திரட்டாநிற்கும்,— தீவெம்மைதந் தவை சுட்டொன்றுவிக்

கும்-தேயுவானது பிறபொருட்கும் வெப்பத்தைக்கொடுத்து அவற்றைச் சுட்டொன்றுபடுத்தும்,—நீர்குளிர்ந்து பதமேதரும் - அப்புவானது குளிர்ந்து பதங்கொடுத்துநிற்கும்,— மூதுதரணி யுரத்துத்தரிக்கும் - முந்திய பிருதிவியானது கடினமா யெவற்றையுந்தரியாநிற்கும் எ - று.

கடினத்துக்கேற்ப முந்தியென்றார். எய்தும்வகை யிலங்கியிடும் புறத்துவான்கொடுக்கும் வாயுதிரட்டும் தீயொன்றுவிக்கும் நீர்பதமேதரும் தரணிதரிக்கு மெனமுடிக்க. நிற்கும் குறியெழுத்து வடிவுமுதலியவற்றே டென்பார் தம்முருவினென்றார். ஞானேந்திரியங்கட்கு விடயமான தன்மாத்திரைகள் சூக்குமரூபமா யவைக ளிருக்குமென்பதை முன்னூல்களினுமறிக.

---

இங்ஙனஞ்சொல்லப்பட்ட தத்துவமுப்பத்தாறுஞ் சுத்தமா யிருப்பதொன்றே வசுத்தமாயிருப்பதொன்றே வென்றும் இந்தத் தத்துவங்களோ டான்மா கூடிநிற்குமிடத் திவர்களுக்குண்டாகிய பயனேதென்றும் வினவ மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

இந்நிரையி னைந்துசுத்த மேழசுத்தா சுத்த மெண்மூன்று மசுத்தமெனு மிவைமுப்பத்தாறு, மன்னியதத் துவங்களிடை மயங்கிநெடுந்துயர்தா மருவுமுரு நிலையறிய வரும்பொழுதுவரியார், பன்னகமண் டசங்கனவு படர்வகையே முன்னம் பகரவருங் கலாதிநிலை பரவியசூக்குமமாந், தன்னுருவி னணைந்துபய னருந்தியரனருளாற் றரையினிடை வருமென்று சாற்றுதுவாலே. (௧௪)

தூலவுடல்விட்டுச் சூக்குமவுருவுடன்
மேலுறுபயன்றுய்த்து மீளுமென்றது.

| | |
|---|---|
| (இ-ள்.) இந்நிரையின் | இந்த முறைமையிலே |
| ஐந்து சுத்தம் | முன்னே "உன்னலரும் பராசிவன்றன்னருளாலே" என்னும் விருத்தத்திற் கூற்றமாகச் சொல்லப்பட்ட சிவதத்துவமைந்துஞ் சுத்ததத்துவமென்றுபேராம் |
| ஏழசுத்தா சுத்தம் | வித்யாதத்துவமேழும் சுத்தா சுத்தமென்றுபேராம் |
| எண்மூன்றுமசுத்தம் | ஆன்மதத்துவமிருபத்துநாலு மசுத்தமென்றுபேராம் |
| எனுமிவை முப்பத்தாறும் | என்றிங்ஙன மூன்றுவகையாகச் சொல்லப்பட்ட தத்துவங்களினதுதொகை முப்பத்தாறென்று காட்டப்பட்டிருக்கும் |
| மன்னிய தத்துவங்களிடைமயங்கி | இப்படி நிலைபெற்ற தத்துவங்களினடுவே யான்மாமயக்கமுற்று |
| நெடுந்துயர் தாமருவுமுருநிலையழியவரும் பொழுது | மிகவுஞ் சுகதுக்கவேதனைகள் பொருந்தப்பட்ட தூலசரீரத்திலேயுள்ள கன்மந்தொலைந்து திதனைவிட்டுப் போங்காலத்து |
| வரியார் பன்னக மண்டசங்கனவுபடர்வகையே | வரிபொருந்தினபாம்பு தோலுரித்துப் போமாறுபோலவு முட்டையில் ஜநநமாயுள்ளவை அந்தத்தோடுவிட்டு நீங்குமாறுபோலவு நனவிலேயுள்ளவர்கள் கனவிலேயடையுமாறுபோலவும் |

முன்னம் பக ரவருங் கலாதி நிலைபரவிய சூக் குமமாந் தன்னு ருவிலணைந்து ப யனருந்தி — முன்னே சொல்லப்பட்டு வருகிற கலையாதியாயுள்ள தத்துவ முப்பத்தொன்றும் விரிந்திருக்கப்பட்ட சூக்குமதேகமான யாதனாசரீரத்தைப் பொருந்தி சுவர்க்கநரகங்களிலுண்டான வின்பதுன்பங்களைப் புசித்து

அரனருளாற் றரையினிடை வருமென்று சாற் றுநூலே. — தம்பிரானார் காருண்ணியத்தினாலே மீளவும் பூமியின்கண்ணே வருமென்று சாத்திரங்கள் சொல்லும். எ - று.

நு - ம். சிவதத்துவமைந்தையுஞ் சுத்தமென்ற தேதென்னில் அதுசுத்தமாயையிற் றோற்றமாகையாலுங் கர்த்தா கொள்ளப்பட்ட திருமேனியெல்லா மதனிடமாகக் கொள்ளுகையாலும் வேதாகமங்க ளேற்றுகையாலு மெனவறிக.

இனி வித்யாதத்துவ மேழையுஞ் சுத்தாசுத்தமென்ற தேதென்னில் இவையிற்றைச் சுத்ததத்துவங்கள் காரியப்படுத்துகையாலு மசுத்தமாயையிற் றோற்றமாகையாலு மெனவறிக.

இனி யான்மதத்துவ மிருபத்துநாலையு மசுத்தமென்ற தேதென்னி லது பிரகிருதியிற் றோற்றமாகையாலு மும்மலத்தையுடைய சகலர்க்குத் தனுகரணபுவன போகங்களாயிருக்கையாலு மெனவறிக.

இனி வரியார் பன்னகமண்டசமென்றது தூலவுடல்விட்டுச் சூக்குமதேகத்தோடும் போகிறதுக் குவமையெனவறிக.

இனி கனவு படர்வகையேயென்றது ஒருஉடலிற் செய்தகாரிய மற்றோருடலிற் றெரியாததற் குவமையெனவறிக.

இனி கலாதிநிலைபரவிய சூக்குமமாமென்றது கலையாதி

தந்துவ முப்பத்தொன்றுங் கூடியே சூக்குமதேகமா மென்றதெனவறிக.

இனி பயனருந்தி யென்றது தூலதேகத்தோடுங் கூடிநின்று செய்தபுண்ணியபாவத்துக்குத் தக்கதாகச் சூக்குமதேகத்தோடுங்கூடி யியமதண்டத்தினு நாகசுவர்க்கங்களிலுள்ள வின்பதுன்பங்களினு மநுபவிக்கிறதெனவறிக.

இனி தரையினிடைவருமென்றது அப்படித்தொலைந் துந்தொலையாத சேடகன்மத்தைப் புசிப்பதாக மீளவுந் தூலதேகத்தை வந்தெடுக்கையெனவறிக.

இதனாற்சொல்லியது தத்துவ முப்பத்தாறுஞ் சுத்தமென்றுஞ் சுத்தாசுத்தமென்று மசுத்தமென்று மிந்தத் தத்துவங்களினோடுங்கூடி நிற்கப்பட்ட வான்மாக்கள் தூலதேகத்தைவிட்டுப் போய்ச் சூக்குமதேகத்தோடுங்கூடி யின்பதுன்பங்களை யியமதண்டத்தினு நாகசுவர்க்கங்களினு மநுபவித்து மீளவும் பூமியின்கண்ணேவந்து தூலதேகத்தை யெடுப்பர்களென்றும் வருமுறைமையை யறிவித்தது. (ஙச)

---

வேறு—இநு தத்துவங்களின்றொகையு மவற்றிடையே யுயிர்கண் மயங்கிநின்று சரீரங்களை விடுதல்பற்றுத லுணர்த்திற்று.

இந்நிலையில் - இங்ஙனஞ் சொல்லிவந்த வடைவிலே,—ஐந்துசுத்தம் - சிவதத்துவமைந்துஞ் சுத்ததத்துவம்,—ஏழ் சுத்தாசுத்தம் - வித்தியாதத்துவங்களேழுஞ் சுத்தாசுத்ததத்துவம்,—எண்மூன்றுமசுத்தம் - ஆத்மதத்துவ மிருபத்துநான்கு மசுத்ததத்துவம்,--எனுமிவைமுப்பத்தாறும்-என்றுசொல்லப்படு மிவைகளொருதொகையாக முப்பத்தாறும்,—இம்மூன்றுக்குமடைவே பிரேரகாண்டம் போககாண்டம் போ

க்கியகாண்டம் என்று முனைக்கப்படும். மன்னியதத்துவங்களிடமயங்கி நெடுந்துயர்தா மருவுமுருநிலையழிய வரும்பொழுது - இங்ஙன நிலைபெற்ற தத்துவங்களினிடத்திலே மயங்கிப் பெரியதுன்பங்களைப் பொருந்தப்பட்ட சரீரமானது நிலைகுலையக் கூடும்பொழுது,— வரியார் பன்னகமண்டசங் கனவுபடர்வகையே - வரியார்ந்தபாம்பு முட்டையிற் சனித்தவையுங் கருவிற் கேற்றவுடலும் போகின்றபடியே,— முன்னம் பகரவருங்கலாதிநிலை பரவியங்சூக்குமமாந் தன்னுருவிலணைந்து - முன்னே யதோமாயா சிருட்டி சொல்லுதற்குவருங் கலைமுதலிய முப்பது தத்துவங்களினவை விரிதற்கிடமான சூக்குமமாகிய தனக்குரிய புரியட்டகத்தோடே நல்வினை தீவினைக்கிடான பூதசாரம் பூதமானசரீரங்களிலே பொருந்தி,—பயனருந்தி யரனருளாற் றரையினிடைவருமென்று சாற்றுநூலே - சுவர்க்கநரகங்களின் பயனை யனுபவித்துச் சிவானுக்கிரகத்தாலே பூமியின்கண் மீண்டு பூதபரிணாம வுடலோடே பிறக்குமென்று திவ்வியாகமங்கள்சொல்லும். எ - று.

பூதம்-௫. தன்மாத்திரை-௫. ஞானேந்திரியங்கள்-௫. கன்மேந்திரியங்கள்-௫. அந்தக்கரணம்-௩. குணம்-௧. அதற்குக்காரணமான பிரகிருதி - ௧. கலாதி - ௫. ஆக எட்டுங் கொத்தாதலிற் புரியட்டகமாயிற்று. எனு முப்பத்தாறு மன்னியதத்துவ மிவைகளிடையென மாறினுமாம். உயிரெனவருவிக்க. படர்வகையேயென்புழி வகையுவமவுருபு ஏகாரம். என் சர்வசங்கார பரியந்தமன்றி மோட்சபரியந்தந் தனை நீங்காமலேயுடற் றுகில்போலினிது தனக்குரியவுடலென்பதுபோதத் தன்னுருவினென்றார். கனவு ஆகுபெயர். பாம்பு தூலவுடல்விட்டுச் சூக்குமவுடலோடு போதற்கும் அண்டசம் முன்பழகின வுடலைப் பாராமற்போதற்கும் கனவு

னாலே தேகத்திற்செய்த காரியத்தைச் சூக்குமதேகத்தி லறியாமைக்கு மு யமையாயின. வித்யாதத்துவங்களைச் சுத்தா சுத்தமென்றது ஆத்மாக்களுக்குச் சிறிதறிவை விளக்குதற்குச் சாதனமாகையாலும் சூக்குமரூபத்துவாரத்தா லெண்குணரூபமான சுகதுக்கமோகங்களை யுண்டாக்குதற்குச் சாதனமாகையாலு மெனவறிக.

---

இங்ஙனம் ஜநநமரணப்பட்டுவருகிற வான்மாக்களெடுக்கப்பட்ட யோனிபேத மெத்தனைவகைப்பட் டிருக்குமென்றுவினவ நால்வகைத்தோற்றமு மெழுவகைப்பிறப்பு மெண்பத்துநான்குநூறாயிர மியோனிபேதமுமா யிருக்குமென்னு முறைமையை மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

தோற்றியிடு மண்டசங்கள் சுவேதசங்கள்பாரிற்
றுதைந்துவரு முற்பீசஞ் சராயுசங்களொன்கி, லூற்றமிகு
தாபரங்கள் பத்தொன்பதென்று மூர்வபதி னைந்தமர
ர் பதினொன்றேநாலவா, மாற்றருநீ ருறைவனநற் பற
வைகளொற்காலி மன்னிபிடும் பப்பத்து மாவிடமொரான்
பதின்ம, போற்றியொரு தொகையதனி லியம்புவர்க
ள்யோனி யெண்பத்து நான்குநூ றாயிரமென் றெடு
த்தே. (கரு)

பாயிரமாகவெண் பத்துநான்குநூ
றாயிரயோனிக் கடைவிதுவெனறது.

(இ-ள்.) தோற்றியிடு மண்டசங்கள் சுவேதசங்கள்பாரிற்று — ஆனமாக்கள் ஜநநமெடுக்குமிடத்து முட்டையிற்றோன்றுவன வேர்வையிற்றோன்றுவன பூமியிற் செறிந்துவருகிற வித்திற்றோன்றுவன பைக்குடரிலே தோன்றுவன.

| | |
|---|---|
| ணைந்துவரு மூற்பீசஞ் சராயுசங்கண் ணுன்கின் | இந்தநால்வகைத் தோற்றத்திலு முண்டாகப்பட்ட வெழுவகைப் பிறப்பாவன |
| ஊற்றமிகுதாபரங்கள் பத்தொன்ப தென்றும் | மிகவு முறுதிபெற்றுடைய தாபரவர்க்கங்கள் பத்தொன்பதுநூறுயிர வர்க்கமென்றும |
| ஊர்வபதினைந்து | ஊர்ந்துதிரிவன பதினைந்துநூறுயிர வர்க்கமென்றும் |
| அமரர் பதினொன்றே நிலவா மாற்றருநீருறைவன நற்பறவைகளுற்காலி மன்னியிடும்பப் பத்து | தேவர்கள் பதினொருநூறுயிர வர்க்கமென்றும் ஒருகாலத்திலு நிலைவிட்டு நீங்காமலுண்டாகப்பட்ட பத்துநூறுயிரவர்க்கமென்றும் நல்லபறவைகள் பத்துநூறுயிரவர்க்கமென்றும் நாலுகாலையுடையவை பத்துநூறுயிர வர்க்கமென்றும் |
| மானுடரொன்பதின்மர் | மனிதரொன்பதுநூறுயிர வர்க்கமென்றும் |
| ஏற்றி யொருதொகை யதனிலியம்புவர்கள் | ஆகவிவை யொன்றுகவெண்ணி யொருதொகைப்படுத்துவர்கள் பெரியோர்கள். அதுவேதென்னில் |
| யோனி யெண்பத்துநான்குநூறுயிர மென்றெடுத்தே. | யோனிபேதங்க ளெண்பத்துநான்குநூறுயிரமென்று வகையினைத்தெரித்து எ-று. |

நு-ம். அண்டஜமென்றதோற்றம் பறவை பாம்பு முதலாயுள்ளவை யெனவறிக.

சுவேதஜமென்ற தோற்றம் கிருமி கிடம் விட்டில் பேன் முதலானவை யெனவறிக.

உற்பீஜமென்ற தோற்றம் மரம் பூண்டு கொடி முதலானவை யெனவறிக.

சராயுஜமென்ற தோற்றம் நாற்காலிகள் மானுடர் தேவர்க்க முதலானவை யெனவறிக.

ஆகத் தோற்றம் நால்வகையெனவறிக.

இதிலெழுவகைப் பிறப்புக்கு வகையாவன? தேவர்நரர் மிருகம் பக்ஷி ஊர்வன நீருறைவன விருக்ஷமெனவறிக.

இதனாற் சொல்லியது நால்வகைத்தோற்றமு மெழுவகைப்பிறப்பு மிதிலுண்டானயோனிபேத மெண்பத்துநான்கு நூறாயிரமாக விரிந்தமுறைமையு மறிவித்தது. (நடு)

---

வேறு—இது அவ்வுயிர்கள் விடுதல் பற்றுதல்செய்யு முடல்களின் றோற்றமும் யோனிபேதத்தின் றொகையு முணர்த்திற்று.

தோற்றியிடுமண்டசங்கள் சுவேதசங்கள் பாரிற்றுதைந் துவரு முற்பீசஞ் சராயுசங்களொன்கின் - தோன்றப்பட்ட முட்டையிற் சனிப்பவைகள், வியர்வையிற் சனிப்பவைகள், பூமியில் நெருங்கிவரத்தக்க வித்திற் சனிப்பவைகள், பையிற் சனிப்பவைகளாகிய நால்வகைத் தோற்றத்தின்கண்,—ஊற்றமிகு தாவரங்கள் பத்தொன்பதென்றும்-நிலைபெறு மிக்க தாபரயோனிகள் பத்தொன்பதுநூறாயிரபேத மென்றும்,—ஊர்வபதினொந்து - ஊர்கின்றவை பதினொந்துநூறாயிர பேதமென்றும்,—அமரர் பதினொன்றுடு - தேவயோனி பதினொருநூறாயிரமென்றும்,—உலவாமாற் றருநீருறைவன நற்பறவைகளுற்காலி மன்னியிடும் பப்பத்தும் - ஒழியாத பெரு

மைதங்கிய நீர்வாழ்சாதிகள் நல்லபட்சிகள் நாற்கான்மிரு கங்களான மூன்று மொவ்வொன்று பொருந்தப்பட்ட பத்துநூறுயிர பேதமென்றும்,—மானுடரான பதுமா வேற்றி- மானுட-யோனி ஒன்பதுநூறுயிரபேதமென்றுமாக வேற்றி,- யோனியெண்பத்துநான்குநூறுயிர மென்றெடுத்து - யோனியெண்பத்துநானகுநூறுயிரபேதமென் றெடுத்து,—ஒருதொகையாக வியம்புவர்கள்-ஒருதொகையாகச் சொல்லுவர் பெரியோர்கள். எ - று.

எழுவாய்வருவிக்க. அமரரும் மானுடரும் ஆகுபெயர். நானகின் இன் ஏழனுருபாதல் புறநடையாற்கொள்க. ஒடு எண்ணொடு. நூறுயிரமென்பதனையு மென்று மென்பதனையு மெங்குந்தந் தின்னத்துணையென்று மாவேற்றியென்றியத்துரைக்க. மால்பெருமை. தருதல் ஈண்டுத்தங்குதல். மன்னுதல் பொருந்துதல். இயல்மன்னு மனபுதந்தார்க் கென்னுங் கோவைத திருவாசகத்தி னுங்கு மன்னுப்பொருள் வருதல்காண்க.

---

இங்ஙனமானமாக்கள் ஜநநமரணப்பட்டு வருமவதரத்து மலபாகம்வந்து சத்திநிபாதமுண்டாகு முறைமையை மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

இனையபல பிறவிகளி னிறந்துபிறந்தருளா விருவினைகள் புரிந்தருந்து மிதுசகலமகலா, முனமருவு மிருபயனு மொருகாலத்தருந்த முந்தநுக ருந்துபய னந்தமுறவந்த,வினையுமெதிர் வினையுமுடி வினையுதவுபயனு னேராக நேராதல் மேவுங்காலமுற், சினமருவு திரோதாயி கருணையாகித் திருந்தியசத் திநிபாதந் திகழுமன்றே. (நகூ)

உருவுடன்போகத் துற்றிடுஞ்சகலமு
மருவியசத்திநி பாதமும்வகுத்தது.

(இ-ள்.) இனையபல பிறவிகளி னிறந்துபிறந் தருளா லிருவினைகள் புரிந்தருந் துமிதுசகலம்

ஆன்மாக்க ளித்தன்மைத்தாகிய வெண்பத்துநான்கு நூறாயிர யோனிகடோறுஞ் சிவனுடையவருளாலே பிறந்திறந்து புண்ணியபாவங்களைச்செய்து இன்பதுன்பங்களை யநுபவிக்கிறது சகலாவத்தை. முன்னர் "புகலுமலமொழித்தற்கு" என்றசெய்யுளில் "இலங்கும்விந்து பகர்வரிய வுணர்வாகி" என்றபதந்தொடங்கி இவ்வளவுஞ் சகலாவத்தையை யருளிச்செய்ததெனவறிக. மேற்சுத்தாவத்தையை யருளிச்செய்கின்றது.

அகலா முனமருவுமிருபயனுமொருகாலத் தருந்த

இங்ஙனஞ் சொல்லப்பட்ட சகலாவத்தையைவிட்டு நீங்காமல் முன் ஜநநங்கடோரும்பொருந்தி வருகிற புண்ணியபாவங்களிரண்டு மொருஜநநத்திலே புசித்துத் தொலையததக்கதாக

முந்தநுக ருந்துபயன்

முன்ஜநநத்திலே புசிக்கச்செய்தேயேறி யார்ஜிதமாய்த்துவாவிலேகட்டுப்பட்ட சஞ்சிதமும்

அந்தமுறவந் தவினையும்

இப்பொழுது புசித்து முடிவதாகவந்த வுடலிலே கட்டுப்பட்ட பிராரத்தகன்மமும்

எதிர்வினை யும்

இப்பொழுது புசிக்கச்செய்தேயுள்ள ஹிதாஹிதங்களினாலே யேறுகிற வாகாமியமும்

முடிவினையுத வுடபருஜோரா கநோராதல் மே வுங்கால்

இந்தக்கன்மங்க ளிவனுக்கு முடிந்து போம்படி சிவபுண்ணியத்தி னதிகத்தாலே யெல்லாஞ் சேரத்துலையொக்கப் பொருந் தினவிடத்து

முற்சின மருவு திரோதாயிக ருணையாகித் தி ருந்திய சத்திநி பாதந் திகழுமன்றே.

முன்கோபம்போலே மறைத்துநின்ற திரோதாயிசத்தி காருண்ணியத்தைச் செய்து நன்மையுடைய சத்திநிபாதம் விளைக்கும். எ - று.

று - ட். சத்திநிபாதமாவது சத்திசெலுத்தாமனிற்கிற தெனவறிக. அஃதாவது புண்ணியபாவந் துலையொத்த வா ன்மாக்களைத் திரோதானசத்தி நிக்கிரகமும் அநுக்கிரகசத் தி பதிதலுமாமெனவறிக.

இனி முந்துறுக ருந்துபயனென்றது முன்ஜநநங்களி லெடுக்கப்பட்ட வுடம்புகளோடுங் கூடிநின்று புசிக்கச்செ ய்தே யிந்தவுடம்புகளெடுக்கைக் கேதுவாகக் கட்டுப்பட்ட சஞ்சிதகன்மமெனவறிக.

இனி அந்தமுற வந்தவினையென்றது இந்தத்தேகாந்தம ட்டும் புசிக்கிறபிராரத்த கன்மமெனவறிக.

இனி எதிர்வினையென்றது இந்தப்பிராரத்தம் புசிக்கச் செய்தே யுண்டாகிய ஹிதாஹிதத்தாலே விளைகிற வாகாமிய கன்மமெனவறிக.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட கன்மங்களுக்கு. பி - ம். சி த்தியாரில் "முற்செயல் விதியையிந்த முயற்சியோடனுபவி த்தா, லிச்செயல்பலிக்குமாறென் னிதமகிதங்கள்முன்ன, ரச் செயலாலுளிங்கு மவைசெயின் மேலைக்காகும்." எ-ம். "மே லைக்குவித்துமாகி விளைந்தவையுணவுமாகி, ஞாலத்துவருமா

போல நாஞ்செயும்வினைகளெல்லா, மேலத்தான்பலமாச்செ
ய்யு மிதமகிதங்களெல்லா, மூலத்ததாகியென்றும் வந்திடுமு
றைமையோடே." எ - ம். கண்டுகொள்க.

இனி முடிவினையுதவுபயனு னேராகநேராதல். எ - று.
சிவபுண்ணியத்தினாலே பசுபுண்ணியமும் பாவமுந் துலை
யொத்ததெனவறிக. இதற்கு. பி - ம். சித்தியாரில் "புண்ணி
யமேனுக்குவிக்கும் பாவங்கீழுக்கும் புண்ணியனைப்பூசித்
த புண்ணியத்தினாலே, நண்ணியஞானத்தினா லிரண்டினையு
மறுத்து ஞாலமொடு கீழ்மேலு நண்ணுனாகி, யெண்ணுமிக
லோகத்தே முத்திபெறுமிவன்று னெங்கெழிலென் ஞாயிரெ
மக் கென்று குறைவின்றிக், கண்ணுதறன்னிறைவதனிற் க
லந்துகாயங் கழிந்தக்காலெங்குமாய்க் கருதரன்போனிற்
பன்." எ - று. கண்டுகொள்க.

இனி கிணமருவு திரோதாயியென்றது ஆன்மாக்களுக்கு
ண்டான மலங்களைப் பாகம்வருத்தவேண்டிப் புண்ணியபா
வங்களைச் செய்வித்துச் சுவர்க்கநரகங்களிலே செலுத்திப்
பாகம்வருத்துமையாலெனவறிக. திரோதாயியென்றது அவ
தரப்பெயரெனவறிக.

இனி திருந்தியசத்தி நிபாதந் திகழுமென்றது முன்னர்
ப்பிரபஞ்சத்தைப் பொருளென்றுகாட்டி நுசிப்பித்துநின்ற
திரோதாயிதானே யருளாய்ப்பிரகாசித்துப்பழையப்பிரபஞ்
சத்தை யுவர்ப்பித்துச் சிவனளவிலுந் திருவேடத்தாரளவிலு
ஞ் சிவாகமங்களிலும் பிரியத்தை யுண்டாக்குவித்து நிற்கை
யெனவறிக. இதற்கு. பி-ம். போற்றிப்பஃறொடையில். "அன
பரைக்கண்டின்புறுத, லுய்யுநெறிசிறிதே யுண்டாக்கிப்—
பையவே, மட்டாய்மலராய் வருநாளின்முன்னைநாள், மொ
ட்டா யுருவாமுறைபோலக்—கிட்டியதோர், நல்லபிறப்பிற்
பிறப்பித்துநாடும்வினை, யெல்லையிரண்டு மிடையொப்பிற—

பல்பிறவி, யத்தமதிலன்றே வளவென்று பார்த்திருந்து, சத்திபதிக்குந்தரம்போற்றி." எ - து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது முன்னர்ப்பதத்திலே சகலாவத்தையின்முறைமை முடிந்ததென்றும் சஞ்சிதம் பிராரத்த மாகாமியமென்னப்பட்ட மூவகைக்கன்மங்களுஞ் சிவபுண்ணியத்தின மிகுதியாலே நீங்குமென்றும் அப்படி நீங்குமிடத்திருவினையொப்புண்டாமென்றும் அப்படி யிருவினையொப்புண்டாகவே திரோதாயியாய்நின்ற வருள் காருண்யசத்தியானமுறைமையு மறிவித்தது. (ந௬)

---

வேறு—இது ஓங்கிவருமென்னுஞ் செய்யுளி னிறுத்தமுறையே சகலாவத்தையுஞ் சுத்தாவத்தையுஞ் சுத்தாவத்தைக்கு நிமித்தமான விருவினையொப்புஞ் சத்திநிபாதமுமுணர்த்திற்று.

இனையபலபிறவிகளி னிறந்துபிறந்தருளா லிருவினைகள் புரிந்தருந்து மிதுசகலம்- இத்தன்மையான பலபிறவிகளிலே பிறந்துமிறந்துஞ் சிவானுகூலத்தாலே புண்ணியபாவங்களைச்செய் தவற்றின் பலன்களை யனுபவிக்கு மிதுசகலாவத்தை,—இனி முந்துநுகர் - முற்பவங்களிலே சுகதுக்கபலன்களை நுகரு நுகர்ச்சியிடத்திலே,—உந்துபயன் - ஆகாமியமாய் வந்தேறியசஞ்சிதமும்,—அந்தமுற வந்தவினையும் - புசித்தறுவதாகவந்த பிராரத்தமும்,—எதிர்வினையும் - இப்பிராரத்தம் புசிக்குமிடத்தேறிய வாகாமியமுமாய்,—அகலாமுனமருவு மிருபயனு மொருகாலத்தருந்த - நீங்காமல் முற்சனனங்களிலே பொருந்திய புண்ணியபாவங்களாகிய விரண்டின் பிரயோஜனங்களையு மொருகாலத்திலே யொருவன் புசிக்கும்படி,—முடிவினை யுதவுபயனால் - வீட்டினைத் தருகின்ற

சிவதன்மங்களாலே,—நேராகநேராதன் மேவுங்கால்-அக்க ன்மமெல்லாம் பக்குவத்தாலே துலையொக்கச் செவ்வாதலை ப் பொருந்துமிடத்தில்,—முற்சினமருவு திரோதாயிகருணை யாகி - இருவினையொப்பு வருமுன்னெல்லா மாத்மாக்களை யீடேற்றுகைக்குத் தனக்கில்லாத கோபத்தைப்பொருந்திய திரோதானசத்தியானது கிருபையாகாநிற்க,—அன்றே-அப் பொழுதே,—திருந்தியசத்திநிபாதந் திகழும் - நன்முனசத் திநிபாதக்குறி விளங்கும். எ - று.

உந்துபயன் உதவுபயன் இரண்டு மாருபெயராய்க் கார ணத்தைவிளக்கின. நேராதல் ஆகுபெயர். ஆக உவமவாச கம். இது முன்னரின்மைமலமென்ற செய்யுட்கு மொக்கும். செய்யுளின்பநோக்கி யிருத்தலை முற்கூறிருர். உம்மை தொ க்கது. நிபாதம்பதிதல், அஃதுபசாரம். கருணையாகி ஆக உந் துபயனுமென்னு மும்மை விகாரத்தாற்றொக்கது. பயனும் வி னையு மெதிர்வினையுமாயென வருவித்த வாக்கவினை யெச்ச மீறுகெட் டெதிர்மறையாய்நின்ற வகலாவென்னும் வினையெ ச்சத்திற் காலவினைகொண்டது. சத்திநிபாதம் ஆகுபெயர். நுகர்முதனிலைவினை, அது பெயராய்நின றேழாவதுதொகப் பட்டது: நுகருங்காலென்க. முடிதலும் வீடலும் ஒருபொரு ளாதலின் முடிவுவீடெனப்படும். இனி முந்தநுகர மேவுங் காலென்பதற்குச் சஞ்சிதம்பிராரத்த மாகாமியமான மூவ கை வினைகளு மிவனுக் கில்லையாதலை யுண்டாக்காநின்ற சிவ தன்மங்களாலே விட்டுப்போம்படி யொத்தலைப் பொருந்து மிடத் தென்பாருமுளர்.

---

இங்ஙனஞ் சொல்லப்பட்ட சத்திநிபாத மெத்தனை வ கைப்பட்டிருக்குமென்றும் இந்தச்சத்திநிபாத முண்டானவ ர்களுக்குக் கத்தா வனுக்கிரகஞ்செய்யு முறைமை யெப்படி

யென்றும்வினவ மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

நாடியசத் திநிபாத நாலுபாத நண்ணும்வகை
யெண்ணரிய ஞானபாதங், கூடுமவர் தமக்குணர்வாய்
நின்றஞானக் கூத்தனொரு மூர்த்திகொடு குறுகிமோ
க, நீடியகே வலசகல நிகழாவாறு நிறுத்திமல மறுக்
குமிது நிலையார்சுத்தங், கேடில்புகழ் தருஞ்சரிகை கி
ரியாயோகக் கேண்மையரே விவையுணர்த்தக் கிளக்
குநூலே. (௩௭)

கேவலசகல மேவலுற்றொருநிலை
யாவதுசுத்தா வத்தையென்றது.

| | |
|---|---|
| (இ - ள்.) நாடியசத்திநிபாத நாலுபாதம் | முன்னெடுத்துக் கூறப்பட்ட சத்திநிபாத நாலுபிரகாரமாயிருக்கும் |
| நண்ணும்வகை யெண்ணரிய ஞானபாதங் கூடுமவர்தமக்கு | அந்தச் சத்திநிபாதநாலினும் பொருந்தும்வகையே நினைத்தற்கரிதாகிய ஞானபாதத்தைச் சேருகைக்குரித்தான நாலாஞ்சத்திநிபாதமுள்ளவர்களுக்கு |
| உணர்வாய்நின்ற ஞானக்கூத்தனொருமூர்த்திகொடுகுறுகி | உயிர்க்குயிராய் நிற்கிற ஞானநடநத்தினையுடைய தம்பிரானாசாரியமூர்த்தமாக வெழுந்தருளிவந்து |
| மோகநீடிய கேவலசகல நிகழாவாறு நிறுத்தி | மறைப்பை மிகவுண்டாக்குகிற கேவலாவத்தையும் விகற்பத்தையுடைய சகலாவத்தையையுந் தோற்றுதபடி யருளிலே நிறுத்தி |

மலமறுக்குமி து நிலையார்சுத் தம்

இங்ஙனமலத்தைப் போக்குகிறவிது நிலைபெற்ற சுத்தாவத்தையாம். இது யாவர்க்காமென்னில்

கேடில் புகழ் தருஞ்சரிதை கிரியாயோகக்கேண்மையரே விவை யுணர்த்தக் கிளக்குறாலே.

அழிவில்லாத புகழைத்தருவதாயுள்ள சரிதை கிரியா யோகமென்னுநிலைகளைக் குறைவறச் சரித்தவர்களுண்டாமாகிலவர்களுக் கிந்தச்சுத்தாவத்தையின் முறைமையை யுணர்த்தப்படுமென்றுசொல்லுந் திவ்வியாகமம். எ - று.

உ - ம். சத்திநிபாத நாலென்றதற்கு வகையேதென்னில் மந்தமென்றும் மந்ததரமென்றும் தீவிரமென்றுந் தீவிரதரமென்றும் வருமெனவறிக. அஃதாவது முதற்சத்திநிபாதமாகிய மந்தம் வாழைத்தண்டிலே நெருப்புப்பற்றினாற்போலெனவறிக. இனி யிரண்டாஞ்சத்திநிபாதமாகிய மந்ததரம் பச்சைவிறகிலே நெருப்புப்பற்றினாற்போலெனவறிக. இனி மூன்றாஞ்சத்திநிபாதமாகிய தீவிர முலர்ந்தவிறகிலே நெருப்புப்பற்றினாற்போலெனவறிக. இனி நாலாஞ்சத்திநிபாதமாகிய தீவிரதரங் கரியிலே நெருப்புப்பற்றினாற்போலெனவறிக. இவையிற்றுக்கு. பி-ம். "நாலுவகைச் சத்திநிபாதத்துக் கற்பருவ, மூலகுருவே மொழியெனக்குக்—கோல, வரம்பைத்தண் டோண்பச்சைக் காட்டமுலர்ந்த, நிரம்புகரி நேராகினே." எ-து. கண்டுகொள்க. இந்தச் சத்திநிபாதநாலுக்கு மநுபோகமாவது:—முதற்சத்திநிபாதமாவது நமக்குப் பேருயுள்ளதொரு கத்தாவுண்டென் றறிவெழுந்திருக்கையெனவறிக. இரண்டாஞ்சத்திநிபாதமாவ தந்தக்கத்தாவைப்பெறுகைக்கு வழியெப்படியென் றாராய்கையெனவறிக. இனி மூன்றாஞ்சத்திநிபாதமாவ தப்படி யாராய்ந்தறிந்தகத்தாவைப் பெறவேணுமென று பிரபஞ்சத்தையுவர்த்துப் புளி

யம்பழமு மதன்றோடம்போல நிற்றலெனவறிக. இனி நான் காஞ்சத்திநிபாதமாவது பிரபஞ்சத்தை முற்றத்துறந் தாசா ரியனே பொருளென்றுகொண்டு தானறநின்று வழிபடுகையெ னவறிக. அப்படிப் பிரபஞ்சத்தை முற்றத்துறக்கவென்பதற் கு. பி-ம். சித்தியாரில். ஆசைதருமுலகமெலா மலகைத்தே ராமென் றறிந்தகல வந்நிலையேயாகும்." எ-து. கண்டுகொ ள்க. ஆசாரியனைப் பொருளென்று கொண்டு வழிபடுகைக்கு. பி-ம். சித்தியாரில். "பரப்பிரம மிவனென்றும் பரசிவன்று னென்றும் பரஞானமிவனென்றும் பராபரன்று னென்று, ம ரன்றருஞ்சீர்நிலையெல்லா மிவனேயென் றுமருட்குருவைவழி படவேயவனிவன்றுனுயே, யிரங்கியவாரணமாமை மீனண் டஞ்சினையை யியல்பிறுடும்பரிசித்து நினைந்தும் பார்த்தும்» பரிந்தவைதானுக்குமாபோற் சிவமேயாக்கும் பரிசித்துஞ் சி ந்தித்தும் பார்த்துந் தானே." எ-ம். பன்னரியபரமகுரு மற் றவனை நாளும் பணிந்துபணி செய்யவந்து பலிக்கு மன்றே." எ-ம். கண்டுகொள்க.

இனியுணர்வாய்நின்ற ஞானகூத்தனொருமூர்த்திகொடுகுறுகி. எ-கு. அருபியாய்நின்றகத்தா வுருபியாய்வந்தானென்று பொரு ட்கூறியதற்கு. பி-ம். திருவாசகத்தில். அருபரத்தொருவ னவனி யில்வந்து - குருபரனாகி யருளியபெருமையைச் - சிறுமையென்றி கழாதே திருவடியிணையே." எ-ம். போற்றிப் பஃறொடையில்"பூ வலயந், தன்னின்றுங்காச் சகலர்க்கவர்போல, முன்னின்றுமும் மலந்தீர்த்தாட்கொள்கை—யன்னவனுக், காதிகுணமாதலினாலா டுந்திருத்தொழிலுஞ், சோதிமணிமிடற்றுச் சுந்தரமும்—பாதியா ம், பச்சையிடமும் பவளத்திருச்சடைமேல், வைச்சந்தியு மதிக் கொழுந்து—மச்சமுற, வாடமரவு மழகார்திருநுதன்மே, னீடுரு வவன்னிநெடுங்கண்ணுங்—கேடிலயங், கூட்டுந்தமருகமுங் கோ லவெரியகலும், பூட்டரவக்கச்சும் புலியதளும்—வீட்டின்ப, வெ

ள்ளத்தழுத்தி விடுந்தாளினுமடியா, ருள்ளத்தினும்பிரியா வொண்சிலம்புங்—கள்ளவினை, வென்றுபிறப்பறுக்கச் சாத்தியவீரக்கழலு, மொன்றுமுருத் தோன்றும வுள்ளடங்கி—யென்று, மிறவாதவின்பத்தெமையிருத்தவேண்டிப், பிறவாதமுதல்வன்பிறந்தன்று—நறவாருந், தாருலாவும்புயத்துச் சம்பந்தநாதனென்று,பேரிலாநாதனொருபேர்புனைந்து—பாரோர்த, முண்டியுறக்கம்பயமின்பமொத்தொழுகிக், கொண்டுமகிழ்ந்த குணம்போற்றி." எ-ம். கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது சத்திநிபாத நாலுவகைப்பட்டிருக்கு முறைமையு மந்தச்சத்திநிபாதத்துக் கிடாகக் கத்தா வாசாரியமூர்த்தமாகவந் திரக்ஷிக்குமுறைமையு மப்படி யிரக்ஷிக்குமிடத்துக் கேவலாவத்தையுஞ் சகலாவத்தையு நீக்கிச் சுத்தாவத்தையிலே நிறுத்துவனென்னு முறைமையு மறிவித்தது. (௬௭)

---

வேறு—இது சத்திநிபாதத்தின் பாகுபாடுஞ் சுத்தாவத்தையு மிப்பொருள்களை யின்னோர்க் குணர்த்தலாமென்பதூஉ முணர்த்திற்று.

நாடியசத்திநிபாத நாலுபாதம் - ஆராயப்பட்ட சத்திநிபாதமானது மந்தம் மந்ததரம் தீவிரம் தீவிரதரம்என்று நான்குபாதமாயிருக்கும்,—நண்ணும்வகையெண்ணரியஞானபாதநு கூடுமவர்தமக்குணர்வாய் நின்றஞானக் கூத்தனொருமூர்த்திகொடுகுறுகி- அந்தநான்கினுட் பொருந்துமுறைமையைக் கிளர்த்தற்கரிய தீவிரதரமான ஞானபாதமானது பொருந்தப்படுமவர்க்கு நிலைபெற்ற ஞானக்கூத்தனொப்பற்ற குருமூர்த்தங்கொண்டறியப்படும்பொருளா யெழுந்தருளிவந்து,—மோகநீடிய கேவலசகலநிகழாவாறு நிறுத்திமலமறுக்கும் - மயக்கமிகவுண்டான கேவலாவத்தையும் விகற்பமிகவுண்டான சகலாவத்தையு முண்டாகாதபடியருளிலே

நிறுத்தி மலங்களைப் போக்குவன்,—இது நிலையார்சுத்தம் - இது நிலைமைநிறைந்த சுத்தாவத்தை,—கேடில்புகழ தருஞ்சரியை கிரியாயோகக் கேண்மையரேல்-கெடாதபுகழையுண்டாக்குஞ் சரியை கிரியாயோக வுறவையுடையவர்களாயின்,—இவை யுணர்த்தக்கிளக்குநூலே - அவர்களுக் கிந்தப்பொருளை யறிவிக்கச்சொல்லு மாகமம். எ-று.

சத்திநிபாதமாவது ஜன்மாந்தரங்களிலே செய்யப்பட்ட சிவதன்மங்களினாலே யாத்மாக்களுக்குக் கன்மசாமீபமும் பரிபாகமு முண்டானவளவில் சிவசத்திபதிதல். கன்மசமத்துவமே யன்றி மலபரிபாகமில்லாதபோது சிவசத்தி யந்தவினையிரண்டினையுஞ்சேதித்து விஞ்ஞானகல பிராப்தியாக்குமெனவறிக. கன்மசமத்துவமின்றி மலபரிபாகமுண்டானாற் கன்மங்களாற் பலமில்லை. பாதம் நான்கிலோர்கூறு. உணர்வு ஆகுபெயர். தமக்குணர்வாய்க் குறுகியறுக்குமெனவியையும். நூல் கிளக்குமெனக் கருவி கருத்தாவாயிற்று. சத்திநிபாதங்களாற்பயன் சரியைமுதலிய பாதங்களிலே நிறுத்தி மனவாக்குக்காயங்களைச் சுத்தமாக்கி ஞானத்துக்கு யோக்கியனாகப்பண்ணும். இவற்றுண்மந்ததரத்தினியல்பாவது, இலிங்க மாயேசுர ரிடங்களிலே பத்தியுண்டாக வதனாலே பரமசிவன் சாதகாசாரியனையதிஷ்டித்துச் சமயதீட்சைபண்ணி யவன்மனமொழிமெய்களைச் சரியைத் தொழிலிலே புரிவிப்பன். இச்சரியையின் முற்றுதலாலே மந்தசத்திநிபாதமுண்டாய்ச் சிவார்ச்சனையி லாதரவுண்டாக்கிப் போதகாசிரியனை யதிஷ்டித்து விசேடசமயமுடித்துச் சிவார்ச்சனைகற்பித்து அந்தரியாக வெதிரியாகங்களிலே யவன்மனமொழிமெய்களைப் புரிவிப்பன். இக்கிரியையின் முற்றுதலாலே தீவிரசத்திநிபாதமுண்டாக யோகவாஞ்சையுண்டா யவ்வாசிரியனாலே யட்டாங்கயோக வுண்மையை யறிவித்துக் காமாதியறுவிதமும்விடுத்து அவன்சித்தத்தைத் தியானத்

திலே நிறுத்திச் சமாதியிலேயொடுக்குவன். இம்மூன்றின் முற்று தலாலே தீவிரதரசத்திநிபாத முண்டாய்ச் சிவஞானிகளிடத்தி லே பத்தியுந் திரிபதார்த்தசொரூபமறியவேண்டுமென்னு மறிவுந் தேகாதிபிரபஞ்சங்களை நீக்கவேண்டுமென்னும் வைராக்கியமு மு த்தியிலாசையும் பிறவியிலே பயமு மிகலோக பரலோகத்திலே வெறுப்பும் நமக்கிந்தக் கவர்ச்சியைநீக்கிச் சிவரூபத்தைத் தெரி ப்பிக்கு நாதராவா ராரென்று பசித்தவ னன்னதாதாவைத் தேடு மாறுபோலவும் பிறவிக் குருடனானவன் கோடைக் காலத தின் மத்தியானத்திலே நீர்தேடித் திரியுமாறுபோலவும் ஞானாசா ரியனைத்தேடி மிகவும் வருந்துகின்ற வாஞ்சையுண்டாம். இந்தத் தீவிரதர சத்திநிபாதமுந் தாரதம்மியத்தினாலே மந்ததரமாதியா கநான்காம். இந்நான்குவித சத்திநிபாதமுடையவர்கள் ஞானாசா ரியனையடைந்துள்ளளவி லவ்வாசாரியனாலே பரமசிவன் ஞானதீ ட்சையைப்பண்ணி யவர்கண்மலத்திரியங்களைச் சேதித்துக் கர ணசூனியம்பிறப்பித்து ஞானானந்தானுபூதியைக் கொடுப்பன். இ ந்நால்வர்தன்மையு மிவர்களையாசாரியன் றிருத்து மருமையு மெளி மையு மவர்களுக்குள்ள குருபத்தியு மவர்களுக்கு ஞானம் பிரகா சிக்குந்தன்மையும் பிரகாசித்தா லவர்களுக்குப் பிரபஞ்சத்திலே வெறுப்பு முவமைமுகத்தாலே விளங்கச்சொல்லுவான் புகிற் பெ ருகும், விரிந்தநூல்களிற் காண்க.

---

மேல் மற்றுமுண்டான உலகாயதன் முதலாயுள்ள சமயிக ளுக்கு மிப்படிச்சுத்தாவத்தையிலே நின்றே முத்தியென்றிருக்கு மோ வெவ்வேறு வழிகளாயிருக்குமோவென்ற மாணவகனைநோ க்கி அவர்களுக்குண்டான நிலைகளு முத்திகளு மின்னபடியென் றும் அது குற்றத்தையுடைய முத்திகளாமென்றும் மேலருளிச்செ ய்வா னெடுத்துக்கொண்டருளியது.

அரிவையரின் புறுமுத்தி கந்தமைந்து மறுமுத்

தி திரிகுணமு மடங்குமுத்தி, விரிவுவினை கெடுமுத்தி
மலம்போமுத்தி விக்கிரக நித்தமுத்தி விவேகமுத்தி,
பரவுமுயிர் கெடுமுத்தி சித்திமுத்தி பாடாண முத்தி
யிவை பழிசேர்முத்தி, திரிமலமு மகலவுயி ரருள்சேர்
முத்தி திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்ததாமே. (௧௮)

தவமென்றவநெறி சரிப்பார்முத்தியுஞ்
சிவகதிதனையு முறையுறவகுத்தது.

| | |
|---|---|
| (இ - ள்.) அரி வைய ரின்புறுமுத்தி | மகளிரிடத்துண்டான போகமே முத்தியென்கிற உலகாயதன்முத்தியும் |
| கந்தமைந்துமறுமுத்தி | உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமென்கிற பஞ்சகந்தங்களுங் கெடுகிறதே முத்தியென்கிற புத்தரிற் சௌத்திராந்திகன் முத்தியும் |
| திரிகுணமு மடங்குமுத்தி | முக்குணங்கெடுகிறதே முத்தியென்னு மாணரில் நிகண்டாவாதி முத்தியும். அன்றியும் மாயாவாதத்தி னீச்சுரசாங்கியன் முத்தியுமாம் |
| விரிவுவினைகெடுமுத்தி | எங்கும் விரிந்திருக்கப்பட்ட கன்மங்கள் கெடுகிறதே முத்தியென்கிற பிரபாகரன்முத்தியும் |
| மலம்போ முத்தி | ஆணவமலங்கெடுகிறதே முத்தியென்கிற அகச்சமயத்திற் பேதவாதி முத்தியும் |
| விக்கிரக நித்தமுத்தி | இந்தச்சரீரம் முத்தியிலு மழியாது நித்தியமா யிருக்குமென்கிற அகச்சமயத்திற் சிவசமவாதிமுத்தியும் |

| | |
|---|---|
| விவேக முத்தி | இந்தச்சரீரந் தொந்தனைப்பட்டு நிற்கிற சீவான்மாவுக்கு விவேகஞான முண்டாகிறது தானே முத்தியென்கிற மாயாவாதி முத்தியும் |
| பரவுமுயிர்கெடுமுத்தி | சொல்லப்பட்டுவருகிற வான்மா கெடுகிறதே முத்தியென்கிற மாயாவாதத்திற் பாற்கரியன் முத்தியும் |
| சித்திமுத்தி | பசுகரணங்கெட்டுச்சிவகரணமாகிறதே முத்தியென்கிற அகச்சமயத்திற் சங்கிராந்தவாதிமுத்தியும். அன்றியுமிதற்கு அட்டமாசித்தியென்னவுமாம் |
| பாடாண முத்தி | ஆன்மா கேவலத்திற்கிடக்குந் தன்மைபோல முத்தியிலு மொன்றுமறியாமற் பாடணம்போற் கிடக்குமென்கிற பாடாணவாதிமுத்தியும் |
| இவைபழிசேர் முத்தி | என்றிங்ஙனஞ் சொல்லப்பட்ட பத்துவகைமுத்திகளுங் குற்றத்தையுடைய முத்திகளாம். பின்னை நன்மையாகிய முத்தியேதென்னில் |
| திரிமலமு மகல வுயிரருள்சேர் முத்தி திகழ்முத்தி | ஆணவ மாயை காமியமென்கிற மூன்றுமலங்களுநீங்கி யான்மா வருளோடுங்கூடிநிற்கிறதே விளங்குதலையுடைய முத்தியாம் |
| இது முத்தித் திறத்ததாமே. | இதுவே முத்தியென்றுசொல்லப்பட்டவையெல்லாவற்றிலுந் திறப்பாட்டினையுடைய முத்தியாம். எ-று. |

வி-பு. உலகாயதன் அரிவையரின்புறுமுத்தி யென்றதே தென்னில் அவன் பிரத்தியக்ஷமொழிய அநுமானங் கொள்ளாதபடி

யாலே கன்மமு மான்மாவுஞ் சிவனு மில்லையென்றுசொல்லி இம்மைப் பயனாகிய மகளிரிடத் துண்டாகிய சிற்றின்பமே பொருளெனக்கொண்டா னெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "ஊடுவதுணர்வதுற்ற கலவிமங்கையனாயுள்ளி, வாடுவதடியில்வீழ்ந்து வருந்துவதருந்தவம்பின், கூடுவதுணர்வுகெட்டுக் குணமெலாம் வேட்கையாகி, நீடுவதின்பமுத்தி யித்தினின்றார்கண்முத்தர்." எ-ம். அவன் மறுமைப்பயன்கொள்ளா னென்பதற்கு. பி-ம். "வாசமார் குழலார்தங்கண் மணியல்குற்றடத்தேமூழ்கி, நேசமார்குமுதச்செவ்வா யமுதினைநிறையவுண்டு, தேசுலாமணிமென்றோண்மேற் சேர்ந்துவீற்றிருந்திடாதே, மாசுலாமனத்தோரெல்லா மறுமைகொண்டழிவர் மன்றே." எ-ம். "வீட்டினையுளதென்றோடி மெலிவதிங்கென்னைவிடு, காட்டுவோர்கண்டோர் கேட்டோர் கரியவை யுண்டேற் காட்டீர், நாட்டினிலரசனாணைக் கிசையவேநடந்துநாளு, மீட்டிய பொருள்கொண்டிங்கே யின்பத்தி னிசைந்திடீரோ." எ-ம். கண்டுகொள்க.

அவனிங்ஙனஞ் சொன்ன முத்தியை பழிசேர்முத்தியென்று மறுத்ததேதென்னில் பன்றியானது கன்மத்துக்கீடாக விட்டையை விரும்பிப் புசித்தாற்போல வவனு மசுத்தமாயிருக்கிறமகளிரிடத்துண்டாகிய சிற்றின்பத்தை யநுபவிக்கிறதுதானே முத்தியென்கையினா லெனவறிக. என்றிங்ஙன மறுத்ததற்கு. பி-ம். சித்தியாரில். "ஆசையுற்றுழல் சூகரங்க ளசுத்தமேவி யளைந்துதின், றேசுசித்தன வாயிருஞ்சுகமேழையோடுறு மின்பநீ. மாசதற்றருளிர் சித்தசுத்த வளர்ந்தருஞ்சுக வாரிகா, ணீசனுக்கடிமைத்திறத்தி னியைந்துநாம்பெறு மின்பமே." எ-ம். ஸ்ரீகளை அசுத்தமென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "தோலிரத்த மிறைச்சிமேதையெலும்புமச்சை சுவேதநீ, ராலெடுத்த முடைக்குரம்பை யழுக்கினோடு புழுக்குழா, நூலொழுக்கிடு கோழையீர னுரைக்குழுத்திரபாத்திரஞ், சேலடர்த்த கண்ணார்க ளென்பது தேர்மலத்திர

டிண்ணமே." எ-ம். "பொன்குலாவு மணிக்கலன்கண் மலம்புகி ற்கை பொருந்திடா, மின்குலாமிடையார்கடா மூலகத்தின்வேட் கை விடும்பொருள், புன்புலான்மல மூத்திராதி பொசிந்துநாறு புலைக்கல, மென்கொலாமிவர் மேல்விழுந்த திவற்றினென்பெற வெண்ணியே." எ-ம். கண்டுகொள்க. அன்றியு மிம்மைப்பயனுஞ் சிவனாலே யுண்டாகவேணுமென்று அவனைமறுத்ததற்கு. பி-ம். சித்தியாரில். "வேதனாரணனாரணம் மறியாவிழுப்பொருள்பே தைபாற், றாதனாயிருகானடந்திடு தோழன்வன்மைசெப் தொண் டனுக், காதலாலடியார்களுக் கெளியானடிக்கமலங்கணீ, காத லாலேணயீண்டன் வேண்டின விம்மையேதருங் கண்டிடே." எ-து. கண்டுகொள்க.

இனி இரண்டாவது புத்தரிற் சௌத்திராந்திகன் கந்தமைந் துமறுமூத்தி யென்ற தேதென்னில் பிருதிவி யப்பு தேயு வாயுவெ ன்கிற பூதநாலும் வலி கந்தம் இரதம் வன்னம் என்கிற உபாதான ரூபநாலும் ஆக உருவகந்தமெட்டும் குசலாவேதனை அகுசலா வேதனை குசலாகுசலாவேதனை என்கிற வேதனைக்கந்தமூன்றும் சோத்திரம் துவக்கு சக்ஷு சிங்நுவை ஆக்ராணம் மனது என் கிறகுறிப்புக்கந்தமாறும் பொய்சொல்லல் கோட்சொல்லல் கோபி த்துச்சொல்லல் பயனிலசொல்லல் என்கிறவாக்கின்குணநாலும் களவுக்குப்போதல் வழிதேதொழில்செய்தல் கொலைசெய்தல் என் கிறகாயத்தின்குணமூன்றும் கொலைநினைக்கை காமப்பற்று ஆசை என்கிற மனத்தின்குணமூன்றும் ஆகக்கூறிய வகைமூன்றினுஞ் செய்யப்பட்ட திக்குணம்பத்தும், அன்றியும் மெய்யுரை நல்வார் த்தை இனியனகூறல் பயன்படுசொல்லலென்கிற வாக்கின்குணநா லும் பள்ளிவலம்வருதல் தவம்புரிதல் தானஞ்செய்கையென்கிற காயத்தின்குணமூனறும் அருணினைவு ஆசையறுத்தல் தவப்பற்று என்கிற மனத்தின் குணமூன்றும் ஆக நற்குணம்பத்தும், ஆகவ் வகை யிரண்டினுக்கு முண்டாகப்பட்ட பாவனை கந்த மிருபதும்;

சத்தம் பரிசம் ரூபம் இரதம் கந்தம்சித்தம் என்கிற விஞ்ஞானகந்தமாறும், ஆக விங்ஙன நாற்பத்துமூன்றுவகையாக வெண்ணப்பட்டுவருகிற பஞ்சகந்தங்களைந்துங் காரணங்கெட்டுக் காரியங்கிடக்குமென்கிறது மிருத்துவோ யில்வழக்குமாய்ப் பந்தநுக்கமுமாயவிந்து குற்றவீடென்றும் கந்தங்களைந்து நேராகக்கெட்டு வீட்டையடையுமென்பதுவே முத்தியின்பமெனக் கொண்டானெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "ஓங்கியவுருவமோடும் வேதனைகுறிப்பினோடுந், தாங்குபாவனைவிஞ்ஞானந் தாமிவையைந்துங்கூடிப், பாங்கினுற்சந்தானத்திற் கெடுவதுபந்தநுக்க, மாங்கதுபொன்றக்கேடா யழிவதுமுத்தியின்பம்." எ - து. கண்டுகொள்க. அன்றியும் இந்தப்பஞ்சகந்தங்களு நாற்பத் துமூன்றுவகையாய் நிற்குமென்பதற்கு. பி-ம். புத்தநூலில். "எட்டிவையுருவமூன்றுவேதனையாறுஞான, மொட்டியகுறிப்போராறு செய்கையுமிருபதாகக், கட்டியபஞ்சகந்தங் கணத்தினிற்பங்கமாகித், தொட்டநாற்பத்துமூன்றும் சுகதநூற்றுணிவுதானே." எ-து. கண்டுகொள்க.

அவ னிங்ஙனஞ் சொன்னமுத்தியைப் பழிசேர்முத்தியென்று மறுத்ததேதென்னில் அவனுன்மாவில்லையென்கையினாலுமப்படியுண்டென்று நாட்டப்பட்ட பஞ்ச கந்தங்களுங் கற்பூரத்தீபம்போல வறக்கெட்டுப்போ மென்கையினாலு மந்தமுத்தியைப் பெறுவானில்லாதபடியாலு மெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "ஐந்துகந்தஞ்சந்தானத் தழிதல்பந்தநுக்க மறக்கெடுகை முத்தியின்ப மென்றறைந்தாய்கந்த, மைந்துமழிந்தான் முத்தியணைபவராரொன்ன வணைபவர்வேறில்லையென்று யார்க்குமுத்தியின்ப, மைந்தினுணர் வினுக்கென்னி னொழியாதவ்வுணர்வுண், டாகவேயெவ்விடத்து முருவாதிகந்த, மைந்துமுளவாமதுவும் பந்தமாகியரந்தைதரு முத்தியின்ப மறிந்திலைகாணீயே." எ-து. கண்டுகொள்க.

இனி மூன்றாவது திரிகுணமுமடங்குமுத்தி யென்றது அம ணரில் நிகண்டாவாதிசொன்னதென்றதேதென்னில் ஞானவாணீ யம் தரிசனவாணீயம் வேதநீயம் மோகநீயம் ஆயுசு நாமம் கோ த்திரம் அந்தராயம் என்கிற குணங்களெட்டும் பசித்தல் தாகம் பயம் செற்றல் உவகை மோகம் சிந்தனை பழித்தல் நோய் நசித் தல் வேர்வை கேதம் மதம்வேண்டல் அதிசயித்தல் புசிப்பு பிற ப்பு உறக்கம் என்கிறகுணங்கள் பதினெட்டும் அரசிகம் இரதி அரதிசோகம் சுகுச்சை பயம் என்கிறகுணங்களாறும் ஆகவிங்ங னஞ்சொல்லப்பட்டுவருகிற மூவகைக்குணங்களையும்விட்டுப் பூர் வகன்மத்திலுண்டாகிய கன்மங்கள் புசித்துத்தொலைந்த வவதாங் தானே வீட்டின்பமெனக் கொண்டானெனவறிக. இங்ஙனஞ் சொ ல்லப்பட்ட மூன்றுவகைக்குணங்களிலு முதற்சொன்ன ஞானவா ணீயமாதியாயுள்ள குணங்களெட்டுக்கும். பி-ம். சித்தியாரில். "ஈ றிலாதனவநந்தஞானமுத லெண்குணங்களெனு மொண்குணை, மா றிலாதமதிமேவுசீதமென மன்னிவானவர்வணங்கவே, வேறுலாவு குணஞானவாணீயமதாதியெட்டினையும்விட்டசீ, ரேறுபான்மை யுடனீடுவாழருக னெங்களுக் கிறைவனென்றனன்." எ-ம். இர ண்டாவதுசொன்ன பசித்தலாதியாயுள்ள குணங்கள் பதினெட்டு க்கும். பி-ம். சித்தியாரில். "பசித்தருகபயசெற்றமேடுவகை மோ கசிந்தனைபழித்தநோய், நசித்தல்வேர்விரொடு கேதமோடுமதம் வேண்டலீண் டதிசயித்தலும், புசிப்புவந்திடு பிறப்புறக்கமவை விட்டொரட்டகுணபூதனாய், வசித்தவன்னுலகின மேலிருந்தொரு சொ லிகலனுக்கருளுமென்றனன்." எ-ம். மூன்றாவதுசொன்ன அரிசிகமாதியாயுள்ள குணங்களாறுக்கும். பி - ம். சித்தியாரில். "ஏனுமொன்றுடைய வாகியெங்குமனு வாயிரும்புகன் மரங்க ளும், பூணுமங்குரு வெலாமுமாகுமவை புற்கலப்பொருள்க ளெ னலாய, காணுமங்கறு வகைத்தொழிற்களவை கட்டுவிட்டநெ

றிகன்மமேன், மாண நின்றுவரு மாறிமாறிமுன் வரைந்த துண்டு விடமாட்சியே." எ - ம். கண்டுகொள்க.

அவனிங்ஙனஞ் சொன்னமுத்தியைப் பழிசேர்முத்தி யென்று மறுத்ததேதென்னில் குணங்களைவிட்டவிடந் தவமாகாதாகையாலும் பூர்வகன்மநிச்சயித்துப் புசிக்கைக் கிவ்விடத்தான்மாவுக்குத் தனக்கென்னவோ ரறிவுமில்லாதபடியாலு மெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில் "பூர்வகன்மமற்றிடப் புசித்தபின்பு பொன்னெயி, னேர்வதென்னினக்கன்மத்து நிச்சயமிலாமையிற், றீர்தலின்மை தேரின்வாயில் சேர்தலின்மைதெண்கட, னீர்வறந் தபினபுணை மீனருந்தநின்றதே" எ-து. கண்டுகொள்க.

அன்றியும் திரிகுணமுமடங்குமுத்தி என்பதற்கு மாயாவாதத்திற் பேதமாயுள்ள நிரீச்சுரசாங்கியன் முத்தியென்னவு மாமெனவறிக. அஃதெங்ஙனேயென்னில் பிரகிருதிதத்துவமானது தூலசூக்குமமுமா யெல்லாப்பதார்த்தங்களுக்குங் காரணமுமாய் முக்குணங்களு மொத்துநிற்கிறதே தனக்குவடிவுமாய் அமூர்த்தமாயிருக்கும். புத்திமுதல் பிருதிவியீறாகிய தத்துவ மிருபத்துமூன்றுமிதனுடைய வியாத்தியாயிருக்கும். அதனோடுங்கூடின் சுத்தபுருடனும் பாலனாகிய பிள்ளைகளைப்போலச் சேட்டையுண்டாய்ப் பலயோனிகளையுமெடுத் திந்தக்குணங்களோடு மநாதியேகூடிப் புத்தியையுடைத்தா யவித்தையின் வசத்திலே யொழுகி ஜநநசம்பந்தமுண்டாயிருக்கிற சுகதுக்கமானகுணங்களு முண்டாயிருக்கும். இதுபெத்தம். இனியவன் முத்தியிலிருக்கும்படியாவது அந்தப்பிரகிருதியினுடைய தன்மையையறிந்து புத்தியையடைந்திருக்கிற வறியாமைபோய் விகிருதியாலுண்டான சுகதுக்கங்களைப் பிரகிருதிக் குண்டானதென்றுகண் டிது ஆன்மாவுக் கில்லையென்று குணத்திரயங்களடங்க விருப்பது. இதுவே மோக்ஷமென்று சொல்லுவனெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "மூலம்புரியட்டகம்விகிர்தி யாக்மூன்றாய்ப் பிரகிருதி, தூலஞ்சூக்குமம் பர

மாய்ச் சுத்தப்புருடன் சந்நிதியிற், பாலன்சேட்டை புரிந்துலக மியோனிபலவாய்ப் பரந்தொடுங்குஞ், சாலவன்று நிரீச்சுவர சாங்கியன்முன் சாற்றிடுமே." எ-து. கண்டுகொள்க.

இதனைப் பழிசேர்முத்தியென்று மறுத்ததேதென்னில் அப்படியான்மா வநாதியே சுத்தனானால் பிரகிருதியான் மறைப்புண்டு கிடக்கமாட்டான். அன்றியும் அதுநீங்கி முத்தியைப் பெற்றாலும் முன்புபோலே மீளவுங்கூடும். ஆகையா லிவையிற்றைக்கூட்டுகைக்கொருகத்தாவும் வேண்டுகையா லதுபொருளல்லவெனவறிக. இதற்கு. பி - ம். சித்தியாரில். "சுத்தனறிவன் புருடனெனிற் சூழாதாகும் பிரகிருதி, பெத்தநீங்கினாலும் பின் பெத்தனாவன் பேரறிவாற், கத்தமேவும் பிரகிருதி கண்டுகழிக்கமாட்டானேல், முத்தனாகான்சுத்தனுக்கு மூலப்பிரகிருதியிலையாம்." எ-ம். "அறியான்புருடன்பிரகிருதி யசேதனங் காரியத்தினுக்குக், குறியாய்நாதனுளனென்று கூறுமுத்திவிவேகமெனிற், செறியாந்தனை போகாதறியிற் சேர்த்தோன் வேண்டுஞ்செயலிற்போ, நெறியாற்பணிசெய் துடற்பாச நீக்கிக்கொண்ணீ நின்மலனால்." எ-ம். கண்டுகொள்க.

இனிநான்காவது விரிவுவினைகெடுமுத்தி யென்று பிரபாகரன் சொன்னதேதென்னில் அவனரிதாகச் செய்யப்பட்ட கன்மத்தின் முடிவிலே ஞானமென்பதொன்றுண்டா யந்தக்கன்மத்திலே யறிவுகூடி-நின்று தொழிற்பட் டந்தக் கன்மமு ஞானமுங்கெட்டு ஆன்மா மண்போலவுங் கல்லுப்போலவுங் கிடக்கிறதே முத்தியென்று கொண்டானெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில. "அருஞ்செயலின் பாவத்தேய் பூர்வமெனு மதுதோன்றித், தருஞ்செயலே நின்றழியிற் முன்பலிப்ப தாகுமது, வருஞ்செயலொன் றின்றியே மண்சிலைபோ லாமுத்தி, தருஞ்செயலு மெனவுணர்ந்து தாரணிமே லவன்சாற்றும்." எ-து. கண்டுகொள்க.

அவனிங்ஙனஞ்சொன்ன முத்தியைப் பழிசேர் முத்தியென்று மறுத்ததேதென்னில் கன்ம மறுமைப்பயனைத் தருமென்று வேதஞ் சொல்லுகைச்செய்தே யந்தக்கன்மங் கெட்டுப்போமென்றவன்சொல்லுகையினாலு மந்தக்கன்மத்தா லுண்டாகிய ஞானமுங்கெட்டுக் கல்லுப்போலவு மண்போலவுங் கிடக்குமென் றவன் சொல்லுகையா லவ்விடத்துப் பேறில்லாதபடியா லெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "வேறுபலன் றருவதுதான் வினையென்று வேதங்கள், கூறவோர்பூர்வந்தான் கொடுக்குமெனக் கொண்டவுணா, மாறுதரு மறையோடு முன்பின்றிவந்ததாற், ரேறியவின் பூமுடிம்மேற் சேர்ந்துமணந் திகழ்ந்ததுவாம்." எ-ம். "ஆநந்தங்கதியென்ன வறிவழிகைவீடென்கை, யூனம்பினுணர்வழிந்தோர்க் குளதாகுமோ முத்தி, தானிங்குச்சிவப்பொழியத் தழனிற்குமாறில்லை, ஞானங்கெட்டுயிர்நிற்கு மெனுமுணாதானன்றதால்." எ-ம். கண்டுகொள்க.

இனி ஐந்தாவது மலம்போ முத்தியென்றதைப் பேதவாதி சொன்னானென்றதேதென்னில் அவன்செம்பான திரதகுளிகையினாலே காளிதங்கெட்டுப் பொன்னான தன்மைபோலச் சிவனுடைய வருளாலே யான்மாவுக்கு மலமானதுகெட்டுப் பெறுவானும் பேறுமாக முத்தியிலேயிருப்பதே பொருளெனக் கொள்ளுகையினா லெனவறிக. இதற்கு. பி-ம். சங்கற்பநிராகரணத்தில். "ஈசனதருளாற் பாசத்தொகுதி - செறிவுறுசெம்பிற் கறையுறுகளிம்பு - குளிகைதாக்க வொளிபெற்றாங்கு - நித்தசுத்த முத்தராக - வைத்தனருலகின் மறைவல்லோரே." எ-று. கண்டுகொள்க.

அவனிங்ஙனஞ்சொன்ன முத்தியைப் பழிசேர்முத்தி யென்றதேதென்னில் வேதாகமங்கள் பதிபசுபாச மூன்றுநித்தியமென்று சொல்லுகைச்செய்தே ஆணவமலங் கெடுமென்கையினா

லெனவறிக. இதற்கு. பி-ம். சங்கற்பநிராகரணத்தில் அவன் மறுப்பிலே "மறைகளாகமத் துறைகண்மற்றெவையு - நாசமில்பதி பசு பாசமென்றுரைத்த-லயர்த்தோர்குளிகை சயத்தாற்றுமிரக்-காளிதநாசம் பாசத்தேய்த்தல் - கூடாதன்றியுங் குளிகைசிருண-நீடாதழித்த நிலைநிலையாகலிற் - பேதவாத மோதுதல்பிழையே." எ-து. கண்டுகொள்க.

இனி ஆறுவது விக்கிரகநித்தமுத்தி. எ-கு. சிவசமவாதி சுத்தமாயாசரீர மழியாமல் நித்தியமா யிருக்கிறதே முத்தியென்றானென்றதேதென்னில் வேட்டுவாளியானது ஒன்றுமறியாத பச்சைப்புழுவையெடுத்துத் தற்சொரூபமாக்கின தன்மைபோல வொன்றுமறியாத வான்மாவையுஞ் சிவனுடைய வருளெடுத்துக்கொண்டு தற்சொரூபமாக்க வந்த மாயாவுடல்தானே நித்தியத்துவத்தைப் பெற்றிருப்பதுதானே முத்தியென்று கொள்கையினாலெனவறிக. இதற்கு. பி-ம். சங்கற்பநிராகரணத்தில். "முன்னொன்றனது முதிரொளிஞான-மறியாப்பச்சைச் சிறுபுழுக்கவர்ந்த-வண்டெனவுயிரைக் கொண்டிடுமுயிரது - தன்னைநோக்கித் தானதுவாகி - யையவகைத்தொழிலு மெய்வகையுணர்வும் - பிரியாவாறு பெற்றுத் - திரியாப்பெரியோர் திரட்சிசேர்ந்திடுமே." எ - து. கண்டுகொள்க.

அவனிங்ஙனஞ்சொன்ன முத்தியைப் பழிசேர் முத்தியென்றதேதென்னில் அருள்பொருந்தின ஆன்மாக்களுடைய மாயாதேகந்தானே நித்தியத்துவத்தைப் பெற்றிருக்கிறது பதமுத்தியாகிய சாரூபமொழிந்து சாயுச்சியமாகாதாகையாலும் அன்றியும் யாதாமொரு சரீரதொந்தனை யுள்ளமட்டு மூன்றுமலமும் போகாதாகையாலு மப்படிச் சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சங்கற்பநிராகரணத்தில். "முத்தியுற்ற நற்றவரவையிடை - சேர்வொன்றனை சார்தருமுத்தி - சாலோக்கியமோ சாயுச்சியமேற் - பந்தமு

ற்ற கந்தலகழித்த - லறிவிரேனுடறிவு பிரியாப்பெற்றி - வேண்டு மென்பதற் கிண்டிவரிவ்வா - றிருப்பனொன்பதற் குருத்தான்வே ண்டும்.', எ-ம். சித்தியாரில். "அநாதியுடலொன்றினைவிட் டொ ன்றுபற்றிக் கன்மாலா யழிந்துவருதலா லந்தமில்லைப், பிறுதிய ருள் பெற்றவர்க ணித்தவுருவத்தைப் பெற்றிருக்கை முத்திய னிற் பெறும்பதமே யிதுவு, மிருவுறிலே யிதுதானுங் காயமுண் டே விருங்கன்மமாயை மலமெல்லாமுண்டா, மருதிதருமுட லாதி காரியத்தாலநாதி மலமறுக்குமருந்தற்று வுடன்மாயுங்கா லே." எ-ம். கண்டுகொள்க.

இனி ஏழாவது விவேகமுத்தி. எ-கு. மாயாவாதி யிவனு க்கு விவேகஞான முண்டாகிறதே முத்தியென்றுனென்று பொரு ட்கூறியதற்கு வகையேதென்னில் அவன்கருத்து நிர்மலமாயிருக் கிற ஆகாசத்தை மேகமறைத்ததன்மைபோலச் சுத்தமாயிருக்கிற பரப்பிரமமு மாயாவுபாதிகளினாலே வாதிக்கப்பட் டிந்தவுடலி லே மயங்கியிருக்கிறதே ஜீவான்மாவாவது. அந்த வாகாசத்திலே யொரு காற்றுத்தோன்றி யந்தமேகத்தை நீக்கினதன்மைபோல விந்தஜீவான்மாவி னிடத்திலே யொருவிவேகஞானந்தோன்றி யந்தமாயாவத்தையை நீக்குகிறதே முத்தியெனக்கொண்டானெ னவறிக. இதற்கு. பி-ம். சங்கற்பநிராகரணத்தில். "இவ்வியற் பந்தப் பௌவமதகல - விண்முதறந்த கொண்மூப்படலத்-திரு ளறவுதித்த காறகவிவேகந் - தன்னிற்றோன்றிச் சாதகமனத் தையு - மன்னகப்பிரிப்பு மடியிழைவாங்கலும் - போலஞாலம் பொய்யறக்கழிஇத் - தானேதாலுய்த் தன்னிற்றன்னைத் - தானே கண்டு தன்னலமுற்று - வசையிறத்துவ மசிபதத்தெளிவா - லக மேபிரம மாயினனெனவறிந் - தசலனாகிநற் சலசலமதியெனக்- கண்டிடுமுடலம் விண்டகல்கடந்த - மங்குலதுடைதர வெங்கு மாந்தகைத்தே." எ-று. கண்டுகொள்க.

அவனிங்ஙனஞ் சொன்ன முத்தியைப் பழிசேர்முத்தி யென்றதேதென்னில் இந்த ஜீவான்மாவினிடத் துண்டாகிய விவேகஞான முன்பேயுள்ளதாகி லிவனுக்கு மயக்கம்வர வழக்கில்லை: பின்புள்ளதாகி லாகாயப்பூப்போல வில்லாத துண்டாகாதாகையா லெனவறிக. இதற்கு. பி-ம். சங்கற்ப நிராகரணத்தில். "பந்தமதகல முந்துவிவேகம் - வான்வளி யெனத்தனிற் றனேதோன்றின் - முன்புளதாயின் மயங்கா திலதெனிற் - பின்புளதாகா திலதுளதெனின்வெளி - மலரா துதருமணம்." எ-து. கண்டுகொள்க.

இனி எட்டாவது பரவுமுயிர் கெடுமுத்தி. எ-கு. மாயாவாதத்திற்பாற்கரியன் ஆன்மாகெடுகிறதே முத்தியென்று னென்று பொருட்கூறியதற்கு வகையேதென்னில் அவன்கருத்து பாரப்பிரமந்தானே பிரபஞ்சமுமா யான்மாவுமாய்நின்று காரியப்படுகிறவிடத்து ஆன்மா கன்மத்தை யநுஷ்டித்து ஞானமுண்டானவாறே பிரமத்தோடுங்கூடி யான்மா வழிந்துபோகிறதே முத்தியெனக்கொண்டா னெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "சித்தேயுலகாய்ப் பரிணமித்துச் சீவனாகித்திகழ்ந்தமையாற், சத்தேயெல்லா முத்திதனைச் சாரக்கண்ட ஞானங்கள், வைத்தேமொழியுமாமறைகள் சொன்னமரபேவந்தக்கா, லொத்தேகெட்டுப்பிரமத்தோ டொன்றாய்ப்போமென் றுரைத்தனனே." எ-து. கண்டுகொள்க.

அவனிங்ஙனஞ்சொன்ன முத்தியைப் பழிசேர் முத்தியென்றதேதென்னில் அந்தப்பரப்பிரமம் பிரபஞ்சமாகாதபடியாலும் அன்றியு மான்மாவாகாதபடியாலு முத்தியி லான்மாக்கெட்டுப்போ மெனகையிலூற் பெறுவானில்லாதபடியாலுமெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "இயம்புகின்ற வுலகாயிடாது சடமென்றுமின்று சடமாகியே, முயங்குகின்றமையி னிலவணத்திரத முழுதுமேகமதை முயல்கைபோற்,

பயந்ததென்னி லறியப்படும்பொருளு மறிவுமென்று பலவா குமோ, தியங்குகின்றதெ னுரைத்திடாய்கடின மாதியாக வருசித்தனை" எ-ம். "அறிவினொடு செயல்மாறவிடதனை யணுகொளுதவையிரண்டினு, லுறுதியான பிரமத்தினோ டழியலொன்றலா மெனவுரைத்திகா, ணுறுதியே யிதனொடு சைவதின்றிசைவ துள்ளதாயிடினுமின்பமே, பெறுதிநீயுட லொடுயிர்களாயது பிறக்குமாறுசெயல் பெற்றியால்." எ-ம். கண்டுகொள்க.

இனி ஒன்பதாவது சித்திமுத்தியென்று அகச்சமயத் திற் சங்க்ராந்தவாதி யான்மா பசுகரணங்கெட்டுச் சிவகர ணமாகிறதே முத்தியென்று ளென்று பொருட்கூறியதற்கு வகையெதென்னில் அவனான்மாவுக்கு மலபாகம்வந்தவிடத் துக் கண்ணாடியிற்காட்டினநிழலந்தக்கண்ணாடியிற பொரு ந்தினாற்போலச் சிவனுடையவருளான்மாவிலே பிரகாசித்த வவதாரத்துக் காட்டத்தைப்பொருந்தின வக்கினிபோலவு முப்பளத்தைப் பொருந்தின புல்லும் வைக்கோலும் போல வும் பசுத்துவங்கெட்டுச் சிவத்துவமாய்ப் பசுகரணங்கெட் டுச் சிவகரணமாகிற சித்தியதே முத்தியெனக் கொள்ளுகை யினு லெனவறிக. இதற்கு. பி-ம். சங்கற்பநிராகரணத்தில். "பழமலநீங்க நிகழுங்காலை - வெற்றேரர்முகவொளி தோற் றுங்கலனெனத் - தலைவனதருளுயிர் நிலவிடுநிலைக் - காட் டத்துங்கி மாட்டத்தங்கிய - தனைமையுமளத்த புல்வையினீப் பும் - போன்றதுவாகித் தோன்றிடுமதனுற் - பசுகரணங்கள் சிவகரணங்க - ளாகமாறியறிவு - மேகமாமுயிர் யானெனதி ன்றே." எ-று. கண்டுகொள்க.

அவனிங்ஙனஞ்சொன்ன முத்தியைப் பழிசேர் முத்தி யென்றதேதென்னில் அப்படிக்கண்ணாடியானது கொடுந் தது கொள்ளுந் தன்மையுண்டாகையினுலு மான்மாவுக்கது

வில்லாதபடியாலு மாயாகருவிகள் ஜடமானபடியாலே யது சிவசொரூபமாகாதபடியாலு மெனவறிக. இதற்கு. பி-ம். சங்கற்பநிராகாரணத்தில். "நோக்குமுகவொளி நீக்காதாமெனக்-கவருந்தன்மை முகுரம்போலக்-கொடுத்தது கோடற் கடுத்ததுண்டன்றே - காட்டத்தங்கி சுடட்க்சுடு - மிந்தனத்தியற்கை வெந்தழருங்கா - வுப்பளத்தடுத்த புற்பலாலங்கள் - சடத்தவேனுங் கொடுத்ததுகொள்ளுந் - தன்மையுண்டெனக் கின்மையதன்றே - யவமுறுகருவி சிவமயமாமெனக்-கூறினதாகமம் வேறுருக்கவரா - தென்பதெனவைமூற்றுன்பந்தொடைக்குந் - திருவருண்மருவ வுரியனமெவ்வனி-லருளுருமாயா விருளினதாங்கொல்." எ - து. கண்டுகொள்க.

அன்றியு மிங்ஙனஞ்சொல்லப்பட்ட சித்திமுத்தியென்பதற்கு அட்டமா சித்தியென்னவுமாமென்று பொருட்கூறியதற்கு வழியேதென்னில் அணுமா மகிமா லகுமா கிரிமா ஈசத்துவம் வசித்துவம் பிராத்தி பிராகாமியம் என்னும் பெயர்களாயிருக்கும். இவையிற்றினுள் முதற்கூறிய அணுமாசித்தியாவது இவன் சூக்குமதேகமாகவேண்டுமென்றாற் சூக்குமதேகமாகையெனவறிக. இனி இரண்டாவது மகிமாசித்தியென்றது இவன் மகாமேருபோலப் பெருக்கவேணுமென்றாலப்படியே பெருக்கையெனவறிக. இனி மூன்றாவது லகுமாசித்தியென்றது பதினாலுலகங்களிலுந் தடைபடாமல் மனவேகம்போல் வியனினைந்தவிடத்திலே போயிருக்கையெனயறிக. இனி நான்காவது கிரிமாசித்தியென்றது ஐராவதமுதலா யுள்ளவையசைப்பினு மிவனசைவற்றிருக்கையெனவறிக. இனிஐந்தாவது ஈசத்துவமென்றது சர்வான்மாக்களையுந் தன்னுடைய வாக்கினையிலே நடத்திவித்துக் கொள்ளுகை யெனவறிக. இனி ஆறாவது வசித்துவசித்தியென்றது பூலோகத்தைத்தெ

ய்வலோகமாக்கியுந் தெய்வலோகத்தைப் பூலோகமாக்கியும்
வருகையெனவறிக. இனி ஏழாவது பிராத்திசித்தியென்றது
அரிபிரமாதியான தேவர்கள் போகங்கள் தனக்குவரவே
ணுமென்று மனதிலேநினைந்தா லப்பொழுதே சித்திக்கிறதெ
னவறிக. இனி எட்டாவது பிராகாமியசித்தியென்றது ஒரு
கணப்பொழுதிலே வனேக நூறாயிரம் ஸ்ரீகளைச்சிருஷ்டித்து
அப்பொழுதே யந்த ஸ்ரீகளுக்குப் பத்துவா யநுபவிக்கையெ
னவறிக. ஆகச்சித்தியெட்டு மிங்ஙனங்கண்டுகொள்க.

இது முத்தியாகாதென்று மறுத்ததற்கு. பி-ம். சித்தியா
ரில். "குறித்தடியி னின்றட்ட குணமெட்டுச்சித்திக் கோகன
கன்முதல்வாழ்வு குலவுபதமெல்லாம், வெறுத்துநெறி யறு
வகையு மேலொடுகீழடங்க வெறும்பொயென நினைந்திருக்க
மேலொடுகீழில்லா, னிறுத்துவதோர் குணமில்லான் றன்னை
யொருவர்க்கு நினைப்பரியா னொன்றுமிலா னேர்படவந்துள்
ளே, பொறுப்பரிய பேரன்பை யருளியதன்வழியே புகுந்தளி
ப்ப னெங்குமிலாப் போகத்தைப்புரிந்தே." எ-து. கண்டு
கொள்க. இதனு லெட்டுச்சித்தியென்பதை யட்டமாசித்தியு
நன்முத்தியாகா தென்பதற்குக் கண்டுகொள்க. அன்றியும்
தேவிகாலோத்திரத்தில். "அட்டமாசித்திமுத லனைத்துள்ள
பேறுகளுங், கட்டமாங்கதிகடரும்பரகதிகாணக்கொடா."
எ-ம். கோயிற்புராணத்தில். முத்தியு முடிவிலாத போகமு
நாலிரண்டாஞ் சித்தியுமென்செய." எ-ம். வருமேதுக்களி
னுங் கண்டுகொள்க.

இனி பத்தாவது பாடாணமுத்தி. எ-று. இவன்பாடா
ணம்போலே கிடக்கிறதேமுத்தியென்று பாடாணவாதிசொ
ன்னுனென்று பொருட்கூறியதேதென்னில் அவனறிவில்லாத
வான்மாக்க ளதீதாவத்தைப்பட்டுக் கிடக்குந்தன்மைபோ
லச் சுத்தாவத்தையினு மான்மா வொன்றுமறியாமற் கல்லுப்

போலே கிடக்குமென்று கொள்ளுகையாலப்படிச்சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சங்கற்பநிராகரணத்தில் "கொத்தைமாந்த ருய்த்திடுதுயில்போற் - காட்சியென்னக் காணுத்துயர - மாட்சியைமுத்தி யெனவகுத்தனரோ." எ-து. கண்டுகொள்க.

அவனிங்ஙனஞ்சொன்ன முத்தியைப் பழிசேர்முத்தியென்றதேதென்னில் ஆன்மா கேவலப்பட்டுக் கிடக்குந்தன்மைபோல முத்தியிலு மொன்றுமறியாமற் கிடப்பனென்கையினால் சிவாநுபோகமில்லாதபடியாலது நன்முத்தி யாகாதென்றதெனவறிக. இதற்கு. பி-ம். சங்கற்ப நிராகரணத்தில் "காட்சியென்னக் காணுத்துயர - மாட்சியைமுத்தியென வகுத்துரைக்கிற் - காணுபாவ மரணங்கருமம் - மேய்ந்தவர் முத்தி சேர்ந்தவரன்றே - யனையகதிக்கோர் முனைவரும்வேண்டா - தனிதருதுயர மெனுமிதுதிடமே - பர்டாணத்திற் கூடாமுத்தி." எ-து. அவனைமறுத்ததிலே கண்டுகொள்க.

இனி திரிமலமு மகலவுயி ரருள்சேர்முத்தி திகழ்முத்தி என்றபதத்தில் திரிமலமுமகல. எ-கு. ஆணவ மாயை காமிய மென்று சொல்லப்பட்ட. மலங்கள்மூன்று நீங்கவென்று பொருட்கூறியதேதென்னில் அந்தமலங்கள்மூன்று நீங்கினவிடமே சிவஞானத்தைப் பெற்றவிடமாதலா லப்படிச்சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சிவஞானபோதத்தில். "புண்ணியபாவம் பொருந்துமிக் காமியமு, மண்முதன்மாயைகாண் மாயையுங் - கண்ணிய, வஞ்ஞானங்காட்டுமிவ் வாணவமுமிம்மூன்று, மெய்ஞ்ஞானிக்காகாவிடு," எ-து. கண்டுகொள்க. அப்படி மூன்றுமலங்களும் விடவென்றதும் அந்தமலத்தின் குணபேதமான காரியங்களைவிடவென்றதெனவறிக. அவையாவன? ஆணவத்தின்குணமெட்டு மாயையின்குணமேழுங் கன்மத்தின் குணமாறுமெனவறிக. இவையிற்று

க்கு. பி-ம். இருபாவிருபஃதில். "கூறியமூன்றுமலத்தின்குண கருதி - வேறுகிளக்கின் விகற்பங்கற்பங் - குரோதமோகங் கொலையஞர்மதநகை - விராயெண்குணமுமா ணவமெனவி ளம்பினை - யஞ்ஞானம் பொய் யயர்வேமோகம் - பைசாசுந் நிய மாச்சரியம்பய - மாவேழ்குணனு மாயைக்கருளினை - யிருத்தலுங் கிடத்தலு மிருவினையியற்றலும் - விடுத்தலும்பர நிந்தை மேவலென்றெடுத்த - அறுவகைக்குணனுங் கருமத்த ருளினை." எ-து. கண்டுகொள்க. உயிரருள்சேர்முத்தி திக ழ்முத்தி. எ-று- ஆன்மாவருளோடுங் கூடினவிடமே விளங்கு தலையுடைய முத்தியாமென்று பொருட்கூறியதே தென்னில். ஆன்மாக்கள் சிவனைப்பெறுமிடத்துச் சிவனுடைய வருட்சத் தியினிடமாகச்சென்று பெறவேண்டுகையா லப்படிச் சொல் லப்பட்டதெனவறிக. இதற்கு. பி-ம். தத்துவவிளக்கத்தில். "பவமேவியநெறி பந்திக்குமீசன் பசுக்கடமை, யவமேவிய நெறிப் போகங்களால்முற்ற வந்திலையே, தவமேவியநெறி சத்திகண்ணுய்ச்சென்று சார்ந்துபின்னைச், சிவமேவுவரொன் றுகாண் கொச்சைக்காவலன் சித்திரிப்பே." எ-ம். சிவபுரா ணத்தில். "அவனருளாலே யவன்றாள்வணங்கி." எ-ம். இப் பொருட்பற்றியே யெனவறிக.

இனி யிதுமுத்தித் திறத்ததாமே. எ - கு. இதுவே முத் திகளென்று சொல்லப்பட்டவை யெல்லாவற்றினுந் திறப்பா ட்டினையுடைய முத்தியாமென்று பொருட்கூறியதேதென்னில் மற்றுள்ள முத்திகளென்று சொல்லப்பட்ட பத்துவகைமுத் திகளு மழியப்படுமாகையா லப்படிச்சொன்னதெனவறிக. அவைகளெல்லா நன்முத்தியல்ல வென்பதற்கு. பி - ம். சித்தி யாரில். "இம்மையேயீரெட்டாண் டெய்தியெழிலாருமேந்தி ழையார்முத்தியென்று மிருஞ்சுவர்க்கமுத்தி, யம்மையேயெ ய்று முத்தியைந்துகந்த மறக்கெடுகையென்று மட்டகுண

முத்தியென்று, மெய்மையேபாடாணம் போல்கைமுத்தியெ ன்றும் விவேகமுத்தியென்றுந் தன்மெய்வடிவாஞ்சிவத்தைச், செம்மையே பெறுகைமுத்தி யென்றுஞ்செப்புவர்கள் சிவ னடியைச்சேருமுத்தி செப்புவதிங்கியாமே." என்றமையால் சிவனடியைச்சேருமுத்தி யிவையீங்கலாக வேறேயுமுண்டெ ன்பது கருத்தெனவறிக. அஃதாவது சித்தியாரில், "இரும் பைக்காந்தம் வலித்தாற்போ லியைந்தங்குயிரை யெரியிரும் பைச்செய்வதுபோலிவனைத்தாக்கி, யரும்பிந்தனத்தையன லழிப்பதுபோன் மலத்தை யழித்தமல னப்பணைந்தவுப்பே போலணைத்து, விரும்பிப்பொன்னினைக்குளிகை யொளிப்பது போ லடக்கி மேலளித்துத்தானெல்லாம் வேதிப்பாகிக், கரும்பைத்தேனைப்பாலைக் கனியமுதைக்கண்டை கட்டியை யொத்திருப்பனந்தமுத்தியினிற்கலந்தே" எ-து. கண்டுகொ ள்க. ஆகையால் முத்திக்கேதுவான வான்மாக்களுக்குச் சிவன்றனது திருவடிஞானத்தைக் கடாக்ஷிக்குமவதாரத்து அவர்களுக்குண்டான மலமாயாகன்மங்களை நீக்கித் தன்னு டைய திருவடியிலே கூட்டிக்கொள்ளுவனென்பதே சைவசி த்தாந்த முத்தியெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "படி க்குநூல்கள்சிவாகமம் பசுபாசமோபதித்திற, மெடுத்தியம் புவதிசன்வார்கழலேத்திடுந்தொழிலென்றுமே, விடுத்திடும் பொருள்காமமாதிகள் வேண்டிடும்பொருளீண்டருள், முடி த்துமும்மலம்விட்டு நின்மல னாகிநின்றிடன் முத்தியே." எ-ம். அநாதிமுத்தனாய்ப்பர னாயசலனாயெல்லா வறிவுதொ ழிலநுக்கிரக முடையவரன்கன்ம, நுனிகமற் றொத்தவிட த்தே சத்திநிபாத நுழைவிதது மலங்களெலாநுங்கநோக்கி, மனாதிகரணங்களெலாமடக்கித்தன்னை வழிபடுநல்லறிவருளி மாக்கருணைகையா, லிறுதிபிறப்பினினின்று மெடுத்துமாறு

வின்பமுத்திக்கேவைப்ப னெங்கண்முத்தியிதுவே." எ-ம். கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது ஆன்மாக்கள் முத்தியைப்பெறுமிடத்து மகளிருடத்துண்டாகியபோகமே முத்தியென்கிற வுலகாயதனும் பஞ்சகந்தங்களுங் கெடுகிறதே முத்தியென்கிற புத்தரிற்சௌத்திராந்திகனும் மூன்றுவகையாகச் சொல்லப்பட்டகுணங்கள் கெடுகிறதே முத்தியென்கிற அமணரிற் நிகண்டாவாதியும் எங்கும் விரிந்திருக்கப்பட்ட கன்மங்கெடுகிறதே முத்தியென்கிற பிரபாகரனும் ஆணவமலங்கெடுகிறதே முத்தியென்கிற அகச்சமயத்திற் பேதவாதியும் முத்தியிலுஞ் சரீரமழியாதென்கிற அகச்சமயத்திற் சிவசமவாதியும் இந்தவுடலிலே ஜீவித்துநிற்கிற ஜீவான்மாவுக்கு விவேகஞானமுண்டாகிறதே முத்தியென்கிற மாயாவாதியும் இந்தவான்மா கெடுகிறதே முத்தியென்கிறபாற்கரியனும் ஆன்மா பசுகரணங்கெட்டுச் சிவகரணமாகிறதே முத்தியென்கிற சங்கிராந்தவாதியும் முத்தியிலு மொன்றுமறியாமற்கிடக்குமென்கிற பாடாணவாதியும் ஆக விப்படிச் சொல்லப்பட்ட பத்துவகை முத்தியு மறுத்து இவையெல்லாங் குற்றத்தையுடைய முத்திகளென்றுகாட்டி ஆன்மா வாணவ மாயை காமியமென்னப்பட்ட மும்மலங்களுநீங்கிச் சிவனுடைய திருவருண்ஞானத்தைப்பெற்றுச் சிவாநுபவமாய்நிற்கிறதே சைவசித்தாந்தமுத்தியென்று முறைமையையறிவித்தது. (௩அ)

---

வேறு—இது உலகாயதன்முதலிய பரசமயிகள் முத்தியுஞ் சுத்த சைவசித்தாந்திகள் முத்தியு முணர்த்திற்று.

அரிவைய ரின்புறுமுத்தி - மகளிரிடத்திற் சுகத்தையனுபவிப்பதே முத்தியெனு முலகாயதன் முத்தியும்,—கந்தமைந்து மறு

முத்தி - உருவமாதியைந்துகந்தமு மறுவதே முத்தியென்னும் புத்தன் முத்தியும்,—திரிகுணமு மடங்குமுத்தி - திரிகுணமுமடங்குவதே முத்தியென்னுஞ் சாங்கிய வைசேடிகன் முத்தியும்,—விரவுவினை கெடுமுத்தி-விரிந்தகன்மங் கெடுவதே முத்தியென்னு மருகன் முத்தியும்,—மலம்போமுத்தி - மலங்கள்போவதே முத்தியென்னும் பேதவாதி பாசுபதவாதிகள் முத்தியும்,—விக்கிரகநித்தமுத்தி - சரீரமிருக்கின்றதே முத்தியென்னுங் கன்மயோகிகள் முத்தியும்,—விவேகமுத்தி - சகலத்தையும் விவேகித்தறிவதே முத்தியென்னும் மாயாவாதி முதலியோர் முத்தியும்,—பரவுமுயிர் கெடுமுத்தி - புகழப்பட்ட உயிர்கெடுவதே முத்தியென்னும்பாற்கரியன் முத்தியும்,—சித்திமுத்தி - அட்டமாசித்தியைப்பெறுவதே முத்தியென்னுஞ் சித்தர்கள் முத்தியும்,—பாடாணமுத்தி - கல்லுப்போற்கிடப்பதே முத்தியென்னும் நியாயவைசேடிகன் பிரபாகரன் முத்தியும்,—இவை பழிசேர்முத்தி - ஆகிய விவை பத்தும் பழியைச்சேர்ந்தமுத்தியே,—திரிமலமு மகலவுயிரருள்சேர்முத்தி திகழ்முத்தி - மும்மலமும் விட்டுநீங்க வாத்மாவருளைப்பெறுகின்ற முத்தியே விளங்காநின்றமுத்தி,—இது முத்தித்திறத்ததாமே - இது முத்தியின் கூறுபாடு. எ-று.

திறமது வென்ப தொருசொல். இவர்கள் மதமறுப்புகளை ஈண்டுரைக்கிற்பெருகும்; சிவஞான சித்தியாரிற் காண்க.

பொது முற்றும்.

பாசவிலக்கண முற்றிற்று.

☞ இரண்டாஞ்சூத்திர முற்றிற்று.

பாயிரமுட்பட திருவிருத்தம்-௫௦.

---

## உண்மை.



இங்ஙனங் கூறப்பட்ட முத்தியைப்பெறுமிடத்து உண்மையையறிந்து முத்திபெறவேண்டுகையால் மேலுண்மையை யருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

இந்தவுண்மையில் முதற்செய்யுளுக்குத் தொந்தனையாவது இங்ஙனம் பொதுவாக வருளிச்செய்யப்பட்ட செய்யுளெம்பதினும் பொருள்களைச் சாமாநியத்திலே யுண்டென்று நாட்டினதொழிய விசேடவத்தங்களை யருளிச்செய்யாததேதென்றுவினவினமாணுக்கனைநோக்கி யவைகளெல்லாம் பெத்தநிலையைக்கூறிவருகையால் பெத்தங்கூறுமிடத்து முத்திநிலையாகிய விசேடவத்தங்களைக் கூற வழக்கல்லாதபடியாலும் அன்றியும் பதியையில்லையென்றும் பசுவையில்லையென்றும் பாசத்தையில்லையென்றுஞ் சொல்லப்பட்ட சமயிகளெதிர்ப்படுகையா லவர்களைநோக்கி மறுத்துக்கூறுமிடத்துப் பொருள்களைச் சாமாநியத்திலே யுண்டென்று நாட்டுமதொழிய ஆன்மதரிசனஞ் சிவதரிசனமுதலாயுள்ள விசேடவத்தங்களைக்கூற வழக்கில்லாதபடியாலு முற்கூறிய செய்யுட்களெம்பதும் பொதுவாகக் கூறினோமென்றும் ஆன்மதரிசனம் சிவதரிசனமுதலாகவுள்ள விசேடவத்தங்களை மேலுண்மையிலே சொல்லுகிறோமென்னு முறைமையை யருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

இங்கிவை பொதுவியம்பு மென்பர்க ளிதன்மே
லான்மாத், தங்கிய வஞ்சவத்தை தன்னுண்மை யுணர்த்துந்தன்மை, பொங்கொளி ஞானவாய்மை யதன்பயன் புனிதனுமை, மங்கதி னணைந்தோர்தன்மை யறைகுவ னருளினாலே. (க)

உண்மைநிலையி லொன்பதுதிறனும்
வண்மையுடனே வனப்புறவகுத்தது.

(இ-ள்.) இங் இவ்விடத் திங்ஙனங் கூறப்பட்ட செய்யு
கிவை பொருவிய ளைம்பதும் பெத்தநிலையைக் கூறுகையாலே
டீபுமென்பர்கள் பொருள்களைச் சாமாநியமாகக் கூறினதென்று
பெரியோர்கள் சொல்லுவார்கள்

இதன்மேல் இந்தப்பொருளைம்பதிற்கு மேலாகக்கொ
ண்ட உண்மைபாவது

ஆன்மா ஆன்மவிலக்கண மோரதிகாரத்தானும்

தங்கிய வஞ்ச ஆன்மாதங்கப்பட்டசாக்கிரஞ்சொப்பனஞ்
வத்தை சுழுத்தி துரியந் துரியாதீதமென்னு மஞ்சவத்
தையின்முறைமை யோரதிகாரத்தானும்

தன் னுண்மை ஆன்மாக்க ளாணவமலத்தாலே மறைப்பு
யுணர்த்தூந் தன் ண்டு மூலாதாரத்திலே கேவலப்பட்டுக் கிடக்
மை கிறவவதரத்துச் சிவன் கலையாதி தத்துவங்க
ளைக் காரணமாயையிலேநின்றுந் தோற்றுவி
த்து அதனாலே யந்த வாணவமலத்தைநீக்கி
யறிவிக்கிறமுறைமை யோரதிகாரத்தானும்

பொங் கொளி மிகுந்த பிரகாசமாகிய பேரறிவாய்நிற்கிற
ஞானவாய்மை சிவனுடைய ஞானத்தினுண்மை யோரதிகா
ரத்தானும்

அதன் பயன் அந்த ஞானத்தைப் பெறுமவர்பயனாகிய ஆ
ன்மதரிசனம் ஆன்மசுத்தி ஆன்மலாபமென்ன
ப்பட்ட மூன்றுவகையு மூன்றதிகாரத்தானும்

புனிதனாமம் சுத்தனாயிருக்கிற சிவனுடைய திருநாமமா
கிய அஞ்செழுத் தருணிலை யோரதிகாரத்தா
னும்

**அங்கதின னிணந்தோர் தன்மை** — அவ்விடத்தந்த வுண்மையாகிய சிவத்துடனே கூடிநின்றநுபவிக்கிற ஜீவன்முத்தரிலக்கண மோரதிகாரத்தானும்

**அறைகுவ னருளினாலே.** — ஆக விங்ஙனஞ் சொல்லப்பட்ட வதிகாரமொன்பதினாலுஞ் சொல்லாநின்றேன் றம்பிரானா ரநுக்கிரகத்தாலே யிந்தவுண்மை யைம்பதையும். எ-று.

ரு-ம். பொதுவியல்பு. எ-கு. முற்கூறிய செய்யுளைம்பதினுமுண்டாகிய பொருள்களைச் சாமாந்யத்திலே பெத்தநிலைகளைச் சொன்னதென்று பொருட்படுத்தினதுக்கு வழியேதென்னில் சிவஞான்மக்களை மலபாகம்வருத்துமிடத்து மலமாயாகன்மங்களோடுங் கூட்டி ஜநநமரணப்படுத்தி மலபாகம்வருத்து முறைமையைக்கூறுகையா லப்படிச் சொன்னதெனவறிக.

மற்றவைம்பது முண்மையென்றது அந்தப் பெத்தநிலையை நீங்கி முத்திக்கேதுவாயுள்ள வுண்மைநிலையைப் பெறவேண்டும் பக்குவான்மாக்களை நோக்கிக் கூறுகையாலெனவறிக.

இவையிரண்டுக்கும். பி - ம். கோவைத் திருவாசகத்தில். "பொதுவினிற்றீர்த்தென்னை யாண்டோன் புலியூரான்." எ - ம். "பொதுக்கடிந் தினிதுகாத்து." எ - ம். "சித்தியாரில். "ஆரணநூற்பொதுச் சைவமருஞ்சிறப்புநூலாம்." எ - ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

இனி தன்னுண்மை யுணர்த்துந் தன்மை. எ-கு. கேவலாவத்தை யான்மாவுக்குண்மையென்றதேதென்னில் செம்பைக் காளிதமறைத்தாற்போலவு மக்கினியைக் காட்ட மறைத்தாற்போலவுமான்மாவை யாணவமல மநாதியே மறைத்துநிற்கையா லப்படிச் சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "கேவலசகலசுத்த மென்னு மூன்றவத்தையான்மா, மேவுவன்கேவலந்தன்

னுண்மை." எ-ம். இந்நூலினும். "உறுந்தனியதிதமுண்மை யுயிர்க்கு". எ-ம். வருமது மிப்பொருட்பற்றியெனவறிக.

இதனாற்சொல்லியது முற்கூறப்பட்ட செய்யுளைம்பதும் பொதுவென்று மேலுண்மையைம்பதினு மான்மவிலக்கண முதலாக வொன்பததிகாரமாக வருமுறைமையு மறிவித்தது. (௧)

—o—

வேறு—இது உண்மையைம்பதிற்கு மதிகாரமுறைமை யுணர்த்திற்று.

இங்கிவை பொதுவியம்பு மென்பர்கள் - இங்ஙனஞ் சொல்லிப்போந்த வைம்பதுசெய்யுளுந் திரிபதார்த்தவிலக்கணத்தைப் பொதுப்படப் பொழிப்பகலமாகச் சொல்லுதலிற் பொதுவென்று சொல்லப்படுமென்ப ரறிவுடையோர்,—இதன்மேல் - இதற்குமேலான உண்மையென்று வகுக்கப்படு மைம்பதிலும்,—ஆத்மா - ஆத்மவிலக்கணம்,—தங்கிய வஞ்சவத்தை - அவ்வாத்மாப் பொருந்தப்பட்ட பஞ்சாவத்தை,—தன்னுண்மை யுணர்த்துந்தன்மை - சிவ னுள்ளேநின்று கருவிகளைக்கூட்டி யாத்மாவினுடைய வுண்மையுணர்த்து முறைமை,—உண்மை - சிற்சத்தி,—பொங்கொளி ஞானவாய்மை - ஒளிநிறைந்த சிவனுடைய ஞானத்தினுண்மை,—அதன்பயன் - அந்தச் சிவஞானத்தாலுண்டாகிய வாத்மதரிசனம் சுத்தி யிலாபமென்னு மூவகையதான பயன்,—புனிதனும்ம் - நின்மலனுடைய திருநாமமாகிய வைந்தெழுத்தருளிலே,—அங்கதி னணைந்தோர்தன்மை-அந்த வுண்மையிலே யணைந்தோர்தன்மை,—ஆகவிவை யெழு வகையினையும்,— அறைகுவனருளினாலே - சிவானுக்கிரகத்தாற் சொல்வன். எ - று.

அதன்பயன் மக்கட்பயன்போன்றது. இங்கிவை யங்கதிலென்பனவொருசொல். பாயிரத்தின்கட் பொதுவுண்மையெனப்பகுத்தலானு மீண் டிங்கிவை பொதுவெனப் பிரித்தலானு மிதன்

மேலாகிய உண்மை யைம்பதிலென் றுரைத்தாம். இவ்வைம்பதுந் திரிபதார்த்தத்தி னுட்பமுஞ் சம்பிரதாயக்கிரமமுஞ் சொல்லுதலா னுண்மையெனப்பட்டது. செவ்வெண்ணின்றொகை தொக்கது. பயன் மூவகையென் றென்பதுதொகை கொள்வாருமுளர்.

---

இங்ஙன முன்னமருளிச்செய்த செய்யுளைம்பதினுள் பாயிரம் பன்னிரண்டுசெய்யுளு நீக்கி மற்றுள்ளவையெல்லா முதற்சூத்திரமு மிரண்டாஞ்சூத்திரமுமாக வகுத்தருளிச்செய்து மேலுண்மையிலே நீக்கியுள்ள மூன்றாஞ்சூத்திர முதலாகப் பத்துச்சூத்திரமும் வருகையா லதில் மூன்றாஞ்சூத்திரமாகிய வான்மவிலக்கணமருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

அப்படி யான்மவிலக்கண மூன்றாஞ்சூத்திரமாகைக்கு வழியேதென்னில் சிவஞான போதத்தினுஞ் சிவஞான சித்தியாரினு மூன்றாஞ்சூத்திர மான்மவிலக்கணமாக நிற்கையா லிவையிற்றையு மப்படிவைக்கப்பட்டதெனவறிக. அவை யெங்ஙனேயென்னில் சிவஞானபோதத்தில். "உளதிலதென்றலி னெனதுடலென்றலி, னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி, லுண்டிவினை யின்மையி னுணர்த்தவுணர்தலின், மாயாவியந்திர தனுவினுளான்மா." எ-ம். சிவஞானசித்தியாரில். "உயிரெனப்படுவதிந்த வுடலின்வேறுளதா யுற்றுச், செயிருறுமிச்சாஞானச் செய்திகளுடையதாகிப், பயில்வுறுமின்பதுன்பப் பலன்களு நுகரும்பார்க்கிற், றுயிலொடுமைந் தவத்தைப் படுமுண்மை துரியாதீதம்." எ-ம். மூன்றாஞ்சூத்திர மான்மவிலக்கணத்துக் கருளிச்செய்கையா லிந்நூலினும். "செறிந்திடும்." என்ற விருத்தந்தொடங்கி "ஓரிடத்திருத்தல்." என்னும் விருத்தமுடிவாகிய செய்யுளெட்டினும் ஆன்மவிலக்கணத்தை யருளிச்செய்கையால் இதுவுமப்படி மூன்றாஞ்சூத்திரமாக நின்றதெனவறிக.

இவ்வதிகாரத்துக்கு வகுத்த செய்யுட்களில் ஆன்மப்பிரகா

சம் வருமுறைமைக்கும் வகுப்புகளுக்கும் வகையேதென்னில் "தனியதீதமுண்மை யுயிர்க்கெனவுணர்த்துமன்றே." எ-ம். "அருவினையுடலுனாவி யறிவினாலறியுமன்றே." எ-ம். "ஆன்மா வறிவிலதாகுமீச னசேதனத்தளித்திடானே." எ-ம். அசத்தைச் சத்துடனின்றுநீக்குந் தன்மையாற் சதசத்தாமே." எ-ம். ஆன்மாவின் பிரசங்கம் வருகையா லப்படிச்சொல்லப்பட்டதெனவறிக. அவைவருமாறு மேல்வருமிடத்திற் கண்டுகொள்க.

மேல்வரும்விருத்தத்துக்குத் தொடர்பு யாவது இங்ஙனஞ் சொல்லப்பட்டவான்மா வொருசரீரத்தோடுங்கூடி ஜீவிக்குமுறைமையை யருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

செறிந்திடுமுடலுண்மன்னிச் சேர்புலன் வாயில்பற்றி, யறிந்ததிலழுந்துமொன்று மறிந்திடா வறியுந்தன்மை, பிறிந்தடையஞ்சவத்தை பெருகியமலத்தாற் பேணி, யுறுந்தனியதீதமுண்மை யுயிர்க்கெனவுணர்த்துமன்றே. (உ)

தொல்லைவினையாற் றுவக்குண்டுழலும்
பல்லுயிர்த்தன்மை பாரித்துரைத்தது.

| | |
|---|---|
| (இ-ள்.) செறிந்திடுமுடலுண்மன்னி | கன்மத்துக்கீடாகச்செறிந்து கூடினசரீரத்திலே நிலைபெறுய்நின்று |
| சேர்புலன் வாயில்பற்றி யறிந்ததிலழுந்தும் | பொருந்தத்தக்க விடயங்களை யிந்திரியங்களினாலும் பூதங்களினாலு மந்தக்கரணங்களினாலுங் கலாதிகளினாலுஞ் சுத்ததத்துவங்களினாலும் பொருந்தியறிந்து அநுபவியாநிற்கும் |
| ஒன்று மறிந்திடா | இப்படி யிந்தத் தத்துவங்களினாலே யறிந்து அநுபவிக்கச்செய்தேயு மிவையிற்றாலே யல்லோ வறிகிறோமென் றறியமாட்டாது |

அறியுந்தன்மை பிறிந்து

அப்படிவிசுவவியாத்தனாய் நிற்கச்செய்தே யறிகருவிகள் பதினாறு நீங்கி நின்றகருவிக ளோடுங்கூடி

அடையஞ்சவத்தை பெருகியமலத்தாற் பேணியுறும்

ஒழுங்கிலே சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமென்னப்பட்ட வைந்தவத்தைகளினு மிக்கவாணவத்தான் மறைப்புண் டழுந்தாநிற்கும். இதுவன்றியும் இங்ஙனம்பொருட்கூறிவந்த பதமிரண்டையும் ஒன்றுமறிந்திடாவறியுந்தன்மை பிறிந்தடையஞ்சவந்தை பெருகியமலத்தாற் பேணியுறும் என்றொருபதமாக்கி, ஒன்றுமறிந்திடா. எ-கு. ஒன்றுமறியாமற் கேவலப்பட்டுக் கிடக்கத்தக்கதாக அறிகருவிகளுநீங்கி அடைவே யவத்தைப்பட்டுவருமென்று வருகாலமாகப் பொருளுரைப்பினுமாம்

தனியதீத முண்மை

ஆன்மாவினியற்கையான சுபாவத்தைவிசாரிக்குமிடத்து ஜீவிக்குங்கருவிகளெல்லாநீங்கி முற்கூறிய வாணவமலத்தான் மறைப்புண்டு மூலாதாரத்திலே பிரகிருதி தத்துவமுடம்பாகக் கிடந்தழுந்துமதே யதீதமாம். இவைகளெல்லாம்யார்க்கென்னில்

உயிர்க்கனெவுணர்த்துமன்றே.

இந்தமுறைமைகளான்மாவுக்கென்று சிவாகமங்கள் சொல்லாநிற்கும். எ-று.

ரு-ம். செறிந்திடுமுடலுண்மன்னி. எ-கு. கன்மத்துக்கீடாகச்செறிந்து கூடின வுடம்பென்று பொருட்கூறியதேதென்னில் ஆன்மாக்கள் கன்மத்தைப் புசிக்குமிடத் தொவ்வொரு சரீரங்களையெடுத் ததனோடுங்கூடிப் புசிக்கவேண்டுகையா லப்படிச் சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "உடல்விடாயோனிபற்றி." என்றசெய்யுளின் முடிவிலே. "இடருறுமுருவங்கன்மத் தளவினிலெடுக்கு மன்றே." எ-ம். இந்நூலினும்,

எண்ணரிதாய்." என்னுஞ்செய்யுளில் "இருவினையின் றன்மைக ளுக் கிடானயாக்கை யண்ணலருளானண்ணி." எ-ம். வருமது கண்டுகொள்க.

இனி சேர்புலன்வாயில்பற்றி யறிந்ததிலழுந்தும் எ-கு. ஆன்மாகூடியநுபவிக்கத்தக்க விடயங்களை யிந்திரியங்களினாலும் பூதங்களினாலு மந்தக்கரணங்களினாலுங் கலாதிகளினாலுஞ் சுத்ததத்துவங்களினாலு மறிந்தநுபவிக்குமென்றதேதென்னில் அப்படியான்மா விந்திரியங்களைக்கொண்டு விடயங்களைக் கொள்ளுமிடத்துப் பூதங்களினிடமாகநின் றறிகையினாலெனவறிக. அந்தக்கரணங்களினாலென்றது மனது பற்ற ஆங்காரமெழுப்ப புத்திநிச்சயிக்க சித்தஞ் சிந்தித்ததெனவறிக. இனி கலாதிகளினா லறியவென்றது காலங்கூட்டியும் நியதிவரைந்துங் கலை தொழிற்படுத்தியும் வித்தை யறிவையெழுப்பியும் அராக மிச்சையையெழுப்பியும் புருடன் போகவிச்சாவாகியும் பிரகிருதியழுந்துவித்தும் வருகையெனவறிக. இனி சிவதத்துவங்களினா லறியவென்றது அவையிற்றைப் பிரேரிப்பிக்கையினா லெனவறிக.

இனியொன்றுமறிந்திடா. எ-கு. அந்தத் தத்துவங்களினாலே கூடியறிந்து வருமிடத்து இவையிற்றாலேயல்லோ கூடியறிந்து வருகிறோமென் றான்மாவறியமாட்டாதென்று பொருட்கூறியதேதென்னில் ஆன்மா தத்துவங்களோடுங்கூடினவிட மயக்கவறிவாகையாலே தன்செயலறுதி தோன்றாமல் யானெனதென்கிறமமதை பற்றிநிற்கையா லப்படிச்சொன்னதெனவறிக.

இனி யறியுந்தன்மைபிறிந்து. எ-கு. ஆன்மாவிசுவவியாத்தனாய் நிற்கச்செய்தே யறிகருவிகள் பதினாறுநீங்கி நின்றகருவிகளோடுங்கூடி யவத்தைப்படுமென்று பொருட்கூறியதேதென்னில் ஆன்மா தத்துவமுப்பத்தாறோடுங்கூடி விசுவவியாத்தனாய் நிற்கச்செய்தே யவத்தைப்படுமவதரத்து அறிகருவியாகிய சுத்ததத்துவமைந்தும் வித்தியாதத்துவமேழில் பிரகிருதிதத்துவ நீங்க

லாக கலாதிகளாறும் பூதங்களைந்தும் ஆகப்பதினொறு நீங்கிநின்ற கருவியிருபதும், தொண்ணூற்ருறு வகையில் வாயுக்கள்பத்தும் வசனாதிகளைந்தும் ஆக முப்பத்தைந்தோடுங்கூடிச் சாக்கிரத்தில் முப்பத்தைந்துகருவியும் சொப்பனத்திலிருபத்தைந்து கருவியும் சுழுத்தியில் மூன்றுகருவியும் துரியத்திலிரண்டுகருவியும் அதீதத்திலொருகருவியுமாக நிற்கையா லப்படிச்சொன்னதெனவறிக. அப்படியானாலு மவத்தைக்கு அறிகருவிகள்பதினொறும் நீங்குமென்பதொழிய வாயுக்கள்பத்தும் வசனாதிகளைந்தும் சாக்கிரத்தினுங்கூடி நிற்கச்செய்தே யவத்தையிற் கூடுமென்றதேதென்னில் அப்படிச்சாக்கிரத்திற் கூடிநின்ருலு மவத்தைக் கவைமேலிட்டு ஜீவிக்கையினாலே யப்படிச்சொன்னதெனவறிக. அது வெங்ஙனேயென்னில் அந்தத் தசவாயுக்களுக்குங் குணமாவது பிராணவாயு மேனோக்கியும் அபானவாயு கீழ்நோக்கியும் வியானவாயு கலந்தும் உதானவாயுவிக்கியும் சமானவாயு சமமாக்கியும் நாகவாயுதும்மியுங் கூர்மவாயு கொட்டாவியுஞ் சோம்பலும் செய்தும் கிரிகரவாயு கண்ணை யிமைப்பித்தும் தேவதத்தவாயு நகைப்பித்தும் தனஞ்சயவாயு நாடிகளைத் திறப்பித்துடலை விக்கியும் வருமாகையா லப்படிச் சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். தத்துவசரிதையில். "செப்புமிடைபிங்கலைநற் சுழுமுனைகாந்தாரி திகழத்திசிங்நுவையு மலம்புடையும்புருட, னொப்பரியசங்கினியுங் குதமுமாகு மொருபத்திற்பிராண னபானன் பின்னும்வியானன், றப்பிலுதானன்சமான னாகன்கூர்மன் றருகிரிகரன்றேவதத்தன் றனஞ்செயனாம்பத்தி, லொப்பிலுசிருதங்கலத்தல் விக்கல்சமந்தும்ம லுயர்சோம்பு கண்ணேற்றல் நகைமலர்ச் சீவிக்கே." எ-து. கண்டுகொள்க. அவையெல்லாம் விசுவவியாத்தியி லில்லையோவென்னி லவையுண்டானாலு மான்மபோத மேலிட்டுநிற்கையா லவையடங்கியு மவத்தையி லான்மபோத மலத்தினாலேமறைந்து அடங்கிநிற்கையா லவைமேலிட்டு நிற்குமென்ற தெனவறிக. அதற்கநுபோகமே

தென்னில் விசுவ வியாத்தியிலடங்கிநின் றியங்கின வாயுக்கள் அவத்தையிலே மேலிட்டுப் பெருமூச்செறிந்துநின்று காரியப்ப டுமாகையா லப்படிச் சொன்னதெனவறிக. வாயுக்களப்படியா னாலும் வசனாதிகளைந்தும் விசுவவியாத்தியினு முண்டாயிருக்க அவத்தையிலே மேலிட்டுநின்று ஜீவிக்குமென்ற தேதென்னில் விசுவவியாத்தியினுங் கன்மேந்திரியமான வாக்காதிகளுக்கு விடயமாகநின்று ஜீவித்தாலு மவத்தைப்படுமவதரத்துஞ் சொப்பனத்திலந்தவாக்காதிக ணீங்கினாலும் வசனாதிகணின்று ஜீவிக்கையா லப்படிச்சொன்னதென வறிக. அஃதெங்ஙனேயென்னில் ஆன்மா சொப்பனத்தனான வவசரத்தும் இந்தப்பூதவுடலைசைவற்றுக்கிடக்கச்செய்தேயு மொருவரோடுவைதும் வாழ்த்தியும் சிலவிடங்களுக்குப்போயு மீண்டுஞ் சிலபண்டங்களையிடுதலேற்றல் செய்தும் விசர்க்கித்தும் விட்டித்தும் மைதுனம்பண்ணியும் சிறுநீர்போக்கியும் வருகையால் அவத்தையிலும் வசனாதியுண்டாகையா லப்படிச் சொன்னதெனவறிக. ஆகையா லவத்தையில் வாயுக்கள்பத்தும் வசனாதிகளைந்தும் மேலிட்டுநின்று ஜீவிக்குமென்பதை யநுபவத்தாற் கண்டுகொள்க.

இனி யடைஞ்சவஞ்சத்தைப் பெருகிய மலத்தாற்பேணியு மெம். எ - டு. அவத்தைகளினடைவே சாக்கிராவத்தைக்கு முப்பத்தைந்து கருவியென்றும் சொப்பனாவத்தைக்கு இருபத்தைந்து கருவியென்றும் சுழுத்தியவத்தைக்கு மூன்றுகருவியென்றும் துரியாவத்தையில் இரண்டு கருவியென்றும் அதீதாவத்தையில் ஒரு கருவியென்றும் பொருட்கூறியதற்கு. பி - ம். சித்தியாரில். "சாக்கிரமுப்பத்தைந்தும் நுதலினிற்கனவுதன்னி, லாக்கிய விருபத்தைந்து களத்தினிற்சுழுனைமூன்று, நீக்கியவிதயந்தன்னிற் றுரியத்திலிரண்டுநாபி, நோக்கியதுரியாதீத நுவலின்மூலத்தினொன்றே." எ - று. கண்டுகொள்க.

அன்றியும் பெருகியமலம். எ-கு. மிக்கமலமென்று பொருட்கூறியதேதென்னில் அந்தவாணவமல மொன்றாயிருந்துஞ் சர்வான்மாக்களையு மறைத்துநிற்கையாலு மநாதியே தொடங்கி மேலு மான்மவர்க்கமுள்ளமட்டு மந்தமலநீங்காதாகையாலு மப்படிச் சொன்னதெனவறிக.

இனி தனியதீதமுண்மை. எ-கு. கருவிகளொன்றுமில்லையென்றிருக்கப் பிரகிருதித்துவ முடம்பாகக் கிடக்கிறதேயதீதமென்று பொருட்கூறியதேதென்னில் அந்தப்பிரகிருதித்துவ மற்றுள்ள கருவிகளைப்போல ஆன்மாவை விட்டும்பற்றியும் வாராமற் கேவலசகல மிரண்டினும் உயிருமுடலும்போலப் பிரிவற்றுநிற்கையா லப்படிச் சொன்னதெனவறிக. அப்படியானால் தனியதீத மென்பானேனென்னில் அஃதாவது யாதாமொருவர் தனித்திருக்கிறார்களென்றா லவர்க ளுயிருமுடம்பு மிரண்டாயிருக்கவும் ஒருவரென்றும் தனியரென்றும் பெயர்பெற்றாற்போல வெனவறிக. இதற்குமேல் "எண்ணவொன்றிலாததீதம்" என்னும் விருத்தத்துக்கெழுதுகிற நுட்பத்தினுங் கண்டுகொள்க.

இனி யதீதத்தை யான்மாவுக்கு உண்மையென்பானேனென்னில் கருவிகளோடுங் கூடிநின்று ஜீவித்தவிடம் செயற்கையறிவாகையாலும் ஜீவிக்குங்கருவிக ணீங்கினவிட மியற்கையறிவாகையாலு மப்படிச் சொனனதெனவறிக. அப்படியான்மாவுக் கியற்கையான சுபாவமே யுண்மையென்பதற்கு. பி-ம். "கேவலந்தன்னுண்மை" எ-ம். "விஞ்சிய சுபாவமலத்துடன்மேவுதல்" எ-ம். வருமது நூல்களிலேகண்டுகொள்க.

இதனாற்சொல்லியது ஆன்மாக்க ளொவ்வொருசரீரங்களிலே கூடி நிற்குமிடத் திந்திரியங்களோடுங் கூடிநின்று ஜீவிக்குமுறைமையு மப்படி நிற்கச்செய்தே யறிகருவிகணீ

தென்னில் விசுவ வியாத்தியிலடங்கிநின் றியங்கின வாயுக்கள் அவத்தையிலே மேலிட்டுப் பெருமூச்செறிந் துநின்று காரியப்படுமாகையா லப்படிச் சொன்னதெனவறிக. வாயுக்களப்படியாறாலும் வசனாதிகளைந்தும் விசுவவியாத்தியிலு முண்டாயிருக்க அவத்தையிலே மேலிட்டுநின்று ஜீவிக்குமென்ற தேதென்னில் விசுவவியாத்தியிலுங் கன்மேந்திரியமான வாக்காதிகளுக்கு விடயமாகநின்று ஜீவித்தாலு மவத்தைப்படுமவதரத்துஞ் சொப்பனத்தி லந்தவாக்காதிக ணீங்கினாலும் வசனாதிகணின்று ஜீவிக்கையா லப்படிச்சொன்னதென வறிக. அஃதெங்ஙனேயென்னில் ஆன்மா சொப்பனத்தனுள வவஸரத்தும் இந்தப்பூதவுடலைசவற்றுக்கிடக்கச்செய்தேயு மொருவரோடுவைதும் வாழ்த்தியும் சிலவிடங்களுக்குப்போயு மீண்டுஞ் சிலபண்டங்களையிந்தெலேற்றல்செய்தும் விசர்க்கித்தும் விட்டித்தும் மைதுனம்பண்ணியும் சிறுநீர்போக்கியும் வருகையால் அவத்தையிலும் வசனாதியுண்டாகையா லப்படிச் சொன்னதெனவறிக. ஆகையா லவத்தையில் வாயுக்கள்பத்தும் வசனாதிகளைந்தும் மேலிட்டுநின்று ஜீவிக்குமென்பதை யநுபவத்தாற் கண்டுகொள்க.

இனி யடைஞ்சவஞ்சத்தைப் பெருகிய மலத்தாற்பேணியுறும். எ - சு. அவத்தைகளினடைவே சாக்கிராவத்தைக்கு முப்பத்தைந்து கருவியென்றும் சொப்பனாவத்தைக்கு இருபத்தைந்து கருவியென்றும் சுழுத்தியவத்தைக்கு மூன்றுகருவியென்றும் துரியாவத்தையில் இரண்டு கருவியென்றும் அதிதாவத்தையில் ஒரு கருவியென்றும் பொருட்கூறியதற்கு. பி - ம். சித்தியாரில். “சாக்கிரமுப்பத்தைந்தும் நுதலினிற்கனவுதன்னி, லாக்கிய விருபத்தைந்து களத்தினிற்சுழுனைமூன்று, நீக்கிய விதயந்தன்னிற் றுரியத்திவிரண்டுநாபி, நோக்கியதுரியாதீத நுவலின்மூலத்தினொன்றே.” எ - து. கண்டுகொள்க.

அன்றியும் பெருகியமலம். எ-கு. மிக்கமலமென்று பொருட்கூறியதேதென்னில் அந்தவாணவமல மொன்றுமிருந்துஞ் சர்வான்மாக்களையு மறைத்துநிற்கையாலு மநாதியே தொடங்கி மேலு மான்மவர்க்கமுள்ளமட்டு மந்தமலநீங்காதாகையாலு மப்படிச் சொன்னதெனவறிக.

இனி தனியதீதமுண்மை. எ-கு. கருவிகளொன்றுமில்லையென்றிருக்கப் பிரகிருதிதத்துவ முடம்பாகக் கிடக்கிறதேயதீதமென்று பொருட்கூறியதேதென்னில் அந்தப்பிரகிருதித்துவ மற்றுள்ள கருவிகளைப்போல ஆன்மாவை விட்டும்பற்றியும் வாராமற் கேவலசகல மிரண்டினும் உயிருமுடலும்போலப் பிரிவற்றுநிற்கையா லப்படிச் சொன்னதெனவறிக. அப்படியாகுல் தனியதீத மென்பானேனென்னில் அஃதாவது யாதாமொருவர் தனித்திருக்கிறர்களென்ற லவர்களுயிருமுடம்பு மிரண்டாயிருக்கவும் ஒருவரென்றும் தனியரென்றும் பெயர்பெற்றற்போல வெனவறிக. இதற்குமேல் "எண்ணவொன்றிலாததீதம்" என்னும் விருத்தத்துக்கெழுதுகிற நுட்பத்தினுங் கண்டுகொள்க.

இனி யதீதத்தை யான்மாவுக்கு உண்மையென்பானேனெ ன்னில் கருவிகளோடுங் கூடிநின்று ஜீவித்தவிடம் செயற்கையறிவாகையாலும் ஜீவிக்குங்கருவிக ணீங்கினவிட மியற்கையறிவாகையாலு மப்படிச் சொனனதெனவறிக. அப்படியான்மாவுக் கியற்கையான சுபாவமே யுண்மையென்பதற்கு. பி - ம். "கேவலந்தன்னுண்மை" எ - ம். "விஞ்சிய சுபாவமலத்துடன்மேவுதல்" எ - ம். வருமது நூல்களிலேகண்டுகொள்க.

இதனுற்சொல்லியது ஆன்மாக்க ளொவ்வொருசரீரங்களிலே கூடி நிற்குமிடத் திந்திரியங்களோடுங் கூடிநின்று ஜீவிக்குமுறைமையு மப்படி நிற்கச்செய்தே யறிகருவிகணீ

ங்கி யவத்தைப்படுமுறைமையு மதீதத்திற் கேவலாவத்தைக்கு ஜீவிக்குங் கருவிகளெல்லா நீங்கி யாணவத்தான் மறைப்புண்டுமூலாதாரத்திலே கிடக்குமுறைமையு மறிவித்தது.(௨)

---

வேறு—இது பொதுவைப்பதிலு மிரண்டுசூத்திர முணர்த்தி யினி ஓரிடத்திருத்தல்என்பதீறாகச் செய்யுளெட்டினாலு மாத்மப்பிரகாசமான மூன்றுஞ்சூத்திர முணர்த்துவான்றொடங்கி யவற்று ளிஃதாத்மவிலக்கண முணர்த்திற்று.

செறிந்திடு முடலுண்மன்னி - ஆன்மாவானது கன்மத்துக்கீடாகப் பொருந்தின சரீரத்துள்ளே நிலைபெற்று,—சேர்புலன்வாயிற்பற்றி யறிந்ததிலழுந்தும் - புசித்தற்கு யோக்கியமான விடயங்களை யிந்திரியங்களாலேகண்டந்தக் கரணங்களாலே கிரகித்து வித்தையினாலே யறிந் தவ்விடயத்திலே யழுந்திச் சுகதுக்கங்களை யனுபவியாநிற்கும்,—(காண்டலுங் கிரகித்தலும் பற்றியென்பதனாற் பெறுதும்) இனிக்கலாதிகளா லறிந்து மனாதிகளாற்பற்றி யிந்திரியங்களாற்கண்டு பிரகிருதியா லழுந்துமென்பாருமுளர்.—ஒன்று மறிந்திடாதறியுந்தன்மை-அறிவிக்குந் திருவருளும் புசிப்பிக்குஞ் சாதனமான கருவிகளும் போக்கியத்தின் வரலாறுமான விவ்வறிவிலொன்றுமறியாது,—பிறிந்தடையுஞ்சவத்தை பெருகியமலத்தாற்பேணியுறும் - கருவிகளைப் பிரிந் தடைவாகச் சாக்கிர முதலிய வவத்தைகளிலே மிகுந்த வாணவமலத்தாலே மறைப்புண் டவத்தைப்படுகின்றேமென்னுந்தன்மை தெரியாமலடங்கும்,—தனியதீதமுண்மை யுயிர்க்கென வுணர்த்துமன்றே - இந்தக் கருவிகளெல்லாநீங்கி யாணவமலநீங்காத வேகாந்தமான வதீதாவத்தை யவ்வாத்மாவுக்குப் பெத்தத்தி [illegible] மென்று திவ்யாகமஞ்சொல்லும். எ - று.

இனியறியுந்தன்மை பிரிந்தென ஒருபதமாக்கி யிங்ஙனமறியு முண்மையும்விட் டென்பாருமுளர். பிரிதலுபசாரம். பேணி மறைக்கப்பட்டு. இது பேணிவைத்தானென்றாற்போலுங் காலவழக்கு. எழுவாய்வருவிக்கப்பட்டது.

---

இப்படி யான்மாவென்பதொன் றுண்டாயிருக்கச்செய்தேயதனை யில்லையென்று உலகாயதனிந்தப்பூததேகந்தானே யறிகிறதென்றும் புத்தரில் மாத்மீக ணிந்திரியங்கடானேயறிகிறதென்றும் மாயாவாதி பிரமத்தின்சந்நிதியிலே யந்தக்கரணங்கடானே யறிகிறதென்றும் மீளவும் உலகாயதன் வாயுப்பூதந்தானே யறிகிறதென்றுஞ் சொல்லுவானேனென்று வினவின மாணவகனை நோக்கி யவரவரத்தங்களை மறுத்துக்காட்டிச் சிவனறிவிக்க வான்மாவே யிந்தவுடலிலே நின் றறிகிறதென்னு முறைமையை மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

உருவுணர் விலாமை யானு மோரொரு புலன்களாக
மருவிநின் றறிதலானு மறுதிக டம்மின்மன்னித்
தருபய னுகர்தலானு முயிர்சட மாதலானு
மருவினை யுடலுள்ளாவி யறிவினு லறியுமன்றே. (௩)

புகலுயிரில்லெனும் புறச்சமயத்தவர்
தகவிலுரையைச் சாற்றிமறுத்தது.

அப்படி யான்மாவென்ப தொன்றில்லை யிந்தப்பூததேகந்தானே யறியுமென்கிற வுலகாயதன் கருத்தை மறுத் தருளிச் செய்கின்றது.

(இ-ள்.) உருவுணர்விலாமையானும் — இந்தச்சரீரமான துறக்கமான பொழுதுஞ் சவமானபொழுது மறியாதபடியாலே யிவையிற்றைக் கொண்டறிகைக் கோரான்மாவுண்டென் றறிவாயாக.

அன்றியும் இரண்டாவது இந்திரியங்களறியுமென்ற மாத்மீகன் கருத்தை மறுத்தருளிச்செய்கின்றது

ஓரொரு புலன்களாக மருவிநின் றறிதலானும்

இந்திரியங்க ளுறக்கத்தி னறியாதபடியாலும் அன்றியு மிவை யொன்றறிந்ததொன்றறியாதபடியாலு மிந்த விந்திரியங்களைக் கொண்டறிகைக் கொரு ஆன்மாவுண்டென் றறிவாயாக.

அன்றியு மூன்றாவது அந்தக்கரணங்களறியுமென்கிற மாயாவாதி கருத்தை மறுத்தருளிச்செய்கின்றது

மருதிகடம் மின்மன்னித் தருபயனுகர்தலானும்

மனம் புத்தி யாங்காரஞ் சித்தமென்னப்பட்ட அந்தக்கரணங்க ளொன்றையொன்றறியாத படியாலும் அன்றியும் ஒன்றறிந்ததொன் றறியாதபடியாலும் இவையிற்றைக்கொண்டறிகைக்கொரு ஆன்மாவுண்டென்றறிவாயாக.

அன்றியும் நான்காவது வாயுப்பூத மறியுமென்று மீளவும் உலகாயதன் சொன்னகருத்தை மறுத்தருளிச்செய்கின்றது.

உயிர் சட்டமாதலானும்

உறக்கத்தின்கண் வாயுப்பூத மியங்கச்செய்தேயு மறிவற்றுக்கிடக்கையாலு மிதனைக் கொண்டறிகைக் கொரு ஆன்மாவுண்டென்றறிவாயாக. இங்ஙனமிவை யறியாதாகையால்

அருவினை யுடலுளாவி யறிவிலறியுமன்றே

கட்புலனுக்குத் தெரியாம லரூபமாயிருக்கப்பட்ட கன்மத்துக்கிடாக வுண்டான வுடம்பிலே நிற்கிறவான்மா கத்தாவின்

றிருவருளினாலே யறிவிக்கவறிந்து ஜீவியா
நிற்கும் எ - று.

இங்ஙன நாட்டப்பட்ட சமயிகளுக்கு. உ - ம். உருவு
ணர் விலாமையானும். எ - கு. இந்தப் பூததேகமானது சவ
மானபொழு தறியாதென்றும் அனறியும் உறக்கத்தின்கண்
வாயுப்பூத மறியாதென்றும் உலகாயதன்கருத்தை மறுத்தத
ற்கு. பி - ம். சிவஞானசித்தியாரில். "அறிவுபூதமதென்னில்
வேறு புறத்தறிந்தமைகண்டிலஞ், செறிவுதானுடலத்தெனிற்
சவமானபோ துடறேருமோ, குறிகொளாதுடல் வாயுவா
னது கூடிடாமையி லென்னின், பிறிதராதுயிர் நிற்கஞான
முறக்கமென் பிறவாதரே." எ - து. கண்டுகொள்க.

இனி ஓரொருபுலன்களாக மருவிநின்றறிதலானும். எ-கு.
இந்திரியங்களறியாதென்றும் புத்தரில்மாத்திமீகன் கருத்தை
மறுத்ததற்கு. பி - ம். சித்தியாரில். "கருவியுமொளியும்வேறு
கண்டிடுங்கருத்துநிற்கப், பொருள்புணராமையாலே போத
ம்வந்தெழுவதின்று, மருவிடும்பொருளுண்டாக வந்தெழும்
புத்தியாலுற், பொருளுளதாகுமாகப் போதமு முள்ளதா
மே." எ - ம். "அறிவதைம்பொறியேயென்னி னுறக்கத்துமறி
வாயாகு, மறிவதுமொன்றொன்றாக வொன்றொன்றுயறியுமெ
ன்னி, லறிவுகளொன்றையொன்றங் கறிந்திடா வைந்தையு
ங்கொண், டறியுமொன்றுண்டதன்மா வைம்பொறியறிந்தி
டாவே." எ - து. கண்டுகொள்க.

இனி மூன்றுவது மருதிகடம்மின்மன்னித் தருபயனுக
ர்தலானும். எ - கு. அந்தக்கரணங்க ளறியாதென்று மாயா
வாதி கருத்தை மறுத்ததற்கு. பி-ம். சித்தியாரில். "வேறதா
குமுருவத்திலேபரம் வெளிப்படும்மெனவிளம்பினீ, யூறிலா
வொரு சவத்திலேயதுவு முண்டுகாணுணர்வ தின்றுதான்,
மாறிவாயுவு மருதியானவையும் வந்திடாமையினினமெற

னி, னீறுதானுடைய தாயதோபிரம மென்கொலோ வினை யிறப்பதே.” எ - து. கண்டுகொள்க.

இனி நான்காவது உயிர்சடமாதலானும். எ - கு. வாயுப்பூத மறியாதெனறு உலகாயதனை மறுத்ததற்கு முற்பதத்திலே யிவனை மறுத்த உதாரணத்திலே கண்டுகொள்க. அன்றியும் உயிர்சடமாதலானும். எ - கு. பிராணவாயுவென்று பொருட்படுத்தி அகச்சமயத்திற் சங்கிராந்தவாதி என்பாருமுளர். அதற்கிந்தச்செய்யுளின் கருத்து “புகலுயிரில்லெனும் புறச்சமையத்தவர், தகவிலுரையைச் சாற்றிமறுத்ததுஎன்று புறச்சமயிகளத்தத்தை மறுக்கையினாலே யது வத்தமல்ல வெனவறிக.

இதனாற்சொல்லியது ஆன்மாவென்ப தொன்றில்லையென்று சொல்லுகிற உலகாயதன் மாத்மிகன் மாயா வாதி இவர்கள் மூவாத்தத்தையுமறுத்து மாணவகனைநோக்கி யான்மாவுண்டென்று நாட்டி யிந்தவான்மாவுஞ் சிவனறிவிக்கவறிந் திந்தவுடலிலேநின்று ஜீவிக்கமென்னு முறைமையை யறிவித்தது. (௬)

---

வேறு—இதுதேகமு மிந்திரியமு மந்தக்கரணமும் பிராணவாயுவு மாத்மாவென்னு முலகாயதன் புத்தன் சன்மயோகிகளான விவர்களை நிராகரித்துத் தேகத்துக்கன்னியமாகவாத்மாவுண்டென வாத்ம சாதகமுணர்த்திற்று.

உருவுணர் விலாமையானும் - உடம்பான தவத்தையினுமரித்த போது முணர்ச்சி யில்லாத சடமாகையாலும்,— ஓரொருபுலன்களாக மருவிநின்றறிதலானும்-சோத்திராதிகளைந்துந் தத்தமக் காதாரமாகிய பூதங்களைப் பொருந்திநின்றெவ்வொரு விடயங்களாக வைந்தையு மறிகையாலும்,இத

ற்குச் சோத்திராதிக ளைந்தையும் பொருந்திநின் றொருவனை றிகையாலு மென்றுரைப்பர்?—மருதிகடம்பின்மன்னித்தரு பயனுகர்தலானும் - அந்தக்கரணங்க டங்களிற் கூடிப் பற்றி நிச்சயித் தகங்கரித்துச் சிந்தித் திந்திரியங்கடந்த விடயங்களை ப்புசிக்கையாலும், இதற் கிந்திரியங்களைப் பொருந்தி யொவ்வொரு விடயங்களைப்பற்றி நிச்சயித் தகங்கரித்துச் சிந்திக்கையி னவையொன்றறிந்த தொன்றறியாதா தலி னவை நாலினு மாத்மாப் பொருந்தியவற்றிரு லந்தப் பயனைப் புசிக்கையாலு மென்று முரைப்பர்,—உயிர்சடமாத லாலும்-பிராணவாயு வசித்தையை யறியாதிருத்தலானும்,— அருவினையுடலுளாவி யறிவிலுலறியுமன்றே - நீங்குதற்கரிய வினைக்கிடாகவெடுத்த தேகத்திலே யாத்மாவானது சிவன் கூட்டி யருளின கலாஞானத்தாலே யறியும். எ-று.

---

அப்படிச் சிவனறிவிக்க வான்மாவறியுமென்பது பொருளல்ல ஆன்மா தானேயல்லவோவறிந்து ஜீவித்துநிற்குமென்கிற அவிகாரவாதியையும் அதுவல்ல ஆன்மாவுக் கறிவில்லையென்கிற சங்கிராந்தவாதியையும் அதுவல்ல வான்மாவுக் கிந்திரியங்க ளறிவைக்கொடுக்குமென்கிற சிவசமவாதியையும் அதுவல்ல ஆன்மாவுக்கென்ன வோர்சிற்றறிவு சற்றுமில்லை சிவ னறிவுகொடுத்தறிவித்தா லறியுமென்கிற பரிணமவாதியையு மறுத் தருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

அறிவெனில் வாயில்வேண்டா வன்றெனி லவைதாமென்னை, யறிவதை யுதவுமென்னி லசேதன மவைதாமெல்லா, மறிபவ னறியுந்தன்மை யருளுவ னென்னிலான்மா, வறிவிலா தாகுமீச னசேதனத் தனித்திடானே. (௬)

உயிருளதென்னு மூட்சமயத்தவர்
செயருறுமொழியைத் தெரிந்துசெப்பியது.

அப்படிச் சிவனறிவிக்கவேண்டா ஆன்மாதானே யறியுமென்கிற ஈஸ்வர வவிகாரவாதியை மறுத் தருளிச் செய்கின்றது.

(இ-ள்.) அறிவெனில் வாயில் வேண்டா

அப்படியான்மாவை யறிவென்பையாமாகில் ஒன்றையறியுமிடத்து இந்திரியங்களைக் கொண்டறியவேண்டுவதில்லையாம். ஆகையாற் றற்சுதந்தரமாயறிகிறவ னல்லவென்பதாகருத்து.

அன்றியும் இரண்டாவது ஆன்மாவை யறிவல்லவென்கிற சங்கிராந்தவாதியை மருத்தருளிச்செய்கின்றது.

அன்றெனி லவைதாமென்னை

ஆன்மாவை யறிவல்ல வென்பையாமாகில் அந்த விந்திரியங்களா லிவனுக் கொருபயனு மில்லையாகவேண்டும்; ஆகையா லிவனுக் கறிவில்லையென்னவு மொண்ணாதென்பதுகருத்து.

அன்றியும் மூன்றாவது இந்திரியங்க ளான்மாவுக் கறிவைக் கொடுக்குமென்ற சிவசமவாதியை மறுத்தருளிச் செய்கின்றது.

அறிவதையுதவுமென்னிலசேதனமவைதாம்

இந்திரியங்க ளான்மாவுக் கறிவைக் கொடுக்கு மென்பையாமாகிற் சேதனனாயுள்ள வான்மாவுக்கு அசேதனமாயுள்ள விந்திரியங்க ளறிவைக்கொடுக்கமாட்டா

து. ஆகையா லிந்திரியங்களைக்கொண்டு ஆன்மா வறியுமென்பது கருத்து.

இனி நான்காவது ஆன்மாவுக் கென்ன வோர் சிற்றறிவு தானுமில்லை சிவனறிவு கொடுத்தா லறியுமென்ற பரிணாமவாதியை மறுத்தருளிச்செய்கின்றது.

எல்லா மறியவ னறியுந்தன்மையருளுவனென்னி லான்மாவறிவிலாதாகும்

சர்வத்தையு மொருநிகழ்ச்சியா யறிகிற சிவன்றானே யான்மாவுக் கறிவைக்கொடுப்பனென்று நீசொல்லில் முன்பான்மாவுக்குச் சிற்றறிவுதானுமில்லையாக வேண்டும். அப்படியான்மாவுக்கு முன்பு அறிவுண்டாமாகில் சிவனறிவிக்கவேண்டுமோ வென்று நீசொல்லில்

ஈசனசேதனத்தனித்திடானே.

சிவ னறிவுள்ளமுதலுக் கறிவைக்கொடுப்பதொழிந்து அறிவில்லாத கடபடாதிகளுக் கறிவைக்கொடான். எ - று.

உ - ம். இங்ஙனங் கூறப்பட்ட சமயிகள்மதமு மதற்கு மறுப்புஞ் சங்கற்ப நிராகரணத்திலே காட்டுதும்.

ஈஸ்வர வவிகாரவாதி ஆன்மாவை யறிவென்பதற்கு. பி-ம். "பஃறுளைக்கடத்தி னுள்விளக்கேய்ப்ப-வறிவுளதாகு முருவுறுமுயிர்கள்." எ - து. அவன்மதத்திலே கண்டுகொள்க.

அப்படியான்மா வறியவல்லவென் றவனை மறுத்ததற்கு. பி - ம். "இருந்தன்கேள்வி திருந்திடுமுயிர்க - ளறிவெனில் வாயிற் பொறிபுலனென்னை-மற்றவைபற்றி யுற்றறிந்திடுதலி- னறிவெனவழங்கு முயிரெனவுரைத்தல் - காணுங்கண்ணினன் கைகொடுதடவிப் - பூணும்பொருளின் பெயர்பலபகற-

லென்னுங்கிளவி தன்னொடுதருமே." எ - து. அவன்மறுப்பிலே கண்டுகொள்க.

இனி யிரண்டாவது ஆன்மாவை யறிவல்லவென்று சங்கிராந்தவாதி சொன்னதற்கு. பி-ம். நீங்காதொளிருயிர் விளக்கெனநிற்கு-மளப்புறுமறிவின்று." எ - து. அவன்மதத்தில் கண்டுகொள்க.

இனியான்மாவுக் கறிவுண்டென் றவனை மறுத்ததற்கு. பி - ம். "இன்றுனதுரையி னன்றியுயிரொளிர் - தீபம்போலத் தாபந்தரிவிருள் - செறியுந்தன்மையெ னறிவிலதாகி - யொளியெனவுரைத்த தெளிவதற்கேதாம்." எ - து. அவன்மறுப்பிலே கண்டுகொள்க.

இனி மூன்றாவது இந்திரியங்க ளான்மாவுக்கறிவைக் கொடுக்குமென்று சிவசமவாதி சொன்னதற்கு. பி-ம். "பாசமைம்புலன் றேசுறவுணர்த்தப்-பசுத்தனிஞானம் புசித்திடுமன்றே." எ - து. அவன்மதத்தில் கண்டுகொள்க.

இனி யிந்திரியங்க ளான்மாவுக்கறிவைக்கொடுக்க மாட்டாதென் றவனை மறுத்ததற்கு. பி - ம். பொறிபுலன் றுனேறவறியா." எ - து. அவன்மறுப்பிலே கண்டுகொள்க.

இனி நான்காவது ஆன்மாவுக்குச் சிற்றறிவுதானு மில்லை சிவனறிவு கொடுத்தாலல்ல தறிவில்லையென்று பரிணாமவாதி சொன்னதற்கு. பி - ம். "அறிவோன்றானு மறிவிப்போனு மறிவாயறிகின் றோனுமறிவுறு - மெய்ப்பொருடானும் வியந்திதுவெனப்படு-மப்பொருளியாவு மவனேயென்றும்" எ-து. அவன்மதத்திலே கண்டுகொள்க.

இனி யான்மாவுக் கநாதியே சிற்றறிவுண்டென் றவனை மறுத்ததற்கு. பி - ம். "அறிவொன்றில்லோர்க் கிறையருளுதவல் - பிறிவறிவரிய செறியிருளிடத்தோ - ரந்தகர்காண வங்

தோரொம்மை - நீவிருங்காண வேணுமென்றுங் - கெடுத்தொ
ருதீபங் கொடுத்ததையொக்கு - மிச்செயற்கிறைவன் கொச்
சையனன்றே.'' எ - று. அவன்மறுப்பிலே கண்டுகொள்க.

இவனுற்சொல்லியது ஆன்மாதானே யறியுமென்ற அவி
காரவாதியையும் ஆன்மாவுக்கென்னவோ ரறிவில்லையென்ற
சங்கிராந்த வாதியையும் ஆன்மாவுக்கு இந்திரியங்களறி
வைக் கொடுக்குமென்ற சிவசமவாதியையும் ஆன்மாவுக்குச்
சிற்றறிவுதானுமில்லை சிவனறிவித்தா லறியுமென்ற பரிணாம
வாதியையும் மறுத்தருளிச் சிற்றறிவாயுள்ள வான்மாவுஞ்
சிவனறிவித்தா லறியுமென்னு முறைமையை யறிவித்தது.(௪)

———o———

வேறு—இது ஆத்மாத்தானே யறியுமென்பது முதலாகச்
ச்சொல்லுஞ் சாங்கியன் முதலியோரை மறுத்துணர்த்திற்று

அறிவெனில்வாயில்வேண்டா-வேறோ ரறிவினாலறியுமெ
ன்ற தென்னே? ஆத்மாதானே யெவற்றைய மறியுமறிவுகா
ணுமென்னுஞ் சாங்கியனு மயிக்கவாதியுஞ் சொல்லி லிந்திரி
யங்கள் வேண்டாவாய் முடியும்,—அன்றெனி லவைதாமெ
ன்னே-ஆத்மா வறிவுடைய தன்றென்று நியாய வைசேடிகன்
சொல்லி லறிவில்லாத வாத்மாவுக்குக் கருவிகளென்னே தா
ன்,—அறிவதையுதவுமெனி லசேதனமவைதாம் - இந்திரிய
ங்களாத்மாவுக் கறியுமுறைமையைக் கொடுக்குமென்று சங்
கிராந்தவாதி சொல்லி லவைசடமாதலிற் கொடுக்கமாட்
டாது,—எல்லாமறிபவ னறியுந்தன்மை யருளுவனென்னில்-
முற்றுணர்வினனாகிய சிவன்கருவிகளாலே யாத்மாவுக் கறி
யுமுறைமையைக் கொடுப்பனென்று பரிணாமவாதிசொல்லி
ல்,—ஆன்மாவறிவிலதாகும் - அப்பொழு தாத்மாச் சடமாக
கவேண்டும்,—ஈசனசேதனத் தளித்திடானே - ஆதலாலே
சிவன் சடத்துக் கறிவைக் கொடான் எ - று. எனவே

யாத்மாவுக்கு முன்புள்ள வறிவைக் கருவிகளாலே விளக்கு வனென்பதாம்.

---

அப்படி யான்மாவுக்கென்ன வோரறிவுண்டாமாகி லப்படி யறிவிக்கின்றசிவனை யிவனாலறியப்படாதோ வென்கின்ற பரிணாமவாதியையுஞ் சிவனையான்மாவால் ஒருகாலத்தினு மறியப்படாதென்கின்ற பாடாணவாதியையு மறுத்து ஆன்மா விந்திரியங்களுடனே கூடியறியு மறிவால் அசத்தாகிய பிரபஞ்சத்தை யறியுமதொழிந்து சிவனையறியமாட்டாதென்னு முறைமையை மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

அறிவினா லறிந்தயாவு மசத்தாத லறிதியென்று, மறிவினா லறிவொணாதா லாவதொன்றின்மைதொன்மை, யறிவுதா னென்றைமுந்தி யதுவது வாகக்காணு, மறிவுகா ணசத்துமற்ற தறிவினுக் கறியொணாதே. ௫

பொறியானுயிரறி பொருளசத்தந்த
வறிவாலமலனை யறிவரிதென்றது.

ஆன்மாவைச் சிவனறிவித்தாலு மிந்த ஆன்மாவுக் கறிவுண்டாமாகி லந்தச்சிவனை யிவனாலறியப்படாதோ வென்கிற பரிணாமவாதியை மறுத் தருளிச்செய்கின்றது.

(இ-ள்.) அறிவினா லறிந்தயாவு மசத்தாதலறிதி — ஆன்மபோதத்தாற் சுட்டியறியப்பட்ட பொருள்களெல்லா மசத்தாயழிந்துபோகிற துண்மையென்றறிவாயாக

ஒகோ! வாக்குமனாதீத கோசரனாயிருக்கப்பட்ட சிவனை யிவனாலறியப்படு

மோவென்ற பாடானவாதியை நோக்கி மறுத்தருளிச்செய்கின்றது

என்று மறிவி
னு லறிவொணு
தாலாவதொன்
றின்மை

இந்தப்பெத்தத்திலொழிந்து முத்தியினு மிவன் சிவனையறியானுமாகி லிந்தவான் மாவுக் கொருபயனுமில்லையாம்

அப்படிச் சொல்லுகிறதென்ன முற்பத் த்திலே யான்மபோதத்தா லறியப்பட்ட தெல்லா மசத்தாயழிந்துபோ மென்று சொல்லி இப்பொழு திவனுற் சிவனை யறியப்படாதாமாகி லிவனுக் கொருபய னுமில்லை யென்பானேனென்று மீளவுங் கேட்ட பரிணாமவாதியை மறுத்தருளிச் செய்கின்றது.

தோன்மை ய
றிவுதா னென்
றைமுந்தி யது
வது வாகக்கா
ணு மறிவுகாண
சத்து

பழைய வான்மபோதமானது இந்திரிய ங்களுடனே கூடி யந்தவிடயந்தானாய் முற்பட்டுநின்று காண்கிற வறிவைகாண் அசத்தா யழிந்துபோமென்றோம். ஆனுற் பின்னையெங்ஙனே யென்னில்

மற்ற தறிவி
னுக்கறியொணு
தே.

(மற்றுவினை மாற்று) அந்தஞானமான திந்த விந்திரியங்களோடுகூடி யறியுமறி வா லறியப்படாது எ - று.

ரு - ம். அறிவினுலறிந்தயாவு மசத்தாதலறிதி. எ - கு. அப்படிச் சிவனறிவித்து நிற்கச்செய்தேயு மான்மபோதத்தா லறிகிறதெல்லா மசத்தாமென்று பரிணாமவாதியை மறுத்ததே தென்னில் சிவனறிவிக்கச்செய்தேயு மான்மாவாலப்படி யறி விக்கிற சிவனை யறியப்படாதென்ற தெனவறிக. இதற்கு

பி - ம். சித்தியாரில். "அன்னியமிலாமையானு மறிவினுணிற்ற
லானு, முன்னியவெல்லா முண்ணின் றுணர்த்துவனாதலானு,
மென்னுதியானென்றோது மிருஞ்செருக்கறுத்தலானுந், தன்
னறிவதனாற்காணுந் தகைமையனல்லனீசன்." எ - து. கண்
டுகொள்க.

இனி யிரண்டாவது என்று மறிவினாலறிவொணாதா லா
வதொன்றின்மை. எ - கு. முத்தியிலுஞ் சிவனை யான்மாவா
லறியப்படாதாயி னிவனுக் கொருபயனுமில்லையென்று பாடா
ணவாதியை மறுத்ததற்கு. பி - ம். சங்கற்ப நிராகரணத்தில்.
"காட்சியென்னக் காணாத்துயர - மாட்சியைமுத்தி யெனவ
குத்துரைக்கிற - காணாபாவ மரணங்கருமா- மெய்ந்தவர்மு
த்தி சேர்ந்தவரன்றே.- யனையகதிக்கோர் முனைவரும்வேண்
டா - தனிதருதுயர மெனுமிதுதிடமே - பாடாணத்திற் கூடா
முத்தி." எ - து. கண்டுகொள்க.

இனி மூன்றாவது தொன்மையறிவு தானொன்றைமுந்தி
யதுவதுவாகக்காணு மறிவுகா ணசத்து என்று மீளவும் பரி
ணாமவாதியை மறுத்ததற்கு. பி - ம். முற்செய்யுளி லிரண்டா
ம்பதத்தில்." அறிவதையுதவுமென்னி லசேதனமவைதாம்."
எ - து. கண்டுகொள்க.

இனி நான்காவது மற்றதறிவினுக் கறியொணாதே. என்ற
தை அந்தஞானமான இந்திரியங்களோடுங்கூடி யறியுமறிவா
லறியப்படாதென்றதற்கு. பி - ம். திருவாசகத்தில். "அனைத்
துலகுமாய் நின்னையைம்புலன்கள் காண்கிலா," எ - ம். காள
த்தியந்தாதியினும். "நிறைந்தெங்குநீயேயாய் நின்றாலுமெ
ன்று, மறைந் தைம்புலன்காணவாராய்." எ - ம். கண்டுகொ
ள்க.

இதனாற்சொல்லியது ஆன்மாவுக்குச் சிற்றறிவுண்டாமா
கில் தன்னையறிவிக்கிறசிவனை யவனறியானென்ற பரிணா

மவாதியையும் ஆன்மாவா லொருகாலத்தினுஞ் சிவனை யறியப்படாதென்ற பாடாணவாதியையுமறுத்துப் பெத்தமொழிய முத்தியினு மான்மாவறிந் தநுபவியாதபொழுது அவனுக்கொருபயனு முண்டாகாதென்னு முறைமையையறிவித்தது. (௫)

---

வேறு—இது ஆத்மபோதத்தா லறியப்படுவனவெல்லா மசத்தென்று மவ்வறிவாற் சிவனை யறியவொண்ணாதென்றும் பரிணாமவாதி பாடாணவாதிகளை மறுத்துணர்த்திற்று.

அறிவினாலறிந்த யாவு மசத்தாதலறிதி - கருத்தா ஒருவனுளனே லவனென்னாலறியப்படானோவெனி லாத்மாவினது சிற்றறிவினா லறியப்பட்ட பொருளெல்லா நிலைநில்லாததன்மையானாற் சத்தாகியசிவ மென்னா லெப்பொழுது மறியப்படாதோ வெனின்,—என்று மறிவினா லறியொணாதா லாவதொன்றின்மை-ஒருகாலத்தினுஞ் சிவனாத்மாவா லறியாதிருக்குமாகி லிவனுக்குச் சிவனைக்கொண்டாவதொரு பிரயோசனமு மில்லாமை யுண்மையாம்; ஆனா லென்னாலறியப்பட்டதெல்லா மசத்தென்று சொன்னதென்னையெனின்?—தொன்மை யறிவுதானொன்றை முந்தியதுவதுவாகக்காணு மறிவுகாணசத்து - அனாதியாய்வருகிற பசுபோதமாவதொருவிடயத்தை யிந்திரியங்களாலே முற்பட்டுப் பொருந்தியதுவதுவாகச் சுட்டியறியப்படும் பொருள்கா ணசத்தென்றது,—மற்றதனறிவினுக் கறியொணாதே - அந்தச்சிவ மிந்தச்சுட்டறிவா லறியப்படாது. எ - று.

காணுமறிவு ஆகுபெயர். ஆவதொன்றின்மையறிதி எனவுங் கூட்டுக. அறிதிஉண்மை. அறியொணாதென்பது தெரிவரியதோர் தெய்வமென்பதுபோனின்றது.

---

அப்படியசத்தாகிய பிரபஞ்சத்தை யான்மபோதத்தா லறியப்படுமோவென்று பரிணாமவாதி யாசாரியரைவினவ வப்பொழுது

ஈஸ்வரவவிகாரவாதிவந்து அசத்தாகிய பிரபஞ்சத்தை யான்மாவ றியாமற் பின்னை யறிகிறதேதென்றுகேட்க அப்படியல்ல பிரபஞ் சத்தையறிகிறது சிவனேயறிவனென்று மீளவும் பரிணமவாதி சொல்லுகையும் அதனையல்லவென்றுமறுத் திந்திரியங்களறியுமெ ன்று சங்கிராந்தவாதி சொல்லுகையும் அதனையல்லவென்றுமறுத் தான்மாவுமிந்திரியங்களுங்கூடி யறியுமென்று சிவசமவாதி சொல் லுகையும் அதனை யல்லவென்று ஆன்மாவுமருளுங்கூடி யறியு மென்று ஈஸ்வரவைக்கியவாதி சொல்லுகையும் அதனையல்லவெ ன்று அருளுமிந்திரியங்களுங்கூடி யறியுமென்று சைவர் சொல்லு கையுமான வவதரத்து இவர்களொருவர்க்கொருவர் மாறுபாடாக ச்சொல்லுகிறவிதிலே யசத்தாகிய பிரபஞ்சத்தையறிகிறதுதா னெ ந்தவறிவென்று ஆசாரியரைநோக்கி மாணவகன் வினவினவவதர த்து இவர்க ளாறுபேறுஞ்சொல்லுகிற வத்தங்களெல்லாஞ் சித் தாந்தத்துக்கு வராதென்று அவரவர்சொல்லப்பட்ட வத்தங்க ளெல்லாவற்றையு மறுத்துக்காட்டி யருளிச்செய்வா னெடுத்துக் கொண்டருளியது.

எவ்வறி வசத்தறிந்த தெனிலுயி ரறியா தீச
னவ்வறி வறியா னல்ல தசேதன மறியா தாவி
செவ்விய கருவிகூடித் தெரிவுறு தருளிற்சேரா [வே
வெவ்விரு வகையதெய்னி லொளியிருளொருங்குறு

அந்தவசத்தை யசத்தென்றறிந்து
தெந்தவறிவென் றியம்புகவென்றது.

| | |
|---|---|
| (இ - ள்.) எவ்வறி வசத்தறிந்ததெனில் | இந்தச்சமயிகளாறுபேருஞ் சொல்லுகிறவி திலே யசத்தாகிய பிரபஞ்சத்தையறிகிறது எந் தவறிவென்று நீகேட்கிறாயாமாகில் |
| உயிரறியாது | அசத்தை யான்மாவாலறியப்படாது. அது வேனென்னில ஆன்மா தனக்கென்ன ஓரறிவி |

லாதபடியாலே பிரபஞ்சத்தைத் தானாகவறிய மாட்டாதாகையாலெனவறிக. அன்றியும்

ஈசனவ்வறிவறியான்

சிவனுக்கு மப்படி யறிகிறவறிவில்லை. அது வேனென்னில் அவனெங்கும் பூரணனாயிருக்கையாலே யவனுக்கொன்றையுஞ்சுட்டி யறிய வேண்டுவதில்லையாகையா லெனவறிக

அல்லதசேதன மறியாது

அவை யிரண்டையுமன்றி யிந்திரியங்களுந் தானாக வறியமாட்டாது. அதுவேனென்னில் அவை ஜடமானபடியாலே தானாக வறியமாட்டாதாகையா லெனவறிக. அன்றியும்

ஆவி செவ்விய கருவிகூடித்தெரி வுறாது.

ஆன்மாவு நேர்பட்ட கருவிகளுங்கூடி யறியமாட்டாது. அதுவேனென்னில் ஆன்மா தனக்கென்ன வோரறிவில்லாதபடியாலு மிந்திரியங்கள் ஜடமானபடியாலுந் தம்மிற்கூடி யறியமாட்டாதாகையாலு மெனவறிக. அன்றியும்

அருளிற் சேரா

ஆன்மா வருளோடுங்கூடி யசத்தை யறிய வேண்டுவதில்லை. அதுவேனென்னி லான்மா வருளோடுங்கூடினவிட முத்திக்கேதுவாகையா லசத்தாகிய பிரபஞ்சத்தை யறியவேண்டுவதில்லையாகையாலெனவறிக. அன்றியும்

ஒவ்விரு வகையதென்னில்

இங்ஙனஞ் சொல்லிவந்த வொழுங்கிலே பதிபசுபாசமூன்றினுள்ளும் வொவ்வொன்றாக வறியுமென்று மிவ்விரண்டாக வறியுமென்றுஞ் சொல்லிவந்தவகையிலொழிந் துள்ளவருளு மிந்திரியங்களுங்கூடி யசத்தாகிய பிரபஞ்சத்தை யறியுமென்னில் அப்படியறியாது. அதுவேனென்னில்

ஒளியிரு ளொருங்குறுவே. ஒளியாகியஞானமு மிருளாகிய வஞ்ஞானமு மோரிடத்திற்கூடிநில்லாதாகையால். எ-று. என்னவே சிவன்றேய்வறநின்றுணர்த்த வான்மா பிரபஞ்சத்தோடுங்கூடி யறியுமென்பது கருத்து. இதற்கு. பி-ம். இந்நூலிலே "தனக்கெனவறிவிலாதான் றுனியையறிந்துசாரான், றனக்கறிவிலாத வாயி ருனறியாதுசாரா, தனக்கெனவறிவிலாதான றத்துவவன்னரூபன், றனக்கெனவறியாளுலிச் சகலமுநறுகந்தானே. எ-து. கண்டுகொள்க.

உ-ம். இந்தச்சமயிக ளாறுபேருடைய மதத்துக்கு மறுப்புக்குமுண்டான பிரமாணங்கள் சங்கற்பநிராகரணத்தில்காட்டுதும்:—அவைவருமாறு.

இச்செய்யுளின் முதற்பதத்திலே அசத்தாகிய பிரபஞ்சத்தை உயிரறியுமென்று ஈஸ்வரவவிகாரவாதிசொன்னதற்கு. பி - ம். "பஃறுளைகடத்தி னுள்விளக்கேய்ப்ப - வறிவுளதாகு முருவுறுமுயிர்கள் - கண்ணுலோசையுங் கரணமுங்கருத - வொண்ணுதென்னு முணர்வுடைமையிரு - லவ்வப்புலன்கட்கவ்வப்பொறிகள் - செவ்விதினிறுவிச் சேர்ந்தவைறுகரும்" எ - து. கண்டுகொள்க.

அசத்தை யுயிரறியாதென்று அவனைமறுத்ததற்கு. பி - ம். "அவ்வப்புலன்கட் கவ்வப்பொறிகள் - செவ்விதினிறவலி னறிவெனச்செப்பினே - யறிவிலாமைகண்டன மணுபுலத்துப் - பொறிகளேவலி னறிவொடுபொருந்திற் - கண்டதோர்பொறியாற் கொண்டிடவேண்டும்." எ-து. கண்டுகொள்க.

இனியசத்தாகிய பிரபஞ்சத்தைச் சிவனறிவனென்று இரண்டாவது பரிணமவாதிசொன்னதற்கு. பி-ம். அறிவோன்றுனு மறிவிப்போனு - மறிவாயறிகின் றேனுமறிவுறு - மெய்ப்பொருடா

னும் வியந்திதுவெனப்படு - மப்பொருளியாவு மவனேயென்று
ம்." எ-து கண்டுகொள்க.

இனி யசத்தைச் சிவனுக் கறியவேண்டுவதில்லையென்று அவ
னைமறுத்ததற்கு. பி-ம். "தனக்கெனிலஃது மிசைப்பதொன்றன்
றே - தன்போலறிஞருந் தலைவருமிலரான் - மின்போலினையை
வேண்டலும்பழுதே." எ - து. கண்டுகொள்க.

இனியசத்தாகிய பிரபஞ்சத்தை யிந்திரியங்களறியுமென்று
மூன்ருவது சங்கிராந்தவாதிசொன்னதற்கு. பி-ம். "பூட்டைப்-
பலவகையுறுப்பு மிலகிடதொழில்போ - லைம்பொறிபுலன்க ளின்
புறமன்றே." எ-று. கண்டுகொள்க.

அப்படி யிந்திரியங்களாற் பிரபஞ்சத்தை யறியப்படாதெ
ன்று அவனைமறுத்ததற்கு. பி-ம். "புலனைம்பொறியி னிலவிடுமெ
ன்றனை - யஞ்சுமொருகாற் றுஞ்சாதறிதற் - கழிவென்று" எ-ம்.
"இதுவேயல்லது கதுமெனவிருசெவி - யிருகூற்றுருமாற் றெரி
யாத்தன்மைவந் - தெய்துமறுதி மெய்யுயிர்ச்செயலுந் - தனக்கில
தொருவர்க் கெனத்தெளிகிலையே. எ-ம். கண்டுகொள்க.

இனியசத்தாகிய பிரபஞ்சத்தை யான்மாவு மிந்திரியங்களுங்
கூடி யறியுமென்று நான்காவது சிவசமவாதிசொன்னதற்கு. பி-ம்.
"பாசமைம்புலன் றேசுறவுணர்த்தப் - பசுத்தனிஞானம் புசித்தி
டுமன்றே." எ-து. கண்டுகொள்க.

அப்படியவையிரண்டுங்கூடினு மசத்தாகியபிரபஞ்சத்தை
யறியமாட்டாதென் றவனைமறுத்ததற்கு. பி-ம். "அந்நியமறியா
மன்னுயிர்பொறிபுலன் - றுதேறுவறியா." எ - து. கண்டுகொ
ள்க.

இனியசத்தாகிய பிரபஞ்சத்தை யருளுமான்மாவுங்கூடி யறி
யுமென்று ஐந்தாவது ஈசுவரவைக்கியவாதி சொன்னதற்கு. பி-ம்.
உலகத்-தாயவனுயிர்க்கு மாயையினருளா - லிருவினைத்தொகையி

ஞுருவினைத்தருமாற் - கருமுகிலடரா விரிசுருகதிர்போன் - றறிவா முயிரிற் பிறியாதேயும்." எ-று. கண்டுகொள்க.

அப்படி யருளு மான்மாவுங் கூடினவவதரந்தானே முத்தியா மென் றவனைமறுத்ததற்கு. பி-ம். "அறிவிற்கறிவு செறியவே வண் டின்றே - யுண்மையிலிருமையு மொளிபேயெனிலொரு - தன்மை யாகமுன் சாற்றினரிலரோ." எ-று. கண்டுகொள்க.

இனி யசத்தாகிய பிரபஞ்சத்தை யருளு மிந்திரியங்களுங் கூடி யறியுமென்று ஆறுவது சைவர் சொன்னதற்கு. பி-ம். "அன் னல் - கலைமுதலாக நிலவியகருவியை - விளக்கெனவுதவுந் துள க்கறப்பொருந்தி." எ-று. கண்டுகொள்க.

அப்படியல்ல இந்திரியங்களான்மாவோடுசம்பந்தமொழியச் சிவனோடுசம்பந்தமில்லையென்று அவனைமறுத்ததற்கு. பி - ம். "மலமிருளிணையொளி - தானமர்விளக்கிற் றருமிருட்கலாதிக- ளினமிலிவனிடத் தெவ்வாறிசைந்தன." எ-று. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது அசத்தாகிய பிரபஞ்சத்தை யுயிரறியு மென்ற ஈஸ்வரவிகாரவாதியையுஞ் சிவமறியுமென்ற பரிணாம வாதியையு மிந்திரியங்க ளறியுமென்ற சங்கிராந்தவாதியையு மான் மாவுமிந்திரியங்களுங்கூடி யறியுமென்ற சிவசமவாதியையு மான் மாவுமருளுங்கூடி யறியுமென்ற ஈஸ்வரவைக்கியவாதியையு மரு ளுமிந்திரியங்களுங்கூடி யறியுமென்ற சைவனையு மறுத்தமுறை மையை யறிவித்தது. (௬)

---

வேறு—இது பசுஞானம் பாசஞானம் பதிஞானமென மூன் றையும் வைத்துக்கொண் டவற்றுளசத்தை யசத்தென்றறிந்ததெ வ்வறிவென்றுவினவ விம்மூன்றுமறியாதென்ப துணர்த்திற்று.

எவ்வறி வசத்தறிந்ததெனில் - அந்த வசத்தை யசத்தென்ற றிந்த தெந்த வறிவுதானென்னில்,—உயிரறியாது - சிற்றறிவுடைய

"செம்பிலுறு களிம்பேய்ந்து நித்தமூலமலமா யறிவுமுழுதினையு மறைக்கும்." எ-ம். ஞானத்தின்கண்ணை மறைத்த கடியதொழி லாணவத்தால்." எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க. இனி மாயைதாரகமாக நிற்குமென்பதற்கு," பி-ம். தத்துவவிளக்கத்தில். "புல்லியபாசங்க ளுய்த்திடப்போகம் புமானுகர்ந்து சொல்லியகாலத் துறுஞ்செல்லனிக்கிச் சிராப்ராக்கோன், சொல்லியமன்முதலாயினமாயையி லேதொகுத்தவ், கெல்லியி லித்திரைப் போலிலைப்பாற்று மணுக்களையே." எ-ம். இந்நூலினும். "உருவாதி சதுவிதமாய்." என்ற இருபத்திரண்டாஞ்செய்யுளிலே "ஒடுங்கவருகால மூயிர்களெல்லா மருவிடமாய் மலமாய் மன்னியிடுமரனருளான் மாயைதானே" எ-து. கண்டுகொள்க.

இனி அங்கறிவையறிவரியன். எ-கு. கேவலப்பட்டுக் கிடக்குமவ்விடத் தான்மா அறியப்படும்பொருளா யிருக்கிற தன்னையு மறியமாட்டானென்று பொருட்கூறியதேதென்னில் அப்படிக் கேவலத்திலான்மாவுக் கறிவாயுள்ளதா மிப்படி யறிவற்றுக் கிடக்கிறோமேயென்கிற நினைவுமில்லாததுகொண்டே யப்படிச்சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "அறிவில னமூர்த்தனித்த னராகாதிகுணங்களோடுஞ், செறிவிலன் கலாதியோடுஞ் சேர்விலன் செயல்களில்லான்." எ-ம். "அறிந்திடுந்தன்னையுந் தானறியாமையானும்." எ-ம். கண்டுகொள்க.

இனி அறிகருவியணையா. எ-கு கேவலமாகிய வவ்விடத்துச் சுத்ததத்துவங்களும் பொருந்தாதென்று பொருட்கூறியதேதென்னில் அப்படிச் சுத்ததத்துவங்களைக் கூடினவிடம் சகலமாகையா லப்படிச சொன்னதெனவறிக. அதுவெங்ஙனேயென்னில் அப்படிக் கேவலப்பட்டுக் கிடக்குமிடத்துச் சிவசத்திக ளக்குச்சுத்ததத்துவங்களைக்கொண்டகுத்

துமாயாகாரணத்திலே நின்றுங் கலையாதி தத்துவங்களைத் தோற்றுவித் தான்மாக்களோடுங்கூடிக் காரியப்படுத்துகையா லதுசகலமாகையாலே யந்தக்கேவலத்திற் சுத்ததத்துவங்களும் பொருந்தா தென்றதெனவறிக. இதற்கு. பி - ம். இந்நூலில். "இத்தகைமை யிறையருளால்" என்னும் விருத்தத்தையொட்டிக் கண்டுகொள்க.

இனி இருள்மருவு மலர்விழிபோலதுவாய். எ-கு. இருளைப்பொருந்தினவிழி யந்தவிருளின்வடிவு தானாய்நின்றாற்போலவென்று பொருட்கூறியதேதென்னில் குற்றமறக்காணுங் கண்ணானது இருளோடுங்கூடின வவதரத்து வேறொன்றுங் காணாமல் அந்தவிருளின்வடிவு தானாய்நின்றாற்போல வறிவாயுள்ள வான்மாவுங் கேவலப்பட்டு மலத்தினால் மறைப்புண்டுகிடக்குமிடத்து அந்தமலந் தன்னைப்போல வறியாமையே வடிவாய்க்கிடக்கையா லப்படிச்சொன்னதெனவறிக. அப்படிக் கண்ணை யிருள்மறைத்தாற்போல வான்மாவையுங் கேவலத்தி லாணவமலமொன்று மறைக்குமென்று திருஷ்டாந்தமா யிருக்கக் கேவலத்தி லாணவமலமறைப்பதன்றியே மாயைதாரகமாக வொடுங்குமென்றதேதென்னில் அப்படி யிருளினால் மறைப்புண்டு அந்தவிருளின்வடிவு தானாய் நின்ற கண்ணிற் சோதியாயுள்ள பிரபையுந் தனக்குடம்பா யிருக்கப்பட்ட குவளை தாரகமாக நின்றாற்போல வாணவமலத்தான் மறைப்புண்டு கேவலப்பட்டுக் கிடக்குமான்மாவு மாயைதாரகமாகக் கிடக்குமென்பதை முற்கூறிய வகைகளினாலு மநுபவத்தினாலுங் கண்டுகொள்க. அப்படிக்கேவலத்தி லாணவமலமன்றியே மற்றுள்ளமலங்களு முண்டென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "மும்மல நெல்லினுக்கு முளையொடு தவிடுமிப்போன், மம்மர்செய் தணுவினுண்மை வடிவினை மறைத்துநின்று." எ-து. கண்டுகொள்க.

இங்ஙனம் பிரபஞ்சகாரியப்பட்டுநிற்கிற வான்மாவை முற்கூறியவிருத்தங்களில் அறிவென்ற சமயிகளையுமறுத்தீர் அறிவல்லவென்ற சமயிகளையு மறுத்தீர் பின்னையிதனை யேதென்று சொல்லப்படும்; சத்தாகிய வறிவனென்று சொல்லப்படுமோ அசத்தாகிய வறியாதவனென்று சொல்லப்படுமோவென்று வினவின மாணவகனை நோக்கி யருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

சத்திது வென்றசத்துத் தானறி யாதசத்தைச்
சத்தறிந் தகலவேண்டா வசத்திது சத்திதென்றோர்
சத்திரு ளொளியலாக்கண் டன்மைய தாமசத்தைச்
சத்துட னின்றுநீக்குந் தன்மையாற் சதசத்தாமே. (எ)

சத்தசத்தறியா தம்மிலவ்விரண்டையு
முய்ந்தறிவதுசத சத்தென்றுரைத்தது.

| | |
|---|---|
| (இ - ள்.) சத்திதுவென் றசத்துத்தானறியாது | சத்தாகியசிவத்தை யிதுசிவமென்று அசத்தாகிய பாசங்களறியமாட்டாது |
| அசத்தைச் சத்தறிந்தகலவேண்டா | அசத்தாகியபாசங்கள் சிவத்தைப்பொருந்தாதபடியாலே யவையிற்றைச் சத்தாகியசிவம் இதுபொல்லாதென்றறிந்து நீங்கவேண்டுவதில்லை. ஆகையால் |
| அசத்திது சத்திதென்றோர் சத்து | அசத்தாகிய பாசத்தோடு கூடினபொழுது அந்தப்பாசந் தானாய்நின்றறிந்துஞ் சத்தாகிய சிவத்தோடுங்கூடினபொழுது அந்தச்சிவந்தானாய்நின்றறிந்தும் இங்ஙனமிவையிரண்டோடுங்கூடி யறிந்துவருகிறவான்மாவு மறியுஞ்சத்தாம். அதென்போலவென்னில் |
| இருளொளியலாக்கண் டன்மையதாம் | இருளோடுங்கூடி யந்தவிருள்தானாய்நின்றுவிழித்தும் ஒளியோடுங்கூடி யந்தவொளிதானாய்நின்றுவிழித்து நின்றகண்ணைவ்விருளுமொ |

துமாய்த் தானுகவொன்றையு மறியாததலி னுயிரான நசத்தைச் சத்தென்றே யிருப்பதொழிக் தசத்தென் றறியமாட்டாது,—ஈச னெவ்வறி வறியான் - பரிபூரணமாய்ப் பேரறிவனுமா யிருக்கையா லே ஈசனொன்றை யிதுவெனச் சுட்டியறியான்,—அல்லதசேதன மறியாது - அன்றி யிவர்களை யொழிந்தகருவிகள் சடமாகையாலே பாசஞானமறியாது,—ஆவி செவ்விய கருவிகூடிற் றறிவுறாது- சிற்றறிவான வாத்மாவு மதற்குக்கருவியாகச் சிறந்தசடமுங் கூடியறியுமென்னில் விளக்கமுண்டாகாது,— அருளிற்சேராது - அருளான சிவஞானமு முயிருங்கூடி யறியுமென்னிற் பெத்தத்திலே யாத்மா வருளிற் பொருந்தாது,—உவ்விரு வகையதென்னி லொளியிரு ளொருங்குறுமே-மற்றைப் பதியும்பாசமுங்கூடி யறியுமென்னி லொளியு மிருளு மோரிடத்தினில்லா. எ-று.

முப்பொருள்களை யொவ்வொன்றாகத் தனித்தனிமறுத் திவ்விரண்டாகக் கூடியறியுமென்பதை மறுப்புழி வாவியுங் கருவியுமறியா. வாவியுமருளுங் கூடாவென மறுத்தாற் பின்னிற்ப தருளுங் கருவியுமாதலி னுவ்விருவகையதெனச்சுட்டினார். "உப்பக்கநோக்கி யுபதேசிதோண் மனந்தா னுத்தரமாம துணைக்கச்சென்ப - விப்பக்கமாதரினுபங்கி மறுவில்புலச்செந்நாப் - போதார்புனற்கூடற்கச்சு.? என்புழி. உப்பக்க மப்பக்கமென்னும் பொருளாய் நின்றாற்போல நின்றது. ஒவ்விருவகையதென்று பாடமோதி யொத்தவிருவகையென்று பொருளுரைப்பி னிலக்கணத்தோடுஞ் சம்பிரதாயத்தோடு மாறுகோடலறிக. உயிரறியாதென்றதனுல் விகாரவாதியு மீசனறியானென்றதனாற் பரிணாமவாதியு மசேதனமறியாதென்றதனாற் சிவசமவாதியு மாவியுங் கருவியு மறியாவென்றதனாற் சங்கிராந்தவாதியு முயிருமருளுங் கூடாதென்றதனாற் சைவவாதியுங் கருவியுங் கூடாதென்றதனா லைக்கியவாதியு மறுக்கப்பட்டமை யுணர்வறிக.

ளியுமல்லாதுநின்ற தன்மைபோல வான்மாவு மசத்சத்து மிந்தவசத்துமன்றித் தனித்தொரு முதலாய்நிற்குமாறு லிந்தவான்மாவைச் சத்தென்று சொல்லலாமோ வசத்தென்று சொல்லலாமோ வென்னில்

அசத்தைச்சத்தோடணின்று நீக்குந் தன்மையாற் சதசத்தாமே.

முன்புகூடிநின்ற பாசங்களைச் சிவத்தோடுங்கூடிநின்று நீக்குமுறைமையாலே யான்மாவுக்குச் சதசத்தனென்கிறதே யியல்பாம்.எ-று. என்னவே அறிவித்தா லறிவனென்பது கருத்து.

ரு-ம். சத்தாகிய சிவத்தை யசத்தாகியபாச மறியாதென்றதெங்ஙனேயென்னில் உடலுமுயிருங் கூடியிருந்து ஜீவிக்கச்செய்தேயு முயிரையுடலறியா திருந்தாற்போல வெனவறிக.

அசத்தாகிய பாசத்தைச் சத்தாகிய சிவனறிந் தகலவேண்டாவென்றது இந்திரஜாலங் காட்டுமவனை யது பிரமிப்பிக்கமாட்டாதாற்போலப் பாசங்கள் ஜடமானபடியாலே சிவனை மறைக்கமாட்டாதாகையா லவனுக்கிதையறிந் தகலவேண்டாவென்றதெனவறிக.

ஆன்மாவை யிருளுமொளியுமல்லாத கண்ணின் றன்மைபோலவென்றது தானாகவறிகிறவனுமல்ல அறிவித்தா லறியாமலிருக்கிறவனுமல்ல வென்றதெனவறிக.

சதசத்தென்றது சிவனறிவித்தா லான்மாவறிவனென்றதெனவறிக.

இவையிற்றுக்கு. பி-ம். சித்தியாரில் "அறிந்திடு மான்மாவொன்றை யொன்றின்றியறிதலாறு, மறிந்தவைமறத்தலாறு மறிவிக்கவறிதலாறு, மறிந்திடுந்தன்னையுந்தானறியாமையானுந்தானே, யறிந்திடுமறிவனன்று மறிவிக்கவறிவனன்றே." எ-று. கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஆன்மா வறியும்பகுதிக்குரியவனோ வறியாப்பகுதிக் குரியவனோவென்று வினவினமாணாக்கனை நோக்கி இவன்றானாகவறிகிறவனுமல்ல சிவனறிவிக்க வறியாமலிருக்கிறவனுமல்ல வொளியோடுகூடிக்கண்ட கண்போல வருளோடுங் கூடி யறியுமென்னு முறைமையை யறிவித்தது. (எ)

---

வேறு—இதன்கருத்து. அசத்தையறியாதான் சத்தையு மறியாவாதலி னிவ்விரண்டையு மறிவ தெவ்வறிவென்றுவினவச் சத்தையு மசத்தையு மருள்கண்ணாக வாத்மாவே யறியுமென்பதை யுணர்த்திற்று. சத் தினுகளாலே முற்பட்டுப்பொருந்தி யதுவதுவாகச்சுட்டி யறியப்படும் பொருள்காண் சத்தென்றது. மற்றதறிவினுக்கறிவொணாதே என்பது அந்தச்சிவ மிந்தச் சுட்டறிவா லறியப்படாது.

சத்திதுவென் றசத்துத்தானறியாது - அசத்தானபாசஞ் சடமாகையாற் சத்தாகிய சிவத்தை யிதுவென்று சுட்டியறியமாட்டாது,—அசத்தைச் சத்தறிந் தகலவேண்டா - சத்தாகியசிவ மவியத்துமாகையா லசத்தை யிதுவென்றறிந்து நீங்கவேண்டா,—அசத்திது சத்திதென்றோ ரசத்து - மலபாகத்தாற் பிரகாசித்தவருளாலே பாசமிது சிவமிது வென்றறிகிற வாத்மாவானது,—இருளொளியலராக் கண்டன்மையதாம் - இருளிலேநின்றபோ திருளாயு மொளியிலே நின்றபோ தொளியாயு நிற்பதல்ல திருளுமொளியு மல்லாத கண்ணின்றன்மைபோலுந் தன்மையுடையதாம்,—ஆகவே யசத்தைச் சத்துடனின்றுநீக்குந் தன்மையால் சதசத்தாமே - முன்கூடிநின்ற மலங்களைச் சிவத்துடனே கூடிநின்று போக்கு முறைமையாலே யவ்வாத்மாவுக்குச் சதசத்தென்று பேராம். எ-று.

கண்ணின்றன்மைபோலுந் தன்மையாவது மலத்துடனேகூ

டிநின்றபோது மலமாயுஞ் சிவத்துடனே கூடிநின்றபோது சிவமாயுநிற்கு முறைமை. ஓரசத்துவினைத்தொகை. சத்து உள்ளதென்னும் பொருளன்றி யறியவென்னும் பொருளும்பயக்கும். அதனைப்பூசாத்தவத்திற் சதசதந்தமென்ற பதத்துக் குரையெழுதினவாசிரியராலே யிரண்டாங்கருத்தாக வெழுதினமைகாண்க.

---

அப்படியான்மா விருளுமொளியுமல்லாத கண்ணைப்போலே யிருக்குமென்ற திருஷ்டாந்தத்தினால் விளக்குக்காட்டக் கண் கண்டதுகொண்டே சிவனறிவுகொடுத்தாலறிகிறதொழியத் தனித்தறிவில்லையென்ற பரிணமவாதியைமறுத்து ஆன்மாவுக்குச் சிவனறிவிக்கவறிந்தாலுஞ் சிற்றறிவுண்டென்னு முறைமையை மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

கண்ணொளி விளக்களித்துக் காட்டிடு மென்னின்
முன்னங், கண்ணொளி யொன்றுமின்றும் விளக்கொளி
கலந்தவற்றைக், கண்ணொளி யகலின்றே கண்டிடும்
வேறுகாணக், கண்ணொளி விளக்கின்சோதி கலந்திடுங்
கருத்தொன்றன்றே. (அ)

அற்றுயி லுயிர்க்கறி விலையெனலாகா
சிற்றறிவென் றமுன் னென்றுசெப்பியது.

| | |
|---|---|
| கண்ணொளி விளக்களித்துக் காட்டிடுமென்னில் | கண்ணினது பிரகாசத்தையும் விளக்குக் கொடுத்துக் காட்டுமென்று நீசொல்லில் |
| முன்னங் கண்ணொளி யொன்றுமின்றும் | விளக்குக் காட்டுவதற்குமுன்பு கண்ணுக்குப் பிரகாசமொன்றுமில்லையாக வேண்டும். அப்படி விளக்குவருவதற்குமுன் கண்ணுக்கொளியுண்டோவென்று நீ கேட்கில் |
| விளக்கொளி கலந்தவற்றைக் க | விளக்கின் பிரகாசங்கூடிக் காட்டுகிறபதார்த்தங்களைக் கண்ணின்பிரகாசமானது விள |

ண்ணொளியகலநி ன்றேகண்டிடும் — க்கின் பிரகாசத்தோடுங் கூடாம லிருளிலேநி ன்று காண்கையால் கண்ணுக்குத்தனியே யொ ளியுண்டென்றறிவாயாக. அப்படி யிருளுக்கு ள்ளே நின்று கண்கண்டதாகிலும்

வேறுகாணு — காண்கிற பதார்த்தங்களை விளக்கொளி யோடுகூடி நின்று காண்கிறதொழியத் தனித் துக்காணமாட்டாதென்று நீ சொல்லுகிறாயா மாகில் அப்படி விளக்கோடுகூடிக் கண்கண்டு தாமாகிலும்

கண்ணொளி வி ளக்கின்சோதி க லந்திடுங் கருத் தொன்றன்றே. — கண்ணினுடையபிரகாசம் விளக்கினுடைய பிரகாசத்தோடுங்கூடியேநின்று ஜீவித்ததாகி லும் கருத்து வேறுபாடுண்டு. அஃதெங்ஙனே யென்னில் விளக்கெல்லாத்தையுஞ் சுட்டறநி ன்றுகாட்டும். கண்ணெல்லாத்தையுஞ் சுட்டி நின்று காணும். அதுபோலச் சிவனுஞ் சுட்டற நின்றறிவிப்பன். ஆன்மாவும் சுட்டிநின்றறி யும். ஆகையா லான்மாவுக்குஞ் சிவனுக்கு மறிவொன்றல்ல. எ-று. அன்றியும் விளக்குக் கண்ணுக்கொளியைக் கொடுத்துக் காட்டுமே யாகில் விழிகண் குருடனுக்கும் விளக்குக் காட்டவேணும், அது வில்லாததுகொண்டே கண்ணுக்கு விளக்கு ஒளியைக்கொடுத்துக் காட்டுமென்கிறது சித்தாந்தவிரோதமெனவறிக.

உ-ம். கண்ணுக்கு விளக்கொளியைக்காட்டினாற்போல முன் னே சிற்றறிவுதானு மில்லாதவான்மாவுக்குச் சிவனறிவைக்கொ டுத் தறிவிப்பனென்று பரிணாமவாதி சொன்னதற்கு. பி-ம். சங் கற்பநிராகரணத்தில். "கண்ணினதொளியைக் கண்ணினதெனி லது - திண்ணியவிருளிற் செறிபொருடெரித்தலு - மின்மைமின் மினி யெனவிருகண்மணித் - தன்மைதானுந் தாவிலததனாற்-

கண்ணின தருவு மதிற்கதிரொளியு - நண்ணருஞ்சத்தி சத்தர்கணடிப்பே.” எ-து. கண்டுகொள்க.

அப்படியேசிவனறிவிக்க வான்மாவறிந்தானு மநாதியேயான்மாவுக்குச் சிற்றறிவுண்டென்று அவனைமறுத்ததற்கு. பி-ம். சங்கற்பநிராகரணத்தில். “கண்ணின தருவு மதிற்கதிரொளியு- நண்ணருஞ்சத்தி நாடகமெனிலதற் - கேதுவும்பயனு மோதவேண்டு - நின்மொழிவிரோதமு நீடுலகியற்கையுந் - தன்மைசாத்திரமுஞ் சகலமுமென்செயும்.” எ-ம். அறிவொன்றில்லோர்க் கிறையருளுதவல் - பிறிவறிவரியச் செறியிருளிடத்தோ - ரந்தகர்காணவந்தோரெம்மை - நீவிருங்காண வேணுமென்றுங்-கெடுத்தோர்தீபங் கொடுத்ததையொக்கு - மிச்செயற்கிறைவன் கொச்சையனன்றே.” எ-ம். கண்டுகொள்க.

இனிகருத்தொன்றன்றே. எ-கு. சிவனுக்கு மான்மாவுக்கு மோரறிவல்லவென்றதற்கு. பி-ம். சித்தியாரில். “சிவன்சீவனென்றிரண்டுஞ் சித்தொன்றாமென்னிற் சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித்தவன்றான், பவங்கெடுத்திமுத்தி பண்ணுஞ்சித்தவற்றிற் படியுஞ்சித்தறிவிக்கப் படுஞ்சித்துமிவன்று, னவன்றனேயறியுஞ்சித் தாதலினாலிரண்டு மணைந்தாலுமொன்றாகா தநியமாயிருக்கு, மிவன்றானும்புத்தியுஞ்சித் திவனுமோபுத்தி யிதுவசித்தென்றிடிலவனுக் கிவனுமசித்தாமே.” எ-று. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது கண்ணுக்கு விளககுக்காட்டக் கண்கண்டதுகொண்டே யான்மாவுக்குச் சிற்றறிவுதானுமில்லையென்றபரிணாமவாதியைமறுத்து விளக்கோடுகூடிக் கண்கண்டுதாமாகிலும் விளக்கினொளி கண்ணிற்றாக்காம லிருளிலே நின்றுகாண்கையா லான்மாவுக்குச் சிவனறிவித்தாலு மநாதியே சிற்றறிவுண்டென்று முறைமையை யறிவித்தது. (அ)

---

வேறு—இது கருத்தா வாத்மாவுக் கறிவைக்கொடுப்பனென்னும் பரிணாமவாதியை மறுத்துணர்த்திற்று.

கண்ணொளி விளக்களித்துக் காட்டிடுமென்னின் முன்னங் கண்ணொளியொன்றுமின்றாம் - கண்ணுக்கொளியை விளக்குக் கொடுத்துப் பொருள்களைத் தெரிசிப்பிக்குமென்று நிமித்த பரிணாமவாதிசொல்லின் முன்புகண்ணுக்கொரு பிரகாசமுமில்லையாய் முடியும்,—விளக்கொளி கலந்தவற்றைக் கண்ணொளியகலநின்றே கண்டிடும் - விளக்கொளி கலக்கப்பட்டவற்றைக் கண்ணிற் பிரகாசமானது வேறாக நின்றேகாணும்,—வேறுகாணா - இப்படியகலநின்று காண்கையிலும் விளக்கொளியொடுகாண்டலின்றிக் கண்ணொளிகடாமே காணமாட்டா,—கண்ணொளி விளக்கின்சோதிகலந்திடும் - கண்ணொளியும் விளக்கொளியுந் தம்மிற்கலந்து நிற்கும்,—கருத்தொன்றன்றே - கலந்தாலும் பொருந்தியபொருள்களைக்கத்தா லொன்றெனலன்றிப் பொருளிரண்டே. எ-று.

கருத்தொன்றன்றென்பதற்குக் கண்ணிற்பிரகாச மொன்றைச்சுட்டிநின்றேகாணும் விளக்கிற்பிரகாச மொன்றையுஞ் சுட்டாமனின்றே பிரகாசிக்குமென்பாருமுளர்.

---

இங்ஙனஞ் சிற்றறிவனென்றுசொல்லி நாட்டப்பட்ட விந்தவான்மா வொருசரீரத்தோடுங்கூடிநின்று ஜீவிக்குமிடத்து ஒருதானத்திலே நின்றறியுமென்றுஞ் சரீரமெங்கு நிறைந்தறியுமென்று மெங்கும்பூரணமாய் நின்றறியுமென்றுந் தானேவிளங்கியறிவாய் நிற்குமென்று மறியாமையா யிருக்குமென்றும் இங்ஙனம் பலவகைகளாகச் சிலசமயிகளா யுள்ளவர்கள் சொல்லுமத்தங்களி னுண்மையாகச் சொல்லுவதேதென்று வினாவின மாணவகனைநோக்கி யிவைகளெல்லாஞ் சித்தாந்தவழக்கினையறிந்த நல்லோர்கள் சொல்லார்களென்று மேலருளிச்செய்வா னெடுத்துக் கொண்டருளியது.

ஓரிடத் திருத்தன்மாயா வுருநிறைந் திடுதலொன்றும், பேரிடத் துறைதறானே பிறங்கறி வாகிநிற்றல், சோர்வுடைச் சடநிகழ்த்த லெனுமிவை சொல்லார்நல்லோர், ஓர்விடத் துணருமுண்மை யொளிதரு முபலம்போலும். (௬)

தொடுத்தவைவகையின் றொல்லுயிர்த்தன்மை
யடுத்ததனியல்பியல் பாகுமென்றது.

| | |
|---|---|
| (இ-ள்.) ஓரிடத்திருத்தல் | ஆன்மா வொருடலிலேநின் றறியுமிடத்து ஒருதானத்திலேநின் றறியுமென்றும் |
| மாயாவுருநிறைந்திடுதல் | இந்தமாயாதேகமெங்கு நிறைந்தறியுமென்றும் |
| ஒன்றும் பேரிடத்துறைதல் | எங்கும்பூரணமாய் நின்றறியுமென்றும் |
| தானே பிறங்கறிவாகிநிற்றல் | ஒருத்தரறிவியாமற் றானே விளக்கமுடைய வறிவாயிருக்குமென்றும் |
| சோர்வுடைச் சடநிகழ்த்தல் | குற்றத்தையுடைய வசேதனமாயிருக்குமென்றும் |
| எனுமிவை சொல்லார் நல்லோர் | என்றிங்ஙனஞ் சொல்லப்பட்ட வத்தங்களைச் சித்தாந்தவழக்கையறிந்த பெரியோர்கள் சொல்லார்கள். பின்னையெங்ஙனேயென்னில் |
| ஓர்விடத்துணருமுண்மை யொளிதரு முபலம் போலும். | விசாரிக்குமிடத்து ஆன்மா வொருசரீரத்திலேநின் றறிகிறமுறைமை பிரகாசத்தினுடைய படிகம்போலக் கூடினதின் றன்மையாயிருக்கும். எ-று. |

வி-பு. ஓரிடத் திருத்தலென்றதை நல்லோர் சொல்லாரென்று மறுத்ததேதென்னில் அப்படியான்மா வொருதானத்திலே

நின்றறியுமாறு லுருப்பட் டழிவதாஞ்செய்யும் சரீரமெங்கும் பாரி சித்தாலு மறியமாட்டாதெனவறிக. என்றிங்ஙனமறுத்ததற்கு. பி-ம். சித்தியாரில். "உடலினிலேகதேசி யுயிரொளி யுருவாய்மா யும், படர்வுறுமறிவின்றெங்குஞ் சுடரொளிப் பண்பதென்னிற், சுடர்தொடிற்சுடுவதெங்குந் தொட்டிடமறிவுண்டாகு, மடர்புலனி டத்துமோக்க மறிவெழவேணுமன்றே." எ-து. கண்டுகொள்க. ஆகையா லிப்படியில்லாததுகொண்டே யேகதேசஞ்சொல்ல வழ க்கில்லையெனவறிக.

இனி யிரண்டாவது மாயாவுருநிறைந்திடுத லென்றதை நல் லோர் சொல்லாதென்று மறுத்ததேதென்னில் அப்படியான்மா வொருசரீரமெங்கு நிறைந்துநின் றறியுமேயாமாகிற் கீழாலவத்தை ப்பட்டு மூலாதாரத்திலே யொடுங்கிக் கிடக்கவும் வழக்கில்லை. அன்றியுஞ் சத்தாதி விடயங்களை யறியுமிடத்துப் புலன்களெல்லா மொக்க ஜீவிக்கவும்வேணும். அன்றியுஞ் சரீரத்திலே சில குறைவு பட்டா லதற்குத்தக்க தான்மாவினுஞ் சில குறைவுபடவும்வே ணும். என்றிங்ஙனமறுத்ததற்கு. பி-ம். சித்தியாரில் "உருவினி னிறைந்துநின்றங் குணர்ந்திடுமுயிரதென்னின், மருவிடாதறக்க ம்வாயி லறிவொக்க வழங்கவேண்டும், பெருகிடுஞ்சுருங்கும்போ தம் பேருடற் சிற்றுடற்கண், வருமுடல்குறைக்கவொக்கக் குறை ந்துபின் மாயுமன்றே" எ-து. கண்டுகொள்க. ஆகையா லப்படி யில்லாததுகொண்டே சரீரமெங்கு நிறைந்துநின்றறிய வழக்கில் லையெனவறிக.

இனி மூன்றுவது ஒன்றும்பேரிடத் துறைதலென்றதை நல் லோர் சொல்லாதென்று மறுத்ததேதென்னில் அப்படியான்மா வெங்கும் பூரணமாய் நின்றறியுமேயானால் அவத்தைப்படவும் வழக்கில்லை ஜநநமரணப்படவும் வழக்கில்லை. அன்றியுஞ் சத்தாதி விடயங்களைக் கொள்ளுமிடத் தொவ்வொரு புலன்களாக ஜீவிக் கவும் வழக்கில்லையாகவும்வேண்டும். என்றிங்ஙன மறுத்ததற்கு.

பி-ம். சித்தியாரில். "எங்குந்தான் வியாபியாய்நின் றுணருமிவ்வான்மாவென்னிற், றங்கிடுமவத்தைப்போக்குவரவுகள்சாற்றவேண்டும், பங்கமார்புலனொன்றொன்றாய்ப் பார்த்திடல்பகரவேண்டு, மிங்கெலாமொழிந்தானிற்ப தெங்ஙனமியம்பவேண்டும்." எ-று. கண்டுகொள்க. ஆகையா லப்படியில்லாததுகொண்டே யெங்கும் பூரணமாய் நின்றறியுமென்பது வழக்கில்லையெனவறிக.

இனி நான்காவது தானே பிறங்கறிவாகி நிற்றலென்றதை நல்லோர் சொல்லாரென்று மறுத்ததேதென்னில் அப்படியான்மாதானே யறியுமேயாகிற் சத்தாதி விடயங்களைக் கொள்ளுமிடத்துப் புலன்களைக் கொண் டறியவேண்டுவதில்லை. அன்றியு மந்தக்கரணங்களைக்கொண்டு மறியவேண்டுவதில்லை. என்றிங்ஙனமறுத்ததற்கு. பி-ம். சித்தியாரில் "அறிவிச்சைசெயல்களெல்லா மடைந்தனல் வெம்மையும்போற், குறியுற்றங்கனேகானேக குணகுணிபாவமாகி, நெறியுற்றுநிற்குமென்னி னிகழ்புலன்கரணமெல்லாஞ், செறிவுற்றங் சறிவுகொள்ள வேணுமோசிவனார்க்கே." எ - று. கண்டுகொள்க. ஆகையா லப்படி யில்லாததுகொண்டே யான்மாதானே யறிவனென்பது வழக்கில்லையெனவறிக.

இனி யைந்தாவது சோர்வுடைச் சடநிகழ்த்த லென்றதை நல்லோர் சொல்லாரென்று மறுத்ததேதென்னில் அப்படியான்மாவறியாமையா யிருக்குமேயாகி லொருத்த ரறிவித்தாலு மறியவழக்கில்லை. அன்றியும் உபாதியைநீங்கி முத்தியைப்பெற் றநுபவிக்கவும் வழக்கில்லையாம். என்றிங்ஙனமறுத்ததற்கு. பி-ம். சித்தியாரில். "அசித்தெனிலுணரா தான்மா வசித்தாச்சித்தாகுமென்னி, லசித்தாச்சித் தாகாதாகுஞ் சித்தசித்தாவதில்லை, யசித்தொருபுறமாயொன்றிச் சித்தொருபுறமாய்நில்லா, தசித்துஞ்சித்தேயென்னி லசித்தடைந் தறி

வதின்றும்." என்பதனுள். "அசித்தெனி லுணராதான்மா." எ-து. கண்டுகொள்க. ஆகையா லப்படியில்லாதது கொண்டே யான்மாவை யறிவல்லவென்னவும் வழக்கில்லையென வறிக.

ஆக விங்ஙனஞ்சொல்லப்பட்ட வகைகளாந்திணையு மறுத்து ஓரிடத்துணருமுண்மை யொளிதரு முபலம்போலும். எ-கு. ஆன்மாவானது சுத்தபடிகம்போலக் கூடினதின்றன்மையா யிருக்குமென்று பொருட்படுத்தினத்துக் குறுபவமே தென்னில் சுத்தபடிகமானது இருள்வந்து மேலிட்ட வவதரத் தந்தவிருளோடுங்கூடி யிருளினிறமாயிருந்தும் பஞ்சவன்னங்களோடுகூடின வவதரத் தந்தப் பஞ்சவன்னங்களினிறமாயிருந்தும் ஒளிமேலிட்டபொழு தந்தவொளியோடுங் கூடி யொளிதானாயிருந்தும்வரும். அதுபோல வான்மாவும் ஆணவமலமேலிட்டு மறைத்தவவதரத் தந்த மலத்தோடுங் கூடி யறியாமையாய்க்கிடந்தும் அப்படிக் கிடக்கச்செய்தே கலையாதி தத்துவங்களோடுங் கூடிப் பிரபஞ்சகாரியப்பட்டுச் சகலனாகியும் இவையிரண்டுபகுதியு நீங்குவதாக வருள் மேலிட்ட வவதரத் தந்தவருளோடுங்கூடி யறிவாய்நின்றும் இங்ஙனங் கேவலனாகியுஞ் சகலனாகியுஞ் சுத்தனாகியுங் கூடினதின்றன்மையாய் நிற்கையாலே படிகத்தை யுவமைசொன்னதெனவறிக. இங்ஙனஞ் சொல்லப்பட்ட வவத்தை மூன்றுக்கும். பி-ம். சித்தியாரில். "கேவலசகலசுத்த மென்று மூன்றவத்தையான்மா, மேவுவன கேவலந்தன் னுண்மைமெய்ப் பொறிகளெல்லாங், காவலன்கொடுத்தபோது சகலனாமலங் களெல்லா, மோவினபோதுசுத்த முடையனுற்பவந் துடைத்தே." எ-து. கண்டுகொள்க. இதுவன்றியுஞ் சகலமொன்றையும்பற்றி யான்மாபடிகம்போலக் கூடினதின் றன்மைக்குப் பஞ்சவிந்திரியங்களோடுங் கூடிநிற்பதே சொல்லலாம். அது

வன்றியு மென்றவத்தைக்கு மறுபவங்காட்டிச் சொன்னது படிக முற்றுவமையாகையா லெனவறிக. இப்படிக்கூடினதின் றன்மையாயுள்ள வான்மாவி னுண்ணிலைமையு மாசாரியன் காட்டக்கண்டு அதையறிந்துகொள்ளுக.

இதனாற்சொல்லியது ஆன்மாவொருசரீரத்தோடுங்கூடி நின்று ஜீவிக்குமிடத்து நிற்குமுறைமை யெப்படியென்று வினவினமாணவகனைநோக்கி ஒருதானத்திலே நின்றறியுமென்றுஞ் சரீரமெங்கு நிறைந்துநின்றறியுமென்று மெங்கும் பூரணமாய்நின்றறியுமென்றுங் விளங்கினவறிவாயிருக்குமென்று மறியாமையாயிருக்குமென்று மிங்ஙனம்பலவகையாகச் சொல்லப்பட்ட சமயிகள்கருத்துகளை மறுத்து ஆன்மா விவையிற் சேருங்கூடி யறியுமிடத்துப் படிகமானது பஞ்சவன்னங்களோடுங்கூடி யதுவதுவாய்நின்று காரியப்படுவதுபோல வான்மாவுங் கூடினதின்றன்மையாய்நின்று ஜீவிக்குமென்னு முறைமையையறிவித்தது. (௧)

———o———

வேறு—இது இப்படிப்பட்ட வாத்மவிலக்கணத்தைப் பரசமயிகள் வேறுவேறு கூற வவற்றை நிராகரித் ததனுண்மையை யுவமைமுகத்தா லுணர்த்திற்று.

ஓரிடத்திருத்தல் - யோகிக ளாத்மா தேகத்தி லேகதேசத்திலேயிருந் தறியுமென்னு மதுவும்,—மாயாவுருநிறைந்திடுதல் - சமணன் மாயாகாரியமான தேகத்திலே நிறைந்து நின்றறியுமென்னு மதுவும்,—ஒன்றும்பேரிடத் துறைதல்-மாயாவாதி யாகாசம்போ லெவ்விடத்தும் பூரணமாய்நின் றறியுமென்னு மதுவும்,—தானேயிறங்கறிவாகிநிற்றல் - சாங்கியனு மைக்கவாதியும் விகாரவாதியுமாக ஒருகருத்தா வறிவியாம லாத்மாதானே யுயர்ந்தவறிவாய் நிற்குமென்னு மது

வும்,—சோர்வுடைச் சடநிகழ்த்தல் - நியாய வைசேடிகன் குற்றத்தையுடைய மனமுதலிய கருவிக ளதற் கறிவைக்கொ டுக்குமென்னு மதுவும்,— எனுமிவை சொல்லார் நல்லோர்- என்றெண்ணப்படு மிவற்றைச் சைவசித்தாந்திகள் சொல்லார்கள்,—ஓரிடத் துணரு முண்மை - ஆத்மாவறியுமுண்மையை விசாரிக்குமிடத்து,—ஒளிதரு முபலம் போலும் - விளக்கந்தரும் படிகம்போல வகுத்ததன்றன்மையாய் நின்றறியும். எ - று.

உணருமுண்மை யோரிடத்தெனமாறுக. ஓரிடம் வினைத்தொகை. ஓரிடத்திருப்பி னேகதேசவுருவாய்ச் சடமாய் மற்றுள்ளவிடங்களி லறிவுமற்றழியும். உடன்முழுதுநிற்பி னவத்தைப் படுங்குற்றமு, முடல்வளரவளர்ந்து சிறுகச்சிறுகுதலாகிய சங்கோசவிகாசதன்மமென்னுங் குற்றமு, மிந்திரியமைந்தும் புலன்களைந்தையு மொருகாலத்திலே நுகராதகுற்றமு, முடல்வளரவளர்ந்து சிறுகச்சிறுகுதலாகிய வவயவங்குறைய வாத்மாவுஞ் சின்னபின்னப்படுங்குற்றமு மேறும். எவ்விடமு நின்றறியிற் போக்குவரவுடைய குற்றமு, மொருவன்கருத்தை யொருவனறியானென்னுங் குற்றமுந் தங்கும். தானேயறியி லவத்தைப்படுவது மொருவரறிவிக்கவறியுங் குற்றமுங், கருவிகளாலறியுங்குற்றமு முளவாம். கருவிகளறிவைக்கொடுப்பி னாத்மாவுக்குச் சடத்துவமுண்டாம், அறியுஞ்சடமான கருவிகளொன்றுங் கறிவைக்கொடுக்கமாட்டாவாகையா லிவைமுழுவதூஉ நல்லோர்சொல்லார். ஓர்வுடைத்தென்பதூஉம் பாடம். எ-று.

☞ மூன்றாஞ்சூத்திரமாகிய வான்மவிலக்கண முற்றிற்று.

---

இங்ஙனங்கூடினதின் றன்மையாயுள்ள வான்மாவுக் கவத்தைப்படு முறைமையுமுண்டாகையால் ஆன்மவிலக்கணத்துக்குமேலாக நான்காஞ்சூத்திரமாகிய வவத்தைத் தன்மையென்னு மதிகாரம்வைக்கப்பட்டது.

இவ்வதிகார நான்காஞ்சூத்திரமாக நின்றமுறைமை யெங்ஙனமெனில் சிவஞானபோதத்தி னான்காஞ்சூத்திரமும் அவைத்தைத்தன்மையை யருளிச்செய்கையினா லிதுவு மப்படி வைக்கப்பட்டதெனவறிக. அதுவெங்ஙனேயெனில்:—"அந்தக்கரண மவற்றி னொன்றன்றவை, சந்தித்ததான்மாச் சகசமலத்துணரா, தமைச்சரசேய்ப்பநின் றஞ்சவத்தைத்தே." எனனுஞ் சூத்திரத்துக் கிவ்வான்மாக்கள் சகசமலத்தினா லுணர்வின்றென்பது கருத்தாகையால் இந்நூலினும் இவ்வதிகாரமாகிய "எண்ணவொன் றிலாததீதம்." "இவ்வகையவைத்தை" "நீக்கமிலதீதம்" என்னும் விருத்த மூன்றும் அவத்தைத் தன்மையைச் சொல்லுகையா லிதுவு நான்காஞ்சூத்திரமாக நின்றதெனவறிக.

அப்படியுண்டாகப்பட்ட வவத்தை யெத்தனை வகைப் பட்டிருக்குமென்னில் அது பதினெட்டுவகையவத்தை யுண்டாய்வரும்.

அதற்குவழியேதென்னில் காரணாவத்தை மூன்றுங் காரியாவத்தைப் பதினைந்துமாய் வருமென்றறிக.

இதிற்காரணாவத்தை மூன்றேதெனிற் காரணகேவலமென்றுங் காரணசகலமென்றுங் காரணசுத்தமென்றும் வரும.

இதிற்காரணகேவலமாவது சர்வசங்காரகாலத் தான்மாக்கள் சுத்தமாயாகாரணத்திலே யொடுங்கிச் சிருஷ்டிகாலமளவும் ஆணவமலத்தான் மறைப்புண் டொன்றுமறியாமற்கிடக்கு மவதரமெனவறிக.

காரணசகலமேதென்னிற் சிருஷ்டிதொடங்கிச் சர்வசங்காரம் வருமளவு மான்மாக்க ளியோனிவிட் டியோனிபற்றி யெண்பத்துநான்குநூறாயிர மியோனிபேதத்திலும் பிறந்திறந்து திரிகிறவவதரமெனவறிக.

காரணசுத்தமேதென்னில் இங்ஙனங் கேவலசகலப்பட்டுப் பிறந்திறந்து திரியுமவதரத் தாணவமலபாகம்வந்தவான்மாக்களுக் கிருவினையொப்புஞ் சத்திநிபாதமுமுண்டாமாகையா லந்தவவதரத்துச் சிவனாசாரியமூர்த்தமாக வெழுந்தருளி யிரக்ஷித்துத் தனது திருவருளான் ஞானத்தையுங் கடாக்ஷித்து நிஷ்டாபராக்கிப் பிராரத்தந் தொலைந்தவாறே தனது பூரணநிலையோடுங் கூட்டிக்கொண்ட வவதரமெனவறிக.

இங்ஙனங் கூறப்பட்ட காரணவத்தை மூன்றுக்கும். பி - ம். சித்தியாரில். "அறிவிலனமூர்த்தனித்த னாகாதிகுணங்களோடுஞ், செறிவிலன்கலாதியோடுஞ் சேர்விலன்செயல்களில்லான், குறியிலன்கத்தாவல்லன் போகத்திற்கொள்கையில்லான், பிறிவிலன்மலத்திரோடும் வியாபிகேவலத்திலான்மா." எ-து. கேவலத்துக்குக் கண்டுகொள்க.

உருவினைக்கொண்டுபோக போக்கியத்துன்னல் செப்பல், வருசெயல்மருவிச்சுத்த மாதியாம்விடயந்தன்னிற், புரிவதுஞ்செய்தங்கெல்லா யோனியும்புக்குழன்று, திரிதருஞ்சகலமான வவத்தையிற்சீவன்சேர்ந்தே." எ-து. சகலத்துக்குக்கண்டுகொள்க.

"இருவினைச்செயல்களொப்பி லீசன்றன்சத்திதோயக், குருவருள்பெற்றுஞான யோகத்தைக்குறுகிமுன்னைத், திரிமலமறுத்துப்பண்டைச் சிற்றறிவொழிந்துஞானம், பெருகிநாயகன்றன்பாதம் பெறுவதுசுத்தமாமே." எ - து. சுத்தத்துக்குக் கண்டுகொள்க.

இனி காரியாவத்தை பதினைந்துக்கு வழியேதென்னிற் கீழாலவத்தையைந்து நிலையிற்படுமவத்தை யைந்து நின்மலாவத்தை யைந்துமெனவறிக. இவை பதினைந்துக்கும். பி - ம். சிவஞானபோதத்தில். "இலாடத்தே சாக்கிரத்தை யெய்தியவுள்ள, மிலாடத்தே யைந்தவத்தையெய்து - மிலாடத்தே, யவ்வவ்விந்திரியத் தத்துறைகள் கண்டதுவே, யவ்வவற்றினீங்கலதுவாங்கு" எ - ம். சித்தியாரில். "அறிதரு முதலவத்தை யடைதருமிடத்தேயைந்துஞ், செறிதருங்கரணந்தன்னிற் செயலுறுமுணர்ந்துகொண்ணீ, பிறிவிலாஞானத்தோரும் பிறப்பறவருளாலாங்கே, குறியொடுமஞ்சவத்தைக் கூடுவர் வீடுகூட." எ-ம். இந்நூலினும். "இவ்வகையவத்தைதன்னில்" என்றவிருத்தமு மிப்பொருட்பற்றி யெனவறிக.

ஆக மூன்றுங்கூட்டி யவத்தைப் பதினெட்டும் இவ்வதிகாரத்துவகுத்த செய்யுண் மூன்றினுங் கண்டுகொள்க. அவை வருமாறு.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட வவத்தைகளிற் கீழாலவத்தையிற் காரியாவத்தையைந்துஞ் சாக்கிரமுதலாக வருளிச்செய்யாம லதீதமுதலாக வருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

எண்ணவொன் றிலாததீத மெய்திய துரியந் தொன்று, நண்ணிடுஞ் சுழுத்திதன்னி னயந்துள தொன்றுபின்று, மண்ணிடுங் கனவுதன்னி லாறேழாஞ் சாக்கிரத்தின், கண்ணுறு மஞ்சாறாய கருவிகள்காணுந் தானே. (௪௦)

உடலிடையுயிருறு மோரைந்தவத்தையி
னடையுறுகருவியி னடைவினைவகுத்தது.

(இ-ள்.) எண்ணவொன்றிலா ததீதம் — ஆன்மாவானது ஆணவமலமறைப்பாகக் கிழாலவத்தைப் பட்டுச் செல்லுமவதரத்துப் பிரகிருதிதத்துவ முடம்பாகச்சென்று மூலாதாரமாகிய அதீதத்தானத்தில் சென்றொடுங்கு மவதரத்து அவ்விடத்து ஜீவிக்குங்கருவிக ளொன்றுமின்றி யந்தப் பிரகிருதியென்னத் தானென்னப் பிறிவற்றுக்கிடந்தழுந்து மதே யதீதமாம். என்னவே அழுந்துந்தொழில் பிரகிருதிக்குடைய தாகையா லதீதத்திற் பிரகிருதியுண்டென்பதை யறுபவத்தாற் கண்டுகொள்க. அன்றியு மிதற்குமே லிச்செய்யுளுக்கெழுதுகிற நுட்பத்திலே யேதுக்களும் பிரமாணங்களுங்காட்டி யெழுதுகிற வகையினுங் கண்டுகொள்க.

எய்திய துரியத்தொன்று — அந்தமூலாதாரத்துக்கு மேலாகப்பொருந்தப்பட்ட நாபியாகிய துரியத்தானத்திலே நிற்குங்கருவி பிராணவாயுவொன்று. பிராணவாயு நிற்கையாவது ஆன்மா துரியத்திலே பிரகிருதிதத்துவ முடம்பாகப் பிராணவாயுவோடுங்கூடி நிற்குமவதரத்தந்தத் துரியத்தைவிட்டு அதீதத்திலே பிரகிருதிதத்துவ முடம்பாகச் சொல்லுமிடத் தந்தத் துரியத்திலே பிராணவாயு நின்றுவிடுகையா லப்படிச் சொன்னதெனவறிக.

நண்ணிடுஞ் சுழுத்திதன்னி னயந்துள தொன்று — அந்தத்துரியத்துக்கு மேலாகப்பொருந்தப்பட்ட விதயமாகிய சுழுத்தித்தானத்திலே விருப்பத்துடனே நிற்குங் கருவி சித்தமொன்று. சித்த நிற்கையாவது ஆன்மாவந்தச்சுழுத்தியிலே பிரகிருதிதத்துவமுடம்

பாகச் சித்தத்தோடும் பிராணவாயுவோடுங்கூடி நிற்குமவதாரத்தந்தச்சுழுத்தியைவிட்டுப் பிரகிருதிதத்துவமுடம்பாகப் பிராணவாயுவோடுங்கூடித் துரியத்திற்செல்லுமிடத் தந்தச்சுழுத்தியிலே சித்தமொன்று நின்றுவிடுகையா லப்படிச்சொன்னதெனவறிக.

பின்னுமண்ணிடுங் கனவுதன்னிலாறேழாம். அருவயம். அண்ணிடுங் கனவுதன்னிற் பின்னுமாறேழாம்

அந்தச் சுழுத்திக்குமேலாக வடுத்தகண்டமாகிய சொப்பனத்தானத்திலே (பின்னுமென்றவிதப்பால் முற்கூறிய பிராணவாயுவுக்குப் பின்னுள்ள வொழிந்த வாயுக்களொன்பதும்) ஆறேழாகிய சத்தாதிகளைந்தும் வசனாதிகளைந்தும் அந்தக்கரணங்களிற் சித்தநீங்கலாக மனம் புத்தி யாங்காரமும் ஆகப்பதின்மூன்றும் ஆகமூன்றுங்கூட்டி யிருபத்திரண்டுநிற்கும். அன்றியு மிந்தப் பதத்துக்குப் பின்னுமென்றது வாயுக்களொன்பதுக்குப் பொருட்படாதென்று பின்னு மண்ணிடுங் கனவிலாறே ழொன்பதாமென்று பாடமோதி இருபத்திரண்டு கருவி சொப்பனத்தானத்திலே நிற்குமென்று தொகைப்படுத்திப் பொருளுரைப்பாருமுளர். இதைப் பொருளுக்கேற்க அந்தப் பாடத்தைக் கூட்டிக்கொள்க. சொப்பனத்தானத்தில் நிற்குங் கருவி யிருபத்திரண்டாவதெதென்னில் ஆன்மாவந்தக் கண்டத்தானத்திலே வாயுக்கள் பத்தும் வசனாதியைந்தும் சத்தாதியைந்தும் அந்தக்கரணங்கணாலும் ஆகவிருபத்துநாலோடுங்கூடிப் பிரகிருதிதத்துவ முடம்பாகநிற்குமிடத்து அந்தக்கண்டமாகிய சொப்பனத் தானத்தைவிட்டுப் பிரகிருதிதத்துவ முடம்பாகப் பிராணவாயுவோடுஞ் சித்தத்தோடுங்கூடி இதயமாகிய சுழுத்தித்தானத்திலே செல்லுமவ

தாத்து முற்கூறிய கருவிகளிருபத்திரண்டுஞ் சொப்பனத்தானத்திலே நின்றுவிடுகையா லப்படிச் சொன்னதெனவறிக.

**சாக்கிரத்தின் கண்ணுறு மஞ்சாறுய கருவிகள்**

கண்டத்துக்கு மேலாகிய இலாடத்தானமாகிய சாக்கிரத்தானத்திலே பூதங்களைந்தின் வழித்தாகிய ஞானேந்திரியமாகிய சோத்திராதிகளைந்துங் கன்மேந்திரியமாகிய வாக்காதிகளைந்தும் ஆகப்பத்துக்கருவிகளுஞ் சாக்கிரத்திலே நிற்கும். பத்துக் கருவிகள் நிற்றலாவது ஆன்மா தத்துவ முப்பத்தாறோடுங்கூடி விசுவவியாத்தனாய் நிற்கச்செய்தே யதிலே யறிகருவிகளாகிய சிவதத்துவமைந்தும் வித்தியாதத்துவமேழிற் பிரகிருதிதத்துவ நீங்கலாகக் கலாதிகளாறும் ஆன்மதத்துவ மிருபத்துநாலிற் பூதங்களைந்தும் ஆகப் பதினாறு நீங்கலாக நின்றகருவி யிருபதும் தொண்ணூற்றாறு வகையில் வாயுக்கள் பத்தும் வசனாதியைந்தும் ஆக முப்பத்தைந்தோடுகூடி ஆன்மா ஓடச் சமைந்தோடுகிற தேரியற்றுவானைவிட்டு நின்றாற்போல அந்த விலாடத்தானத்திலே சாக்கிராவத்தைப்பட்டு நிற்கச்செய்தே யான்மா வதனைவிட்டுச் சொப்பனத்தானத்திற் செல்லுமிடத்து வாயுக்கள் பத்தும் வசனாதியைந்துஞ் சத்தாதியைந்தும் அந்தக்கரணங்க ணாலும் ஆக விருபத்துநாலோடுங் கூடிப் பிரகிருதிதத்துவ முடம்பாகச் செல்லுகையா லிந்த விருபத்தைந்து நீங்கலாக மற்றுள்ள சோத்திராதியைந்தும் வாக்காதியைந்து மந்த விலாடத்தானத்திலே நின்றுவிடுகையா லப்படிச் சொன்னதெனவறிக. அஞ்சாறுயகருவிகள் எ-து. பூதங்களைந்தின் வழித்தாகிய கருவிகளென்றதேதென்னில் ஆன்மா விந்திரியங்களைக்கொண்டு விடயங்களைக் கொள்ளுமிடத்துப் பூதங்க

ளிடமாகநின்று கொள்ளுகையாலப்படிச் சொன்னதெனவ றிக.

காணுந்தா ஆன்மா வவத்தைப்பட்டுச் செல்லுமவ
னோ. தரத் தந்தந்தத் தானங்கடோறு மந்தந்த
க்கருவிகளை விட்டுவிட்டுப்போ முறைமை
யையிங்ஙன மிப்படி யறியப்படும். எ-று.

வி-ப. இங்ஙனம் பொருட்கூறிவந்த வகையில் பின்னு மண்ணிடுங்கனவுதன்னி லாறேழாம். எ-கு. பின்னுமென்றது வாயுக்களொன்பதுக்கும் பொருட்படாதென்று பின்னுமண் ணிடுங்கனவி லாறேழொன்பதாம் என்று பாடமோதுவாரு முளரென்றதற்கு வழியேதென்னில் இந்தச்செய்யுளுக்குக் கருத்து ஆன்மா வவத்தைப்பட்டுச் செல்லுமவதரத் தந்தந் தத் தானங்கடோறும் விட்டுவிட்டுப்போங் கருவிக்குத் தொ கை சொல்லுகையாற் சொப்பனத்தானத்தில் விட்டுப்போங் கருவி யிருபத்திரண்டுக்குத் தொகை சொல்லுமிடத்துப் பின்னு மண்ணிடுங்கனவுதன்னி லாறேழாம் என்று பதின்மூ ன்றுக்குத் தொகைசொன்னதொழிய மற்றவொன்பதுக்குத் தொகை சொல்லாதபடியால் பின்னு மண்ணிடுங்கனவி லா றேழொன்பதாம் என்று பாடமோதி யிருபத்திரண்டென்று பொருட்கூறுகை கருத்தாகையா லப்படிப் பாடமோதின தெனவறிக. அப்படியானால் முன்னே பிராணவாயுவைச் சொல்லிவருகையாற் பின்னுமென்றது பிற்பட்ட வாயுக்க ளொன்பதுமென்றுபொருட்கூறுகைக்குத்தொகையாகாதோ வென்னி லப்படி முன்னே பிராணவாயுவென்றதும் வியாக்கி யானஞ் செய்தவர்கள் சொன்னதொழியப் பாடத்திற் சொ ல்லாதாகையால் அதுவும் பொருளல்லவென்பது கருத்தெ னவறிக. இங்ஙனம் பொருட்கூறிவந்த வகைக் குதாரணங் கள் வருமாறு:—அஃதாவது ஆன்மா வவத்தைப்படுட்ச் செ

ல்லுமிடத்துச் சாக்கிரந்தொடங்கி யதீதமளவு மந்தந்தத் தானங்கடோறுங் கூடிநிற்குங் கருவிக ளின்னின்னதென்று தொகை சொன்னதற்கு. பி-ம். திருமந்திரத்தில் "முப்பதோ டைந்தாய் முதல்விட்டங் கையைந்தாய்ச், செப்பதின் மூன் றுய்த் திகழ்ந்திரண்டொன்றதா, யிப்பதிநின்ற வியல்பைய றிந்தவ, ரப்பதிகொள்பவ ராய்ந்துகொள்ளீரே." எ-ம், சித் தியாரில். "சாக்கிரமுப்பத்தைந்து நுதலினிற்கனவுதன்னி, லாக்கிய விருபத்தைந்து களத்தினிற் சுழுனைமூன்று, நீக்கிய விதயந்தன்னிற் றுரியத்திலிரண்டுநாபி, நோக்கியதுரியாதீத நுவலின்மூலத்திலொன்றே." எ - ம். மெஞ்ஞான விளக்கத் தில். "நனவுதனிற்கருவி முப்பத்தைந்தாகுங், கனவிருபத் தோரைந்தாங் காணில் - முனிசுழுத்தி, மூன்றாருங்காணு முழுத்துரிய மோரிரண்டே, யூன்றுமதீதந் தருமாறொன்று." எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

என்றிங்ஙன மவத்தைக்குக் கருவி முப்பத்தைந்தென்று சொல்லியிருக்கிற விதிலே முப்பத்துநாலு கருவியென்றும் ஒன்று ஆன்மாவென்றுஞ் சில நூல்களிற் சொல்லுவானேனெ ன்னி லப்படிச் சொன்னதும் பிரகிருதிதத்துவத்தை யான்மா வென்று சொன்னதெனவறிக. அதற்கு வழியேதென்னிற் பிர கிருதிதத்துவ மற்றுள்ள கருவிகளைப்போல வான்மாவைவி ட்டும் பற்றியும் வாராமற் கேவல சகலமிரண்டினு முயிருமு டம்பும்போலப் பிரிவற்று நிற்கையால் உடலுக்கிட்டபெயர் உயிருக்கு நின்றாற்போலப் பிரகிருதி தத்துவத்தின்பெயர் ஆன்மாவுக்குச் சொல்லியும் விளக்குச் சுடரொளியுந்தகளி யும் விளக்கென்று பெயர்பெற்றாற்போல ஆன்மாவின்பெயர் பிரகிருதி தத்துவத்திற்குச் சொல்லியும் வருகையால் இவ்வி டத்துக்கும் ஆன்மாவின்பெயர் பிரகிருதி தத்துவத்துக்குஞ் சொன்னதெனவறிக. அப்படி யொன்றின்பெய ரொன்றிற்கு

மாறிவருகைக்கு. பி-ம். சிவஞானபோதத்தின் மூன்றாஞ்சூத்திரத்தின் சூரணையில். "ஒடுங்கினவிடத் தின்பதுன்ப ஜீவனம் பிரகிருதிக்கின்மையி னொடுங்காவிடத் தின்பதுன்பம் ஜீவியாநிற்ப துளதாதலி னதுவே யவ்வான்மாவாம்." என்றதனுள் "ஒடுங்கினவிடத் தின்பதுன்ப ஜீவனம் பிரகிருதிக்கின்மையின்" என்பதைப் பிரகிருதி தத்துவத்தின்பேர் ஆன்மாவுக்கு வருமதுகண்டுகொள்க. இனி யான்மாவின்பெயர் பிரகிருதி தத்துவத்துக்கு வருமதற்கு. பி-ம். சித்தியாரி லிரண்டாஞ் சூத்திரத்திலே தத்துவத்தின் றொகை சொல்லுமிடத்துண்டாகிய விருத்தத்தில் "சுத்ததத்துவங்களொன்று முன்னமே சொன்னவைந்து, மித்தகைமையி னியம்பு மிவை முப்பத்தொன்றுமாகத், தத்துவ முப்பத்தாறுஞ் சைதன்னியங் களைந்து, சித்தசித்தான்மாவொன்று முப்பது மசித்தேசெப்பில்" இதிற் சித்தசித் தான்மா வொன்று மென்பதைக் கண்டுகொள்க.

இதனையுஞ் சித்தசித்தான்மாவென்று ஆன்மாவின் பெயர் வருகையா லான்மா வென்பாருமுளர். அது வழக்கல்லவெனவறிக. அதுவேனென்னில் தத்துவங்களுக்குத் தொகைசொல்லிச் செலவுசொல்லுமிடத்து மீளவுந் தத்துவங்களைச் சொல்லாமல் ஆன்மாவைச் சொல்லுகை வழக்கல்லாதபடியா லதனைச் சொல்லவொண்ணாதென்றதெனவறிக.

அன்றியும் சித்தசித் தான்மாவென்றதைப் புருடதத்துவமென்பாருமுளர். அது வழக்கல்லவெனவறிக. அதுவேனென்னில் அதனைத் தத்துவசமூகத்திற் றோன்றுங் கருவியென்று "நிச்சயம் புருடனாகிப் பொதுமையி னிற்குமன்றே." எ-ம். "ஐவகையாலுறுபயன்க ளுகரவருங்கால மதுபுருடதத்துவம்." எ-ம். நூல்களிற் சொல்லிவருகையால் ஆன்மாதத்துவங்களோடுங் கூடிநின்று சகலனாய ஜீவிக்குமவதரத்

தூண்டாகுங் கருவியாகையாலும் பிரகிருதி தத்துவம்போல ஆன்மாவை விடப்படாமற் கேவலசகல மிரண்டினுங் கூடுதி ல்லாதாகையாலு மதனையாகாதென்ற தெனவறிக.

அன்றியும் புருடதத்துவந் தன்னை யான்மாவென்றுரு மான்மாவின்பெயர் தத்துவத்துக்கும் வருமென்பது கண்டு கொள்க.

என்றாலுஞ் சித்தசித்தான்மாவென்றது பிரகிருதி தத்துவமே தூணிபெனவறிக.

அப்படியானாலு மவத்தைப்பட்டுச் செல்லு மவதரத்து மற்றுள்ள தத்துவமுடம்பாகச் செல்லாதோ பிரகிருதிதத்துவம் வேணுமோவெனனில் அப்படி மற்றுள்ள தத்துவமுட ம்பாகத் துரியமளவும் வந்து சென்றதாகிலுந் துரியத்திலே பிராணவாயு நின்றுவிடுகையாற் றுரியத்தைவிட் டதீதத்தி லேசெல்லுமிடத் தான்மாவானது தனித்துச்செல்லாது. அஃ தெப்படியென்னில் "அங்கியானது தானுமொன்றை யணைந் துநின்று நிகழ்ந்திடும், பங்கியாவுயிர்தானு மிப்படி பற்றிய ல்லது நின்றிடா." என்று நூல்களிற் சொல்லிவருகையால் ஆன்மாவானதொன்றோடு கூடிநிற்பதொழியத் தனித்துநில் லாதாகையா லவ்விடத்துக்குப் பிரகிருதி தத்துவமுடம்பா கச் செல்லவேண்டுகையா லது வேண்டுமென்பதை யநுபவ த்தாற் கண்டுகொள்க.

அப்படியானு லான்மாவுக் காணவமலஞ் சகசமாய்நிற் கையா லந்த வாணவமலந் தாரகமாகச் சென்றொடுங்கா தோ பிரகிருதிதத்துவம் வேணுமோவென்னில்? அந்தவாண வமலமு மான்மாவோடுங் கூடிநின்று மறைக்கிறதொழியத் தாரகமாகாதாகையா லதனைச் சொல்லவேண்டுவதில்லை யெ னவறிக.

ஆகையா லல்விடத்துக்குப் பிரகிருதி தத்துவ முடம்பா கச் சென்று அதீதத்திலும் பிரகிருதிதத்துவமு மான்மாவுங் கூடிக்கிடக்குமென்பதே வழக்கெனவறிக. அப்படி யதீதத்தி லிரண்டுங் கூடிக்கிடக்குமேயானால் சித்தியாரில் அவத்தைக்குச் சொல்லுமிடத்து "படைகொடு பவனிபோதும் பார்மன்னன் புகும்போதில்லிற், கடைதொறும் விட்டுவிட்டுக் காவலுமிட்டுப்பின்னை, யடைதருந்தனியேயந்தர்ப் புரத்தினி லதுபோலான்மா, வுடலினிலைந்தவத்தை யுறுமுயிர்காவலாக." எ - ம். இந்நூலினும் "அடையஞ்சவத்தைப் பெருகியமலத்தாற்பேணி யுறுந்தனியதிதமுண்மை யுயிர்கெனவுணர்த்துமன்றே." எ - ம். அதீதத்திலொருமுதலாகச் சொல்லுவானேனென்னி லப்படி யொன்றென்றதும் பிரகிருதியையு மான்மாவையுங் கூட்டியே யொன்றென்ற தெனவறிக. அது தற்குவழியேதென்னில் ஓரான்மா வோருடலோடுங்கூடி யிருக்கிறகுடத் தூடலென்று முயிரென்று மிரண்டுமுதலாயிருக்கச் செய்தேயு மவனென்று மவளென்று மதுவென்று மொன்றாய் நின்றாற்போல ஆன்மாவும் பிரகிருதியுந் தேகமுந் தேகியும் போலப் பிரிவற் றிரண்டுமுதலு மொன்றாய்நின்றதெனவறிக. அப்படியான்மாவைவிட்டுப் பிரகிருதிதத்துவ மில்லாதென்றும் பிரகிருதிதத்துவத்தைவிட் டான்மா நில்லாதென்றுஞ் சொன்னதற்கு. பி - ம். சித்தியாரில். "புருடன் பிரகிருதிபெற்றாற் போதஞ்சிறிதங்குண்டாகிக், குருடன்முதுகில் முடவனிருந் தூர்ந்தார்ப்போலப்பிரகிருதி, யிருடனிடத்தே யிருந்தியங்கும்." எ - து. கண்டுகொள்க. அப்படிப்புருடன் பிரகிருதிபெற்றா லென்பதுகொண்டே பிறகுவந்து கூடினதாமேயென்னில் அப்படிச்சொன்ன தந்தவதீதந்தன்னிலே யந்தப் பிரகிருதியழுந்த அந்தப் பிரகிருதியுங்கழன்று மாயாகாரணத்திலே கிடந்துணர்த்துமுறைமையிற் கூடினதெனவ

றிக. ஆகையாற் கேவலசகலமிரண்டினு மான்மாவும் பிரகிருதியு மொன்றை யொன்றுவிடப்படாம லுயிருமுடலும்போலப் பிறிவற்றுநிற்குமென்பதே வழக்கெனவறிக.

அப்படிக் கேவலத்திற் பிரகிருதிதத்துவமுண்டாமாகிற் றத்துவத்தோற்றுஞ் சொல்லுமிடத்துச் சித்தியாரில். "வருங்குணவடிவாய்மூலப் பிரகிருதிகலையிற்றோன்றித், தருங்குணமூன்றுமொன்றிற் றான்மூன்றாய் மும்மூன்றாகும்." எ - ம். இந்நூலினும். "உருத்திரராற்கலையதனிற் பிரகிருதிகுணங்களுளவாகும்." எ - ம். தோற்றஞ்சொல்லுவானே னென்னில் அப்படித் தோற்றஞ்சொன்னது மான்மாவானததீதத்தில் ஜீவியாமற்கிடந்து சகலனாக ஜீவிக்குமவதரத்து இச்சாஞானக்கிரியாசொரூப னானாற்போல வந்தப்பிரகிருதிதத்துவமு மான்மாக்க ளொடுங்குமவதரத் துபாதானமாக ஜீவியாமனின்றும் தோன்றுமவதரத்துக்குக் குணசொரூபமாகத்தோன்றி ஜிவித்தும் வருகையாலு மப்படிச்சொன்னதெனவறிக.

அப்படிப் பிரகிருதிதத்துவ மோகினியிற்றோற்றமாகிய காரியமாயையோடுந் தோன்றியுமொடுங்கியும் வரச்செய்தே யிதுவொன்று முபாதானமாய் நிற்குமுறைமை யெங்ஙனேயென்னி லதுசுத்தமாயையிற் காரியமாகிய விந்துசத்தி சூக்குமைவாக்கு முதலானவையிற்றுக் குபாதானமாய் நின்றொடுங்குமதுபோல வெனவறிக.

அப்படியானா லோருபாதானத்திலே யோருபாதானமொடுங்குமுறைமை யெங்ஙனேயென்னில் அஃதொருவரிடத்திலே மற்றுமோரான்மா கர்ப்பத்திலே பதிந்து கிடந்தாற்போல வெனவறிக.

அப்படியானாற் கருவிகூடின விடமெல்லா மான்மாவுக்கு ஜீவிப்புண்டென்று சொல்லியிருக்கக் கேவலத்திற் பிரகிருதித்

துவங்கூடி நிற்குமேயாகி லான்மா ஜீவிப்பற்றுக்கிடக்குமுறைமை யெங்ஙனேயென்னில் ஆன்மா வொருசரீரசம்பந்தமாய் நின்றவிடமெல்லாம் ஜீவிக்குமென்று சொல்லியிருக்கவுங் கேவலப்பட்டுக்கிடக்கு மவதரத்துச் சரீரசம்பந்தமாய்க்கிடந்து ஜீவியாமனிற்குமதுபோல வெனவறிக.

ஆகையாற் பிரகிருதிதத்துவ மான்மாவோடுங்கூடி யெவ்விடத்தினு முயிரு முடலும்போலப் பிறிவற்றுநின்று சகலத்திற் குணசொரூபமாய்நின்று காரியப்பட்டுங் கேவலத்தி னுபாதானமாய் நிற்குமென்பது முற்கூறிவந்த வுபமானங்களினானு மநுபவத்தினாலுங் கண்டுகொள்க. அன்றியு மிச்செய்யுளில். "எண்ணேவொன்றிலாததிதம்" என்கையா லதீதத்திற் கருவிகளொன்றுமில்லை மற்றுள்ள நாலவத்தைக்குமே கருவியுள்ளதென்பாருமுளர். அதீதத்திற் பிரகிருதிதத்துவ முண்டென்பதைப்பற்றி முற்கூறிவந்தவகைகளி லிந்நூலுக்குக்கருத்தாகக் காவையம்பலநாதந் தம்பிரானாரருளிச்செய்த குறட்பாவி லிச்செய்யுளுக்கு வகுத்த குறட்பாவாகிய "உடலிடையுயிருறு மோரைந்தவத்தையி, னடைவுறுகருவியினடைவினைவகுத்து." என்று ஐந்தவத்தைக்குங் கருவியுண்டென்றருளிச் செய்கையாலு மதீதத்திலுங்கருவியுண்டென்பது கண்டுகொள்க. என்னவே யதீதத்திற் பிரகிருதிதத்துவமுண்டென்பது கருத்து.

அன்றியு மப்படியான்மாவைக்கேவலசகலமிரண்டினும் விடப்படாமல் வருங்கருவி பிரகிருதிதத்துவமல்ல புருடதத்துவமென்பாருமுளர். அதுவழக்கல்லவெனவறி. அதுவேனென்னில் ஆன்மாவிசுவவியாத்தியைவிட் டவத்தைப்படு மவதரத்து அறிகருவி பதினாறுநீங்கி யவத்தைப் படுகையா லதிலே காலமு நியதியுங் கலையும் வித்தையு மராகமுங்கூடி நீங்குகையா லந்த வைந்து கருவிகளுங்கூடி ஜீவிக்குஞ் சமூகத்திற்றோன்றுங் கருவி புருடதத்

துவமாதலா லந்தக் கலாதிகளைந்து மவத்தைப்படு மவதரத்துக் கூடாததுகொண் டந்தச் சமூகத்திற்ஞேற்றமாகிய புருடதத்துவ மு மவத்தையிற் கூடாதெனவறிக.

அன்றியும் புருடதத்துவத்தையும் பிரகிருதி தத்துவத்தையு மொருகருவியென்று மது வான்மா வவத்தைப்படு மவதரத்துத் துரியமளவும் புருடதத்துவமென்று பெயர்பெற்றுநின் றதீதத்திற் பிரகிருதிதத்துவமென்று பெயராய் நிற்குமென்பாருமுளர். அஃ திரண்டு மொருகருவியென்பது வழக்கல்லவெனவறிக. அதுவெங் ஙனேயென்னில் இந்நூலிலே தத்துவத்தோற்றஞ் சொல்லுமிட த்தில் "அருத்திமிருங்கலைகாலம்" என்னுந் திருவிருத்தத்திலே "உருத்திரராற் கலையதனிற் பிரகிருதிகுணங்க ளுளவாகும்" என் று பிரகிருதிக்குத் தோற்றஞ்சொல்லியும் "ஐவகையாலுறுபயன்க ளுகரவருங்கால மதுபுருடதத்துவமென் றறைந்திடுவரறிந்தோர்" என்று புருடதத்துவந் தத்துவ சமூகத்திற்ஞேன்றுங் கருவியெ ன்று சொல்லுகையாலும் புருடதத்துவம்வேறு பிரகிருதிதத்து வம் வேறெனவறிக. அன்றியு மிதுவேகருத்தென்பதைப் பற்றிக் காவையம்பலநாதத் தம்பிரானுர் இந்நூலுக்குக் கருத்தாகவருளி ச்செய்த குறள்வெண்பாவில். "ஐவகையாலுறுபயன்க ளுகரவ ருங்கால மது புருடதத்துவம்." என்னுஞ் செய்யுளின் கருத்தா கிய "புகன்றவற்ருலவர் புருடதத்துவமு, மகன்றமானு மதன்கு ணம் விரித்தது" என்று தத்துவங்கள் சாரியப்படுமிடத்துப் புரு டதததுவம் பிரகிருதிதத்துவமும் வேறுவேருகச் சொல்லுகை யாலு மவை யிரண்டையு மொருகருவியாகச் சொல்லவொண்ணு தெனவறி. அன்றியுந் தத்துவ முப்பத்தாறுக்குத் தொகைசொல் லுமிடத்து ஆன்மதத்துவ மிருபத்துநாலு வித்தியாதத்துவமேழு சிவதத்துவமைந்தென்று சொல்லுமிடத்து அவையிரண்டு மொ ருகருவியானல் முப்பத்தாறுக்குத் தொகையில்லாதபடியாலும் அன்றியும் அத்துவாசோதனையிற் கலைபடைப்புக்குச் சித்தியாரில்.

"தத்துவமூமோரேழு." என்றுவித்தியாகலைக்கு வித்தியாதத்துவமேழையாகிலும் அவையிரண்டையு மொருகருவியென்ன வொன்றதெனவறிக.

அப்படியானால் வித்தியாதத்துவ மேழென்பதற்குக் காலம் நியதிகலை வித்தை யராகம் புருடன் மாயையென்று நூல்களிற் சொல்லுகையால் புருடனையும் பிரகிருதியையு மொருதத்துவமாக்கி மாயையென்பதை யொருதத்துவமாக்கி ஆக வித்தியாதத்துவமேழென்று தொகைப்படுத்தி ஆகத்தத்துவ முப்பத்தாறென்று சொல்லப்படாதோவென்னில் அப்படி மாயையென்றதும் பிரகிருதிதன்னையே யெனவறிக. ஆகையாற் புருடன்வேறு பிரகிருதிவேறெனவறிக. அப்படிப்பிரகிருதி தன்னையே மாயையென்பதொழிய மாயையென்றொரு கருவி தனித்தில்லையென்பதற்கு வகையேதென்னில் தத்துவத்தோற்றஞ் சொல்லுமிடத்துக் காலம் நியதி கலை வித்தை யராகம் பிரகிருதியென்று ஆறுக்குத் தோற்றஞ்சொல்லி வருகையாலும் புருடதத்துவத்தோற்றம். "ஐவகையாலுறுபயன்களுகரவருங்கால மதுபுருடதத்துவமென்று." அவ்விடத்திற் றோற்றஞ்சொல்லுகையாலு மாயையென் றொருகருவிக்குத் தோற்றமோரிடத்திலுஞ் சொல்லாதபடியாலும் அன்றியுந் தத்துவங்கள் காரியப்படுமிடத்து மாயையென்றொருகருவி காரியப்படுகை சொல்லாதபடியாலும் பிரகிருதி தன்னையே மாயையென்பதொழியத் தனித்தொரு கருவி மாயையாகச் சொல்லப்படா தெனவறிக. ஆகையாற் புருடன்வேறு பிரகிருதிவேறெனவறிக.

அப்படிப் புருடனொருகருவியும் பிரகிருதியொருகருவியுமானால் ஒடுக்கஞ் சொல்லுமிடத்து "வித்தையிலொடுங்குமாறும்" என்று ஆறாகச்சொன்னதேதென்னில் புருடதத்துவந் தத்துவசமூகத்திற் றோற்றமாகையாலு மற்றுள்ளகாலமு நியதியுங் கலையும் வித்தையு மராகமும் பிரகிருதியுங் காரணமாயையிற் றோற்றமா

கையாலுந் தோன்றினவொழுங்கிலே யொடுக்கஞ் சொல்லவேண் டுகையாற் புருடதத்துவத்துக்குக் காரணமாயையிற் றோற்றமில் லாதபடியாலும் மற்றுள்ள ஆறுதத்துவமுங் காரணமாயையி லொடுங்குகையால் "வித்தையிலொடுங்குமாறும்." என்றதென வறிக. ஆகையாற் புருடதத்துவம்வேறு பிரகிருதிதத்துவம்வேறெ னவறிக.

அன்றியும். "சித்தமாமவ்வியத்தம்." என்று நூல்களிற் சொ ல்லிவருகையால் அவ்வியத்தமான பிரகிருதிதானே சித்தமுமாய்த் தோன்றுகையால் பிரகிருதியையுஞ் சித்தத்தையு மொருகருவியாக்கி அவத்தைக்குக்கருவி முப்பத்துநாலென்று சொல்வாருமுளர். அதுவும் பொருளல்லவெனவறிக. அதற்குக் குற்றமேதென்னில் அப்படிப்பிரகிருதியுஞ் சித்தமு மொருகருவியானால் ஆன்மதத் துவ மிருபத்துநாலினுஞ் சித்தத்தை யொருகருவியாகவும் வித்தி யாதத்துவ மேழினும் பிரகிருதியையொருகருவியாகவும் சொல் லித் தத்துவமுப்பத்தா றென்கையாலும் அன்றியும் இவை காரிய ப்படுமிடத்துச் சித்தமானது நினைவுமாத்திரமாய்நின்று காரியப்ப டுமென்றும் பிரகிருதி முக்குணங்களா யொன்பதுவகையாக நின் றுகாரியப்படு மென்றுஞ் சொல்லிவருகையால் இரண்டையுமொரு கருவியாகச் சொல்லவொண்ணாதெனவறிக. அன்றியும் பிரகிருதி தானே சித்தமாமென்னும் வழக்கைப்பற்றி யிரண்டுமொன்றுமெ ன்றாலும் பிரகிருதியினின்றுஞ் சித்தமுண்டாகையாற் சித்தமா னது சுழுத்தியில் நினைவுமாத்திரமாய் நிற்குமென்று நூல்களிற் சொல்லுகையாலும் பிரகிருதிகாரணமாய்ச் சித்தந்தோன்றுகை யாற் பிரகிருதிகெட்டுச் சித்தநிற்க வழக்கில்லாதபடியினாலும் அப் படிச் சொல்லவொண்ணாதெனவறிக. அப்படிப்பிரகிருதி காரண மாகச் சித்தந்தோன்று மென்றது ஆன்மதத்துவ மிருபத்துநாலும் பிரகிருதியிலே தோன்றி மீளவு மதிலேயொடுங்குகையாலும் அது

வழக்கல்லவெனவறிக. அப்படிப் பிரகிருதியிலே யான்மதத்துவ மிருபத்துநாலுந்தோன்றி மீளவு மதிலே யொடுங்குமென்பதற்கு. பி-ம். இந்நூலில் "உருத்திரராற் கலையதனிற் பிரகிருதிகுணங்க ளுளவாகு மாங்காரம் புந்தியினி லுதிக்கும்" என்று தோற்றத்து க்குச் சொல்லியும் சித்தியாரில் "தத்துவமெண்மூன்றுஞ் சென் றுன்மதத் தத்துவத்தொடுங்கும்" என்று ஒடுக்கத்துக்குச் சொல்லியும் வருமதுகண்டுகொள்க. ஆகையாற் புருடதத்துவம்வேறு பிரகிருதி தத்துவம்வேறு சித்தம்வேறெனவறிக.

அன்றியு மவத்தையிற் பிரகிருதிதத்துவங் கூடாதென்னி லதி ற்றோற்றமாயுள்ள வந்தக்கரணங்களு மிந்திரியங்களும் அவத்தை த்தானங்களினின்று காரியப்படுகையாற் காரணமில்லாதபொழுது காரியம் ஜீவியாதாகையால் அவத்தையிற் பிரகிருதியுண்டென்ப தை யநுபவத்தாற் கண்டுகொள்க. என்னவே ஆன்மா வவத்தை ப்படுமிடத்துப் பிரகிருதித்துவ முடம்பாகச் சென்று மூலாதா ரத்திலே யந்தப்பிரகிருதியோடு மழுந்திக்கிடக்குமென்கிறதே சித் தாந்தப் பொருளெனவறிக.

என்றிங்ஙனஞ் சொல்லிவந்தவகையில் அவத்தைக்குக் கருவி முப்பத்தைந் தென்பதூம் ஆன்மாவதீதத்திற் பிரகிருதித்துவ முடம்பாகச் சென்றொடுங்குமென்பதே வழக்கென்பதூங் கண்டு கொள்க. இதற்கு. பி - ம். சிற்றம்பலநாடித் தம்பிரானு ரருளிச் செய்த ஞானப் பஃறொடையில். "ஐயாறுமைந்து மனைகருவி யென்றுமிதிற், புருவத்திடை பத்தும் போக்கிருபத் தைந்தோடே களத்திற் றங்கிச், சுழுத்திதனின்மூன்றும் துரியத் திரண்டும், விழித்தநினைவற்றுயிரை விட்டு - அழுத்தியிடு, மூலப் பிருகிருதி யோடேயம் மூலமலங், கோலக்கிடந்துணர்த்தக் கூறுங்கால்." என்றருளிச்செய்ததூங் கண்டுகொள்க. அன்றியும் சிவாகமத்தில் அசிந்திதமென்கிற வாகமத்தின் கிரந்தத்திலே யவத்தைக்குக்

கருவி முப்பத்தைந் தென்பதற்குப் பிரமாணங் கண்டுகொள்க. ஆன்மதத்துவ மிருபத்தாலுக்கும் பிரகிருதிதத்துவம் பிரதானமாகையால் பிரகிருதியை க்ஷேத்திரக்ய னென்றதெனவறிக.

இதனாற்சொல்லியது ஆன்மாகீழாலவத்தைப்பட்டுப் பிரகிருதிதத்துவ முடம்பாகச் சென்று மூலாதாரத்திலே யொடுங்குமவதாரத்துச் சாக்கிரத்தானத்தில் விட்டுப்போங் கருவி பத்தென்றும் சொப்பனத்தானத்தில் விட்டுப்போங்கருவி யிருபத்திரண்டென்றும் சுழுத்தித்தானத்தில் விட்டுப்போங்கருவியொன்றென்றும் துரியத்தானத்தில் விட்டுப்போங் கருவி யொன்றென்றும் வருமுறைமையையு மறிவித்தது. (௧0)

---

வேறு—இனி நிறுத்த முறையானே செய்யுண்மூன்றினுனாலாஞ்சூத்திரத்தி லவத்தைத்தன்மை யுணர்த்துவான் றொடங்கினு ரவற்று ளிது கீழாலவத்தை யைந்தையு மதீதமுதலாக வுணர்த்திற்று.

எண்ணவொன் றிலாததீதம் - மூலாதாரத்திலே யாத்மாவாணவமலமேயா யெண்ணுதற் கொருகருவிகளுமின்றி நின்றறுவதாமதீதம்,—எய்திய துரியத்தொனறு நண்ணிடும் - பொருந்தப்பட்ட துரியத்திலேநிற்கும் பிராணவாயுவொன்று பொருந்தும்,—சுழுத்திதன்னி னயந்துளதொன்று-சுழுத்தியிலே விருப்பமுடைய சித்தமொன்று. பொருந்தும் நண்ணிடுமென்பதனை யிதனேடுங்கூட்டுக,—கனவுதன்னி லாறேழாம் - சொப்பனவத்தையிலே சத்தாதியைந்தும் வசனுதியைந்தும் மனம் புத்தி யாங்கார மூன்றுமாகிய பதின்மூன்றுமாம்,— பின்னுமண்ணிடும் - இவையன்றிநின்ற பிரதான வாயுக்களொன்பதும் பொருந்தும்,—சாக்கிரத்திற்கண்ணுறுமஞ்சாறும்-சாக்கிரத்தின் ஞானேந்திரியங்களைந்து மதன்வழியெண்ணுவதாய கன்மேந்திரியங்களைந்தும் பொருந்தும்,—

கருவிகள் காணுந்தானே-ஆராயுமிடத் தித்தானங்கடோறு மிந்த முறையே கருவிகள் பொருந்தும். எ - று.

காணுந்தானே யென்பதூஉம் பாடம். சாக்கிரத்தானம் நெற்றி. இது தொட்டுக் கண்டமளவுஞ் சொப்பனத்தானம். முன்னூலாகிய சிவஞானபோதத்திலே யொன்றவையாமூலத் துயிரவையு நாபிதனி லென்றாற்போ லிவ்வாசிரியருஞ் சிருட்டிக் கிரமமாகவுரைத்தார். கேவல சகல சுத்தமென்னுங் காரணாவத்தை மூன்றினுட் சகலாவத்தை பதினைந்துவிதப்படும். அவை சகலத்திற் கேவலமொன்றும் சகலத்திற் சகலமொன்பதும் சகலத்திற் சுத்தமைந்துமாம். சகலத்திற் கேவலமொன்றாவது அதீதம். சகலத்திற் சகலமொன்பதாவது மத்தியாலவத்தை யைந்துங் கீழாலவத்தையிற் சாக்கிரமுதனான்குமாம். மத்தியாலவத்தையுஞ் சகலத்திற் சுத்தமைந்து மேற்காட்டுதும். கீழாலவத்தையைந்திற் சாக்கிரத்திற் கருவி முப்பத்தைந்து. சொப்பனத்திற் கருவி இருபத்தைந்து. சுழுத்தியிற்கருவி மூன்று. துரியத்திற் கருவி இரண்டு. அதீதத்தில் ஒன்று. அது புருடனதலி லெண்ண வொன்றிலா ததீதமென்றார். இனிச் சாக்கிரத்திலே இந்திரியம் பத்துநிற்க நின்ற இருபத்தைந்துடனே சொப்பனாவத்தையுறுவன். இவ்விடத்திலறிகருவியான இந்திரியங்களினீங்கி யிருக்கையிலுஞ் சாக்கிரத்திற் கண்டவாதனை சொல்லமாட்டாம லிற்பனைபற்றி நிச்சயித்தெழுங் கருவிகளாண்டின்மையின் அறிவொழுகக்காய்ந்த விரும்பிறுகிச் சிறிதுசிவப்பு நின்றாற்போலவும் புத்தியிலே பிரகாசிப்பிக்கும். அதெப்படியெனில் ஒழுகக்காய்ந்த விரும் பக்கினியைவிட்டு நீங்கியிருக்கையிலு மக்கினிசெய்யுந்தன்மை செய்து நின்றாற்போலவும் பவுரிசுழன்றவ னடங்கியிருந்தவிடத்து மந்தப்பிரமைநின்றாற்போலவும் யானைகண்ட வனோடிப்போய் மீண்டுவரும்பொழுதவ் வியானை யாண்டில்லா திருக்கவு மனத்தின் கணிற்ப யானைபோ

லவுமாம். இனிச்சுழுத்தியிலே சொப்பனவாதனை நிகழ்ந்து சொல்லமாட்டாம னிற்பனபற்றி நிச்சயித்தெழுங்கருவிக ளாண்டின்மையின் அறிவொழுகக்காய்ந்த விரும்பிறுகிச் சிறிது சிவப்பு நின்ஞற்போலவுஞ் செறிந்தவிருளிலே மின் பிரகாசித்தழிக் கண்ணுக்கொருபொருளை நிச்சயிக்கவொண்ணு திருந்தாற்போலவு மாம். இனியத்துரியத்திலே பிராணவாயுவின் சேட்டையேயன்றி வேறொரு நினைவுமற்றிருப்பன். அறிவுமவ்விரும்பு மிககப்பிரகாசமும் வெப்பமுமாறிச் சிறிதுவெம்மையுட னிற்பதுபோலவு மின்மறைந்தவிடத்து மிக்கவிருளிற் கூடிநின்ற கண்போலவுமாம். இனியதீதத்திலேயறிவு வெம்மையற்ற விரும்புபோலவும் பிறவிக்குரு—னந்தகாரத்திலே விழித்திருக்குந் தன்மைபோலவு மிருக்கும்.

“நனவுமுகந்தன்னி னுலேழுமேழுங், கனவிருபத்தைந்துங் களத்தி—நினைவாஞ், சுழுனையொரு மூன்று மார்பிற்றுரிய, மெழிரு பிமூல மிரண்டொன்று. இந்திரியமீரைந்து நிற்கவிலாடத்திருபத், தைந்துங்களத்தி னடைந்தாங்கனவு—முந்தைநன, வென்னவிலங்குந்துயரு மின்புந்தினைக்குமுயிர், பின்னையது பொய்யாம் பிரிந்து. இந்திரியமீரைந்து நிற்கவிலாடந்தன்னி, லந்தத் தொழில்விடயமார்கனவின்—வந்துறலென், வாதனையினூலே விளங்குமன்றி மற்றிவற்றை, யாதலினாற் புக்கனவென்றார். உயிராவிசித்த முரந்தினொடுங்கி, யயர்வுநினைவுஞ் சிறிதேயாகு—முயர்கனவிற், றூன்று நினைவு மிதனைச்சுழுத்தியெனச், சான்றோருரைப்ப ரடைந்தார்க்கு. நாபிக்குக்கீழ்மேலு நாலங்குலமங்கே, யாவிக்குயிர்க்கொடுக்க மாந்துரிய—மாவிதனித்; தொன்றியிலங்கத்திருளி னுற்றவிழிக் கொப்பாகி, நின்றததீதநிலை. இவற்றின் பொருளுங்காண்க.

---

இங்ஙனஞ் சொல்லப்பட்ட வவத்தைகளைந்து மடியேனுக்குத் தரிசனம் வந்ததில்லையென்ற மாணவகனைநோக்கிச் சகலாவத்தையிற் காரியமாயுள்ள நிலையிற்படு மவதரத்திலுண்டான வைந்

தவத்தைகளினுந் தரிசனப்படுத்தியதுகொண்டே திருவருட்பிரகாசமுள்ள புண்ணியவான்களுக்குண்டான மேலாலவத்தையும் ஆசாரியன் கண்ணாக வறியவேணுமென்னு முறைமையு மருளிச்செய்வானெடுத்துக்கொண்டருளியது.

இவ்வகை யவத்தைதன்னி லெய்திடுங் கரணமெல்லா
மெய்வகை யிடத்திலுற்று மேவுமா கண்டுமிக்க
பொய்வகைப் பவமகற்றப் புரிந்திடி லருளாலாங்கே
யைவகை யவத்தையுய்க்கு மறிவினா லறிந்துகொள்ளே.

தத்துவசமூகந் தன்னிலைந்தவத்தையுஞ்
சுத்தமதாமைந் தவத்தையுஞ்சொன்னது.

(இ-ள்.) இவ்வகையவத்தை தன்னி லெய்திடுங் கரணமெல்லாம் — இந்தவடைவிலே முற்கூறப்பட்ட அவத்தைகளைந்தினு முண்டானகருவிகளேற்றக்குறைச்சலாய் நின்றமுறைமைகளெல்லாத்தையும்

மெய்வகை யிடத்திலுற்று மேவுமாகண்டு — மெய்யிலேவகைப்பட்ட விலாடத்தானத்திலே யஞ்சவத்தைப்படு முறைமையையறிந்து

மிக்க பொய்வகைப் பவமகற்றப் புரிந்திடில் — மிகவும் பொய்யாயிருக்கப்பட்ட ஜநநமரணதுக்கங்களைநீக்க விசாரிக்கில்

அருளா லாங்கே யைவகையவத்தையுய்க்கும் — தம்பிரானார் காருண்ணியத்தினாலே மேலான சுத்தாவத்தைகளைந்தையு மந்தவிலாடத்தானத்திலே செலுத்தாநிற்கும். அதனையறியுமுறைமை யெங்ஙனேயென்னில்

அறிவினா லறிந்துகொள்ளே. — ஆசாரியன் கண்ணாக வறிந்து கொள்ளுக. எ-று. அன்றியும் ஐவகையவத்தையுய்க்கு மறிவினாலறிந்துகொள்ளே யென்றொருபதமாக்கி

முற்கூறிய கீழாலவத்தைகொண்டும் நிலையிற்
படு மவத்தைகொண்டும் மேலாலவத்தையு
மறியப்படுமென்னவுமா மெனவறிக.

ரு-ம். மெய்வகையிடத்திலுற்றுமேவுமாகண்டு. எ-து. சாங்கிரத்தானத்திலே யுண்டாகிய நிலையிற்படு மவத்தை யைந்தையுங் கண்டென்றதெனவறிக.

அஃதாவது - ஒருபண்டத்தை மறந்தவ னந்தப்பண்டங் காணுதபொழுது பிராணவாயுவு மியங்காமல் மூர்ச்சித்திருந்தவவதர நிலையிற்படுமவத்தையிற் சாக்கிர துரியாதீதமெனவறிக.

இனியந்தப்பிராணவாயு வியங்கத்தக்கதாகப் பெருமூச்செறிந்து விசாரித்தறிவோமென்று நின்றவவதர நிலையிற்படுமவத்தையிற் சாக்கிரதுரியமென வறிக.

இனியவ்விடத்திலேயல்லோ போனதென்று நினைவெழுந்திருந்தவவதர நிலையிற்படுமவத்தையிற் சாக்கிர சுழுத்தி யெனவறிக.

இனி யின்னவிடத்திலே யல்லோ பண்டம்வைத்தோ மென்று விசாரப்பட் டறிந்தவவதர நிலையிற்படுமவத்தையிற் சாக்கிர சொப்பனமெனவறிக.

இனி யந்தப்பண்டம் வைத்தவிடத்திலேசென்று கண்டது நிலையிற்படுமவத்தையிற் சாக்கிர சாக்கிரமெனவறிக.

இந்தநிலையிற்படு மவத்தைக்குக் கருவிகளாவன. சுத்ததத்வங்களைந்துமெனவறிக.

அது வெங்ஙனேயென்னில் அதீதத்துக்குச் சிவதத்வமொன்று மெனவறிக.

துரியத்துக்குச் சிவதத்வமுஞ் சத்திதத்வமு மெனவறிக.

சுழுத்திக்குச் சிவதத்வமுஞ் சத்திதத்வமுஞ் சாதாக்யதத்வமு மெனவறிக.

சொப்பனத்துக்குச் சிவதத்வமும் சத்திதத்வமுஞ் சாதாக்கியதத்வமு மீசுரதத்வமு மெனவறிக.

சாக்கிரத்துக்குச் சுத்ததத்வமைந்து மெனவறிக.

இதற்கு. பி-ம். சித்தியாரில். "ஐந்துசாக்கிரத்திரண்டு கனவினிற்சுழுனைமூன்று, வந்திடுந்துரியந்தன்னி லிரண்டொன்றுதுரியாதிதந், தந்திடுஞ்சாக்கிராதி யவத்தைகடானந்தோறு, முந்திடுங்கரணந்தன்னிற் செயலொருமுணர்ந்துகொள்ளே." எ-து. கண்டுகொள்க.

இனி யிந்த நிலையிற்படு மவத்தைகொண்டே கீழாலவத்தையறியப்படுமென்பதற்கு மிந்த நிலையிற்படு மவத்தையிற் கருவிகணீங்குகிறதுதானே சுத்தாவத்தையா மென்பதற்கும். பி-ம். சித்தியாரில். "அறிதருமுதலவத்தை யடைதருமிடத்தே யைந்துஞ், செறிதருங்கரணந்தன்னிற் செயல்தொறுங்கண்டுகொண்ணீ, பிறிவிலாஞானத்தோரும் பிறப்பறவருளாலாங்கே, குறியொடுமைந்தவத்தை கூடுவர்வீடுகூட." எ-ம். சிவஞானபோதத்தில். "இலாடத்தேசாக்கிரத்தை யெய்தியவுள்ள, மிலாடதநேனையந்தவத்தை யெய்து - மிலாடத்தே, யவ்வவ்விந்திரியத் தத்துறைகள்கண்டதுவே, யவ்வவற்றினீங்கலதுவாங்கு." எ-ம் கண்டுகொள்க. என்னவேயிந்தச் சகலாவத்தையிலுண்டான கருவிக ளேற்றக்குறைச்சல்போல வந்தக்கீழாலவத்தைக்கு மெனவறிக. இது சகலாவத்தையிற் காரியாவத்தையைச் சொன்னதெனவறிக.

இனி யருளாலாங்கே யைவகை யவத்தையுய்க்குமென்றது சுத்தாவத்தையெனவறிக.

அவைவருமாறு:— நின்மலசாக்கிர நின்மலசொப்பன நின்மலசுழுத்தி நின்மலதுரிய நின்மலதுரியாதீதமெனவறிக.

அஃதாவது சுத்ததத்துவமைந்தில் சுத்தவித்தைநீங்கினவவதரஞ் சாக்கிரத்திற் சாக்கிரம்.

சுத்தவித்தையு மீசுரமு நீங்கினவவதரஞ் சாக்கிரத்திற்சொ ப்பனம்.

சுத்தவித்தையு மீசுரமுஞ் சாதாக்யமு நீங்கினவவதரஞ் சாக் கிரத்திற்சுழுத்தி.

சுத்தவித்தையு மீசுரமுஞ் சாதாக்யமுஞ் சத்தியு நீங்கினவ வதரஞ் சாக்கிரத்திற்றுரியம்.

சுத்ததத்துவமைந்து நீங்கினவவதரஞ் சாக்கிரத்தி லதீத மெனவறிக.

இவை யைந்துதத்துவமு நீங்கவென்றதுகொண்டே யிவை யைந்தும் பிரேரிக்கப்பட்ட கருவிகளு நீங்கவென்பதை யநுபவ த்தாற் கண்டுகொள்க.

இதற்கு. பி-ம். சிவஞானபோதத்தில். "இலாடத்தேசாக்கி ரத்தே" என்றசெய்யுண்முடிவில். "அவ்வவற்றி னீங்கலதுவா ங்கு." எ-து. கண்டுகொள்க. இதுசுத்தாவத்தையிற் காரியாவத் தையெனவறிக.

இதனாற்சொல்லியது கீழாலவத்தை யைந்தையுந் தரிசனப்ப டுத்தவேண்டிச் சகலாவத்தையிற் காரியாவத்தையாகிய நிலையிற்ப டுமவத்தைகொண்டே தரிசிப்பித்த முறைமையும் அதுகொண்டே சுத்தாவத்தையிற் காரியாவத்தை யைந்தையுந் தரிசிப்பித்த முறை மையு மறிவித்தது. நிலையிற்படுமவத்தையென்றது மத்தியாலவத் தை யெனவறிக. மேலாலவத்தை யென்றது சுத்தாவத்தையை யெனவறிக. (கக)

---

வேறு—இது மத்யாலவத்தையுஞ் சகலத்திற் சுத்தாவத் தையு முணர்த்திற்று.

இவ்வகை யவத்தைதன்னி லெய்திடுங்கரணமெல்லாம்-இந்த வைந்து கூறுபாடான கீழாலவத்தையிற் பொருந்தப்பட்ட தத்

துவ முப்பத்தைந்தும்,—மெய்வகை யிடத்திலுற்று மேவுமாக ண்டு - உணர்த்து முறைமைக்குத் தானமான விலாடத்தானத்தி லும் பொருந்திப் பஞ்சாவத்தை கூடும்படிகண்டு,—மிக்க பொய் வகைப் பவமகற்றப் புரிந்திடி லருளால் - மிகுத்த பிரபஞ்சத்தி லே பொய்யின் கூறுபாடான பிறவிகளைப் போக்குதற்குச் சிவ னருளாலே மேலாமவத்தையைப் புரியுமிடத்தில்,—ஆங்கேயை வகையவத்தை யுய்க்கும் - அவ்விடத்திலும் பஞ்சாவத்தை யவ்வ ருளாற் செலுத்தப்படும்,—அறிவிறு லறிந்துகொள்ளே - இந்த வவத்தையை யாசிரியனுணர்த்திய உபதேசவறிவாலறிக. எ - று.

அறிந்துகொள் ஒருசொல். எச்சவும்மைகள் விகாரத்தாற் றொக்கன. நிலையாமையிற் பொய்வகையென்றார். மத்யாலவத்தை யையுஞ் சுத்தாவத்தையையு மதீதமுதலாகத் தரிசிப்பான்.

"விரும்பு, மரும்பொருளை வீழ்த்துமயங்க, விரிந்தவனிலன் பெறுகை-வருந்தறிவு, தோன்றுதலையம் விழுந்தவிடந் தோன்றுத லென், றுன்றவைந்துஞ் சாக்கிரத்தினும். ஒருவர்க் கொருவர்க் கொருகா லொருகா, லருகிவரு மிவ்வவத்தை - கருவிகளை, முன் னம்பகர்ந்த முறையிற் கொளுநகமுகம், பன்னியவிவ் வைந்தினுக் கும் பாயகு. கலாதிகள் போகமுணுங் காலைக்கருவி, கலாதிகளை ச்சாக்கிரதத்தே காணுங் - கலாதிகளை, யின்றியும்போக முயிருக்கி லங்குமோ, துன்றுபுகழாய் சூழ்ந்துசொல். கலாதிகளாவிக் கொ ருவர்க்கஞ் சுகமாகையாற், கலாதிகளைக்கட்டுரையார் கற்றோர்-ம லாரியுறை, வந்தனறாரியனென் வாறேயவனடியிற், பந்தனைசொ ல்லா ரிதுபோற் பார். இனிச் சுத்தாவத்தை, ஆருயிரின்மேலதனு ளைந்தைந்தை யயந்தினுளும், பேருயிர்நிற்கும்பார் பெரும்பிணி போம் - பேருயிரா, யாருயிர்மேற்பார்க்கை யதீதந்துரியாதி, யா ருயிருளாதியிற் பார்க்கை. என்னும் பெரியோர்வாக்கியங்களா லறிக.

இங்ஙனஞ்சொல்லப்பட்ட காரியாவத்தைகள் தரிசிப்பித்தாற்போல முற்கூறிய காரணாவத்தைகள் மூன்றுந் தரிசிப்பிக்கவேணுமென்று மாணவகனைநோக்கிக் காரியாவத்தையி லுண்டான கேவலசகலசுத்தம்போலவிருக்குங் காரணாவத்தையி லுண்டான கேவலசகலசுத்தமென்னு முறைமையை மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

நீக்கமி லதீதமாசு நிறைந்தகே வலமாநீர்மை
சாக்கிரங் கலாதிசேர்ந்த சகலமாந் தன்மையாகு
நீக்கமி லிரண்டுங்கூடா தொழியவோர் நிலையினீடுஞ்
சாக்கிர வதீதஞ்சுத்தத் தகைமைய தாகுந்தானே.

கேவலசகல சுத்தமென்றுரைத்த
மூவகைதெளிய முறைமைமொழிந்தது.

(இ-ள்.) நீக்கமி லதீத மாசு நிறைந்தகேவலமா நீர்மை — ஆன்மாக்கள் மாயாகருவிகளெல்லா நீங்க நீங்காத வாணவமலத்தாலே மறைப்புண்டு மூலாதாரத்திலே கிடக்கிற வதீதம்போலே யிருக்குஞ் சர்வசங்காரத்துங் காரணமாயையிலே தத்துவங்களெல்லாமொடுங்க வதிலே சர்வான்மாக்களுமொடுங்கி யாணவமலத்தாலே மறைப்புண்டு கிடக்கிறதே காரணமாகிய கேவலாவத்தையின் முறைமை

சாக்கிரங் கலாதிசேர்ந்த சகலமாந்தன்மையாகும். அறுவயாங் கலாதிசேர்ந்த சகலமாந்தன்மையாகுஞ் சாக்கிரம் — ஆன்மாக்கள் கலையாதியாயுள்ள தத்துவங்களுடனே கலந்து ஒவ்வொருவிடயங்களிற் கூடிநின்று பிறிகிறகாரியமாகிய சாக்கிராவத்தைக்கொடுக்கும் கன்மத்துக்கீடாக வெண்பத்துநான்குநூறாயிர மியோனிகடோறும் பிறந்திறந்து திரிகிற சகலாவத்தையாகிய காரணாவத்தையின் முறைமை

நீக்கமி லிரண் டுங்கூடா தொழி ய வோர்நிலையினீ டுஞ் சாக்கிரவதி தஞ் சுத்தத் தன் மைய தாகுந்தா னே.

ஒன்றைவிட்டொன்றுபற்றி யான்மாவைவி ட்டு நீங்காமல்வருகிற பெருமைபொருந்திய கேவலசகல மிரண்டினுங் கூடாம லருளுட னேகூடி யிரண்டறநிலைபெற்று நேயத்துட னே யழுந்துகிறதே சாக்கிராதீதத்துக்கொக் கும் பரமுத்தியான சுத்தாவத்தையாகிய கார ணமும். எ-று.

ு-ம். அதீதமென்றது ஜீவிக்குங்கருவிகளெல்லாங் கழன்ற விடமெனவறிக.

கேவலமென்றது சர்வசங்காரமெனவறிக.

சாக்கிரமென்றது கலையாதி தத்துவங்களோடுங்கூடி ஜீவி த்துநிற்கை யெனவறிக.

சகலமென்றது சிருஷ்டிதொடங்கிச் சங்காரமளவும் பிறந் திறந்து வருகிறதெனவறிக.

சாக்கிர வதீதமென்றது கருவிகள் முப்பத்தாறுங்கழன்று வலசகலத்தினுமழுந்தாம லருளிடமாகச்சென்று ஞேயத்தழுந்த லாகிய வுண்மைநிட்டையை யெனவறிக.

சுத்தமென்றது திருவடியிலே யிரண்டறக்கூடிநின்ற பரமு த்தியை யெனவறிக.

இவையிற்றுக்கு, பி-ம். சித்தியாரில். "கேவலசகலசுத்த மென்று மூன்றவத்தையான்மா, மேவுவன்" எ-ம். அறிவில னமூ ர்த்தனித்த னராயாதி குணங்களோடுஞ் செறிவிலன்" எ-ம். "உருவினைக்கொண்டு போகபோக்கியத் துன்னல்" எ-ம். "இருவி னைச்செயல்களொப்பி லீசன்றன் சத்திதோய" எ-ம். வரும் விரு த்தங்களைக் கேவலசகலசுத்தமூன்றுக்குங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஆன்மா தத்துவங்களெல்லாங் கழ ன்று ஆணவமலத்தான் மறைப்புண்டு பிரகிருதித்துவ மூடம்

பாக மூலாதாரத்திலே கிடக்கிற வதீதம்போலே கிடக்குஞ் சர்வசங்கார கேவலத்திலென்றும் ஆன்மா கலையாதி தத்துவங்களோடுங்கூடி யொவ்வொன்றாக ஜீவிக்கிற சாக்கிரம்போலவிருக்கு மியோனிவிட்டுயோனிபற்றிப் பிறந்திறந்துவருகிற சகலமென்றும் இந்தக்கேவலசகல மிரண்டுநீங்கின சாக்கிராதீதம்போலவிருக்குந் திருவடியிலே யிரண்டறக்கூடின சுத்தமான பரமுத்தியென்றும் வருமுறைமையை யறிவித்தது. (௩௨)

---

வேறு—இது காரியாவத்தை பதினைந்திற்குங் காரணமான கேவல சகல சுத்தங்களின் தரிசன முணர்த்திற்று.

நீக்கமிலதீதம் - இவ்விடத்துக் கருவிகழன் றஞ்ஞானநீங்காத வதீதமானது,—மாசுநிறைந்த கேவலமா நீர்மை-ஆணவம் பரிபூரணமாயிருக்கிற சர்வசங்காரமென்று சொல்லப்பட்ட கேவலாவத்தையாகிய தன்மைடாம்,—சாக்கிரங் கலாதிசேர்ந்த சகலமாந் தன்மையாகும் - கலாதிகளுடனே கூடிநின்று விடயங்களினாலேவந்த சுகதுக்கங்களை யனுபவிக்குஞ் சாக்கிரமானது சிருஷ்டிதொடங்கிக் கன்மத்துக்கிடாக நாலுயோனிகளிலும் புக்குழன் றார்ஜிக்கப்பட்ட புண்ணியபாவங்களுக்கிடாகச் சுவர்க்கநரகங்களை யனுபவித்துச் சர்வசங்காரமளவாக ஜனனமரணப்பட்டுத் திரியுஞ் சகலாவத்தையான தன்மையாயிருக்கும்,—ஊக்கமிவிரண்டுங்கூடாதொழிய வோர் நிலையிடுஞ் சாக்கிரவதீதம்-தீவிரதர சத்திநிபாதத்தாலே கேவலத்தி லறியாமையுஞ் சகலத்திலவிகாரமுமான நீங்காத விவ்விரண்டுந் தாக்காதுவிடச் சிவனருளான ஒப்பற்றசார்பிலே நிலைபெற்றுநிற்குஞ் சாக்கிரவதீதமானது,—சுத்தத் தகைமையதாகுந்தானே - பரமுத்தியான சுத்தாவத்தையின் முறைமையாம். எ-று.

கலாதிசேர்ந்த சகலமென்று கூட்டினுமாம்.

இம்மூன்றுசெய்யுளானும் பெத்தமுத்தி யிரண்டினுமுள்ள வவத்தைக ளடங்கலுஞ் சொல்லப்பட்டன. அவத்தைமுடிந்தது.

☞ நாலாஞ்சூத்திரமாகிய அவத்தைத்தன்மை
முற்றிற்று.

---

இங்ஙன முற்கூறியவகையே யவத்தைப்பட்டுக்கிடக்கு மான்மாக்களுக்குச் சிவ னுணர்த்துமுறைமையு முண்டாமாகையால் அவத்தைக்குமேல் ஐந்தாஞ்சூத்திரமாகிய உணர்த்து முறைமையென்னு மதிகாரம் வைக்கப்பட்டது.

இவ்வதிகாரத்தில் ஐந்தாஞ்சூத்திர நின்ற முறைமையெங்ஙனேயென்னில் சிவஞானபோதத்தில்:— "விளம்பிய வுள்ளத்து மெய்வாய்கண்மூக், களந்தறிந்தறியா வாங்கவை போலத், தாந்தமுணர்வின் றமியருள், காந்தங்கண்ட பசாசத்தவையே." என்னும் ஐந்தாஞ்சூத்திரத்துக் கிவ்வான்மாக்க ளிடத்துத் தமது முதலுபகார முணர்த்துத லுதலிற்று என்றமையால் இந்நூலினு மிவ்வதிகாரத்து. "மருவிய பொறியிலொன்றும்" என்றவிருத்தந் தொடங்கி "அறிந்திடுமஞ்ஞதி." என்ற விருத்தமுடிவாகிய செய்யுளைந்தும் ஆன்மாக்களைச் சிவ னுணர்த்து முறைமையைச் சொல்லுகையால் இதுவு மைந்தாஞ்சூத்திரமாக நின்றதெனவறிக.

இச்செய்யுட்களி லவைவருமா றெங்ஙனே யென்னில் "தனக்கென வறிவிலாதான்." என்ற செய்யுளில் "தனக்கென வறியானுலிச் சகலமு நுகருந்தானே." "அறிந்திடுமஞ்ஞதி" என்ற செய்யுளில். "கன்மத் தொன்மை யறிந்தவை நுகருமாறு மருளுவ னமலன்றானே." எ-ம். வருகையா லப்படிச் சொல்லப்பட்டதெனவறிக.

இங்ஙன மிவ் வதிகாரத்துக்கு வகுத்த செய்யுட்களிற்
சில விருத்தங்களைச்சூத்திரத்துக் குவமைகாட்டி மற்ற விரு
த்தங்களுக் குவமைகாட்டாத தேதெனனில்? அஃதாவது இங்
தப் பொருளுக்கு மாறுபாடு சொல்லுஞ் சமயிகள் கருத்து
க்களை மறுத்த செய்யுட்களாகையாலெனவறிக. மேல்வருஞ்
சூத்திரங்களுக்கு மிங்ஙனங் கண்டுகொள்க.

இனி யிவ்வதிகாரத்துக்கு முதற் செய்யுளாகிய "மரு
விய பொறியி லொன்றும்" என்ற செய்யுளுக்குத் தொகுதலை
வருமாறு.

அப்படி யவத்தைப்பட்டுக் கிடக்கு மான்மாக்க ளுணரு
முறைமை யெங்ஙனேயென்று வினவுதற் குத்தர மருளிச்செ
ய்வா னெடுத்துக்கொண் டருளியது.

மருவிய பொறியிலொன்று மாபூத மைத்திலொ
ன்றுங், கருவிக ளொன்குநீங்காக் கலாதிக ளைந்துங்கூடி,
யொருபுல னுகருமிந்த வொழுங்கொழிந் துயிருமொ
ன்றைத், தெரிவுறு தவனொழிந்தத் திரள்களுஞ் செய
லிலாவே. (௧௩)

உணர்த்துமுறைமையி லொருபுலனுகர
விக்குறுகருவிக ளிவையாமென்றது.

ஆன்மா விந்திரியங்களைக் கொண்டு விட
யங்களைக் கொள்ளுமிடத்து

(இ-ள்.) மரு
விய பொறியி
லொன்றும் — அப்பொழுதைக்குப் பொருந்தப்பட்ட
விந்திரியங்களிலே யொன்றும்

மாபூத மைந்
திலொன்றும் — பெரிய பூதங்களாகிய பிருதிவி யப்பு தே
யு வாயு வாகாசமாகிய விவையைந்திலே யப்
பொறிகளுக்கேற்ற பூதமொன்றும்

கருவிகளுன்றும் — மனம் புத்தி யாங்காரஞ் சித்தம் என்கிற அந்தக்கரணங்களுன்றும்

நீங்காக் கலாதிகள் — முற்கூறிய கரணங்களைவிட்டு நீங்காத கலை காலம் நியதி வித்தை அராகம் புருடன் பிரகிருதி மாயையென்கின்ற வித்யாதத்துவமேழும்

ஐந்தும் — சுத்தவித்தை ஈஸ்வரம் சாதாக்கியம் சத்தி சிவம் என்கின்ற சிவதத்துவமைந்தும்

கூடியொருபுலனுகரும் — ஆக விங்ஙனஞ்சொல்லப்பட்ட தத்துவங்கள் பதினெட்டுங்கூடியே யான்மாவொருவிடயத்தைப் புசிப்பன். இந்தக்கருவிகள் கூடாதபொழுது ஆன்மாவுக்குப் புசிப்பில்லையோவென்னில்

இந்த வொழுங்கொழிந் துயிரு மொன்றைத் தெரிவுறு — இந்த முறைமையிலே சொல்லப்பட்ட கருவிகள் கூடினுலொழிய வான்மாவுமொன்றைப் புலப்பட வறியமாட்டாது. அந்தவான்மாக் கூடாதபொழுது அந்தக் கருவிகள் தானுக வறியாதோ வென்னில்

அவ னொழிந் தந்திரள்களுஞ் செயலிலாவே. — அந்தவான்மாவைக் கூடாம லந்தக்கருவிகளுந் தானுக வறியமாட்டா. எ-று.

று - ம். இங்ஙனம் பொருட்கூறிவந்த வகையி லான்மா யாதொருவிடயத்தைப் புசிக்குமிடத் தந்த விடயங்களுக் கேற்ற விந்திரியங்களிலே யாதாமொன்றும் அதற்கேற்ற பூதங்களிலே யாதாமொன்றும் அந்தக் கரணங்கள் நாலும் கலாதிக ளேழும் சுத்ததத்துவ மைந்தும் ஆகப் பதினெட்டுக் கருவிகளுங் கூடியே புசிக்கவேணுமென்று பொருட்கூறியதற்கு

வழியேதென்னில் அஃதாவது சிவனுடைய சத்திகள் சுத்த தத்துவமைந்தையுங் கொண்டு வித்யாதத்துவமாகிய கலாதிகளேழையுங் காரியப்படுத்தியும் அந்தக்கலாதிகளேழும் ஆன்மதத்துவ மிருபத்துநாலையுங் காரியப்படுத்தியும் வருகையா லப்படிச் சொல்லப்பட்டதெனவறிக.

அவை யொன்றினாலொன்று காரியப்படுமுறைமை யெங்ஙனேயென்னில் சிவனுடையசத்திகள் சுத்ததத்துவமைந்தையு நடத்தும் வகையாவது:—இச்சாசத்தி யீஶ்வரத்தை நடத்தும். கிரியாசத்தி சத்திதத்துவத்தையுஞ் சாதாக்கியத்தையும் நடத்தும். ஞானசத்தி சிவதத்துவத்தையும் சுத்தவித்தையையு நடத்துமெனவறிக. இதற்கு பி - ம். "இச்சைநடத்தியிடு மீச்சுரதத்துவத்தை, மெய்ச்சத்தி சாதாக்ய மேவியிடு-நிச்சயமே, யென்றகிரியை நடத்தியிடு மெய்ஞ்ஞான, மேன்ற சிவஞ் சுத்தவித்தையாம்." எ-து. கண்டுகொள்க.

இனி சுத்ததத்துவ மைந்தாலும் வித்தியா தத்துவமாகிய கலாதிகளேழுங் காரியப்பட்டு வருகையாவது:—நாத சொரூபமாகிய சிவதத்துவ மதோமாயையிலே நின் றான்மதத்துவ மிருபத்துநாலுக்கு முபாதானமாகிய பிரகிருதி மாயையைத் தோற்றுவித்தும் அதற் கந்தமாகிய விந்துவடிவாகிய சத்தி தத்துவத்தைக் கொண்டு காலமுநியதியுங் கலையுந் தோற்றுவித்தும் சுத்தவித்தை வித்தையைத் தோற்றுவித்தும் ஈஶ்வரம் அராகத்தைத் தோற்றுவித்தும் ஆக விங்ஙனந் தோன்றப்பட்ட காலமு நியதியுங் கலையும் வித்தையு மராகமுங் கூடின சமூகத்திலுண்டான புருட தத்துவத்தைச் சாதாக்கிய தத்துவங் காரியப்படுத்தியும் வருமென்பதை நூல்களினாலு மநுபவத்தினாலுங் கண்டுகொள்க. இவையிற்றுக்கு. பி-ம். "காலநியதி கலைசத்திதானடத்து, மேலும் வித்தை வித்தையரா கம்மீசர் - சாலவே, மாயை சிவம்புரு

டன் சாதாக்கிய மேவி, நேயமுடனடத்து நின்று.'' எ-து. கண்டுகொள்க.

இனி யிந்த வித்தியாதத்துவ மேழாலும் ஆன்மதத்துவ மிருபத்துநாலுங் காரியப்படும்வகை யெங்ஙனே யென்னிற் கலையானது முற்கூறிய பிரகிருதி மாயையை யெழுப்பி யதிலே நின்றுங் குணங்களைத் தோற்றுவிக்க அந்தக் குணங்களிடமாக வந்தக் கரணங்களு மிந்திரியங்களும் விடயங்களும் பூதங்களு மொன்றிலே யொன்றாகத் தோன்றி விரிந்து வவதரத்து அந்தக கலையானது சித்தத்துக்கு முட்கருவியாய் நின்று போகங்களிலே நினைவை யெழுப்பியும் நியதி புத்திக்கு முட்கருவியாய் நின்று போகங்களை நிச்சயித்து அறுதிப்படுத்தியும் வித்தை யாங்காரத்துக்கு முட்கருவியாய் நின்று போகங்களிலே யறிவை யெழுப்பியும் அராக மனதுக்கு முட்கருவியாய் நின்று போகங்களிலே யாசையாகப் பற்றியும் புருடன் இந்திரியங்களை யெழுப்பிப் போகங்களைப் புசிப்பித்தும் பிரகிருதி போகங்களிலே யழுத்துவித்தும் காலமிவையெல்லாவற்றையுங் கூட்டியும் வருகையா லப்படிச் சொன்ன . தெனவறிக. என்றிங்ஙனம் பொருட்கூறிவந்த வகையிற் கலை சித்தத்துக் குட்கருவியென்றும் நியதி புத்திக் குட்கருவியென்றும் வித்தை யாங்காரத்துக் குட்கருவி யென்றும் அராக மனத்துக் குட்கருவியென்றும் சொன்னதற்கு வழியேதெனனில் ''அந்தக்கரணங்களின் குணம் நினைந்தாராய்ந்து துணிந்து செயல் மணந்து'' எ-ம். ''நியதி சிந்தித்தாராய்ந்து துணிந்து செயற்படு மந்தக்கரணவமைச்சரும்.'' எ-ம். நூல்களிற் சொல்லிவருகையாற் சித்த நினைவை யெழுப்புங்கருவியாயும் ஆங்கார மறிவைமேலிடுவிக்குங் கருவியாயும் புத்தி நிச்சயிக்குங்கருவியாயும் மனது பற்றுங்கருவியாயும் இவையிற்றுக் குட்கருவியென்ற கலையும் வித்தை

யும் நியதியும் அராகமும் நிற்கும் வகையாவது கலையாணவமலத்தைச் சிறிதேநீக்கி யறிவை யெழுப்புங் கருவியாகையாலும் வித்தை யறிவை மேலிடுவிக்குங் கருவியாகையாலும் நியதி நிச்சயிக்குங் கருவியாகையாலும் அராக மாசையையெழுப்புங் கருவியாகையாலு மப்படிக் கூறப்பட்டதெனவறிக. என்னுமிவையிற்றுக்கு. பி-ம். இந்நூலில் "அசுத்தமாயை, வைத்தகலைதான்மூல மலஞ்சிறிதேநீக்கி, மருவும் வகைதெரிவிக்கும்." எ - ம். சித்தியாரில் "சித்தமா மவ்வியத்தஞ்சிந்தனையதுவுஞ் செய்யும்." எ - ம். வருமது கலையுஞ் சித்தமும் நினைவை யெழுப்புங் கருவி யென்பதற்குக் கண்டுகொள்க. இனி வித்தையு மாங்காரமு மறிவை மேலிடுவிக்குங் கருவியென்பதற்கு. பி - ம். "வித்தை, யுயர்கலை யதனிற்றோன்றி யறிவினை யுதிக்கப்பண்ணும்." எ-ம். "ஆங்காரம் புந்தியின்கண் ணுதித் தகந்தைத்குவித்தா, யீங்கார்தா னென்றொடொப்பார்." எ - ம். வருமது கண்டுகொள்க. இனி நியதியும் புத்தியும் நிச்சயிக்குங் கருவியென்பதற்கு பி-ம். "நியதியின் றோன்றிக் கன்ம நிச்சயம் பண்ணிநிற்கும்." எ-ம். "புத்தியவ்வியத்திற்றோன்றிப் புண்ணியபாவஞ் சார்ந்து, வந்துறு நிச்சயமும் பண்ணி." எ-ம். வருமது கண்டுகொள்க. இனி மனமும் அராகமும் ஆசையைப் பற்றுவிக்குங் கருவி என்பதற்கு. பி-ம். "விச்சையி லிராகந் தோன்றி வினைவழி போகத்தின்கண், ணிச்சையைப் பண்ணிநிற்கும்." எ - ம். "மனமது தைசதத்தின் வந்தொரு பொருளைமுந்தி, நினைவதுஞ்செய்து." எ-ம். வருமது கண்டுகொள்க. ஆகையாலந்தக் கரணங்களுக்குஞ் சித்தத்துக்குக் கலையும் ஆங்காரத்துக்கு வித்தையும் புத்திக்கு நியதியும் மனத்துக்கு அராகமும் உட்கருவியாய் நிற்குமென்பதை யநுபவத்தாற் கண்டுகொள்க.

இனிச் சுத்ததத்துவங்களைந்தும் வித்தியாதத்துவங்களேழையுங் காரியப்படுத்துமென்றும் வித்தியாதத்துவமேழும் ஆன்மதத்துவ மிருபத்துநாலையுங் காரியப்படுத்துமென்றுஞ் சொன்னதற்கு வழியேதென்னில் சிவதத்துவமைந்தும் பிரேரகாண்டமென்றும் வித்தியாதத்துவமேழும் போகசயித்திரிய காண்டமென்றும் ஆன்மதத்துவ மிருபத்துநாலும் போக்கிய காண்டமென்றுஞ் சொல்லுகையாலப்படிச் சொல்லப்பட்டதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "ஐந்து சுத்தத்தின் கீழே யசுத்தாசுத்தம சுத்தந், தந்திடும் புமான்கிழென்மூன் றுயதத்துவஞ் சீவர்க்கு, வந்திடும் பிரேரகாண்ட மருவுபோக சயித்திரியத்தோ, டந்தமி லணுக்களுக்குப் போக்கிய காண்டமாமே." எ-து. கண்டுகொள்க.

இனி வித்தியாதத்துவ மேழும் ஆன்மதத்துவ மிருபத்துநாலையுங் காரியப்படுத்து மென்பதற்கு பி-ம். சித்தியாரில். "வாயாதி சோத்திராதி புறத்துவாழ் கருவியாகு, மோயாத மனாதிகாயத் துணருமுட் கருவியாகு, மாய்வார்கட் கராகமாதி யவற்றினுட் கருவியென்பர், மாயாடன் வயிற்றிவற்றுற் றுடக்குண்டு வாழுமான்மா." எ-து. கண்டுகொள்க.

இனி சிவசத்திகளாலே யிந்தத் தத்துவங்களொன்றையொன்று காரியப் படுத்துமென்றும் அப்படிக் காரியப்பட்டுத் தோன்றுமிடத்துச் சுத்தமாயையாலே யசுத்தமாயை காரியப்படுமிடத்து அதிலே பிரகிருதி மாயையானது ஆன்மதத்துவ மிருபத்துநாலுக்கு முபாதானமாகத் தோன்றுமென்று மற்றுள்ள தத்துவங்களு மவையிற்றிலே தோன்றுமென்றுங் கூறியதற்கு. பி-ம். சித்தியாரில். "விந்துவின் மாயையாகி மாயையி னவ்வியத்தம், வந்திடும் விந்துதன்பால் வைகரியாதிமாயை, முந்திடு மாராகமாதி முக்குண மாதிமூலந், தந்திடுஞ் சிவனவன்றன் சந்நிதி தன்னிலன்றே." எ-து. கண்டுகொள்க.

இங்ஙனம் பிரகிருதி மாயையை யவ்வியத்தமென்றும்
மூலமென்றும் பெயர்கூறிய தேதென்னில் பிரகிருதிமாயை
க்கு மூலப்பிரகிருதி யென்றும் அவ்வியத்தமென்றும் புமா
னென்றும் மானென்றும் மாயையென்றும் உள்ளமென்றும்
ஆன்மதத்துவ மென்றும் பெயராகையா லப்படிச் சொன்ன
தெனவறிக. என் றிங்ஙனங் கூறிவந்த வகைகளா லான்மா
வொரு விடயத்தைக் கொள்ளுமிடத்துப் பதினெட்டுக் கரு
வியுங் கூடியே புசிக்கவேணு மென்பதை யநுபவத்தாற் கண்
டுகொள்க.

இங்ஙனம் பொருட்கூறி வந்த விந்தச் செய்யுளின் முத
ற்பதமாகிய மருவிய கூடி யொருபுலனுகரும் என்ற பதத்தை
ஐக்கியவாதியை நோக்கி மறுத்துக் கூறிய தென்னவுமாம்.
அஃதெங்ஙனேயென்னில் உணர்த்து முறைமைக்குச் சொல்
லுமிடத் தாணவமலத்தான் மறைப்புண்டு கிடக்கு மான்மா
வைச் சிவன் மாயாகருவிகளைக் கூட்டி யுணர்த்துவ னென்ற
மையா லப்படி யாணவமலமென்ப தொன்றில்லை மாயாகரு
விகளே யான்மபோதத்தை மறைக்குமென்பது ஐக்கியவாதி
கருத்தாகையால் மாயாகருவிகள் கூடியே யான்மபோதம்
ஜீவிக்குமென்று இந்தப் பதம் நடக்கையா லவனை மறுத்துக்
கூறினதென்ற தெனவறிக.

இனி யந்த வொழுங்கொழிந் துயிருமொன்றைத் தெரி
வுறு தென்றபதமும் அவிகாரவாதியை நோக்கி மறுத்துக்கூ
றின தென்னவுமாம். அஃதெங்ஙனே யென்னில் அவ னான்மா
தானே யறியுமென்று சொல்லுகையால் இந்தப்பதங் கருவி
கள் கூடியே யான்மா வறியு மென்றமையா லவனை மறுத்த
தென்ற தெனவறிக.

இனி யவனொழிந் தத்திரள்களுஞ் செயலிலாவே யென்
றபதமும் சங்கிராந்தவாதியை நோக்கி மறுத்துக்கூறின தெ

ன்னவுமாம். அஃதெங்ஙனே யென்னில் அவனான்மா வறியாது கருவிக ளறியுமென்று சொல்லுகையா லிந்தப்பத மான்மாவைக் கூடாமற் கருவிக ளறியாதென்று மறுத்துக் கூறுகையால் அவனை மறுத்த தெனவறிக.

இந்த மூன்றுவகைக்கு முதாரணம் சங்கற்ப நிராகரணத்திலே கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது சிவ ஞான்மாக்களை யுணர்த்து முறைமையி லான்மாக்கள் பதினெட்டுக் கருவிகள் கூடியறியுமென்றுங் கருவிகளைக் கூடாம லான்மா வறியாதென்று மான்மாவைக் கூடாமற் கருவிகள் தாமாக வறியாதென்றுஞ் சொன்ன முறைமையை யறிவித்தது. (௪௫)

---

வேறு—இனிச்செய்யு ளீந்திரு லைந்தாஞ் சூத்திரமான உணர்த்துந் தன்மையை யுணர்த்துவான் றொடங்கினார்; அவற்றுளிஃ தாத்மா வொருபுலனை நுகர்தற் கித்துணைக் கருவி வேண்டுமென்ப துணர்த்திற்று.

மருவிய பொறியி லொன்றும் - தத்தமக்கான விடயங்களைப் பொருந்திய சோத்திராதிகளி லொன்றும்,—மாபூதமைந்தி லொன்றும்-பெரியபூதங்க ளைந்தி லொன்றும்,—கருவிக ளான்கும் - அந்தக் கரணங்க ளான்கும்,—நீங்காக் கலாதிக ளைந்தும் - விட்டு நீங்காத கலாதிக ளைந்தும்,—கூடியொருபுல னுகரும் - ஆகப் பதினொன்றுந் தம்மிற்கூட வாத்மா வொரு விடயத்தைப் புசிக்கும்,—இந்த வொழுங்கொழிந் தியிரு மொன்றைத் தெரிவுறாது-இந்த முறைமையொழிந் தாத்மாவு மொன்றை யறியமாட்டாது,—அவனொழிந் தத்திரள்களுஞ் செயலிலாவே - அவ் வாத்மாவை யொழிந் தந்தத் தத்துவங்களுஞ் சேட்டிக்குஞ் செயலுடையன வல்ல. எ - று.

இலவென்னும் பன்மை வினைக் குறிப்பு முற்றுச் சொல்லீறு திரிந்து நின்றது. கூடியென்னும் வினையெச்சங் காரணப் பொருட்டாய் நின்றது. கலாதிகளைந்து மென்பதனைக் கலாதிகளு மைந்துமெனப்பிரித்துக் கலாதிகளேழுஞ் சுத்த தத்துவமைந்துமென் றுரைப்பாருமுளர். அது பொருந்தா மையறிக. என்னை? முன்னும்பின்னு மும்மைவிரிய நடுவேதொகுதல் சிறப்பன்மையானு மாயை யுபாதானமாகையானும் புருடனை யைவகையா லுறுபயன்க ளுகரவருங்காலமென் றிவ்வாசிரிய ரோதினமையானு மிவ்விரண்டு மத்துணைச் சிறந்த கருவிகளல்லவென்பதை நோக்கி நீங்காமை யடைகொடுத்த திவ்வைந்திற்குமே சிறப்புடைமையானுஞ் சிவதத்துவ மைந்தும் வாக்குத்துவாரத்தா லறிவித்தலன்றி முப்பத்தொருதத்துவங்கள்போலுங் கருவியன்மையானு மங்ஙனம் பகுத்தலாசிரியர் கருத்தன்மையறிக.

---

அப்படி யான்மாவுங் கருவிகளுந் தம்மிற்கூடி யறியுமாற்றாற் கத்தா வுணர்த்துவனென்பா னேனென்று வினவினமாணவகனை நோக்கி யருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

தனக்கென வறிவிலாதான் றுணிவை யறிந்துசாரான்
றனக்கறி விலாதவாயி றனறி யாதுசாரா
தனக்கென வறிவிலாதான் றத்துவ வன்னரூபன்
றனக்கென வறிவாலவிச் சகலமு நுகருந்தானே. ௧௪

தத்துவஞ்சடமுயிர் தானுமறியா
தொத்துணர்வது பதி யுணர்வாலென்றது

(இ-ள்.) தன ஒருத்த ரறிவியாமற் றனக்கெனவோ க்கென வறிவி ரறிவில்லாத வான்மா அதீதப்பட்டுகிடக்கு

லாதான் னானி வையறிந்து சாரான் — மவதாரத்துத் தானாக விந்தத்தத்துவங் களைக்கூடி யறியமாட்டான்

தனக் கறிவி லாதவாயினான றியாதுசாரா — தனக்கென்ன வொருகாலத்திலு மறிவற்று ஜடமாயிருக்கப்பட்ட விந்திரியங்களதீதப்பட்டுக்கிடக்கிற வான்மாவையறிந்து கூடமாட்டாது. அப்படியானாலும்

தனக்கெனவறிவிலாதான் றத்துவ வன்ன ரூபன் — தனக்கென்ன வோரறிவில்லாத வான்மா பஞ்சவன்னங்களையடுத்த படிகம்போலத் தத்துவங்களினது சொரூபமே தனக்கு வடிவாய்நிற்பன். இப்படிக் கூடினதின்றன்மையாய் நிற்கிறவனானகையாற் றற்சுதந்தரமுள்ளவனல்ல. ஆனாலிவைதன்னிற் கூடியறிந்தபடி யெங்ஙனேயென்னில்

தனக் கென வறிவானாலிச் சகலமு நுகருந் தானே. — தனக்கொருவ ரறிவியாமற்றானே சர்வத்தையு மறியத்தக்க சிவனாலே யான்மா சர்வத்தையுமறிந்து ஜீவியாநிற்பன். எ-று. ஆன்மா சர்வத்தையு மறிவனென்றது அந்தக்கரணங்களோடுஞ் சோத்திராதிகளோடுங்கூடிச் சத்தாதிகளையறிவனென்றதெனவறிக.

ரு-ம். ஆன்மாவைத் தனக்கென வறிவிலாதானென்றது அதீதப்பட்டுக்கிடக்கு மவதாரத்துச் சரீரசம்பந்தனாயிருந்து மொன்றையு மறியாமற் கிடக்கையினாலெனவறிக. இதற்கு. பி-ம். சிவஞானபோதத்தில் " அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிக ளாங்கிடப்பச், செவ்விதினவ்வுடலிற் சென்றடங்கி " எ-து. கண்டுகொள்க.

இனி கருவிகளே ஜடமென்றது மப்படியொன்றையு மறியாமற் கிடக்கையினு லெனவறிக.

இதனுற்சொல்லியது ஆன்மாவுக்குத் தனக்கென வோரறிவில்லாதபடியாலே தானுகத் தத்துவங்களைக் கூடி யறியமாட்டாதென்றுங் கருவிகள் ஜடமாகையாலே யவைதானுக வான்மாவைக்கூடி யறியமாட்டாதென்று மிவையிரண்டையுங்கூட்டிக் காரியப்படுத்துவது சிவனேயென்றும் வருமுறைமையை யறிவித்தது. (கசு)

---o---

வேறு—இது அப்படி யாத்மாவுங் கருவியுங் கூடி யறியுமாயிற் கருத்தா வேண்டுமோவென்று வினுவியதற் குத்தரமுணர்த்திற்று.

தனக்கென வறிவிலாதான் ருனிவை யறிந்துசாரான்-தனக்கென வோரறிவில்லாத வாத்மா ஒருவ ரறிவியாமற்றுனே யிந்தத்தத்துவங்களை யறிந்து கூடமாட்டான்,—தனக்கெனவறிவில்லாதவாயி னுறியாசார - தனக்கெனவறிவில்லாத சடமான விந்திரியந் தானுக வாத்மாவைக் கூடவறியாது,—தனக்கென வறிவிலாதான் றத்துவவன்னிருபன்-இத்தன்மையனுன வவன் றத்துவங்களுடைய வன்னமே தனக்குச் சொரூபமாய் நிற்பன்.ஆனு லிவ னிவைகளா லெப்படிப் புசிப்பனென்னில்?—தனக்கென வறிவானு லிச்சகலமுநுகருந்தானே - சுதந்தர வறிவையுடைய சிவனுலே யிவையெல்லாவற்றையு மறிந்து கூடி புசியாநிற்பன். எ-று.

பின்வந்த தனக்கென வறிவிலாதா னென்பது அவனென்னுஞ் சுட்டுப் பெயர்த்தன்மைத்தாய் நின்றது. தனக்கென வறியானுலென் றேதுவாருமுளர்.

---

அப்படி யான்மாவையுங் கருவிகளையுஞ் சிவனே கூட்டி

யறிவிப்பனென்கிற தென்னை சிவன் விகாரமறநிற்க வவனருளைக்கொண் டான்மாத்தானே சுட்டியறிந்து வருமென்கிற அவிகாரவாதியையும் அப்படியல்லவென்று ஆன்மாவுக்காகச் சிவன்றானே பிரபஞ்சத்தைச் சுட்டியறிந்து நிற்பனென்ற பரிணாமவாதியையு மறுத்தருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

கண்டறி புலன்கள்காணுங் கருத்தினா லொருத்த
ன்ஞானங், கொண்டுள மறியுமென்னிற் கொள்பவன்
முதலியாகு, மண்டிய வுணர்வுயிர்க்கா மன்னினின் றறி
யுமென்னி, லுண்டிட வேண்டுவானுக் கொருவன்வே
றுண்டலாமே. (௧௫)

இப்பரிசன்றி யிகலுறுசமயிகள்
செப்பியமொழியைத் தப்பெனமறுத்தது.

| | |
|---|---|
| (இ-ள்.) கண்டறி புலன்கள் காணுங் கருத்தினால் | கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியப்பட்ட விந்திரியங்களைக் கொண்டு ஆன்மா தனக்கேற்ற விடயங்களைக் கொள்ளுமுறைமைபோல |
| ஒருத்தன் ஞானங்கொண்டுள மறியுமென்னில் | எங்குந்தா னொருவனுமாய்நின்று சர்வான்மாக்களுக்கு முயிர்க்குயிராயுநின்று சேட்டிப்பிக்கிற சிவனுடைய ஞானத்தைக் கொண்டு ஆன்மாவறியுமென்று நீசொல்லில் |
| கொள்பவன் முதலியாகும் | என்றிங்ஙன மறிந்துகொள்ளுகிற வான்மாவே கத்தாவாவன். அப்படியல்ல வான்மாவுக்காகச் சிவனறிவனென்ற பரிணாமவாதியை மறுத் தருளிச்செய்கின்றது |

மண்டியவுணர்வுயிர்க்காமன்னிநின றறியுமென்னில்

சிவனுடைய மிகுத்தஞானமான தான்மாவுக்காக நிலைபெற்றறியுமென்று நீசொல்லில்

உண்டிடவேண்டுவானுக்கொருவனவே றுண்டலாமே.

பசித்திருப்பானொருவனுக்காக வயலே யொருவனுண்டானென்னுந் தனமைக்கொக்கும். எ - று. ஆதலாற் சிவனுடைய ஞானத்தைக்கொண் டான்மா முதன்மையாக நின்றறிவதுமில்லை யான்மாவுக்காகச் சிவனறிந்து நிற்பதுமில்லை யென்பதுகருத்து. என்னவே சிற்றறிவாயுள்ள வான்மாவைப் பேரறிவாயுள்ள சிவனறிவிக்க வந்தவறிவே யாதாரமாக வான்மாவறிவனென்ற தெனக்கொள்க. இதற்கு பி-ம். திருவாசகத்தில் "அவனருளாலே யவன்றாள்வணங்கி." எ - ம். தேவாரத்தில் "காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே" எ - ம். வருமேதுக்களைக்கண்டுகொள்க.

உ - ம். ஆன்மா விந்திரியங்களைக்கொண்டு விடயங்களை யறிந்தாற்போலச் சிவன்விகாரமறநிற்க வவனருளைக்கொண் டான்மாமுதன்மையாக நின்றறிவனென்று அவிகாரவாதிசொன்னதற்கு. பி - ம். சங்கற்பநிராகரணத்தில் "நீர்நிழலனைய சீர்பெருகடவுள் - சலமிலனாகிச் சார்ந்தவர்க்கென்று - நலமிகநல்கு நாதனையணைந்து - பூழிவெம்மை பொருந்தாதுயர்ந்த - நிழல்வாழு நினைவினர்போலத் - திருவடிநீழல் சேர்ந்நு - கருவுறுதுயரங் களைந்திருந்திடுமே" எ - து. கண்டுகொள்க.

இது வத்தமாகாதென் றவனைமறுத்ததற்கு. பி-ம். சங்கற்ப நிராகரணத்தில் "பாதவமென்னுஞ் சேதனமின்மையி- னிளைந்தோர்வம்மி னென்பதுந்தன்டம் - விளைந்தோர் தம்

யின் வெறுப்புமொன்றிலதே - பொடித்திடுகொப்புள் வெடித்திடுபாதம் - வெய்யபூமியி னுள்ளூறவழுங்கி - யாற்றுதலின்றி யாறியங்கினர்முன் - றேற்றிடுமென்று சொல்லவுமிலதா - லிவ்வகைக்கடவுட் கியம்புதறவறே.” எ - து. கண்டுகொள்க.

ஆன்மாவுக்குச் சிற்றறிவுதானுமில்லை யவனுக்காகச் சிவனறிவனென்று பரிணாமவாதி சொன்னதற்கு. பி - ம். சங்கற்பநிராகரணத்தில் “அறிவோன்றானு மறிவிப்போனு - மறிவாயறிகின் றோனுமறிவுறு - மெய்ப்பொருடானும் வியந்திதுவெனப்படு - மப்பொருளியாவு மவனேயென்னும்” எ - து. கண்டுகொள்க.

இது வத்தமல்லவென் றவனைமறுத்ததற்கு பி - ம். சங்கற்பநிராகரணத்தில் “அறிவொன்றில்லோர்க் கிறையருளுதவல்- பிறிவறிவரிய செறிபிருளிடத்தோ - ரந்தகர்காண வங்கோரெம்மை - நீயிருங்காண வேணுமென்றுங் - கெடுத்தோர்தீபங் கொடுத்ததையொக்கு - மிச்செயற்கிறைவன் கொச்சையனன்றே” எ - து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது சிவன் விகாரமறநிற்கச் சிவனுடைய ஞானத்தைக்கொண் டான்மாவறிவனென்ற வவிகாரவாதியையு மப்படியல்ல வான்மாவுக்காகச் சிவனறிகிறதொழிய வான்மாவுக்கென்ன வொருசிற்றறிவுதானு மில்லையென்கிற பரிணாம வாதியையு மறுத்தமுறைமையை யறிவித்தது.

---

வேறு—இது ஆத்மாவானது சிவனறிவுகொண் டறியுமென்றுஞ் சிவன்றானே யவனுக்காக வறிவனென்றுஞ் சொல்லுஞ் சமயிகளை மறுத் துணர்த்திற்று.

கண்டறிபுலன்கள் காணுங்கருத்தினால் - அனுபவித்தறிகின்றபொறிகண் மனத்தினாலே விடயங்களை யனுபவியாநிற்

குமதுபோல,—ஒருத்தன் ஞானங் கொண்டுள மறியுமென்னில் - ஆத்மா வானவ னொப்பில்லாத சிவனுடைய ஞானத்தைக் கருவியாகக்கொண்டு சகலத்தையு மறிவனென்று விகாரவாதி சொல்லில்,—கொள்பவன் முதலியாகும் - கொண்டறிகின்ற வாத்மாவே கருத்தாவாவன்,— மண்டிய வுணர்வுயிர்க்காய் மன்னிநின் றறியுமென்னில் - சிவனுடைய மிகுத்த ஞானமானது ஆத்மாவுக்காக நிலைபெற்றுநின் றறியுமென்று சங்கிராந்தவாதி சொல்லில்,—உண்டிட வேண்டுவோனுக் கொருவன் வேறுண்டலாமே - பசியாலுண்ணவேண்டிய ஒருவனுக்காக வேறொருவ னுண்டலையொக்கும். எ - று.

உளம் ஆத்மா. கண்டு அநுபவித்துத் தன் மாத்திரைகளோ டொற்றுமையுண்மையிற் பொறியும் புலனெனவாகு பெயராய்நின்றது. திருப்புல னைந்திரமிலாஞ் சினையெழுதுவினைப்-புகழ்ச்சிப்புலவர் பொறியெனப்புகல்வ ரென்பதனாலுமறிக. கண்டறி புலன்கள்காணுங் கருத்தினலென்பது எடுத்துக்காட்டுவமை. இனி இந்தப்பதத்திற்கு ஆதமா விந்திரியங்களாலே புலன்களைக் காணுகிற்கும். அதுபோலென்றும், ஆத்மாவினுடைய ஞானத்தைக்கொண்டு பொறிகள் புலன்களைக்கண்டறியும் அதுபோலென்றும், முன பிந்திரியங்களாலே கண்டனுபவித்த விடயங்களைப் பின்பு மந்தவிந்திரியங்களாலே காணவேண்டின வுண்மைபோலவென்று முறைப்பாருமுளர். உயிர்க்காகவெனத்திரிக்க.

---

இப்படியே சிவனறிவிக்கச்செய்தே யந்தச் சிவன்செய்விக்கிறதை யறியாமலான்மாக்கள் நான்செய்தேன் பிறர்செய்தாரென்று சூட்டிக்கொண் டந்தச்சிவனையிழந் து நிற்கிறமுறைமை யெப்படியென்று வினவின மாணவகனைநோக்கித் திருஷ்டாந்தமுகமாக வருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

இருணனி யிரவிதான்வந் திரித்தலு மிரவிலெண்ணும்
பொருணிலை கண்டுமாந்தர் பொருந்திடு மாறுபோல
மருணிலை யெங்குநீங்க மகிழ்ந்துயிர் தன்னுண்மன்னு
மருளையுமொழிய ஞாலத்தறிந்தவா றறியுமன்றே. (கக)

பருதியுதவியைப் பாரறியாபோ
லருளுதவியையுயி ரறியாதென்றது.

(இ - ள்.) இருணனி யிரவிதான் வந் திரித்தலும் — இருளினது மிகுதியை யாதித்தன்வந்து நீக்கினவிடத்து

இரவி லெண்ணும் பொருணிலைகண்டு மாந்தர் பொருந்திடுமாறு போல — ஆன்மாக்க ளிராக்காலத்தில் விசாரித்த காரியங்களெல்லா மவன் சந்நிதியிலே கண்டு தந்தாந் தொழில்களைச் செய்யுமிடத் திந்தவாதித்தன் காட்டவல்லோ நாங் கண்டோமென நினையாம லந்த வாதித்தனை யிழந்து நின்று தங்கள் சாமர்த்தியமாகக் கண்டு செய்து வருமாறு போல

மருணிலை யெங்குநீங்க மகிழ்ந்துயிர்த் தன்னுண்மன்னு மருளையுமொழிய — ஆணவமலத்தின் மறைப் பெவ் விடத்தினும் விட்டு நீங்க விருப்பத்துடனே யான்மாவி னிடத்திலே நிலைபெற்றுப் பிரகாசிக்கிற வருளாலே யான்மாக்க ளறிந்து ஜீவித்து நிற்க விந்த வருளாலொழிந் தறிந்து புசிக்கக் கூடாதென் றறியாமற் றுந்தாஞ் சாமர்த்தியனாலே யல்லோ வறிந்து புசிக்கிறோமென்று விசாரித்திருக்கின்றது எப்படியென்னில்

ஞாலத் தறிந்தவா றறியுமன்றே. — முன்சொன்னபடியே பிரபஞ்சத்தி லான்மாக்க ளாதித்தன் சந்நிதியிலேகண்டுந் தந்தாந் தொழில்கள் செய்யச்சேயு மந்தவாதித்தனையி

மூந்துநின்று தாங்கள்செய்தோமென்னு முறை
மைபோலும். எ-று.

ரு-ம். மருணிலை யெங்குநீங்க வென்றது ஆன்மாக்கள் புசி க்குமிடமெங்கு மவதரந்தோறு மல நீங்குமென்ற தெனவறிக. இதற்கு பி - ம். "நிலைக்குணங் கணந்தொறு மலத்தை நீடுதல்." எ-து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது சர்வான்மாக்களு மாதித்தனாலே யிரு ளானதுநீங்கத் தந்தாந்தொழில்கள் செய்யச்சேயு மவனை யிழந்து தாங்கள் செய்தோமென்னுந் தன்மைபோலச் சிவனாலேயறிந்து சர்வமும் ஜீவிக்கச்செய்தேயு மந்தச்சிவனை யிழந்து தாங்கள்செ ய்தோமென்று நிற்கிறது மத்தன்மைக்கொககுமென்னு முறைமை யை யறிவித்தது. (௧௬)

---

வேறு—இது அப்படிக்கூடிநின் றுணர்த்துவிக்குஞ் சிவனை யிழந் தாத்மாக்கள் யான்செய்தேன் பிறர்செய்தாரென்று நிற்கு முறைமையை யொருதிஷ்டாந்த பூர்வமாக வுணர்த்திற்று.

இருணனி யிரவிதான்வந் திரித்தலு மிரவிலெண்ணும் பொ ருணிலை கண்டுமாந்தர் பொருந்திடு மாறுபோல—ஆதித்தன்வந் த ருளின மிகுதியைத் தரப்ப வவ்விராக்காலத்திலே விசாரித்த கா ரியங்களை மாணிடர்கண் டவ்வவர் தொழில்களிலே யவனுதவி யறியாமற் பொருந்து முறைமைபோல,—மருணிலை யெங்குநீங்க மகிழ்ந்துயிர் - ஆத்மாவானது மனத்திணிலைமை புலன்களை யனு பவிக்குமிட மெங்குங் கலாதிகளாலே நீங்குதலின் மகிழ்ச்சிபெ ற்று,—தன்னுண்மைமன்னு மருளையுமொழிய ஞாலத்தறிந்தவா றறியுமனறே - அம்மலத்தினீக்கம் பண்ணுவித்துத் தன்னுளே பொருந்துந் திருவருளையும் விட்டுப் பூமிக்கண்ணே தானாக வறிந் தாற்போல வறியும். எ-று.

அருளையு மென்புழியும்மை சிறப்பும்மை. இதற்குப் பிரவாஹ முரைப்பார்.

---

இந்தவத்தத்தை யின்னமு மொருவநுபோக திருஷ்டாந்தமாக வருளிச்செய்கின்றது.

அறிந்திடு மனுதிவாயி லானவை யவன்றனாலே, யறிந்திடு மென்றுமொன்று மறிந்திடா வவைபோலி யாவு, மறிந்திடு மறியுந்தன்மை யறிந்திடா கன்மத் தொன்மை, யறிந்தவை நுகருமாறு மருளுவ னமலனன்றே. (கஎ)

பொறியுங்கரணமும் போலுயிரருளா
லறியுந்தன்மை யறியாதென்றது.

| | |
|---|---|
| (இ-ள்.) அறிந்திடுமனுதி வாயிலானவை | யாதாமொன்றை யறியத்தக்க வந்தக்கரணங்களு மிந்திரியங்களு மென்று சொல்லப்பட்ட கருவிகரணங்கள் |
| அவன்றனாலே யறிந்திடும். | ஆன்மாவினாலே பிரபஞ்சவிடயத்தை யறியாநிற்கும். அப்படியறியச்செய்தேயும் |
| என்று மொன்று மறிந்திடா | எக்காலமு மான்மாவினாலேயல்லோ நாமறிகிறோமென் றந்தக்கரணங்களு மிந்திரியங்களுஞ் சிறிதுமறியமாட்டாது |
| அவைபோல் | தனக்குக்காட்டாக வுள்ளவான்மாவை யந்தக்கருவிகரணங்க ளறியாதிருந்தாற்போல |
| யாவு மறிந்திடு மறியுந் தன்மை யறிந்திடா | சர்வான்மாக்களுந் தங்களுக் கறியவேண்டிய தெல்லாஞ் சிவனுடைய ஞானத்தாலே யறிந்து புசியா நிற்கச்செய்தேயு மந்த வருளாலே யல்லோ வறிந்து புசிக்கிறோமென் றறியமாட்டார்கள். ஆகையா லதுவுமன்றி |

கன்மத்தொன் பழையதாக வூட்டுகிற கன்ம பலன்களையு
மை யறிந் தவை மான்மாக்கள் தானே யறிந்து புசிக்கமாட்டா
நுகரு மாறு மரு ர்கள். அதுகொண்டே யவையிற்றைப் புசிக்
ளுவ னமலன்று கிற முறைமைகளையுங் கூட்டுவ னிமலனாகிய
னே. சிவன்றனே. எ - று.

நு - ம். கன்மத்தொன்மை யறிந்தவை நுகருமாறு மருளுவ
னமலன்றனே. எ-து. சைவ ரத்தத்தை மறுத்ததென்னவுமாம்.
அஃதெங்ஙனேயென்னில் அவர்க ளுழாயுள்ள கன்மங்களைப் புசி
க்குமிடத்து ஆன்மாக்கள் தானே யறிந்து புசிக்குஞ் சிவன்கூட்ட
வேண்டுவதில்லை யென்கையாலெனவறிக. அஃதாவது சிவனுன்
மாவையுங் கருவிகளையுங் கூட்டினுற் பின்னைத் தானே ஜீவிக்குமெ
ன்பது கருத்து. இதற்கு. பி-ம். சங்கற்ப நிராகரணத்தில் "அண்
ணல் - கலைமுதலாக நிலவிய கருவிகள் - விளக்கெனவுதவுந் துள
க்கறப்பொருந்தி - யிருவினை நுகர்வில் வருவினைசெய்து - மாறிப்
பிறந்து வருநெடுங்காலத்து." எ-து. கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது அந்தக் கரணங்களு மிந்திரியங்களு
மான்மாவினுலே யறிந்து புசிக்கச்செய்தேயு மந்த வான்மாவினு
லே யல்லோ வறிகிறேமென் றறியாதாற்போல வான்மாக்களுஞ்
சிவனுலே யறிந்து ஜீவிக்கச்செய்தேயு மந்தச் சிவனை யிழந்துநிற்
கிறது மப்படியென்னு முறைமையை யறிவித்து. (கஎ)

---

வேறு—இதுவுமதற்கொரு திருஷ்டாந்த முணர்த்திற்று.

அறிந்திடு மறுதிவாயி லானவை யவன்றனுலே யறிந்திடு மெ
ன்றும் - அறியத்தக்க மறுதிகளு மிந்திரியங்களு மானவைக ளவ்
வாத்மாவி லெப்பொழுது மறியா நிற்கும்.—ஒன்று மறிந்திடா-
இப்படி யவனுலே யறிகையினு மிவனுலன்றோ வறிகின்றோமென்
னுந்தன்மை யொன்றையு மறியமாட்டா.—அவைபோ லியாவும

றிந்திடும் - அவற்றை யொப்ப வாத்மாவுஞ் சிவஞானத்தாலே சகலமு மறிந்து புசியாநிற்கும்,—அறியுந்தன்மை யறிந்திடா - அவனலன்றே வறிகின்றேமென்னு முறை யொன்றையு மறியமாட்டா,—கலமத்தொன்மை யறிந்தவை நுகருமாறு மருளுவ னமலன்றனே-இவனுக்க கன்மங்களை யறிந்து புசிக்கமாட்டா னாகையாலே பழைதாய் தேடிவைத்த கன்மபலத்தா லெதையு மறிந்தவற்றை யிவன் புசிக்கு முறைமையினையுங் கூட்டுவ னின்மலனாகிய சிவன்றனே. எ - று.

☞ ஐந்தாஞ் சூத்திரமாகிய வுணர்த்துமுறைமை முற்றிற்று.

---

இங்ஙன முணர்த்து முறைமையிற் பிரபஞ்ச காரியப்பட்டு வருமான்மாக்களுக்கு மலபாகம்வந்து முத்தியுமுண்டா மாகையா லிவ்வதிகாரத்துக்கு மேலாக வாறுஞ்சூத்திரமு மேலதற்கோர் புறநடையாகிய வேழாஞ்சூத்திரமுமாகிய ஞானவாய்மையென்னு மதிகாரம் வைக்கப்பட்டது.

இவ்வதிகாரத்துக்குச் சூத்திரமிரண்டு நின்றமுறைமை யெங்ஙனேயென்னில் "காட்டிடுங்கரணம்" என்றவிருத்தமொன்றும் ஆறுஞ்சூத்திரமாகவும் "பன்னிறங்கவரும்." மாயைமாமாயை." என்ற விருத்தமிரண்டும் ஏழாஞ்சூத்திரமாகவும் நின்றதெனவறிக.

இதற்கு வழியேதென்னில் சிவஞானபோதத்தில் ஆறுஞ்சூத்திரமாகிய "உணருருவசத்தெனி னுணராதின்மையி, னிருதிறனல்லது சிவசத்தாமென, விரண்டுவகையி னிசைக்குமன்னுலகே.", எ-கு. சத்துமசத்தும் வரைசெய்து நிற்றலானு மீண்டறிவினு லறியப்பட்ட சுட்டசத்தாகையினாலும் "அறிதரும் பொருளோவிசனறிவுறுதவனே." எ - ம். "உணராத பொருள்சத்தென்னி லொ

ருபயனில்லை." எ-ம். சித்தியாரி லாறுஞ் சூத்திரத்தில் வருகையா யாலும் இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்குமனாதித கோசரமா யுள்ளது சத்தாயுள்ள சிவமென்கையாலும் இந்நூலினும் "காட்டி டுங்கரணமொன்று மில்லையேற்காணாதா, நாட்டியவிவற்றால் ஞான நணுகவுமொண்ணா". எ-ம். சத்துமசத்தும் வரைசெய்து நிற்றலால் இதுவு மாறுஞ்சூத்திரமாக நின்றதெனவறிக.

மற்றுள்ள விருத்தமிரண்டு மேலதற்கோர் புறனடையாகிய ஏழாஞ்சூத்திரமாக நின்றமுறைமை யெங்ஙனேயென்னில் சிவ ஞானபோதத்தில் ஏழாஞ்சூத்திரமாகிய "யாவையுஞ்சூநியஞ் சத் தெதிராதலிற், சத்தேயறியா தசத்திலதறியா, திருதிறனறிவுள திரண்டலாவான்மா." எ-கு. மெய்யினிடத்துப் பொய்ப்பிரகாச மாய்நிற்றலான். எ-ம். உதாரணத்திலும் "அந்நியமிலாமையா் கொன்றுணர்வின்று, மந்நியமிலானசத்தைக் காண்குவனே-லந் நியமாய்க், காணவன் முன் கதிர்முன்னிருள்போல, மாணுவச த்தின்மை மற்று." எ-ம். வருங்கருத்தால் இந்நூலினும் "பன்னி றங்கவரும்." என்றவிருத்தத்தில் "வளரொளி போலவையந் தன் னகம் பயிலுநற்சிற், சடங்கடன் றன்மைதாவா." என்கையாலும். இனி அசத்தினுக்குணர்வின்றென்னுங் கருத்தா லிவ் விரண்டையு மறிவதா யுபதேசியாநின்றவறி விரண்டின்பாலு முளதா யுள்ள வதுவே யவ்வான்மாவா மென்றதால் இந்நூலினும் "மாயைமா மாயை." என்னும் விருத்தம். "இருதிறனறிவுள திரண்டலா வா ன்மா." என்னுங் கருத்தைப்பற்றி "மருளெனி லிருளாய்நிற்கு மருளெனி லொளியாய்நிற்கும்." எ-ம். ஆன்மாவுக்குக் கூடின தின் றன்மைக் கருளிச்செய்கையால் இவையு மேழாஞ் சூத்திரமாய் நின்றதெனவறிக.

மேல் "காட்டிடுங் கரணம்." என்னும் விருத்தத்துக்குத் தொகுதியாவது இங்ஙன மிவ் வதிகாரத்தா லருளிச்செய்யப்ப

ட்ட ஞானத்தினுண்மையை யடியேன் போதங்கொண் டறியப்ப டும் பொருளா யிருக்குமோ வறியப்படாத பொருளாயிருக்குமோ வென்று வினவினமாணவகனை நோக்கி யருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

காட்டிடுங் கரணமொன்று மில்லையேற் காணுநா
நாட்டிய விவற்றுஞான நணுகவு மொண்ணுமுன்னை
மீட்டிய தவத்தினாலே யிறையரு ளுருவாய்வந்து
கூட்டிடுமிவற்றைநீக்கிக்குரைகழல்குறுகுமாறே.(கஅ)

முற்பவத்துயிர்கள் முயன்றநற்றவத்தா
லற்புதன்றிருவுரு வாவனென்றது.

(இ-ள்.) காட்டிடுங் கரணமொன்று மில்லையேற் காணுநாம் — உனக்குக் காட்டாகவுள்ள கருவிகளொன்று மில்லாத பொழுது பழையவறிவுதானு மில்லையாய்ச் சுத்தகேவலமே முத்தியென்கிற பாடாணவாதியத்தமுமாய்முடியும்.

நாட்டியவிவற்றுஞான நணுகவு மொண்ணு — இங்ஙனஞ் சொல்லப்பட்ட தத்துவங்களோடுங் கூடியறியுமென்னில் ஒருகாலத்து மருளிற்சென்று கிட்டவுமொண்ணாது. இதுசங்கிராந்தவாதியத்தமுமாய் முடியும். இந்தவிரண்டுவகையுமன்றி யந்தஞானத்தை யறிந்து பெறுமுறைமை யெங்ஙனே யென்னில்;

முன்னமீட்டிய தவத்தினாலே யிறையருளுருவாய் வந்து கூட்டிடும் — ஆன்மாக்கள் முன்ஜநநங்களிற் செய்த சிவபுண்ணியத்தின் மிகுதியாலே தம்பிரானு ராசாரிய மூர்த்தமாகத் திருமேனிகொண் டெழுந்தருளிவந்து கூட்டாநிற்கும்

இவற்றை நீக்கிக் குரைகழல் — இங்ஙன முன்சொன்ன கேவல சகல பிரண்டையு நீக்கி யாரவாரத்தை யுடைத்தாகிய

குறுகுமாறே. வீரக்கழல் பொருந்தின ஸ்ரீபாதத்தைச் சென்று பொருந்து முறைமை. எ - று.

உ - ம். கருவிகளெல்லாங் கழன்ற கேவலம் பாடாணவாதி யத்தமாமென்று மறுத்ததற்கு. பி-ம். சங்கற்ப நிராகரணத்தில். "காட்சியென்னக் காணுந்துயர - மாட்சிமைமுத்தி யெனவகுத்துரைக்கிற் - கரணபாவ மரணங்கருமர - மேய்ந்தவர்முத்தி சேர்ந்தவரன்றே - யனையகதிக்கோர் முனைவரும் வேண்டா - தனிதருதுயர மெனுமிதுதிடமே - பாடாணத்திற் கூடாமுத்தி." எ - ம். சித்தியாரில். "கரணங்கள் கெடவிருக்கை முத்தியா மென்னிற் கதியாகுஞ் சினைமுட்டை கருமரத்தி னுயிர்கள், மரணங்கொண்டிடவுறங்க மயங்கி மூர்ச்சிக்க வாயுத்தம் பனைபண்ண வல்விடத்தை யடையச், சரணங்கள புகுநிழற்போற் றனையடையுஞ் சமாதி தவிராது மலமதுவும் பசுஞானமாகு, மரணங்களிரித்தவன்றனடியை யறிவிறந்தங் கறிந்திடீர் செறிந்ததுக ளகற்றிடீரே." எ-து. கண்டுகொள்க.

இனி கருவிகளோடுங் கூடிநின்றறிகிற சகலஞ் சங்கிராந்தவாதி யத்தமாமென்று மறுத்ததற்கு. பி-ம். சங்கற்ப நிராகரணத்தில். "நிறைந்துநீயாய் நின்றனையேனு-மறைந்தைம்புலனாய் வாராயென்றுங் - கரணமெல்லாங் கழன்றனையென்று - மரணமையந் தினப்புறத்தென்று - முன்னருட்டலைவர் பன்னினரெனவு-மினையவைமொழிய வறிகுவதெவ்வா - றென்றனிற்கலிக் கொன்றியவின்பங் - கூறுதறகுமருட் பேறினையன்றே." எ-து. கண்டுகொள்க.

அன்றியு மிந்தவிருத்த மாமுஞ் சூத்திரமென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "அறிதரும்பொருளோவீச னறிவுறுதவனோவென்னி, லறிபொருளசித்தசத்தா மறியாதுநின்றுமெங்குஞ், செறிசிவமிரண்டு மின்றிச் சித்தொடு சத்தாய்நிற்கும்." எ-து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது கருவிகளெல்லா நீங்கின கேவலத்தினாலுங் கருவிகளைக் கொண்டறிகிற சகலத்தினாலுஞ் சிவசொரூபத்தை யறியப்படாதென்னு முறைமையும் ஆன்மாக்கள் முற்செய்த தவத்தினாலே கத்தா வாசாரியமூர்த்தமாக வெழுந்தருளி யந்தவுண்மைஞானத்தைக் கடாக்ஷித் தருளுவனென்னு முறைமையு மறிவித்தது. (௧௮)

---

வேறு—இது அந்தச்சிவஞானமே குருமூர்த்தமாய்வந் திரட்சிக்குமென் முருஞ் சூத்திரமான ஞானவாய்மை யுணர்த்திற்று.

காட்டிடுங் கரணமொன்று மில்லையேற் காணொணாதாம்-அறிவிக்கத்தக்க கருவிகளொன்று மில்லையாயி னாத்மாவா லொன்றையு மறியவொண்ணாதாம்,—நாட்டிய விவற்றான்ஞான நணுகவுமொண்ணா - இக்கருவிக ளெல்லாவற்றையு மறியுமோவெனிற் சொன்ன வத் தத்துவங்களாலே ஞானத்தைக்கூடவுமொண்ணாது. ஆனாற்கூடும்படி யெங்ஙனமெனின்,—முன்ன மீட்டிய தவத்தினாலே யிறையரு ளுருவாய்வந்து-முற் சன்மங்களிலே செய்த சரியைகிரியை யோகங்களின் முற்றுதலாலே யிவன் பக்குவங்கண்டு பரமசிவனருளே திருமேனியாக வெழுந்தருளிவந்து,—கூட்டிடு மிவற்றைநீக்கிக் குரைகழல் குறுகுமாறே - இந்தத்தத்துவங்களைப் பொருளல்லவென்று நீக்கித் தன்னுடைய சிர்பாதத்தைப் பொருந்தும்படி யடைவிப்பன். எ-று.

ஒன்றுவெனக் கடைகுறைந்தது.

☞ இந்தவிருத்தத்தா லாறுஞ்சூத்திர முற்றிற்று.

---

இவ் வதிகாரத்துக்குமேல் வரும் விருத்தமிரண்டும் ஏழாஞ் சூத்திரத்தின் கருத்தாகையால் மேலதற்கோர் புறனடையாகிய ஏழாஞ்சூத்திரத்தில் வைத்துக்கொண் டருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

மேல்வரும் விருத்தத்துக்குத் தொடர்பாவது அப்படியாசாரியமூர்த்தமாக வெழுந்தருளிவந்து கடாக்ஷித்தருளுகிற ஞானமேதென்றுவினவ மேலொரு திருஷ்டாந்தமுகமாக வருளிச் செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

பன்னிறங் கவருந்தொன்மைப் படிகநீ டொளியும் பன்மை, மன்னிலங் கியல்புந்தந்த வளரொளி போல வையந், தன்னகம் பயிலுநற்சிற் சடங்கடன் றன்மை தாவா, நன்னலம் பெறநிறைந்த ஞானமே ஞானமென்பார். (கக)

பன்னிறம்பளிங்கிற் பற்றிடப்பற்றுப்
பொன்னொளிபோலு மன்னருளென்றது.

| | |
|---|---|
| (இ-ள்.) பன்னிறங் கவருந் தொன்மைப் படிக நீடொளியும் | பலநிறங்களையுந் தன்னிடத்திலே கவர்ந்து கொள்ளுகிற வநாதியேயுடைத்தாகிய படிகத்தினது நிலைபெற்ற பிரகாசத்தினையும் |
| பன்மை மன்னிலங் கியல்பும் | அந்தப்படிகத்திலே பொருந்தப்பட்ட பல வன்னங்களு மதிலே பிரதிபிம்பஞ்செய்து நிற்கிறமுறைமையும் |
| தந்த வளரொளிபோல | அவையிரண்டையுங் கூட்டிக் காரியப்படுத்துகிற வாதித்தப் பிரகாசம்போல |
| வையந் தன்னகம் பயிலு நற்சித்து | பிரபஞ்சமாகிய பாசங்களையு மான்மாக்களையுந் தன்னுடைய சேட்டையாலே கூட்டிக் காரியப்படுத்தி நிற்குந்திருவருள் ஞானமானது |

அப்படிக்கூட்டிக் காரியப்படுத்தி நிற்கச்செய்தே முற்கூறிய வுபமானத்திற் படிகத்தையும் வன்னங்களையுங் கூட்டிக் காரியப்படுத்தின வாதித்தப் பிரகாசமும் அவையிற்றிற்றோய்வற்று நின்முற்போல

சடங்கடன்றன்மைதாவா நன்னலம்பெற நிறைந்தஞானமே ஞானமென்பார்.

சடமாகிய பாசமயக்கந் தன்னைவந்து பொருந்துதாதபடி தோய்வற நிற்கிற திருவருள் ஞானத்தையே மேலான வுண்மை ஞானமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். எ-று.

று-ம். பன்னிறங்கவருந் தொன்மைப் படிகநீடொளியும் பன்மை மனனிலங்கியல்புந்தந்தவளரொளிபோல என்று படிகத்தையும் வன்னங்களையும் ஆதித்தப்பிரகாசத்தையு முபமானமாகக் கூறியது படிக மான்மாவுக் குவமையெனவறிக. வன்னங்கள்பாசத்துக் குவமையெனவறிக. ஆதித்தப்பிரகாசந் திருவருள்ஞானத்துக் குவமையெனவறிக.

இனி வையந்தன்னகம்பயிலும். எ-கு. வையமெனறது ஆன்மாக்களும் பாசங்களு மென்று பொருட் கூறியத்துக்கு. பி-ம். தத்துவவிளக்கத்தில் "கருமலிபாச மசேதனங்கட்டுண்பர் சேதனரென், றிருமையில்வைய மடங்குமென்றெண்ணுக." எ - து. கண்டுகொள்க.

இனிநற்சித்து. எ-கு. இந்நூலிலே "இருளகற்றிப்பாத முற்றிடு நற்பசுவர்க்கம்." என்னுங் கருத்தைப்பற்றி யான்மாவிலே வைத்துக்கொண்டு மலபாகம்வந்த வான்மாவென்று பொருளுரைப்பாரு முளர். அப்படியானுலு மிந்தச் செய்யுள் ஞானவாய்மையெனலு மதிகாரத்தி லுள்ளதாகையா லந்தத்திருவருள் ஞானத்திலே கூட்டிப் பொருளுரைப்ப தொழிய வான்மஞானத்திற்

கூட்டிப் பொருட்கூறுகை வழியல்லவெனவறிக. அன்றியும் நற்சித்து என்பதை திருவருள் ஞானமென்பதே பொருளாமென்பதற்கு. பி-ம். இந்நூலைப் பின்சென்றநூலாகிய திருநெறிவிளக்கத்திலே யிந்தச்செய்யுளுக் கெதிரடை விருத்தமாகிய "பற்றிய நிறங்களாகும் பளிங்கின தொளியும்பற்றி, நிற்றலையளிக்கும் வெய்யோனீடொளி யதுவும்போல, முற்றுலகதற்குச் சார்வாய் முயற்றினு முன்னீர்விண்போற், சிற்றினிற் சடங்க டோயா வென்பர் சிற் சத்திசேர்ந்தோர்." என்பதற்குப்பொருள் திருவருள்ஞானம் பிரபஞ்ச காரியப்படுத்தி நிற்கச்செய்தே தோய்வற்று நிற்குமென்பதற்குச் சமுத்திரத்திற் கூடின ஆகாயத்தைப்போலத் தோய்வற நிற்குமென்று கூறுகையால் நற்சித்து என்றதைத் திருவருள் ஞானமென்பதே பொருளெனவறிக. அன்றியு மிச்செய்யுளிற் கருத்தாகிய குறள் வெண்பாவிலும் "பன்னிறம் பளிங்கிற் பற்றிடப்பற்றுப் பொன்னொளிபோலு மன்னருளென்றது." மிப்பொருட்பற்றி நின்றதெனவறிக. அல்லதூஉம் சதுர்த்த சங்கிரகத்திலே யிந்தச் செய்யுளுக்குச் சேர்த்த கிரந்தத்தினுங் கண்டுகொள்க.

இனி நன்னலம்பெறநிறைந்த ஞானமேஞானம். எ-கு. சிவனுடைய நலத்தை மற்றொருவர் பெறவேண்டுகையா லிந்தச் செய்யுளுக்குச் சேர்த்த கிரந்தமு மிப்பொருளைப்பற்றி நின்றதெனவறிக. அன்றியும் இதற்கு மலபாகம் வந்த வான்மாக்களுக்குத் திருவருள்ஞான முண்டாம்படியென்று பொருளுரைப்பினுமாம். அதற்குவழியேதென்னில் முற்கூறிய வுபமானத்தில் ஆதித்தப்பிரகாசத்தினாலே படிகத்திலே வன்னங்கள் பிரதிபிம்பஞ்செய்யுமிடத்தந்தவாதித்தன் சாயவோடும்பொழுததிலே பிரதிபிம்பஞ்செய்யும் அந்தவாதித்தன் மத்தியானமான பொழுதந்தப்படிகத்தினுச்சியிலே நேர்பட்டவவதரத் தந்த வன்னங்கள் கூடியிருக்கச்செய்யந்தப்படிகம் வன்னங்களிற் பற்றுமலாதித்தப் பிரகாசத்

தைக் கவர்ந்துகொண்டு நின்றாற்போல வந்தத்திருவருள் ஞானமுமான்மாக்களுக்கு மலபாகம் வாராத நாளெல்லாம் பிரபஞ்சத்திலே புசிப்பித்து மலபாகம்வந்த வவசரத் தந்தப்பிரபஞ்சப் பற்றறும்படி நேர்பட்டுத் தனது திருவருளைக் கடாக்ஷித்து நிற்கையாலப்படிச்சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். திருவருட்பயனில். “தனக்குநிழலின்று மொளிகவருந்தம்ப மெனக்கவர நில்லா திருள்.” எ-து. கண்டுகொள்க. அன்றியு மந்தத் திருவருண்ஞானம் ஆன்மாக்களைப் பெத்தமுத்தி யிரண்டினுங் காரியப்படுத்திநிற்குமென்பதற்கு. பி-ம். இந்நூலில் “ஏற்றவினை” என்னுஞ்செய்யுளிலே “போற்றவருமருளருளே யன்றிமற்றுப் புகன்றவையு மருளொழியப் புகலொணாதே.” எ-து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது ஆதித்தப் பிரகாசமானது படிகத்தையும் வன்னபேதங்களையுங் கூட்டிக் காரியப்படுத்தி நிற்கச்செய்தே யந்த வன்னங்களிற் றோய்வற நின்றாற்போலச் சிவனுடைய திருவருண்ஞானமு மான்மாக்களையும் பாசங்களையுங் கூட்டிப் பிரபஞ்ச காரியப்படுத்தி நிற்கச்செய்தேயு மந்தப் பிரபஞ்சபாசங்களிற் றோய்வறநிற்கின்ற ஞானத்தையே யுண்மைஞான மென்னு முறைமையை யறிவித்தது. (௧௧)

———o———

வேறு—இது இனியதற்கே புறனடையாக வருளிச்செய்யு மேழாஞ்சூத்திரமான செய்யு ளிரண்டினு ளிஃ தப்படிக் கூடிநின்று காரியப்படுத்துகிற சிவஞானம் பிரபஞ்சத் தோய்வற நிற்குமுறைமையைத் திருட்டாந்த பூர்வகமாக வுணர்த்திற்று.

பன்னிறங் கவருந்தொன்மைப் படிகநீ டொளியும்பனை மன்னிலங் கியல்புந் தந்தவளரொளிபோல-பல நிறங்களையுங் கவர்ந்துகொள்வதான பளிங்கினது நிலைபெற்ற வொளியையும் பலவாய் நிலைபெற்று விளங்காநின்ற வன்னங்களி னியற்கைகளை

யுங் கூட்டுகின்ற வாதித்தனுடைய மிக்கவொளி யவ் விரண்டின் றன்மையுந் தாக்காது விளங்குமாறுபோல,—வையந் தன்னகம் பயிலுநற்சிற் சடங்களின் றன்மை - தத்துவத்தினிடத்திற் பயிலு நல்ல வாத்மாவுந் தத்துவங்களுமாகிய விரண்டின்றன்மையும்,— தாவா நன்னலம்பெறநிறைந்த ஞானமே ஞானமென்பர் - தாக் காது நல்லசிறப்புண்டாய்நிறைந்த ஞானந்தானே ஞானமென்று சிறப்பித்துச் சொல்வர் பெரியோர். எ-று.

இதற்குப் பிறவு முரைப்பர்.

---

இங்ஙன மநாதியே கூடிநின்று காரியப்படுத்தி நிற்கிற வருளான திரோதைவரையும் பிரகாசியாம லிருந்ததே னென்று வின வினமாணவகனை நோக்கி யான்மாக்களுக் கருளுமலமு மநாதியே கூடிநிற்கிறதே முறைமையாகையால் அந்த மல மேலிட்டபொழு தருள் மறைந்துநின்று காரியப்படுத்து மென்றும் அந்த மலம் பா கம்வந்த வவதரத் தந்தவருள் பிரகாசித்து நிற்கிறது மியல்பாகை யா லந்த மலநீங்கியே யருட் பிரகாசிக்குமென்னு முத்தர மேல ருளிச்செய்வா னெடுத்துகசொண் டருளியது.

மாயைமா மாயைமாயா வருமிரு வினையின்வாய்மை
யாயவா ருயிரின்மேவு மருளெனி லிருளாய்நிற்கு
மாயைமா மாயைமாயா வருமிரு வினையின்வாய்மை
யாயவா ருயிரின்மேவு மருளெனி லொளியாய்நிற்கும்.

இருண்மலமொழிய வேணையவொளியா
யருளுடன்மருவு மவர்திறமுரைத்தது.

(இ - ள்.) மாயைமாமாயை மாயா வருமிருவினையின்வாய்மை யா - அசுத்தமாயையிற் றோற்றப்பட்ட தத்துவ முப்பத்தொன்றுஞ் சுத்தமாயையிற் றோற்றப் பட்ட தத்துவ மஞ்சுமாகத்தத்துவ முப்பத் தாறுங் கெடாதே வரப்பட்ட புண்ணியபாவ

| | |
|---|---|
| யவாருயிரின் மேவுமருளொளிலிருளாய்நிற்கும் | ங்கண் மேன்மேல் வர்த்தியாநிற்கிற ஆன்மாவினிடத்திலே யாணவமலமாகிய வறியாமை மேலிட்டபொழு தான்மாவு மறியாமையாய் நிற்கும் |
| மாயை மாமாயை மாயா வருமிருவினையின் வாய்மையாய வாருயிரின்மேவுமருளொளிலொளியாய் நிற்கும். | அசுத்தமாயையிற் றோற்றப்பட்ட தத்துவ முப்பத்தொன்றுஞ் சுத்தமாயையிற் றோற்றப்பட்ட தத்துவ மைந்தும் ஆகத் தத்துவ முப்பத்தாறு மாய்ந்துபோவதாகப் புண்ணிய பாவங்கள் க்ஷயம்வந்த வான்மா விடத்திலே யருள்மேலிட்டபொழுது ஆன்மாவு மறிவாய்ப் பிரகாசித்து நிற்கும். எ-று. |

உ - ம். இந்தச்செய்யுளுக்கிட்ட தொந்தனையி லான்மாவை யருளுமலமு மநாதியே கூடிநிற்கு மென்பதற்கு. பி-ம். சித்தியாரில் ஏழாஞ்சூத்திரத்தில் "சுத்தமெய்ஞ் ஞானமேனிச் சோதிபால்." என்ற செய்யுளின் முடிவிலே "சத்தளபோதே வேறுஞ் சதசத்து மசத்துமெல்லாம், வைத்திடு மநாதியாக வாரிநீர் லவணம்போல." எ - று. கண்டுகொள்க.

இந்தச் செய்யுளின் முற்பதத்திலும் பிற்பதத்திலு மருளொளி லிருளாய்நிற்கும் அருளொளி லொளியாய்நிற்கும் என்றது ஆன்மா வருளோடு மலத்தொடுங்கூடி யதுவதுவாய்நிற்கு மென்றது. இதற்கு. பி-ம். சிவஞானபோதத்தில் ஏழாஞ் சூத்திரமாகிய "யாவையுஞ் சூநியம்." என்ற செய்யுளின் பிற்பதத்தில் "இருதிறனறிவுள திரண்டலா வான்மா." எ-று. கண்டுகொள்க.

இனி யருளானது ஆன்மாவோடு மநாதியே கூடியிருக்கச்செய்தே மலபாகம்வாராத வான்மாக்களுக்கு அந்தவருள் கூடிநிற்கச்செய்தேயும் பிரகாசியாதென்று பொருட்கூறியதற்கு. பி-ம். திருவருட்பயனில் "ஊமன்கண்போல வொளியுமிகவிருளே - யாமன்கண்காணாதவை." எ-று. கண்டுகொள்க. ஊமனென்றது கூகை

யெனவறிக. ஒளியுமிகவிருளேயென்றது கூகைக்குப் பகற்கால த்திற் கண்டெரியாதென்பது கருத்து. திருவள்ளுவதேவரும். "பக ல்வெல்லுங்கூகையைக்காக்கை." என்றது மிப்பொருட்பற்றி யெ னவறிக. அன்றியும் சித்தியாரிலேயும் "இங்குத்தானந்தகருக் கிர வியிருளாகு மீசனருட்கண்ணிலார்க் கொளியாயே யிருளாம்." என்பது மிப்பொருட்பற்றி யெனவறிக.

இனி யிந்தச் செய்யுள் மாயை மாமாயையென்று மிதித்ததை மிதித்து ஒருசொல்லை யிருகாற் சொல்லியதேதென்னில். "கூறிய பொருளைக் கூறலுமாகும் வேறொருபொருளை விளக்குமாகில்." என்னும் விதியைப்பற்றி யெனவறிக. வேறொருபொருளை விளந் தலாவது முற்பதத்துக்கு மாயாவென்றது மாயாகன்மங்கள் க்ஷய ம்வாராத வான்மாவென்றதெனவறிக. பிற்பதத்துக்கு மாயாவெ ன்றது மாயாகன்மங்கள் க்ஷயம்வந்த வான்மாவென்றதெனவறிக. அப்படி யொருசொல் லிரண்டாவது யெங்ஙனேயென்னில் வாரா ப்போனு னென்றசொல் வந்துபோனதற்கும் வராமற் போனத ற்கு நின்றாற்போல வெனவறிக.

இதனாற் சொல்லியது ஆன்மாக்கள் மாயாகன்மங்கள் க்ஷய ம்வாராதநாள்களெல்லா மலத்தோடுங்கூடி யறியாமையாய் நிற் பார்களென்றும் மாயாகன்மங்கள் க்ஷயம்வந்தநாளுக் கருளொடு ங்கூடிப் பிரகாசமாய் நிற்பார்களென்னு முறைமையு மறிவித் தது. (௨௭)

---

வேறு—இது இந்தச் சிவஞான மிற்றைவரையு மென்னிடத் திற் பிரகாசியாதிருந்த தென்னையென வினுயதற் குத்தர முணர்த் திற்று.

மாயை மாமாயை மாயா வருமிரு வினையின் வாய்மை யாயவா ருயிரின்மேவு மருளினி லிருளாய் நிற்கும் - ஆணவமலத்தி னீட்ட

த்தாலே யிருவிதமாயையு மொழியாமல் வரு மிருவினைகளுமான விவற்றி னுண்மையேயாய் நின்று போகங்களை யனுபவிக்கின்ற வாத்மாவி னிடத்திலே பொருந்திய மயக்கத்தினிடத்திலே யந்த ஞான மிருடானாகவே நிற்கும்,—மாயை மாமாயைமாயா வருமிருவினையின் வாய்மை யாய வாருயிரின்மேவு மருளினி லொளியாய் நிற்கும் – இனி யந்த வாத்மாவினிடத்திலே யாசாரியனாற் பொருந்திய வனுக்கிரகத்தினிடத்திலே யதுபிரகாசமாகவேநிற்கும். எ-று.

மருள் – மயக்கம். சத்தார்த்தக்கிரியா சொரூபமான விந்த மாயாசத்திகளுடைய தன்மையும் பிறவித்துன்பமு மாத்மாக்கடன்மையு மவற்றிற்கு வேறாய் நிற்கும் வீட்டின்பமு மிவற்றிற்செலுத்துந் தன்மையு மொன்றுந் தோன்றாதபடி யாணவகாரியமாயிருக்கிற வஞ்ஞானத்தைக்கொண்டு மறைத்து அவ்வஞ்ஞானமேயாய் நிற்குமாதலி னிருளாய்நிற்குமென்று மிந்த மலமாயாகன்மங்களினுடைய தன்மையுங் காட்டிப் பிறித்துத் தேகாந்தமளவுமுள்ள பிராரத்தவாதனையு மாத்மாவிற் றாக்காம லெவ்விடத்திலேயு நானொழியவில்லை யென்னும்படி பிரகாசமாய் நிற்குமாதலி னொளியாய் நிற்குமென்று முரைத்தார். அந்த ஞானமென்ப ததிகாரத்தாற்பெற்றாம். பின்வந்த வாருயி ரடையடுத்த சுட்டுப்பெயர். இதற்குப் பிறவுமுரைப்பர்.

☞ ஏழாஞ்சூத்திரமாகிய ஞானவாய்மை
முற்றிற்று.

---

முன் னதிகாரத்தி லருளிச்செய்த ஞானத்தினுண்மை பயன்படுமிடத்து ஆன்மதரிசனமென்றும் ஆன்மசுத்தியென்றும் ஆன்மலாபமென்றுந் தெரிந்துப் பயன்படவேண்டுகையால் மேலதன் பயனென்னு மதிகாரம் வைக்கப்பட்டதென வறிக.

அப்படி யதிகாரமொன்றாயிருக்க மூன்றுவகையாகவே ண்டுவானேனென்னில் இவ்வதிகாரத்தில் மூன்றுசூத்திர மடங்கிவருகையா லப்படி வைக்கப்பட்டதெனவறிக. அஃ தெங்ஙனேயென்னில் ஆன்மதரிசன மெட்டாஞ்சூத்திரமாக வும் ஆன்மசுத்தி யொன்பதாஞ்சூத்திரமாகவும் ஆன்மலாபம் பத்தாஞ்சூத்திரமாகவும் நிற்கையா லப்படிச்சொன்னதென வறிக. அதற்கு வழியேதெனில் சிவஞானபோதத்தில் எட் டாஞ்சூத்திர மான்மதரிசனமாகவும் ஒன்பதாஞ்சூத்திர மா ன்மசுத்தியாகவும் பத்தாஞ்சூத்திர மான்மலாபமாகவும் வரு கையா லிதுவுமப்படி வைக்கப்பட்டதெனவறிக. அஃதெங் ஙனேயென்னில் "தேசுறமருவும்." என்ற விருத்தந்தொட ங்கி "எல்லையில்பிறவி" என்ற விருத்தமுடிவாகிய செய்யுட் பத்தொன்பதினுள்ளும் "தேசுறமருவும்" என்ற விருத்தமொ ன்றும் இவ்வதிகாரங்கள் மூன்றுக்கும் வகுப்பாகவருளிச்செ ய்து மேல் "தன்னறிவதனால்." என்ற விருத்தந்தொடங்கி "சுத்தமாஞ்சத்தி." என்றவிருத்தமுடிவாகிய செய்யுள் நா லும்ஆன்மதரிசனமாகவும் "புகலரும்சத்தர்" என்ற விருத்த ந்தொடங்கி "அடைபவர் சிவமேயாகும்." என்ற விருத்தமு டிவாகிய செய்யுள்நாலும் ஆன்மசுத்தியாகவும் "பொறிபுல கருவி." என்றவிருத்தந்தொடங்கி "எல்லையில்பிறவி." என்ற விருத்தமுடிவாகிய செய்யுட்பத்தும் ஆன்மலாபமாகவும் வரு கையால் சிவஞானபோதத்தில் "ஐம்புலவேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத், தம்முதல் குருவுமாய்த் தவத்தினிலுணர்த்த விட், டன்னியமின்மையி னரன்கழல்செலுமே." என்ற எட்டா ஞ்சூத்திரத்தின் கருத்து இவ்வான்மாக்களுக்கு. ஞானத் தினை யுணர்த்துமுறைமையினை யுணர்த்துதனுதலிற்று என்ப தனால் இந்நூலினும் ஆன்மதரிசனத்துக்கு வகுத்தசெய்யுட் களில் "தன்னறிவதனால்." என்ற விருத்தத்தில் "தன்னையு

ந்தானேகாணுந் தானதுவாகின்றே." என்பதனால் ஆன்மதரிசனமென்னு மதிகாரம் எட்டாஞ்சூத்திர மாகுமென்றதெனவறிக.

மேலொன்பதாஞ்சூத்திரத்துக்கும் சிவஞானபோதத்தில் "ஊனக்கண்பாச முணராப்பதியை, ஞானக்கண்ணினிற் சிந்தைநாடி, யுராத்துனைத்தேர்த்தெனப் பாசமொருவத், தண்ணிழலாம்பதிவிதி, யெண்ணுமஞ்செழுத்தே." என்னுஞ்சூத்திரத்தின் கருத்து ஆன்மசுத்திபண்ணுமா றுணர்த்துதனுதலிற்று என்பதனால் இந்நூலினும் ஆன்மசுத்திக்குவகுத்த செய்யுட்களில் "இந்நிலை." என்னும் விருத்தத்தில் "கரணமாகாவகையதி லறிவடங்கி மன்னிடவியாபியாய வான்பயன் றுன்றுமன்றே." என்பதனால் ஆன்மசுத்தியென்னு மதிகாரம் ஒன்பதாஞ்சூத்திரமாக நின்றதெனவறிக.

மேற் பத்தாஞ்சூத்திரத்துக்கும் சிவஞானபோதத்தில் "அவனேதானே யாகியவந்நெறி, யேகனாகியிறைபணிநிற்க, மலமாயைதன்னொடு வல்வினையின்றே." என்னுஞ்சூத்திரத்தின்கருத்து யானெனதென்னுஞ் செருக்கற்றவனது ஸ்ரீபாதத்தையணையுமென்பதனால் இந்நூலினும் ஆன்மலாபத்துக்குவகுத்த செய்யுட்களில் "தோன்றிநின்ற சிற்பரமகனுள்ளளச் செயலறுத்திட வுதிக்குந்தற்பரம்." எ - ம். "மற்றதும் பகல்விளக்கின் மாய்ந்திட வருவதுண்டேல் பெற்றிடுமதனை" எ - ம். "பாவிக்கவேண்டாவாண்ட பரனருள்பற்றினோர்க்கே." எ - ம். தற்போதங் கெடநிற்பதுவே கருத்தாகையாலிதுவும பத்தாஞ்சூத்திரமாக நின்றதெனவறிக.

அப்படியானால் முன்னே முகவுரையில் சூத்திரவகுப்பிலே இதற்குப் பின்னேவருகிற வைந்தெழுத் தருணிலையை ஒன்பதாஞ்சூத்திரத்திற் கூட்டினதேதெனனில் அஃதாவது சிவஞானபோதத்தில் ஒன்பதாஞ்சூத்திரமாகிய "ஊனக்

கண் பாசமுணராப்பதியை." என்னுஞ் சூத்திரத்தின் பிற்பக்கத்திலே "பாசமொருவத் தண்ணிழலாம் பதிவிதியெண்ணு மஞ்செழுத்தே" என்பதனாலும் சித்தியாரிலும் ஒன்பதாஞ்சூத்திரமாகிய "பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும்" என்ற செய்யுளிலேயும் "ஓசைதரு மஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க" என்பதினாலும் அந்தப் பஞ்சாக்கரத்தையும் ஒன்பதாஞ் சூத்திரத்திலே கூட்டி வைக்கப்பட்டதெனவறிக. அப்படி யொன்பதாஞ் சூத்திரத்தின் பகுதியாயிருக்க இந் நூலிலே பத்தாஞ் சூத்திரமாகிய வான்மலாபத்துக்குப் பின் பாகப் பஞ்சாக்கரமாகிய வைந்தெழுத் தருணிலை வைக்க வேண்டுவானேனென்னில் அந்தப் பத்தாஞ் சூத்திரமாகிய வான்மலாபமென்பதனில் சிவத்தோடுங் கூடிப் பிறிவறநின்று சிவாநுபவத்தை யநுபவிக்கப்பட்ட சிவஞானிக ளந்த நிலை குலைந்த வவதரத்தும் வேறு பிரபஞ்ச வாதனையிற் கூடாத படி யதுவு மொருபாய நிட்டையாகக் கொண்டு மீளவும் பழைய வான்ம சுத்தியில் நிற்கவேண்டுகையாற் பத்தாஞ் சூத்திரத்துக்கு மேலாகவும் ஒன்பதாஞ் சூத்திரத்தின் பகுதியாகிய வைந்தெழுத் தருணிலையை வைக்கப்பட்டதெனவறிக. இந்தப் பஞ்சாக்கர தரிசனத்தை முற்கூறப்பட்ட நூல்களைப்போல வொன்பதாஞ் சூத்திரத்தோடுங் கூட்டிவையாமல் இந் நூலில் வேறேபகுத்துவைக்கைக்கு விதியேதென்னில் இந்தச் சிவப்பிரகாசஞ் சார்புநூ லாகையால் "இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித் திரிபுவேறுடையது புடை நூலாகும்" என்னு மிலக்கண விதியைப்பற்றி அந்நூல்களினொழுங்கில் வராமல் முற்பிற்பாடாக வைக்கப்பட்டதென வறிக.

ஆகையால் முற்கூறிய "அதன்பயன்" என்ற செய்யுண் முதலிய பத்தொன்பதுமிந்தப் பஞ்சாக்கர தரிசனத்தின்

பகுதியான விருத்தமூன்றும் ஆகச்செய்யு ளிருபத்திரண்டும் ஆனமதரிசனமாகிய எட்டாஞ்சூத்திரமும் ஆன்மசுத்தியாகிய ஒன்பதாஞ்சூத்திரமும் ஆன்மலாபமாகிய பத்தாஞ்சூத்திரமு மாக நின்றதெனவறிக.

இங்ஙனம் வகுத்தருளிச் செய்யப்பட்ட எட்டாஞ்சூத்திரமாகிய ஆன்மதரிசனத்துக்கும் ஒன்பதாஞ் சூத்திரமாகிய ஆன்மசுத்திக்கும் பத்தாஞ்சூத்திரமாகிய ஆன்மலாபத்துக்கு மதிகாரவகுப் பருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

தேசுற மருவுமான்ம தரிசன மான்மசுத்தி
யாசிலா வான்மலாப மாகமூன் றுருமூன் றும்
பாசம தகலஞானம் பற்றறுன் பணியைநீத்த
லேசிலேயத்தமூந்தலெனுமிவற்றடங்குமன்றே. (௨௧)

உயர்தவஞ்செய்தவர்க் குற்றமூவகையாம்
பயனுறும்வழியைப் பாரித்துரைத்தது.

| | |
|---|---|
| (இ-ள்.) தேசுற மருவுமான்மதரிசன மான்மசுத்தி யாசிலா வான்மலாப மாகமூன்றுரும் | விளக்கமுண்டாகப் பொருந்தப்பட்ட ஆன்மாவைத்தரிசிக்கை யென்றும் ஆன்மாவைச் சுத்திபண்ணுகையென்றும் குற்றமில்லாத வான்மாவினுடைய பிரயோசன மென்றும் ஆகமூன்றுவகையாம் |
| மூன்றும் | இந்தமூன்றுவகையுமேதென்னில் |
| பாசமதகலஞானம்பற்றல் | பாசங்களாகிய தேகாதிபிரபஞ்சங்களாயுள்ளவை நீங்கும்படி யிவையிற்றைக் கூடின வருளோடும் பொருந்துகை யான்மதரிசனமாம் |

தான் பணியை நீத்தல் — தன்னுடைய விச்சாஞானக் கிரியைகளை விட்டந்த வருளிலே மூழ்குகிற தற்போதம் ஜீவியாம லிற்கிறது தானே யான்மசுத்தியாம்

ஏசினேயத்தழுந்தல் — குற்றமில்லாத சிவரூபமாகிய ஞேயத்திலே யழுந்துகிறது தானே யான்மாவினுடைய விலாபமாவது

எனுமிவற்றடங்கு மன்றே. — என்றிங்ஙனஞ் சொல்லப்பட்ட ஞாதுரு ஞான ஞேயமென்னு மூன்றினுள்ளு மடங்கும். எ-று.

நு-ம். ஆன்மதரிசனமாவது தனக்கறிவாகக் கூடிநின்று காரியப்படுத்துகிற பிருதிவி முதலான தத்துவங்களை நாமல்லவென்றுகழிந்து அந்தவருளே தனுவாகப்பொருந்தி யந்தத்தத்துவங்களையுந் தன்னையு மந்த வருளையுந் தரிசித்துநின்ற விடமெனவறிக.

அன்றியு மான்மசுத்தியென்றது அந்த வருள்காட்டத் தான் காண்கிற காட்சியை யிழந்தந்த வருளே தலைமறைவாக நின்ற விடமெனவறிக.

அன்றியு மான்பலாப மென்றது அந்தவருள்மேலீடாக நிற்கச்செய்தே யவ்விடத்திலே யோரின்பம் விளைதலெனவறிக.

என்றிங்ஙன மூன்றுவகையாகச் சொன்னதற்கு. பி-ம். உருபசொரூபவகவல் "மன்னருள் தன்னின் மன்னுயிர்மன்னுத-லின்னுயிர்த்தரிசன மென்பர்நல்லோர் - சுத்திதன்போதந் தோன்றுறுதிருக்கை - யத்தகுமிலாப நேயத்தழுந்தல்." எ-து. கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது அந்த வுண்மைஞானத்தை யான்மாக்கள் பெறுமிடத்து ஆன்மதரிசன மென்றும் ஆன்மசுத்தி

யென்றும் ஆன்மலாப மென்றும் மூன்றுவகையாக நின்றுபெறுமென்னு முறைமையை யறிவித்தது. (௨௧)

---

வேறு—இனி எட்டு மொன்பதும் பத்துமான சூத்திரங்களின் பொருளான வதன் பயனை யாத்மதரிசன மாத்மசுத்தி யாத்மலாபமென மூன்றாக்கிப் பத்தொன்பது செய்யுளானுணர்த்துவான் றொடங்கின ரவற்றுளிஃ தம்மூன்றினையும் வகுத் துணர்த்திற்று.

தேசுறமருவுமான்ம தரிசன மான்மசுத்தி யாசிலாவான்மலாப மாகமூன்றாகும் - அந்தப்பயனானது விளக்கமிகவும் பொருந்தியவாத்மாவைத் தரிசிக்கை யந்தவாத்மாவை நிருவிகற்பமாம்படி சுத்திபண்ணுகை யங்ஙனங் குற்றமற்றவாத்மாவின் பிரயோசனமாக மூன்றுவிதமாயிருக்கும்,—மூன்றும்-இந்த மூன்றுவிதமும்,—பாசமதகலஞானம் பற்றறன்-முன சொன்னவடைவே யாத்மாவானவன் பாசமானது விட்டுப்போகப் பரஞானத்தைத் தரிசிக்கை,—பணியைநீத்தல்-அந்த ஞானத்தைக் கூடித் தன்னுடைய செயலை விடுதல்,—ஏசினையத்தழுந்தல் - அந்தஞானத்தாலே குற்றமற்ற சிவரூபத்தைப்பெற்று அதிலே யழுந்துதல்,—எனுமிவற் றடங்குமன்றே - என்று சொல்லப்பட்ட விவைமூன்றினுள்ளு மடங்கும். எ - று.

எனவே இம்மூன்று தொழிலுமே யம்மூன்றுபெயரு மென்பதாம், ஒன்றானு ளொன்றடங்கு மென்பதன்று. அகலப்பற்றலென்பது கோழிகூவப் பொழுதுவிடிந்த தென்றாற்போனின்றது. பணியை நீத்த லாத்மாவி னிச்சாஞானக் கிரியைகளை விடுத்த லென்பாருமுளர். தான் ஈண்டுப் பெயர்.

---

இங்ஙனஞ் சொல்லப்பட்ட மூன்றுபகுதியி னுள்ளு மெ

ட்டாஞ்சூத்திரமாகிய ஆன்மதரிசனத்தை முந்த வருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

தன்னறி வதனாலேதுந் தனக்கறி வில்லையேனுந்
தன்னறி வாகவெல்லாந் தனித்தனிப் பயனருந்துந்
தன்னறி வறியுந்தன்மை தன்னாலே தனையறிந்தாற்
றன்னையுந் தானேகாணுந் தானது வாகிநின்றே. (உஉ)

பவமாறுவிதன் பரிசினையுணர்ந்துபின்
சிவமாய்நிற்க வுயிர்தெரியுமென்றது

(இ-ள்.) தன்னறி வதனாலேதுந்தனக்கறிவில்லையேனும் — ஆன்மாவானதுக்குத் தன்னுடைய வறிவாலே யாதாமொன்றை யறிகைக்குத் தனக்கென்ன வோரறிவுமில்லையா மாயினும்

தன்னறி வாகவெல்லாந்தனித்தனிப்பயனருந்தும் — தானிந்திரியங்களுடனே கூடி நின்றறிகிற வறிவுக ளெல்லாத்தையுஞ் சிவன்கூட்டி யறிவிக்கிறதென் றறியாமற் றனாலே யறிந்ததாக வொவ்வொரு விடயங்களினையொற்றித்துநின் றநுபவியா நிற்கும்

தன்னறி வறியுந் தன்மை — இப்படி யறிகிறது ஆன்மபோதத்தின் முறைமையாம். இங்ஙன மாறுபாடாக வறிகிற முறைமையை விட்டு

தன்னாலே தனையறிந்தால் — அந்தச் சிவனுடைய ஞானத்தாலே சிவனை யறிந்தால்

தன்னையுந் தானேகாணும் — ஆன்மாவினுடைய செயலறுதியையு மந்த வான்மா தன்னாலே காணவும் படும். அஃதெங்ஙனே யென்னில்

தானது வாகிநின்றே. — ஆன்மாவான தந்தச் சிவஞானத்தோடுங் கூடிநின்ற வவதரத்து. எ - று. தன்னை

யுமென்ற விழித்துரை கொண்டே யான்மா
தற் சுதந்தரமாக வறியமாட்டா னென்ப
து கருத்தெனவறிக. இதற்கு. பி-ம். சித்
தியாரில். "அறிந்திடு மான்மா வொன்றை மற்றொன்றா லறி
தலானு, மறிந்ததனை மறத்தலானு மறிவிக்க வறிதலானு, மறிந்
திடுந் தன்னையுந்தா னறியாமை யானுந்தானே, யறிந்திடு
மறிவ னன்று மறிவிக்க வறிவனன்றே." எ-து. கண்டுகொ
ள்க.

இதனாற் சொல்லியது ஆன்மா பெத்தத்தன்மையிலே
நின்றும் பிரபஞ்சத்தோடுங்கூடி ஜீவிக்குமிடத்துத் தனக்கெ
ன வொருசெயலில்லாம லிருக்கச்செய்தேயுந் தனசெயலா
கச் செய்கிறேமென்று நின்ற முறைமையு முத்தித்தன்மை
யிலே சிவனுடைய வருளாலே தற்றெரிசனம் வந்தவிடத் தந்
தவருளோடுங் கூடியறிகிற தொழிந்து நமக்கென் றொருசெ
யலில்லையென்று தன்னுடைய செயலறுதியை யறிந்த முறை
மையு மறிவித்தது. (உஉ)

---

வேறு—எட்டாஞ் சூத்திரமான வாத்ம தரிசனத்தைச்
செய்யு ஞான்கிறனுணர்த்துகின்றார். அவற்று ளிஃ தருளாலே
யருளைத் தரிசித்தபின் றன்னைத் தரிசிக்கலா மென்ப துணர்த்
திற்று.

தன்னறிவதனாலேதுந் தனக்கறி வில்லையேனும் - ஆத்
மாத் தன்னுடைய ஞானத்தா லொன்றை யறிதற்குச் சிறிதுந்
தனக்கறிவில்லை யாயினும்,—தன்னறி வாகவெல்லாந் தனித்
தனிப் பயனருந்தும் - பயனெல்லாஞ் சிவஞானத்தா லொவ்
வொரு விடயங்களாக நின்று புசிக்கின்ற வவைக ளெல்
லாம்,—தன்னறிவாக - தன்னுடைய ஞானத்தினாலே யறிந்து
புசிக்கிறானாக,— தனித்தனிப் பயனருந்தும் - தனித்தனியே

புசியாநிற்பன,—தன்னறி வறியுந் தன்மை - ஆத்மா ஞானத்தா லறியுமுறைமை,—தன்னாலே தனையறிந்தாற் றன்னையுந் தானேகாணும் - தனக்குப் பிராணனாய் நிற்கிற ஞானத்தினாலே யந்த ஞானத்தைத் தரிசித்தாற் றன்னையு மவ்விடத்திலேதானே காணா நிற்கும். தனைத்தானே காணவல்லனோவெனில்,—தானதுவாகிநிறை-தானந்த ஞானமாய் நிற்கையால். எ-று.

நிற்றலான் நின்றெனத் திரிந்து நின்றது. தன்னாலே தனையறிந்தா லென்பதற்கு ஆத்ம சிற்சத்தியாலே தன்னை யறிந்தாலெனிற் குற்றமென்னை? அஃது இவ்வாசிரியர் கருத்தன்று. அது சித்தியாரிற் சூரியகாந்தக் கல்லி னிடத்தே யென்னுந் திருவிருத்தத்திற் காண்க. அன்றியு ஞானநாட்டம் பெற்றபின்யானு-நின்பெருந்தன்மையுங் கண்டேன் காண்டலு-மென்னையுங் கண்டே னென்னும் பட்டினத்துப் பிள்ளையார் திருவாக்கானு மறிக.

---

இன்னமு மிந்த மூவகை யத்தத்தைத் தெளிய வருளிச்செய்யவேணுமென்று வினவ மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

தத்துவ மானவற்றின் றன்மைக ளனைத்துங்காலை
யுய்த்தறிந் திடவுதிப்ப தொளிவளர் ஞானமாகு
மத்தன்மை யறியுமாறு மகன்றிட வதுவாயான்மா
சுத்தமாஞ் சுத்தஞானந் தொகுமுத லோன்றுமன்றே.

அதனைநிரூபித் தந்தமூவகைப்பயன்
விதமுடனிதுவென விளங்கவுரைத்தது.

(இ-ள்) தத்து தத்துவங்களி னுடைய வுரூப சொரூபமானவற்றின் சுபாவத்தை யறியுமிடத் தவையிற்றை யந்தன்மைகளனை நியமாக வறிந்திடத் தோன்றுவது பிரகா

ருங்காலை யுய்த்
துறிந்திடவுதிப்
ப தொளி வளர்
ஞான மாகும் — சத்தினை மிகுதியாகவுடைய வருளென்றே சொல்லப்படுவது

அத்தன்மை
யறியு மாறு மக
ன்றிட — அப்படி யந்த வருள்காட்டக் காண்கிற காட்சியை நீங்கி

அதுவாயான்
மா சுத்தமாம் — அந்த வருளோடுங்கூடி யதுதானாய்த் தற்போதம் ஜீவியாம லிற்கவே யான்மசுத்தியாம். அப்படி நிற்கவே

சுத்தஞானத்
தொகுமுதலே
னறுமன்றே. — அப்பொழுதே நின்மலமாகிய வருளுக்கு முதலாயுள்ள சிவமாகிய ஞேயந் தோன்றும். எ - று.

று - ம். தத்துவங்களி னுண்மையை யுணரவென்றது அவையிற்றை ஜடமென்று காண்கை யெனவறிக.

இனி யுய்த்தறிந்திட வென்றது தேகாதி பிரபஞ்சங்களை நீங்குகை யெனவறிக.

அத்தன்மை யறியுமாறு மகன்றிட வென்றது தன்னுடைய போதத்தின் மேலீடாகிய விச்சா ஞானக் கிரியைகளை விடுகை யெனவறிக.

இதனுற் சொல்லியது ஆன்மாவானது தத்துவங்களை ஜடமென்று கண்டு நீங்கி யருளே தனுவாய் நிறவிட மான்ம தரிசன மென்றும் அப்படி நிற்கச்செய்தே யந்தவருளே மேலீடாகத் தற்போதம் ஜீவியாம னின்றவிட மான்மசுத்தி யென்றும் அப்படி நிற்கச்செய்தே யந்த ஞானத்துக்கு முதலாகிய சிவமான ஞேயந் தோன்றுகிறதே யான்மலாப மென்றும் வருமுறைமையை யறிவித்தது. (உ௬.)

---

வேறு—இஃ தந்த வரு ளாத்மாவுக்குத் தோன்று முறைமையு மவன் சுத்தனு முறைமையும் பணியற நின்ற காலத்தின் ஞேயந் தோன்று மென்பதூஉ முணர்த்திற்று.

தத்துவ மானவற்றின் றன்மைக ளுணருங்காலே - தத்துவங்களை நீங்குகைப் பொருட்டாக வவற்றி னுண்மைகளையு மாராயுமிடத்து,—உய்த்தறிந் திடவுதிப்ப தொளிவளர் ஞானமாகும் - அவைகளிலே தனித்தனி தன்புத்தியைச் செலுத்தியவற்றி னுண்மையை யாராய்ந்து பார்க்கவே நிலைபெற்ற பொருளாய்த் தோன்றுவது பிரகாசத்தையுடைய ஞானமேயாம்,—அத்தன்மை யறியுமாறு மகன்றிட - அப்படி யறிகிற முறைமையும் விட்டுநீங்க,—அது வாத்மாச் சுத்தமாம் - அந்த ஞானந்தானே யாத்மாச் சுத்தமாம்,—சுத்தஞானத் தொரு முதலேன்றுமன்றே-அப்பொழுதே யந்த ஞானத்துக்கு முதலாகிய ஞேயந் தோன்றும். எ - று.

---

அப்படியிருந்த ஞானத்துக்கு முதலா யொருஞேயந் தோன்றுமென்கிற தென்ன விந்தஞானமாகிய வருளோடிங் கூடி யந்தவருளைதானாய் நிற்கிறதல்லோ பயனென்கிற சங்கிராந்தவாதியை மறுத்து அந்தவருளையுந்தவிர வேறே ஞேயமாகிய சிவமுண்டென்று மேலருளிச்செய்வா னெடுத்துக் கொண்டருளியது.

உறைதரு முணர்வுமன்றி யதன்முத லுள்ளதென்றிங்
கறைவதே னென்னிலண்ண லருளொனு மதுவேயன்றி
நிறையொளி முதல்தன்றி நின்றிடா நிமலனுக்கு
மிறையவன் முதலவன்ற னிலங்கருட் சத்தியாமே. உகூ

அன்னபேரொளிக் காதவன்முதலாந்
தன்மைபோலருட்கரன் முன்முதலென்றது.

(இ-ள்.) உறைதரு முணர்வுமன்றி யதன்முதலுள்ளதென்றிங் கறைவதேனென்னில் — ஆன்மாவி னிடத்திலே பொருந்திநிற்கிற வருளாகிய ஞானமொழிய வதற்கு முதலாக வொருவேறெய முண்டென்று சொல்லுவானேனென்று நீகேட்கில்

அண்ணலருளெனும் — அது தம்பிரானாருளே யென்று சிவாகமங்கள்சொல்லும். அப்படி அந்த வருளொன்றுஞ் சிவமென்று மிரண்டாயிருக்குமோவென்னில்

அதுவேயன்றி — அந்தச்சிவத்தை யொழிந்து அருள் தனித் தொருமுதலாய் நில்லாது. அதென்போல வென்னில்

நிறை வெளி முதலதன்றி நின்றிடா — மிக்க பிரகாசமானது அதற்கு முதலாகிய வாதித்தனையன்றித் தனித்துண்டாகாது. அதுபோல

நிமலனுக்கு மிறையவன் முதல் — நின்மல சோரூபமாகிய சிவ னந்தஞான த்துக்கு முதலாகிய காரணமாய் நிற்பன். அப்படியந்த வருளுஞ் சிவமும் பிறிவற்று நிற்குமாகி லந்தவருளே யமையாதோவென்று நீகேட்கில் அப்படிப்பிறிவற்று நின்றாலு மான்மாக்கள் பயன்படுமிடத் தந்த வருள்கொண்டே போதாது. அதேனென்னில்

அவன்றனிலங்கருட் சத்தியாமே. — அப்படியந்தச் சிவனிடத்து விளங்காநின்ற வருளானது அந்தச்சிவனுக்குச் சத்தியாம். எ-று. என்னவே சத்தியாமேயெ

ன்ற விழித்துரையால் இந்தச் சத்தியால் ஆன்மாக்களுக் கின்பம் விளையாமென்பது கருத்து. அதேனென்னில் இந்தச்சத்தியும் பெண், அந்தச்சிவனோடுங்கூடி யான்மாவோ ரின்பத்தையநுபவிக்க வேண்டுகையா லான்மாவும் பெண், ஆகையாலிரண்டுபெண்கள் தம்மிற்கூடி யநுபவித்தா லின்பம் விளையாதது போல வெனவறிக. இதற்கு. பி-ம். திருவருட்பயனில். "இருவர்மடந்தையருக் கென்பயனின்புண்டா-மொருவனொருத்தி யுறின்." எ - து. கண்டுகொள்க. ஆன்மாவையும் பெண்ணென்பதற்கு. பி-ம். திருப்பாட்டில். "தன்னைமறந்தா டன்னாமங் கெட்டா டலைப்பட்டா, ணங்கை தலைவன்றாளே" எனுமே துக்களைக் கண்டுகொள்க.

உ - ம். அந்தவருளைப்பெற்ற வான்மாக்களு மந்த வருளோடுங் கூடியுப்பளத்தைப்பொருந்தின புல்லும் வைக்கோலும் உப்பாந்தன்மைபோல வந்த வருளே சொரூபமாய் நிற்கிறதொழிய வதற்குமேலாக வேறொரு ஞேயமென்பதொன்றில்லையென்று சங்கிராந்தவாதி சொன்னதற்கு. பி - ம். சங்கற்பநிராகரணத்தில் "ஏற்றோர் முகவொளி தோற்றுங்கலனெனத் - தலைவனதருளுயிர் நிலவிடுநிலவக்-காட்டததங்கிமாட்டத்தங்கிய-தன்மையுமளத்த புல்லையினிப்பும்-போன்றுவாகித் தோன்றிடுமதனாற்-பசுகரணங்கள் சிவகரணங்களாகமாறியறிவுறு-மேகமாமுயிர் யானெனதின்றே." எ-து. கண்டுகொள்க.

இது வத்தமல்லவென் றவனை மறுத்ததற்கு. பி-ம். "நோக்குமுகவொளி நீக்காதானெனக் - கவருந்தன்மை முகிரம் போலக்-கொடுத்ததுகோடற் கடுத்ததுண்டன்றே-காட்டத்தங்கி கூட்டக்கூட்டு - மிந்தனத்தியற்கை வெந்தழுறுங்கா-

வுப்பளத்தடுத்த புற்பலாலங்கள்-சடத்தவேனும் கொடுத்த துகொள்ளுந் - தன்மையுண்டெனக் கின்மையதன்றே." எ-து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது ஆன்மாக்கள் முத்தியைப்பெறு மிடத்து அருளாகிய ஞானத்தோடுங் கூடுகிறதொழியச் சிவ மாகிய ஞேயமென்ப தொன்றில்லை யென்ற சங்கிராந்தவாதி யை மறுத்து அருள் சத்தியாகையாலே யந்தச்சிவத்தோடுங் கூடியே யான்மாவாயகி யின்பமநுபவிக்கையால் சிவம் வேறு மென்னு முறைமையை யறிவித்தது. (உச)

---

வேறு—இது அப்படிக்காட்டாநின்ற ஞானமேயன்றி வேறு ஞேயமில்லையென்னுஞ் சங்கிராந்தவாதியை மறுத்து ணர்த்திற்று.

உறைதரு முணர்வுமன்றி யதன்முத லுள்ளதென்றிங் கறைவதென் னென்னில் - தன்னிடத்திலே பொருந்திய ஞா னமு மல்லாம லதற்குமுதலாகிய ஞேயமுமுண்டென் றிவ்வி டத்துச் சொல்லுகின்ற தென்னையென்றுகேட்கில்,—அண்ண லருளனு மதுவே - (அதுவே யண்ணலருளெனு மெனமா றுக) அந்தஞானமே சிவனுடையவருளென்று சொல்லப்ப டும்,—அன்றி - அல்லது,—நிறையொளி முதலதன்றி நின்றி டா - நிறைந்த பிரகாசமானது ஆதித்தனையொழிந்து நில்லா ததுபோல ஞானமு ஞேயத்தையன்றி நில்லாது,—நிமலனாரு மிறையவன் முத லவன் றனிலங்கருள் சத்தியாமே-ஆனா லந் தஞானமேது ஞேயமேதென்னி னின்மலனாகியசிவனே ஞா னத்து ஞேயமாகிய முத லவனிடத்து விளங்கிய வருளாகிய ஞான மவனுடைய சத்தியாம். எ - று.

ஒளிநின்றிடா வென்பது பன்மை யொருமை மயக்கம்.

அப்படியானு லந்தச்சத்தியாற் பயனில்லையோ வென்று மீளவு மவன்வினவ அப்படி யநுபவத்துக்குப் பயனில்லை யென்னலாமொழிய வான்மாக்களுக் குண்டாகிய வநாதிமலங்களை நீக்கி • யந்தச்சிவத்தோடுங் கூட்டுகைக் கந்தச்சத்தியே வேணுமென்னு முறைமையை யொருதிருஷ்டாந்த முகமாக வருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

சுத்தமாஞ் சத்திஞானச் சுடராகுஞ் சிவமொழிந்தச்
சத்திதா னின்றுமுன்னைத் தகவிலா மலங்கள்வாட்டி
யத்தனை யருளுமெங்கு மடைந்திடு மிருளகற்றி
வைத்திடு மிரவிகாட்டும் வளரொளிபோன் மகிழ்ந்தே.
ஒத்துறுபருதியை யொளிதருவதுபோற்
சத்தியும்பிரானைத் தருமென்றுரைத்தது.

| | |
|---|---|
| (இ-ள்.) சுத்தமாஞ் சத்தி ஞானச் சுடராகும் | நின்மல சொரூபமா யிருக்கப்பட்ட சத்தியானது ஞானப்பிரகாசமா யிருக்கும். அப்படி இருக்கவும் சிவம் வேணுமென்பானேனென்னில் |
| சிவ மொழிந்தச் சத்திதானின்றும் | அந்தச் சிவமில்லாம லிந்தச் சத்திதானுண்டாக மாட்டாது. ஆனா லிந்தச் சத்தியாற் பயனில்லையோவென்னில் |
| முன்னைத் தகவிலா மலங்கள் வாட்டியத்தனை யருளும் | அநாதியே வரப்பட்ட குற்றத்தை யுடைத்தாகிய மலங்களின் கௌரவத்தைக் கெடுத்துத் தனக்குமுதலா யிருக்கிற சிவனோடு மான்மாக்களைக் கூட்டும். அதென்போலவென்னில் |
| எங்குமடைந்திடு மிருளகற்றி வைத்திடு மிரவி | எவ்விடத்தினுஞ் செறிந்திருக்கிற விருளின் மேலீட்டைக் கீழ்ப்படுத்தித் தனக்கு முதலாயிருக்கிற வாதித்தனைக்காட்டுகிற |

காட்டும் வள ரொளி போன் மகிழ்ந்தே. பெரிய பிரகாசம்போல வந்தச்சத்தியுந் திருபையுடனே. எ-று. என்னவே யான்மாக்கள் சிவனைப்பெறுமிடத் தருளாகிய சத்தியிடமாகப் பெறவேணுமென்பது கருத்து. இதற்கு. பி-ம். தத்துவவிளக்கத்தில். "பவமேவியநெறி பந்திக்குமீசன் பசுக்கடமை, யவமேவியநெறி போகங்களால்முற்ற வந்நிலையே, தவமேவியநெறி சத்திகண்ணுற்சென்று சார்ந்துபின்னைச், சிவமேவுவரென்றுகாண் கொச்சைகாவலன் சித்திரிப்பே." எ-து. கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது திருவருளாகியசத்தி யான்மாக்களுக்குண்டாகிய மலங்களைப் பாகம்வருத்தித் தனக்குமுதலாகிய சிவத்துடனேகூட்டு முறைமையை யறிவித்தது. ௨௫

---

வேறு—இது பின்னு மந்தஞானமாகிய வருளாற் பயனின்றெனவெ வினவ வதன் சொரூபமுஞ் சிவத்துடன் வேறின்மையு மதனுற் பிரயோசனமு முணர்த்திற்று.

சுத்தமாஞ் சத்திஞானச் சுடராகும் - நின்மலமான வந்தச் சத்தி ஞானப்பிரகாசமாயிருக்கும்,— சிவமொழிந்தச் சத்திதானின்றுகும் - அதுதான் சிவத்தையொழிந்து தனித்தொரு முதலாகமாட்டாது,—ஆனு லந்தச் சிவமே யமையாதோ சத்தியாற் பயனென்னையெனின் - முன்னைத்தகவிலா மலங்கள்வாட்டி யத்தனையருளும்-அந்தச்சத்தி யதிலேமயக்கிநின்ற மலங்களைப்போக்கித் தனக்கு முதலாகிய சிவனைக்காட்டும்,—எங்குமடைந்திடு மிருளகற்றி வைத்திடு மிரவிகாட்டும்வளரொளிபோன் மகிழ்ந்தே-எங்குஞ்செறிந்துநிற்குமந்தகாரத்தை யோட்டித் தனக்கு முதலாகவைத்துச் செய

ல்லப்பட்ட வாதித்தனைக்காட்டும் பெரிய பிரகாசத்தைப் போல மகிழ்ந்து. எ - று.

ஒளிபோல மகிழ்ந் தத்தனையருளுமென மாறியுரைக்க.

☞ எட்டாஞ் சூத்திரமாகிய ஆன்மதரிசனம் முற்றிற்று.

---

மேலொன்பதாஞ்சூத்திரமாக்ய ஆன்மசுத்தி வருமாறு. அஃதாவது ஆன்மா தத்துவங்களோடுங் கூடிநின்று ஜீவிக்கிற முறைமையைவிட் டந்த வருளோடுங்கூடி யதுமேலீடாக மூழ்கித் தற்போதம் ஜீவியாமனிற்கிற வவதரத்தைச் சொல்லுவதெனவறிக.

அப்படி யருளைப்பெற்றவர்கள் தற்போதம் ஜீவியாமனிற்பர்களென்ன வேண்டுவதில்லை பசாசுபிடியுண்டவனந்தப் பசாசு செய்யுங் கிருத்தியங்களெல்லாஞ் செய்துநின்றாற்போல வந்த வருளைப்பெற்றவர்களு மந்த வருளுக்குண்டான கிருத்தியங்களெல்லாஞ் செய்து நிற்பர்களென்கிற சமவாதியை நோக்கி மறுத்தருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

புகலரு மசத்தர் தம்பாற் பொருந்திய வலகையேபோ
லகிலமு முணருமீச னருளுயிர் மேவலாலே
சகலமு நிகழவேண்டுந் தலைவனைந் தொழிலுந் தானே
யிகலறவியற்றல்வேண்டு மென்றதுஞ் சென்றியின்றே. ௨௬

அருளுயிர்தன்னி லலகைசேர்குறிபோல்
மருவிடுமுதன்மை வாய்மையன்றென்றது.

(இ - ள்.) புகலரு மசத்தர் தம்பாற் பொருந்திய லலகையேபோல் ஒரு நற்குணமு முண்டென்று சொல்லுதற் கரிய வஞ்ஞானிகளிடத்திலே பொருந்திநின்ற பசாசுபோல

அகிலமு முண ருமீச னருளுயிர் மேவலாலே

சர்வத்தையு மொரு நிகழ்ச்சியாக வறிகிற சிவனுடைய வருளானது ஆன்மாவிலே பொருந்துகையினாலே யந்தப் பேய்க்குள்ள தன்மைகளெல்லாம் பிடியுண்ட வர்களுக்குமுண்டானாற்போல

சகலமு நிகழ வேண்டுந் தலைவ னைந் தொழிலுந் தானே யிகலறவி யற்றல் வேண்டு மென்றது நன்றி யின்றே.

அந்தச் சிவனருளைப் பெற்றவர்களுக்கு மந்தச் சிவனைப்போலச் சர்வஞ்ஞத்துவ முண்டாமென்றும் பஞ்சகிருத்திய மாறுபாடில்லாமல் செய்வதுஞ் செய்யுமென்றும் நீ சொன்னது சித்தாந்த வத்துத்துக்கு நன்று யிருந்ததில்லை. எ - று.

வி - பு. இச் செய்யுளுக் கிங்ஙனம் பொருட்படுத்தி வந்தவகையால் சகலமு நிகழவேண்டுந் தலைவ னைந்தொழிலுந் தானே யிகலற வியற்றல் வேண்டும். எ-கு. பேய்பிடியுண்டவ னப்பேய் செய்யுங் கிருத்தியங்களை யெல்லாஞ் செய்வதுபோலச் சிவனைப் பெற்றவர்களுஞ் சிவனைப்போலச் சர்வஞ்ஞத்துவமும் பஞ்சகிருத்தியமுஞ் செய்யவேண்டுமென்று சமயிகள் மதத்தை மறுத்ததாகப் பொருளுரைப்பாருமுளர், அது கருத்தல்ல. அஃதெங்ஙனே யென்னில் அப்படிச் சொன்ன தந்த வருளைப் பெற்றவர்களுக்குச் சர்வஞ்ஞத்துவமும் பஞ்சகிருத்தியமு முண்டாமென் றந்தச் சமயிகள் மதமாகச் சொன்னாரென்பதே கருத்தெனவறிக. அதுவே கருத்தென்பதற்கு. பி-ம். இந்நூலைப் பின்சென்றநூலாகிய திருநெறிவிளக்கத்தினு மிந்த விருத்தத்துக் கெதிரடை விருத்தமாகிய "பூசுரக்கடியசத்தன் றன்னிடைப் பொருந்தல்போல, விசன தருளுயிர்ப்பா லெய்தலா லிவனேயாவு, மாசற வறியுமென்று மைந்தொழில் புரியுமென்றும், பேசுத லுண்மைஞான மன்றிது பிராந்

திஞானம்." இதனுள் "ஈசன தருளுயிர்ப்பா லெய்தலாலிவனை யாவு, மாசற வறியுமென்று மைந்தொழில் புரியுமென்றும், பேசுத லுண்மைஞான மன்றிது." என்றமையா லவன் சர்வஞ்ஞத்துவமும் பஞ்ச கிருத்தியமு முண்டாமென்று னென்றதையே மறுத்ததென்பதை யநுபவத்தாற் கண்டுகொள்க. ஆகையாற் பேய்பிடியுண்டவ னந்தப்பேய்க்குள்ள கிருத்தியங்களெல்லாஞ் செய்தாற்போல வருளைப்பெற்ற வான்மாக்களு மந்த வருளுக் குண்டான சர்வஞ்ஞத்துவமும் பஞ்ச கிருத்தியமுஞ் செய்வார்களென்பதே கருத்தெனவறிக. அப்படியானா லந்தப் பேய்க் குண்டான தன்மைகளெல்லாம் பிடியுண்டானவனுக் குண்டானது போலச் சிவனுக்குண்டான தன்மையுஞ் சிவனருளைப்பெற்ற வான்மாக்களுக்கு முண்டாகுமென்று சமவாதி சொன்னதற்கு வழியேதென்னில் அப்படிப் பேய்பிடியுண்டவ னின்னா னின்னபண்டங் கொண்டுவருகிறா னென்றும் இந்நாள் மழைபெய்யு மென்றும் நெருப்பை மிதித்துநின் றுடியும் சுடுகிற பாற்சோற்றிலே கையையிட்டுத் துழாவியும் நின்றாற்போல வந்தவருளைப் பொருந்தின வான்மாக்களுக்குஞ் சர்வஞ்ஞத்துவமும் பஞ்சகிருத்தியமு முண்டாமென்று சொன்னானென்றதெனவறிக. அவனப்படிச் சொன்னானென்பதற்கு. பி-ம். சங்கற்ப நிராகரணத்தில். "முன்னோன் றனது முதிரொளிஞான - மறியாப்பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த - வண்டெனவுயிரைக் கொண்டிடு முயிரது - தன்னைநோக்கித் தானது வாகி - யைவகைத் தொழிலு மெய்வகை யுணர்வும் - பிறியாவாறு பெற்றுத் - திரியாப் பெரியோர் திரட்சிசேர்ந்திடுமே." எ - து. கண்டுகொள்க.

என்றது நன்றியின்றே என் றவனை மறுத்ததற்கு. பி - ம். மேல்வருகிற செய்யுளுக்குக் காட்டி மறுக்கிற உதாரணத்திலே கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது பசாசு பிடியுண்டவனுக் கந்தப்பசாசின் குணமுந் தொழிலு முண்டானாற்போலச் சிவனருளைப்பெற்ற வான்மாக்களுக்குஞ் சிவனுடைய சர்வஞ்ஞத்துவமும் பஞ்சகிருத்தியமு முண்டாமென்று சமவாதி சொன்னானென்னு முறைமையை யறிவித்தது. (௨௬)

---

வேறு—இனி யொன்பதாஞ் சூத்திரமான வாத்ம சுத்தியைச்செய்யு ஞான்கிற னுணர்த்துகின்றார். அவற்று ளிஃது முற்றுணர்வான வந்தச் சிவஞானத்தைப் பெற்றவர்கள் சிவனைப்போலப் பஞ்சகிருத்தியம் பண்ணவேண்டு மென்னுஞ் சிவசமவாதியை மறுத்துணர்த்திற்று.

புகலரு மசத்தர் தம்பாற் பொருந்திய வலகையேபோல்—சொல்லுதற்கரிய வஞ்ஞானிக ளிடத்திலே பொருந்திய பசாசு. தன் வசமாக்கிக்கொள்ள வவனு மந்தப் பசாசாய் நின்றாற்போல,—அகிலமு முணருமீச னருளுயிர் மேவலாலே - சகலத்தையு மறிகின்ற சிவனுடைய ஞான யாத்மாவிலே பொருந்துகையினாலே,—சகலமு நிகழவேண்டும் - சர்வமு மிவனுளத்து நிகழவேண்டும். அஃதின்றி,—தலைவ னைந்தொழிலுந்தானே - கருத்தாநடாத்தப்பட்ட பஞ்சகிர்த்தியங்களையுந் தானே,—இகலற வியற்றல்வேண்டும் - மாறுபாடற நடத்தவேண்டும்,— என்றது நன்றியின்றே - என்றுசொன்ன விது நன்மை யுடைத்தன்று. எ - று.

நிகழ்த்த லீண்டறிதல்.

---

அப்படி யாக்ஷேபமாக்கிக் கொண்டு நன்றியின்றேயென்றதேதென்று மீளவுஞ் சமவாதிகேட்க நீ சொன்ன திருஷ்டாந்தத்தாலந்த வருளைப் பெற்றவர்களுக்குச் சர்வஞ்ஞத்துவமும் பஞ்சகிருத்தியமு முண்டாகாதென்னு முறைமையை மேலருளிச்செய்வானெடுத்துக்கொண் டருளியது.

இன்றுநோக் குரைநடக்கு மியல்பிலோர்க் கினை
யவாய்ந்து, நின்றதோ ரலகைநேர்ந்தால் நிகழ்வதெ
னதுபோலுள்ளத், தொன்றிய வுணர்வுதம்பா லுள்ள
து நிகழ்த்துமீசன், றன்றொழி னடாத்துமேனி தனக்
கெனக் கொண்டுதானே. (௨எ)

பற்றியவலகையின் பரிசுயிர்க்குளதெனுஞ்
சொற்பழுதறும்வகை தோனறமறுத்தது.

(இ-ள்.) இன்றுநோக் குரை நடக்கு மியல் பிலோர்க்கினையவாய்ந்து நின்றதோரலகை நேர்ந்தால் நிகழ்வ தென் — இப்பொழுது குருடனுமாய் ஊமையுமாய் முடவனுமா யிருப்பா னொருவனைப் பசாசு பிடித்தபொழுது அவன்காணவல்லவ னானேனு பேசவல்லவ னானேனு நடக்கவல்லவ னானேனு

அதுபோல் — அத் தன்மைபோல

உள்ளத் தொன்றிய வுணர்வுதம்பாலுள்ளது நிகழ்த்தும் — ஆன்மாவி னிடத்திலே பொருந்தின வருளான தவர்களுக் குண்டான விச்சாஞானக்கிரியைகளுக் கீடாக வறிவித்து நிற்குமாகையால்

ஈசன் றன்றொழி னடாத்து மேனி தனக் கெனக் கொண்டுதானே. — பரமேஸ்வரனுந் தனக்குப் பொருந்தினதொரு திருமேனியைத் தானேயெடுத்துக்கொண்டு தனக்குமுறைமையான கிருத்தியங்களையு நடத்துவன். எ - று.

று - ம். உள்ளத் தொன்றிய வுணர்வு. எ-து. உயிர்க் குயிராய் நிற்கிற திருவருளை யெனவறிக.

தம்பா லுள்ளது நிகழ்த்தும். எ-து. ஆன்மாவுக் குண்டான சிற்றறிவுக்குத் தக்கதாக வறிவித்து நின்றதெனவறிக.

இவ்வனஞ் சமவாதிசொன்ன திருஷ்டாந்தத்தையும் பொருளையு மறுத்ததற்கு. பி-ம். சங்கற்ப நிராகரணத்தில் "அவனி வனாகி லிவனவன்செய்தி - யென்றுசெய்வா ரென்றியமதத்தா-லெல்லாமறிதல் செல்லா துயிர்கள்-சிற்றறிவெனுமிச் சொற்றவறு-மென்பதெனலகை தன்பதமடைந்தோர் - கொண்டவாறு கண்டனமென்னின் - முன்னையந்தருற் றேங்கிய குணங்குறி - செய்வதெனினும் பவ்வமுற்றழுந்தினு-நாழிகொள்ளா தாழியினலைபுன-லதனாற் கருத்து முதலுளதாக - வேண்டுமன்றே." எ-து. கண்டுகொளக.

இதனாற் சொல்லியது அருளைப் பொருந்தின வான்மாக்களந்த வருள்செய்யுந் திருத்தியங்களெல்லாஞ் செய்வர்களென்று சொன்ன சமவாதியை மறுத்து அப்படி யருளோடுங் கூடினாலும் நேயந்தோன்றாத விடத் தவர்களுக் குண்டாகிய சிற்றறிவொழிந்து பேரறிவுண்டாகாதென்னு முறைமையை யறிவித்தது. (௨௭)

---

வேறு—இது அந்த முத்தாத்மாக்க ளியல்புஞ் சிவனியல்பு முணர்த்திற்று.

இன்றுநோக் குறை நடக்கு மியல்பிலோர்க்கு - இப்போது கண்ணும் வாக்குங் கமனக் கிரியையு மில்லாக் குருட் டூமை முடவ னிடத்திலே,—இளையவாய்ந்து நின்றதோ ரலகைநேர்ந்தா னிகழ்வதென்-இவையெல்லாஞ் சீவித்து நிற்கின்றதொரு பசாசுபொருந்தின வெனுக்குக் கண்டெரிந்ததோ சொல் வழங்குமோ நடைவருமோ வில்லையே,—அதுபோ லுள்ளத் தொன்றிய வுணர்வதம்பா லுள்ளது நிகழ்த்தும் - அத்தன்மைபோல வாத்மாவி னிடத்திலே பொருந்திய ஞானத் தவ்வாத்மா பிரயோசனமான சிவத்தை விரும்ப,—மற்றத் தன்மைய தாகுந்தானே-அங்குள்ளதையே யுண்டாக்கி விடும்,— ஈசன்றன் றெழிலடத்து மேனி தனக்கெனக்

கொண்டுதானே - பரமசிவன் தனக்குப் பொருந்திய திருமேனி யைத் தனக்குத் திருமேனியாகத் தானே கொண்டு தனக்கு முறைமையான பஞ்சகிருத்தியத்தை நடத்தாநிற்பன் எ - று.

முன்னர் நிறுத்திடுவ னினைந்தவுரு வென்றது மிது.

---

அப்படியாறு லிந்த வான்மசுத்தியாற் பயனேதென்று வினவின மாணவகனைநோக்கி மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

இங்கிலை தன்னின் மன்னி யெய்திடுங் கலாதிபோதந்
தன்னள வறிந்துநிற்குந் தகவிலா மலங்கணித்த
வங்கிலை கரணமாகா வகையதி லறிவடங்கி
மன்னிடவியாபியாயவான்பயன் றோன்றுமன்றே. உஅ

உளத்தறிவடங்க வொடுங்குமெல்லையிற்
றுளக்கறுபரனுந் தோன்றுமென்றது.

(இ - ள்.) இங்கிலை தன்னின் மன்னி யெய்திடுங் கலாதி போதந் தன்னளவறிந்து நிற்குந் தகவிலாமலங்கணித்த வங்கிலை கரணமாகா வகையதி லறிவடங்கி மன்னிட

இந்த வான்மசுத்தியாவது ஆன்மாவுங் கருவிகளுங் கூடி ஜீவிக்குமிடத்துக் கலாதியாயுள்ள தத்துவங்களினாலே யான்மபோதம் ஜீவிக்கு மதுவும் அந்தத் தத்துவங்கள் ஜடமென்பது முணர்ந்து

இங்ஙனங் கூடி நிற்கப்பட்ட குற்றத்தை யுடைய தத்துவங்களை நீக்கி பந்தவருளே தனுவாக நிற்கிற வான்ம தரிசனத்தையும் விட்டு அந்தவருளே மேலீடாகத் தற்போதம் ஜீவியாம லிற்கிறதே யான்மசுத்தியாவது. இந்த வான்மசுத்தியிலே நிற்கவே

வியாபியாயவான்பயன் றோன்றுமனறே.

எவ்விடத்து நிறைந்து நிற்கிற சிவமாகிய சுகரூபந் தனக்குத் தோன்றும். எ - று.

வி-பு. தகவிலா மலங்கணீத்த வந்நிலை. எ - து. ஆன்மதரி சன மெனவறிக.

கரணமாகா வகையதி லறிவடங்கிமன்னிட. எ - து. ஆன்ம சுத்தி யெனவறிக.

வியாபியாய வான்பயன் ஞேன்றும். எ-து. ஆன்மலாப மெனவறிக.

இதனாற் சொல்லியது அருளானது தன்னையு மான்மாவையு மலங்களையுங் காட்ட வான்மா கண்டுநிற்கிற வவதர மான்ம தரிசனமென்றும் ஆன்மா வந்த வருளோடுங்கூடித் தற்போதம் ஜீவியாம லந்த வருளே மேலீடாக மூழ்கிநிற்கிற விடம் ஆன்ம சுத்தி யென்றும் அப்படித் தற்போதம் ஜீவியாம னிற்கவே மேலான்ம லாப முண்டாமென்னு முறைமையு மறிவித்தது. (உஅ)

———o———

வேறு—இது அங்ஙனமாயி னிந்த வாத்மசுத்தியாற் பயனே தென்று வினுயதற் குத்தர முணர்த்திற்று.

இந்நிலை தன்னின் மன்னி - ஆசிரிய னுபதேசித்த விந்த மார்க்கத்திலே நிலைபெற்று,—எய்திடுங் கலாதி போதம் - ஆணவமலத்தை நீக்குதல் காரணமாகப் பொருந்தின கலாதிகளாலே யெழுப்பப்பருட தன்னுடைய விச்சாஞானக் கிரியைகளையும்,—தன்னளவு - அவற்றைக் கொண்டறியுந் தன் னுண்மையையும்,—அறிந்துநிற்குந் தகவிலாமலங்கள் - தன்னை யனுதியே பொருந்திய மயக்கத்தைச் செய்துநிற்கிற மலங்களினுடைய தன்மையையும் அருள் கண்ணுற்கண்டு,—நீத்த வந்நிலை - நீக்கிய வந் நிலையிலே,—கரணமாகாவகையதி லறிவடங்கி மன்னிட - இச்சா ஞானக் கிரியைகள் கூடாம லாத்மா ஞாதுரு வென்கின்ற தன்மையை யொழிந்து வேறின்றி யருளிலே நிலைபெற்றிட,—வியாபியாய வான்பய னொன்று மன்றே - அப்பொழுதே யெங்கு மொழிவற நிறைந்து நிற்கும் பெரிய பயனாகிய தற்காட்சி தோன்றும். எ - று.

ஞேயந்தோன்று மென்பாரு முளர். அது முன் சுத்தஞானத் தொருமுதலென்று மென்றதனானு மினிவருஞ் செய்யுளின் பொருளானும் பொருந்தாது.

---

அப்படி யந்தவருளிடமாகச் சிவத்தோடுங் கூடினவர்க ளெந்தச் சிவத்துடனே யொன்றுபட்டுப் போகிற தொழிந்து அங்கே யொரு ஞேயந்தோன்று மென்கிறது பொருளல்லவென்ற சைவரை மறுத் தருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

அடையவர் சிவமேயாகு மதுவன்றித் தோன்றுமென்ற, கடனதே தென்னின்முன்னங் கண்டிடார் தம்மைப்பின்னுந், தொடர்வரு மருளினாலுந் தோன்றுமா காணாராகி, னுடையவ னடிசேர் ஞான முணர்தலின் றணைதலின்றே. (உகூ)

ஒன்றுவுறுபய னுணராதுயிரெனி
னென்றுமுத்தியை நாடரிதென்றது.

(இ - ள்.) அடையவர் சிவமேயாகு மதுவன்றித் தோன்றுமென்ற கடனதே தென்னில் — அப்படியே சிவத்தோடுங் கூடின ஆன்மாக்கள் சிவமாய்ப் போகிற தொழிந்து அவ்விடத்து வேறுமொரு பயன் றோன்றுமென்ற காரணமேதென்னில்

முன்னங் கண்டிடார் தம்மை — முன்பு பெத்தத்திலே மலமாயா கன்மங்களோடுங் கூடி மயங்கி நிற்கையிலேலே தங்களுடையவுண்மையை யறிந்தாரில்லை. என்னவே தங்களுண்மையை யறியாதது கொண்டே சிவனையு மறியமாட்டார்கள்

பின்னுந் தொடர்வரு மருளினு — அந்தப் பெத்தத்தை நீங்கினபின்புந் தனக்குக் கிட்டுதற் கரிதாகியஞானத்தைப் பெற்று

லுந் தோன்றுமா காணாராயின் உடையவ னடி- சேர்ஞான மூண ர்தலின் றணைதலி ன்றே.

வவதரித்து சிவதரிசனப்பட்டுச் சிவபோகத் தையநுபவியா ராமாகில்

சர் வான்மாக்களையு முடிமையாக வுடைய சிவனது திருவடியைக் கூடுகைக்குக் காரண மான ஞானத்தை யறிந்தது மில்லை அந்த ஞா னத்தாலே சிவனுடைய திருவடியிலே யிரண் டறக் கூடினது மில்லையாம். எ - று.

உ-ம். ஆன்மா சிவத்தோடுங்கூடித் தற்போதங் கெட்டுச் சிவமாய் விடுமென்று சைவர் சொன்னதற்கு. பி - ம். சங்கற்ப நிராகரணத்தில் "தன்னையுமத னையுந் தன்முதற்பொருளையு-மின்ன தென்றறியா விருவருமுயங்கி-யொன்றாயுறுபய னுவப்பு - மொன் றாய்நிற்கு மிதுசிவசுத்தியே" எ-து. கண்டுகொள்க.

இது அத்தமாகாதென்று சைவரை மறுத்ததற்கு, பி-ம். சங் கற்ப நிராகரணத்தில் "இருவருங்கூடி யொரு பயனுய்த்தென்- ற்ருளினையிவ்வா றபேதிகணிலையே - யொன்றுமென்ற லன்றியுமு வப்பு - மின்றாமென்று லென்பய னியம்புக" எ-து. கண்டுகொ ள்க.

இந்த விருத்தத்தா லான்மா சிவத்தோடுங் கூடித் தற்போ தங் கெட்டுச் சிவமாய் விடுகிறதே முத்தியென்கிற சைவரை மறு த்து அப்படியானாற் பெறுவானும் பேறுமில்லையாய்ச் சாயுச்சியமு மில்லையென்னு முறைமையை யறிவித்தது. (உகூ)

---

வேறு—இது அப்படி ஞானத்தை யடைந்தவர்கண் ஞேயமா ன சிவமாவதேயன்றி வேறு மொருபயன் றோன்றுமென்பதென்னை யென்பாரை மறுத் துணர்த்திற்று.

அடைபவர் சிவமேயாகு மதுவன்றித் தோன்று மென்ற கட னதேதென்னில் - சிவஞானத்தை யடைந்தவர் சிவமாய் விடுத

லேயன்றி யவ்விடத்து மற்றுமொருபயன் றோன்றுமென்ற முறைமையென்னையென்ற ஐக்யவாதியுஞ் சிவாத்துவிதியுஞ் சொல்லில்,—முன்னங்கண்டிடார் தம்மை-முன்பே மலமாயாகன்மங்களுடனேகூடித் தேகாதிகளைத்தாமென் றபிமானம்பண்ணித் தம்மைக்காணார்கள்,—பின்னுந் தொடர்வருமருளினாலுந் தோன்றுமா காணாராயின்-அனுக்கிரகம்பெற்ற பின்புங் கிட்டுதற்கரிய விந்தஞானத்தாலுந் தன்மை தோன்றும்படி காணாராயின்,—உடையவ னடிசேர்ஞான முணர்தலின் றிணைதலின்றே-கருத்தன் றிருவடியாகிய ஞேயத்தைச் சேர்தற்குக் காரணமான சிவஞானத்தை யறிதலுங் கூடா தறியாமையாலே திருவடியைக் கூடுதலுமில்லை. எ - று.

☞ ஒன்பதாஞ் சூத்திரமாகிய ஆன்மசுத்தி முற்றிற்று.

---

மேற் பத்தாஞ் சூத்திரமாகிய ஆன்மலாப மருளிச்செய்வானெடுத்துக்கொண்டருளியது. அஃதாவது சிவனுடைய வருளோடுங்கூடித் தற்போதம் ஜீவியாமனிற்கவே யந்தச் சிவமாகிய ஞேயந் தோன்றுமாதலால் அந்தச் சிவத்தோடுங்கூடி யான்மா சிவாநுபவத்தைப் பெற்றிருக்கு முறைமையைச் சொன்னதென வறிக.

மேல்வரும் விருத்தத்துக்குத் தொந்தனையாவது அந்த ஞேயமாகிய சிவத்தோடுங்கூடி யநுபவிக்கு முறைமை யெப்படியென்று வினவின மாணவகனைநோக்கி யருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

பொற்புறு கருவியாவும் புணராமே யறிவிலாமற், சொற்பெறு மதிதம்வந்து தோன்றுமே தோன்றிநின்ற சிற்பர மதனுளுள்ள செயலறுத் திடவுதிக்குந், தற்பர மாகிநிற்றல் சாக்கிரா தீதந்தானே. (௫0)

நீக்கமில்சிவத்துட னிலைபெறநிற்குஞ்
சாக்கிராதீதத் தன்மைசார்ந்தது.

(இ-ள்.) பொற்புறு கருவி யாவும் புணராமே — அந்தச் சிவத்தோடுங்கூடி யநுபவிக்குமவதரத்துப் பொலிவினை யுடைத்தாகிய கருவிகள் முப்பத்தாறும் பொருந்தி விகற்பியாதே. அதுவன்றியும்

அறிவிலா மற்சொற்பெறுமதீதம் வந்து தோன்றுமே — அறியாமை யென்னுஞ் சொற்பெற்றிருக்கிற வாணவமலத்தால் மறைப்புண் டதீதாவத்தைப்பட்டுக் கிடவாதே. இங்ஙனஞ் சொல்லப்பட்ட சகலாவத்தையுங் கேவலாவத்தையும் விட்டு நீங்கின வவதரத்து

தோன்றிநின்ற சிற்பர மதனுழுள்ள செய லறுத்திட வுதிக்குந் தற்பரம் — ஆன்மாவி னிடத்திலே யநாதியே கூடிநின்று பக்குவத்திலே பிரகாசிக்கப்பட்ட மேலான வருளானது காட்டத் தான் காண்கிற காட்சியைவிட்டு அந்தஞானந் தானாய்நிற்கவே யந்தஞானமாகிய வருளுக்கு முதலா யிருக்கப்பட்ட சிவமாகிய ஞேயந்தோன்றிப் பிரகாசியாநிற்கும்

ஆகிநிற்றல் சாக்கிராதீதந்தானே — அங்ஙன முநயஞ் செய்யப்பட்ட வந்தச்சிவத்தோடுங்கூடிச் சிவபோகமாய் நிற்கிறதுதானே சாக்கிரத்தி லதீதம். எ-று.

ரு-ம். பொற்புறு கருவியாவும் புணராமே. எ-கு. கருவிகள் முப்பத்தாறும் பொருந்தி விகற்பியாதே யென்று பொருட்படுத்தினத்துக்கு வழியே தென்னில் சகலாவத்தைப்பட்டு நில்லாதே என்பதுமன்றி யாவும் என்றதட்டிஞலே கலையாதிமண்ணுந்தமாயுள்ள தத்துவ முப்பத்தொன்று நீங்கலாகச் சுத்தமாயையிற் றேற்றமாயுள்ள சிவதத்துவங்கள் நீங்கியே முத்தியென்பதைப்பற்றி

யெனவறிக. அப்படி யந்தச்சிவதத்துவங்க ளைந்தையுங் குறித்துச் சொல்லவேண்டுங் காரண மேதென்னில் அந்தச் சிவதத்துவங்க ளைந்தினுந் தத்துவகத்தாக்க ளொவரு மதிஷ்டித்து நிற்கையால் முத்தியைப்பெறு மவர்களுக்குப் பிரமசாயுச்சியமென்றும் விஷ்ணு சாயுச்சியமென்றும் உருத்திரசாயுச்சிய மென்றும் மகேஸ்வர சாயுச்சிய மென்றும் சதாசிவ சாயுச்சியமென்றும் விந்து சாயுச்சிய மென்றும் நாதசாயுச்சியமென்றும் வருகையா லவையெல்லாஞ் சுத்தமாயையிலடங்கி வருகையாலே யவை சைவசித்தாந்தத்துக்கு விரோதமாகிய சமயிகள் கருத்தைப்பற்றி நிற்கையாலு மதுபதமுத்தியிலே கூடிவருகையாலு மதுசாயுச்சியத்துக் காகாதபடியாலே யதனையாகாதென்றதெனவறிக. அப்படிச் சுத்ததத்துவங்களு நீங்கியே சாயுச்சியமென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "மூவகை யணுக்களுக்கு முறைமையால் விந்துஞான, மேவின தில்லையாகில் விளங்கிய ஞானமின்று, மோவிடவிந்துஞான முதிப்பதோர் ஞானமுண்டேற், சேவுயர் கொடியினான்றன் சேவடி சேரலாமே." என்பதனுள் "விந்துஞானமோவிட" என்றுரையித்துப் பொருள்கூட்டி விந்துநாதமுதலாயுள்ள தத்துவங்களு நீங்கியே முத்தி யென்றதெனவறிக.

இனி தத்துவங்களுந் தத்துவகர்த்தாக்களு நீங்கியே முத்தி யென்பதற்கு. பி-ம். புராணசாரத்தில். "பாரணவும் புலனைந்துங் கரணமொன்றும் படராமே நடுநாடி பயிலுநாதங், காரணபங்கயன் முதலா னைமவர்வாழ்வுங் கழியுநெறி வழிபடவுங் கருதிமேலைப், பூரணமெய்ப்பரஞ்சோதி பொலிவுநோக்கி." எ-ம். திருவாசகத்தில். "ஆட்டுத்தேவர்தம் விதியொழித்தன்பா லையனேயென் றுன்னருள்வழியிருப்பேன்." எ-ம். தத்துவ முப்பத்தாறு நீங்கியே முத்தியென்பதற்குக் கோயிற்புராணத்தில். "தரைமுதலாறு றெனவரு நாதாதியின்மீதே." எ-ம். திருக்களிற்றுப் படியாரில்,

"நாதாந்தத்தே யிருப்பர்." எ-ம். திருப்புகழில் "விந்துநாதவோசைக்குத் தாரமானது." எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

இனி யந்தச்சுத்ததத்துவங்கள் சுத்தமாயையிற் றோற்றமாகையாற் சுத்தமாயையைப்பற்றி நின்றவிடம் பதமுத்தியாகையால் பதமுத்தியைச் சாயுச்சிய மென்கிற சமயிகள் கருத்தாமென்று சொன்னதற்கு. பி-ம். சங்கற்ப நிராகரணத்தில் சிவசமவாதியை மறுக்கு மவசரத்தில் "செடியுடலழுந்துகாக் குடிலைகொடுக்குமென்-றொருதிலையே பேதாய்பகட்டுர - லொளிர்சிலைமுச்சித் தளிரெனுமிதுதகு - மிச்சாரூப நச்சினைரென்னின் - மும்மலத்தேதுமின்மையதன்றே - யிதுவளர்முத்திப் பதமெனவிளம்புவர்." எ-ம். சித்தியாரிலும். "அநாதியுட லொன்றினைவிட் டொன்றுபற்றிக் கன்மாலா யழிந்துவருதலா லந்தமில்லைப், யிறுதியருள் பெற்றவர்கள் நித்தவுருவத்தைப் பெற்றிருக்கை முத்தியெனிற் பெறும்பதமேயிதுவு, மிறுதியிலை யிதுதானுங் காயமுண்டே, லிருங்கன்மமாயைமல மெல்லாமுண்டா, மறுதிதருமுடலாதி காரியத்தாலநாதி மலமறுக்கு மருந்தற்று லுடன்மாயுங்காணே." என்பதனுள் "நித்தவுருவத்தைப் பெற்றிருக்கை முத்தியெனிற் பெறும்பதமே யிதுவும்," எ-து. கண்டுகொள்க. என்றிங்ஙன முத்தியைப்பெறுமிடத்துச் சுத்ததத்துவ நீங்கியே முத்தியாகையாற் றத்துவ முப்பத்தாறு நீங்கியே முத்தியென்பது கருத்து. இதற்கு. பி-ம். ஞானாமிர்தத்தில். "முப்பதுமூதரை மூவிரண்டோவா - வொப்பிறத்துவ மொரீஇயதிபமென்." எ-ம். திருமந்திரத்தில்." முப்பதுமாறும் படிமுத்தியேணியா, யொப்பிலாப் பேரண்டத் துள்ளில்வெளிபுக்குச், செப்பவரிய சிவங்கண்டு தாந்தெளிந், தப்பரிசாகி யமர்ந்திருந்தானே." எ-ம். கண்டுகொள்க. ஆகையால் கருவியாவும் புணராமையென்பது ஆன்மதத்துவ மிருபத்துநாலும் வித்யாதத்துவமேழுஞ் சிவதத்துவமைந்தும் ஆகத் தத்துவ முப்பத்தாறுமெனவறிக்.

இனி யறிவிலாமற் சொற்பெறு மதீதம்வந்து தோன்றுமே. எ-து. அறியாமையென்கிற வதீதாவத்தைப்பட்டுக் கிடவாதேயென்று பொருட்படுத்தினத்துக்கு வழியேதென்னில் முத்தியைப் பெறுமவர்கள் தத்துவ முப்பத்தாறையுங் கழன் றந்தச்சிவத்தோடேங்கூடிச் சாக்கிராதீதம் புரிந்திருக்கு மவதரத்துக் கருவிகளெல்லாங் கழன்றவிடங் கேவலத்துக் கிடமாகையா லறியாமையோடேங்கூடிக் கேவலப்பட்டு வீழாதேயென்று சொன்னதென வறிக. அன்றியு மான்மா முத்தியிற் பாடாணம்போலே கிடக்குமென்று சொல்லுகிற அகச்சமயத்திற் பாடாணவாதி புறச்சமயத்திற் பிரபாகர னென்னுமிவர்கள் கருத்தைப்பற்றியு மதனையாகாதெனவு மாமெனவறிக. அவர்க ளப்படிச் சொன்னதற்கு. பி-ம். சங்கற்ப நிராகரணத்தில். "காட்சியென்னக் காணுத்துயர - மாட்சியையுமுத்தி யெனவகுத்தனரே." என்று பாடாணவாதி சொன்னதற்குக் கண்டுகொள்க.

அதனையாகாதென் றவனை மறுத்ததற்கு. பி-ம். சங்கற்பநிராகரணத்தில். "காட்சியென்னக் காணுத்துயர - மாட்சியைமுத்தி யெனவகுத்துரைக்கிற் - கரணபாவ மரணங்கருமர - மேய்ந்தவர்முத்தி சேர்ந்தவரன்றே - யனையகதிக்கோர் முனைவரும்வேண்டா - தனிதருதுயர மெனுமிறுதிடமே - பாடாணத்திற் கூடா முத்தி" எ-து. கண்டுகொள்க.

மற்றப் புறச்சமயத்திற் பிரபாகரன் முத்தியிற் பாடாணம்போலக் கிடக்கு மென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "அருஞ்செயலின்பாவத்தே பூர்வமெனு மதுதோன்றித், தருஞ்செய லொன்றின்றியே தான்பலிப்ப தாகுமது, வருஞ்செய லொன்றின்றியே மண்சிலைபோலாமுத்தி, தருஞ்செயலு மெனவுணர்ந்து தாரணிமேலவன்சாற்றும்." எ-து. கண்டுகொள்க.

அதனை யாகாதென் றவனை மறுத்ததற்கு வழியேதென்னில் ஆன்மா வப்படி முத்தியிற் பேதங்கெட்டுப் பாடாணம்போற்

கிடக்குமென்றால் முத்திபெற் றநுபவிக்கப் போதமில்லாதபொ ழுது அநுபவமாகாதபடியா லதனை யாகாதென்ற தெனவறிக. அப்படிப் பிரபாகரனை மறுத்ததற்கு. பி-ம். சித்தியாரில். "ஆநந் தங்கதியென்ன வறிவழிகை வீடென்கை, யூனம்பின் னுணர்வழிந் தோர்க் குளதாகுமோமுத்தி, தானிங்குச் சிவப்பொழியத் தழனி ற்குமாறில்லை, ஞானங்கெட் டுயிர்நிற்கு மெனுமுரைதா னண்ணு தால்." எ-து. கண்டுகொள்க. அன்றியு முத்தியிலான்மா போதங் கெட்டுப் பாடாணம்போற் கிடக்குமென்பது சித்தாந்தப் பொரு ளுக்கு விரோதமென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "கரணங்கள் கெடவிருக்கை முத்தியாமென்னிற் கதியாகுஞ் சினைமுட்டை கரு மரத்தினுயிர்கள், மரணங்கொண்டிடவுறங்க மயங்கமூர்ச்சிக்க வாயுத்தம்பனைபண்ணை வல்விடத்தைதயடையச், சரணங்கள் புகுதி மூற்போற் றனையடையுஞ்சமாதி தவிராது மலமிதுவும் பசுஞான மாகு, மரணங்க ளொரித்தவன்றன் னடியையறிவிறந்தங் கறிந்தி டீர் செறிந்ததுக ளகற்றிடீரோ." எ-து. கண்டுகொள்க.

இனி தோன்றிநின்ற சிற்பரமதனுனுள்ளச் செயலறுத் திடவுதிக்குந் தற்பரம் என்றபதத்திற் தோன்றிநின்ற சிற்ப ரம். எ-கு. தன்னிடத்திலேகூடிப் பிரகாசித்து நிற்கிற ஞான மென்று பொருட்படுத்தினத்துக்கு வழியேதென்னில் அஃதா யது கண்களுக்கு ஆதித்தப்பிரகாசங் காட்டாகநின்றாற் போலச் சர்வான்மாக்களுக்கு முயிர்க்குயிராய்நின் றறிவிக் கிறது பூரணமாகிய திருவருளை யெனவறிக. அப்படிக்கண் களுக் காதித்தன் காட்டாகநின்றாற்போலத் திருவருள்ஞா னநின் றான்மாக்களை யறிவிக்குமென்பதற்கு. பி-ம். சித்திய ரில். "மருளினை யருளால்வாட்டி மன்னுயிர்க் களிப்பன்கண் கட், கிருளினை யொளியாலோட்டு மிரவியைப் போலவீசன்." எ - து. கண்டுகொள்க.

இனி யதனானுள்ளச் செயலறுத்திட வுதிக்குந் தற்பரம். எ-கு. ஆன்மா வந்த வருளானது காட்டத் தான் காண்கிற காட்சியை யிழந்து ஞானந் தானாய் நிற்கவே யந்த ஞானத்துக்கு முதலாகிய சிவமாகிய ஞேயந் தோன்றுமென்று பொருட்படுத் தினத்துக்கு வழியேதென்னில் அந்த நிஷ்களசொருபமாயுள்ள சிவமானது தன்னை யான்மபோதத்தாற் சுட்டியறியுநாளெல்லாங் கூடி நிற்கச்செய்தேயு மறைந்துநின் றந்த வான்மாவானது தன் செயலறுதியைக்கண்டு தற்சேட்டை கெட நிற்குமவதரத் தந்தச் சிவம்பிரகாசிக்கையா லப்படிச் சொன்னதெனவறிக. இவை யிரண்டிக்கும். பி-ம். சிவஞான போதத்தில். "நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுளமுண்டாதல், தானெனவொன் றின்றியே தானதுவாய்-நானென னவொன், றில்லென்றுதானே யெனுமவரைத் தனனடிவைத், தில்லென்று தானாமிறை." எ-து. கண்டுகொள்க. அன்றியும் திருக்களிற்றுப்படியாரினும். "உள்ளமுதலனைத்து மொன்றவருகவரி, னுள்ளமுருகவுந் தானாந - தெள்ளி, யுணருமவர் தாங்க ளுளராகிலென்றும், புணரவரநில்லாப் பொருள்." எ-து. கண்டுகொள்க.

இனி தற்சேட்டை கெடநின்றதே சிவானுபவம் என்பதற்கு. பி - ம். தேவாரத்தில். "தன்னைமறந்தா டன்னாமங்கெட்டா டலைப்பட்டா ணங்கைதலைவன்றாளே." எ-ம். திருவாசகத்தினும். "ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட் டென்னுள்ளமும்போய், நான்கெட்டவாபாடித் தெள்ளேணங்கொட்டாமோ." எ - ம். கண்டுகொள்க. அன்றியும் திருவள்ளுவர். "யானெனதென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க், குயர்ந்தவுலகம் புகும்" என்பது மிப்பொருட்பற்றி யெனவறிக.

இனி யாகிநிற்றல் சாக்கிராதீதந்தானே என்றபதத்திற் ஆகிநிற்றல். எ-கு. ஆன்மா வந்தச்சிவத்தோடுங்கூடிச் சிவமாய் நிற்கவென்று பொருட்படுத்தினதற்கு வழியேதென்னில் அப்படிச்சொன்ன தந்தச் சிவத்தோடுங்கூடிப் பிறிவற நிற்கவெனவறிக. அஃதெங்ஙனெயென்னில் ஆதித்தப்பிரகாசங் காட்டாகப் பிரபஞ்சரூபத்தைப் பற்றிநின்ற கண்ணானது அந்தவுருவங்களைவிட்டந்தப்பிரகாசமிடமாகச் சென்றந்தப்பிரகாசத்துக்கு முதலாயிருக்கிற வாதித்தனைக்கண்டு பிறிவறநின்றாற்போல வான்மாவு மருளிடமாகக் கூடிநின்று சத்தாதிவிடயங்களைப் புசித்துநிற்கச்செய்தே யதனையும் விட்டு மறுவிகாரமுமடங்கி யந்தவருளுக்கு முதலாயிருக்கிற சிவத்தோடு மந்த வருள்காட்டாகச்சென்று கூடிப் பிறிவற் றிரண்டறநிற்கையாலப்படிச்சொன்னதெனவறிக. அப்படிப் பிரபஞ்சரூபத்தைப் பற்றிநின்ற கண்ணானது திரும்பியாதித்தனை நோக்குமளவி லந்தப்பிரபஞ்சரூபங்கள் தெரியாததுபோலவென் றுபமானங்கூறினதற்கு. பி-ம். ஞானாமிர்தத்தில்." திருநெடுங்கண் ணுதயனுட்டத்-தயமலான்றின்மைபோலவும்." எ-று. கண்டுகொள்க. அன்றியு மான்மா சிவத்தோடுங்கூடிச் சிவமாய் நிற்குமென்பதற்கு. பி-ம். திருவாசகத்தில். "அவமாயதேவ ரவகதியிலழுந்தாதே, பவமாயங்கெடுத்தென்னை யாண்டுகொண்ட பரஞ்சோதி, நவமாய செஞ்சுடர் நல்குதலுநாமொழிந்து, சிவமானவாபாடித் தெள்ளேணங்கொட்டாமோ." எ-று. கண்டுகொள்க. என்னவே சிவமாயென்றது ஆன்மாத் தற்போதமாய் நிற்பதுஞ் செய்யாமற் றானென்கிற முதல்கெடுவதுஞ் செய்யாமற் றற்போதங்கெட் டந்தச்சிவத்தோடுங்கூடி யிரண்டறநின் றநுபவித்ததெனவறிக. அப்படிச் சிவமாயென்றசொல் அந்தச்சிவமாவதுஞ் செய்யாமற் பிறிந்துநிற்பதுஞ் செய்யாமல் நிற்கை

யென்பதற்கு. பி-ம். சங்கற்பநிராகரணத்தில். "ஆறுயெ
ன்ப தனைத்துமவ்வகை-தாறுகாமையைச் சாற்றிடுமென்க-
தானேயெனுமித் தனியேகார-மழிந்திலாதுவே யாய்ந்தில
ரதுவிட்-டொழிந்திலர்பிறிதில ரெனுமிவையுணர்த்தும்."
எ-து. கண்டுகொள்க.

இனி சாக்கிராதீதந்தானே. எ-கு. கேவலசகல மிர
ண்டையு நீங்கிநிற்கவென்று பொருட்படுத்தினத்துக்கு வழி
யேதென்னில் அஃதாவது மூலாலவத்தைப் பட்டாணவமல
த்தான் மறைப்புண் டறியாமையாய்க் கேவலாதீதமாய்க்
கிடப்பதுஞ் செயயாமல் உட்கரணம் புறக் கரணங்களோ
டுங் கூடிச் சகலனாய்ச் சத்தாதி விடயங்களோடுங் கூடி
ஜீவிப்பதுஞ் செய்யாம னின்ற விடமெனவறிக. இதற்கு.
பி-ம். சித்தியாரில். "அறியாமையறிவகற்றி யறிவினுள்ளே
யறிவுதனையருளினா லறியாதேயறிந்து, குறியாதேகுறித் தந்
தக் கரணங்களோடுங் கூடாதேவாடாதே குழைந்திருப்பை
யாயிற், பிறியாத சிவந்தானே பிறிந்துதோன்றிப் பிரபஞ்சவே
தமெல்லாந் தானாய்த்தோன்றி, நெறியாலே யிவையெல்லா
மல்லவாகி நின்றென்றுந் தோன்றிடுவ னிராதாரனாயே."
எ-ம். தேவிகாலோத்திரத்தில். "திருந்தகு சமாதியைச் செ
ய்யுங் காலத்துக், கருத்தெழுந் தடங்காது கலங்குமாயி
னும், வருத்தமாய் நித்திரை மருவுமாயினுந், திருத்தறி வுறு
த்தாத்தன் னிலையிற்சேர்க்கவே." எ-ம். "நித்திரையும் பரா
க்கினையு நீக்கிச், சித்தமொருநிலையு நீங்காம னிறுத்திக்கொ
ண்டால்." எ-ம். கோயிற்புராணத்தில். "கரணமனைத்தும்
புலனிவைகாணு கைவிட்டால், மரணமெமக்கிங் கிறுதமி
யேம்வாழ் வருண்மாறிற், திரணமுமெய்ச்சனு சலமிலதெ
ன்று லொன்றுனின்,, புரணமெனக்கொண் டருளுகவென்
றார் நினைறார்கள்." எ-ம். திருக்களிற்றுப்படியாரில். "உண

ராதே யாது முறங்காதே யுன்னிப், புணராதே நீபொதுவே நிற்கில்." எ-ம். திருமந்திரத்தில். "நினைப்புமறப்பு மிலாதவி டத்தே, வினைப்பற் றறுக்கும் விமலனிருப்பன், வினைப்பற்ற றுக்கும் விமலனைநாடி, நினைக்கப் புகிலவ னிளியனுமே." எ-ம். "இரவும்பகலு மிலாதவிடத்தே, குரவஞ்செய்கின்ற குழலியைநாடி, யரவஞ்செய்யாதவ ளோடுஞ்சந்திக்கிற், பர வஞ்செயாவகைப் பாலனுமாமே." எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க. ஆகையாற் கேவலசகல மிரண்டினுங் கூடாம லந்தச் சுத்தத்தோடுங் கூடி நின்றவிடமே சாக்கிராதீத மென வறிக. அதற்கு வழி யேதென்னில் தத்துவ முப்பத்தாறோடுங் கூடி நிற்கச் செய்தே யவையிற்றோடுங் கூடி ஜீவிப்பதுஞ் செய்யாம லறிவுகெடுவதுஞ் செய்யாமல் நின்ற விடமெனவறிக. இதற்கு. பி - ம். திருமந்திரத்தில். "நின்றவச் சாக்கிரந் துரியம தாலுல், மன்றனு மங்கேமணஞ்செயா நின்றிடு, மன்றன் மணஞ்செயின் மாயையு மாய்ந்திடு, மன்றே யிவனு மவனென லாமே." எ-ம். சிததியாரில். "சாக்கிரத் தே யதீதத்தைப் புரிந்தவர்க ளுலகிற் சர்வசங்க நிவிர்த்தி வந்த தபோதனர்க ளவர்கள், பாக்கியத்தைப் பகர்வதுவென் னிம்மையிலே யுயிரின் பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவரன்றே." என்றது மிப்பொருட்பற்றி யெனவறிக. அன்றியு மிதனைக் குருமுகாந்திரமாகப்பெற் றநுபவித்த பெரியோர்கள் திருவாக்கினுங் கண்டுகொள்க. அஃதாவது "அதிரைம்புலன் கரிக ளாயுமணந்திண்டோர், கதிரொன்றியகுணமாக் காலாட் - சதுரங்கம், பூட்டினாற்போலிருக்கப் புக்கடிநிற்கும்புதுமை, காட்டினா னம்பலவன்காண்." என்றமையா லிதனை யிருவினையொப்புஞ் சத்திநிபாதமு முண்டான பக்குவான்மாக்கள் ஞானாசாரியனிடத்திலே ஞானவுபதேசத்தைப் பெற்றுச் சாத்திரங்களை யோதியுணர்ந்து

பதிபசுபாசத்தின் வழக்குகளையும் பிறித்தறிந்து ஞானசாத்திரங்களைக் கேட்டுஞ் சிந்தித்துந் தெளிந்தும்வரு மவதரத்து நிஷ்டாபரராகைக்குப் பக்குவரானவர்க ளந்தவாசாரியனிடத்திலே யுண்மையைப்பெற் றநுபவத்தி லறிகிறதொழிய நூல்களினா லறியப்படாதாகையா லந்தவுண்மையை யாசாரியன் கண்ணாகக் கண்டுகொள்க. அப்படியாகவுண்மையை யாசாரியன் முகாந்திரமாக வறிகிறதொழிய நூல்களினாலே யறியப்படாதென்பதற்கு. பி-ம். ஔவையார். "நல்லன நூல்பல கற்கினுங் காண்பரிதே-யெல்லையிலாதசிவம்." எ-ம். திருமந்திரத்தில். "காட்டுங்குறியுங் கடந்தவர்காரண, மேட்டின்புறத்தி லெழுதிவைத்தென பயன், கூட்டுங்குருநந்தி கூட்டிடினல்லது, வாட்டின்கழுத்தின தாகாரத்தற்றே." எ-து. கண்டுகொள்க. அன்றியுங் கேட்டுஞ் சிந்தித்துந் தெளிந்து நின்றாலு நிஷ்டைகூடும்பொழு தாசாரியனாலே கூடவேணுமென்பதற்கு பி-ம். சித்தியாரில். "கேட்டலொடு சிந்தித்தல் தெளிதல் நிட்டை கிளத்தலென வீரிரண்டாங் கிளக்கில்ஞான, வீட்டை யடைந்திடுவர் நிட்டை மேவினோர்கள் மேவாது தப்பினவர் மேலாய பதங்கட், கேட்டிய புண்ணியநாதராகி யின்ப மினிதுநுகர்ந் தரனருளா லிந்தப்பாரே, னாட்டியநற் குலத்தினில்வந் தவதரித்துக்குருவால் ஞானநிட்டை யடைந்தடைவர் நாதன்றாளே." எ-து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது சிவனுடைய வருளிடமாகநின்று ஆன்மசுத்திபண்ணி நிற்குமவர்க ளந்த வருளுக்கு முதலாகிய சிவத்தோடுங்கூடி ஞேயத்தழுந்தி யான்மலாபட் டிறந்திருக்குமிடத்துக் கேவலசகலமிரண்டு நீங்கிச் சுத்தத்தோடுங் கூடுகைக்குத் தத்துவ முப்பத்தாறோடுங்கூடி நிற்கச்செய்தே யவையிற்றோடுங்கூடி ஜீவிப்பதுஞ்செய்யாம லறிவுகு

லைவதுஞ் செய்யாமல் நிற்கிறதே சாக்கிரத்தி லதீதமென்னு முறைமையை யறிவித்தது. (௯௧)

---

வேறு—இது பத்தாஞ் சூத்திரமாகிய வாத்மலாபத்தைச் செய்யுட் பத்தினா லுணர்த்துவான் றொடங்கினார் அவற்றுளி ஃதந்த ஞேயமான சிவத்துடனே கூடி யனுபவிக்குமுறைமை யுணர்த்திற்று.

பொற்புறு கருவியாவும் புணராமே - பொலிவினையுடைய கருவிகள் முப்பத்தாறும் பொருந்தி விகற்பியாமல்,—அறிவிலாமைச் சொற்பெறு மதீதம்வந்து தோன்றுமே - அறிவில்லாமையையுடைய தென்னுஞ் சொல்லைப் பெறுகின்ற வதீதம் வந்து கூடி மயங்காமல் தோன்றநின்று,—சிற்பர மதனா லுள்ளச் செயலறுத்திட - தன்னிடத்திலே பிரகாசித்து நிலைபெற்ற மேலான ஞானசத்தியாலே யாத்மாவின் செயலாகிய வகம்பிரம ஞானத்தை யறுத்திட,—உதிக்கும் தற்பரம்-அப்பொழுதே யந்தமேலாகிய சிவம் பிரகாசியாநிற்கும்,—ஆகிநிற்றல் சாக்கிராதீதந்தானே - அங்ஙன மந்தச்சிவன் தானேயா யாகாயத்தில் வாயுத் தம்பித்தாற் போலவு மப்புவினுப்புப்போலவு மேகிபாவம்பிறந்துநிற்றலே சாக்கிராதீதம் எ-று.

உள்ளம் ஆத்மா. உள்ளசெயலென்று பாடமாக்கிக் காட்டுந்தன்மையாகிய ஞானசத்தியின் செயலுங் காணுந்தன்மையாகிய தன்செயலு மவிழ விருக்கவென்பாருந் தன்னுடைய விச்சாஞானக்கிரியை யடங்கலையு மொழிக்கவென்பாருமுளர்.

---

அப்படியருளிச்செய்த முறைமையிலே கரணங்களொடுங்குமோவென்று பார்த்தளவில் ஓராவதரத்திலு மொடுங்குகைக்கு வழியில்லை இனியடியேன் தானாகவறிந் தொடுக்கிக்

கொள்ளுவது பயனோ தற்சுபாவத்திலே யொடுங்குகிறது
பயனோவென்ற மாணவகனைநோக்கி யருளிச்செய்வானெடு
த்துக்கொண் டருளியது.

ஒடுங்கிடா கரணந்தானே யொடுங்குமா றுணர்
ந்தொடுக்க, லொடுங்கிடு மென்னின்ற தொடங்கிடா
கரணமெல்லா, மொடுங்கிட வொடுங்கவுள்ள வுணர்வு
தானழியும்வேறு, யொடுங்கிடலன்றிமற்ற வுண்மை
யை யுணரொணாதே. (௩௧)

இந்நிலைகரண மிறந்தவிடமெனு
மந்நிலைபழுதா மதுவேறென்றது.

| | |
|---|---|
| (இ - ள்.) ஒடுங்கிடா கரணந் தானே | கரணங்கள் தானாக வொடுங்கமாட்டாது |
| ஒடுங்குமாறுணர்ந்தொடுக்க வொடுங்கிடுமென்னின் | கரணங்களொடுங்கும்வழியை யறிந்து ஒடுக்க வவையொடுங்குமென்னில் |
| நின்ற தொடங்கிடா | நீயறிந் தொடுக்குகையிலே யறிகைக்குத் துணைக்கருவிகளாயுள்ளது ஒடுங்குதலில்லையாம் |
| கரண மெல்லா மொடுங்கிட வொடுங்க | தத்துவங்களெல்லா மொடுங்கத் தக்கதாக வொடுங்கினபொழுதே யான்மபோதமொடுங்குமென்னில் அப்பொழுது |
| உள்ள வுணர்வு தானழியும் | பழைய சிற்றறிவுதானு மில்லையாய்ச் சுத்தகேவலமே முத்தியென்கிற பாடாணவாதியத்தமாய்விடும். அப்படியானா லந்தச் சிவத்தை யறிந் தநுபவிக்கும்வழி யெங்ஙனேயென்னில் |

வேறாயொடு இந்தக்கரணங்க ளந்நியமாய் விடும்படி ங்கிடலன்றி ம யுனக்குத் தரிசனமான ஞானத்தோடுங் ற்றவுண்மையை கூடி நின்றாலொழிந்து அந்தச்சிவத்தையு யுணரொணாதே. றிந் தநுபவிக்கவொண்ணாது. எ - று.

உ - ம். கரணங்களெல்லா மொடுங்கின விடம் பாடாணவாதி யத்தமாம் என்பதற்கு. பி - ம். சங்கற்ப நிராகரணத்தில் "கரணாபாவ மரணங்கருமர - மெய்ந்தவர்முத்தி சேர்ந்தவரன்றே." எ-ம். சித்தியாரில் "கரணங்கள்கெடவிருக்கை முத்தியாமென்னிற் கதியாகுஞ் சினைமுட்டை கருமரத்தினுயிர்கள், மரணங்கொண்டிடவுறங்க மயங்கிமூர்ச்சிக்க வாயுத்தம்பனை பண்ண வல்விடத்தையடைடச், சரணங்கள் புகுமிழற்போற் றனையடையுஞ்சமாதி தவிராது மலமிதுவும் பசுஞானமாகும்." எ- து. கண்டுகொள்க.

வேறாயொடுங்கிடனன்றி என்றதற்கு. பி - ம். சித்தியாரில் முன்னி லுதாரணக்குறை "அரணங்களெரித்தவன்றனடியையறிவிறந்தங் கறிந்திடீர் செறிந்தருக ளகற்றிடீரே." எ - து. கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஆன்மா தத்துவாதீதனாய் நின்று சிவாநுபவத்தை யநுபவிக்குமிடத் தந்தத் தத்துவங்கள் தானாக வொடுங்காதென்று மறிந்தொடுக்கிக்கொள்ளு மவதரத்து நீயறிந் தொடுக்குகையினாலே யறிகைக்குத் துணைக்கருவியாயுள்ள தொடுங்காதென்றும் ஆணவொடுங்குகைக்கு வழி யெங்ஙனெயென்று வினவ விவை யிரண்டினுங் கூடாமலொடுங்குகைக்கு வழி வேறேயென்று முறைமையை யறிவித்தது. (நக)

---

வேறு—இது கருவிகடாமே யொடுங்குதலோ வடியேனறிந்தொடுக்குதலோ பயனென்று மாணாக்கன் வினவ வவற்

றை மறுத்துப் பாசஞானம்போல லன்றிச் சிவனை யறியவொ ண்ணாதென்ப துணர்த்திற்று.

ஒடுங்கிடா கரணந்தானே - தத்துவங்கள் சடமாகை யாலே தாமே யொடுங்கமாட்டா,—ஒடுங்குமா றுணர்ந்தொ டுக்க வொடுங்கிடு மென்னின்-ஒடுங்கு முறைமையை யானறி ந்தொடுக்க வவை யொடுங்குமென்று சொல்லின்,—நின்ற தொடுங்கிடா-நீ யறிந்தொடுக்குதலி னுன்னுடைய விச்சாஞா னக்கிரியைகளாய் நிலைபெற்ற சத்தி யொடுங்காது. ஆகவே யவையு மொடுங்கா,—கரணமெல்லா மொடுங்கிட வொடுங்க வுள்ள வுணர்வுதா னொழியும்-கரணமெல்லா மொடுங்கும் படி நானொடுங்குவேனென்று நீ சொல்லி னுனக்குள்ள வறி வுங்கெடும். ஆனாற் கரணங்களை யொடுக்கிச் சிவனைத் தரிசி க்கும்படி யெப்படியென்னின்,—வேறு யொடுங்கிடி னன்றி மற்ற வுண்மையை யுணரொணாதே - அத் தத்துவங்க ளன்னி யமாக வுனக்குத் தரிசனமான ஞானத்திலே யுன்றன்மை யழியாதபடி யொடுங்கி யந்த ஞானமயமாய் நின்றா லொழிந் துச் சிவத்தைத் தரிசிக்கவொண்ணாது. எ - று.

இழிவு சிறப்பும்மை தொக்கது- மற்றசை. நின்றதொடு ங்கிடா வென்ப தொருமை பன்மை மயக்கம்.

---

அப்படி யந்தத் தத்துவங்களோடுங் கூடி ஜீவிப்பது மன்றிக் கேவலப்பட் டொன்று மறியாமற் கிடப்பது மன்றி வேறுயொடுங்கி யந்தச் சிவனைப் பெறுகைக்கு வழி யெப்ப டியென்று வினவ மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

பற்றிடுங் கருவியாவும் படர்ந்துணர் வெளிக்குங்காலை
யுற்றுயிர் நிலவொன்றி னுணர்வினி னுண்மையாகு

மற்றது பகல்விளக்கின் மாய்ந்திட வருவதுண்டேல்
பெற்றிடு மதனைமாயப் பிறப்பினை யறுக்கலாமே. ௩௨

பற்றிடுங் கருவிகள் பகல்விளக்கெனவே
பொற்பழிவுறவருள் பொருந்துமென்றது.

| | |
|---|---|
| (இ-ள்.) பற்றிடுங் கருவியாவும் படர்ந்துணர் வளிக்குங் காலை | ஆன்மா கூடத்தக்க பிரபஞ்சத்தோடுங் கருவிகளெல்லாங் கூடி விரிந்தறிவிக்குமிடத்து |
| உற்றறிந் திடுவ தொன்றினுணர்வினி னுண்மையாகும் | அந்தத் தத்துவங்களோடுங் கூடி யதுவதுவாய் நின்றறிந்து ஜீவிக்கிறது ஆன்ம போதத்தினுண்மையாம் |
| மற்றது பகல் விளக்கின் மாய்ந்திட வருவதுண்டேல் | அந்தக் கருவிகளு மான்மாவு மாதித்தன் சந்நிதியிலெரிகிறவிளக்குப் பிரகாசங் கெட்டு நின்றறிந்தாற்போலத் தந்தம் நிலைகுலையாம லொற்கச்செய்தே தம்மிற் கூடி ஜீவியாதபடி யருட்பிரகாச மேலிடத்தக்க துண்டாமாகில் |
| பெற்றிடு மதனை | ஆன்மா வந்தச்சிவாநுபவத்தைப் பெறுவதுஞ் செய்யும். அப்படிப் பெற்றால் |
| மாயப் பிறப்பினை யறுக்கலாமே. | மயக்கத்தைச் செய்கின்ற ஜநநத்தையும் போக்கலாம். எ-று. |

று-ம். மற்றதுமென்ற வும்மைகொண்டே ஆன்மாவுங் கருவிகளு மெனவறிக. என்னவே கருவிகளு மான்மாவும் பகல்விளக்குப்போல் நின்றே சிவனைப் பெறவேணுமென்பது

மிரண்டுங்கூடி ஜீவியாம னிற்கவேணு மென்பதுங் கருத்து. இதற்கு. பி-ம். திருக்களிற்றுப்படியாரில். "அன்றிவரு மைம்புலனு நீயுமசையாதே, நிறைபடிநிற்க மூன்னிற்கும்." எ-து. கண்டுகொள்க.

பகல்விளக்குப் போலவென்பது தற்போதங் கெட்டுநிற்கை யெனவறிக. இதற்கு. பி-ம். திருவாசகத்தில். "வானகெட்டுமாருத மாய்ந்தழனீர்மண்கெடினுந், தான்கெட்டலின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக், கூன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட் டென்னுள்ளமும்போய், நான்கெட்டவாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ" எ-ம். திருமந்திரத்தில். "ஒத்திட்டிருக்க வுடம்போடுயிர்தான், செத்திட்டிருப்பர் சில சிவயோகிகள்" எ-ம். கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது தத்துவங்களு மான்மாவுந் தம்மிற்கூடி ஜீவிக்கு முறைமையு மப்படி ஜீவித்து நிற்கச்செய்தே யவை யிரண்டும் பகல்விளக்குப்போலத் தற்போதம் ஜீவியாமனிற்கவே யந்த வருள்மேலிட்ட வவதாத் தான்மாவந்த வருளோடுங்கூடி யந்தச் சிவாநுபவத்தைப் பெறுமுறைமையு மறிவித்தது. (௩௨)

---

வேறு—இது பசுஞானத்தாலுங் கூடவொண்ணு முறைமையை யறிவித்தற் கப்பசுபோதத்தினுண்மைத் தன்மையுமப்போத மிப்படியாலொழிந்து ஞேயத்தைப் பெறவொண்ணுதென்பதூஉ முணர்த்திற்று.

பற்றிடுங் கருவியாவும் படர்ந்துணர் வளிக்குங்காலை-விடயங்களைப் பொருந்திநிற்குங் கருவிகளெல்லாம் விரிந் தாத்மாவுக் கறிவைக் கொடுக்குங்காலத்து,—உற்றறிந் திடுவதொன்றி னுணர்வினி னுண்மையாகும்-ஒரு விடயத்திலே பொருந்தி யிதுவென்று சுட்டியறிகிற தாத்மாவினுடைய வறிவின்

செய்தியாகும்.—மற்றது பகல்விளக்கின் மாய்ந்திட வருவ துண்டேல்-அந்தத் தத்துவங்களெல்லாஞ் சாக்கிரத்திலே நிற்கையிலே யவைகளிற் றுக்காம லருளைப்பொருந்தி மத்தியானகாலத்தில் விளக்குப்போலத் தற்போதஞ் ஜீவியாம லிற்குமுறைமை கூடுமாயின,—பெற்றிடுமதனை-அப்போதந்த ஸ்ரேயமான சிவத்தைப்பெறும்.—மாயப் பிறப்பினை யறுக்கலாமே-பெறவே மயக்கத்தைச்செய்யும் பிறவியை யறுக்கலாம் எ-று.

ஒன்றினுற்றறிந்திடுவதெனமாறுக. ஓராத்மாவினுடைய வென்றுமாம்.

---

இங்ஙனந் தற்போதம் ஜீவியாமலின்றந்தச் சிவாநுபவமாகிய முத்தியைப் பெறுகைக்கு அடியேன் செய்துவருகிற வியற்கை யேதென்று வினவ அதற்குவழி மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

முந்திய வொருமையாலே மொழிந்தவைகேட்டல் கேட்டல், சிந்தனை செய்தலுண்மை தெளிந்திடலெதுதானுங், வந்தவா றெய்தனிட்டை மருவுத லென்றுநான்கா, மிந்தவா றடைந்தோர்முத்தி யெய்திய வியல்பினோரே. (கூகூ)

சேட்டல்முதலாக் கிளர்த்தல்நால்வகையும்
வாட்டருமுத்தியை மருவுமெனறது.

(இ-ள்) முந்திய வொருமையாலே மொழிந்தவை கேட்டல் முன் ஜநநங்களிற் செய்துவந்த சரிதை கிரியாயோகங்களினது முற்றுதலினாலே யாசாரிய னருளிச்செய்த ஞானவுபதேசங் களை யேகாக்கிர சித்தனாயிருந்து விரும்பிக்கேட்டல்

கேட்டல்சிந்தனை செய்தல்

முன்சொல்லப்பட்ட ஞானவுபதேசமாகிய திரிபதார்த்தங்களை யிப்படியோ பதியினுண்மை யிப்படியோ பசுவினுண்மை யிப்படியோ பாசத்தி னுண்மையென்று மாராய்ந்து சிந்தித்தலாம்

உண்மை தெளிந்திடல்

அப்படி யாராயப்பட்ட மூன்றினுள்ளும் பாசஞான மஞ்ஞானம் பசுஞானஞ் சுதந்தர ஹீனமாகையால் இவை யிரண்டையுங் கூட்டிச் சேட்டிப் பிக்கிறது பதிஞானம். அதுவே யுண்மையாக வுள்ளதென்று கண்டதுவே பொருளாகத் தெளிதலே தெளிதலாம

அது தானாக வந்தவா றெய்தலிட்டை மருவுதல்

அந்தப் பதியானது பெத் தான்மாக்களோடுங் கூடிநின்று காரியப்படுத்தச் செயதே தானொருமுதலில்லை யென்னும்படி தோன்றுமலின்று காரியப்படுத்தினாற்போல நீயுமந்த ஞானத்தினாலே யல்லவோ காரியப்பட்டு வருகிறோமென்கிறதை யறிந்து ஆன்மபோதம் ஜீவியாமல் ஞானந்தானாய் நின்றுவிடுதலே நிஷ்டையாம்

என்று நான்காம்

என்றிப்படி கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிஷ்டையென்று நாலுவகையாம்

இந்தவாறடைந்தோர்முத்தி யெய்தியவியல்பிறோரே.

இந்த வொழுங்கிலே கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிஷ்டையைக் கூடினவர்களே முத்திநெறியைப் பொருந்தினவர்கள். எ - று.

உ-ம். அதுதானாக வந்தவா றெய்தலிட்டை மருவுதல். எ - கு. பெத்தத்திற் சிவன்றோற்றமற் றனமாவின் றோற்ற

மாய் நின்றாற்போல முத்தியி லான்மாவின் றோற்றமற்றுச் சிவதோற்றமாய் நிற்க வென்றதற்கு. பி - ம். இருபா விருபஃதில். "நாடா - வென்னுட்கரந் தென்பின் வந்தருளி - யென்னையுந்தன்னையு மறிவின்றியற்று - மென்ன தியானெனு மகந்தையுங் கண் - டியாவரியாவையு மியாங்கணுஞ் சென்று - புக்குழிப்புக்குப் பெயர்த்துழிப்பெயர்த்து - மிக்கபோகம் வினையால்வினைத்திட் - டெற்பணியாளா யெனைப்பிறியாதே - யோடிமீள்கென வாடல்பார்த்திட் - டென்வழிநின்றனை னை ந்தை." இது பெத்தம். இனிமுத்திக்கு. பி-ம். முன்னி லுதாரணக்குறை "அன்றோ - வருண்மிகவுடைமையி னருட்டிரைவந்து - பொருண்மிகவருடலும் பொய்ப்பகையாதலுங் - கைகண்டுகொள்ளெனக் கடலுலகறிய - மெய்கண்டதேவ னெனப்பெயர்வீசித் - தன்னுட்கரந்து தான்முன்னாகித் - தன்னையுந்தானுமா யென்னையின்றாக்கி" எ - து. கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஆன்மாக்கள் முத்திபெறுமிடத்துக் கேட்டுஞ் சிந்தித்துந் தெளிந்து நிஷ்டைகூடியு முத்தியைப்பெறு முறைமையை யறிவித்தது. (ருரு)

---

வேறு—அந்தப்பாச பசு ஞானங்களிற் கூடாம லந்தச் சிவத்தைப் பெறுமுறைமை யெந்த முறைமையென்று வினவுவதற் குத்தர முணர்த்திற்று.

முந்திய வொருமையாலே மொழிந்தவை கேட்டல்-முற்சனனங்களிற் செய்த சரியை முதலியவற்றின் முற்றுதலுண்டான வொருமைப்பாட்டினாலே யாசிரிய னுபதேசித்த உபதேசங்களைக் கேட்டல்,—கேட்டல் சிந்தனைசெய்தல் - கேட்டபொருளைச் சிந்தித்துப் பார்க்கை,—உண்மை தெளிந்திடல் - அந்தப் பொருளினுண்மையைத் தெளியவறிதல்,—அது

தாளுக வந்தவா றெய்தநிட்டை மருவுதல்-அந்தச் சிவந் தாளுகவேண்டி யாசாரியனு லந்த வுபதேசத்தின் வழியைப் பொருந்த நிட்டைபொருந்துதல்,—என்று நான்காம்-என்று நாலுவிதமா மந்தச் சிவத்தைப் பெறுமுறைமை,—இந்தவாறடைந்தோர்முத்தி யெய்திய வியல்பினோரே - இந்தப்படி நிட்டை கூடினவர்கள் முத்தியைப்பெற்ற முறைமையினை யுடையோர். எ - று.

இந்தக் கேட்டன்முதலிய நான்கு ஞானத்திற் சரியை முதலிய நாலுபாதமுமாம். இவற்றுட்கேட்டல், கேட்டுப் பற்றுதலா னிமலசாக்கிரமு நின்மல சொற்பனமுமாம். சிந்தித்தல சிந்தனுமாத்திரமாதலி னின்மலசுழுத்தியாம். தெளிதல் தெளிந் தருளுடன்கூடிநிற்றலி னின்மலதுரியமாம். நிட்டை யதுதாளுக விரண்டறக்கலத்தலி னின்மலவதீதமாம். இந்தவடைவிலே நின்றோ ரந்தந்தவளவிலே தேகாந்தமான விடத்துச் சுத்தத்திற் சாலோகாதிகளை முறைமையிலே யடைவர்கள். கேட்டலுடன் சிந்தித்த றெளித னிட்டையெனுஞ் சிவஞானசித்தியாலுங் காண்க.

---

அப்படி நிஷ்டைகூடி முத்தியைப்பெறுகிற தொழிலைச் சாத்திரங்களையோதிக் கேட்டுஞ் சிந்தித்துந் தெளிந்து நின்றோ லதுகொண்டே முத்தியாகாதோ வென்ற மாணவகனை நோக்கி யவை பாசஞானமும் பசுஞானமுமாகையாலதனல் முத்தியுண்டாகாது, அந்தப் பதிஞானத்தோடே கூடுகிறதே நிஷ்டையென்று மந்த நிஷ்டையுண்டாகிறதே முத்தியென்றும் வருமுறைமையை மேலருளிச்செய்வானெடுத்துக்கொண்டருளியது.

பாசமா ஞானத்தாலும் படர்பசு ஞானத்தாலும்
மீசனை யறியவொண்ணு திறையருள் ஞானநண்ணிந்

தேசுறு மதனுஞ் முன்னைச் சிற்றறி வொழிந்துசேர்ந்து
நேசமோ டியர்பார்த்து நிற்பது ஞானநிட்டை. (ருச)

பலகலைஞானமும் பல்லுயிர்ஞானமுந்
தலைவனையணுகாத் தன்மைசாற்றியது.

(இ-ள்.) பாசஞானத்தாலும்பசுஞானத்தாலு மீசனையறியவொண்ணாது — வேதாகம புராண சாத்திரங்களென்று சொல்லப்பட்டவையிற்று லறியும் பாசஞானத்தாலுந் தத்துவங்களெல்லாங் கழன்றவிடத் தான்மாதானே சிவமாமென்று சொல்லுகிற பசுஞானத்தாலுஞ் சிவனைக் கூடவொண்ணாது. பின்னை யெங்ஙனேயெனவிற்

இறை யருள் — கத்தாவினுடைய திருவருளாலே யந்த

ஞான நண்ணித் தேசுறுமதனுஞ் — ஞானத்தைப் பொருந்தி யவ்விடத்துப் பிரகாசித்துநின்ற திருவருளாலே

முன்னைச் சிற்றறி வொழிந்து சேர்ந்து — பழைய விச்சாஞானக்கிரியைகளாகிய வான்மபோதத்தைவிட்டு அந்தச் சிவஞானத்திலே பொருந்தி

நேசமோடியர்பார்த்து நிற்பது ஞானநிட்டை. — விருப்பத்துடனே யந்த ஞானத்துக்குமேலான சிவத்துடனே நிற்குமதுவே ஞானநிஷ்டையாம். எ - று.

வி-பு. வேதாகம புராண சாத்திரங்களைப் பாசஞானமென்றது அவையிற்றை யறியுமிடத்துத் திரிவித கரணங்களைக்கொண்டறியவேண்டுகையிறு லெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "வேதசாத்திர மிருதிபுராணகலைஞானம் விரும்பசவை வைகரியாதித்திரங்கள்மேலா, நாதமுடிவான வெலாம்பாசஞானம்." எ-து. கண்டுகொள்க.

ஆன்மா தத்துவங்களெல்லாங் கழன்ற விடந்தானே சிவமென்று சொல்லுகிறதைப் பசுஞானமென்றது ஆன்மா வவ்விடத்தொருபொருளோடுங்கூடி யநுபோகப்படாததுகொண் டெனவறிக. இதற்கு. பி - ம். சித்தியாரில். முன்னி லுதாரணக்குறை. "நணுகியான்மாவிவை கீழ்நாடலாலே, காதலினு னன்பிரமமென்னுஞானங் கருதுபசுஞான மிவனுடலிற் கட்டுண், டோதியுணர்ந்தொன்றொன்று யுணர்ந்திடலாற் பசுவா மொன்றாகச் சிவனியல்பி னுணர்ந்திடுவன்காணே." எ-து. கண்டுகொள்க.

ஆகையா லான்மா சிவமாகாதெனக்கொள்க. ஆன்மா சிவமாமென்னிற் சகசஞான முண்டாகவும் வேண்டுமெனவறிக.

இறையருண் ஞானநண்ணி என்றது ஆன்மா சிவனை யறியுமிடத் தந்தச் சிவனுடைய ஞானத்தைக் கொண்டு சிவனை யறியவேண்டுமென்ற தெனவறிக. இதற்கு. பி-ம். திருவாசகத்தில். "அவனருளாலே யவன்றாள்வணங்கி." எ-து. கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஆன்மாக்கள் சிவனைப்பெறுமிடத்துப் பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பதியைக்கூட வொண்ணாதென்றும் அந்தப்பதிஞானங் கொண்டே பதியைக் கூடவேணுமென்னு முறைமையையு மறிவித்தது. (ஙுச)

---

வேறு—இது பதிஞானத்தாலன்றி யவனை யறிதலரிதென்பதூஉ நிட்டையின் சொரூபமு முணர்த்திற்று.

பாசமா ஞானத்தாலும் பர்பசு ஞானத்தாலு மீசனையறியவொண்ணாது - நாதாந்தமான பாச ஞானத்தாலுமிவை நீங்கினவிடத்து விரிந்த வகம்பிரமமென்னும் பசுஞானத்தாலுஞ் சிவனை யறியக்கூடாது,—இறையருண் ஞானநண்ணித் தேசுறுமதனால்- சிவனுடைய கிருபையையுடைய ஞானத்தைப் பொருந்தியது காரணமாகத் தற்காட்சி விளக்கமுற்ற தன்மையிருமேல்,—முன்னைச்

சிற்றறிவொழிந்து - பழைய சிற்றறிவைவிட்டுச் சேர்ந்து, அகம்பிரம ஞானமன்றித் திருவருளிலே பொருந்தி,—நேசமோ டுயர் பரத்து நிற்பது ஞானநிட்டை - மகிழ்ச்சியுட னதற்குமேலான சிவத்திலேகூடி முன் சொன்ன படியே நிற்பது ஞானநிட்டையாம். எ - று.

நண்ணியென்பது பிறவினைகொண்டது. இந்நிட்டை தீவிரதரசத்தி நிபாதரான வுத்தமர் நிற்குநிலை.

---

அப்படித் தற்போதம் ஜீவியாம லிற்கவென்று லதுமுடியாது அடியேனின்று சாதித்துப் பெறத்தக்கதாக வெளிதாக வொருவழி கற்பித் தருளவேணுமென்ற மாணவகனைநோக்கி முனகற்பித்த நிஷ்டை கைகூடுகைக்கு வேறே யுபாய நிஷ்டையாக வொருவழி யருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

விளம்பிய வகையினிட்டை மேவிட லரிதேன் முன்னை, மளந்தறி வளித்தவற்றி னளவுமற் றவற்றினூலே, வுளங்கொளுந் தனையுமுள்ள படியுமுற் றுணர்ந்துசெய்யே, தளர்ந்திடா துவப்பமற்றத் தன்மைய தாகுந்தானே. (௩௫)

போற்றருநிட்டை பொருந்ாதவருக்

கூற்றமுளதா முபாயமுரைத்தது.

விளம்பிய வகையி னிட்டை மேவிடலரிதேல் — முன்சொன்ன முறைமையினாலே யுண்டான நிஷ்டைகூடுதற் கரிதாமாயின்

முன்னமளந்தறிவளித்தவற்றினளவும் — முன்பு பெத்தநிலையிலே தனக்குவேண்டின புசிப்புக்குத் தக்கதாக வறிவித்துக்கொண்டு நின்ற தத்துவங்களின தண்மையும்

மற்றவற்றினூ — அந்தத் தத்துவங்களினாலேயறிந் தின்பது

லே யுளங்கொளு — ன்பங்களைப் புசித்துவருகிற தன்னுடைய வு
ந்தனையும் — ண்மையும்
உள்ளபடியும் — கன்மத்துக் கீடாகத் தத்துவங்களையுந் தன்னையுங் கூட்டிப் புசிப்பிக்கிற கத்தாவின் முறைமையும்
உற்றுணர்ந்து — இவைமூன்றையு மநுபவத்தினாலே யறிந்து
செவ்வேதளர் — இவையிற்றுக்குச் சலிப்பின்றித் தவறுவரா
ந்திடாதுவப்ப — மனோரேநின்று அந்தப்பொருளை விரும்பவே
மற்றத்தன்மை — முன் சொல்லப்பட்ட நிஷ்டையின் முறை
யதாகுந்தானே. — மையாகும். எ-று.

நு-ம். தத்துவங்களி னுண்மையறிய என்றது தத்துவங்களான்மா கூடினாலொழிய வறியாதாகையா லவையிற்றை ஜடமென்றதெனவறிக.

ஆனமாவி னுண்மையை யறிய என்றது ஆன்மா தானுகவறிகைக்குச் சுதந்தரமில்லாததுகொண்டே சுதந்தரஹீனனென்றதெனவறிக.

கத்தாவி னுண்மையையறிய என்றது அந்தத் தத்துவங்கள் ஜடமாகையாலு மான்மா தற்சுதந்தரமில்லாதவனாகையாலு மிவையிரண்டையுங்கூட்டிப் புசிப்பிக்கிறது கத்தாவென்பதெனவறிக. என்னுமிவையிற்றுக்கு. பி-ம். போற்றிப்பஃறொடையில். "நாடுகின்ற, வெப்பிறப்புமுற்செய் யிருவினையா லிச்சயித்துப்—பொற்புடைய தாய்தந்தை போகத்திற்—கர்ப்பமாய்ப், புல்லிற்பனி போற் புகுந்திவலைக்குட்புகுங்கா—லெல்லைப்படாவுதரத் தீண்டியதீப்—பல்வகையா, லங்கேகிடந்த வனாதியுயிர் தம்பசியா—லெங்கேனுமாக வெடுக்குமென—வெங்கும்பிக், காயக் கருக்குழியிற் காத்திருந்துங் காமியத்துக்—கேயக்கை கால்முதலா யெவ்வுறுப்புந்—தீதறவே, செய்துதிருத்திப்பின் பியோகிருத்திமுன்புக்க—வையவழியேகொண் டணைகின்ற—பொய்யாத, வல்லபமேபோற்

றியம் மாயத்தாருண்மறைப்ப—நல்ல வறிவொழிந்து நன்குதீங்—செல்லையுறு, வக்காலந்தன்னிற் பசியையறிவித்தழுவித்—துக்கா விசோரத்தா யுண்ணடுங்கி—மிக்கோங்குஞ், சிந்தையுருகமுலையுருகத் தீஞ்சுவைப்பால்—வந்துமடுப்பக்கண்டு வாழ்ந்திருப்ப—பந்தித்த, பாசப்பெருங்கயிற்றாற் பல்லுயிரும் பாலிக்க—நேசத்தை வைத்த நெறிபோற்றி—யாசற்ற, பாலைப்பசும்பதத்தும் பாலனுமப்பதத்து—நாளுக்குநாள்சகல ஞானத்தும்—மீள்வித்துக், கொண்டாளவாளக் கருவிகொடுத் தொக்க நின்று—பண்டாரி யானபடிபோற்றி." எ-து. கண்டுகொள்க.

செவ்வே தளர்ந்திடா தவப்ப. எ-கு. சலிப்பற்று நேரே நிற்க என்றது எல்லாஞ் சிவசேட்டையென்று கண்டு யானெனது கெட நிற்கையெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில் "யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியானென்னு மிக்கோனைஞானவெரியால்வெதுப்பிநிமிர்த்துத், தான்செவ்வேநின்றிடவத் தத்துவந்தானேமோ தளையளித்து முன்னிற்கும் வினையொளித்திட் டோடு, நான்செய்தேனெனு மவர்க்குத் தானங்கின்றி நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங்கன்ம, மூன்செய்யா ஞானந்தா னுதிப்பினல்லா லொருவருக்கு மியானெனதிங் கொழியாதன்றே." எ-து. கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது முன்புகற்பித்த நிஷ்டை கைகூடாதென்ற மாணவகனைநோக்கி வேறுமோ ருபாயநிஷ்டையாகக் கொண்டு தத்துவங்களை ஜடமென்றுகண்டும் ஆன்மாவைத் தனக்கென்ன வறிவில்லாதவனென்று கண்டு மிவை யிரண்டையுஞ் சிவனேகூட்டிக் காரியப்படுத்துவ னென்பதுங்கண்டு தற்சேட்டைகெட நிற்கவே பண்டுகற்பித்த நிஷ்டை தானேகைகூடுமென்னு முறைமையை யறிவித்தது. (௩௫)

———

வேறு—இது அந்தவுண்மை நிட்டை கூடாதார்க் குபாயநிட்டை யுணர்த்திற்று.

விளம்பிய வகையினிட்டை மேவிடலரிதேல்-முன்சொன்ன முறைமையிலே நிட்டைகூடுதலரிதாயின்,—முன்ன மளந்துணர்வித்தவற்றினளவும்-முன் பதுவிதுவென்று சுட்டியையறுத் தறிவித்த தத்துவங்களின் பிரமாணங்களையும்,—மற்றவற்றினாலே யுளங்கொளுந்தனையும்-அந்தத் தத்துவங்களினாலே யறிந்துபுசிக்கின்றதன்னையும்,—உள்ளபடியும்-தனக்குச்சிவனையன்றிச்சேட்டையில்லையென்னு முண்மையினையும்,—உற்றுணர்ந்து - அந்த ஞானத்திலே நிலைபெற்று நின்றறிந்து,—செவ்வே தளர்ந்திடாதுவப்ப-கேட்டன்முதலிய மூன்றனப்பியாசத்தினாலே மயக்க விகற்பங்களைக் கிரமத்திலே செய்தந்த ஞானமேயாய்த் தனக்குப் பிரயோசனமான சிவத்தை விரும்ப—மற்றத் தன்மையதாகுந்தானே-முன்சொன்ன நிட்டையின்முறைமை பரத்திலேகூடும். எ-று.

தன்மையதுவுஞ்சொல். ஆகும் கூடும். மற்று அசை.

---

இங்ஙன மருளிச்செய்த நிஷ்டையை யடியேன் பாவித்துக் கொண்டு வருகிறேனென்று வினவின மாணவகனைநோக்கி யப்படி நீபாவிக்கிற பாவகங்களா லந்தப்பொருளைப் பெறவரிதென்றுந் தம்பிரானார் திருவருளைப்பெற்ற வடியார்களுக் கொருபாவங்களு மில்லாமலெளிதாகப் பெறலாமென்றும் வருமுறைமையை மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

பாவிக்கின் மனாதிவேண்டும் பயனிலை கரணநீத்துப்,
பாவிப்ப னெனினிலன்னே பழுதுள பாவகத்தாற்,
பாவிக்க வொண்ணாதென்று பாவிப்ப னெனினினீயென்,
பாவிக்க வேண்டாவாண்ட பரனருள் பற்றினோர்க்கே. (௫௰)

நீக்கமில்பாவக நிலையெப்பொருளுந்
தாக்கருஞானஞ் சாராதென்றது.

(இ-ள்.) பாவிக்கின் மறுதிவேண்டும் — அந்த வுண்மையை நீ தியானிக்கு மிடத்து அந்தக் கரணங்களாகிய மறுதிகள் கூடியே தியானிக்கவேண்டும். ஆகையால் அது

பயனிலை — அந்த வுண்மையாகிய சிவம் வாக்குமறுதிநமா யிருக்கையா லதனைக் கரணங்களைக் கொண்டு நீ தியானிக்குமளவி லுனக் கொருபிரயோசனமு மில்லையாம்

கரணநீத்துப் பாவிப்பனென்னில் — அந்தக்கரணங்களை நீக்கியே யந்தப்பொருளைப் பாவித்துக்கொள்ளுவேனென்று நீசொல்லில்

என்ன — அதனாற் பயனேதுண்டாவது

பழுதள — அந்தக்கரணங்கள் நீங்கினவிடங் குற்றத்தையுடைய கேவலமுமாய் முத்திப்பழுதசொல்லுகிற பாடாணவாதி யத்தமுமாகையா லது பயனல்ல

பாவகத்தாற் பாவிக்கவொண்ணாதென்று பாவிப்பனென்னில் — அப்படியல்ல அடியேன் பாவிக்கிற பாவங்களா லந்தப்பொருளைப் பாவிக்கப்படாதென்று பாவித்துக்கொள்ளுவே னென்னில்

நீயென் — அந்தப்பொருளுன்னுடைய பாவங்களாற் பாவிக்கப்படாதேயாகு முன்னுடைய முயற்சியேன். ஆகையால்

பாவிக்கவேண்டாவாண்டபரனருள் பற்றினோர்க்கே. — அப்படி யான்மபோதத்தா லொன்றையுஞ் சுட்டிப் பாவிக்கவேண்டுவதில்லை நம்மையாண்ட தம்பிரானு ரநுக்கிரகித்தத் திருவருளைப் பெற்ற வடியாரா யுள்ளவர்களுக்கு. எ - று.

உ-ம். கரணநீத்துப் பாவிப்பனென்றது பாடாணவாதியத் தமாமென்று சொன்னதற்கு. பி-ம். சங்கற்ப நிராகரணத்தில். "காட்சியென்னக் காணுந்துயர - மாட்சியைமுத்தி யெனவகுத்த னரே." எ-து. கண்டுகொள்க.

அதனைப் பழுதென்று மறுத்ததற்கு. பி-ம். சங்கற்ப நிராகரணத்தில். "காட்சியென்னக் காணுந்துயர - மாட்சியைமுத்தி யெனவகுத்துரைக்கிற் - காணுபாவ மரணங்கருமர - மெய்ந்தவர்முத்தி சேர்ந்தவரன்றே - யனையகதிக்கோர் முனைவரும்வேண்டா - தனிதருதுயர மெனுமிது திடமே - பாடாணத்திற் கூடாமுத்தி." எ-ம். சித்தியாரில். "கரணங்கள் கெடவிருக்கை முத்தியாமென்னிற் கதியாகுஞ்சினைமுட்டை கருமரத்தினுயிர்கள், மரணங்கொண்டிடவுறங்க மயங்கிமூர்ச்சிக்க வாயுத்தம்பனைபண்ண வல்விட்டத்தையடையச், சரணங்கள் புகுநிழற்போற் றனையடையுஞ்சமாதி தவிராதுமலமிதுவும் பசுஞானமாகு, மரணங்க ளரித்தவன்றனடியை யறிவிறந்தங் கறிந்திடார் செறிந்ததுக ளகற்றிடவோ." எ-து. கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது அந்த வுண்மைஞானத்தைப் பாவகத்தினாலே தியானித்துவருகிறேனென்ற மாணவகனைநோக்கி யதனை நீ தியானிக்குமிடத்துக் கரணங்கள்கூடித் தியானிக்கையாலது வுமத்தமெல்லவென்றுங் கரணங்களைநீக்கித் தியானிக்குமிடத்துக் குற்றத்தையுடைய கேவலமே முத்தியென்கிற பாடாணவாதியத்தமாமென்றுஞ் சிவனருளைப்பெற்ற வடியார்களுக் கொருபாவகங்களும் வேண்டா மென்றும் வரு முறைமையை யறிவித்தது. (௩௯)

---

வேறு—இது அப்படி பாவிப்பதேதென்று வினவியமாணாக்கனுக் குத்தர முணர்த்திற்று.

பாவிக்கின் மருதிவேண்டும் பயனிலை - அந்தச்சிவத்தை நீ தியானிக்கிலதற்குக் கரணங்கள் வேண்டுங். கரணாதீதன் பாவனைக் கெட்டாமையி னுனக்குப்பயனிலை,—கரணாதீத்துப் பாவிப்பனென்னிலென்ன - கரணங்களை யொழித்துத் தியானிப்பனென்னிற் குற்றமென்னை,—பழுதனை - கரணநீத்த பொழுதே மலமறைக்கும்,— பாவகத்தாற் பாவிக்க வொண்ணுனென்று பாவிப்பனென்னி னீயென் - தியானத்தாற் றியானிக்கப் படானெனறு தியானிப்ப னென்றுசொல்லிற் பாவாபாவ மிரண்டினுங் கூடிநிற்கிற உன்னுடைய போத மவ்விடத்திற் சிவிப்பதென்னை,—பாவிக்க வேண்டாவாண்ட பரனருள் பற்றிேனார்க்கே - தம்மையாண்ட சிவனருள் பொருந்தினவர்கட்குப் பாவிக்க வேண்டா. எ-று.

எனவே பாவாபாவமிரண்டும் வேண்டாவென்பதாம். நீயென்னென்பதற்கு நீவேண்டுமோ வென்னினுமாம்.

---

இங்ஙனஞ் சொல்லப்பட்ட நிஷ்டையாலு முன்சொன்னவுண்மை நிஷ்டையாலு மந்தச்சிவனைப்பெற்றவான்மாக்க ளந்தச்சிவனோடுங்கூடி யொன்றுபட்டுப் போவர்களோ இரண்டுபட்டு நிற்பர்களோவென்று மாணவகன் ஆசாரியரை வினவின வவதரத்து மாயாவாதி யநாதியி லொன்றாயிருந்து பொன்னிலேயிருந்து பணிகள் விரிந்தாற்போல ஜீவான்மாவும் பிரபஞ்சமுமாக விரண்டாய்விரிந்து மீளவு மொன்றுபட்டுப் போமென்று சொல்லுகையும், அதனை யதல்லவென்று சைவர்வந்து அநாதியி லான்மாவுஞ்சிவமு மிரண்டாயிருந்து முத்தியி லொன்றுபட்டுப் போமென்று சொல்லுகையும், அன்றியும் ஐக்யவாதிவந்து அநாதியில் ஆன்மாவுஞ் சிவமு மிரண்டாயிருந்து முத்தியி னீருநீருங்கூடி யொன்றானாற்போல ஒன்றுபட்டுப்போமென்று சொல்லுகையும், அதனை யல்லவென்று சமவாதிவந்து ஆன்மாவுஞ் சிவமு முத்தியிலு மிரண்டாயிருக்குமென்று சொல்லுகையும் அன்றியும் மீளவு

மவனக்கினியைச்சேர்ந்த விரும்பு அக்கினியானாற்போலச் சிவனை ச்சேர்ந்த வான்மாக்கள் சிவமாமென்று சொல்லுகையுமான வவதாரத்து இவர்கள் சொன்னதெல்லாஞ் சித்தாந்தவத்தமல்லவென்று அவரவரத்தங்களை மறுத்துக் காட்டிச் சித்தாந்த வுண்மையை யோருபமானங்காட்டி மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

ஒன்றிரண் டாகியொன் றி னொருமையா மிருமை யாகி, யொன்றிலொன் றழியுமொன்று தென்னி னொன்றாகாதீயி, னொன்றிரும் புறழினொன்று முயிரினைந் தொழிலும்வேண்டு, மொன்றினின் றுணருமுண்மைக் குவமையா னவத்தோடொன்றே. (௬௭)

குற்றமருவுங் கோட்பாடகற்றி
முற்றியகதியின் முறைமையீதென்றது.

(இ - ள்.) ஒன்றிரண்டாகி யொன்றி னொருமையாம் — எங்கு மொருமுதலாக விரிந்திருக்கப்பட்ட பிரமமானது ஜீவான்மாவாகவிரிந்து மீளவுமொன்றுபட்டுப் போமென்னில் அது ஜீவான்மாவாக விரிந்தவவதாரத்தும் அந்தப்பிரமத்தின் செய்திகளெல்லா முண்டாகவேணும். அப்படியில்லையாகையா லது வத்தமல்லவெனவறிக

இருமை யாகி யொன்றி லொன்றழியும் — அநாதியே யான்மாவுஞ் சிவமு மிரண்டுமுதலாய்நின்று முத்தியி லொன்றாய் விடுமென்னில் அப்பொழு தானமாவழியவேண்டும். அதுற்ற பெறுவானில்லையாம். ஆகையா லதுவுமத்தமல்லவெனவறிக

ஒன்று தென்னி னொன்றாகா — ஆன்மா முத்தியிலுஞ் சிவத்தோடுங் கூடாமலிரண்டுபட்டுநிற்குமென்னில் அப்பொழுது

முத்தியி லொன்றுபட் டநுபவிக்கிறதே பய னென்கிற பேறுமில்லையாமெனவறிக

தீயி ஞென்றி
ரும் புறழி னன்
ரும்

அக்கினியைச் சேர்ந்த விரும்பு அக்கினியா னாற்போல ஆன்மாவு மந்தச் சிவத்துடனே கூடிச் சிவமா மென்னில் அப்படி யாகாது. அதேதெனென்னில்

உயிரினைந் தொ
ழிலும்வேண்டும்

ஆன்மாவுக்குப் பிராணனாய்நின்று சேட்டிப்பிக்கிற சிவனுடைய பஞ்சகிருத்தியமு மந்தச்சிவனைப்பெற்ற வான்மாக்களுஞ் செய்யவேண்டும். அத்தன்மை யான்மாக்களுக்கில்லையாகையா லதுவத்தமல்ல வெனவறிக. அப்படியானு லான்மாக்கள் சிவனைப்பெற்று நிற்கு முறைமை யெங்ஙனேயென்னில்

ஒன்றி நின் று
னொரு மூண்மைக்
குவமையாணவத்
தோ டொன்றே.

அந்தச்சிவத்தோடுங்கூடி முத்தியைப்பெற்றின்பத்தை யநுபவிக்கிறதற் குவமையாவது ஆணவமலத்தோடுங்கூடி யதீதப்பட்ட வான்மாக்கள் அந்தமலத்தோடு மொன்றுபட் டழிந்துபோவதுஞ் செய்யாம லிரண்டுபட்டு நீங்குவதுஞ் செய்யாமல் நின்றாற்போலக் கூடியநுபவிக்கும். எ - று.

உ - ம். இங்ஙனஞ் சொல்லப்பட்ட சமயிக ளால்வர்க்கு மூண்டான மதத்துக்கு மறுப்புக்குஞ் சங்கற்ப நிராகரணத்திலே காட்டுதும். அவைவருமாறு:—

ஒன்றிரண்டாகி யொன்றும் என்று மாயாவாதி சொன்னதற்கு. பி - ம். "பொற்பணியியல்பினின்-வான்வளியநலநீர் மண்மருந்தன்ன-வானதாது வாறைங்கோசத் - தொகுதியாக்கை பகுதியதொருபுடை," எ-ம். மீளவும் பரத்திலே யொடுங்குமென் றவன்

சொன்னதற்கு. பி-ம். "வாரூர்ந் திரைநுரைதரு வாய்மையிற் கூடும்." எ-ம். கண்டுகொள்க.

அந்தப்பரத்திலே நின்றுதோன்றி ஜீவான்மாவாக நின்று மீளவும் பரத்திலேயொடுங்குமென்றதை யந்தப்பரத்துக் குண்டான வியல்பெல்லா மிந்த ஜீவான்மாவுக் குண்டாகவேணுமென்று அவனை யொருமையாமென்று மறுத்ததற்கு. பி-ம். "பரத்துறாதே விவையும் பரமார்த்தம் - பரத்திலதேலொழி முனபகர்மாற்றம்." எ-து. கண்டுகொள்க.

இனி யிரண்டாவது இருமையாகி யொன்றும் என்று ஐக்யவாதிசொன்னதற்கு. பி-ம். "நீருநீருஞ் சேருந்தகையி - னறிவினறிவு செறிவுறப்பொருந்தி - யொன்றும்." எ - து. கண்டுகொள்க.

அதனை மறுத்ததற்கு. பி-ம். உண்மையிலிருமையு மொளியேயெனிலொரு - தன்மையதாகமுன் சாற்றினரிலரே." எ-து. கண்டுகொள்க.

அன்றியும் இருமையாகி யொன்றும் என்று சைவர் சொன்னதற்கு. பி-ம். "கருவியு மலமும் பிறிவுறப் பிறியா - ஞானநல்கலுந் தானதுநோக்கித் - தன்னையு மதனையுந் தன்முதற்பொருளையு-மின்னதென் றறியா விருவருமுபங்கி - யொன்றுயுறுபய னுயப்பு-மின்றாய்நிற்கு மிதுசிவசத்தியே." எ-து. கண்டுகொள்க.

அப்படி முத்தியி லொன்றுபட்டுப் போமெனனில் ஆன்மா வழிந்துபோமாகையினு லது வத்தமல்லவென்று மொன்றிலொன்றாழியுமென்று மவனை மறுத்ததற்கு. பி-ம். "இருவருங்கூடி யொருபயனுய்த்தென் - றருள்னையிவ்வா றபேதிகணிலேயே." எ - து. கண்டுகொள்க. அன்றியும் சித்தியாரிலும். "அனைந்துகெட்டதெனனிற், பொன்றுகையேல் முத்தியினைப் பெற்றவரார் புகல்நீ, யொன்றுகையே முத்தியெனிற் புருடனித்த னன்றும்." எ-து. கண்டுகொள்க.

இனி மூன்றாவது ஒன்றாகுமென்று சமவாதி சொன்னதற்கு. பி-ம். "முன்றோன்றனது முதிரொளிஞான - மறியாப்பசசைச் சிறுபுழுக்கவர்ந்த - வண்டெனவுயிரைக் கொண்டிடுமுபிரது-தன் னைநோக்கித் தானதுவாகி - யைவகைத்தொழிலு மெய்வகையுணர் வும் - பிரியாவாறுபெற்றுத் - திரியாப்பெரியோர் திரட்சிசேர்ந்தி டுமே. எ-து. கண்டுகொள்க.

அப்படிக்கூடி யநுபவியாதபொழுது சாயுச்சிய மாகாதாகை யா லொன்றாகாதென் றவனை மறுத்ததற்கு. பி-ம். "முத்தியுற்ற நற்றவரவையிடைச் - சேர்வரென்றனை சார்வருமுத்தி - சாலோக் கியமோ சாயுச்சியமெனிற்-பந்தமுற்ற கந்தலகழித்த - லறிவினோ டறிவு பிரியாப்பெற்றி - வேண்டுமென்பதற் கீண்டிவரிவ்வா-றிரு ப்பரென்பதற் குருத்தான்வேண்டு - மண்ணலதருளி னண்ணியி ருப்பினுஞ் - சீவன்முத்தரென் றோதினரகன்று - நீங்கியு முருவ- நீங்காதாயி - னேகியமுத்தி யாவதெனுரைக்க." எ-து. கண்டு கொள்க.

இனி நீயிரொன்றிரும் புறமுமொன்றும் என்று மீளவு மவன் சொல்ல அப்படியாகாது ஆமென்னில் உயிரினைந்தொழிலும் வே ண்டும் என்று நாலாவது அவனை மறுத்ததற்கு. "முன்னவன்றன் மை - யெய்தினரெல்லாச் செய்தியுஞ்செய்வ - ரிரும்பெரியெய்தித் தருஞ்செயறகவெனிற் - பொருணிலைகிடக்க வொருதிட்டாந்தப்- பேறேயாயிற் சிறுக்கநுவிய - புன்லொருபுடைசேர் கனறகுமாயி னும் - வேறொரு பொருளை நீறாக்கிலதே - நெருப்பெனுமிதனி லுருத்தனிகாட்டுக - வங்கியுமொன்றிற் றங்கினின்றல்லது - தன் றொழிலடைந்தா தெனறறி யினிநீ - யிரும்பனற்செய்தி தரும்பரிசு ளதே." எ-து. கண்டுகொள்க.

இனி யைந்தாவது ஒன்றுபட்டு முத்தியிலே யநுபவித்து நிற் கிறதுக்குத் திருஷ்டாந்த மாணவ மலத்தோடுங்கூடி யதிதப்ப

ட்டுக் கிடக்குமாபோல வென்றது ஆன்மா சிவத்தோடுங்கூடி-யொன்றுபட் டழிவதுமில்லை இரண்டுபட்டு நீங்குவது மில்லையென்றதெனவறிக. இதற்கு. பி-ம். இந்நூலிலே முன்னே "உடலுயிர்க் கண்ணருக்க னறிவொளிபோற் பிறிவருமத்துவிதம்" என்றது மிப்பொருட்பற்றி யெனவறிக. அன்றியுந் திருவருட்பயனில். "ஒன்றுலுமொன்று திரண்டாலு மோசையெழா-தென்றுலுமொன்றிரண்டுமில்." எ-ம். "தாடலைபோற் கூடியவை தானிகழாவே-ற்றின்பக் - கூடலைநீயேகமெனக் கொள்." எ-ம். இந்நூல்களன்றித் திருவருளைப்பெற் றநுபவித்த வடியார்கள் திருவாக்குகளினு முண்டான கருத்து சிவானந்தமாலையில். "தானுவிரண்டத்துவிதஞ் சாதிக்கு மாணவனை, யாணவத்தோ டத்துவித மாக்கினரார் — கோணறவே, யென்னானை யென்னானை யென்னானை யேகமிரண், டென்னாமற் சும்மா விரு." என்னும் வகைகளினு மிப்பொருளைக் கண்டுகொள்க.

ஆகையால் திருஷ்டாந்தத்தினாலு மநுபவத்தினாலுஞ் சிவனைப்பெற்ற வான்மாக்கள் முத்தியி லொன்றுபட் டழிவதுஞ்செய்யாம லிரண்டுபட்டு நீங்குவதுஞ் செய்யாம லத்துவிதமாய் நின்றே யநுபவிப்பார்க ளென்பது கருத்து.

இதனாற் சொல்லியது ஆன்மா வந்தப்பரத்திலே நின்றுந் தோன்றி மீளவு மந்தப்பரத்திலே யொன்றுபட்டுப்போமென்கிற மாயாவாதியும், அதல்ல ஆன்மா வநாதியி லிரண்டாயிருந்து முத்தியி லொன்றுமென்கிற ஐக்யவாதியுஞ் சைவரும், அதல்ல முத்தியினு மிரண்டுபட்டுச் சிவனைப்போலுஞ் சமமா யிருக்குமென்றும் அன்றியும் அக்கினியைச்சேர்ந்த விரும்பு அந்த வக்கினிசெய்யு முறைமைகளெல்லாஞ் செய்தாற்போலச் சிவனைப்பெற்றவர்களுஞ் சிவனைப்போலப் பஞ்சகிருத்தியங்களுஞ் செய்வார்களென்ற சமவாதியுந், தந்தமதங்களைச்சொல்ல, வவர்களுந்தங்களை மறுத்துக்

காட்டிச் சைவசித்தாந்தவுண்மை யான்மா வாணவமலத்தோடுங் கூடின தன்மைபோல விருக்குமென்னு முறைமையை யறிவித்தது. (கூஎ)

---

வேறு—இது அபேதமுதலியவற்றை மறுத் தாத்மாவுஞ் சிவமு மயிக்கமான சாயுச்சியத்தி னிலைமை யுணர்த்திற்று.

ஒன்றிரண்டாகி யொன்றி னொருமையாம் - கடோபாதிவசத்தா லகாயமான திரண்டாய் நின்றாற் போலவும் பல பாத்திரங்களி லுள்ள சலோபாதிவசத்தா லொருசந்திரன் பலவாய்த் தோன்றினாற்போலவும் அகண்ட பரிபூரணமா யிருக்கின்ற பரப்பிரமந்தானே மாயாகாரியங்களாக விருக்கிற தேகோபாதிகடோறுஞ் சிவபேதத்தையடைந்து பெத்தநீங்கி முத்தியின்க ணந்தக்கடமும் பாத்திரங்களும் பின்னமா யுள்ளளவிற் கடாகாயமு மகாகாயமு மொன்றாய் நின்றாற்போலவும் பலவாகாயத்தொன்றின சந்திரப் பிரதிபிம்பங்கள் போ யொன்றாய் நின்றாற்போலவு மகத்துக்களை யாஸ்ரயித்து வேதாந்த சிரவணஞ்செய்து அதனான் முன்னுண்டான மாயோபாதி நீங்கிற் சிவனே பிரமமென்னு மாயாவாதி யொருபொரு ளிரண்டாய்ப் பின்னொன்றாமென்னிற் சீவபர மிரண்டிற்குங் குணமொன்றா யிருத்தல்வேண்டும். அன்றியு மிப்படி யிருப்பதொன்றுக்கு மாயோபாதிகளிலேநின்று சுகதுக்கப்படவு மவை நீங்குதற்கு மகத்துக்களைச்சேர்ந்து வேதாந்தங் கேட்கவும்வேண்டும். அன்றியும் சாயுச்சிய வின்பம் பெற்றாலும் பின்பு ஜனனமுண்டாதல்வேண்டும். ஆதலா லிந்த மாயாவாதி ஏகாத்மவாதமுமடாது,—இனி யக்கினியினின்றும் பலபொறிகளும் புகையுந் தோன்றினாற்போல வுபாதியாயிருக்கிற சிவந்தானே பிரபஞ்சகாரணமாய்ச் சடசத்தியா யிருக்கிற மாயை மாமாயைகளையு மாத்மாக்களையும் பகுத்துத் தன்னிடத்தினின்றுந் தோற்றுவித்த அந்த மா

ளையினாலே பிரபஞ்சத்தைப் படைத்துச் சராசரபேதமான வெண்பத்து நான்குநூறாயிரபேத யோனிகடோறு நின்று வினையாடிப் பெத்தநீங்கின முத்தியின்கண் கன்மசமத்துவமும் சத்திநிபாதமு முண்டானவளவிற் சற்குருவையடைந்து சாம்பவிதீட்சை பெற்றுக் குரு உபதேசத்தாலே ஜகத்தடங்கலையுஞ் சிவமாகவறிந்து பெறுமிழவும் பெறுவானும் ஈவோனும் வேறில்லையென்று கருதிச் சீவனே சிவன் சிவனே சீவனென்று பேதா பேதங்கொண்டிருக்கை மோக்ஷமென்று சிவாத்துவிதி சொல்லிற் சித்தியாயிருக்கிற சிவனிடத்திலே யசித்தாயிருக்கிற மாயைதோன்றாது சிவனிடத்திலே யாத்மாக்கள் தோன்றிற் கடாதிகளைப்போன்று மூர்த்தமாயழியும் பெறுமிழவும் பெறுவானு மீவானும் வேறில்லையெனி லாசிரியனையடைந்து பெற்ற மோட்சத்தா லொருபிரயோசனமு மில்லையாம். ஆதலி லவன்மதமும்,—இருமையாகி யொன்றிலொன்றழியும் - அநாதியிலே யாத்மாவுஞ் சிவமும் வேறாயிருந்து முத்தியிலே நீரினீரும் பாலிற்பாலு நெய்யினெய்யுங் கலந்தாற்போல வொன்றாமென் றைக்கவாதிசொல்லி லநாதியே வேறாயிருந்த மூதலிரண்டி லொன்றழியும். ஆகையா லவன் சித்தாந்தமுமடாது,—ஒன்றாதென்னி லொன்றாகா - சிவனு மாத்மாவு முத்தியிலுமொன்றாது பேதமாயிருக்குமென்று பேதவாதி சொல்லிற் சாயுச்சியமென்பதுமின்றிச் சிவனைப்பெற்றதுவு மில்லையாம். ஆகையா லதுவுமடாது,—தீயிரும்பும் புரழுவின்றும் - தீயிற்சேர்ந்த விரும்பு தீயானாற்போ லாத்மாவுஞ் சிவத்துடனே கூடிச் சிவமாமென்று சங்க்ராந்தவாதிசொல்லி லாத்மாவுக் கங்ஙனமாந்தன்மையில்லை. யஃதென் னென்னில்,—உயிரி னைந்தொழிலும்வேண்டும் - தனக்குப் பிரானாயிருக்கிற கர்த்தனுடைய தலைமைபோலிவனும் பஞ்சகிர்த்தியமுநடத்தல்வேண்டும். நடத்தி லவனுடைய தலைமைகெடும். அன்றியுந் தீயைச்சேர்ந்த விரும்பு தீச்செய்யுந் தொ

ழிலைச்செய்யாது. இரும்பைச்சேர்ந்த தீயே தகிக்கும். ஆதலி னப்படிசொல்லுஞ் சங்கிராந்த வாதமுமடாது,—ஒன்றிநின் றுணருமுண்மைக் குவமை யாணவத்தோ டொன்றே,—ஆத்மாச் சிவனுடனே யேகிபவித்துத் தான்கெடாமனின்று பரமானந்தத்தை யனுபவிக்கு முண்மைக் குவமை முன்பிவ னாணவத்தோடுகூடி யதுவாகவேயிருந்த தன்மையாம். எ-று.

ஒன்றென்பது முதனிலைவினை யீண்டுப் பெயராய் நின்றது. ஏகாரம் தேற்றம். கருவிகளெல்லாங் கழன்ற கேவலத்திலே யாணவமலத்தை யிவன்சென்று கூடாம லதுவு மிவனைவந்து பொருந்தாம லாத்மாத்தான்கெடாம லந்த மலத்தை யிதுவென்று சுட்டிக் காணாம லதுவுந்தானு மொன்றாகாம லிரண்டாகாம லொன்றுமிரண்டு மின்றாகாம லிருக்குந் தன்மைபோலா மென்பதாயிற்று. இன்னு மிதனுண்மைகளைக் குருமுகத்தானறிக. உவமை ஏகதேசமெனக்கொள்க.

---

இங்ஙனஞ் சொல்லப்பட்ட வுண்மைஞானத்தைப்பெற்ற வான்மாக்களிடத் துண்டாகிய பாசமான வாணவமல மழியுமோ நிற்குமோவென்று வினவின மாணவகனை நோக்கிப் பாசமழியுமென்னிற் பேதவாதி யத்தமாமென்றும் பாசமழியாதென்னிற் சமவாதி யத்தமாமென்றும் இந்தவிரண்டுவகையு மறுத்துக் காட்டி மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

அழிந்திடும் பாசமென்னி னித்தமென் றுரைத்த
ல்வேண்டா, வழிந்திடா தென்னி னூன மடைவது
கருதவேண்டா, வழிந்திடுஞ் சத்திநித்த மழிந்திடா
வொளியின் முன்னர், ரழிந்திடு மிருணாச மடைந்திடா
மிடைந்திடாவே. (௩௮)

மொழிந்திடுமூல மலத்தின்சத்தி
யழிந்திடுந்தனனியல் பழியாதென்றது.

(இ-ள்.) அழிந்திடும் பாசமெனனில் — முத்தியைப்பெற்ற வான்மாக்களிடத்துண்டாகிய வாணவமலமானது அழிந்துபோமெனறு சொல்லுகில்

நித்தமென்றுரைத்தல்வேண்டா — பதி பசு பாசமென்று சொல்லப்பட்ட முதல்மூன்று மநாதிநித்தமென்று வேதாகமங்கள் சொல்லவேண்டுவ தில்லையாம். ஆகையா லது வத்தமல்ல

அழிந்திடா தென்னில் — முத்தியினு மழியாதெனனில்

ஞான மடைவது கருதவேண்டா — ஆணவமல மறியாமையைப் பண்ணி நிற்கையா லது வான்மாவோடுங்கூடி மறைத்துநிற்குமட்டு மறிவாயுள்ள சிவத்தோடுங் கூடி யநுபவிக்கவெண்கிறது சற்று நினைக்கவேண்டுவ தில்லையாம். ஆகையாலதுவு மத்தமல்ல. பின்னை யெங்கனேயெனனில்

அழிந்திடுஞ் சத்தி. நித்தமழிந்திடாது — ஆன்மபோதத்தை யநாதியே மறைக்கப்பட்ட வந்தமலத்தின் காரியமாயுள்ள சத்தியழியும். அதனுடைய காரணமாகிய நித்தியத்துக் கழிவில்லையாம். அஃதென்போலவெனனில்

ஒளியின்முன் னாழிந்திடு மிருளுநாச மடைந்திடா மிடைந்திடாவே. — ஆதித்தப்பிரகாச முதலாயுள்ள வொளிகளில் முன்னில்லாத விருளானது அழிந்ததுமில்லை மறைந்துநின்றது மில்லை எ-று. என்னவே ஒளியின் மேலீடுகொண் டிருளடங்கித் தோற்றமுமற்றுக் காரியப்படாம

நின்றாற்போல வருளின் மேலீடுகொண்டு
மலங்கிழ்ப்பட்டு நினறதெனவறிக. இத
ற்கு. பி - ம். போற்றிப்பஃறொடையில்.
"சேணுயிருள்வடிவுஞ் செங்கதிரோன் பானிர்யாற—காணு
தொழியுங் கணக்கேபோ—லாணவத்தி, ஞதிருறையாமலெ
ன்பாலணுகாம—னீதிநிறுத்து நிலைபோற்றி." எ - து.கண்டு
கொள்க.

நு - ம். பாசமழியுமென்பதைப் பேதவாதி கருத்தென்
றது அவன் செம்பிற் காளிதமானது குளிகையினுலே கெட்
டுப் பொன்னுனதன்மைபோல வான்மாவுக்குண்டான வாண
வமலமு மருளினுலே கெட்டுச் சிவமயமாமென்று னெனவ
றிக. இதற்கு. பி - ம். சங்கற்பநிராகரணத்தில். "ஈசனரு
ளாற் பாசத்தொகுதி - செறிவுறுசெம்பிற் கறையுறுகளிம்பு-
குளிகைதாக்க வொளிபெற்றுங்கு-நித்தசுத்த முத்தராக-
வைத்தனருலகின் மறைவல்லோரே." எ-து. கண்டுகொள்க.

இதனை யாகாதென்று மறுத்ததேதென்னில் பதிபசுபாசு
மூன்று நித்தியமென் றிருக்கையாலே பாச மழியவொண்ணு
தென்றதெனவறிக. இதற்கு. பி - ம். சங்கற்பநிராகரணத்
தில். "மறைகளாகமத் துறைகள் மற்றெவையு-நாசமில் பதி
பசு பாசமென்றுரைத்த - லயர்த்தோர்குளிகை சயத்தாற்று
ம்பிர - காளிதநாசம் பாசத்தேய்த்தல்-கூடாதன்றியுங் குளி
கைசேருண - நீடாதழிந்த நிலைநிலையாகலிற் - பேதவாதமோ
துதல்பிழையே - யின்னுமின்னுயி ரேமங்குளிகை - தன்னிலங்
கியந் தருவதுதிடனே." எ-து. கண்டுகொள்க.

பாச மழியாதென்றது சமவாதி கருத்தென்றதேதென்
னில் அவன் முத்தியைப்பெற்றவிடத்துஞ் சரீரமழியாதென்
கையினுலே சரீரமுள்ளமட்டும் மும்மலமும் போகாதென்
கையினுலே யதனையாகாதென மறுத்ததெனவறிக. இதற்கு.

பி-ம். சங்கற்பநிராகரணத்தில். "அகன்று - நீங்கியுமுருவ நீங்காதாயி - ரோங்கியமுத்தி யாவதெனுரைக்க - செடியுடலணுகாக் குடிலைகொடுக்குமென் - றோதினைநீயே பேதாய்பகட்டுர - லொளிர்சினைமுச்சித் தளிரெனிமிறுதகு-மிச்சாரூபநச்சினரெனின் - மும்மலத்தேது மின்மையதனறே-யிருவளர்முத்திப் பதமெனவியம்புக." எ-று. கண்டுகொள்க.

இனி மலத்தின் சத்தியாகிய காரியமழியு நித்தமாகிய காரணமழியாதென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "தெரிவரியமெய்ஞ்ஞானஞ் சேர்ந்தவாறே சிவப்பிரகாசிக்கு மிங்கே சீவன்முத்தருக்கு, மூரியமல மௌடதத்தாற் றடுப்புண்டவிடமுமொள்ளெரியி னொளிமுன்ன ரிருளுந்தேற்றின், வருபால்சேர்நீர்மருவு கலங்கலும்போலாகி மாயாதேதன்சத்தி மாய்ந்துகாயந், திரியுமளவும் முளதாய்ப் பின்புகாயஞ் சேராதவகைதானுநதேயுமன்றே." எ-று. கண்டுகொள்க. அன்றியும் ஞானாமிர்தத்திலும் "மிக்க-விடங்கெழுபெருவலி யுளங்கொளமந்திரத் - தடங்கியதன்மையு மற்றேகுடங்கரிற்-கலங்கனீரினலங்கிளர்விழுக்கா - லினைந்துமாறென விளங்கிறந்தகன்ற-பாசப்பெருவலி தீர்த்தனன் - மாசில்ஞானப் பெருந்தகையே." எ-று. கண்டுகொள்க.

இதனுற்சொல்லியது பாசமழியுமோவென்று மழியாதோவென்றுங் கேட்ட மாணவகனைநோக்கிப் பாசமழியில் நித்தியத்துக்கு மழிவுண்டாமென்றும் பாசமழியாதென்னில் ஞானம்பிரகாசியாதென்று மறுத்துப் பாசத்தின் சத்தி யழியுமன்றி நித்திய மழியாதென்று வருமுறைமையை யறிவித்தது. (௩௮)

---

வேறு—இது இந்தப் பேறடைந்தவரிடத்து மூலமல

மழியுமோவென்று வினவ வழியா தழியுமென்பதனைத் திருட்டாந்த பூர்வமாகவுணர்த்திற்று.

அழிந்திடும் பாசமென்னி னித்தமென் றுரைத்தல்வேண்டா-பாச மழிவாமென்னின் மூனறுமுதலு நித்தமென முகமஞ்சொல்லவேண்டுவ தில்லை,—அழிந்திடா தென்னின்ஞானமடைவது கருதவேண்டா - அழியாதென்னின் ஞானமுண்டாமென்று நினைக்கவேண்டா ஆறு லழிந்ததேதெனனில்,—அழிந்திடுஞ் சத்திநித்த மழிந்திடாது - இவனுடைய போதத்தைத் தெரியாதபடி மறைக்கின்ற காரியத்திற் கழிவுண்டாமத்தனை யொழியப் பாசத்தினுடைய வருதித்துவத்திற்கு அழிவில்லை. அஃதெப்படியென்னின,—ஒளியின்முன்ன ரழிந்திடுமிருளு நாச மடைந்திடா மிடைந்திடாவே - விளக்கின்முன்னில்லா விருளான தழிந்ததுமில்லை பிரகாசத்தின் முன்னின்றதூஉ மில்லை யதுபோலும். எ - று.

இருளுமொன்னு மும்மையை யழிதலு மிடைதலுமெனமாறி யுரைக்கப்பட்டது. இருளடைந்திடா வெனபன வொருமை பன்மை மயக்கம்.

---

மற்றுண்டான கன்மமுமாயையும் போகைக்கு வழியெங்ஙனேயென்று வினவ மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

எல்லையிற் பிறவிநல்கு மிருவினையெரிசேர் வித்தி
னெல்லையிலகலுமென்றவுடற்பழவினைகளூட்டுந் [தே
தொல்லையின் வருதல்போலத் தோன்றிருவினையதுண்
லல்லொளிபுரையுறா னத்தழலுறவழிந்துபோமே. ௩௯

மும்மையாம்வினையு முயங்கியமாயையுஞ்
செம்மையாலகலுந் திறந்தெரிந்துரைத்தது.

(இ-ள்.) எல்லையில் பிறவி நல்கு மிருவினை — அளவிடப்படாத ஜநநங்களைத் தருகிற புண்ணியபாவமாகிய சஞ்சித கன்மங்கள்

எரிசேர்வித்தின் தொல்லையினகலும் — அக்கினியைச்சேர்ந்த விதைகளைப்போல வாசாரியன் செய்யப்பட்ட தீக்ஷைகளினாலே விரைவிலே கெட்டுப்போம்

ஏன்ற வுடற் பழவினைகளொட்டும் — எடுத்தவுடலுக் கமைத்தபிராரத்த மந்த வுடலுள் ளதனையும் புசித்து அந்த வுடலோடே யொக்கக்கெட்டுப்போம்

தொல்லையில் வருதல்போலத் தோன்றிருவினையதுண்டேல் — முன்புண்டான ஜநநங்கடோறும் பிராரத்தகன்மம் புசிக்கச்செய்தே யாகாமியகன்ம மேறினாற்போல இப்பொழுது பிராரத்தகன்மம் புசிக்கச்செய்தே ஆகாமியங் கட்டுப்படாதோவெனனில் அப்படி யுண்டாகாது. வாதனுபலத்தாலும் அபுத்திபூர்வத்தாலும் புண்ணியபாவங்கள் மேலைக்கு ஜநநமாகக் கட்டுப்படுமாகில்

அல்லொளி புரையுஞானத் தழலுற வழிந்து போமே. — விளக்கின்முன் னிருள் போனாற்போல விவனிடத்தி லுண்டாயிருக்கப்பட்ட ஞானாக்கினியினாலே யழிந்துபோம். எ - று.

வி - பு. எல்லையில்லாத ஜநநங்களைத் தருகிற விருவினையென்றது பெங்ஙனேயென்னி லொவ்வொரு ஜநநங்களைபெடுத்தாலந்த ஜநநங்கடோறும் வெகுவிதமான ஜநநங்களைக் கட்டுப்படுத்துமென்றதெனவறிக. இதற்கு. பி - ம். இருபாவிருபஃதில். "அத்துவாமெத்தி யடங்காவினைகள்." எ - ம். இந்நூலினும். "முந்தறுகருந்துபயன்." எ - ம். வருமேறுக்குளைக் கண்டுகொள்க.

இங்ஙனங் கட்டுப்பட்டுக் கிடக்கிற சஞ்சிதகன்மங்களை யாசாரியன் தீக்ஷைகளிநுலே போக்குவனென்றதற்கு. பி-ம். சித்தியாரில். "மூன்றுதிறத்தணுக்கள்செய்யுங் கன்மங்கட்கு முன்னிலையா மூவிரண்டாமத்துவாவி, லூன்றமுறை யவையவருத்தி யறுத்துமல முதிர்வித் தரும்பருவ மடைதலுமே யாசாநுகித், தோன்றிநுகராதவகைமுற்செய்கனமத் துகளறுத்துங் கத்துவா தொடக்கறவேசோதித், தேன்றவுடற்கன்ம மநுபவத்திநுலறுத்திங் கினிச்செய்கன்ம மூலமலஞானத்தா லிடிப்பன்." எ-ம் போற்றிப் பஃறொடையிநும். "செய்ய திருக், கண்ணருளாலோக்கிக் கடியபிறப் பாற்பட்ட—புண்ணுயிருவினையும் போயகல." எ-து. கண்டுகொள்க.

இதநுற் சொல்லியது சஞ்சிதகன்மமாசாரியன் செய்யப்பட்ட தீக்ஷைகளிநுலே போமென்றும் பிராரத்தகன்ம முடலுள்ளமட்டும்புசித் துடலோடே யொக்கமாயுமென்றும் ஆகாமியகன்ம முண்டாநுலு மிவனிடத்தி லுண்டாயிருக்கப்பட்ட ஞாநுக்கினியிநுலே யோமென்று முறைமையு மறிவித்தது. (௲௬)

---

வேறு—இது மற்றைக்கன்மமு மாயையும் போம்வழியுணர்த்திற்று.

எல்லையில் பிறவிநல்கு மிருவினை யெரிசேர்வித்தினொல்லையினகலும் - முடிவில்லாத சனனங்களை யுண்டாக்குவதாய்ச் சடாத்துவாக்களிலுங் கட்டுப்பட்டுக் கிடப்பதாயிருக்கிற புண்ணியபாவங்களான சஞ்சிதகன்மத்துவ சோதனையான தீக்கையிலே யாசிரியன் பார்வையாலே தீசேர்ந்த வித்துப்போல விரையக்கெட்டுப்போம்,—ஏன்றவுடற் பழவினைகள்-எடுத்தவுடலுக் கடைத்த பிராத்த கன்மங்கள்,—ஊட்

டும் - அவ்வுடல் போமளவுநின்று புசிக்கும்படி புசிப்பிக்கும்,—தொல்லையின் வருதல்போலத் தோன்றிருவினையுண்டேல் - முன்பு கூடுவதுபோலத் தேகத்திற் பிராரத்தம் புசிக்கையிலே மருதிகளின் வாதனையாலே தோன்றப்பட்ட வாகாமிய முண்டாயிற்றாயின்,—அல்லொளி புரையுஞானத் தழலுற வழிந்துபோமே - (ஒளியல்லுப் புரைய) விளக்கின்முன் னிருட்போல ஞானாக்கினி யுறுதலா லவை யழிந்துபோம். எ - று.

இங்ஙனங் கன்மங்களில்லையாகவே மேன் மாயையுமில்லையென்பதாயிற்று.

பத்தாஞ் சூத்திரமாகிய ஆன்மலாப முற்றிற்று.

---

இங்ஙனஞ் சஞ்சிதகன்மமானது தீக்ஷைகளினாலே போமென்றும் பிராரத்தகன்ம மிந்த வுடலுள்ளமட்டும் புசித்துத் தொலையவேணுமென்றும் அதனா லுண்டாகப்பட்ட வாகாமிய கன்மமான தவர்களிடத் துண்டாகிய ஞானத்தினாலே போமென்றும் முன்னர்ச் செய்யுளிலே யருளிச்செய்கையினாலப்படி வாதிக்கப்பட்ட கன்மங்கள் போக்கிக்கொள்ளுகைக் கந்தஞானநிலைமை கைகூடாத வவதரத்தும் பரிபாகமாக ஆன்மலாபமாகிய பத்தாஞ் சூத்திரத்துக்கு மேலாக முற்கூறின ஆன்மசுத்தியாகிய ஒன்பதாஞ்சூத்திரத்தின் பகுதியாகய பஞ்சாக்ஷர தரிசனமாகிய ஐந்தெழுத் தருணிலையென்னும் அதிகாரம் வைக்கப்பட்டது.

அஃதாவது, பதிபசுபாசமென்று சொல்லப்பட்ட மூன்றுமுதலும் ஐந்துவகையாக நிற்கையா லந்தவைந்தினையுஞ் சிவ

னுடைய திருநாமமாகிய பஞ்சாக்ஷரமு மைந்தெழுத்தாகை யா லதிலேயடைத்துத் தரிசிப்ப தெனவறிக. அது ஐந்திலும் நின்றமுறைமை மேல் "திருவெழுத்தைந்தில்" என்னுஞ் செய் யுளிலே கண்டுகொள்க.

இவ் வதிகாரத்துக்கு முந்தின செய்யுளாகிய "பந்தமா னவையறுத்து" என்னுஞ் செய்யுளுக்குந் தொந்தனை வருமா று:—அஃதாவது அப்படிச் செய்யப்பட்ட தீக்ஷைகளினாலே சஞ்சிதகன்மம் போனாற்போல மற்றுள்ள கன்மங்கள் போ காதிருப்பா னேனென்ற மாணவகனை நோக்கிப் பிராரத்தக ன்ம மிந்த வுடலுள்ளமட்டும் புசித்தே தொலையுமென்பதற் கொரு திருஷ்டாந்தமுகமாக வருளிச்செய்து அப்படி வாதி க்கப்பட்ட கன்மங்கள் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைக் குருமுகாந்த ரமாக வறிந் துச்சரிக்கிற சிவஞானிகளுக்குப் புசிப்புமாத்தி ரமாய் வந்துபோகிறதொழிய அவர்களை மேலிட்டு வருத்த மாட்டாதென்னு முறைமையை மேலருளிச்செய்வா னெடுத் துக்கொண் டருளியது.

பந்தமா னவையறுத்துப் பவுதிக முழுதுமெல் லைச், சந்தியா தொழியாதிங்குத் தன்மைபோல் வினை யுஞ்சாரு, மந்தமா திகளிலாத வஞ்செழுக் தருளினா லே, வந்தவா றுரைசெய்வாரை வாதியா பேதி யாவே. (சO)

உடலுறுநுகர்வு முற்றிடும்வினையு
மிடர்படவஞ்செழுத் தியம்புகவென்றது.

(இ-ள்.) பந்தமா னவையறுத்துப் பவுதிக முழுதுமெல்லைச் தீக்ஷைகளினாலே கன்மங்களைப் போக்கினாலும் பிராரத்தகன்ம மிந்தப்பூததேக முள்ளமட்டும் பொருந்துதல் தவிராது. அஃதென்போலவென்னில்

சந்தியாதொழிடாது

இக்குத் தன்மைபோல்

பெருங்காயத்தி னியல்புபோல. அஃதாவது பாத்திரத்திலே யிட்டுவைத்த பெருங்காயமானதை வைத்தவிடை குறையாமல்வாங்கிப் பாத்திரத்தைத் தூய்தாய்க்கழுவிப்போட்டாலு மந்தப்பாத்திர முள்ளமட்டு மதிலுள்ள கந்தத்தின் வாசனை போகாதாற்போல வென்றதெனவறிக. அப்படிப் பிராரத்தகன்ம முண்டாகவே

வினையுஞ் சாரும்

ஆகாமியகன்மமு மேறுதிராது. அப்படி யிங்ஙனம் பொருந்தப்பட்ட பிராரத்தமு மதனாலுண்டாகிய வாகாமியமும்

அந்தமாதிகளிலாத வஞ்செழுத்தருளினாலே வந்தவாறுணாசெய்வாரை

முடிவுமுதலு மில்லாத ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஆசாரியன் கடாக்ஷித்த முறைமையிலே யுச்சரிக்கப்பட்ட சிவஞானிகளை

வாதியார் பேதியாவே.

அந்தப்பிராரத்தகன்மம் புசிப்புமாத்திரமாய் வந்துபோகிறதொழிய அவர்களிடுபடத்தக்கதாக மேலிட்டு வருத்தாது. அவர்களப்படி யீடுபட்டு வருந்தாது கொண்டே மற்ற வாகாமியகன்மமு மேறுது. அப்படியே யேதிற்றுகிலும் பேதமாக்கிவித்து ஜநநத்தை யுண்டாக்காது. எ-று. அன்றியு மிந்தப்பதத்துக்குப் பிராரத்தகன்மம வாதியாது ஆகாமிய கன்மம் பேதியாதென்பதைப் பிராரத்த மொன்றிலேயும் வைத்துக்கொண் டொருமையாகக் கூறுவாருமுளர். அதுவழக்கல்ல வெனவறிக. அதற்குக்

குற்றமேதென்னில் அப்படிப் பிராரத்த கன்மம் வாதியாதென்றால் பவுதிகமுழுதுமெல்லைச் சந்தியா தொழியாது என்ற பதத்துக்குப் பிராரத்தகன்மம் பூததேகமுள்ளமட்டும் பொருந்துதல் தவிராதென் றுறுதிகூற வழக்கில்லையா மெனவறிக. அன்றியும் சித்தியாரில். "ஏன்றவுடற்கனைமமறுபவத்திலறுத்து." எ-ம். திருவருட்பயனில் "ஏன்றவினை யுடலோடேகும்." எ-ம். நூல்களில் வரும் பொருளுக்கும் விரோதமுமா மெனவறிக.

இதுவன்றியும் பிராரத்தகன்மம் பேதியாது ஆகாமிய கன்மம் வாதியாதென்பாருமுளர். அதுவும் வழக்கல்லவெனவறிக. அதற்குக் குற்றமேதென்னில் பேதியாதென்பது போகாதென்னும் பொருட்பெற்றுநிற்கையால் பூததேகமுள்ளமட்டும் பிராரத்தகன்மம் பொருந்துதல் தவிராதெனவுமுற் கூறுகையாலே மீளவு மதனையிரட்டித்துப் பொருட்படுத்த வேண்டியதில்லையாம் அல்லது உம் பஞ்சாக்ஷரத்தை யுச்சரிக்கிறவர்களுக்குப் பிராரத்தகன்மம் போகாதெனபதுவழக்கல்ல. அஃதெங்ஙனேயென்னில் பஞ்சாக்ஷரத்தை யுச்சரித்தால் கன்ம நீங்குமென்பதன்றிப் போகாதென்ப தெது போலவென்னில் ஔஷதங்கொண்டாலும் வியாதிபோகாதென்பதற் கொக்குமெனவறிக. ஆகையால் பிராரத்தகன்மம் பேதியாதென்பது வழக்கல்லவெனவறிக.

அன்றியும் வாதியாபேதியா வென்பதை ஆகாமிய மொன்றிலேயும் வைத்துக்கொண்டு பஞ்சாக்ஷரத்தை யுச்சரிக்கிற சிவஞானிகளுக்கு ஆகாமியகன்மம் வாதியாது அல்லாமல் வாதித்ததாகிலு மதனாலே பேதித்து ஜநநமுண்டாக்காதென்பாருமுளர். அதுவும் வழக்கல்ல வெனவறிக. அதற்குக் குற்றமேதென்னில் இச்செய்யுளிலே பவுதிக முழுதுமெல்லைச்

சந்தியாதொழியாது என்று பிராரத்த கன்மத்துக்குச் சொல் லுகையினாலும் வினையுஞ்சாருமென்று ஆகாமிய கனமத்துக் குச் சொல்லுகையினாலும் அன்றியுமிதுவே கருத்தென்பதை ப்பற்றி அம்பலநாதத் தம்பிரானார் இச்செய்யுளுக்குக் கருத் தாக வருளிச்செய்ததும் "உடலுறுநுகர்வு முற்றிடும்வினையு- மிடர்படவஞ்செழுத் தியம்புகவெனறது." என்று பிராரத்த த்திற்கும் ஆகாமியத்திற்குமாக வருளிச்செய்கையினால் ஆகா மிய மொன்றிலுங்கூட்டிப் பொருட்படுத்துகை வழக்கல்ல வென்வறிக. ஆகையால் பிராரத்த கன்மமானது சிவஞானிக ளுக்கு வாதனுபலத்தால் புசிப்புமாத்திரமாய் நிற்பதொழிய சிவஞானிகளை மேலிட்டு அவர்களீடுபடத்தக்கதாக வருத் தாதெனபதே வாதியாதென்பதற்கு வழக்கெனவறிக.

அப்படிப் பிராரத்தகன்மம் வந்து தாக்கினாலும் அதனா லீடுபட்டு வருத்தப்படாமல் நின்றவர்களு முண்டோவென் னில் அபபடியுண்டு. அஃதியாரோவெனனில் அப்பரொன்றுந் திருநாவுக்கரசு தம்பிரானார் சமணசமயத்தைவிட்டுச் சைவ த்திலேவந்ததற்கு அந்தச்சமணர் வெகுண்டுகொண்டு வேண் டும்வருத்தங்கள் செய்தவளவிலும் அதனாலீடுபட்டு வருந்தா மல் நின்றதுண்டு. அதற்கு. பி-ம். திருக்களிற்றும்படியாரில். "கொல்கரியினீற்றறையி நஞ்சிற்கொலைதவிர்த்தல், கல்லேமிதப் பாகக் கடனீந்தல்-நல்ல, மருவார்மறைக்காட்டில் வாசதிற ப்பித்தல், திருவாய்மொராளிச்செயல்." எ-து. கண்டுகொள்க. அப்பர் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யுச்சரித்துக்கொண்டு நிற்கவே யந்த வமணர்செய்யப்பட்ட வருத்தங்களா லீடுபட்டதில்லை யென்பதற்கு. பி-ம். தேவாரத்தில் "சொற்றுணைவேதியன் சோதிவானவன், பொற்றுணை திருந்தடி பொருந்தக்கைதொ ழுக், கற்றுணைப்பூட்டி யோர்கடலிற்பாய்ச்சினு, நற்றுணையா

வது நமச்சிவாயவே.'' எ-து. கண்டுகொள்க. அன்றியுஞ் சிவஞானிகளிடத்திலே கன்மங்கள்வந்து தாக்கினாலு மதனால் வருந்தார்களென்பதற்கு. பி-ம். சித்தியாரில் "அங்கித் தம்பனைவல்லார்க் கனல்சுடாதாகு மெனடத மந்திரமுடையார்க் கருவிடங்களேறு, வெங்குற்றகன்மமெலாஞ் செய்தாலுஞானிக் கிருவினைகள் சென்றணையா முற்செய்வினையிங் குத், தங்கிப்போம்பாத்திரமுங் குலாலன்வினை தவிர்ந்த சக்கரமுங்கந்தித்துச் சுழலுமாபோன், மங்கிப்போய்வாதனையா லுழல்விக்குமெல்லா மலங்களும்பின் காயமொடு மாயுமன்றே." எ-ம். ஞானாமிர்தத்தில் "மண்வினை மாக்க டம்வினை முடியா-திகிரியுருட்டி யொருவியாங்கு-வருதலோவா மற்றுங் குவிவாய்த்-தசும்புரையிங்காங் கசும்புறத்துடைத்து-விருங்கடியிகவாப் பெருங்கடனல்லதை-யுடையதையுடையரோ வினையுணர்ந்தோரே." எ-து. கண்டுகொள்க.

அந்தமாதிகளிலாத வைந்தெழுத்து. எ-கு. ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைத் தோற்றமு மீறுமில்லாதெனற தேதென்னில் சிவனுக்குத் தோற்றமு மீறுமில்லாததுகொண்டே ஸ்ரீ பஞ்சாக்ஷரமுஞ் சிவனுடைய திருநாமமாகையா லதனையுமப்படிச் சொல்லப்பட்டதெனவறிக. இந்தப் பஞ்சாக்ஷரத்தைக் குருமுகாந்தரமாகவறிந் துச்சரிக்கிற சிவஞானிகளை யந்தக்கன்மங்கள் மேலிட்டு வருத்தாதென்றதற்கு. பி-ம். தேவாரத்தில் "விண்ணுறவடுக்கிய விறகின்வெவ்வழ, லுண்ணியபுகிலவை யொன்றுமில்லையாம், பண்ணியவுலகினிற் பயின்றபாவத்தை, நண்ணிநின்றறுப்பது நமச்சிவாயவே." எ-ம். அன்றியு மந்தப் பஞ்சாக்ஷரத்தை யறிந் துச்சரிக்கிறவர்க ளிடத்திலே சிவன சாந்நித்தியமாவனென்பதற்கு. பி-ம். தேவாரத்தில் "ஏதுமொன்று மறிந்திலராயினு, மோதியஞ்செழுத் துள்ளு

ணர்வார்கட்குப், பேதமின்றி யவரவருள்ளத்தே, மாதுந் தாமு மகிழ்வர்மாற்பேறரே." எ-ம். அன்றியும் சித்தியாரில் ஒன்பதாஞ்சூத்திரத்தில் "அஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க மதியருக்கனனை யரவம்போற்றோன்று மான்மாவி லரனே." எ-ம். கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது ஆன்மாக்களுக் குண்டாகப்பட்ட கன்மங்களை தீக்ஷையினாலே யாசாரியன் கிருபைசெய்து போக்கினாலும் பிராரத்தகன்ம முடலுள்ள மட்டும் புசித்தே தொலையுமென்றும் அங்ஙனம் பிராரத்தகன்ம முண்டாகவே ஆகாமியகன்ம முண்டாமென்றும் அப்படி யுண்டாகப்பட்ட கன்மங்க ளிரண்டும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைக் குருமுகாந்தரமாகப்பெற் றுச்சரிக்கிற சிவஞானிகளுக்குப் பிராரத்தகன்மம் புசிப்புமாத்திரமாய் வந்துபோகிறதொழிய மேலிட்டு வருத்தாதென்றும் அது அப்படி வருத்தாதுகொண்டே யதனாலுண்டாகிய வாகாமியகன்மமும் பேதித்துக்கிளைத்து ஜநநத்தை யுண்டாக்காதென்றும வருமுறைமையை யறிவித்தது. (௮)

---

வேறு—இனி நிருத்தமுறையானே இந்த வாத்மலாபமான நிட்டைகூடாதவர்களுக்கு முற்கூறிய ஒன்பதாஞ்சூத்திரத்தின் பகுதியாகிய ஸ்ரீ பஞ்சாக்கரத்தை மூன்று செய்யுளா லுணர்த்துகின்றார். அவற்றுளிஃ ததனை யுச்சரிக்குமுறைமையா லுச்சரிக்கப் பிராரத்தகன்மமு மாகாமியகன்மமும் வாதியாவென்ப துணர்த்திற்று.

பந்தமா னவையறுத்துப் பவுதிகமுழலுமெல்லை-ஞானதீக்கையாலே மலத்திரயபந்தங்களை யாசாரியனீக்கி யுண்மையிலே நிறுத்த லிவனுக்குப் பூதசம்பந்தமானது வெந்தப

டாம்போலத்தோன்றி யிருக்கையினும் குயமகன் றிரிகையானது வனைகலம் வனைந்து கைவிட்டாலும்விடாது சுழலுமாறுபோல வாதனையாலே முன்புபோல வியாபரிக்குமிடத்தில்,—சந்தியா தொழியாதிங்குத் தன்மைபோல - தானிருந்த பாத்திரமிருக்குமளவுந் தானில்லாதிருந்துந் தன்வாதனைநீங்காத பெருங்காயத்தின் குணம்போலப் பிராரத்துவ வாதனை தாக்காதிராது,—வினையுஞ்சாரும் - அதனால் யானெனதென்னு மமதைகொண் டாகாமியமும் பொருந்தும். போக்குமுபாய முன்சொன்ன ஞானாக்கினியா லன்றியு முண்டோ வெனின்,— அந்தமாதிகளில்லாத வஞ்செழுத்தருளினாலே வந்தவா றுரைசெய்வாரை யாதியாபேதியாவே-ஆயினு மந்திரசத்தி யுடையவர்கட்கு விஷமுதலிய குரூரசத்திகடாக்காதவாறுபோல முடிவுமுதலுமில்லாத ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யாசாரிய ரனுக்கிரகத்தால் வந்தபடியே யறிந்தனுபவ பூருவமாக வுச்சரித்தவர்களைப் பிராரத்துவ கன்மம் வாதிக்கமாட்டா. எ - று.

அறுத்து அறுக்கவெனத்திரிக்க. சந்தித்தல் தாக்குதல். வந்தவா றென்பதற்குத் தோன்றினமுறை யறிந்தென்பாருமுளர்.

---

இங்ஙனஞ் சொல்லப்பட்ட பஞ்சாக்ஷரத்திலே பதிபசுபாசங்கள் மூன்றும் ஐந்துவகையாக நின்ற முறைமையெங்ஙனேயென்றும் இதனை யாருச்சரிக்கப்படுமென்றும் வினவ மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

திருவெழுத் தைந்திலான்மாத் திரோதமா சருள்சிவன்றும், தாநடு நின்றதொன்றுந் தன்மையுந் தொன்மையாகி, வரு * மநமிகுதியாலே வாசியிலா

சையின்றிக், கருவழிச் சுழலுமாறுங் காதலார்க் கோதலாமே. (சக)

திதிலாவுண்மைத் திருவைந்தெழுத்தையுங்
காதலாமவர்க் கோதலாமென்றது.

(இ-ள்.) திருவெழுத்தைந்திலான்மாத் திரோதமாசருள் சிவன் — சிவனுடைய திருநாமமாகிய நமசிவாய வென்ற ஐந் தக்ஷரத்திலும் ஆன்மாவுந் திரோதசத்தியு மலமும் அருளும் சிவமும் என்று சொல்லப்பட்ட ஐந்துமுறைது நிற்கும். அவையாவன? யகாரத்திலே யான்மாவும் நகாரத்திலே திரோதசத்தியும் மகாரத்திலே மலமும் வகாரத்திலே யருளும் சிகாரத்திலே சிவமுமாக நின்றதெனவறிக. இவை யைந்து முதலினுஞ் சிவமுன்னாக வுச்சரிக்கும்பொழுது

சூழ்தர நடு நின்றது — திரோதமு மலமு மொருபாலும் அருளுஞ்சிவமு மொருபாலுமாக முன்பின் சூழ்ந்துநிற்க நடுநின்றது ஆன்மா

ஒன்றுந் தன்மையுந் தொன்மையாகி வரும் — நடுவேநின்ற வான்மாவானது அந்த வருளறிவித்தா லதனாலே யறிந்து மற்ற மலமறைத்தா லதனாலே மறைப்புண்டும் இங்ஙன மிரண்டோடுங்கூடி யொன்றுபட்டது வதுவாய் நின்றாலுந் தானொருமுதலாய்வருகிறது அநாதியேயுடையது. அப்படி யிருக்கவும்

மந மிகுதியாலே — மவ்வாகியமலமும் நவ்வாகிய திரோதசத்தியு மேலிட்டு நிற்கையாலே

| | |
|---|---|
| வாசியிலாசை யின்றிக் கருவ ழிச்சுழலும் | வவ்வாகிய வருளிலுஞ் சிவ்வாகிய சிவத்திலு மாசையற்று ஜநநமாண துக்கத்திலே நின்றழுந்தும் |
| மாறுங் காத லார்க்கோதலா மே. | அந்த மலத்தின் கௌரவநீங்கி யருளிலே யாசையுடையவர்களுக்கு இந்தப் பஞ்சாக்ஷரத்தை யுச்சரிக்கலாம். எ - று. |

* மநமிகுதி என்பதை மலமிகுதியெனப் பாடமோதுவாருமுளர்.

று-ம். பதிபசு பாசமென்று சொல்லப்பட்ட மூன்றுமுதலும் ஐவகையாக நின்றதற்கு வழியெதென்னிற் சிவ்விலும் வவ்விலும் நவ்விலும் பதியின் கூறாகிய சிவமும் அருளுந் திரோதசத்தியு நின்றதெனவறிக. யவ்விலே பசுவாகிய வான்மா நின்றதெனவறிக. மவ்விலே பாசமாகிய மல நின்றதெனவறிக.

இதிலே முற்கூறிய பதியின் கூற்றுக்குப் பாசத்தின் பகுதியா யிருக்கப்பட்ட திரோதசத்தியைக் கூட்டினதேதென்னில் அஃதாவது ஆன்மாவை மறைக்கப்பட்ட வாணவமலத்தைப் பாகம்வருத்தவேண்டி யருளானது திரோதமாய்நின்று காரியப்படுத்துகையா லதனையும் பதியின்கூறாகச் சொல்லப்பட்டதெனவறிக.

அப்படியாளு லந்தவருளுக்குத் திரோதசத்தியென்று பேராகவேண்டியதே னெனென்னி லந்த மலத்தோடுங்கூடிக் காரியப்படுத்துகையா லவதரப்பெயரான தெனவறிக. இதற்கு. பி - ம். சித்தியாரில். "தூயவன் றனதோர்சத்தி திரோதான கரியதென்றும்." எ - ம். அன்றியும் இந்நூலினும் "முற்றினமருவு திரோதாயி கருணையாகி." எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

நடுநின்றதொன்ருந்தன்மையுந் தொன்மையாகிவரும். எ-கு. ஆன்மா வருளோடு மலநதோடுங்கூடி யொன்றுபட்டு வருமென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "சத்தசத்தறிவதான்மாத் தான்சத்துமசத்துமன்று, நித்தனுய்ச் சதசத்தாகி நின்றிடு மிரண்டினபாலும்." எ-து. கண்டுகொள்க.

மகமிகுதியாலே வாசியி லாசையின்றிக் கருவழிச்சுழலும். எ-கு. நவ்வாகிய திரோதத்தோடு மவ்வாகிய மலத்தோடுங்கூடிப் பிரபஞ்சப்பற்றுவிடாமல் நிற்குமளவும் ஜநநமரண துக்கத்திலே நின் றழுந்துமென்றதற்கு. பி-ம். சித்தியாரில். "மலமாயைகன்மமாயே யந்திரோ தாயிமன்னிச், சலமாரும் பிறப்பிறப்பிற் றங்கி எ-து. கண்டுகொள்க.

மாறுங்காதலார்க் கோதலாமே. எ - கு. பிரபஞ்சப்பற்றுவிட் டருளிலே யாசைப்பட்டவர்களுக் கென்றதற்கு. பி-ம். திருவாசகத்தில். "அருளைப்பெறுவா ளுசைப்பட்டேன கண்டா யம்மானே." எ-ம். "ஆசைப்பட்டே னுட்பட்டே னுன்னடியேனே." எ-ம். கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது ஸ்ரீ பஞ்சாக்ஷரத்திலே பதிபசுபாசமூன்றும் ஐந்தாக நின்ற முறைமையும் இதிற்பசுவாகிய வான்மா அந்தவருளை யிழந்து மலத்தோடுங்கூடி ஜநநமரண துக்கப்பட்டு நிற்குமுறைமையும் இந்தமலத்தின் மேலீடுநீங்கி யருளிலே யாசைப்பட்டவர்களுக் கிந்தப் பஞ்சாக்ஷரத்தை யுச்சரிக்கலா மென்னு முறைமையு மறிவித்தது. (சுக)

---

வேறு—இஃது தஞ்செழுத்தாலுந் திரிபதார்த்தங்க ணின்றமுறைமையு மின்னூர்க் குரைக்கலாமென்பது மூணர்த்திற்று.

திருவெழுத் தைந்திலான்மா திரோதமா சருள்சிவன்சூழ்ந் தரநடு நின்றது - ஸ்ரீ பஞ்சாக்கரத்திலே யாத்மவட்சரமாவது

திரோதானசத்தி யாணவமல மருள் சிவமாகிய வட்சரங்க ளைஞ்சும் முன்னிரண்டும் பின்னிரண்டுமாகச் சூழ்ந்துநிற்ப நடுவேநின்றதாயிருக்கும்,—ஒன்றுந் தன்மையின் றொன்மையாகிவரும்-இங்ஙனமிவ்வைந்து மொரு தொடரான வியல்பினோடே— பழையதாய் வாராநிற்கும்,—மந மிகுதியாலே வாசியாலாசையின்றிக் கருவழிச்சுழலும் - ஆத்மாக்க ளிவ்வைந்தனுண் மல திரோதாயிகளுடைய மேலீட்டாலே யருளிலுஞ் சிவத்திலும் விருப்பமில்லா திருக்கையினாலே சனனங்களிலே சுழலாநிற்கும்,—மாறுங் காதலார்க்கோதலாமே - இந்தச் சனனங்க டீர்தற்குக் காரணமான காதலையுடையார்க்கே இதனுண்மையைச் சொல்லலாம். எ-று.

பிரிநிலையேகார நான்கனுருபி லேற்றப் பட்டது. இன்றிஇன்றுக. வாசியி லாசையின்றுதல் நமமுதலாக வுச்சரிக்கை. அதுமேற் சிவமுன்னாக வோசைகொ ளென்பதனாலுஞ் சூழ்கின்ற நான்கனுட் டிரோதாயியை முதற்சொல்லுகையாலு மறிக. இனி ஏகாரத்தை யெதிர்மறையாக்கிக் காதலார்க் கிப்படி சபிக்கலாகா தென்பினுமாம்.

---

இங்ஙனஞ் சொல்லப்பட்ட மலமுந் திரோதாயியு நீங்கி யந்தவருளையுஞ் சிவத்தையும் பெறும்வழி யெப்படியென்று வினவ மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

ஆசறு திரோதமேவா தகலுமா சிவமுன்னாக,
வோசைகொ ளதனினம்மே லொழித்தரு ளோங்கு
மீள, வாசியை யருளுமாய மற்றது பற்றுவற்றங், கீச
னி லேகமாகு மித்திரு வெழுத்தினீடே. (௬௨)

ஓங்கியதிருவெழுத் தினையுணர்ந்துரைப்பவர்
நீங்கருஞ்சிவத்தினை நீங்காரென்றது.

(இ-ள்.) ஆசு அஞ்ஞானமாகிய மலமும் அதனோடுங்கூடிறுதிரோதமேவா யிருக்கப்பட்ட திரோதானசத்தியும் ஆன்மா

| | |
|---|---|
| தகலுமா சிவமு | வைப் பொருந்தாம னீங்கும்படி சிவத்தை |
| ன்னுக வோசை | முன்னுக வுச்சரிக்க |
| கொள் | |
| அதனில் | நீயு மப்படி யுச்சரிப்பையாமாகில் |
| நம்மே லொழி | நவ்வாகிய திரோதசத்தியு மவ்வாகிய மல |
| த்தருளோங்கும் | த்தின் மேலீட்டைநீக்கி யருளாகநின்று பிரகா<br>சிக்கும். அதுவுமன்றியே |
| மீள வாசியை | அங்ஙன மலத்தினின்று மீளவிட்ட வவ்வா |
| யருளும் | கியவருள் சிவ்வாகிய சிவத்தையுந் தாராநிற்கும் |
| மாயா | அப்படி மலபாகம்வந்த மகத்தான வான்மா |
| மற்றது பற்று | முன்சொன்ன வருள்தாரகமாகச்சென் றந் |
| வுற்றங் கீசனி | தச் சிவத்தோடுங்கூடி யிரண்டறநின் றநுப |
| லேகமாகும் | விக்கும் |
| இது திருவெ | இங்ஙனஞ் சொல்லப்பட்ட விது ஸ்ரீ பஞ் |
| ழுத்தினீடே. | சாக்ஷரத்தின் முறைமையாம். எ - று. |

று-ம். ஆசென்றதைக் குற்றத்தையுடைய மலமென்றதேதெ ன்னில் ஆணவமலம் ஆன்மபோததோடுங்கூடி யஞ்ஞானத்தை விளைத்துநிற்கையா லெனவறிக. இதற்கு. பி - ம். சித்தியாரில். "என்று மஞ்ஞானங்காட்டு மாணவமிசைந்து நின்று." எ - து. கண்டுகொள்க.

உறுதிரோதமென்றதை ஆணவமலத்தோடுங் கூடிநின்று பாகம் வருத்தப்பட்ட திரோதாயி யென்றதேதென்னில் ஆன்மா வொடு மநாதியே கூடிவரப்பட்ட ஆணவமலத்தைப் பாகம்வருத் தவேண்டி யருளாகிய கிருபாசத்தி யதனோடுங்கூடித் திரோமாய் மறைத்துநின்றதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "தூய வன்றனதோர்சத்தி திரோதான கரியதென்றும்'.. எ-ம். அன்றி யும் இந்நூலினும்." பாகமாம் வகைநின்று திரோதானசத்தி பண் ணுதலான் மலமெனவும் பகர்வர்." எ-ம். கண்டுகொள்க.

சிவமுன்னாக வோசைகொள் என்று சர்வமும் சிவசேட்டை யாலொழிய முடியாதாகையாலே சிவத்தை முன்னிட்டுக்கொண்டு நிற்கவென்றதெனவறிக. இதற்கு. பி-ம். திருக்களிற்றுப் படியாரில். "சிவமுதலேயன்றிமுத லில்லையென்றும்" எ - து. கண்டு கொள்க.

நம்மேலொழித்தருளோங்கும். எ-கு. நவ்வாகிய திரோதசத்தி மவ்வாகிய மலத்தின்மேலீட்டை நீக்கி யருளாய்நின்று பிரகாசிக்குமென்றதற்கு. பி-ம். இந்நூலில் "முற்சின மருவுதிரோதாயி கருணையாகித் திருந்திய சத்திநிபாதந்திகழும்" எ-ம். திருவெம்பாவையில். "பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்." எ-ம். வருமது கண்டுகொள்க.

மாயாவென்றதை மகத்தான வான்மா வென்றதே தென்னில் அந்தச்சிவத்தை முன்னிட்டுநின் றுச்சரிக்கையிறு லெனவறிக. இதற்கு. பி-ம். திருவாசகத்தில். "யானேயோ தவஞ்செய்தேன் சிவாயநமவெனப் பெற்றேன்." எ-து. கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது அந்தமலங்க ணீங்கத்தக்கதாகச் சிவ முன்னாக வுச்சரித்தால் முன்பு திரோதமாய் நின்ற வருளானது அந்தச்சிவத்துடனே கூட்ட ஆன்மா வந்தச் சிவத்தோடுங் கூடிப் பிரிவறநிற்கு முறைமையை யறிவித்தது. (சஉ)

---

வேறு—இம் மந்தவனை யுச்சரிக்கு முறைமையு மதனாற் பெறும் பயனு முணர்த்திற்று.

ஆசுறு திரோதமேவா தகலுமா சிவமுன்னாக வோசைகொள்—ஆணவமு மதன் வழிபொருந்தின திரோதாயியு முன்னைப்பொருந்தாமல்விட்டு நீங்கும்படி சிவமுதலாக சபிப்பாயாக,—அதனின்—அங்ஙனம் சபித் ததனாலே,—நம்மே லொழித்தரு ளோங்குமீள—நகாரமான திரோதான சத்திதானே திரும்ப மேலான மகாரமாய

மலத்தைப்போக்கி யனுக்கிரக சத்தியாக மேலிடும்,—வாசியைய ருளும் - அங்ஙன மேலிட்டுத் தனக்கு மேலாகிய சிவத்தைத்த ரும்,—மாய-அங்ஙன மதுதருதலான மகத்தாகிய யசாரமான வா த்மாவானது,—மற்றது பற்றுவற்றிங் கிசனி லேகமாகும்-அந்த வருளைபற்றுக் கோடாகப் பொருந்தி யவ்விடத்திலே முற்றுண ர்வுமுதலிய சட்குணங்களாலே சிவனைப்போன்று கலப்பினாலே யொன்றும்,—இது திருவெழுத்தி னீடே - இதுவே ஸ்ரீ பஞ்சாக் கரத்தி னுண்மை. எ - று.

அதனின் என்பது ஏதுவில் வந்த வைந்தாமுருபு, இதற்குப் பலவாறு முரைப்ப.

☞ ஐந்தெழுத்தருணிலை முற்றிற்று.

---

மேலிங்ஙன முன்னருளிச் செய்யப்பட்ட வுண்மை நிஷ் டையாலு முபாயநிஷ்டையாலு மிப்பொழு தருளிச்செய்த வை ந்தெழுத்தருணிலையாலுங் கன்மக்ஷயம்வந்த ஜீவன்முத்தர்களது தன்மையுணர்த்துவா னெடுத்துக்கொண் டருளியது.

இதற்கு வகையேதென்னில். "மாயாமற்றது பற்றுவற்றிங், கிசனிலேகமாகும்." எ-று. ஆன்மா சிவனோடே பொருந்தப்ப ட்டு நிற்குமென்னும் விதியைப்பற்றிச் சிவனோடு மிரண்டறக்கூ டிநின்றே மலமாயா கன்மங்களைப் போக்கிக்கொள்ள வேண்டு கையால் ஐந்தெழுத்தருணிலைக்கு மேலாகப் பதினோராஞ் சூத்தி ரமும் பன்னிரண்டாஞ் சூத்திரமுமாகிய அணைந்தோர்தன்மையெ ன்னு மதிகாரம் வைக்கப்பட்டது.

இவ்வதிகாரத்துக் கந்தச் சூத்திர மிரண்டு நின்றதற்கு வழி யேதென்னில் சிவஞானபோதத்தில். "காணுங் கண்ணுக்குக் கா ட்டுமுளம்போற், காணவுள்ளத்தைக் கண்டுகாட்டலி, னயரா வன்பி னரன்கழல்செலுமே." என்கிற பதினோராஞ் சூத்திரத்துக்

ருக் கருத்துப் பரமேஸ்வரன் ஸ்ரீபாதங்களையணையுமா றுணர்த் துதனுதலிற் றென்றதனுலும் பன்னிரண்டாஞ் சூத்திரமாகிய "செம்மலர்நோன்றாள் சேரலொட்டா, வம்மலங்களைந் தன்பரொ டுமரீஇ, மாலறநேய மலிந்தவர்வேடமு, மாலயந்தானு மரனெ னத்தொழுமே." என்பதற்குக் கருத்து அசிந்திதனுய் நின்ற பதி யைச் சிந்திதனுய்க்கண்டு வழிபடுகைக் கருளிச்செய்கையினுலும் இந்நூலினு மிவ்வதிகாரத்துச்கு வகுத்த செய்யுளாகிய "தீங்குறு மாயை" என்ற விருத்தந்தொடங்கி "தொண்டர்களிடம்" என்ற விருத்தமுடிவாகிய செய்யுளாறினுள்ளும் "தீங்குறு" "குறிப்பி டம்" "அகம்புறம்" அண்டம்" "மண்முதல்" என்னுஞ் செய்யுளை ந்தினும் பரமேஸ்வரனது ஸ்ரீபாதங்களை யணைந்துநிற்கு முறை மையை யருளிச் செய்கையால் பதினேராஞ் சூத்திரமாகவும் "தொண்டர்கள்" என்ற செய்யுளொன்றும் அசிந்திதனுய்நின்ற பதியைச் சிந்திதனுகக் கண்டு நிற்கப்பட்ட திருவேடமும் சிவா லயமும் சிவனெனக்கண்டு வழிபடுகைக் கருளிச்செய்கையா லிது பன்னிரண்டாஞ் சூத்திரமாகவும் நின்றதெனவறிக.

அப்படி யிந்தச் சூத்திரங்க ளிரண்டினு நின்றகருத் திவ்வ திகாரத்துக்கு வகுத்த செய்யுட்களில் நின்ற முறைமை யெங்ங னேயெனில் "நேயத்தோங்குணர் வகத்தடங்கி" எ-ம். உறக்கு று பவர்போல்வாய்மை யொழிந்தவை யொழிந்துபோமே." எ-ம். "ஞானந்திகழ்ந் தகம்புறமென்னுத செம்மையார் நன்மையோ ரே." எ-ம். "கண்டதோர்பொருளை யந்தக் கருத்திறுற் காணிம் முனே, யண்டநாயகனூர்மேனி யானதே லையமின்றே." எ - ம். "ஞானக், கண்ணினுலன்றி யந்தக்கருத்தினு லெவையுநோக்கி" எ-ம். பரமேஸ்வரனோடு மிரண்டறக்கூடி நிற்குமுறைமையை யருளிச்செய்கையா லிச்செய்யுளைந்தும் பதினேராஞ் சூத்திரமாக நின்றதெனவறிக.

அன்றியும் "தொண்டர்களிடத்தும்" என்றவிருத்தமும் திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் அரன்டருங் கண்டிலாத வண்ணலே யெனவணங்கிநிற்கைக் கருளிச்செய்கையால் இது வொன்றும் பன்னிரண்டாஞ் சூத்திரமாக நின்றதெனவறிக.

இந்தச் செய்யுளாறினுள்ளும் "தீங்குறுமாயை" என்ற செய்யுளுக்குத் தொந்தனை வருமாறு.

இங்ஙன முற்கூறிய வகைகளாற் கன்மக்ஷயம்வந்த ஜீவன்முத்தர்கள் வாதனுபலத்தால் மல மாயா கன்மங்கள் மேலிடாமலுயிர்க் குயிராய் நிற்கிற சிவனுடைய திருவருள்ஞானத்தோடுங் கூடி யிரண்டறநிற்கு முறைமையை யருளிச்செய்வா னெடுத்துக் கொண்டருளியது.

தீங்குறு மாயைசேரா வகைவினை திரிவிதத்தா
னீங்கிட நீங்காமூல நிறையிரு ளிரியநேயத்
தோங்குணர் வகத்தடங்கியுளத்துளின் பொடுங்கநேரே
தூங்குவர் தூங்கியேகத் தொன்மையிற் றுகளிலோரே.

தீங்குடல்வினையுஞ் செறிவுறுமலமு
நீங்கிடவருளொடு நீங்காரென்றது.

(இ - ள்.) தீங்குறுமாயைசேரா வகை — ஆன்மாவானது குற்றத்தையுடைய மாயா தேகத்தை மேலெடாதபடி

வினைதிரிவிதத்தானீங்கிட — பிராரத்தம் புசிக்கச்செய்தே யுண்டாகப்பட்ட ஹிதாஹிதங்களாலே யேறுகிற வாகாமியமான புண்ணிய பாவங்களாகியவினை மூன்று வகையாக வறிபப்பட்ட ஞானத்தினாலேவிட்டுப்போக. மூன்றுவகையாவது தன்னை வினையைத் தலைவனையறிகிற ஞானமெனவறிக. அஃதேதென்னில் ஆன்மாவையுங் கன்மத்தையுஞ் சிவனையு மறிகிறதாயிருக்கும். அறிகிற

தாவது ஆன்மாவோவென்றாற் றனக்கென வறிவில்லாதவனென் றறிந்தும் கன்மமோவென்றால் ஜடமா யிருப்பதென் றறிந்தும் இவை யிரண்டையுங் கூட்டிக் காரியப்படுத்துகிறது சிவனேயெ ன்றுங் கண்டு தங்களுக்கு யாதாமொன்றால் வருகிற வின்பதுன் பங்களெல்லாஞ் சிவச்சேட்டையாலொழிய வுண்டாகாதென்று கண்டு அவர்கள் விருப்புவெறுப்பற் றிருப்பர்களென்றதெனவ றிக

| | |
|---|---|
| நீங்கா மூல நி றையிருளிரிய | ஆன்மாவை யொருகாலத்தினும் விட்டுநீங் காம லநாதியே வியாத்தமாய் மறைக்கப்பட் ட வஞ்ஞானமா யிருண்டவாணவம் விட்டுநீங் கத்தக்கதாக |
| நேயத் தோங் குணர்வகத் தட ங்கி | தங்களுள்ளத்திலே யுதயஞ்செய்யப்பட்ட மிகப்பிரகாசமாகிய பேரறிவுக்குள்ளேயடங் கித் தற்போதம் ஜீவியாமனின்று. அன்றியுமி ந்தப்பதத்துக்கு ஒங்குணர்வகத்தடங்கி யென் று பாடமோதி அந்தவருளிலே தங்களையொடு க்கியென்று பொருளுரைப்பாருமுளர். இதற் பொருளுக்கேற்க வந்தப்பாடத்தைக் கூட்டிக் கொள்க |
| உளத்துறு னின் பொடுங்க | தங்களிடத்திலே சிவபோதமாகிய பேரின் பம் பதிந்து விளையத்தக்கதாக |
| நேரே தூங்கு வர்தாங்கி | தாங்கள்கொண்ட சமாதிக்குத் தவறுவரா ததக்க மயக்க விகற்பங்களிற்படாம லுறங் கா துறங்கி யிருப்பார்கள். அவர்க ளாரென் னில் |
| ஏகத் தொன் மையிற் றுகளி லோரே. | ஆன்மாவினிடத்திலே யொன்றுபட்டுப் ப ழையதாய் வரப்பட்ட திரோதமறைப்புநீங்கிய கலியாணர்களாகிய சிவஞானிகள். எ - று. |

ரு-ம். தீங்குறுமாயைசேரா. எ-கு. குற்றத்தையுடைய மா யாதேக மேலெடாதபடியென்று பொருட்கூறியதே தென்னில் ஆன்மாக்கள் மாயாதேகமெடுத்தால் மேலும் ஜநநத்துக்கே துவா யுள்ள கன்மங்களை யார்ஜித்துக் கொள்ளுகையாலே யப்படிச்சொ ன்னதெனவறிக. இதற்கு. பி-ம். ஞானாமிர்தத்தில் "முடைலயாக் கையின் வினைபிணிப்பானால் - வினைப்பொதியெறுட்டோ டணி ப்போவின்றே." எ-து. கண்டுகொள்க.

இனி வினை திரிவிதத்தாநீங்கிட. எ-கு. தன்னைவினையைத் தலைவனையறிகிற ஞானத்தினாலே வினைகளை நீக்கிக்கொள்ளலாமெ ன்று பொருட்கூறியதன்றியே வினைதிரிவிதத்தால்நீங்கிட வென்ப தைக் கழிகாலமாக்கி மூவகை வினைகளினும் பொதுப்பட வேற்றி யாசாரியன் செய்யப்பட்ட தீக்ஷையினாலே சஞ்சிதகன்மம்போமெ ன்றும் பிராரத்தகன்மம் உடலுள்ளமட்டும் புசித்தே தொலையுமெ ன்றும் ஆகாமியகன்மம் அவர்களிடத்துண்டான ஞானத்தினாலே போக்கிக்கொள்ளுவா ரென்னவுமா மெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "ஆசானாகித், தோன்றிநுகராதவைகை முற்செய்க ன்மத் துகளறுத்தங்கத்துவா தொடக்கறவேசோதித், தேன்றவு டற்கன்ம மநுபவத்தினாலறுத்திங் கினிச்செய்கன்ம மூலமல ஞா னத்தாலிடிப்பன்." எ-து. கண்டுகொள்க.

அன்றியும் வினைதிரிவிதத்தால் நீங்கிட. எ-கு. சிவனைநோ க்கி மனத்தினால் தியானித்தும் வாக்கினா லுச்சரித்துங் காயத்தி னாற் றொழில்களைச் செய்தும் வினைகளை நீக்கிக்கொள்ளலா மென் னவுமா மெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில் "மனமதுநினைய வாக்கு வழுத்தமந்திரங்கள்சொல்ல, வினமலர்கையிற்கொண்டங் கிச்சித்ததெய்வம்போற்றிச், சினமுதலகற்றிவாழுஞ் செயலறமா னாலியார்க்கு, முனமொருதெய்வமெங்குஞ் செயற்குமுன்னிலையா மன்றே." எ-து. கண்டுகொள்க.

இனி நீங்காமூல நிறைபிருளிரிய. எ-கு. ஆணவமல மொன்றாயிருக்கவும் ஒருகாலத்தினும் விட்டு நீங்காதமலம் விட்டுநீங்கவென்று பொருட்கூறியதேதென்னில் அந்தமலத்தின் காரியமான சத்திகளழியக் காரணமாகிய நித்திய மழியாதென்ற தெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில் "உரியமல மௌடதத்தாற் றடிப்புண்டவிடமு மொள்ளெரியி னொளிமுன்ன ரிருளுந்தேற்றின், வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும்போலாகி மாயாதேதன்சத்தி மாய்ந்துகாயங், திரியுமளவும் முளதாய்ப் பிணபுகாயஞ் சேராதவகைதானுந் தேயுமன்றே." எ-ம். இந்நூலினும் "அழிந்திடுஞ்சத்தி நித்தமழிந்திடா" எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

இனி நேயத்தோங்குணர் வகத்தடங்கி. எ-கு. எப்பொழுதும் பேரறிவாயுள்ள சிவத்தினுள்ளே யிவனொடுங்கித் தற்போதம் ஜீவியாமனிற்க வென்று பொருட்கூறிய தேதென்னில் இவன் பழைய பிரபஞ்சவாசனையோடுங் கூடிச் சத்தாதி விடயங்களில் ஜீவியாமற் றற்போதத்தை மீட்டு அருளிலே யொடுங்குகை யெனவறிக. இதற்கு. பி-ம். திருவருட்பயனில் "புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவர் போதார், தலநடக்கு மாமை தக." எ-ம். திருவள்ளுவப் பயனில் "உரனென்னுந்தோட்டியா னோரைந்துங் காப்பான், வரனென்னும் வைப்புக்கோர் வித்து." எ-ம். ஞானாமிர்தத்தில் "மாறுவரும்படைதாங்கிக்கிளர - தராதரத்தெறிவேலினைஞர்போலப் - பொறிவாழ்புலப்பகை தாங்கிப்பிறப்பற - வெறியுமறப்பெயர் வாட்கையும் வாட்கை." எ-ம். கண்டுகொள்க.

இனி யுளத்தினின்பொடுங்க. எ-கு. தங்களிடத்திலே பேரின்பம் பதிந்து விளையத்தக்கதாக நிற்பார்க ளென்றதேதென்னில் அந்தச்சிவஞானம்விளைந்த ஜீவன் முத்தராயுள்ளவர்கள தங்களுள்ளத்திலே சிவனைத் தியானிக்குமிடத் தந்தச்சிவ னங்கேபதிந்து நிற்கையா லப்படிச்சொன்ன தெனவறிக. இதற்கு. பி-ம். சித்தி

யாரில். இந்தனத்தினெரிபாலி னெய்பழத்தினிரத மெள்ளின்க ணெண்ணெயும்போ லெங்குமுள னிறைவன், வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவேயருளு மலமறுப்போ ரான்மாவின் மலரடிஞானத்தாற், சிந்தனைசெய் தர்ச்சிக்கிற் சிவனுளத்தேதோன்றித் தியிரும்மைச் செய்வதுபோற் சீவன்றன்னைப், பந்தனையையறுத் தாத்தா ளாக்கித்தன்னுருவப் பரப்பையெலாங் கொடுபுகுந்து பதிப்பனிவன்பாலே." எ-ம். கோவைத் திருவாசகத்தினில் "நினைவித்துத் தன்னையென் னெஞ்சத்திருத்தினின் றம்பலத்துப், புனைவித்தவீசன்" என்றது மிப்பொருட் பற்றி யுணவறிக.

இனி நேரேதூங்குவர்தாங்கி. எ-து. மயக்கவிகற்பங்களிற் படாம லுறங்காதுறங்கி யிருப்பர்களென்று பொருட்கூறிய தேதென்னில் அவர்கள் கேவலசகல மிரண்டினுஞ் செல்லாமல் அருணித்திரையா யிருப்பார்களென்ற தெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில். "அந்தக்கரணங்க ளொடுங் கூடாதே வாடாதே குழைந்திருப்பையாகில்." எ-ம். அருணித்திரை என்றதற்கு போஜனவிதியில். "ஆரமுதா நீரருந்தி யெச்சிலச்சமகற்றி யடைகாய் நற் கடுக்காய்சுக் கடுத்த தொன்றைமென்று, கூறியபே ருணர்வுனே தூங்கிக்கங்குற் குளிர்வெம்மைக் கிசைபூசை கொள்ளநல்கி, யோருணர்வு நிவேதியா துண்ணுவாய்மை யுடையையாயுயர்ஞான போகமுற்றுச், சாருமருணித்திரையு முற்றுணர்சஞானச் சரிதை யிது மெய்கண்டான் சந்தானத்தே." எ-ம். கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது சிவஞானிகளாயுள்ள ஜீவன்முத்தர்கள் பிராரத்தந் தொலையுமளவுஞ் சிவனோடும் பிரிவறநின்று வியாபரிக்குமிடத்து மலமாயா கன்மங்களை நீக்கிக்கொள்ளு முறைமையை யறிவித்தது. (௬௩)

வேறு—இனிப் பதினொன்றாஞ் சூத்திரமும் பன்னிரண்டாஞ்சூத்திரமுமாகிய வணைந்தோர்தன்மை செய்யுளாறினா லுணர்த்துவான் றொடங்கி முதன் மூன்றினான் ஞானத்தின்ஞானமு மேலைமூன்றினாலு ஞானத்தின் யோகமுதலியவு முணர்த்துகின்றார். அவற்றுளிஃ தந்தச் சீவன்முத்தர்கள் பிராரத்தந் தொலையுமளவு மலத்திரயங்களும் பெந்தியாம னீக்கிக்கொள்ளுமுறைமை யுணர்த்திற்று.

திங்குறு மாயைசேரா வகைவினை திரிவிதத்தா னீங்கிட—குற்றத்தையுடைய மாயை கூடாதபடி பிராரத்துவகன்மங் கேட்டன்முதலிய மூவிதத்தாலு நீங்காநிற்ப,—நீங்காமல நிறையிருளிரிய - விட்டுநீங்காத வநாதிசம்பந்தமான நிறைந்த வாணவமலம்விட்டுப் போம்படி,—நேயத் தோங்குணர் வகத்தடங்கி - மகிழ்ச்சியினாலே தன்னிடத்துப் பிரகாசிக்கின்றவருளிடத்திலே தன்னைக்கொடுத்து,—உளத்து ளின்பொடுங்க - தன்னிடத்திலே சுகசொரூபமான சிவமொடுங்க,—நேரே-மயக்க விகற்பங்களிற் படாமல்,—ஏகத்தொன்மையில் - பிரிவற்ற பழையதாகிய சிவசமாசீபாவத்திலே,—தாங்கித் தூங்குவர் - தரித்து நிற்பார்கள்,—தூகளிலோரே - குற்றமற்ற பெரியோர். எ-று. எனவே நிட்டையாலே மலவாதனை நீங்குமென்பதாம்.

திரிவிதத்தா னீங்கிட வென்பதற்குப் பிறவா றுரைப்பாருமுளர். உளத்துளின்பொடுங்க வென்பதற்குத் தன்னிடத்திலே சிவபோகம் விளைய வென்பாருமுளர். தாங்கி தரித்து. தூங்குதல் செறிதல். எனவே நிற்பதாம்.

---

இங்ஙனஞ் சொல்லப்பட்ட ஜீவன் முத்தரா யுள்ளவர்கள் முன்பு செய்துவந்த நியமங்களா யுள்ளவையெல்லாஞ் செய்துவருவர்களோ விட்டுவிடுவர்களோவென் றுவினவ மேலருளிச்செய்வானெடுத்துக்கொண் டருளியது.

குறிப்பிடங் காலந்திக்கா சனங்கொள்கை குலங் குணஞ்சீர், சிறப்புறு விரதஞ்சீலந் தபஞ்சபந் தியா னமெல்லா, மறுத்தற வொழிதல்செய்தன் மருவிடா மன்னுசெய்தி, யுறக்குறு பவர்போல்வாய்மை யொழிந்தவை யொழிந்துபோமே. (௪௪)

மெய்ப்பொருளுணர்ந்தவர் விரதந்துயில்பவர்
கைப்பொருளெனவே கழலுமென்றது.

குறிப்பிடம் — கங்கைகுமரி முதலாயுள்ள தீர்த்தங்களையுங் காசி திருவம்பல முதலாயுள்ள சிவஸ்தானங்களையு நாடியிருக்கை

காலம் — விஷுசு அயனம் சங்கிரம முதலாயுள்ள காலங்களிலே செய்யுங்கிரமங்கள்

திக்கு — இந்தரா லோக் கின்னதிசையிலே போகலா மிருக்கலாம் இன்னமந்திர மின்னதிசையைப் பார்த்து ஜபிக்கலாமென்று முறைமைகள்

ஆசனம் — பதுமாதனம் கூர்மாதன முதலாயுள்ள வாதனங்களிட்டிருக்கை

கொள்கை — வாய்மை ஒப்புரவு ஈகை முதலாயுள்ளகொள்கைகள்

குலம் — பிராமணர்முதலாகச் சண்டாளர்களீறாகிய குலநீதிமுதலா யுள்ளவை

குணம் — யாவராயினு மவரவர் சீலத்தி னொழுகுதல் ஒருவரை நிந்தியாமை புறங்கூறாமை முதலாயுள்ளகுணங்கள்

சீர் — அந்தந்த சாதியொழுக்கு குலையாமலடக்கை

| | |
|---|---|
| சிறப்புறு விரதம் | கொல்லாவிரதம் அஷ்டவிரதம் முதலாயுள்ள விரதங்கள் |
| சீலம் | ஜாதித்தொழில் குணத்தொழில் பொறையுடைமை அருளுடைமை முதலாயுள்ள சீலங்கள் |
| தவம் | பஞ்சாக்கினிநடு ஜலத்தினடு முதலாகச்செய்யுந்தவங்கள் |
| சபம் | தேவதை மந்திரங்கள் சத்திமந்திரங்கள் எதிரேறுமந்திரம் திருவம்பலவித்தை முதலாயுள்ள ஜபங்கள் |
| தியானம் | ஆதாரம் நிராதாரம் பிராசாதமுதலாயுள்ள தியானங்கள் |
| எல்லாம் | இப்படிக் குறிப்பிட்டமுதற் றியானமீறுகச் சொல்லப்பட்ட நியமங்களெல்லாம் |
| மறுத்தரவொழிதல் செய்தன மருவிடா | அந்த வுண்மைஞானத்தைப் பெற்றிருக்கிற சிவஞானிக ளந்த நியமங்களை விட்டுவிடவேணுமென்று தீரவிட்டுவிடுவதுமில்லை செய்துவரவேணுமென்று செய்வதுமில்லை. பின்னையெங்ஙனேயென்னில் |
| மன்னுசெய்தி | அவர்க ளந்தவுண்மையிலே பெறநின்று |
| உறக்குறுபவர் போல் வாய்மை யொழிந்தவை யொழிந்து போமே. | நித்திரைசெய்யுமவர்கள் கையிற் பிடித்திருக்கப்பட்ட பதார்த்தமானது அவர்கள் வேணுமென்று பிடித்திருக்கச்செய்தே யவர்களையறியாமற்றானே நழுவினாற்போல அந்தச்சிவஞானத்தைப்பெற்ற ஜீவன்முத்தர்க்கு மந்தவுண்மை ஞானமொழிய மற்றுள்ள நியமங்களுந் தானேபோம். எ - று. |

உ-ம். அந்த வுண்மைஞானமொழிய மற்றுள்ள நியமங்களெல்லா முறங்கினவர்கள் கையிற் பிடித்திருந்த பண்டங்கள்போலத் தானேபோமென்றதற்கு. பி-ம். திருவருட்பயனில். "ஒண்பொருட்கண்ணுற்றார்க் குறுபயனே யல்லாது, கண்படுப்போர் கைப்பொருள்போற் காண்." அன்றியுஞ் சங்கற்ப நிராகரணத்திலே மாயாவாதியை மறுக்கிற வவதரத்திலே. "ஞாலநீதியு நான்மறைநீதியும் - பாலருன்மத்தர் பசாசினரெனவு - முறங்கினோன்கை வெறும்பாக்கெனவுந் - தானேதவிரா தாறுற்புரியா-தொழிந்திடுநிறையத் தழுந்துதறிடமே." எ - து. கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது அந்த வுண்மைஞானத்தைப் பெற்ற ஜீவன் முத்தர்கள் முன்பு செய்துவந்த நியமங்களெல்லாந் தாங்கள் வேண்டாமென்று விட்டுவிடுவதுமில்லை செய்துவரவேணுமென்று நியமித்துச் செய்வதுமில்லை உறங்குவார்கையிற் பதார்த்தங்க ளவர்களையறியாமற் றானேபோனாற்போல வந்தவுண்மைஞானமொழிய மற்றுள்ள நியமங்க டானே போமென்னு முறைமையை யறிவித்தது. (சச)

---

வேறு—இது இப்படிநின்ற சீவன் முத்தர்கண் முன்புள்ள நியமங்களெல்லாம விட்டுநிற்பரோ விடாம னிற்பரோ வென்று வினவ வதற் குத்தர முணர்த்திற்று.

குறிப்பிடங் காலந்திக்கா சனங்கொள்கை குலங்குணஞ்சீர் சிறப்புறு விரதஞ்சீலந் தபஞ்சபந் தியானமெல்லா மறுத்தற வொழிதல்செய்தன் மருவிடா - சமாதிக்கு யோக்கியமாகக் குறிக்கும் புண்ணியத் தலங்களு மின்னகாலமிது செய்யவேண்டுமென்னுங் காலசங்கற்பனையு மின்னதிசைநோக்கி யிது செய்யவேண்டுமென்னுந் திக்குக்கற்பனைகளும் பத்மாசன முதலான வறுபத்துநா லாசனங்களிலு மின்ன வாச

னத்திலே யிருக்கவேண்டுமென்னு மாதனநியமு மொருபிர யோசனங்களிற் கோட்பாடுஞ் சாதியபிமானமுஞ் சாத்துவி தமுதலிய குணங்களு நாமவேஷரூபமுதலிய சிறப்பி லபிமா னமுஞ் சிறப்பினையுடைய சாந்திராயணமுதலிய விரதங்களு நல்லொழுக்கமும் பஞ்சாக்கினி நடுநிற்றன்முதலிய தவங் களு மிருஷச்சந்த சுதேவதைபீசம் விநியோகமென் றிவையு டன்கூடமான சமந்த முறையென்னு மூன்றுவிதமாக வசீகர முதிலிய வவைகளைக் குறித்து சபிக்குஞ் சபமுஞ் சடா தாரங்களிலே யொவ்வோரொளிகளைப்பற்றித் தியானிக்குந் தியானங்களுமான வினைமுதலான வவைகளெல்லா மவாக் களாக மறுத்துத் *தீரவிடுதலுஞ் செய்தலும் பொருந்தா,— மன்னுசெய்தி யுறக்குறு பவர்போல்வாய்மை யொழிந்தவை யொழிந்துபோமே - நித்திரைசெய்கின்றவர் கைப்பொருள் போலத் தாம்பெற்ற உண்மையொழிய நிலைபெற்ற செய்திய வாகிய மற்றவையெல்லாந் தனியே யொழிந்துபோம். எ-று.

விடுதலைச் செய்தல் மருவிடா வெனினுமாம். பிறவு முரைப்பாருமுளர். உறக்குறுபவர் ஆகுபெயர்.

---

இந்த வுண்மைஞானத்தைப்பெற்ற ஜீவன் முத்தரானவ ர்களந்தச் சிவத்தை யுள்ளேகண்டிருப்பவர்களோ புறம்பே கண்டு வழிபடுவர்களோவென்று வினவின மாணவகனை நோ க்கி மேலருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

அகம்புற மென்றிரண்டா லர்ச்சனை புரியுமிந்தச்
சகந்தனி லிரண்டுமின்றித் தமேமய மாகியெல்லா
நிகழ்ந்திட மகிழ்ந்துவாழு நீர்மையார் போலஞானந்
திகழ்ந்தகம் புறமெனாத செம்மையார் நன்மையோரே.

உத்தமஞான முணர்ந்தஞான
வித்தகர்தன்மை விளங்கவுரைத்தது.

(இ-ள்.) அகம்புற மென்றிரண்டா லெருச்சனைபுரியு மிந்தச் சகந்தனில் — இந்த வுலகத்தின்கண்ணே சிவனை வழிபடுகிறவர்கள் உள்ளேகண்டும் பூசிப்பார்கள் புறம்பேகண்டும் பூசிப்பார்கள்.

இரண்டுமின்றி — இங்ஙனஞ் சொல்லப்பட்ட வுட்பூசை புறப்பூசையென்கிற விரண்டுபூசையு மில்லாமல்

தமோமயமாகியெல்லாநிகழ்ந்திடமகிழ்ந்தவாழுநீர்மையார்போல — அஞ்ஞானமே வடிவாயிருக்கிற வாணவமலத்தின் மேலீட்டினாலே தத்துவரூபத்தாலேறுடுங்கூடிச் சிற்றின்பமாகிய மோகமே யொழிய மற்றொன்றுந் தோன்றாத முறைமையினையுடைய பெத்தரைப்போல்

ஞானந்திகழ்ந்து — பழைய பிரபஞ்சவாதனைச் சற்றுந்தோன்றாமல் ஞானமே பிரகாசித்து அந்த ஞானமான தெங்கும் பூரணமா யொழிவற நிற்கிற நிகழ்ச்சியோடுங்கூடி யநுபவித்து

அகம்புற மெனுதிசெம்மையார் நன்மை யோரே. — அந்தரியாகமாக வுள்ளேகண்டு பூசித்தும் பகிரியாகமாகப் புறம்பேகண்டு பூசித்தும்வருகிற முறைமை யிரண்டுஞ் சற்றுந் தோன்றாமல் நினைவு கெட்டுப்போன பெரியோர்களே யந்த வுண்மைஞானத்தைப்பெற்ற நல்லோர்கள். எ - று.

உ - ம். இந்த ஜகத்திலுள்ளவர்கள் உட்பூசையென்றும் புறப்பூசையென்றும் பூசித்துவருவார்க ளென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "காட்டுமிதையந்தானு நாபியினடியாய் ஞால மூதற்றத்துவத்தா லெண்விரணுளத்தால், மூட்டுமோகினி

சுத்த வித்தைமலரெட்டாய் முழுவிதழெட் டக்கரங்கண் முறைமையினி னுடைத்தாய்க், காட்டுகமலாசனமே லீசர் சதாசிவங்கள் கலாமூர்த்தமாமிவற்றின் கண்ணுறுஞ்சத்தி, விட்டையருள் சிவன்மூர்த்தி மாணுகிச்சத்தி மேலாகிநிற்பனி ந்து விளைவறிந்துபோற்றே." எ-ம். "கந்தமலர் புகையொளி மஞ்சனமமுதமுதலாக் கண்டனவெல்லாமனத்தாற் கருதிக் கொண்டு, சிந்தையினிலருச்சிக்க." எ-ம். உட்பூசைக்குக் கண்டுகொள்க.

இனி புறப்பூசைக்கு. பி-ம். சித்தியாரில். "புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப் போது புகையொளிமஞ் சனமமுது முதல்கொண் டைந்து, சுத்திசெய் தாசனமூர்த்தி மூர்த்தி மானுஞ் சோதியையும் பாவித் தாவாகித்துச் சுத்த, பத்தியி னு லர்ச்சித்துப் பரவிப்போற்றிப் பரிவினொடு மெரியில்வரு காரியமும் பண்ணி, நித்தலுமிக் கிரியையினை யியற்றுவோர்க ளின்மலன்ற னருகிருப்பர் நினையுங்காலே." எ-து. கண்டு கொள்க.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட பூசைகளிரண்டு மந்தச் சிவ ஞான மேலிட்டவர்களுக் கில்லையென்பதற்கு. பி-ம். பூசாக மத்தில். "ஞானவா ரமிர்தமுண்டார் நயந்தது நுகர்ந்து வாழ்வார், ஊனமில் யோகச்செய்தி யொழிவதுண் டாகவு ண்டா, மீனமில் தொழில்பின் னின்று முன்னெனி லெய்திற் றின்று, மானமின் ஞானயோக மல்லதொன் றறியாதாரே.", எ-து. கண்டுகொள்க.

எல்லா நிகழ்ந்திட மகிழ்துவாழு நீர்மையார்போல என் றது சிவஞானிகளுக்குப் பசுஞானிகளை யொப்பிட்டதேதெ ன்னில் அந்தப் பசுஞானிகளுக் கிந்தப் பிரபஞ்சமயக்கங் கொண்டே யந்தத் திருவருளினமுற்றமற்று நினறுற்போல விந்தச்சிவஞானிகளுக்கு மந்தத்திருவருளின் மேலீடுகொண்

டேயிந்தப் பிரபஞ்சந்தோன்றுமை யின்றதெனவறிக. இதற்கு. பி - ம். மெய்ஞ்ஞானவிளக்கத்தில். "அறியார்களு மறியார்மிக வறிவார்களுமறியா, ரறியார்களு மறிவார்களு மொன்றேதமி லன்று, மறியார்களும் பசுபாசமென் னிருளான்மறைந்தறியா, ரறிவார்களும் பரமானந்த வொளியானிறைந் தறியார்" எ - து. கண்டுகொள்க.

அந்தப் பசுஞானிகளுக் கிந்தத் திருவரு டோன்றுதென்றதேதென்னில் நமக்குக் கத்தாவாக வோர்சிவனுண்டென்றும் அந்தச் சிவனுக் கடிமையாக நாமோ ரான்மாவுண்டென்றும் இந்த வான்மாவாலே செய்யப்பட்டதொரு புண்ணியபாவங்களாகிய கன்மமுண்டென்றும் அதனாலொரு நரக சுவர்க்கமுண்டென்றுந் தோன்றுமை யின்றதெனவறிக.

அந்தச் சிவஞானிகளுக் கிந்தப் பிரபஞ்சந் தோன்றுதென்றதேதென்னில் மண்ணாசை பெண்ணாசை பொன்னாசையென்னப்பட்ட மூன்றாசையும்விட்டு யாவரோடும் விருப்புவெறுப்பற்று யானெனதுகெடநிற்கையிறு லெனவறிக.

இதனாற்சொல்லியது அந்தச் சிவஞான மேலிட்டுநிற்கிற ஜீவன முத்தர்க ளந்தச் சிவஞானத்தின் மேலீட்டினாலே யுட்பூசை புறப்பூசையென்கிற பூசைக ளிரண்டினையும் விடாமல்விட்டு அந்தச் சிவஞானமே தனுவாய்நிற்கிற முறைமை பிரபஞ்சவாதனை மேலிட்டுநிற்கிற பசுஞானிகள் அந்தத் திருவருளின் றோற்றஞ் சற்றுந் தோனறுமனிற்கு மதுபோலேயிருக்குமென்னு முறைமையை யறிவித்தது. (சரு)

---

வேறு—இது அவர்கள் சிவனை யுள்ளேகண்டிருப்பரோ புறமேகண் டிருப்பரோ வென்று வினவ வியிரண்டுமின்றியிருப்பரெனத் திருட்டாந்தபூர்வகமாக வுணர்த்திற்று.

அகம்புறமென்றிரண்டா லருச்சனை புரியுமிந்தச் சகந்தனிலிரண்டு மின்றி - அந்தரியாகம் வெகிரியாகமென் றிருவிதமாக வருச்சனைபண்ணு மிந்தவுலகத்தின்க ணவ்விரண்டு மின்றி,—தமோமய மாகியெல்லா நிகழ்ந்திட மகிழ்ந்துவாழு நீர்மையார் போலஞானந் திகழ்ந்து - ஞானம் பிரகாசித்தலாலஞ்ஞானசொரூபமாயக் கன்மத்துக் கீடாகச் சர்வ விடயங்களுந்தோன்ற வவற்றிலே மகிழ்ந் துயிர்வாழுந் தன்மையினுரைப்போல,—அகம்புற மெனுத செம்மையார் தன்மையாரே-உள்ளிது புறமிது வொண்ணு தொருதன்மையாகவே காணு முண்மையினை யுடையவர்களே சாயுச்சியமென்னு நன்மையை யடைந்தவர்கள். எ-று.

திகழ்ந்தென்னுஞ் செய்தெ னெச்சம் பிறவினைகொண்டது. எச்சத்திரிபெனினு மமையும். இவை மூன்றுந் தெளிந்தோர்நிற்கு நிட்டையான ஞானத்தின் ஞானம்.

---

அந்த வுண்மைஞானத்தைப்பெற் றதனோடுங்கூடி யநுபவிக்கிற ஜீவன் முத்தர்களுக்குப் பழைய வாதனுபலத்தாலே பிரபஞ்சவாதனை மேலிட்டாலு மதனோடுங் கூடி மயங்காம லதனைத் தோன்றின மாத்திரத்திலே நீக்கிக் கொண்டு அந்தஞான நிலைகுலையாம னிற்கைக்கு மேல்ஞானத்தில் யோகத்தை யருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

அண்டமே விடவனைத்து மனத்தையு மண்டமேவிக், கொண்டல்போ லெவையுஞானங் குறைவிலா நிறைதலாலே, கண்டதோர் பொருளையந்தக் கருத்தினுற் காணிற்றனே, யண்டநா யகனார்மேனி யானதேலையமின்றே. (சகூ)

அவ்வியல்புருதவர்க் ககன்றஞானத்தின்
செவ்வியயோகத் திகழ்வினையுரைத்தது.

(இ-ள்.) அண்டமேவிட வணைத்தும் — ஆகாசமிடமாகச் சரிக்கப்பட்டபிருதிவி முதலான நாலுபூதங்களு மதற் குட்பட்டவையும் அந்த வாகாசத்தோடும் பொருந்தி வியாத்திபண்ணிநிற்க

அணைத்தையு மண்ட மேவிக் கொண்டல்போல் — அந்தவாகாயந்தா னவையெல்லாந் தன்னிடத்திலே கவளீகரித்துநின்ற கோட்பாடுபோல

எவையுஞானங் குறைவிலாநிறைதலாலே — எல்லாவான்மாக்களினும் அவையிற்சேருடுகூடி யிருக்கப்பட்ட வத்துவாக்களினும் பூரணமாயுள்ள சிவனுடையஞானமானது தன்னிடத்திலே யடக்கிக் கவளீகரித்துக்கொண்டு நிற்கையாலே

கண்டதோர் பொருளை யந்தக்கருத்தினாற் காணில் — தான் ஹிதாஹிதப்படத்தக்கதாகச் சத்தாதி விடயங்களிலே யாதாமொன்று தன்னிடத்திலேவந்து தாக்கினாலு முன்சொன்ன வுபமானம்போலே சிவனுடைய ஞானத்தினையொழிய மற்றொன்றினாலும் வாராதென்றுகண்டு விருப்புவெறுப்பற்றுநிற்கில்

தானே யண்டநாயகனார் மேனியானதேல் — அங்ஙனங்கண்ட பொருடானே தேவர்களுக்குக் கத்தாவா யிருக்கப்பட்ட சிவனுடைய திருமேனியாம். அப்படிக் காணவே

ஐயமின்றே. — அங்ஙனந் தாக்கின விடயங்களாலே மேலைக்கு ஜநநமுண்டாகாதென்கிறது சந்

தேகமில்லை. எ-று. அன்றியும் தானே யுண்
டர்நாயகனூர் மேனியானதே லையமின்றே.
என்றெருபதமாக்கி யப்படிக்கண்ட சிவஞானிகள் சிவனு
டைய திருமேனியாகிய ஞானத்தோடுங்கூடிச் சாயுச்சியத்
தைப் பெறுகைக்குச் சந்தேகமில்லை யென்னவுமா மென
வறிக.

ஆனதே லென்றதனால் ஆன்மாசிவனுவனு வென்னில்
அப்படிச் சிவனுகான், அந்தச் சிவத்தோடுங் கூடுமென்பது
கருத்து. இதற்கு. பி - ம். சங்கற்ப நிராகரணத்தில் "ஆறு
யென்பதனைத் துமவ்வகைத் - தாலுகாமையைச் சாற்றிடுமெ
ன்க - தானேயெனுமித் தனியேகார-மழிந்திலராதுவே யாய்
ந்திலராவிட் - டொழிந்திலர் பிரிவில ரெனுமிவை யுணர்த்
தும்." எ-து. கண்டுகொள்க.

நு-ம். கண்டதோர் பொருளை யந்தக் கருத்தினூற் கா
ணில். எ-து. எல்லாஞ் சிவச்சேட்டையென்று கண்டிருக்கிற
சிவஞானிகளுக் கதற்குத் தக்கதாகச் சிவனின்று சாந்நித்தி
யஞ் செய்வனென்பதற்கு. பி - ம். சித்தியாரில். "யான்செய்
தேன் பிறர்செய்தா ரென்னதியா னென்னு மிக்கோணை ஞான
வெரி யால்வெதுப்பி நிமிர்த்துத், தான்செய்வே னின்றிடவத்
தற்றவன்று னேரே தனையளித்து முன்னிற்கும் வினையொளி
த்திட் டோடு, நான்செய்தே னெனுமவர்க்குத் தானங்கின்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்ம, முன்
செய்யா ஞானந்தா னுதிப்பினல்லா லொருவருக்கு மியானெ
னதிங் கொழியாதன்றே." எ-ம். திருப்பாட்டில் "யாதேசெ
ய்துமியாம் யாமலோ நீயெனி, லாதேசெய்யு மளவில்பெரு
மையன்." எ - து. கண்டுகொள்க.

தன்னிடத்திலே தாக்கிற விடயங்களெல்லாஞ் சிவசொ
ரூபமென்று கண்டு நிற்கவென்றதற்கு. பி - ம். திருவாசகத்

தில். "கூறுகாவே முதலாகக் கூறுங்கரணை மெல்லாங்." எ - று. கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது அந்தச் சிவஞானத்தோடுங் கூடியநுபவிக்கிற ஜீவன்முத்தர்க ளந்தநிலைகுலையத் தக்கதாகப் பிரபஞ்சவாதனை மேலிட்டுச் சத்தாதி விடயங்களிற் றாக்கினாலும் அவைகளெல்லாஞ் சிவச்சேட்டையாலொழிய வான்மசேட்டையால் வாராதெனபது கண்டு ஒருவரோடும் விருப்பு வெறுப்பற்று நிற்கவே யப்படித் தாக்கின விடயங்களாலே மேலைக்கு ஜநநத்துக் கேதுவாகிய வாகாமியங் கட்டுப்படாதென்னு முறைமையை யறிவித்தது. (௬௯)

---

வேறு—இது அந்தஞானநிலை குலைந்தாலும் பழைய பிரபஞ்சவாதனை மேலிடாமனிற்கு முபாயமான ஞானத்தில் யோக முணர்த்திற்று.

அண்டமேவிட வனைத்து மனைத்தையு மண்டமேவிக் கொண்டல்போல் - பிருதிவி முதலிய நாலுபூதங்களு மாகாயத்திலே பொருந்திநிற்க வந்தவாகாயந்தா னவையெல்லாவற்றையுங் கவளீகரித்துக்கொண்டு நிற்கின்ற கோட்பாடுபோல,—எவையுஞானக் குறைவிலா நிறைதலாலே - சகலத்தையுமந்தஞான மகண்டமாக நிறைதலாலே,—கண்டதோர் பொருளை யந்தக்கருத்தினாற்காணில் - தோன்றியதோர் விடயத்தை யந்த ஞானக்கண்ணினாற் பார்க்கின்,—தானே யண்டநாயகனும் - அந்தக் கருத்தே வித்தாய்த் தானேசிவனாவன். அப்படியாவதேதெனின்,—மேனி யானதே லையமின்றே-ஞானமே தனக்குச் சொரூபமாய் நிற்கினங்ஙன மாதற்குச் சந்தேகமில்லை. எ - று.

சிவனுத லுபசாரம். மேனியானதே லையமின்றே யென்

பதற்கு அந்தச்சிவமே தனக்குச் சொரூபமாய் நிற்கின் முத்திக்குச் சந்தேகமில்லை யென்பாருமுளர். குறைவிலா வென்பதிறு கெட்டுநின்றது.

---

இங்ஙனஞ் சொல்லப்பட்ட ஞானயோகத்தில் நிற்கப்பட்ட ஜீவன்முத்தர்களுக் கிந்தப் பிரபஞ்சவாதனை யப்படித் தோன்றின மாத்திரத்திலே நீக்கிக்கொள்ள வொட்டாமல் வாதனாபலத்தால் நீடிக்க மேலிட்ட வவதரத்தும் அதனோடு மான்மபோதத்தைச் செலுத்தாமற் சிவசிந்தனையாக நிற்கத் தக்கதாக மேல் ஞானகிரியை யருளிச்செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

மண்முதல் கரணமெல்லா மறுவசத் தாக்கிஞானக், கண்ணினி லான்றியந்தக் கருத்தினு லெவையுநோக்கி, யெண்ணியஞ் செழுத்துமாயி யிறைநிறைபுணர்ந்துபோற்றல், புண்ணியன் றனக்குஞான பூசையாய்ப் புகலுமன்றே. (சஎ)

மாசணுகாது மனமிறந்தியற்றும்
பூசனைஞான பூசனையென்றது

| | |
|---|---|
| (இ-ள்.) மண்முதல்கரணமெல்லா மறுவசத்தாக்கி | பிருதிவி முதலாயுள்ள தத்துவங்களெல்லா மாமல்ல குற்றத்தையுடைய ஜடமென்று கண்டு. ஜடமெனக் காணவென்றது இது தானாகக் காரியப்பட மாட்டாதென்று காண்கையெனவறிக. என்னவே யிது பூதசுத்தியாம் |
| ஞானக் கண்ணினிலான்றி | அப்படியறிகிறது மந்தத் திருவருளாலொழிய ஆன்மபோதத்தா லறியப்படாதென்று கண்டு. அப்படிக்காணவே யது ஆன்மசுத்தியாம் |

அந்தக் கருத் திரு வெவையு நோக்கி

அப்படி யான்மபோதத்தாற்முனே யறிகைக்குச் சேட்டையில்லை யென்று கண்டதுகொண்டே ஆன்மாவுக் கறிவில்லை யெனவறிந்து கண்டுகேட் டுண்டுயிர்த்துற்றறிந்து நிற்கிறதெல்லாம் அந்தத் திருவருளென்று கண்டுநிற்கவே அது திரவியசுத்தியாம்

எண்ணி யஞ்செழுத்து மாறி. அநுவயம். ஐந்தெழுத்துமாறி

ஐந்தெழுத்தையு மைந்தெழுத் தாகக் கொள்ளாமல் மாறிக்கொள்ள. மாறிக்கொள்ளலாவது சிவ்விலே சிவமும் வவ்விலே யருளும் யவ்விலே யான்மாவும் நவ்விலே திரோதமும் மவ்விலே மலமுமாகக் கொண்டு ஐந்தெழுத்தையும்விட் டைந்து முதலாக விசாரித்துக் கண்டு. அப்படிக் காணவே மந்திரசுத்தியாம். அன்றியும்

எண்ணி

இன்ன வுருவென்று எண்ணித் தொகைப்படுத்தி ஜபிக்க வென்னவுமாம்

இறைநிறையுணர்ந்து

கத்தாதானே யெங்கும் பூரணமாய்நின்று மற்றுண்டான சித்தசித்துக்க ளிரண்டினும் பிரிவறநின்று சேட்டிப்பித்து நிற்கிறத்தை யறிந்து. அப்படிச் சித்தசித்துக்க ளிரண்டினுஞ் சிவனிறைந்து நிற்கிறத்தை யிந்த விலிங்கத்தினு முண்டென்று காணவே இலிங்க சுத்தியாம்

போற்றல்

இங்ஙன மைந்துவகையாகச் சொல்லப்பட்ட பூதசுத்தி ஆன்மசுத்தி திரவியசுத்தி மந்திரசுத்தி இலிங்கசுத்தி என்னு முறைமைகளுக்குத் தவறுவாராமல் வழிபட்டு. இங்ஙனம் வழிபடவே

புண்ணி யன் இங்ஙனம் பஞ்சசுத்திகளாகச் சொல்ல றனக்குஞானப் ப்பட்டதெல்லாஞ் சிவனுக்கு ஞானபூசை பூசையாய்ப் புக யாமென்று சிவாகமஞ் சொல்லும். எ - று. லுமன்றே.

இங்ஙனஞ் சொல்லப்பட்ட பஞ்சசுத்திகளுக் கெழுதின பொருளுக் குதாரணம் ஞானபூசைத் திருவிருத்தத்திலே காட்டுதும். அவைவருமாறு:—

மண்முதல் காணமெல்லாம் ஜடமென்று கழித்ததற்கு. பி-ம் "அஞ்சலிசெய் திருந் தடல நானல்லேன்." எ-ம். "புஞ் சமலிதனுகரணம் புவனபோகம் பொய்." எ - ம். "எடுத்து வீடு தானழியுமளவு மதிற்றங்குவோர்போல்." எ-ம். வருமே துக்களிப் பூதசுத்திக்குக் கண்டுகொள்க

ஞானக்கண்ணினி லூன்றியென்றது ஆன்மசுத்தி யென் றதற்கு. பி - ம். "தீங்கிலுயிர் சிவலிங்கஞ் சிவன் சீவன் யா துஞ் செயவேண்டா பசுஞானம்." எ-ம். "மெய்ப்பணி மடங் கத் தூங்கிட." எ-ம். கண்டுகொள்க.

அந்தக்கருத்திரு லெவையு நோக்கி யென்றதை தான் காண்கிறதெல்லாஞ் சிவன் காண்கிறனென்று காணவே திர விடசுத்தியா மென்றதற்கு. பி - ம். "நாலிரண்டு திருவுருவ நோக்கிநோக்கால் நலங்கொ டிரவியசுத்தி நயந்து." எ-து. கண்டுகொள்க.

எண்ணி யைந்தெழுத்துமாறி யென்றதை மந்திரசுத்தி யென்று ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யைந்தெழுத்ததாகக் கொள் ளாமல் ஐந்துமுதலாகக்கண்டு எண்ணி ஜபிக்கவென்றதற்கு. பி-ம். "பஞ்சருமந்திரசுத்தி பயிற்றி." எ-து. கண்டுகொள்க.

இறைநிறை யுணர்ந்தென்றதை இலிங்க சுத்தியென்றது கர்த்தா வெங்கும் பூரணமாயிருக்கையாலே நம் பொருட்டா

கப் பூசை கொள்ளக்கொண்ட திருமேனியினு முண்டென்று காணவென்றதெனவறிக. இதற்கு. பி-ம். "நாதன், மேலுக ந்த மலரொறாக்கி யுருவநோக்கி விமலனிறை யுணர்ந்தே வையு மேனியான, சிலமுமங் கருவுதிரு வுருவமான சிறப்பு முணர்ந் திலிங்கசுத்தி சேர்த்திடாயே." எ-து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது முன்சொன்ன ஞானயோகத்தினிற்குமவர்களுக் கந்த நிலைகுலையத் தக்கதாகப் பிரபஞ்சவாதனை மேலிட்டாலு மதனோடுகூடாமல் அதனை நீக்கிக்கொள்ளத் தக்கதாக ஞானகிரியைச் செய்யுமிடத்துப் பஞ்சசுத்தி செய்யவேண்டுகையால் அதற்குத் தத்துவங்களை யெல்லாம் ஜடமென்றுகாணவே பூதசுத்தியாமென்றும் அப்படிக்கண்டு நீக்கிக்கொள்ள நமக்கென்ன வொருசேட்டை யில்லையென்று காணவே யானமசுத்தியாமென்றும் அப்படித் தனக்கென்ன வொருசெயலில்லையென்று கண்டு தான் காண்கிறதெல்லாஞ் சிவதிருஷ்டியென்று காணவே திரவியசுத்தியாமென்றும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யைந்துமுதலாகக் காணவே மந்திரசுத்தியாமென்றும் எங்கும் பூரணமாயிருக்கிற சிவனிந்தச் சிவலிங்கத்தினு முண்டென்றுகாணவே லிங்கசுத்தியாமென்றும் இங்ஙனஞ் சுத்திசெய்து வழிபடவே சிவனுக்கு ஞான பூசையாமென்றும் வருமுறைமையை யறிவித்தது. (௪௭)

---

வேறு—இஃது தந்நிலைதிரிந்துழி நிற்கு ஞானத்திற் கிரியை யுணர்த்திற்று.

மண்முதற் கரணமெல்லா மறுவசத்தாக்கி - பிருதிவிமுதலிய தத்துவங்களையெல்லாம் சடமாகையாலே தனக்குவேறாகக்கண்டு இவை யருளாலன்றிச் சிவியாதென்று பரவ

மாக்கி,—ஞானக் கண்ணினாலூன்றி - இந்தத் தத்துவங்களி னின்றும் விடுவித்த ஞானதிருஷ்டியிலே நிலைபெற்று,—அங் ஙக்கருத்தினா லெலவையுநோக்கி-அந்த ஞானக்கண்ணினாலே சகலத்தையும் பார்த்து,—எண்ணி யஞ்செழுத்துமாறி-பஞ் சாக்கரத்தைத் திரோதானத்தி னின்றுந் திரும்பிச் சிகாரமு தலாக மானதமாகச் சபித்து,—இறைநிறை யுணர்ந்து-கர் த்தாவினுடைய பரிபூரணத்தை யுணர்ந்து,—போற்றல்-இங் ஙனம் போற்றுகின்றதே,—புண்ணியன் றனக்கு ஞானபூசை யாய்ப் புகலுமன்றே - சிவனுக்குப் பஞ்சசுத்தியோடுங்கூடிய ஞானபூசையென் றாகமஞ்சொல்லும்.

மாறி எண்ணியென்க. மறுவசத் தாக்கன்முத லிறை நிறை யுணர்தலீறாக வைந்தும் பூதசுத்தி யாத்மசுத்தி திரவி யசுத்தி மந்திரசுத்தி லிங்கசுத்தியாகிய பஞ்சசுத்தியாம். அன்றே அசை.

☞ பதினோராஞ்சூத்திர முற்றிற்று.

---

இங்ஙனம் பஞ்சசுத்திகளுஞ் செய்து அந்த ஞானபூசை யைச் செய்துவருமவதரத்து அதிலு மான்மபோதங் குவியா மல் வாதனாபலத்தாலே திரிவித கரணங்களோடுங் கூடிப் பிரபஞ்சத்திலே யோடினாலும் பழையபிரபஞ்சத் தொழிலா யின்று ஜீவியாமல் அருட்டொழிலாய் நிற்கத்தக்கதாக மேல் பன்னிரண்டாஞ் சூத்திரமாகிய ஞானசரிதியை யருளி ச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

தொண்டர்க ளிடத்தும்வானோர் தொழுந்திரு மேனிதானு, மண்டருங் கண்டிலாத வண்ணலே யெ னவணங்கி, வெண்டர ளங்கள்சிந்த விழிமொழி குழ

றிமெய்யே, கண்டுகொண் டிருப்பர்ஞானக் கடலமு
தருந்தினோரே. (௪௮)

சிவமாம்வேடஞ் சிவாலயமெனத்தொழுந்
தவமாஞானச் சரிதைசாற்றியது.

| | |
|---|---|
| (இ-ள்.) தொண்டர்களிடத்தும் | மகேஸ்வரரிடத்திலும் |
| வானோர்தொழுந் திருமேனிதானும் | பிரமவிஷ்ணுக்கள் முதலாயுள்ள தேவர்களும்வந்து வழிபாடுசெய்யப்பட்ட சிவலிங்கப் பெருமானிடத்திலும் |
| அண்டருங் கண்டிலாத வண்ணலே யெனவணங்கி | அந்தத் தேவர்களாலுங் காணப்படாத சிவனல்லோ நம்பொருட்டாகத் திருமேனிகொண் டெழுந்தருளினானென்று இந்தவிரண்டிடத்திலும் வழிபட்டுத் தண்டனிட்டு |
| வெண்டரளங்கள்சிந்த விழி | கண்களானது முத்துப்போல நீரையுதிர்க்க |
| மொழி குழறி | வார்த்தை தழுதழுக்க |
| மெய்யேகண்டுகொண்டிருப்பர் | உண்மையாகக்கண்டு தியானித்துக்கொண் டிருப்பார்கள் |
| ஞானக்கடலமு தருந்தினோரே. | அருள் வெள்ளமாகிய சமுத்திரத்திலே விளைந்த சிவபோகமாகிய வமுதினைப் புசித்த சிவஞானிகள். எ - று. |

று - ம். தொண்டர்களிடத்தும். எ-கு. திருவேடத்தாரைச் சிவனெனக்கண்டு வழிபடவென்று பொருட்கூறியதேதென்னில் அவர்கள் கொண்ட வேடத்தினாலுந் தியானசமா

தியினாலு மவர்களிடத்திலே சிவன் சாந்நித்தியமாகச்செ
ய்து நிற்கையா லப்படிச் சொன்னதெனவறிக. இதற்கு.
பி-ம். சித்தியாரில் "அறிவரியான் றனையறிய வாக்கையாக்கி
யங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத்தருளாற், செறிதலி
னாற் றிருமேயடுஞ் சிவனுருமேயாகுஞ் சிவோகம்பா விக்கும
தாற் சிவனுமாவர், குறியதனை யிதயத்தே யரனைக்கூடுங்
கொள்கையினா லவனாவர் குறியொடுதாமழிய, நெறியதனாற்
சிவமேயாய் நின்றிடுவரென்று னேசத்தாற் றொழுதிடுநீ பா
சத்தான்விடவே." எ-று. கண்டுகொள்க.

இனி வானோர்தொழுந் திருமேனிதானும். எ-து. சிவலி
ங்கப்பெருமானைச் சிவனெனக்கண்டு வழிபடவென்று பொ
ருட்கூறியதே தென்னில் இந்தச் சிவலிங்க மூர்த்தமானது
சிவனுடைய வடிவாகிய சத்தி சிவான்மீகமா யிருக்கையாலு
மந்திர தந்திரங்களினாலும் வழிபடுவோர்க்குக் காட்டத்தி
லக்கினி கடைந்தவிடத்திலே பிரகாசித்தாற்போலவும் பசுவி
னிடத்துண்டாகியபா லந்தப்பசுவினுடலெங்குநின்றாலு மந்
தப்பசுவின் முலைக்கண்ணிலே தோன்றினாற்போலவும் அந்த
விலிங்கமூர்த்தத்திலே பூரணமாகிய சிவம் பிரகாசிக்கை
யாலு மப்படிச் சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தி
யாரில். "திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனிதன்னைச் சிவ
னெனவே கண்டவர்க்குச் சிவனுறைவனங்கே, யருக்கோ
விமந்திரத்தா லென்னினையுமவர்க்கு முளனெங்கு மிலனிங்
குளனென்பார்க்கு, மிருப்பாயவடிவா யிந்தனத்தினெரிபோல்
மந்திரத்தின வந்தரித்து மிருஞ்சுரபிக்கெங்கு, முருக்காண
வொண்ணாத பால் முலைப்பால்விம்மி யொழுகுவதுபோல்
வெளிப்பட் டருளுவனென்பர்க்கே." எ-று. கண்டுகொள்க.

மற்றுள்ள நூல்களெல்லா மென்றுமுதலையுஞ் சிவனெனக்க
ண்டு வழிபடவென்று வருகையாலே இந்நூல் மகேஸ்வரரையுஞ்

சிவலிங்கப்பெருமானையும் வழிபடச்சொன்னதொழிய ஆசாரியனை வழிபடச் சொல்லாதிருப்பானேனென்னில் அது ஆசாரியன் முன் னிலையாக வெழுந்தருளிச்செய்யச் சீடன்தண்டம் பண்ணி வழி பட்டு கேட்டுவருகையா லதனைச் சொல்லவேண்டுவதில்லை யென் பது கருத்து. ஆறுவது மசாரியனையுஞ் சிவனெனக்கண்டு வழிபடு கைக்குப். பி-ம். சித்தியாரில். "பரப்பிரம மிவனென்றும் பரசி வன்றானென்றும் டரஞானமிவனென்றும் பராபரன்றா னென்று, மரன்றருஞ்சீர் நிலையெல்லா மிவனேயென்று மருட்குருவை வழி படவே யவனிவன்றானேயே, யிரங்கியவாரணமாமை மீனண்டஞ் சினையை யியல்பினொடு பரிசித்து நினைந்தும் பார்த்தும், பரிந்தி வைதா மாக்குமாபோற் சிவமேயாக்கும் பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந்தானே." எ-று. கண்டுகொள்க.

இந்தப் பூமியின் கண்ணிலே யெழுந்தருளி யிருக்கப்பட்ட லிலிங்கமூர்த்தத்தை வானோர் தொழுந்திருமேனி யென்றதேதெ ன்னிற் றேவர்களு முத்தியைப் பெறுமவதரத்து இந்தப் பூமியின் கண்ணே வந்து சிவனையருச்சித்துப் பெறவேண்டுகையா லப்படிச் சொன்னதெனவறிக. இதற்கு. பி-ம். சித்தியாரில் "வானிடத்த வரு மண்ணில்வந் தரன்றனையர்ச்சிப்பர்." எ-ம். திருவாசகத்தி னும் "புவனியிற்போய்ப் பிறவாமையினாணும் போக்குகின்றே ம்." எ-ம். கண்டுகொள்க.

அப்படியிருக்க விந்த லிலிங்கமூர்த்தத்தை யண்டருங் கண் டிலாத வண்ணமே யென்றதேதென்னில் இந்த லிலிங்கமூர்த்த த்தை வழிபடுமவர்க ளந்த வுண்மைஞானமாகிய பூரணத்தை யிலி ங்கத்தினிடத்திலே தியானித்து வழிபட வேண்டுகையால் அந்த வுண்மைஞானத்தை யவர்களறியாதபடியாலே யப்படிச் சொன்ன தெனவறிக. அஃதெங்ஙனேயென்னில் அவர்கள் சிவனை யிழந்து நின்று செய்த பசுபுண்ணியத்தினாலே தெய்வபதத்தைப் பெற்றுச் சிற்றின்பமாகிய போகங்களை யநுபவித் திருக்கையா லந்த வுண்

மைஞானத்தை யறியாதவர்க ளென்றதெனவறிக. இதற்கு, பி-ம். திருவாசகத்தில் "வானநாடரு மறியொணாதநீ" எ-ம். "கனவே யுந் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்" எ-ம். "அளவறுப்ப தர்க் கரியவ னிமையவர்க் கடியவர்க் கெளியான்" எ-ம். வருமே றுக்களைக் கண்டுகொள்க.

இனி இங்ஙனஞ் சிவனை வழிபடுகிறவர்கள் பிரியப்பட்டு வகைகூறாமல் விதனப்பட்டு வெண்டரளங்கள சிந்த விழிமொழி குழறி யென்னவேண்டுவா னேனென்னில் யாதாயொரு விதனமுற்றவர்கள் தங்கள் விதனம் நீக்கத்தக்க முதியோரைக் கண்டவிடத்துத் தாங்கள்பட்ட விதனத்தின் மேலீட்டினாலே தங்கள் விதனத்தைச்சொல்லி யாறுமிடத் தவர்கள் மெய்யறியாமற் கண்ணீருங்குதித்து நாவுந் தழுதழுத்து நின்றாற்போல மோக்ஷகாமிகளா யுள்ளவர்களுந் தாங்கள் ஜநநமரண துக்கத்திலே யழுந்தியும் இயம தண்டப்பட்டும் நரகவேதனைப் பட்டும் வருகிற விதனத்தை யுபதேசக் கிரமங்களினாலே கண்ட வவதரத்துச் சிவசந்நிதியிலே தங்கள் விதனம் மாறவேண்டுகையால் வாக்கு மனோதீதமாயுள்ள சிவன் நம்பொருட்டாகத் திருமேனி கொண்டருளினா னென்று கண்டு தங்கள் விதனத்தின் மேலீட்டை யந்தச் சந்நிதியிலே விண்ணப்பஞ் செய்யச்செய்தே யவர்கள் மெய்யறியாம லுண்டாகிய கண்ணீருங் குழறுதலு மெனவறிக. என்னவே மனதிலுண்டான விதனங் கண்ணீராலே யறியப்படுமென்பது கருத்து. அஃதெங்ஙனே யென்னில் "அன்பிற்குமுண்டோ வடைக்குந்தா- ழார்வலர்புன் கணீர் பூசறரும்." என்று திருவள்ளுவ தேவரு மருளிச்செய்தது மிப்பொருட்பற்றி யெனவறிக. சிவனைப் பெறவேண்டுமென்று விதனமுற்றவர்களுக்குக் கண்ணீருங் குழறுதலு முண்டாமென்பதற்கு. பி-ம். திருவாசகத்தில். "மெய்தானரு ம்பி விதிர்விதிர்த்துன் விரையார்கழற்கென், கைதான்றலைவைத்

தூக் கண்ணீர்ததும்பி வெதும்பி." எ-ம். "உள்ளந்தானின்றுச்சி யளவுநெஞ்சா யுருகாதா ருடம்பெல்லாங் கண்ணாயண்ணா, வெள்ளந்தான்பாயாதா நெஞ்சங்கல்லாங் கண்ணிணையுமரமாந் தீவினையினேற்கே." எ-ம். "வேண்டுந்தனையும் வாய்விட்டலறி விரையார்மலர்ப்பாதம், பூண்டுகிடப்ப தென்றுகொல்லோ வென்பொல்லாமணியைப் புணர்ந்தே." எ-ம். பெரியபுராணத்தில். "ஈசனையேபணிந்துருகி யின்பமிகக் களிப்பெய்தப், பேசியவாய் தழுதழுப்பக் கண்ணீரின்பெருந்தாரை, மாசிலா நீறழிந்தங் காவிதாமயிர் சிலிர்ப்பக், கூசியே யுடல்கம்பித் திடுவார் மெய்க்குணமுள்ளார்." எ-ம். பாணாற்றுப்படையில். "முதுமலைநோக்கிக் கதுமெனச்செல்வுழி - யுவகைப்பெரியாறு தவலறப்பெருகி - யுண்மனந்தளிர்ப்ப வுரோமஞ்சிலிர்ப்பக் - கண்ணெனுமதத்தின் கண்ணீருடைய- வென்பிடையுருகி நன்குடல்விதிர்ப்ப - வேர்த்துமெய்யரும்பி நாத்தழுதழுப்ப." எ-ம். வருமேதுக்களைக் கண்டுகொள்க.

இனி மெய்யே கண்டுகொண்டிருப்பர். எ-கு. உண்மையாகக்கண்டு தியானித்துக்கொண் டிருப்பர்களென்று பொருட்கூறியதேதென்னில் பூரணகத்தாவா யுயிர்க்குயிராய்நின் றறிவிக்கிற சிவமானது குருலிங்க சங்கமமாகப் புறம்பேகொள்ளப்பட்ட திருமேனியிலு முண்டென்று வழிபடுகையா லப்படிச் சொல்லப்பட்டதெனவறிக. இதற்கு. பி-ம். தேவாரத்தில். "என்னிலாருமெனக்கினியாரிலை, யென்னிலும்மினி யாவொருவனுள, னென்னுளே யுயிர்ப்பாய்ப் புறம்போந்துபுக், கென்னுளேநிற்கு மின்னம்ப ரீசனே." எ-ம். திருமந்திரத்தில். "உள்ளத்துமுள்ளன் புறத்துள்ளனென்றவர்க, குள்ளத்துமுள்ளன் புறத்துள்ள னெம்மிறை.," எ-ம். திருவருட்பயனில். "உள்ளும்புறம்பு மொருதன்மைக் காட்சியருக் - கெள்ளுந்திறமேதுமில்." என்றது மிப்பொருட்பற்றிநின்றதெனவறிக. அன்றியும் பூசாகரணத்திலும் இதுவே பொரு

னென்பதைப்பற்றி. "ஆருயிர்ச் சிவத்தைவிட்டுப் புறச்சிவ மர்ச்சிப்பானே, லீருயிர்ச் சிவமுண்டாகி லிசைவதன் றெங்குமுள்ளதோருயிர்ச் சிவமேமற்றுப் புறச்சிவ முருச்சிவத்திற், பேருயிர்ச் சிவமேதென்னிற் பெருநதுப் பிணக்குறாலே." என்பதனாலு மந்தச் சிவமுதலை யுள்ளும்புறம்பு மொருதன்மையாகக் கண்டவர்களே சிவஞானிக ளென்பதனைக் குருமுகாந்தரமாகக் கண்டுகொள்க.

இனி ஞானக் கடலமுதருந்தினோரே எ-து. ஞானத்துக்குச் சமுத்திரத்தை யுவமையாகக் கூறியதேதென்னிற் சமுத்திரம்போல ஞானமு மளவுபடாதபடியாலும் தன்னிடத்திலே கூடினவான்மஜாலங்களை யந்தச் சமுத்திரம்போல வுள்ளடக்கி நிற்கையாலுமந்தச் சமுத்திரம்போல வமுதம்விளைகையினாலு மப்படிச் சொன்னதெனவறிக. அப்படிச் சமுத்திரம்போல ஞான மளவுபடாதென்பதற்கு. பி-ம். திருக்களிற்றுப்படியாரில். "கடலலைக்கேயாடுதற்குக் கைவந்துநின்றாய, கடலளக்க வாராதாற் போலப்-படியி, லருத்திசெயு மன்பரைவந் தாண்டதுவுமெல்லாங், கருத்தினுக்குச்சேயனாய்க்கோன்." என்பதனுள் 'கடலளக்க வாராதாற் போல' என்பதைக் கண்டுகொள்க. அன்றியும் சமுத்திரம்போலச் சிவனுமான்ம ஜாலங்களை யுள்ளடக்கி நிற்பானென்பதற்கு. பி-ம். சித்தியாரில். "இரும்பைக்காந்தம் வலித்தாற்போ லிசைந்துயிரையெரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத் தானாக்கி, யரும்பித்தனத்தை யனலழிப்பதுபோன் மலத்தை யழித்தமல னப்பணைந்தவுப்பேபோ லன்றாகி, விரும்பிப் பொன்னினைக்குளிகை யொளிப்பதுபோ லடக்கி மேலளித்துத் தானெல்லாம் வேதிப்பானாகிக், கரும்பைத் தேனைப்பாலைக் கனியமுதைக் கண்டைக் கட்டியையொத்திருப்பனந்த முத்தியினிற்கலந்தே." என்பதனுள் "விரும்

பிட் பொன்னிணைக்குளிகை யொளிப்பதுபோலடக்கி" என்பதைக்கண்டுகொள்க.

இனி சமுத்திரம்போல அமுதம் விளைகையாலு மென்பது திரு. பி-ம். ஞானமிர்தத்தில். "மந்தரமத்தென நிறவினுனென்னவைந்தலையரவு சுற்றிநஞ்சொடு - பணுமணிபிதுங்கப் பற்றியவுணரோ - டமரருமியக்கலாற்றுநாள்செல - முகுந்தன்றனது முதுவலிபெறுட்டோள் - வருந்தவாங்கு வாய்விட்டலறி - நுரைத்தலைவிரித்துத் திரைப்பெருங் கையெடுத் - தின்றுங்கூப்பிட் டன்றுவந்தெழுந்த - வுவரியமுதமென்ப." எ - து. கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந்திதனாகக் கண்டு வழிபடுகைக்குச் சிவஞான சித்தியில் பன்னிரண்டாஞ் சூத்திரமாகிய. "செங்கமலத்தாளிணைகள் சேரவொட்டாத் திரிமலங்க ளறுத்திசனேசரொடுஞ் செறிந்திட், டங்கவர் தந் திருவேட மாலயங்களெல்லா மரனெனவே தொழுதிறைஞ்சியாடிப்பாடி, யெங்குமியா மொருவருக்கு மெளியோமல்லோ மியாவர்க்குமேலானே மென்றிருமாப் பெய்தி, இங்கண்முடி யாரடியாரடியோமென்று திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடையோரே." என்னும் விதியைப்பற்றிச் சிவஞானிகளா யுள்ளவர்கள் திருவேடத்தாரையுஞ் சிவலிங்கப் பெருமானையுஞ் சிவனெனக்கண்டு வழிபடுமுறைமையை யறிவித்தது. (௪அ)

---

வேறு—தொண்டர்க ளிடத்தும் வானோர் தொழுந்திருமேனிதானும் - மகேசுரரும் தேவர்க டொழப்பட்ட சிவலிங்கமும்,—அண்டருங் கண்டிலாத வண்ணலே யெனவணங்கி - தேவராலுங் காணப்படாத சிவன்றானே யென் றுட்கொண்டு வணங்கி,—வெண்டரளங்கள் சிந்த விழி - கண்கண் முத்துப்போலு நீர்த்துளி யுகுப்ப,—மொழிகுழற - வாக்குத் தழுதழுப்ப,—மெ

ய்யே கண்டுகொண் டிருப்பர்-அவ் வுண்மைப்பொருளையே கண்டுகொண்டிருப்பர்கள்,—ஞானக் கடலமு தருந்தினோரே-ஞானக்கடலிலே விளைந்த வமுதத்தைப் புசித்தவர்கள். எ-று.

தொண்டர்க ளிடத்துமென்ற பாடத்திற்குப் பொருட்சிறப் பின்று. தரள மாகுபெயர். ஞானக் கடலமுதென்பதனை யமுதிற் கேற்ற வடையாக்கி ஞானாமிர்தத்தை யென்று சுவாத்மானுபூதிக் கொருபெய ராக்கலுமாம்.

ஆக விங்ஙனஞ் சொல்லப்பட்ட உண்மை யைம்பதினும்
ஆன்மவிலக்கணமுதல் அணைந்தோர்தன்மை முடிவாகச்
சொல்லப்பட்ட அதிகாரமொன்பதும்
இவ்வளவிலே முடிந்தது.



அணைந்தோர் தன்மையாகிய
பன்னிரண்டாஞ்சூத்திர
முற்றிற்று.

---

மேலிந்நூற் சொல்லப்பட்ட சைவசித்தாந்தத்தி னுண்டாகிய வத்தத்தின் கோட்பாட்டை யருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

நிலவுலகாயுதாதி நிகழ்சிவாத் துவிதாந்தத்துக்,
குலவின ரளவளாவாக் கொள்கைய தாகிவேதத், தலை
தரு பொருளாயின்பாய்த் தாவில்சற் காரியத்தாய், மலை
வறு முணர்வாற்பெத்த முத்திகண் மதித்தாமன்றே.

அந்தமில்சமயத் தளவாதருமறை
யந்தமுறுபொரு ளறைந்தேனென்றது.

(இ-ள்.) நிலவு புறச்சமயமாகப் பொருந்தப்பட்ட வுலகாலகாயுதாதி நிகழ் யுதன்முதல் அகச்சமயமாக விளங்கப்பட்ட

| | |
|---|---|
| சிவாத்துவிதாந்தத்து | சைவராகிய சிவாத்துவிதியீருக |
| குலவினரளவாக் கொள்கைய தாகி | அவர்கள் கொண்டாடப்பட்ட அத்தங்களாகிய அளவுகளுக் களவுபடாத கோட்பாட்டையுடைத்தாய் |
| வேதத் தலைதரு பொருளாய் | வேதத்தின் முடிவிலே யுண்டாகப்பட்ட அத்தமாய் |
| இன்பாய் | பரமாநந்தமாகிய பேரின்பமாய் |
| தாவில் சற்காரியத்தாய் | கேடில்லாத சற்காரியவாதமுமாம். சற்காரியமாவது உள்ளதே யுள்ளதென்றும் இல்லாததொருகாலத்தினு மில்லையென்று நின்றதெனவறிக. அஃதாவது பதிபசுபாச மூன்றினுள்ளும் யாதொரு பொருளை யோரிடத்திலே யுண்டென்று நாட்டிப் பின்னை மற்றோரிடத்திலே யில்லையென்கிறது சித்தாந்த விரோதமாகையால் அஃதிந்நூலுக் கில்லையென்றதெனவறிக |
| மலைவறு முணர்வால் | சிவனுடைய குற்றமற்ற பேரறிவாகிய திருவருளினாலே |
| பெத்த முத்திகண் மதித்தாமன்றே. | இந்நூலைப் பெத்தமாகிய பொதுவென்றும் முத்தியாகிய வுண்மையென்றுஞ் சொல்லாநின்றேம். எ - று. அன்றியும் பெத்த முத்தியென்றது போகமோக்ஷமென்னவுமா மெனவறிக. |

வி-பு. உலகாயுதன்முதற் சிவாத்துவிதியீருகச் சொல்லப்பட்ட சமயிகளுககுத்தொகை யிவ்வளவென் றறிகைக்கு முன்சொன்ன பொதுவிலே "புறச்சமயத்தவர்க் கிருளா யகச்சமயத்தொளியாய்" என்ற செய்யுளுக் கெழுதின றுட்பத்திலே கண்டுகொள்க.

பெத்த முத்தியென்ற தேதென்னில் பெத்தம் பாசத்தோடு கட்டுப்பட்டு நிற்கை. முத்தி யந்தக் கட்டுவிடுகை யெனவறிக. திருவாசகத்தில். "கட்டறுத்தெனை யாண்டுகண்ணார நீறிட்ட வன்பரோ டியாவருங்காணவே, பட்டிமண்டப மேற்றினை யேற்றினை, யெட்டினோ டிரண்டு மறியேனையே." எ-து. கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது இந்நூலிற் சொல்லப்பட்ட சைவசித்தாந்தவத்து முலகாயுதன்முதற் சிவாத்துவிதி யீறாகச் சொல்லப்பட்ட சமயிகள்கொள்ளுங் கோட்பாட்டையுடையதல்லவாய் வேதாந்தத் தெளிவாய் அநுபோகவத்தமாய் முன்னொடுபின் மலைவற்றபொருளா யிருக்கப்பட்ட அர்த்தத்தைச் சிவனுடைய திருவருளினாலே பொதுவென்று முண்மையென்றுஞ் சொல்லாநின்றோ மென்னு முறைமையை யறிவித்தது. இதுநூற்கருத்து. (௪௧)

---

வேறு—இஃ திந்நூலை முன்பின் மலைவறத் திருவருளாலே சொன்னோமென் றருளின் மகிமையை யுணர்த்திற்று.

நிலவுலோகாயுதாதி நிகழ் சிவாத்துவிதாந்தத்துள் குலவினர்–உலகாயுதன் முதலாக வுண்டாய்வருகின்ற சிவாத்துவிதி யீறாகிய சமயிகளிலே,—அளவளாவாக் கொள்கையதாகி – செவ்விய ரல்லாதாருடைய பிரமாணங்களுக் களவுபடாத கோட்பாட்டையுடையதாய்,—வேதத் தலைதரு பொருளாய்–வேதத்தின் சிகையிலே தங்கிய பொருளாய்,—இன்பாய்–சுகசொரூபமாய்,—தாவில்சற்காரியத்தாய் – கெடாத சற்காரியபக்ஷத்தின் கண்ணாய்,—மலைவறு முணர்வால்–முன்பின் மலைவற்ற சிவஞானத்தாலே,—பெத்த முத்திகண் மதித்தாமன்றே – சைவ சித்தாந்தத்திற் பெத்தமோக்ஷ மிரண்டையு மிந்த நூலிடத்து விசாரித்துச் சொன்னோம். எ-று.

குலவினர் கொண்டாடத்தக்கவ ரென்பாருமுளர். வினையெ ச்சவடுக்குக்க ளாறுமென்னும் பெயரெச்சவினையி லறுதலோடு முடிந்தன. நிலவுலகாயுதாதி யென்பதற்குப் பிரபஞ்சத்திலே நிலைப்பட்டவென்றுமாம். அன்றே அசை.

---

இங்ஙனம் பெத்தமாகவும் முத்தியாகவுஞ் சொல்லப்பட்ட விந்த நூலினையு மிதனால் விளங்கப்பட்ட சைவசித்தாந்த வத்தத்தினையும் ஆசாரியர் சீஷனுக்குக்கொடுக்கு முறைமையினையு மேலருளிச் செய்வா னெடுத்துக்கொண் டருளியது.

திருவருள் கொடுத்துமற்றிச் சிவப்பிர காசநன்
னூல், விரிவது தெளியுமாற்றால் விளம்பிய வேதுநோ
க்கிப், பெருகிய வுவமைநான்கின் பெற்றியி னிறுவிப்
பின்முன், றருமலை வொழியக்கொள்வோன் றன்மை
யிற் சாற்றலாமே. (௫0)

பெருநூற்பொருளைப் பின்முன்மலைவற
வருளுடன்கொள்பவர்க் கறைகவென்றது.

| | |
|---|---|
| (இ-ள்.) திருவருள்கொடுத்து | மலபாகம்வந்து சத்திநிபாதமு முண்டாய்வந்தா னொருசீஷனுக்கு ஆசாரியன் றனது திருவடியை வைத்து |
| மற்றிச் சிவப்பிரகாச நன்னூல் விரிவது | (மற்றுவினைமாற்று) இங்ஙனஞ் சிவப்பிரகாசமென்னும் நல்லநூலினது அத்தத்தின் விரிவானதை |
| தெளியுமாற்றால் | அறிந்து தெளியும் வழியால் |
| விளம்பிய வேதுநோக்கி | நூல்களில் சொல்லப்பட்ட இயல்பு காரியம் அனுபலத்தி யென்கிற ஏதுவாகிய காரணகாரியங்க ளாராய்ந்துபார்த்து |

பெருகிய வுவமைநான்கின் பெற்றியி னிறுவி

மிகவு முவமையாகச் சொல்லப்பட்ட வினை பயன் மெய் உருவென்று சொல்லப்பட்ட பண்பாலுவமை பயனாலுவமை உருவாலுவமை வினையாலுவமை யாகிய நால்வகையிலுண்டாகிய வியல்பிலே கருத்தைநிறுத்தி

பின்முன் றறுமலைவொழியக் கொள்வோன் றன்மையிற் சாற்றலாமே.

இந்நூலி லுண்டாகிய அர்த்தத்தை முன்னோடுபின் மலைவறக்கொள்ளத்தக்க முறைமையினையுடையவரிடத்திலே தெளியச்சொல்லலாம்.

று - ம். திருவருள் கொடுத்தென்றது தீக்ஷையினாலே பாசக்ஷயம்பண்ணி யுண்மைஞானத்தைக் கடாக்ஷித்த தெனவறிக.

நன்னூலென்றது கருத்திலுறை திருவருளே யிந்நூலுங் கலந்தென்னும் பொருளைப்பெற்று நின்றதெனவறிக.

விரிவது தெளியுமாற்றாலென்றது வளர்விருத்த மென்னும் பொருட்பெற்றதெனவறிக. அஃதாவது இந்நூலிற் சொற்சுருங்கி யர்த்தம் விருந்திருக்கையினாலும் ஆராயுந்தோறு மாராயுந்தோறு மர்த்த மேன்மேலும் விரிந்துவருகையினாலு மெனவறிக.

விளம்பிய வேதுநோக்கி யென்றதை இயல்பென்றுங் காரியமென்றும் அநுபலத்தியென்றுஞ் சொன்னதேதென்னில் இயல்பேதுவென்றது பொருடன்னையே யுவமையாக்கி மாப்பூத்ததென்றால் மரமெனவறிகை யெனக்கொள்க.

காரியவேது வென்றது புகையைக்கண்டது கொண்டே யிவ்விடத் தனலுண்டென வறிதல்.

அநுபலத்தி யேதுவாவது குளிரில்லாது கொண்டே பனியில்லை யென்றதெனவறிக.

இவையிற்றுக்கு. பி - ம். சித்தியாரில் "ஏதுமூன் றுமியல்பு காரியத்தோடநுபலத்தியென, வோதினியல்பு மாமரத்தைக் காட்டலுறுகாரியம்புகைதா, னுதியானவனல்காட்ட லாகுமநுபலத்தியது, சீதமின்மை பனியின்மை காட்டலாகுஞ் செப்பிடிலே." எ-து. கண்டுகொள்க.

உவமைநான்காவது "வினைபயன்மெய்யுரு வென்றநான்கே, வகைபெறவந்த வுவமைத்தோற்றம்." என்னும் விதியைப்பற்றிக் கார்போலுங்குழல், தருப்போலுங்கை, புலிபோலப் பாய்ந்தான், பொன்போலு மாவாரம்பூ, என்று வருவதெனவறிக.

இங்ஙனம் ஏதுவும் உவமையுஞ் சொன்னதேதெனில் பதி பசுபாசமென்ற மூன்றினுள் யாதா மொருபொருளை யறியுமிடத்து ஏதுக்களினாலும் உவமைகளினாலு மறியவேண்டுகையா லெனவறிக, இதற்கு பி-ம். சங்கற்ப நிராகரணத்தில் "வாதசேற்ப விதண்டையுமேதுவு - மோதுநால்வகை யுவமையுந்திகடர-வருள்சேர் மாந்தர் பொருள்சேரமற்-றர்க்கமும் விடையமுங் கற்க- நற்கவி மாந்தர் நகவிற்றுவனே." எ - து. கண்டுகொள்க.

பின்மூன் றருமலவொழியக்கொள்வோன் றன்மையிற் சாற்றலாமே. எ-கு. மூன்றுபேதமலவறக் கொள்ளவல்லவனென்றதாரென்னில் மூன் ஜநநங்களிலே சரிதைகிரியை யோகங்களை முற்றும் அநுட்டித்துவந்த புண்ணியவான்க ளென்றதெனவறிக. இதற்கு. பி-ம். துகளறுபோதத்தில் "உற்ற சரிதை யொழியாத நற்கிரியை, குற்றமிலாயோகக் குறிவழியு—முற்றிப், பிறந்தார்கடோமறியப் பேசுகேனன்றிப், பிறந்தா ரறியாத பேறு." எ-ம். இன்னுமினும் கேடில்புகழ் தருஞ்சரிதை கிரியாயோகக் கேண்மையரே யிவையுணர்த்தக் கிளக்குறாலே." எ-ம். கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது சமயாசாரமுஞ் சந்தானவாசாரமுண்டாய்வந்தா னொருசீஷனுக்கு ஆசாரியன் றிருவடியையவ

த்து இந்தச் சிவப்பிரகாசமென்னுந் திருநாமத்தினையுடைய நல்ல நூலிலே விரியப்பட்ட சைவசித்தாந்தத்தி னுண்மையானவத்துத் தை யேதுக்களினாலு முவமையினாலு நிச்சயித்து அந்தவத்துத்தை முன்னோடு பின்மலைவறக் கொள்ளத்தக்கப் பக்குவனுக்குக் கிரமத் திலே கொடுக்கலாமென்னு முறைமையை யறிவித்தது. (ருα)

---

வேறு—இது இந்நூலைக்கொடுக்கு முறைமையுங் கொள்வோ ன் றன்மையு முணர்த்திற்று.

பெருக்கிய வுவமைநான்கின் பெற்றியி னிறுவிப் பின்முன் றருமலைவொழியக் கொள்வோன் றன்வயின்—மிகுத்த பண்பு பய ன் வினை யுருவென்று சொல்லப்பட்ட வுவமை நாலுவகையின் றன்மைகளிலே பொருள்களை நிறுவிப் பின்முன் மலைவறப் புத்தி யிற் கொள்ளவல்லனாகிய மாணாக்கனிடத்திலே,—இச்சிவப்பிர காசநன்னூல் விரிவது தெளியுமாற்றால் விளம்பிய வேதுநோக்கி— இந்தச் சிவப்பிரகாசமாகிய நல்ல நூலினது பொருளின் விரிவுக ளைத் தெளியுநெறியினாலே தீக்கைக்குச் சொல்லப்பட்ட சத்திநி பாதக்குறிகளை யாராய்ந்து,—திருவருள் கொடுத்துச் சாற்றலா மே—ஞானதீக்ஷையாலே சிவஞானத்தைப் பிரகாசிப்பித்து இந்நூ லைச்சொல்லலா மாசாரியர். எ—று.

மற்றசை. ஏகாரமீற்றசை. இதற் காற்றுநீர்ப்பொருளாக வுரைப்பாருமுளர். நூல்விரிவது நூலது விரிவென வன்னுவயி க்கப்பட்டது. நன்னூலென்ற தந்நூலுட் சிவம்பிரகாசித்தலின்.

உண்மைமுற்றிற்று.

ஆ—பாயிரமுட்பட திருவிருத்தம்—ா.
சிவப்பிரகாச சவ்வியாக்கியாந
முற்றுப்பெற்றது.

---

## இத்திருவெண்பா

விந்நூலாசிரிய ரருட்கொப்பின்மை கூறுமுகத்தா
னூற்பெருமை கூறுகின்றது.

இப்பிறப்பே சீவன்முத்தி யெய்துவிக்கு மேற்பிறக்கு
மப்பிறப்பு மிங்கே யறுத்தருளி—யொப்பறவே
யுண்மையருள் கொற்றங் குடிவா ழுமாபதிதன்
வண்மையருட் குண்டோ கைம்மாறு.

### உரையாசிரியர் சிறப்பு.

தொந்தனையாற் சூத்திரத்தாற் சொற்பொருளி யம்பலவன்
றந்தகுறளாற் றொகையாற் றன்னருளாற்—சிந்தையின்மெய்
சாணச் சிவப்பிரகா சங்கரைக்கண் டான்மதுரைத்
தாணுச் சிவப்பிர காசன்

ஓதுபுகழ் சகாத்த மாயிரத்து நானூற்
றொருபதின்மேற் செல்கின்ற காலந்தன்னின்
மாதுபயில் மதுரையில்வாழ் சிவப் பிரகாசன்
வண்மையரு ணிகழ்ச்சியினா லுண்மையாக
வீதுமல மீதுவினை யீதுமாயை யீதுயிர்பின்
னீதுசிவ மென்றே காட்டித்
தீதில்சிவப் பிரகாசச் செய்யு ளாறுந்
தேர்ந்துரையிட் டேயுலகிற் சிறப்பித்தானே

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# முகவுரை



## திருவருட்பயன் - எ - து.

திருவருளின்பயன் இதுவெனக்கூறு மோர் நூல் எனப்பொருள்.

அஃதாவது, சிவப்பெருங்கருணை, ஆன்மாக்கட்கருளும்வண்ணம், இதுவெனக் கூறப்படுவது.

அதுவே, இறைவன் தனது சத்தியா லுலகினை யியற்றிக் காத்து அருளுமா றிதுவெனக் கூறப்படுவதுமாம்.—திரு-அருள்-பயன்-எனப்பிரித்துப் பொருள்கொள்க.

உலகு என்பது உலகத்துள்ள பலவாய உயிர்களை யெனக்கொள்க. அதனை வடமொழிச் சிவஞானபோதத்தின் தலைச்சூத்திரத்தா லுணர்க.

இனி அத்தெய்வத்திருவருளே ஆன்மாக்கட்கு ஆதிதொடங்கி அந்தியவரை ஆன்மாக்கள் நினைத்த நினைத்தவண்ணம் உபகரிப்பதாதலால் அதனை யுணர்ந்து வழிபடுவோர்க்கே வீட்டின்ப மெளிதினெய்தப் பயன்படத் தருவதென உணர்த்துவதுமாம்.

அவ்வா றிந்நூலில் யாங்ஙனே முணர்த்தியதெனின்? முதலதிகாரம் முதற்குறளில் (திரு) சிவப்பெருந்தன்மையை யுணர்த்தி, இரண்டாவது மூன்றாவது

குறள்களால் அருளாகிய சத்தியின் றன்மையை யுணர்த்தி, ஏனைய குறள்களால் ஆன்மாக்கள் அவற்றின் பயனை யுணருமாறு கூறியதெனக் காண்க.

ஆயின் ஏனைய அதிகார மொன்பதும் யாதுகூறிற்றெனின்? அதனையே விரித்து விளக்கி வலியுறுத்திக் கூறியதென்க.

அஃதெவ்வாறென்னில்? முதன் மூன்று அதிகாரங்களால் பதி பசு பாச நிலைமை; அஃதாவது, அவனவளதுவென்று காரியப்பட்டுவரு முலகினை இயற்றுவிப்போன் (பதி) கத்தாவெனவும், இயற்றப்படுவோர் (பசு) ஆன்மாக்களெனவும், அதனை இயற்றும்வகை அவர்களின் (பாசம்) ஆணவாதி மலங்கள் பரிபாகப்படுவதற்கெனவும், நான்காவது அருளதுநிலையால் திருவருளின் றன்மை யிதுவெனவும், ஐந்தாவது அருளுருநிலையால் அவ்வருளே ஆன்மாக்களை இரக்ஷிக்கும்பொருட்டுத் திருவுருக்கொண் டெழுந்தருளி உபகரிக்குந் தன்மை யிவ்வாறெனவும், அருட்டன்மையை பொதுவகையாற்கூறி; உண்மையி லதனை யடையுமாறு, ஆறாவது அறியுநெறி என்பது ஆன்மா திருவருளால் உண்மைப்பொருளை யுணருமுறைமை யிவ்வாறெனவும், ஏழாவது உயிர்விளக்கம் என்பது அவ்வான்மாவின் றன்மை யிதுவெனவும், எட்டாவது இன்புறுநிலை என்பது அவ்வான்மா திருவருளால் சிவப்பேரின்ப மடையுமா றிவ்வாறெனவும்,

ஒன்பதாவது ஐந்தெழுத்தருணிலை என்பது மேற்கூறியவாறு சமாதியடைதல் கூடாதோர் திருவைந்தெழுத்தை யோதின் அருட்பேறுற்றுச் சிவப்பேரின்ப மெய்துவாரெனவும், பத்தாவது அணைந்தோர்தன்மை என்பது அவ்வாறு சிவப்பேரின்ப மெய்தினோர் நிலைமை யிதுவெனவும், கூறியவாறு காண்க.

இதில் முதல் ஐந்ததிகாரமும் பொது,
பின் ஐந்ததிகாரமும் உண்மை,
என்பதையுணர்க.

இனி இவ்வதிகாரங்கடோறும் திருவருட்டன்மையை விரித்தெடுத்தோதியவாறு அவ்வவ்வதிகாரங்கடோறும் வாசித்தும் கேட்டும் சிந்தித்தும் தெளிக.

இனி இந்நூல் யாதுபற்றிக் கூறியதெனின்? தன்னையடைந்தோர் பக்குவன், சிவம் ஆன்மாக்களை மூவினைப் பரித்துவாவேனென்று வினவியதற்கு, அது அருளேயென்ன, அவ்வருள் யாது? அதனாலடையும் பயனென்னை? என, அத்திருவருட்பய னிதுவென்று ஆகமங்களுணர்த்தியவாறு கூறியதென்க.

இத் திருவருட்டன்மையைச் சித்தாந்தசாத்திரங்கள் பதினான்கினுஞ் சிறந்தசிவஞானபோதம்சிவஞானசித்தி சிவப்பிரகாசங்களுள் கூறுதொழிந்ததென்னையெனின்? அறியாது வினவினாய்! முதற்சூத்திரத்தின் பதி இலக்கணங்கூறி, அடுத்த இரண்டாஞ்சூத்தி

ரத்துள் அத்திருவருளிலக்கணமே கூறப்பட்டவாறறிக.

அஃதெங்ஙனமெனின்? ரௌரவாகமத்தினோரம்சமாகிய வடமொழிச் சிவஞானபோதத் திரண்டாஞ்சூத்திரத்துள் " ஆஞ்ஞயா " என்றும் தமிழ்நூற் சிவஞானபோதத் திரண்டாஞ்சூத்திரத்துள் "ஆணையின் " என்றுங்கூறி யுள்ளதன்பொருளை ஆய்ந்துணர்ந் தடங்குக.

இதனாற்போந்த பயன் யாதெனின்? இத்தெய்வத் திருவருளானன்றித் தனிப்பெருஞ்சிவம் தானே தனித்துபகரித்தல் செய்யாதென்பதே துணிபாய்க் கொண்டுணர்வதென்க.

இந்நூல்யாரா லியற்றப்பட்டதெனின்? கொற்றவன்குடிவாழ் நற்றவ உமாபதிசிவனால் கூறப்பட்டதென்க.

இவர் யாரெனின்? உயர் சிவஞானபோதநூலைதன்வழி சார்புநூலாய சிவப்பிரகாச முரைத்தோரென்க.

இவர் சரித்திரம் யாதெனின்? அதனைச் சிவப்பிரகாசவுரையில் விரித்திருக்கின்றாம்! ஆங்குக்காண்க.

சைவசித்தாந்த நூல்கள் பதினான்கனுள் இஃரிய ற்றைய நூல்க ளியாவையோ வெனின்? "பிரகாசம், வந்தவருட்பண்பு, வினை, போற்றி, கொடி, பாசமிலா

நெஞ்சுவிடு, உண்மைநெறி, சங்கற்பம் என்னும், எட்டுநூல்களேயாம் !

அவை, சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறிவிளக்கம், சங்கற்பநிராகரணமென்பவை.

இதுவன்றியும் அறம் பொருள் இன்பம் வீடெனு நால்வகைப்பொருளையும் மூவகைபபடுத்தியோதும் வேதப்பொருள் விளக்கமும் தமிழ் வேதமுமாகிய திருவள்ளுவப்பயனென்னும் திருக்குறள், அதன் முதனூல் வேதமேபோன்று வீட்டுநெறியினை விளங்கக்கூறாது மயங்கக்கூறுதலான், அம்முதனூலாகிய வேதப்பொருளை விளக்கி வீட்டுநெறியினைக்கூறும் ஆகமமே போன்று திருக்குறளை விளக்கி வீட்டுநெறி கூறுவது இத்திருவருட்பய னென்பதூஉமா மென்க.

வேதமே திருக்குற ளென்பதற்கு அசரிரி, சரஸ்வதி இறையனார், உக்ரப்பெருவழுதிமுதலிய சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மர் கூறிய திருவள்ளுவ மாலையானும் " தேவர்குறளும் திருநான் மறைமுடிவும் " என்னும் ஔவை வாக்கின் பாசுரத்தானும் துணிக.

ஆகமமே திருவருட்பயனென்பதற்கு சிவஞான போதமுதலிய சித்தாந்தநூல்களோடு சேர்க்கப்பட்டிருப்பதானும், சிவஞானபோதம்போன்று? பதிபசு

பாசத்திறங்களையே கூறுதலானும்,பௌஷ்கராதிகளைப்போன்று விந்துசத்தி லக்ஷணமாகிய திருவருட்டிறத்தையே தெள்ளிதிற் றெளிய விதந்தெடுத்தோதுதலானுமென்க.

இனித் திருக்குறளின்பொருளை விளக்குவதெங்ஙனமெனின்? திருக்குறளின் முதற்செய்யுளாகிய "அகரமுதல,, என்னும் செய்யுளையே திருவருட்பயனின் தலைச்செய்யுளாகிய "அகரவுயிர்போல்,, என்னும் செய்யுள் விரித்தெடுத்தோதுவதை வல்லோர்பால் கேட்டுணர்க.

ஆயின் ஏனைய -கநகo- குறளின் பொருளையும் திருவருட்பயனின் -க00 -குறளெவ்வாறுவிரித்தெடுத்தோதி விளக்கக்கூடுமெனின்? நன்றுகடாயினாய்! திருவருட்பயன் தெய்வத்திருவருளை முன்னிட்டு வீட்டுநெறி யொன்றினையே விளக்கவந்தமையின் அத்திருக்குறளின் -கநந- அதிகாரமும் முதலதிகாரத்துளடங்குமென்றும், அம்முதலதிகாரம் பதிபசுபாசமென்னு முப்பொருளையே கூறுமென்றும், அப்பொருட்டன்மையே ஈண்டுதிருவருட்பயனில் பத்து அதிகாரமும் -க00- செய்யுளுமாகவிரிந்ததென்றும் உண்மைநூலுணர்ந்த நல்லறிவாளர்பால் கேட்டுத்தெளிக.

திருக்குறள் முதலதிகாரத்துள் ஏனைய -கநஉ- அதிகாரமுமடங்கியதெவ்வாறெனின்? அவ்வதிகாரம் கநஉ-ம் அறம் பொருள் இன்பமென்று முப்பாலாய் வகுத்து,முதலதிகாரம்—உ-வது குறள் "கற்றதனாலா

யபயன்" என்பதனால் அறத்துப்பாலும், ரு-வது—குறள் "இருள்சேரிருவினையும்" என்பதனால்பொருட்பாலும், எ-வது குறள் "தனக்குவமையில்லாதான்" என்பதனால் காமத்துப்பாலும் கூறியவாறுகாண்க.

முதலதிகாரத்துள்ள ஏனையகுறளேழும் யாதுகூறிற்றெனின்? அம்முப்பாலிலக்கணத்தையே விரித்தெடுத்தோதி வீட்டுநெறிபுகுவான் காட்டுவதுணர்த்திக் கூறிற்றென்க.

அன்றியும்? "அகரமுதல" என்னும்-க-குறளால்பதியிலக்கணமும், "கற்றதனாலாயபயன்" என்னும்-உ-வது குறளால் திருவருளிலக்கணமும், "வேண்டுதல்வேண்டாமை" என்னும்-ங-வது குறளால் ஆன்மவிலக்கணமும், "இருள்சேரிருவினை" என்னும்-ரு-வது குறளால் பாசவிலக்கணமும் கூறியவாறுகாண்க.

இவ்வாறிருதிறநூல்களும் ஒப்புமையுடையவென்பது.

சிவபெருமானிடத்திருந்து தோன்றிய
வேதாகமங்களை

| | |
|---|---|
| பிரமா வேதத்தைவெளியிட்டனர் | உமாமஹேஸ்வரர் ஆகமத்தைவெளியிட்டனர் |
| பிரமாவே வள்ளுவராய் திருவள்ளுவப் பயனென்னும் திருக்குறளை வெளியிட்டனர் | உமாமஹேஸ்வரரே உமாபதிசிவனாய் திருவருட்பயனை வெளியிட்டனர் |

| | |
|---|---|
| திருவள்ளுவப் பயனுக்கு உரையிட்டோர் பரிமேலழகியர் முதலியோர் | திருவருட் பயனுக்கு உரையிட்டோர் நிரம்பவழகியர் முதலியோர் |
| வேதத்தை விளக்கியது ஆகமம் | திருவள்ளுவப் பயனை விளக்கியது திருவருட்பயன் |

இதனைமுன்னர் வரைந்துள்ள வாசகத்தான் யூகித்துணர்க.

இனித் திருக்குறளின் கருத்தைவிளக்கித் திருவருட்பயனால் வீடடைவிப்பதால் சிவப்பேரின்பம் செவ்விதினடைவரென்பது இவர்கருத்தென்பதற்கு யாதுப்ரமாணமென்னில்?

"வள்ளுவ ரன்பர்மொழி வாசகம் தொல்காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை—ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணந் தொகைச்சித்தி யோராறுந்
தண்டமிழின் மேலாம் தரம்"

என்று இவர் கூறிய செய்யுளாலும் நெஞ்சுவிடுதூது முதலிய இவர்கூறிய நூல்களின் செய்யுள்களில் திருக்குறளை யெடுத்தாளுவதாலும் யூகித்துணர்க.

இங்ஙனம்,
கொ - ஷண்முகசுந்தரமுதலியார்
சென்னை - சிந்தாதிரிப்பேட்டை.

## காப்பு.



நேசத் தடியார் நினைந் துருகி நின்றிட்ட
வாசத் தலைகடக்க மாட்டாது—பாசத்
திருகோட்டு முக்கட் சிவபெருமா னீந்த
வொருகோட்டு நால்வா யுவா.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

நேரிசை யாசிரியப்பா.

திருமகள்பிறந்த விரிதிரைப்பாற்கடற்
குறையங்கடுங்காற் சுழற்றுபுவெடுப்ப
வலைவதறவெழுந் தண்டமீப்படர்ந்து
நிலைபெறநின்ற நெடுந்திரளன்ன
வின்னறீரின்ப நன்னலஞ்சுரத்தலின்
விளங்கெழிற்றருமந் திரண்டுவீற்றிருந்த
வண்ணமும்போலு மண்ணறன்கயிலை
காவலிற்புரக்குங் கண்ணுதற்கடவு
ணந்திதாள்சுமந்துவந் தவ்வழித்தோன்றற்
பெண்ணையாறுடுத்த வெண்ணெய்நின்றுருத்த
தொண்டர்சளிதய முண்டகமலர்த்தும்
விஞ்சைவாளிரவி மெய்கண்டதேவன்
மறையகத்தடக்கிய ஒருதனிக்குடிலையு
மருணூனிறைந்த பொருண்முழுதுணர்ந்து
மாடிபோலக் கூடியகாட்சியிற்
புகல்சிவஞான போதநூனெருக்கு
வகல்பொருட்டேர்த்தற் கருமையுமாங்கவன்
சம்பிரதாயத் தந்தமிழ்வழான்பொரு
ளலவாப்பெருங்களி யுள்ளம்படைத்த
பண்பின்மேதகைய சண்பையர்கோமான்
றற்பலன்றேராப் பற்பலசமயிகள்
மலைந்தலைக்கொண்மூ மாருதமறைந்தெனத்

## சிறப்புப்பாயிரம்.

துலைத்தலையிரியத் தானிலி னுரைத்த
புகழ்சிவஞான போதமுன் னுறையாந்
திகழ்சிவஞான சித்தியின் விரிவு
மென்போன் மருண்ட புன்புலமாக்க
ளாவிநிம்மையுந் திருவுளங்கொண்டிதன்
ஞானக்காதலி னக்கியானகப்
பாவிடங்கொண்டதன் னுவிடங்கொண்டு
பவப்பிரகாசப் படரிருள்விழுங்குஞ்
சிவப்பிரகாசத் திருப்பெயர்மெலித்
திசைமகண்மருங்கிற் பரிவுடன்வளர்த்த
நாலையின்முறைக்கு நான்மடங்குடைய
சைவநூற்சமதி னொய்திலிற்கடந்து
மரக்கலமதற்கு மாலுமியொப்ப
வெழுலிரைந்தும் வழுவறப்புணர்த்தித்
தெள்ளுசீர்ப்புலமை வள்ளுவன்றனக்கோர்
கற்றுணையுடைத்தெனக் கற்றவர்களிப்ப
வருட்பயனென்று வதற்கொருகாமந்
தெருட்பட்புனைந்து செந்தமிழ்யாப்பிற்
குறளடிவெள்ளை யொருநூறியம்பினன்
மற்றவன்புலியூர் வளநகர்க்கீழ்பாற்
கொற்றவன்குடியிற் குடிகொண்டுறைந்த
பூசறனுறைந்த புகமதிவேணியுங்
காசறுங்கண்டமுங் கரந்த
தேசிகஞானபதி சிவனென்பவனே.

சிறப்புப்பாயிர முற்றிற்று.

———0———

உ

சிவமயம்.

# திருவருட்பயன்.

## மூலமும் உரையும்.

உமாபதிசிவனென்னும் பிள்ளைத் திருநாமத்திற்கும் இந்நூற்கும் முதல்வராகிய கொற்றவன்குடி முதலியார், அறம் பொருள் இன்பம் வீடு என்னு நான்கினுள் வீட்டுநெறி காட்டுவான் றம்மா லெடுத்துக்கொள்ளப்பட்ட இலக்கியம் இடையூறின்றி யினிது முடிதற் பொருட்டு, ஆதிக்கண்ணே விநாயகக்கடவுளை வணக்கஞ் செய்தருளுகின்றார். வழிபடு தெய்வ வணக்கஞ் செய்து மங்கலமொழிமுதல் வகுத்தெடுத்துக் கொள்ளப்பட்ட இலக்கண விலக்கியம் இடுக்கணின்றி யினிதுமுடியு மென்பாராகலின்.

காப்பு.

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

என்பது, அடைந்தோர்பாற் செய்யு நல்லருளினையுடைய யானைமுகத்தினையும், என்று மொருபடித்தாயிருக்கும் இளமையினையும் பெற்ற கடவுளை, ஒருவர் மனமொழி மெய்களால் வந்திப்பாராயின், அவர்க்கு வேதாகம புராணமுதலிய கலைகள்யாவும் வருந்திக்கற்கும் பண்டமல்ல என்றவாறு. இதனாற் ஞானமே யெளிதின்வருமென்பதாம்.

உலகத்து யானைகளெல்லாம் அடைந்தோர்பாற் றுன்பஞ் செய்தலின் இதனை நற்குஞ்சரக்கன்றென் றருளிச்செய்தார். யானையறிந் தறிந்தும் பாகனையே கொல்லும் என்றறிக.

இஃதாகுபெயர்.

இந்நூலின் காப்பும் அதனுரையும் சிறப்புப்பாயிரமும் அதன் முன்னுரைக்கும் உரையாசிரியர் காப்பும், சேது-நிரம்பவழகியர் உரையிலிருந் தெடுத்துச் சேர்க்கப்பட்டன.

---

## க-வது, பதிமுதுநிலை.

அஃதாவது, மேலாகிய இறைவனது இயல்பு.

சிவனுக்குத் தன்னியல் பேதென்னில்?

அகர வுயிர்போ லறிவாகி யெங்கு
நிகரிலிறை நிற்கு நிறைந்து.

| | |
|---|---|
| (எ-து.) அக | அக்கரங்களுக்கெல்லாம் அகாரமாகிய |
| ர வுயிர்போல் | வெழுத்துப் பிராணனாய் நின்றாற்போல் |
| அறிவாகி | ஆன்மாக்களுக்கெல்லா மறிவாகி |
| எங்கும் | ஜடத்திலுஞ் சித்திலும் |
| நிகரிலிறை | ஒப்பில்லாத கடவுள் |
| நிற்கு நிறைந் | சர்வத்ர பரிபூரணனாய் யசைவற்று நிற் |
| து. | பன். எ-று. |

(நி வ-உ.) அகரமாகியவுயிர், எழுத்துக்களெல்லாவற்றினும் பொருந்தி வேறற நின்றாற்போல; தனக்கோர் உவமையில்லாத் தலைவன் உலகுயிர்முழுதும் ஒழிவற நிரம்பி ஞானவுருவாய் அழிவின்றி நிலைபெறும். எ-று.

அகரம், தானே தனித்தும் ஏனையுயிருடம்புகளெல்லாம் வேறின்றிப் புணர்ந்தும் நிற்றலானும், அங்ஙனம் புணர்ந்தவழியுந் தன்னுருவு தோன்றாதலானும், முதற்கண் வைக்கப்படுதலானும், விகாரமின்றி நாதமாத்திரையாயியல்பாற் பிறத்தலானும், இறைவற்குவமையாயிற்று. இவ்வொப்புமை

மையால் ஜடமாகியவொலி வடிவன்றென்பதற்கு அறிவாகி யென்றும், அகரம்போல வொருகாற் புணர்ந்து நீங்காதெ ன்பதற்கு நிறைந்தென்றும், அவ்வகரமுதலிய வெழுத்துக்க ளு முட்படுதற் கெங்குமெனவும், மாறுக்கற் கறிவித்தற் பொருட்டு உவமையொடு புணர்த்தினும் அன்னதன்றென்பத ற்கு நிகரிலென்றுங் கூறியருளினார்.

"அக்கரங்களோறுஞ் சென்றிடு மகரம்போல நின்ற னன் சிவனுஞ்சேர்ந்தே" என்றருளிச் செய்தவாறுகாண்க.

இதனா லிறைவன தன்மையும், அவன் வேறற நின்ற மையுங் கூறப்பட்டது. (க)

இப்படி மனம் வாக்குக் காயங்களுக் கெட்டாமலிருக் தா லான்மாக்கள் மலபரிபாகம் வந்து மோக்ஷமடைகிறதெ ப்படியென்னில்?

தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத்தருஞ்சத்தி
பின்னமிலா னெங்கள் பிரான்.

(எ-து.) தன்னிலைமை — தன்னுடைய நின்மலமாகிய ஸ்வதந்திர நிலைமை; மன்னுயிர்கள் — நிலைபெற்ற வான்மாக்கள்; சார — பொருந்த; தருஞ்சத்தி — கூட்டுமருட்சத்தி.— அதனாற் சத்தியுஞ் சிவமுமிரண்டோவென்னில்? பின்னமிலா னெங்கள் பிரான் — இரண்டில்லாதவன் எங்கள் ஸ்வாமி. எ-று.

(தி-வ-உ) வாக்குமனங்கட் கெட்டாத தனது விமலஞா னாநந்த வீட்டி னெல்லையை நிலைபெற்ற ஆன்மாக்கள் வந்து பொருந்தும்படி செய்யும் அருளாகிய பராசத்தியுடனே பே தமின்றி யொன்றிநிற்பான் எம்முடைய இறைவன். எ-று.

மன்னுயிர்களென்றதனால், ஆன்மாக்கள் வினைவயத்தில் உருவுந்தொழிலும் வேறுபடுவதன்றி நிலமுதல் நாதமீறாகிய தத்வங்கள்போலப் பிறந்திறப்பன வல்லவாம்.

இதனால் அவன் ஓர் சத்தியோடும் கூடிநிற்பனென்பதூஉம், அது கருணைவடிவிற்றென்பதூஉம், கூறப்பட்டது (௨)

அப்படியும்முடைய கடவுள் மகத்வமுடையவரோவெனில்?

பெருமைக்கு நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றி
னருமைக்கு மொப்பின்மை யான்.

| | |
|---|---|
| (எ-து.) பெருமைக்கும் | ஆன்மபோதத்தா லறியப்படாத மகத்வதுக்கும் |
| நுண்மைக்கும் | இப்படிப் பஞ்சகிருத்ய நடத்தையிலேயு மான்மாக்களா லறியப்படாத விரகசியத்துக்கும் |
| பேரருட்கும் | ஆன்மாக்கள்மேல் வைத்த மிகுந்த கிருபைக்கும் |
| பேற்றினருமைக்கும் | சரிதை கிரியா யோகங்களுண் முடிந்தவிறுதியிலே சாயுச்சியத்தைக் கொடுக்கப்பட்ட வாச்சரியத்துக்கும் |
| ஒப்பின்மையான். | இவனுக் குவமையில்லை. எ-று. |

(நி-வ-உ.) எவ்விடத்து முளதாய நிறைவினானும், நொய்மையினானும், மிகுந்த கருணையினானும், ஒருவராற் பெறுதற்கருமையானும், ஆயவிந்நான்கினுந் தனக்கோரொப்புவமையில்லாதான் முன்னங்கிளந்த எம்மிறைவன். எ-று.

இவ்வாற்றால் தனக்குவமனில்லாதனாகவே மற்றனைத்திடல்வினானும் ஒப்பிலனாதல் உய்த்துணர்க.

"அண்டப்பகுதியி னுண்டைப்பிறக்க
வளப்பருந்தன்மை வளப்பெருங்காட்சி
யொன்றனுக்கொன்று நின்றெழில்பகரி
னூற்றொருகோடியின் மேற்படவிருந்தன
வின்னுழைக்கதிரின் றுன்னணுப்புரையச்
சிறியவாகப் பெரியோனெனவும்
பெருமைக் கண்டமணுதர
வணுவண்டத்து
நின்றுறுணங்கிய தண்டாச்சீர்த்தி"

எனவு மருளிச்செய்தவாறு காண்க. இதுதிருவாசகம். குவ்வுருபு மூன்றும்வேற்றுமைப் பொருள்தந்தது, "யா தனுருபிற் கூறிற்றாயினும், பொருள்சென்மருங்கின் வேற்றுமைசாரும்" என்ப இலக்கணமாதலின்.

இதனாலிறைவன துயர்பு கூறப்பட்டது. (௬)

இவனுக்கொப்பில்லை யென்பானேன், மூவரி லொருவனல்லவோ வெனின்?

ஆக்கி யெவையு மளித்தா சுடனடங்கப்
போக்குமவன் போகாப் புகல்.

| | |
|---|---|
| (எ-து.) ஆக்கி | பிரமாவை யுண்டாக்கி ஜகத்தைச் சிருஷ்டிப்பித்து |
| எவையுமளித்து | விஷ்ணுவை யுண்டாக்கி ஜகத்தையெல்லா மிரக்ஷிப்பித்து |
| ஆசுடனடங்கப்போக்குமவன் | முடிவின் மாயாமலத்திலே யெல்லாமடங்கச் சங்கரிக்குந் தன்மையையுடைய கத்தாவாய் |
| போகாப்புகல். | தானொன்று முடிவில்லாம லந்தப் பிரமா விஷ்ணு ஜகமெவையிற்றுக்கும் புகலாகிய வாண்டவனும். எ-று. |

(நி-வ-உ.) இனையனாகிய அக்கடவுள் ஒருவன் ஒருத்தி ஒன்றென்று சுட்டப்பட்ட வுலகங்க ளெல்லாவற்றினையும் படைத்து நிறுத்தி யிச்சாஞானக் கிரியைக ளுணராதவண்ணம் ஆன்மாக்க ளெல்லாம் மூலமலத்து டடங்கியிருக்கும்படி அழித்தலைச் செய்யுந்தான் என்ஞான்று நீங்காததோர் புகலிடமாயிருக்கும்.எ-று.

ஆசுடனடங்கவென்றதனால், புனருத்பத்தி யுண்டென்பது கூறியதாயிற்று. "உயிரவை யொடுங்கிப்பின்னு முதிப்பதெ னரன்பாலென்னிற் - செயிருறு மலத்தினாகும்" எனஅருளிச்செய்த வாறு காண்க.

இதனால் அவனொருவனே முத்தொழிற்கும் உரியனென்பது கூறப்பட்டது. (௭)

அவ னருவமோ உருவமோ அருவாரூபமோ வென்னின்?

அருவு முருவு மறிஞர்க் கறிவா

முருவ முடையா னுளன்.

| | |
|---|---|
| (எ-து.) அருவுமுருவும் | அருவமு முருவமு மருவாரூபமுமாம் |
| அறிஞர்க்கு | அறிவான்மிக்க நாதாக்களுக்கு |
| அறிவாமுருவம் | ஞானமாகிய வருட்டிருமேனியை |
| உடையானுளன். | உடைத்தானவனா யிருக்கின்றான். எ-று. |

(நி-வ-உ.) சிவம் சத்தி நாதம் விந்து என்னும் அருவடிவு நான்கும், மகேசுரன் உருத்திரன் மால் அயனென்னும் உருவடிவு நான்குமுடையன், அவ்விறைவன் அறிவுடையாரது உள்ளத்திற் றோன்றும் ஞானவுருவினையு முடையனாகலான். எ-று.

அருவும் உருவும் உளனெனவே அருவுருவாகிய சதாசிவவடி வமென்பது கூறவேண்டாவாயிற்று.

"சிவஞ் சத்தி நாதம் விந்து சதாசிவன் றிகழுமீச-னுவந் தருளுருத்திரன்றன் மாலய னென்றினென்றாய்ப், பவந்தரு மூ ருவநாலிங் கருவநான் குபயமொன்று, நவந்தரு பேதமேக நா தனே நடிப்பரென்ப" என்றும் "குறித்ததொன் றுகமாட்டாக் குறைவில ளாதலானும்" என்றும் அருளிச்செய்தவாறு காண்க.

இதனா லவனருவுருவு கூறப்பட்டது. (௫)

உடைமையாகி லொருவ ருண்டாக்கிக் கொடுக்கவேண்டுமே யென்னில்?

பல்லா ருயிருணரும் பான்மையென மேலொருவ
னில்லாதா னெங்க ளிறை.

(எ - து.) பல்லா ருயிருணரும் — சர்வான்மாக்களுந் தங்கட்குக் கத்தா தனு கரண புவன போகங்களைத் தந்தறிவிக்க வறிகின்ற

பான்மையென — முறைமைபோல

மேலொருவனில்லாதான் — தானே யறிதலன்றித் தனக்குமேலொருவ னறிவிக்க வேண்டுவதில்லை யாதலாற் றுனி னைந்த திருமேனியைத் தரித்துக்கொள்வன்

எங்களிறை. — எமது கத்தா. எ-று.

(நி-வ-உ.) நிறைந்து எண்ணிறந்த ஆன்மாக்களும் அறிவிக் கவறியும் பகுதிபோலத் தனக்கு மேலாய் நின்று உணர்த்துவ தோர் கடவுளை யில்லாதான் எம்முடைய இறைவன். எ-று.

இதனாற் கடவுட்டன்மை யொருவராற் பெறாது இயல்பாக வுடையன் என்பது கூறப்பட்டது. (௬)

உம்முடைய கர்த்தாவை யாவராலு மறியலாமோ வென்னில்?

ஆறு வறிவா யகலா வடியவர்க்கு
வாறுடார் காணுத மன்.

(எ-ரு.) ஆறு — எவ்விடத்தும் நீங்காத பேரறிவாய்
வறிவாய்
அகலா னடிய — ஞானவான்களுக்கு விட்டுநீங்கான்
வர்க்கு
வாறுடார் கா — தன்னையறியாத பிரம விஷ்ணு முதலாகிய
ணுத மன். — தேவர்களுக்கு அவர்கள் மனவாக்குக்காயத்
தாற் கெட்டாத ஞானவான். எ-று.

(நி-வா-உ.) நீங்காத ஞானமாய் அடியார்கள் உள்ளக் கமலத்தினை விட்டு ஒருபொழுதும் பிரிதல்செய்யான், தான் தேவர்களால் காண்டற்கரிய மேலோனாயினும். எ-று.

அடியவரெனவும், வாறுடாரெனவும், பொதுப்படக் கூறினமையால் யாவராயினும் அன்பர்க் கெளியவனாதலும் அன்பரல்லாதார்க்கு அரியனாதலும் உடையன் என்பதாம்.

"கனவிலுந்தேவர்க் கரியாய்போற்றி-நனவிலுநாயேற் கருளினைபோற்றி" என்றருளிச்செய்யதார்' போதவூர்புகழ்கம் போர்த்த மெய்யன்-வாதவூர்வந்த மறைமுதற்றலைவர்.'

இதனால் அவன் அருள்புரியுமாறு கூறப்பட்டது. (எ)

உமதுகர்த்தா வேகதேசனோ வியாபகனோ வென்னில்?

எங்கு மெனவு மெரியுறுநீர் போலேகத்
தங்குமவன் றனே தனி.

(எ-று.) எங்கு — சித்திலும் ஜடத்திலும்
மெனவும்.

| | |
|---|---|
| எரியுறுநீர்போல வேகந்தங்கும் | அக்னியைப் பொருந்தின ஜலம்போல கத்தா விரண்டற வேகத்வமாய்ப் பொருந்திநிற்பன் |
| அவன் முனே தனி. | அந்தக் கடவுடானே யொப்பில்லாதவன். எ-று. |

(நி-வ-உ.) எல்லா வுலகங்களிடத்தும் அளவிறந்த வுயிர்கண்மாட்டும் நீரிடைநின்ற தழல்போல இரண்டறக் கலந்திருந்தாராயினும் அக்கடவுள் அப்பதங்களிற் றங்காது நீங்கி யேகனாய் நிற்பன். எ-று.

ஏகாரம் - பிரிநிலை.

"பார்பதமண்ட மனைத்துமாய்" என்பதனுள்" நீருறுதீ" என்றருளிச்செய்தவாறு காண்க.

நீருறுதீயென்பது, காய்ந்த புனலின்கணுள்ளதாயவெம்மை.

இதனால் யாண்டுநிரம்பி நிற்பினும் அதிற் றோயானென்பது கூறப்பட்டது. (அ)

கத்தா வெங்கு மொருபடித்தாய் நிற்பனோ வென்னின்?
நலமிலனண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர் சங் கரன்.

| | |
|---|---|
| (எ-து.) நலமிலனண்ணார்க்கு | தன்னை வழிபடாத பேர்களுக்குத் தங்களாலேயுள்ள ஜனனமரணமாகிய துக்கத்தை நீக்கித் தன்னாலேயுள்ள வின்ப நலத்தைக் கொடான் |
| நண்ணினர்க்கு நல்லன் | தன்னை வழிபட்டபேர்களுக்குத் துன்பத்தை நீக்கி யின்பநலத்தைத் தருவன்.—வழிபடாதபேர்க்குத் துன்பத்தை நீக்காமலும் வழிபட்டபேர்க்குத் துன்பத்தை நீக்கியு மிருக்கையினாலே பிரபஞ்சவாதியோவென்னின் ? |

சலமிலன் பேர்சங்கரன். விருப்புவெறுப்பில்லாதவன். சுகத்தையாண்மாக்கள் யாவர்க்குங் கொடுக்கையினால் சங்கரனென்ற திருநாமத்தை யுடையவன். எ-று.

சம்-சுகம், கரன்-செய்கிறவன்.

தன்தாளினை யடைந்தார்மாட்டு நன்மையினைச் செய்தலும், அது செய்யார்மாட்டு அது செய்யாதிருத்தலும் உடையனாயினும், வயிரமென்பது சிறிதுமிலன்; இன்பத்தினைப் பண்ணுஞ் சங்கரனென்னும் பெயரினையுடையான் ஆகலான். எ-று.

வடமொழியில், சம் என்பது சுகம், கரன் என்பது பண்ணுவான். இவையிரண்டும் புணர்ந்து சங்கரனென்கின்றது.

இதனால், விருப்பு வெறுப்பிலனென்பதும், அவரவர் செய்திக்கொத்த பயனுதவும் நடுநிலைமையை யுடையவனென்பதுங் கூறப்பட்டது. (க)

வழிபட்டவர்களாலே யந்தப்பொருளைப் பெறலாமோ வென்னில்?

**உண்டுமுளி தையமிலை துணர்வா யோவாது**
**மன்னுபவந் தீர்க்கு மருந்து.**

(எ-து.) உன் னினையுங்கள்னும்

உளது — உண்டு

ஐயமிலது — சந்தேகமில்லை

உணர்வா யோவாது — அறிவுக்கறிவாய் விட்டு நீங்காது. அப்படி விட்டு நீங்காமலிருந் தென்செய்யுமென்னில்?

மன்னுபவந் தீர்க்கு மருந்து. — பொருந்திய ஜனனமரணமாகிய வியாதியைத் தீர்க்கின்றதற்கு நல்ல பரமௌஷதம்.

(தி-வ-உ.) ஞானமயமாய்ப் பிரிப்பின்றி நின்று அநாதியே தொடர்ந்துவரும் பிறவிப் பிணியினை அறுத்தற்கு ஓர் மருந்தாந் தன்மையினையுடையன் அக்கடவுள். அதற்கு ஓரையமில்லை. அதனையெஞ்ஞான்று மிடைவிடாது அன்புடன் நினைப்பீராக. எ-று.

இதனால் பதியினை வழிபடவேண்டுமென்னும் உறுதிப்பாடு கூறப்பட்டது. (௧0)

பதிமுதுநிலை முற்றிற்று.

---

## ௨-வது பசுநிலை.



அஃதாவது, பலவாய வுயிர்களது முறைமை.

இதனைப் பன்மைவாசகட்படுத்திய வதனால் பதியொன்றே யென்பதுதானே கொண்டுகிடந்தது. பதியினியல்புகூறிப் பசுக்களியல்பு கூறிற்றாகலான், மேலதிகாரத்தினோடு இயைபுடைத்து எனக்கொள்க. பசு-உயிர்-சேதனன்-புற்கலன்-ஜீவன்-அணு-வியாபகன்-ஆன்மா-என்பன ஒரு பொருட்கிளவி.

இதி லடைந்தவ ருண்டோ வெனில்?

பிறந்தநாண் மேலும் பிறக்குநாள் போலுந்
துறந்தோர் துறப்போர் தொகை.

(எ-து.) பிறந்தநாண் மேலும் பிறக்குநாள்போலும் — பிறந்த வான்மாக்களுக்குத் தொகையுண்டானாற்போலவு மினிமேற் பிறக்கு மான்மாக்களுக்குத் தொகையுண்டானாற்போலவும்

துறந்தோர் துறப்போர் தொகை. — தேகாதிப் பிரபஞ்சத்தைப் பொய்யென்று நீங்கி மோக்கத்தை யடைந்தோர்க்கும் தொகையுண்டு, இனிமே லப்படி மோக்கத்தை யடைவோர்க்குந் தொகையுண்டு. அதற்குமளவில்லை இதற்கு மளவில்லை. எ-று.

(வி-வ-உ.) உயிர்கள்தோற்றிய காலத்தினது தொகையும், மேற்றோற்றுங் காலத்தினது தொகையும்; இறைவன் திருவடியை யடைந்தாரது தொகையும், மேல்அடைதற்குரியாரது தொகையும், தம்மிலொக்கும். எ-று. இஃதளவிலவென்பதாம்.

ஈற்றினின்ற தொகை நான்கிறோடுங் கூட்டப்பட்டது.

இதில உயிருண்மை யுடைத்தெனக் கூறியது எதனாலென்னில் பொருளுண்மைபெற்றே அதனியல்பு கூறவேண்டும்; பித்திகை யுடைத்தாயே சித்திரமெழுதவேண்டுமாறுபோல.

இதனு லுயிர்கள துண்மையும் மிகுதியும், கூறப்பட்டது.

ஆன்மாக்களெல்லா மொருபடித்தோ வென்னில்?

திரிமலத்தா ரொன்றதனிற் சென்றார்க ளன்றி
யொருமலத்தா ராயு முளர்.

(எ-து.) திரிமலத்தார் — ஆணவம் கன்மம் மாயை யென்னு மும்மலத்தை யுடைய சகலராயும்

ஒன்றதனிற் சென்றார்கள் — மாயாமலத்தைநீங்கி மற்றிருமலமு முடைய பிரளயாகலராயும்

அன்றி — அவையன்றி

ஒருமலத்தாராயும் — மாயாமலத்தையும் கன்மமலத்தையும் நீங்கி மற்றொருமலமுடைய விஞ்ஞான கலராயும்

உளர். — இப்படி மூவகை யான்மாக்களா யிருப்பார்கள். எ-று.

(நி-வ-உ.) ஆணவம் கன்மம் மாயை என்னு மலங்கள் மூன்றுடையராகியும், இம் மூன்றில் மாயைநீங்கி யேனைய இரண்டுமுடையராகியும், அவ்விருவகையுமல்லாது ஆணவமொன்றினையு முடையராகியும், சொல்லப்பட்ட மூன்று திறத்தினையுடையார் அவ்வான்மாக்கள். எ-று.

ஆயுமென்பது மூன்றிடத்துங் கூட்டப்பட்டது.

அவர்கள்திரலிறையிற் சகலர் பிரளயாகலர் விஞ்ஞானகலராம். "உரைதருமிப் பசுவர்க்க முலாரின் மூன்று முயரும் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர், நிரையின்மல மலங்கன்ம மலங்கன்ம மாயை நிற்கும்" என்றருளிச் செய்தவாறுகாண்க.

இதனாற் றொடர்பின் விகற்பத்தால் உயிர்கள் மூவகைப்பட்ட தன்மை கூறப்பட்டது. (உ)

இவர்க ளொருவர்க்கொருவர் அதிகமோ வென்னில்?

மூன்றுதிறத் துள்ளாரு மூலமலத் துள்ளார்க
டோன்றலர்தொத் துள்ளார் துணை.

| | |
|---|---|
| (எ-து.) மூன்றுதிறத் துள்ளாரும் | அம்மூவகைப்பட்ட வான்மாக்களும், அநாதியிலே |
| மூலமலத்துள்ளார்கள் | ஆணவமல சம்பந்தர்களா யிருக்கிறவர்களாகையினால் |
| தோன்றலர் தொத்துள்ளார் துணை. | தோன்றாத் துணையாயிருக்கிற சிவனுக்கு அடியவராயிருப்பர்; அம்மூவர்க்குங் கர்த்தாவே துணை. எ-று. |

(நி-வ-உ.) இம்மூன்றுதிறத் தான்மாக்களும், மூலமலமாகிய ஆணவத்தாற் பிணிக்கப்பட்டவர்களே! அவருள், மாயையென்னுந் துணையினையுடைய சகலர், தாம் கட்டுற்றவரென்னுந்

தன்மை தமக்குத் தெரிதலிலர். எ-று. ஏனையோரிருவருக்குந் தெரியுமென்பதாம்.

மலமென்பது அழுக்கு. உம்மை முற்றும்மை.

இதனால் முன்ன ரொவ்வொன்றாக நீக்கப்பட்டது மாயையும் கன்மமும் அல்லது ஆணவமன்றென்பது கூறப்பட்டது. (௩)

அடிமையல்லாத வான்மாவுக் கறிவுண்டென்னில்?

கண்டவற்றை நாளுங் கனவிற் கலங்கியிடுந்
திண்டிறலுக் கென்னோ செயல்.

| | |
|---|---|
| (எ-து.) கண்டவற்றை | நாளும் நனவிலே கண்டபொருள்களை |
| நாளும் | நாடோறும் |
| கனவிற் கலங்கியிடும் | சொப்பனத்திலே மறக்கப்படும். அப்படிப்பட்ட |
| திண்டிறலுக் கென்னோ செயல். | அற்பவலிமையுள்ள வறிவில்லாத வான்மாக்களுக்குச் சுதந்தரமாகிய செயலேதுண்டு. எ-று. |

(தி-வ-உ.) பலகாலுஞ் சகலாவத்தையில் தாம்கண்டறிந்த பொருள்களைச் சொப்பன அவத்தையில் திரிபுபடக்காணுந் திணிந்த வெற்றியினையுடைய வுயிர்களுக்குச் செயலுடைத்தென்பது எவ்வண்ணமோ? எ-று.

திண்டிறலென்பது அன்மொழித்தொகையாய் இகழ்ச்சிக்குறிப்பு மொழியாய்நின்றது. திரிபுபடக் காண்டலாவது - நல்குரவாளர்தமைச் செல்வராகவும், செல்வர்தமை நல்கூர்ந்தவராகவும், உறுப்பில்லார்தமை யுறுப்புடையராகவும், உறுப்புள்ளார்தமை யுறுப்பிலாராகவும், ஒன்று ஒன்றாக மாறுபாடாகக்காண்டல் முதலியனவெல்லாம். (௪)

சொப்பனத்திலேயல்லோ மறந்தான் நனவிலே தானேயறி வனென்னில்?

பொறியின்றி யொன்றும் புணராத புந்திக்
கறிவென்ற பேர்நன் றற.

(எ-து.) பொறியின்றி — ஐந்திந்திரியங்களி னொன்றினல்லாமல்
ஒன்றும் புணராத புந்திக்கு — ஒருவிடயங்களையு மறியாத வான்மாக்களுக்கு
அறிவென்ற பேர் — தானேயறியு மறிவையுடையனவென்றபேர்
நன்றற — மிகவும் நன்று.

(தி-வ-உ.) செவிமுதலிய கருவிகள் கூடாமல் யாதொரு விடயமும் எய்தமாட்டாத வுணர்வினையுடைய வுயிர்களுக்கு அால்வல்லோர் அறிவுடையன வென்றிட்டபேர் மிகவும் அழகிது.

பொறியின்றி யொன்றும் புணராதென்பதனால், கூடிப்புணரும் என்பதாயிற்று.

புந்தி ஆகுபெயர். நன்றென்பது முன்னையதுபோல விகழ்ச்சிக் குறிப்புமொழி.

இவை யிரண்டுபாட்டானும் உயிர்கட்கோர் முன்னிலையான் அன்றி அறிவுந் தொழிலுங் கூடாமை கூறப்பட்டது. (௫)

அப்படி இந்திரியங்களைக் கொண்டன்றி ஆன்மாவுக் கறிவில்லையோவென்னில்?

ஒளியு மிருளு முலகு மலர்கட்
டெளிவி லெனிலென் செய.

(எ-து.) ஒளி — சோமசூரியாக்கினிப் பிரகாசமும்
யும்

இருளும் — பூதவிருளும்
உலகும் — பிரபஞ்சமும்
அலர்கட் டெளிவெனில்? — அலர்வித்த கண்ணுக்குப் பிரகாசமில்லையாயில்
என்செய. — இம்மூன்று மிருந்து பிரயோசனமேது? அப்படிப்போல வொளியாகியசிவமு மிருளாகிய வாணவமலமும் பிரபஞ்சமாகிய மாயையும் அலர்விழியாகிய வான்மாவுக்கு அறிவில்லையாகில் அம்மூன்று மிருந்து பிரயோஜனமென்ன? ஆகையா லறுதியே யான்மாவுக்கறிவுண்டு. எ-று.

(நி-வ-உ.) விளக்கஞ்செய்யும் ஞாயிறு திங்கள் அங்கியென்னுஞ் சுடர்களும், மயக்கினைச்செய்யும் அந்தகாரமும், பலவகைப் பொருளொடு சிறந்த வுலகமும், விழித்திராநின்ற கண்ணினிடத்துச் சோதியில்லையாயின் என்னபயனைச்செய்தற் பொருட்டு? எ-று. எனவே யாதுமின்றென்பதாம்.

இவ்வுவமையால் மிகுந்த பிரகாசமாகிய சிவனுடைய ஞானமும், இருளாகிய ஆணவமும், கலைமுதல் நிலனீறாகிய தத்துவங்களும், நித்தமாகிய வுயிர்களிடத்து உணர்வில்லையாயின் என்னபயனைச் செய்யுமென்னும் பொருள்தோன்றி நின்றது. இஃது ஒட்டென்பதோரலங்காரம்.

இம்மூன்று வகையினானும் நன்றுதீதுகளையடைவன வுயிர்களேயாமென்பதாயிற்று.

இதனால் விளக்க விளங்குங் கண்போல உணர்த்த வுணருமுணர்வினையுடைய வென்பதூஉங் கூறப்பட்டது. (கூ)

ஆனா லிம்மூன்றுபொருளையு மறிவதியாதென்னில்? பதிக்

னும் பாசத்துக்கு மறியவேண்டுவதில்லை, பசுவே பகுத்தறியுமெ னக் கூறுகின்றது.

சத்தசத்தைச் சாரா தசத்தறியா தங்கணிவை
யுய்த்தல்சத சத்தா முயிர்.

| | |
|---|---|
| (எ-து.) சத்து | சத்தாகிய சிவம் அசத்தாகிய பாசத்தைப் |
| சத்தைச்சாராது | பொருந்தாது |
| அசத்தறியாது | அசத்தாகிய பாசம் சடமாகையா லொன்றையும் அறியமாட்டாது |
| அங்கண் | அவ்விடத்தில் |
| இவை | இவ்விரண்டையும் |
| உய்த்தல் | பொருந்தியறிகிறது |
| சதசத்தாம் | சதசத்தாகிய வான்மா. எ-று. |

வி.

(சி-வ-உ.) நிலைபெற்ற ஞானமாகிய சிவனுக்கு அநித்தங்களான சடப்பொருள்களைப் புதிதாகச் சுட்டியறிய வேண்டுவதில்லை. அசேதனங்களாகிய தத்துவங்கட் கறிவென்பதில்லை. இவ்விரண்டின் தன்மையாயின், அவ்விடத் திவற்றைத் தன்னுணர்வி னெழுச்சிப் பகுத்தறியு முயிர்கள் சத்துமசத்துமன்றியே சதசத்தாதல் வேண்டும். எ-று. அல்லது கூடாதென்பது கருத்து.

உயிர்களுஞ் சித்தென்று வழங்கப்படுமாயினும் சிவனுடைய ஞானத்தினோ டொருதன்மை யல்லவென்பதாம்.

“ சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னிற்-சிவனருட்சித் தீவனருட் சேருஞ்சித் தீவன்றான், பவங்கெடுத் திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற் - படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித் தீவன்று, னயன்றனை யறியுஞ்சித் தாதலி னிரண்டி- னிலைத்தாலு மொன்றாகா தந்நியமா யிருக்கு, மிவன்றானும் புத்தி

யுஞ்சித் திவளுமோ புத்தி-பிறவசித்தென் றிடலவனுக் கெவறுமை சித் தாமே" என்றருளிச் செய்தவாறு காண்க.

இதனு லுயிர்கள் சுத்தவறிவும் ஜடமு மல்லவாதல் கூறப் பட்டது. (எ)

அப்படி யான்மா சத்தும் அசத்துமானதற் குவமையுண் டோவென்னில்?

இருளி லிருளாகி யெல்லிடத்தி லெல்லாம்
பொருள்க ளிலதோ புவி.

(எ-து.) இருளிலிருளாகி — இருளோடு கூடி யிருளாயிருக்கும்

எல்லிடத்திலெல்லாம் — ஒளியோடு கூடி யொளியாயிருக்கும்

பொருள்களிலதோ புவி. — இப் பூமியின்கண்ணே யிப்படிக்கொத்த பொருள்களில்லையோ? உண்டு. அதாவது, கண்ணும் படிகமும் ஆகாசமும்போல வான்மாவு மதுவதுவாக நின்றறிதற் குவமையாம். எ-று.

(நி-வ-உ.) இருள்வந் திறுத்தகாலை மறைந்தும் ஒளிவந்திறுத்தகாலை விளங்கியும் நிற்கும் பொருள்களை யுடைத்தன்றோ வுலகம். எ-று.

பொருள்களென்ற பன்மையால் அவை கண்ணும் ஆடியும் விண்ணுமுதலாயின.

ஓகாரம் எதிர்மறை. இதுவும் ஒட்டென்பதோ ரலங்காரம்.

இதனால் சுத்த உணர்வும் ஜடமுமன்றி யிடைப்பட்டதொன்றில்லை யென்பாரை யுண்டெனமறுத்து மேல் வலியுறுத்தப்பட்டது. (அ)

ஒளியு மறுதியேகூடிநிற்க ஒளியோடுங்கூடி-நின்று இருளோடுங் கூடுவானேனென்னில்?

ஊமன்கண் போல வொளியு மிகவிருளே
யாமன்கண் காணா தவை.

| | |
|---|---|
| (எ-து.) ஊமன்கண்போல | கோட்டானுடைய கண்ணுக்கு |
| ஒளியு மிகவிருளே | ஆதித்தப்பிரகாசமு மந்தகாரமாயிருக்கும். அதுபோல |
| யாமன்கண் காணாதவை. | நிலைபெற்ற சிவஞானத்தை யான்மாக்கள் காணாமலிருப்பது இருளாகிய வாணவமலத்தால். எ-று. |

(தி - வ - உ.) உதயஞ்செய்து விளங்காநின்ற சூரியனைக்கோட்டானுக்கு கூகையினது கண்போல முற்கூறிய வுயிர்களும் கருத்தாவாகிய சிவனுடைய ஞானத்தினைக் காணமாட்டா. அந்த ஞானமும் அந்தக் கூகையினது கண்ணுக்குச் சூரியன் சிறிதுந் தோன்றாது நின்றாற்போல வுயிர்களுக்குந் தோன்றாது நிற்கும். எ-று.

உம்மை-சிறப்பும்மை. ஏகாரம்-தேற்றம்.

இதனானுயிர்கள், தமக்கு உயிராகி விளங்குகின்ற ஞானத்தினைக் காணாமைக்கு உவமையேறுபடுத்திக் கூறப்பட்டது. (௨)

இந்தவான்மாக்க ளறியாமையை நீங்கி யருளைப்பெறுவது மெக்காலம்! என்றிரங்கிக் கூறுகின்றது.

அன்றளவு மாற்றுமுயி ரங்கோ வருடேரிய
தென்றளவொன் றில்லா விடர்.

(எ-து.) அன்றளவும் அநாதியேதொடங்கி

| | |
|---|---|
| ஆற்றுமுயிர் | சுமந்து தடுமாறப்பட்ட வான்மாக்களுக்கு. |
| அந்தோ | ஐயோ ! |
| அருடெரிவ தென்று | அஞ்ஞான நீங்கிச் சிவஞானம் பிரகாசிப்பது எக்காலம் ! |
| அளவொன்றில்லாவிடர். | அளவில்லாத ஜனன மரணமாகிய துக்கத்தை யறுதிதொடங்கி யாற்றுமென் றிரங்கிக் கூறிநின்றது. எ-று. |

(ரி-வ-உ.) அறுதியேதொடங்கி யிற்றைவரையும் எண்ணிறந்த துன்பத்தினைத் தாங்கிநிற்கு முயிர்கள், அந்தோ! எந்தநாளோ திருவருளாகிய ஞானத்தினைக் கண்டு தம்மிடும்பை தீர்த்து பேரின்பத்தை யெய்துநாள். எ-று.

அந்தோவென்ப திரக்கத்தின்கட் குறிப்பு.

இதனு லுயிர்படுந் துன்பமிகுதிக் கிரங்கிக் கூறப்பட்டது.

இவ்வதிகாரத்தை உரையாசிரியர் நிரம்பவழகியர் உயிரவைநிலை யெனக்கூறினர்.

பசுநிலை முற்றிற்று.

---

## ௩-வது, பாசநிலை.

———o———

### இவ்வதிகாரத்திற்கு இருண்மலநிலை.

அஃதாவது, அறியாமையே வடிவாகிய ஆணவமலத்தினது தன்மை. உயிரவைநிலை யென்பதுபோலப் பொதுப்படப் பாசங்களது நிலையென்னாது இருண்மலநிலை யென்றதனால், ஒழிந்த மாயை கன்மங்க ளெவ்வாறடங்குமோவெனின் ? "ஒருமொழி யொழிதன் னினங்கொளற்குரித்தே" என்பதனாலடங்கும்.

மூர்கிளந்த வுயிர்களாற் புணரப்பட்ட பாசத்தினியல்பு கூறுதலின், மேலை யதிகாரத்தினோடு இதற் கியைபுண்மையறிக என்றார் நிரம்பவழகியர்.

ஆன்மாவைப் பொருந்திய விடராவ தேதென்னில் ?

துன்றும் பவத்துயரு மின்பும் துணைப்பொருளும்
மின்றென்ப தெவ்வாறு மில்.

| | |
|---|---|
| (எ-து.) துன்றும் பவத்துயரும் | நெருங்கி யிருக்கப்பட்ட ஜனன மரணமாகிய துக்கத்தையும் |
| இன்பும் | பேரின்பமாகிய வீட்டையும் |
| துணைப்பொருளும் | எல்லாத்துக்குந் தாரகமா யிருக்கப்பட்ட திருவருளையும் |
| இன்றென்பது | இல்லையெனச்செய்து |
| எவ்வாறுமில். | தானு மெவ்வழியானு மில்லையென்னும்படி மறைத்துநிற்கும் இந்தவாணவமலம். எ-று. |

(நி-வ-உ.) தொன்றுதொட்டிடைவிடாது வரும்பிறவித்துன்பமும், மேலாய வீட்டின்பமும், இவற்றைக்கூட்டி முடிப்பதாய முதற்றுணை நிமித்தங்களும் இல்லையென்றறுதியிட்டுக் கூறுதல், காண்டல் முதலிய அளவைக ளெல்லாவற்றானும் இல்லை. எ-று. (௧)

இந்த வாணவமலத்துக் கொப்புண்டோவென்னில்?

இருளான தன்றி யிலதெவையு மேகப்
பொருளாகி நிற்கும் பொருள்.

| | |
|---|---|
| (எ-து.) இருளானதன்றி | பூத விருளானது தன்னைக் காட்டுதலன்றி |
| இலதெவையும் | எல்லாப் பதார்த்தங்களையுங் காட்டாமன் மறைத்து |
| ஏகப் பொருளாகி | தானொருபொருளாகி |
| நிற்கும் பொருள். | ஆணவமலமானதிப்படி நின்றுவிடும். எ-று. |

(நி-வ-உ.) உலகத்து வெவ்வேறு பலவகைப்பட்ட குணங்களையுடைய பொருள்க ளெல்லாவற்றினையும் ஒருபொருளாக வேற்றுமை தோன்றாது மறைத்துக்கொண்டு நிற்பது இருளொருவானதற்கன்றிப் பிறிதொருபொருட்கில்லை. எ-று

ஆதலாலிதுபோலப் பிறப்பிறப்புக்களும், வீட்டுநெறியும், காரணங்களும், பகுத்தறியாதபடி மறைத்தது ஆணவமென்பதாயிற்று.

இவையிரண்டு பாட்டானும் ஆணவத்தினது உண்மையும், அஃதிருள்போல மருள்வடிவிற்றென்பதூஉம், கூறப்பட்டன. (௨)

இருள் போலத் தானோ விதென்னில்?

ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டு
மிருபொருளுங் காட்டா திது.

(ஏ-து) ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டும் — பூதவிருளான தெல்லாப்பதார்த்தங்களையு மறைத்துத் தன்னைக்காட்டிநிற்கும்

இருபொருளுங்காட்டாதிது. — இந்த வாணவ மலமானது தன்னையுங் காட்டாது தனக்குள்ளேயிருக்கிற வான்மாவையுங்காட்டாது. எ-று.

(வி-ம்-உ.) அந்தகாரமானது வேறொரு பொருளையுங் காணாமல் மறைத்துத் தன்னுருவங்காட்டிநிற்கும், ஆணவமானது தன்னுருவத்தையும் ஞானத்தையுங் காட்டாமல் நிற்கும். எ-று.

இதனா லிவ்விருளினு மிகக்கொடியது ஆணவமென்று கூறப்பட்டது. (௩)

காட்டாமல்மறைப்பது பதிக்குமோ வென்னில்?

அன்றளவி யுள்ளொளியோ டாவி யிடையடங்கி
யின்றளவு நின்ற திருள்.

(ஏ-து.) அன்று — அனாதியே

அளவி — ஆன்மாவைப் பொருந்தி

உள்ளொளியோடாவி யிடையடங்கி — சிவஞானத்தைப் பிராணனையுடைய வான்மாவைப் பொருந்திமறைத்து

இன்றளவு நின்றதிருள். — சிவனது திருவடித்தாமரையைப் பெறுமளவு நின்றதிந்தவாணவமலம். எ-று.

(நி-ய-உ.) அகவிளக்காகிய ஞானத்தினோடே தானும் அநாதியே கலந்துகொண்டு அந்த ஞானத்தின்மேற் படரா து உயிரளவிலே யமைவுற்று இது நாள்வரையும் நீங்காது நின்றது ஆணவமாகிய அந்தகாரம். எ-று.

உள்ளொளியோடு என்பது உயர்வின்கண் வந்தது. "ஒருவினையொடுசொ லுயர்பின் வழித்தே" என்பதிலக்கண மாதலின்.

இதனால் ஆணவமாகிய அந்தகாரம் அநாதியென்பதும், மாயை கருமம்போல நீங்கிப் புணர்ந்ததன்றென்பதும், கூற ப்பட்டது. (௭)

அப்படி யிவனிடத்திலே யடங்கியிருக்கப்பட்ட வாண வமலத்தை யிவனாலே யறியப்படாதோ வென்னில்?

பலரைப் புணர்ந்துமிருட் பாவைக்குன் றென்றுங் கணவற்குந் தோன்றாத கற்பு.

(எ-து.) பல எல்லாவான்மவர்க்கங்களையும் பொரு ரைப் புணர்ந்து ந்திப் புணர்ந்தும்
ம்

இருட்பாவை இருண்மல சத்திக்குண்டு
க்குண்டு

என்றுங்கண எப்போதுந் தன்பத்தாவுக்கு விபசாரி வர்க்குந் தோ யென்றது தோன்றாத கற்புடையதன்மை. ன்றாத கற்பு. எ-று.

இந்தவாணவமல மான்மாக்களுக்குந் தோன்றுமவிற் பதிப்படியென்க. இது மூடிந்தகுறளின் கருத்துரை.

(நி-வ-உ.) எண்ணிலராகிய ஆன்மாக்களைப் பேதமறக் கலந்து இடையறாது நின்றேயும், இருண்மலமாகிய மகளுக்

கொருநாளுந் தனது தலைவராகிய ஆன்மாக்களுக்குத் தன்னைக்காட்டாது நிற்பதோர் நியமமுமுண்டு.

பாவையெனவுங் கணவனெனவுங் கூட்டம்பற்றி யுருவகஞ்செய்ததன்றி ஆண்குறி பெண்குறி யவ்விடத்தில்லையெனக்கொள்க. என்றும் என்றதனால் கேவல சகலசுத்த மூன்றினுமென்பது பெற்றாம்.

சிறப்பும்மை யிரண்டனுள், பின்னது இழிபுகுறித்து நின்றது. இடைநின்ற உம்மை முற்றும்மை.

இதனு லாணவத்தினது தன்மை கூறப்பட்டது. (ரு)

இந்தவாணவமலத்தை யறிவதெவ்வாறென்னில்?

பன்மொழிக ளொன்றுணரும் பான்மை தெரியாத
தன்மையிரு ளார்ந்தது.

(எ-து.) பன் — பலவாகச் சொல்லுவதென்ன? நித்திய
மொழிக ளொன்றுணரும் பான்மைதெரியாத தன்மை — அநித்தியத்தை யறியப்படாத முறைமை
இருளார்ந்தது. — இந்த வாணவமலங் கொடிதென்றறிவாயாக. எ-று.

(நி-வ-உ.) பற்பலவார்த்தைகளாற் பயனென்னை? அறியவேண்டும் பொருள்களை யறியும் பகுதிதோன்றாது நின்றவியல்பெல்லாங் கருமை நிறத்தினையுடைய மூலமலமாயிருள் கொடுத்தது. எ-று.

அறியவேண்டும் பொருள்களாவன? பதி பசு பாசமென்னு மூவகைப் பொருள்களும், சரியை கிரியை யோக ஞானங்களென்னு நால்வகை யொழுக்கங்களுமாம்.

இருளாரென்பது செறலின்கண்வந்த அஃறிணை வழுவமைதி.

இதனால் மூலமலத்தினால்வந்த அறியாமை வலியுறுத்தப்பட்டது. (௬)

ஆணவமல மில்லையென்னில்?

இருளின்றேற் றுன்பே றுயிரியல்பேற் போக்கும்
பொருளுண்டே லொன்றாப் போம்.

(எ-து.) இருளின்றேல் — ஆணவமல மில்லையென்று நீ சொல்லுவாயாகில்

துன்பென் — சுகதுக்க வேதனைவருவானேன்?

உயிரியல்பேல் — ஆன்மாவுக் கியற்கையென்று சொல்லுவையென்னில் (இயற்கையாவது கறுப்பும் வெளுப்பும் கரிக்கும் பாலுக்குமியற்கையானாற்போலவாகும்.)

போக்கும் பொருளுண்டே லொன்றாகப்போம். — அப்போ தாணவமல நீங்குகிறபொழுது ஆன்மாவுங் கூடக் கெடுவன். எ-று.

ஆகையாற் குணமுங் குணியுமாகச் சொல்வதடாது.

(நி-வ-உ.) இருளாகிய அவிச்சையில்லையாயின், இந்திரியங்கட்கு ஏவல்செய்யும பிறவித்துன்பம் படற்குக் காரணமென்னை? அஃது ஆன்மாவினது சுபாவமாயின் நீங்காது. நீக்குஞ்சிவஞான முண்டாயின் அதனுடனே உயிருங்கெட்டுப்போமாதலால் எ-று. எனவே பிறவித்துன்பத்துக்கு நிமித்தம் அவிச்சையென்பதாயிற்று

இதனால் அவிச்சையில்லை யென்பாரை யுண்டென்று மறுத்துக் கூறப்பட்டது. (௭)

கொருநாளுந் தனது தலைவராகிய ஆன்மாக்களுக்குத் தன்னைக்காட்டாது நிற்பதோர் நியமமுமுண்டு.

பாவையெனவுங் கணவனெனவுங் கூட்டம்பற்றி யுருவகஞ்செய்ததன்றி ஆண்குறி பெண்குறி யவ்விடத்தில்லையெனக்கொள்க. என்றும் என்றதனாற் கேவல சகலசுத்த மூன்றினுமென்பது பெற்றாம்.

சிறப்பும்மை யிரண்டனுள், பின்னது இழிபுகுறித்து நின்றது. இடைநின்ற உம்மை முற்றும்மை.

இதனா லாணவத்தினது தன்மை கூறப்பட்டது. (ரு)

இந்தவாணவமலத்தை யறிவதெவ்வாறென்னில்?

பன்மொழிக ளென்றுணரும் பான்மை தெரியாத
தன்மையிரு ளார்தந் தது.

(எ-து.) பன்மொழிக ளென்றுணரும் பான்மைதெரியாத தன்மை — பலவாகச் சொல்லுவதென்ன? நித்திய அநித்தியத்தை யறியப்படாத முறைமை

இருளார் தந்தது. — இந்த வாணவமலங் கொடுத்ததென்றறிவாயாக. எ-று.

(நி-வ-உ.) பற்பலவார்த்தைகளாற் பயனென்னை? அறியவேண்டும் பொருள்களை யறியும் பகுதிதோன்றாது நின்றவியல்பெல்லாங் கருமை நிறத்தினையுடைய மூலமலமாயிருள் கொடுத்தது. எ-று.

அறியவேண்டும் பொருள்களாவன? பதி பசு பாசமென்னு மூவகைப் பொருள்களும், சரியை கிரியை யோக ஞானம் என்னும் நால்வகை யொழுக்கங்களுமாம்.

இருளாரென்பது செறலின்கண்வந்த அஃறிணை வழுவமைதி.

இதனால் மூலமலத்தினால்வந்த அறியாமை வலியுறுத்தப்பட்டது. (சு)

ஆணவமல மில்லையென்னில்?

இருளின்றேற் றுன்பே னுயிரியல்பேற் போக்கும்
பொருளுண்டே லொன்றுப் போம்.

(எ-து.) இருளின்றேல் — ஆணவமல மில்லையென்று நீ சொல்லுவாயாகில்

துன்பேன் — சுகதுக்க வேதனைவருவானேன்?

உயிரியல்பேல் — ஆன்மாவுக் கியற்கையென்று சொல்லுவையென்னில் (இயற்கையாவது கறுப்பும் வெளுப்பும் கரிக்கும் பாலுக்குமியற்கையானாற்போலவாகும்.)

போக்கும் பொருளுண்டேலொன்றுகப்போம். — அப்போ தாணவமல நீங்குகிறபொழுது ஆன்மாவுங் கூடக் கெடுவன். எ-று.

ஆகையாற் குணமுங் குணியுமாகச் சொல்வதடாது.

(நி-வ-உ.) இருளாகிய அவிச்சையில்லையாயின், இந்திரியங்கட்கு ஏவல்செய்யும பிறவித்துன்பம் படற்குக் காரணமென்னை ? அஃது ஆன்மாவினது சுபாவமாயின் நீங்காது. நீக்குஞ்சிவஞான மூண்டாயின் அதனுடனே உயிருங்கெட்டுப்போமாதலால் எ று. எனவே பிறவித்துன்பத்துக்கு நிமித்தம் அவிச்சையென்பதாயிற்று

இதனால் அவிச்சையில்லை யென்பாரை யுண்டென்று மறுத்துக் கூறப்பட்டது. (எ)

ஆறு விந்தமலம் நடுவேவந்ததென்னில் ?

ஆசாதி யேலணைவு காரணமென் முத்திநிலே
பேசாதகவும் பிணி.

| | |
|---|---|
| (எ-து.) ஆசாதியேல் | ஆணவமல மாதியென்றால் |
| அணைவு காரணமென் | இடையிலேவந்து பொருந்தக் காரணமென்ன? பொருந்தக்காரணமுண்டு. வெள்ளைப் புடைவையி லழுக்குப்போலவும் கண்ணாடிக்குக் களிதம்போலவு மென்னில் ? |
| முத்திநிலேபேசாது | மோக்ஷமுண்டென்று சொல்லவேண்டுவதில்லை |
| அகவும்பிணி. | இந்தமலமாகிய வியாதி மோக்ஷத்திலும் வந்து பொருந்தும். எ-று. |

(நி-வ-உ.) அவிச்சை யிடையிட்டு வந்ததாயின், அஃதோர் காரணமில்லாமல் வந்துபொருந்தியதென்னை ? அன்றி முத்தியினு முரையாடாதுவந்து கவர்ந்து கொள்ளுமன்றே. எ-று.

உரையாடாது கவர்தல்-தோன்றாது விரைவிற் கவர்தல்.

இதனால் அவிச்சை யாதியென்பாரை மறுத்துக் கூறப்பட்டது. (அ)

அறுதியாகி யொருக்காலு நீங்காதென்னில் ?

ஒன்று மிகினு மொளிகவரா தேகுமுள்ள
மென்று மகலா திருள்.

(எ-து.) ஒன்றுமிகினும் — பூதவிருள் மேலிட்டகாலத்து

ஒளிகவராதேல் — விளக்கின்ஞெளி யவ்விருளைச் சற்றேநீக்கும். அப்படி நீக்காதென்னில்

உள்ளமென் ஆமலாகிருள். — அதுபோல வாணவமலமான தொருக்காலுமான்மாவை விட்டுநீங்காது ஆணவமலமானது கலாதிக்கிடங் கொடாதேயிருந்தா லாசாரியராலும் நீங்காது. கலாதிகளுக் கிடங்கொடுக்கையினாலே யாசாரியராலே நீங்குமென்றறிவாயாக. எ-று.

(நி-வ-உ.) மலமாயையென்னு மிரண்டினுள், மலமாகிய இருள் வியாபக மெல்லாமறைத்ததாயினும், ஏகதேசவிளக்கமாகிய மாயாகாரியத்தினை யுயிர்கள் கவர்ந்துகொள்ளாதாயின் எந்த ஞான்றும் அவ்வவிச்சை யவைகளைவிட்டு நீங்குவதில்லை. எ-று. கவருந்தன்மை யுயிர்களுக் குண்டாகவேண்டுமென்பது கருத்து.

என்றுமென்ப தருளுதயமானகாலத்திலு மென்பதுகாட்டிநின்றது.

இதனு லுயிர்கள் அவிச்சைநீங்கி முத்தியடைவதற்கோர்நிமித்தங் கூறப்பட்டது. (௧)

மலமறையாது மாயை மறைக்குமென்னில்?

விடிவா மளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத் துவந்து.

(எ-து.) விடிவாமளவும் — பூதவிருணீங்கு மளவும்

விளக்கனைய — விளக்கானது பிரகாசித்து நின்றாற்போலவும்

மாயைவடிவாதிகன்மத்து வந்து. — மாயை கன்மத்துக்கிடாகத் தனுவாதியாகவிரிந்து கன்மமுள்ளமட்டும் ஜீவித்துநிற்கும். திருவருள் விளங்கினவிடத்து விடிவளவில் விளக்கொளி மழுங்கினாற்போல மாயைஜீவியாது. எ-று.

(நி-வ-உ.) சிவனுடையஞானமாகிய கிரணந்தோன்றி ஆணவவிருள் நீங்குமளவும், மாயையினிடத்திலே நின்றுந் தனுகரண புவனபோகங்கள் தத்தம்புண்ணிய பாவங்களுக்கிடாகத்தோன்றிச் சிறிதே மலவிருளினை நீக்கி விடயவின்பங்களைக் காட்டும் விளக்குகள் போலவாம். எ-று.

மலமுமாயையும், இருளுமொளியும் போலத் தம்முள் மாறுடைத்தென்பதாயிற்று.

சிறிதே நீக்குதல்-விளக்கனைய - என்பதனாற் பெற்றாம். விடிவாமளவும் என்றதனான் மாயாகாரியங்கள் சங்காரகாலத்திற் றமது காரணத்திலே யடங்கினும் உயிர்களைவிட்டு நீங்கிலவன்றென்பதாம் "இருளிரி சுடரிரண்டாகின்ற மும்மலமாயை" என்றருளிச்செய்தவாறு காண்க.

இதனால் அவ்வவிச்சையால் நீங்காது தொடர்ந்து நின்ற மாயை, கருமம், இரண்டின் முறைமையுங் கூறப்பட்டது. (௬௦)

பாசநிலை முற்றிற்று.



# ௯-வது அருளது நிலை.



அஃதாவது, கருணையுருவாகிய ஞானத்தின் முறைமை.

இத்தன்மையவாகிய அவிச்சையைத் துறந்து வீட்டுநெறி காட்டுதற் பொருட்டு அதற்கு மாறாகிய அருளினது முறைமை கூறலின், மேலை அதிகாரத்தினோடு இ-தற் கியைபுண்மை யறிக.

அருளாவ தேதென்னில்?

அருளிற் பெரிய தகிலத்து வேண்டும்
பொருளிற் றலையிலது போல்.

| | |
|---|---|
| (எ-து.) அருளிற்பெரியது | திருவருளுக்கு மேலாகிய தொருபொருளில்லை. அஃதெதன்போலவென்னில்? |
| அகிலத்து வேண்டும் பொருளிற் றலையிலது போல். | பூமியினிடத் தான்மாக்கள் அவரவர் விரும்பும் பதார்த்தத்துக்கு மேலான தொருபொருளில்லாதது போல. எ-று. |

(தி-வ-உ.) ஒருவர்க் கெல்லாப் பொருள்களுள்ளுந் தாம்விரும்பிய பொருளின் மேலாயபொரு ளில்லாதவாறுபோலத் திருவருளின் மிக்கதாகிய பொருள் உலகத்தில்லை. எ-று.

இதனு லருளினது உயர்வு கூறப்பட்டது. (௧)

அருளின் றென்செய்யுமோ வென்னில்?

பெருக்க நுகர்வினை பேரொளியா யெங்கு
மருக்கனென நிற்கு மருள்.

| | |
|---|---|
| (எ-து.) பெருக்கம் | சஞ்சித மிகுதியுங் கட்டுப்படவும் |
| நுகர் | பிராரத்துவ மிகுதியும் புசிக்கவும் |

| | |
|---|---|
| வினை | ஆகாமிய மேறவும் |
| பேரொளி யாய் | இவைகளுக்கெல்லா மிருந்த பிரகாசமாய் |
| எங்கும் | எவ்விடத்தும் |
| அருள் | திருவருளானது. |
| நிற்கும் | நிற்கும். அதற்குவமை யென்னென்னில்? |
| அருக்கனென. | ஆதித்தனாலே ஜகத்துக்குக் காரியப்படு வதுபோல. எ-று. |

(நி-வ-உ.) உலகத்து மக்கட்டொகுதிகள் பொருளினை யீட்டவும் துய்க்கவும் நிமித்தமாய்நின்ற சூரியனைப்போல, அருளும் உயிர்களெல்லாம் புண்ணியபாவங்களை வளர்க்கவும் அவற்றின் பயனாகிய சுகதுக்கங்களை யருந்தவும் காரணமாய் மிகுந்த வொளியாகி யெவ்விடத்தும் நிறைந்துநிற்கும். எ-று.

அருக்கனென என்றதனால், அவ்வாறு காரணமாதல் ஒருவராற் செய்துகொள்ளப்பட்டதல்லவாம். பொதுப்பட வினையென்றதனால் புண்ணியபாவ மிரண்டுமாம். சூரியனைப்போல வோரிடத்துண்டாய காலை யோரிடத் தின்றாயிருப்பதில்லையென்பார், எங்குமென்றருளிச்செய்தார்.

இதனால் அருள் காரணமாதல் கூறப்பட்டது. (உ)

அருள் காரியப்படுத்த வேண்டுவதில்லை, ஆன்மாக்கள் தானே செய்துகொள்வார்களெனில்?

௩௩ அறியா தொன்று மறிவிரியா தொன்றுமிவை

தானறியா தாரறிவார் தான்,

(எ-து.) ஊனை சரீரம் ஜடமாகையால் அஃதொன்றையு மறியா தொன்றும் அறியமாட்டாது

உயிரறியாதொன்றும் — ஆன்மா சிற்றறிவாகையினால் தான் தனக்கென வறிவில்லை

இவை தானறியா தாரறிவார் தான். — இத் திருவருளறிந்து புசிப்பியாதபொழு தாரறிந்து புசிப்பார். எ-று.

(தி-வ-உ.) அசேதநங்களாகிய தத்துவங்கட்கு எஞ்ஞான்றும் அறிவுண்டாவதில்லை, உயிர்கள் யாதொன்றுந் தாமா அறியமாட்டா. ஆதலால் அந்த அருள் தாமறிந்தறிவியாமல் உலகத்தின்கண் அறிவினைப்பெறுவார் யாவர் எ-று. அருளறிந்தறிவித்தே யறியவேண்டுமென்பதாம்.

இதனை யருளிற்கு அறியவேண்டுவதில்லை யென்பாரை, உயிர்கட் கறிவித்தற்பொருட்டு அறியவேண்டுமென மறுத்துக் கூறப்பட்டது. (௨)

இப்படி நடத்துகின்றவருளை யான்மாக்க ளறியாமலிருக்கிற தெப்படி யென்னில்?

பாலாழி மீனாளும் பான்மைத் தருளுயிர்கள்
மாலாழி யாளு மறித்து.

(எ - து.) பாலாழி மீனாளும் பான்மைத்து — பாற்சமுத்திரத்திலே திரிகிற மீனானது அப்பாலைக் குடித்துப் பசிதீராமற் றனக்குக் கிரையாகிய ஜந்துக்களைத் தின்கிற முறைமை போல

அருளுயிர்கள் மாலாழியாளு மறித்து. — அருட்கடலிலே யிருக்கிற வான்மாக்கள் சிவானந்தபோகங்களைப் புசித்து ஜநந மரணங்களைப் போக்கிக்கொள்ளாமற் சத்தாதி விடயங்களிலே திரியும். எ-று.

(தி-வ-உ.) மேலாய வருளின்கட்பட்ட வுயிர்கள், அதனோடு பொருந்திநின்று பேரின்பத்தை நுகராமல் மாயாபோகமாகிய மயக்குவலையு ளாழ்ந்து அழுந்துந்தன்மை, திருப்பாற் கடலின் கண் வைகிய மீன்கள், பாலைப்பருகாது, அதனுள் சிறிதாய பிராணிகளை வருந்தித் தேடியுண்ணு முறைமையினையுடைத்து. எ-று.

மீன்களும் பாலைப்பருகுமாயின், ஜந்துக்களைத்தேடி யொருகாற் கிடைத்துங் கிடையாது முழலாமல், நின்றநிலையிலே வேண்டுமளவும் பருகும். உயிர்களும் அருளினோடு கலந்து நிற்குமாயின், சிற்றின்பங்களைத் தேடி அவ்வாறுழலாமல், பேரின்பத்தினைத்தாமும் அந்நிலையிலே யிடையறாது அநுபவிக்குமென்பதாம்.

இதனு லருளோடு கூடிநின்றும் உயிர்கடுன்புறும் இழிபுகூறப்பட்டது. (௮)

அருளறிவிப்பதை யறியாத தெப்படி யென்னில்?

ஆறுகு துணையறியா வாற்றேனி லைந்து
முறையா லுணரா துயிர்.

(எ-று.) ஆறுகு துணையறியா வாற்றேனிலைந் தும் — ஆன்மாவினிடத்திலே பொருந்தியிருக்கிற பஞ்சேந்திரியங்களான்மாவினாலே காரியப்பட்டு வருகையிலேயும் ஆன்மாவினாலே காரியப்படுகிறோமென றறியாத முறைமைபோல

உணர்வையுணரா வுயிர். — ஆன்மாவுந் திருவருளினாலே காரியப்படச் செயுந் திருவருளினாலே காரியப்படுகிறோமென் றறியாத வுண்மையும். எ-று.

(தி-வ-உ.) தமக்கு மருங்காக வுடன்வருந்துணையினைத் துணையெனநாடாது வழிச்செல்வான்போலவும், தமக்கு முதல்வாய் நின்று உணர்த்துந் தன்மையறியாத இந்திரியங்கள் போலவும்

உயிர்கள் தாமுந்தமக்குயிராய் நின்றுணர்த்தும் அருளினை அறிய மாட்டா. எ-று.

இவை தன்மையுந் தலைமையும் பற்றிவந்த எடுத்துக்காட்டுவமை. (ரு)

அருளுடைத்தா யிருப்பதனை யறியாத தெப்படியென்னில்?

தரையை யறியாது தாமே திரிவார்
புரையை யுணரா புவி.

(எ-து.) தரை யையறியாது தா மேதிரிவார் புரை யை — பூமியினிடத்திலேயிருக்கப்பட்ட வான்மாக்கள் பூமிதாரகமாக நடக்கச்செய்யும் பூமிதாரகத்தை மறந்து நடந்தேனென்று மது போல

உணராபுவி. — பூமியினிடத்திலே யிருக்கப்பட்ட வான்மாக்களுந் திருவருளாலே தொழிற்படச் செயுந் திருவருளாலே தொழிற் படுகிறோமென் றறியாதமுறைமையையும். எ-று.

(தி-வு-உ.) பூமியைத் தமக்கு ஆதாரமென் றறியச்செய்யாது தாமே தமக் காதாரமாகப் போக்குவரவு செய்வாரைப்போல், அருளினைத் தமக்காதாரமென் றறியா உயிர்களும். எ-று.

புவியென்ப தின்னுயிர்கண்மே னின்றது. (சு)

அருளைத்தேடி யறிவாரேது வென்னில்?

மலைகெடுத்தோர் மண்கெடுத்தோர் வான்கெடுத்தோ[ர் ஞானம்
தலைகெடுத்தோர் தற்கேடர் தாம்.

(எ-து.) மலை கெடுத்தோர். — மலைமேலிருந்து மலையைத் தேடினவர்போலவும்

| | |
|---|---|
| மண்கெடுத்தோர் | பூமியிலே யிருந்து பூமியைத் தேடினவர் போலவும் |
| வான்கெடுத்தோர் | ஆகாசத்துக்குள்ளே யிருந்து ஆகாசத்தைத் தேடினவர்போலவும் |
| ஞானந் தலைகெடுத்தோர் | ஞானமாகிய வறிவைக் கெடுத்துத்தேடுவார்கள் |
| தற்கேடர் | தம்மைத்தெரியாத வான்மாக்கள். எ-று. |

தாம்.

(க-வ-உ.) மலையினை யிழந்தோரும், மண்ணினை யிழந்தோரும், ஆகாயத்தினை யிழந்தோரும், எங்குநிறைந்த பேரறிவினை யிழந்தோரும், தானென்பதனை யிழந்தோரும், தம்மிற்றமொப்பர். எ-று.

மலை நிலம் ஆகாயம் தான் என்பனவற்றைக் கெடுத்தோர் உலகின்கணில்லை, உளராயின் அவர்போல அருளினையிழந்தோரும் பேதையரென்பதாம்.

ஈண்டுத் தற்கேடரென்பது யாக்கைமேல் நின்றது. (௭)

ஞானத்தை யிழந்துதிரிவ தேதென்னில்?

வெள்ளத்து ளாவற்றி யெங்கும் விடிந்திருளாம்
கள்ளத் திறைவர் கடன்.

| | |
|---|---|
| (எ-து.) வெள்ளத்துளாவற்றி | கழுத்தளவுதண்ணீரிலே போகிறவன் ஒரு விடாயத்திலே யதிகப்பட்டுப் போகிறதுபோலவும் |
| எங்கும் விடிந்திருளாம் | ஆதித்தனெங்கும் பிரகாசிக்கச் செய்கையும் பிறவிக் குருடனுக்கு மிகுந்த விருளாயிருந்ததுபோலவும் |
| கள்ளத் திறை | கவடிந்திரியங்களுக்கு இறைவனாயிருக் |

லர்கடன். கிற வான்மாக்கள் முறைமையு மித்தன்மைத்து. எ-று.

(நி-வு-உ.) நிறைந்த நறுநீரின்கண்ணே நின்றும் அதனைப் பருகாது நாவறண்டும், எவ்விடத்தும் இருள்நீங்கி விடிந்திருக்கவு மயங்கிநிற்கு மடவோரது தன்மையே, தாம்நிறைந்த அருளோடு கலந்துநின்றும் அதனால்வரும் பேரின்பத்தை நுகராத வஞ்சத் தலைமையுடைய ஆன்மாக்களது முறைமை. எ-று.

உயிர்கண்மாட்டுளதாய குறையேயன்றி அருளின்குறையன்றென்பதாம்.

வஞ்சத்தலைமையாவது, தாமொன்றிற்குங் கருத்தா வல்லவாயிருக்கவும் யானெனதென் றகங்கரித்தல். (௬)

அஞ்ஞானநீங்கி யறிவ தெவ்வாறெனில்?

பரப்பமைந்த கேண்மினிது பாற்கலன்மேற்பூனை
கரப்பருந்த நாடுங் கடன்.

(எ-து.) பரப்பமைந்த கேண்மினிது — அருட்பொருளைக் கேட்குமிடத்துக் கரணவியாத்திகளைவிட்டு இன்பமாகக் கேண்மின். அப்படிக் கேளாமலிந்திரியங்களின் வழியிலே திரிந்தாற் கேட்டபொருளும் பலியாது. ஜநநமரணமு நீங்காது. அதென்போலவெனில்?

பாற்கலன்மேற் பூனை — பாற்சட்டியின்மேலிருக்கிற பூனையானது பாலைக்குடித்துப் பசிதீராமல்

கரப்பருந்த நாடுங் கடன். — கரப்பைத்தின்ன விரும்பநாடு முறைமைபோல. எ-று.

(நி-வு-உ.) சஞ்சல மனத்தாற்பயிலும் விரைவினையடக்கி அருளின்றன்மையே யினிதாகக்கேட்டு மனங்கொள்வீராக. அதனை

| | |
|---|---|
| (எ-து.) இற்றை | சிவனுள்ளே காலந்தொடங்கி யான்மா |
| வரை யிசைந்தும் | திருவடியைப் பெறுமளவும், திருவருளுப கரித்து வரச்செயுந் திருவருளுடனே |
| இரும்பழக்க மிலா | சற்றுமுறவில்லாத |
| வெற்றுயிர்க்கு | அளவில்லாத வான்மாக்களுக்கு |
| விடுமிகை. | மோக்ஷமொன்றுமே கிட்டாது. எ-று. |

இருவினையொப்பு வந்தல்லது ஞானம் பிரவேசியாதென்பது கருத்து.

(வி-வ-உ.) அநாதியே தொடங்கி இன்றளவும் அருளோடொன்றுபடக் கலந்துநின்றும், சிறிதும் அதிற்பொருந்த பழமை தோற்றுதலில்லாத வெறியவுயிர்கட்கு வீடுசேர்தலென்பது மிகுதி. எ-று. தகாதென்பதாம்.

வெறுமை - பயன்கொளாமை. பழமை தோற்றுதல்- உலகவெறுப்புத் தோன்றுதல்.

இதனால் அருளோடு கலந்துநின்றும் வீடுகூட நினையாத வுயிரினைப்பழித்துக் கூறப்பட்டது. (௪௰)

அருளதுநிலை முற்றிற்று.

———0———

## ௫-வது அருளுருநிலை.



அஃதாவது, ஞானவடிவாகிய குரவனது தன்மை.

அருளதுநிலைகூறி, அருளாரும் வடிவினது நிலைகூறுதலின், மேலையதிகாரத்தினோடு இதற்கியையபுடைத்தெனக் கொள்க.

இருவினையொப்பி லெவர்வருவா ரென்னில்?

அறியாமை யுண்ணின் றளித்ததே காணுங்
குறியாகி நீங்காத கோ.

| | |
|---|---|
| (எ-து.) அறியாமை யுண்ணின் றளித்ததே | அறியாமையாகிய பெத்த காலத்திலே அறிவுக்கறிவாய்நின்று இரக்ஷித்த திருவடிதானே |
| காணுங் குறியாகி | கரசரணாதிகளுடனே குருவாயெழுந்தருளிவந்தது. ஆனாலுள்ளேயில்லையோவென்னில் ? |
| நீங்காதகோ. | அது உள்ளும் புறம்பும் விட்டுநீங்காத ஞானராஜாவாகிய குரு எ-று. |

(வி-வ-உ.) தோன்றாத் துணையாய்க் கலந்துநின்று காத்து நடத்தினஅருளே, கண்ணாற் காணப்படும் வடிவினையுடையதாக விட்டுநீங்காத குரிசில். எ-று.

இதனால் அருள்குருவடிவு கொண்டுவந்தமை கூறப்பட்டது. (க)

அவரோ குருவாக வரவேணுமோ, படித்திருக்கிற வித்துவான்களாகாதோ வென்னில் ?

அகத்துறுநோய்க் குள்ளினரன்றி யதனைச்
சகத்தவருங் காண்பரோ தான்.

(எ-து.) அகத்துறுநோய்க் குள்ளினரன்றி — ஒருவனுக் கந்தரங்கமான விடத்திலே வந்த வியாதியை அவனுக் கந்தரங்கமானபேரறிந்து நிற்பதுபோல சிவனையாசாரியமூர்த்தமா யெழுந்தருளிவந்து நிற்கிறதாய் நிற்குமல்லது

அதனைச் சகத்தவருங் காண்பாரோதான் — அந்த வாணவமலமாகிய வியாதியை ஜகத்திலேயுள்ள சாரியம்போலக் குருவா னென்பாரோதான். லே நிக்கப்போகாது. எ-று.

(நி-வ உ.) ஓர் இல்லின்கண் ஒருவர் கொண்டபிணியை அவ்வில்லின்கண் வாழ்வார் அறிவதன்றி, அதனைச் சேய்மைக் கண்ணராகிய உலகத்தார் அறியவல்லரோதாம். எ-று.

தான் என்பது அசைநிலை. ஓகாரம் எதிர்மறை.

இதனால் இங்ஙனம் வடிவுகோடற்கு அருளாதல் வேண்டுமோ வென்னும் ஐயத்தினை யகற்றி வலியுறுத்தப்பட்டது. (உ)

இப்படிவரப்பட்ட ஞானாசாரியனை யாவராலுமறியலாமோ வென்னில்?

அருளா வகையா லருள்புரிய வந்த
பொருளா ரறிவார் புவி.

(எ-து.) அருளாவகையால — அருட்பிரகாசியாத முறைமையிலேயே

அருள்புரியவந்த — அருளைக்கொடுக்கவந்த

பொருளார அறிவார்புவி. — இப்படிக்கொத்த ஞானாசாரியனை, பூமியிலுள்ள வான்மாக்க ளறியமாட்டார்கள். எ-று.

(நி-வ-உ.) படைப்பு நிலை ஈறு மறைப்பு என்னும் நான்கினையுந் தோன்றாது செய்தவாறுபோல, அருளென்னுந் தொழிலினையுந் தான்பண்ணாததுபோலப் பண்ணும்படி, மானுடவடிவென்னும் அங்கியால் மறைத்துக் கொடுவந்த உண்மைப்பொருளை இக்குருவடி வென்பதனை அறியமாட்டாது உலகு. எ-று.

தம்போலொருமானுடராக நினைக்குமென்பதாம். (௩)

உத்தமரல்லாதா ரறியப்படாத தெந்த வேறாயினாலெ ன்னில்?

பொய்யிருண்ட சிந்தைப் பொறியிலார் போதமா
மெய்யிரண்டுங் காணார் மிக.

| | |
|---|---|
| (எ-று.) பொய் யிருண்ட சிந்தைப் பொறியிலார் | அஞ்ஞானமிருதியாலே பொருந்தப்பட்ட சித்தத்தை யுடையார்கள் பஞ்சேந்திரியங்களிலே திரியப்பட்ட வான்மாக்கள் |
| போதமா மெய்யிரண்டுங் காணார் மிக. | அறிவுக்கறிவாயிருக்கிற திருவருளையும் அந்தத்திருவருட்டானே திருமேனியாய் வந்த வாசாரியனையும், ஆகவிரண்டினித்தையு மிகுதியுற் றறியமாட்டார்கள். எ-று. |

(நி-வ-உ.) நிலையாத காயவாழ்க்கையினையும், ஆணவமலத்தால் மறைந்த வுணர்வினையும் உடையராய், ஞானமென்னுஞ் செல்வத்தினை எய்துதலிலாதார்; அறிவுமயமாகிய அருளும், அவ்வருளான் ஆகிய தேசிகவடிவும் என்னு முண்மைப் பொருளிரண்டினையும் சிறிதுமறியமாட்டார். எ-று.

இத்தன்மையவாகிய ஆசாரியவடிவினை, அருள்கொண்ட வடிவமாக வுணராராகியே; இன்மலமாய், அசன்மமாய், சி

ன்மையமாய், ஒழிவற நிறைந்த அவ்வருளினையும் உணரமாட்டாரென்பது கருத்து. (௨)

அவர் திருமேனியை யென்போல வறியவேணுமோ வென்னின்?

பார்வையென மாக்களைப் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் காணார் புவி.

| | |
|---|---|
| (எ-று.) பார்வையென மாக்களை | மானைக்காட்டி மானைபிடிப்பவர்போல வான்மாக்களை |
| பற்றிப்பிடித்தற்காம் | அவர்சத்தி பொருந்திப் பிடிப்பட்டவற்காம் |
| போர்வையெனக் காணார் புவி. | இப்படிநம்மை யிரக்ஷிக்க நமக்காகவந்த திருமேனியென்று பூமியிலுள்ள வான்மாக்கள் அறியமாட்டார்கள். எ-று. |

(வி-வ-உ.) விலங்குகள் பறவைகளைப் பிடித்தற்கு அவ்வவற்றின் வடிவாற்செய்த திவகம்போல, மிக்கதெய்வ வடிவங்கண்டு அஞ்சிவருகாது, மனிதனைத் தன்வயத்தாக்கிக் கோடற்பொருட்டு அருள் போர்த்துக்கொண்ட மானுடவுருவாகிய குருவடிவினை, போர்வையாக அறியமாட்டாவாம் இவ்வுலகு. எ-று.

இவை மூன்றுபாட்டானும் அகளமாய் நிறைந்த அருளே குருவுருவுதரித்து வந்ததென்பதனை அறியாதார் இழிபு கூறப்பட்டது. (௩)

போர்வையாக வெல்லாரையும் தற்சொரூபமாக்க வென்றதோ வென்னில்?

எமக்கெ னெவனுக் கெவைதெரியு மவ்வத்
தமக்கவனை வேண்டந் தவிர்.

| | |
|---|---|
| (எ-து.) எமக்கென் | எமக்குயாது |
| எவனுக் கெவைதெரியும் | பக்குவமல்லாத வான்மாக்களுக்கு எத்தனை புசித்தாலுந் தெரியாது |
| அவ்வத்தமக் கவனை வேண்ட | பக்குவப்பட்ட வான்மாக்க ளந்த வாசாரியனை வழிபட்டுக்கேட்க |
| தவிர். | அப்போது மலமாயாதி கன்மங்க ணீங்கும். எ-று |

(நி-வ-உ.) நீகுருவுண்மை கொண்டமையால் எமக்குவரும் பயனென்னை? யாவனொருவனுக்குயாவையில நூற்பொருள்கள் குரவனையின்றியுணர மூன்றோடு பின்மலைவறத் தோன்றும், அந்நூற்பொருள்கள் அவனைத்தமக்குக்குரவனாக அவாவிநிற்கும் பொழுது இம்மறுதலையினை ஒழிவாயாக. எ-று.

குருவுண்மை கொள்ளாயாயின் என்ப தெஃகி நின்றது.

இதனால் யாதொருநூற் பொருள்களுங் குரவனையின்றி யுணரப்படாவென்று கூறப்பட்டது. (௬)

திருவருளறிவுக்கறிவாயிருக்கிறது போதாதோ குருவாய்வரவேணுமோ வென்னில்?

விடநகுல மேவினுமெய்ப் பாவகனின் மீளுங்
கடனிவிருள் போவதெவன் கண்.

| | |
|---|---|
| (எ-து.) விடம் | ஒருவனை விடந்தீண்டித் தலைமண்டைக் கொண்டு கிடக்கச்செய்தே |
| நகுலமேவி | கிரியைக் கொண்டுவந்து கழுத்திலேக |

னும் — ட்டினாலும் விட்டு நீங்காது. பின்னை நீங்குகிறதெப்படியென்னில்?

மெய்ப்பாவகனின்மீளும் — உண்மையாகிய பிடாரகன்வந்து தன்னையுங் கிரியாகப்பாவித்து அவனையுங் கிரியாகப் பாவிக்கவே விட்டுநீங்கும்

கட்டில் — இந்த முறைமைபோல வாசாரியனுஞ் சிவசொரூபமாயிருந்து சீடனையுஞ் சிவசொரூபமாக ஞானக்கண்ணினாலே பார்க்கவே

இருள்போல தெவன்கண். — அந்தகார மலமாயாதி கன்மங்களுங் குவதன்றி பின்னையாராலே நீங்கும். எ-று.

(தி-ய-உ.) விடமானது கிரி தானேவந்து கின்டினுமீளாது, அதன்வடிவினைப் பாவிப்பானொருவனால் மீளுமாறுபோலவே, இவனுடைய திருநோக்கினால் ஆணவவிருள்நீங்கு முனைக்கு. எ-று.

இறைவன் அறிவே உயிரோடு கலந்து நிற்பினும் குருவருக்கொடு வந்தல்லது பாசம் நீங்காதென்பதாயிற்று. இது சகலரைக் குறித்து நின்றது.

இதனால் ஆசாரியனால் பாசம்நீங்கவேண்டு மென்பது கூறப்பட்டது. (எ)

இவர் குருமூர்த்தமா யெழுந்தருளிவந்து இரக்ஷிப்பது ஒருவருக்கோ வென்னில்?

அகலத் தருமருளை யாக்கும் வினைநீக்குஞ்
சகலர்க்கு வந்தருளுந் தான்

(எ-து.) அக விஞ்ஞானகலரிற் பக்குவர்க்கு அறிவிலேதருமருளாலே ஞானத்தை யுதிப்பிப்பன். ஆணவமல

யாக்கும் — த்தை நீக்குவன்

வினைக்கும் — பிரளயாகலரிற் பக்குவர்க்கு அவர்களைப்போல மானும் மழுவுஞ் சதுர்புஜமுங் காளகண்டமு மூன்றுநேத்திரமுமாக வெழுந்தருளிவந்து ஆணவமலத்தை நீக்கிச் சிவஞானத்தைப் பிரகாசிப்பிப்பன்

சகலர்க்கு வந்தருளுந்தான். — சகலரிற் பக்குவர்க்கு அறுவகைத் தீக்ஷையிலேயு மும்மலத்தையு நீக்கிக் கிரமத்திலே சிவஞானத்தைப் பிரகாசிப்பிப்பன், கத்தா. எ-று.

(நி-வ-உ.) கலையினின்றும் நீங்கின விஞ்ஞானகலர்க்கும் பிரளயாகலர்க்கும் நிராதாரமாய்நின்று அருளை விளக்கும், கன்மமலச் சேதனம் பண்ணுதற்குப் பக்குவராகிய சகலர்க்கும் குருவுருவினை யாதாரமாகக் கொண்டவர்போலத் தானேவந் தநுக்கிரகம் பண்ணும். எ-று.

அவ்வா றருள்புரிதல் சகலர்க்குக் கூடாதென்பதாம்.

பிரளயாகலர்க்குக் கலைநீங்கலாவது, அதன்வயத் தாகாதிருத்தல்.

குவ்வுருபு விகாரத்தால் தொக்கது.

முதலிருவர்க்கு "நிராதாரமாகிக் கரையிலருட்பரந்து விதாசத்திநிபாததத்தால்" என்றருளிச்செய்தவாறு காண்க.

இதனால் அருள் மானுடச்சட்டைசாத்தி வருவதற்குக் காரணங் கூறப்பட்டது. (அ)

குருவாராம லாகாதோவென்னில்?

ஆரறிவா ரெல்லா மகன்ற நெறியருளும்
பேரறிவான் வாராத பின்.

(எ-து.) ஆரறி வார் — ஆரறிந்து மோக்ஷமடையப்போகிருர்

எல்லா மகன் றநெறியருளும் — முப்பத்தாறு கருவிகளுநீங்கும்படியண ணிச் சாயுச்யமான வீட்டைக் கொடுக்கப் பண்ணின

பேரறிவான் வாராதயின். — மகத்தாகிய சிவஞானத்தையுடைய சிவ ன் வாராதபோது. எ-று.

(தி-வ-உ.) மந்திரமுதல் கலையீருகிய மூவிரண்டு அத் துவாவுங்கடந்த வீட்டுநெறியினை வெளிப்படுத்தும் நிறைந் த ஞானத்தினையுடைய இறைவனை குருவுருக்கொண்டுவா ராவிடத்து, அதனை அறியவல்லார்யார். எ-று. ஒருவருமில் லையென்பதாம்.

இதனால்நிறைந்த அறிவாகிய இறைவனை உருக்கொடு வரினல்லது உண்மையையுணர்தல் கூடாதென்பது கூறப்ப ட்டது.

(க)

இவர் வேறுமூர்த்தராகவரவேணுமோ என்னறிவிலே யி ருப்பது போதாதோவென்னில்?

ஞானமிவ னொழிய நண்ணியிடு நற்கல்நற்
பானு வொழியப் படின்.

(எ-து.) ஞா னமிவனொழிய நண்ணியிடும் — இவன் ஞானாசாரியனுக வாராமல் ஞா னம் பிரகாசிக்கும்

நற்கல் நற்பா னு வொழியப்ப டின். — நல்ல சூரியகாந்தக் கல்லினிடத்திலே யாதித்தனில்லாதக்கினியுண்டாகின். எ-று.

இவ்விரண்டு மப்படியாகாதென்பது கருத்து.

(நி-வ-உ.) அருள்வடிவாகிய குரவனையன்றி யொருவற்கு ஞான முண்டாதல்கூடும், ஆதித்தனுலன்றி மாசிலாச் சூரியகாந்தக் கல்லினிடத்து நெருப்புத் தோன்றுமாயின். எ-று. இரண்டுமில்லை யென்பதாம்.

இதனால் திருவடிஞானம் குரவனையின்றியமையாச் சிறப்பிற்றென மேலது வலியுறுத்தப்பட்டது. (௫0)

அருளுருநிலை முற்றிற்று.

——0——

## ௬-வது, அறியுநெறி.



அஃதாவது, உண்மைப்பொருளை யுணரு முறைமை.

அருளுருநிலைகூறி அதனு லறியும்பொருளுண்மை கூறுதலின், மேலையதிகாரத்தினேடு இதற்கியைபுண்மையறிக.

அவரெப்போது குருவாவா ரென்னில்?

நீடு மிருவினைக ணோராக நேராதல்
கூடுமிறை சத்தி கொளல்.

(எ-து.) நீடு மிருவினைகள் — மிருத்த புண்ணியபாவங்க ளிரண்டும்
நேராக நேராதல் — துலை யொத்தவிடத்து
கூடுமிறைசத்திகொளல். — கத்தா திருமேனிகொள்ளுவர்; அப்போ சத்தி பதியும். எ-று.

(நி-வ-உ.) ஒன்றை யொன்றேவ்வாது மிக்குவளர்ந்து

வரும் புண்ணியபாவங்க ளிரண்டும் தம்மி லொப்பாகவரும் பருவத்திலே யுண்டாகும், சிவனுடைய சத்திபதிதல். எ-று.

நேராக நேராதல், ஓர்புண்ணியத்துக் கோர்பாவ மோர்வகையா லொத்திருத்தலாம். அதுவன்றி வாக்குமனங் காயமென்னு மூவகையா லியற்றப்பட்ட புண்ணியங்கள் முழுவது மோர்பங்கும், பாவங்கள் முழுவது மோர்பங்குமாகப் பொன்னும் இரும்பும் கன்மத்தாற் றுலையாக்கத் தூங்குதல் போலப், பலத்தாற் சமனாதல். சத்தி பதிதலாவது, நீங்காத இயல்பினையுடைய வுலக நடையினையஞ்சி வீட்டுநெறியினை விரும்பும் வண்ணம் உயிர்களதுணர்வினைத் திருத்தஞ் செய்தல். ஒன்றையொன் றேற்றத் தாழ்வுபடில் அவையவை யிகல்செய்திருக்கு மென்பதாம்.

இதனு லான்மை யுணர்தற் கேதுவான சத்திபதியு மெல்லிகூறப்பட்டது.

(௬)

கர்த்தா திருமேனிகொண்டுவந் தெதை யறிவிப்பாரெனில்?

ஏக னநேக னிருள்கரும மாயையிரண்
டாகவிவை யாறு மநாதியில்.

| (எ-து.) | |
|---|---|
| ஏகன் | கர்த்தாவும் |
| அநேகன் | ஆன்மாவும் |
| இருள் | ஆணவமலமும் |
| கருமம் | கன்மமலமும் |
| மாயையிரண் | சுத்தமாயை யசுத்தமாயையும் |
| ஆகவிவை | ஆகவிந்த வாறுபொருளும் |

ஆறுதியில் — அறுதியிலே யுண்டானதென் றறிவித்தார். எ-று.

(தி-வ-உ.) ஒருவனாகிய இறைவனும், அளவிலவாகிய வுயிர்களும், இருள்வடிவாகிய ஆணவமலமும், கன்மமலமும், சுத்த மசுத்தமென்று மிருவகை மாயைகளுமாகிய இப்பொருள்கள் ஆறும் அறுதியாகிய பொருள்கள். எ-று.

அனைகள் என்பதில் ஈற்றுமகரம் னகரமாய்த் திரிந்து நின்றது. இவையாறுமென அஃறிணை வாசகங்கொண்டு மிக னால்முடிந்த திணைவழுவமைதி. ஆறுமென்னு முற்றும்மை செய்யுள்விகாரத்தாற் றொக்கது.

இதனால் நித்தியப்பொருள்களின் வ பேதத் தொகுத்துக் கூறப்பட்டது.

அறுதி என்பதை ஆறுதி எனப் பாடமோதி இவையாறுமென உரைகூறினார் நிரம்பவழகியர். இதுபோன்ற பாடபேதங்களால் உரை வேறுபடுமிடந்தோறு மூலச்செய்யுள்களையும் திருத்திக்கொள்வது வாசிப்போர் கடன். (உ)

அறுதியாகி லாறுபொருளினு மறிவ தெதெனில்?

செய்வானுஞ் செய்வினையுஞ் சேர்பயனுஞ் சேர்ப்ப [வனு
முய்வா னுளனென் றுணர்.

(எ-து.) செய்வானும் — கன்மத்தைச் செய்யப்பட்ட வான்மாவும்

செய்வினையும் — செய்யப்பட்ட புண்ணியபாவமும்

சேர்பயனும் — புண்ணியபாவத்துக் கேதுவாகிய சுகதுக்கமும்

சேர்ப்பவனும் — இந்தக் கன்மத்தைக் கூட்டிப் புசிப்பிக்கப்பட்ட கத்தாவும்

உய்வானுள  இஃதெல்லா மறிந்து பிழைத்திருக்கிறவ
னென்றுணர்.  ஞான்மா. எ-று.

(வி-வ உ.) புண்ணியபாவங்களைப் பண்ணும் புருடனும், அவனாற் செய்யப்படும் வினைகளும், அவற்றின் பயனாகிய இன்ப துன்பங்களும், அவற்றைக் கூட்டியருத்து மிறைவனு மென்னு மிந்நான்கு திறத்தினை யுடையனாக நல்வினையறிவனி யாக; மாணவகனே! நீ கதிசேர்தற்பொருட்டு. எ-று.

இவை யுணராதிருக்கவே யானெனதென்னுஞ் செருக் கறாது பிறவித் துன்ப முறுமென்பதாம். உடையனாதல் இரு வினைகளைச்செய் திறைவனா லவற்றின்பயனை நுகர்தற்குத் தானுரியனாதல். (௯.)

உய்வான் றனையறிவதே னென்னில்?

ஊனுயிரால் வாழு மொருமைத்தே யூனொடுயிர்
தானுணர்வோ டொன்றுந் தரம்.

(எ-ற.) ஊனு  சரீரமானது ஆன்மாவினாலே யொருப
யிரால்வாழு  டித்தாய் ஜீவிக்கிற முறைமையோம்
மொருமைத்தே
ஊனொடுயிர்  இந்தச்சரீரத்தேயிருக்கிற வான்மாவும்
தானுணர்  இந்தத் திருவருளினாலே ஜீவித்து நிற்
வோ டொன்று  கிறது முறைமைத்து. எ-று.
ந்தரம்.

(வி-ய-உ.) உடம்பானது உயிரோடுகூடிப் பிரிப்பின்றி நடைபெறு மொற்றுமையினை யுடைத்து. அவ்வுடம்போடுயி ர்கலந்திருந்த ஞானத்தோடுகூடி யொன்றுபட்டு வேறற நிலைபெறுந் தகுதியன. எ-று.

உடலகத் துயிர்போலக் கலந்துநின்று நடத்துமென்ப தாம்.

உடம்பென்ற பொதுவகையால் ஐவகையுடம்பு மடங்கும். அவையடங்கவே நிலமுதல் நாதமீறாகிய தத்துவமெல்லா மடங்குமெனக்கொள்க. (௪)

அருளாற் காரியப்படுத லெப்படியென்னில்?

தன்னிறமும் பன்னிறமுந் தானுங்கற் றன்மைதரும்
பொன்னிறம்போன் மன்னிறமிப் பூ.

(எ-து.) தன்னிறமும் — படிகந் தன்னுடைய பிரகாசத்தையும்

பன்னிறமும் — பஞ்ச வன்னங்களினுடைய விளக்கத்தையுங்காட்டும்

தானுங்கற்றன்மைதரும் பொன்னிறம் போல் — இவ்விரண்டையுங் கூட்டிக் காரியப்படுத்தப்பட்ட வாதித்தப் பிரகாசத்தைப் போல

மன்னிறமிப்பூ — கத்தாவினுடைய திருவருளுஞ் சித்துக்கறியும் ஜடத்துப் பிரேரகமுமாயிருக்கும். எ-று.

(தி-வ-உ.) அடுத்த பலவன்னங்களையுஞ் சேர்தலும், அவையடுத்திருக்கினுந் தன்னிறமே காட்டிநிற்றலு மாகிய படிகத்தினது தன்மை யிரண்டிற்குந் தான்காரணமாகின்று பன்னும் சூரியன் கிரணம்போலாம்; இவ்வுலகிற்கு இறைவனது சுடராகிய ஞானசத்தி. எ-று.

கட்டிவிடென்னு மிரண்டிற்குந் தானொன்றே காரணமென்பதாம்.

இவை மூன்றுபாட்டானும் இறைவனுலகினை நடத்துமாறு கூறப்பட்டது. (௫)

அருளாற் காணவேண்டுவ தில்லை, நானே காண்பனென்னில் ?

கண்டொல்லை காணுநெறி கண்ணுயிர் நாப்பணொளி
யுண்டில்லை யல்லா தொளி.

| | |
|---|---|
| (எ-று.) கண்டொல்லை காணுநெறி | சீக்கிரத்திலே காணப்பட்டது |
| கண் | கண்ணானு மொளியாலும். (விளக்கானது கண்ணுக்கும் பதார்த்தத்துக்கு நடுவே பிரகாசித்தாற் கண்ணானது பதார்த்தத்தைக்காணும்) |
| உயிர் நாப்பணொளியுண்டு | ஆன்மாவுக்கு நேயத்திற்கு நடுவே யருள்பிரகாசித்தா லான்மா நேயத்தைப் பெறுகிறதுண்டு |
| இல்லையல்லாதொளி. | ஒளியாகிய திருவருள் பிரகாசியாதபோது நேயமே விளங்காது. எ-று. |

(நி-வ-உ.) நினைவினையுடைய வுயிரினது நடுவாக ஞானவொளிக்கு நிலையுண்டாதல் வேண்டுமென்றுயின் வாயில்வழியாற் புலன்களை யுற்றுப்பார்த்து விரைவிலுணரு முறைமையில்லை. எ-று.

நடுவாக நிற்றல் கலந்து நிற்றல். இதனால் ஞானமுன்னிற்பினல்லது அறிதல் கூடாதென்பதோ ருபயவகையால் விளக்கக் கூறப்பட்டது.

இது குரவனாலன்றி யுரைகொண்டுணர்க்கு வழியெனக் கொள்க. (௮)

அானருளாற் காணுஞ்செய லென்போலவென்னில்?

புன்செயலி னோடும் புலன்செயல்போ னின்செயலை
மன்செயல தாக மதி.

| | |
|---|---|
| (எ-து.) புன் செயலினோடும் புலன்செயல் போல் | ஆன்மா பஞ்சேந்திரியங்களினாலேயொருவிடயத்தை யறிகிற முறைமைபோல |
| நின்செயலை | உன்னுடைய செயலையும் |
| மன்செயல தாகமதி. | நிலைபெற்ற திருவருளினாலே காரியப்படுகிறதென் றறிவாயாக. எ-று. |

(நி-வ-உ.) புருடனது சிறுதொழிலின்வழியே திரிபின்றி நடக்குமிந்திரியங்களது செயல்போல, மாணவகனே! நின்னுடைய செய்தியையும் இறைவனது கிரியாசத்தி வழியே யவ்வாறு நடப்பதாகக் கருதுவாயாக. எ-று.

அவ்வாறு கருதவே வினைத்தொடர்பின்றிப் பிறவிநீங்கி நிற்பரென்பதாம்.

இதனா லிறைவனது செயல்வழி நிற்றல் கூறப்பட்டது.

அருளாற் செயற்பட் டறிவ தேதென்னில்?

ஓராதே யொன்றையுமுற் றுன்னாதே நீமுந்திப்
பாராதே பார்த்ததனைப் பார்.

| | |
|---|---|
| (எ-து.) ஓராதே | கேவலத்திலும் ஒன்றையும் விசாரியாதே |
| ஒன்றையு முற்றுன்னாதே | சகலத்திலும் நீயொன்றையு நினையாதிருக்கச்செய்தே யிரு |
| நீ முந்திப்பாராதே | சுத்தத்திலு நீ யறிவிறுவென்று சுட்டிப்பாராதே |

பார்த்தருளைப்பார். — இந்த மூன்றவத்தையினும் முதல்வனாக வருவிக்கப்பட்ட திருவருளையே காண்பாயாக. எ-று.

(நி-வ-உ.) ஞானமெவ்வண்ணமிருக்குமோவென் றாராயாமல், அதனையும் விடயங்கள்போலக் குறிக்கொண் டேன்றிநினையாமல், யோகமுன்சென்று மேற்கொண்டு காண்டலுஞ்செய்யாமல், உன்னைக்கண்ட ஞானத்தினைக் காண்பாயாக. எ-று.

இவ்வா றசைவின்றி நிற்கவே அவ்வகண்டமாகிய ஞானந் தானே தோன்றுமென்பது கருத்து. (௮)

அப்படித் திருவருளை யெதிரிட்டுப் பார்க்கி லெனக்குச் சந்தோஷம் வருமே யென்னில்?

களியே மிகுபுல னாக்கருதி ஞான
வொளியே யொளியா வொளி.

(எ-ர.) களியேமிகுபுலனாக் கருதி — அந்தச் சந்தோஷமே மிகுந்தவிடயமாக நினைத்து

ஞானவொளியே யொளியா வொளி. — ஞானமாகிய பிரகாசமே மறைவாக ஒளித்து நிற்பாயாக. எ-று.

(நி-வ-உ.) இத்தன்மையவாகிய ஞானத்தினைக் காணப்பெற்றமையால் வருமகிழ்ச்சியைப் பெரிய விடயமாகநினைந்து, ஞானமாகிய வொளியன்றி வேறுனக்கோ ரொளியின்றாகும்படி அதனுட் புக்குக் கரந்து நிற்பாயாக. எ-று.

கரந்துநிற்றல் விகற்பமறக் கூடிநிற்றல். (௯)

என்று மிவையிழந்திருக்கிறதெப்படி யென்னில்?

கண்டபடி யேகண்டு காணாமை காணாமை
கொண்டபடி யேகொண் டிரு.

(எ-து.) கண்டபடியேகண்டு — திருவருளைத் தரிசித்தபடியே தரிசித்து

காணாமை காணாமை — சகல கேவல நீங்கினபடியே நீங்கி

கொண்டபடியே கொண்டிரு — திருவருளுன்னைக் கருத்துக்கொண்டபடியே நீயு மசைவற நிற்பாயாக. எ-று.

(வி-வ-உ.) ஞானமானது தனக்கு யாதொருபடியே வெளிப்பட்டது அப்படியே நீயுங்கண்டறியாமையாகிய அதீதாவத்தை வந்து தோன்றாமல், யாதொருபடியுன்னை விழுங்கிற்றப்படியே நீயும் விழுங்கக்கொடுத் திருப்பாயாக.

இம்மூன்றுபாட்டானு ஞானத்தினைக் காணுமாறும், கண்டாலதனுட்கலக்குமாறும், அவ்வழித் தன்னை அதன்வயத்தனாக்குமாறும் கூறப்பட்டன. மானவகனை யென்ப திம்மூன்றிற்குங் கூட்டி யுரைக்கப்பட்டது. (௧௦)

அறியுநெறி முற்றிற்று.

## எ-வது, உயிர்விளக்கம்.



அஃதாவது, ஆன்மசுத்தி பண்ணும்படி அறியுநெறியிற் கூறியவாற்றான் அறிந்தபடி நின்று யானெனதென்னுஞ் செருக்கறுத்தல் கூறினமையின், மேலையதிகாரத்திறுதி நடத்தியையுடைத்தெனக்கொள்க.

கொண்டபடி கொள்வதெக்காலமென்னில் ?

தாநிழலார் தற்காருஞ் சொல்லார் தொகுமிதுபோற்

றானதுவாய் நிற்குந் தரம்.

| | |
|---|---|
| (எ-து.) தாநிழலார் தற்காருஞ் சொல்லார் | பவுத்திரமாகிய தன்னுடையநிழல் ஆதித்தன் மத்தியத்திலே வந்தாற் றனக்குள்ளே யடங்கி நிற்கிறதற்கு யாருஞ் சொல்லவேண்டுவதில்லை |
| தொகுமிது போல் | இந்த முறைமைபோல |
| தானதுவாய் நிற்குந்தரம். | இருவினை யொப்புவந்தா லான்மா திருவருடானாய் நிற்கிறதற்கு யாருஞ் சொல்லவேண்டுவதில்லை. எ-று. |

(நி-வ-உ.) கோடையான் வெதும்பினோன் குளிர்ந்தநிழலையடைதற்கு அடைதியென வொருவருஞ் சொல்லார், தானே விரைவினையுந் தன்மையினையொக்கும்; மாயாவிகார வெம்மையான் வருந்தினோ னொருவன் தானவ்வருளினையடைந்ததுவாய் நிற்குமுறைமை. எ-று.

உலகவெறுப்பின்றி யல்லது அருளினையடைதல் கூடாதென்பதாம்.

இதனு லருளினையடைதற்கு ஏது கூறப்பட்டது. (க)

எல்லார்க்குமொக்க விந்தத்திருவருணில்லாத தென்னெனில்?

தித்திக்கும் பாலுநீ கைக்குந் திருந்திடநாட்
பித்தத்தின் றன்றவிர்ந்த பின்.

(எ - ம.) தித்திக்கும் பாலுங் கைக்கும் — பித்த மேலிட்டபொழுது தித்திக்கிற பாலுங் கசக்கும்

திருந்திடநாப் பித்தத்திற் றன்றவிர்ந்த பின். — திருத்தமாக வறிகிற நாவிலே பித்தநீங்கினபோது கசந்தபாலுந் தித்திக்கும். அது போல வாணவமல மேலீட்டினாலே குருலிங்க சங்கமத்திலே யாசையறப்பண்ணும், அந்தவாணவமல நீங்கினபோது குருலிங்க சங்கமத்திலே விருப்பமுண்டாம். எ-று.

(நி-வ-உ.) குற்றந்தீர்ந்த நாவானது பித்தநோயினின்றுந் தான் நீங்கினபின்னர் முன்கைத்தபாலும் தித்திக்கும் அதனைத் தானுங் கண்டறியும். எ-று.

மலவிருள் தீர்ந்தபின்னர் முன்னைத் திரோபவித்து நின்ற மருளும் அருள்வடிவாகி வெளிப்படும், அதனையுயிர்களுங் காணு மென்பது பொருள். மாசுதீரின் விளங்கித் தோன்றுந்தன்மையினை யுடையது உயிரென்பதற்கு உவமித்து இதனைத் திருந்திட நாவென் றருளிச்செய்தார். இதுவும் ஒட்டென்னும் அலங்காரம்.

இதனா லருள் வெளிப்படுங்காலமும், உயிர் அதனைத் திருந்திக் காணுங்காலமும் ஒன்றென்பது கூறப்பட்டது. (உ)

அறியாமைநீங்க வறிந்தவ னென்னில்?

கான்பா னொளியிருளிற் காட்டிடவுந் தான்கண்ட
வின்பாவ மென்னாள் விடும்.

(எ-து.) காண் காணப்பட்ட வான்மாவுக்குத் திருவருளா
பா ளொளியிருளி ன தாணவமலத்தை நீக்கி ஞேயத்தைக் காட்
ற் காட்டிடவும் டச்செய்தேயும்
தான்கண்டவி நான் கண்டேனென்கிற பாவ மெந்தநாக
ண்பாவ மெந்நா த்திலே தன்னுமோ? எ-று.
ள்வீழும்.

(நி-வ-உ.) ஒளிவடிவாகிய ஞானம், தன்னைக் கண்டறிதற் பொருட்டு மலவிருளிலே மருண்டுகிடக்கின்ற வுயிர்கட்குத் தன்னை வெளிப்படுத்தவும், அதனை நாடாது உயிர்தானே காண்பதாகக் கண்டமையாலே வறிதேவரும்பாவ மென்னபயனைச் செய்ததாய் வந்து முற்றும். எ-று.

ஓர் புலனுணர்வான் வரும் பாவம்போலாது வாளாவருதலின் வீண்பாவமென் றருள்ச்செய்தார்.

பித்தம் பாலானன்றி மற்றொன்றானுந் தீராவாறுபோல, மலமும் அருளாலன்றிப் பிறிதொன்றால் தீராதென்பதூஉம், அருள் மறைந்தில்லாது வெளிப்பட்டு நிற்பினும் அந்நாக்குச் சுவைகாண்டல்போலத் தானே காண்டல் கூடாதென்பதூஉம், இதனுட் கொண்டுகிடந்தவாறு கண்டுகொள்க.

இதனால் அருளை முன்கொண்டு காணுக்கால் குற்றமுடைத் தென்பது கூறப்பட்டது. (௯)

தெளிந்தார் செயலுந் தெளியாதார்செயலு மெப்படியோ வென்னில்?

ஒளியு மிருளு மொருமைத்துப் பன்மை
தெளிவு தெளியார் செயல்.

(எ-து.) ஒளி படலமுடைய கண்ணுக்கு ஆதித்தப்பிரகா
யுமிருளு மொரு சமும் பூதவிருளு மொருபடித்தா
மைத்து

பன்மை — இந்த முறைமைபோல
தெளிவுதெளி — மல மாயா கன்ம மேலிட்டபேர்க்குப் பா
யார் செயல். — சமும் பதியு மொருபடித்தாய் விளங்கா நிற்கும். எ-று.

(வி-வு-உ.) பலவாய பொருள்க ளம்பன்மை தோன்றுது ஒருபடித்தாயிருத்தல், ஒளியின்கண்ணும் இருளின்கண்ணு மொக்கத் தெளிந்து நிற்றலும் மருண்டு நிற்றலுமாய செயல்கள் அவ்விடத்துப்பேதம். எ-று.

இதனு லருளோடு கூடிநிற்றல் ஒருவகையா லிருளோடு கூடி நிற்றல்போலு மென்பது கூறப்பட்டது. பிறிதொன்றுந் தோன்றுதென்பது கருத்து. (ச)

தெளிந்தறிந் தகூடுவ தெல்லார்க்குந் தெரியுமோவென்னில்?

கிடைக்கத் தகுமோநற் கேண்மையார்க் கல்லா
லெடுத்துச் சுமப்பானை யின்று.

(எ - து.) நற் கேண்மை யார்க் — நல்ல கேள்வியினையுடைய ஞாதாக்களுக்கே யல்லாமல்
கல்லால்
எடுத்துச்சுமப் பானை — எல்லாப் பதார்த்தத்தையுஞ் சுமத்தச் சுமக்கிற சிவனை
இன்று — இப்பொழுது
கிடைக்கத் தகுமே. — கிடைக்குமோ பின்னை கிடையாதோ. எ-று.

(வி-வு-உ.) நல்ல கேள்வியை யுடையார்க்குத் தம்மேல் பாரமுழுதஞ் சுமத்தச் சுமக்குமொருவனை யிப்பொழுதே கிட்டுதல் கூடுமோ. எ-று.

நற்கேண்மையென் றருளிச்செய்தார் அருளோடு கூடியதெ ன்பதற்கு.

இதனால் அருளாகுங் கேண்மையினை யுடையார்க்குத் தன்னை யடைந்தார் வினைகளெல்லாம் அவரைத்தொடராது தன்செயலாகக் கொள்ளு ஞேயம் வெளிப்படுத லெளிதென்பது கூறப்பட்டது.

" சிவனு மிவன்செய்தி யெல்லா மென்செய்தியென்றும் செய்ததெனக் கிவனுக்குச் செய்ததென்றும், பவமகலவுடனாகி நின்றுகொள்வன் பரிவார் பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே " என்றருளிச்செய்தவாறு காண்க. (௫)

எடுக்கிறவனொருத்தன் சுமக்கிறவனொருத்தனோ, எல்லாம் பிரமந்தானே யென்னில்?

வஞ்ச முடனொருவன் வைத்த நிதிகவரத்
துஞ்சினையோ போயினையோ சொல்.

| | |
|---|---|
| (எ-து.) வஞ்ச முடனொருவன் | வஞ்சகமாக வொருவன் |
| வைத்த நிதிக வர | வைத்த திரவியத்தை யெடுத்துக்கொள்ள வைத்தவன்வந்து கேட்கவில்லையென்ன |
| துஞ்சினையோ போயினையோ சொல். | தூங்கித்தான் கிடந்தாயோ இவ்விடம் விட்டுத்தான் போனாயோ சொல்? அப்படிப் போலச் சிவன் தனுகரண புவனபோகங்களைக் கொடுத்திருக்கவும், கொடுத்தவன் முனே குருலிங்க சங்கமமாய்வந்து என்னுடைமையைத்தாவென்று கேட்க, இல்லையென்று சொல்லிக்கொடுத் தவனை மறைக்கையினாலே நீ பிரமமல்ல அடிமை. எ-று. |

(நி-வ-உ.) ஒருவன் சேமித்த பொருளினை ஒருவன் கரவினால் கவர்ந்துகொண்டேக, மற்றவன் உறங்குதல் செய்தானோ, அவ்விடம்விட்டு நீங்குதல் செய்தானோ, மாணவகனே? சொல்வாயாக. எ-று.

அதுபோலக் கேடின்றி நிறம்பிர்கு ஞானசத்தியினை வஞ்சித்து அதன்முதலாய ஞேயத்தினை யுடைத்தாதல் அரிதென்பது இதனாற் கூறப்பட்டது.

இதுவும், முன்னதுவும் ஒட்டென்னு மலங்காரத்தாற் கூறப்பட்டன. துஞ்சினையோ போயினையோ என்பதனை துஞ்சினனோ போயினனோ எனப்பாடமுரைத்து தூங்குதல் செய்தானோ அவ்விடம்விட்டு நீங்குதல்செய்தானோ என உரைகூறினர் நிரம்பவழகியர். (௬௮)

இப்படி யடிமையாகிய ஞானவானிடத்திலே மலங்கள்வாராதோ வென்னில்?

தனக்கு நிழலின்று மொளிகவருந் தம்ப
மெனக்கவர வில்லா திருள்.

(எ-து.) தனக்கு நிழலின்று மொளிகவருந் தம்பமென — ஆதித்த னுச்சியிலே வருகிறபோது படிகத்தம்பமானது பஞ்சவன்னங் கவராமலாதித்தன்றானாய் நின்றதுபோல

கவரவில்லாதிருள் — ஆன்மாவுக் கிருவினையொப்பு மலபரிபாகம் வந்த வவதரத்திலருள் பிரகாசிக்கவே பஞ்சமலங்களையும் பொருந்தாமலருளிங்கழ நிற்பதாம். எ-று.

(நி-வ-உ.) தனக்கென வேறேரொளி தோன்றுதவண்ணம் சூரியகிரணத்தாற் கவர்ந்துகொள்ளும் படிகத்தைப்போல, ஆன்மா தன்னுடையபோதந் தோன்றாது நிற்கும்வண்ணம் அருள் கவர்தலைச்செய்யுமாயின், அந்நிலையே யிருளானது தன்பால் நிலைபெறாதுநீங்கும். எ-று.

சூரிய கிரணத்தினுள்ளே தன்னைக்கொடுத்து நிற்கும் படிகம்போல ஆன்மாவுந் தன்னையருளினுள்ளே கொடுத்து நிற்றல்வேண்டுமென்பதாம்.

இதனால் ஆன்மாவை அருள் தன்வயத்தாக்குமாறு கூறப்பட்டது. (எ)

மலந்தோன்றும லருளே நிகழாநிற்ப தெப்படி யென்னில் ?

உற்கைதரும் பொற்கை யுடையவர்போ லுண்மைப்பி
னிற்க வருளார் நிலை.

(எ-று.) உற் பொலிவினையுடைய கையிலே விளக்கை
கைதரும்பொற் ப்பிடித்து முன்னிட்டுப்போனவர், நினைத்
கை யுடையவர் த பதார்த்தங்களை யெடுப்பார்கள்
போல்

உண்மைப்பி ஆன்மா வருளை முன்னிட்டுக்கொண்டு
னிற்க வருளார் நிற்கவே ஞேயத்தைப் பொருந்துவன்.
நிலை.

(நி-வ-உ.) தழற்கொள்ளியினைப் பிடித்திருக்கு மழகிய கையினையுடையோர், தாம்வேண்டிய பொருள்களைக் காணுமளவும் அதனை முன்னிட்டுத் தாம்பின்னிற்கு மாறுபோல, ஞேயமானது வெளிப்படுமளவும் அருளைத்தமக்கு முன்னு

க்கித் தாம் அதன்பின்னிற்றலே யருளோடு பொருந்திநிற்கு நிலையாவது. எ-று.

இதனு லருளோடு பொருந்திநிற்கு முபாயங் கூறப்பட்டது. (அ)

அருளையறியும், யானறிய வேண்டுவதில்லை யென்னில்?

ஐம்புலனாற் றான்கண்ட தென்று லதுவொழிய
வைம்புலனார் தாமா ரதற்கு.

(எ-து.) ஐம்புலனாற் றான்கண்ட தென்றுல துவொழிய — ஆன்மா பஞ்சேந்திரியங்களினாலே யொருவிடயத்தைக் யறிகிறதல்லாமல் தாமேயறிவதில்லை. அது வல்லாமல்

ஐம்புலனார் தாமா ரதற்கு. — இந்திரியங்க ளான்மாவுக்கு விடயங்களை யறிவிக்கிற தல்லாம லிந்திரியங்களுக் கறியவேண்டுவ தில்லை. அப்படிப்போல வான்மா திருவருளினாலே ஞேயத்தைப் பொருந்துகிற தல்லாமல் திருவருளுக் கறியவேண்டுவதில்லை. எ-று.

(நி-வ-உ.) மெய் வாய் கண் மூக்குச் செவிகளாய் தாம் கண்டறிந்த விஷயங்களுள் ஒன்றல்லவாயி னவ்வருளாகினை யன்றிப் பேரின்பமாகிய ஞேயத்தினை யடைதற் கவ்வைம் பொறிகள்தான் ஆர்? உயிர்கள்தாம் ஆர்? எ-று.

சுட்டிறந்து நின்றமையா லிவர்க் கடைத லுரிமையில்லை யென்பார் ஆரென்றருளிச்செய்தார். (சு)

அருள் காட்டவேண்டுவதில்லை, நானேகாண்ப னென்னில்?

தாமே தருமவரைத் தம்வலியி னாற்கருத
லாமே யிவனா ரதற்கு.

| | |
|---|---|
| (எ-து.) தாமேதருமவரை | ஒருத்தன் றயவினாலே கொடுக்கச் செய்தே |
| தம்வலியினாற்கருதல் | தம்முடைய வலிமையினாலே பறித்தாற் கொடார் |
| ஆமே | அப்படிப்போல |
| இவனாரதற்கு. | திருவருளானது தன்னுடைய கிருபையினாலே ஞேயத்தைக் காட்டாநிற்க ஆன்ம போதத்தாலே ஞேயத்தைப் பொருந்தப் போகாது. எ-அ. |

(நி-வ-உ.) ஒருபொருளினை யொருவர்க்குத் தாமே தருந்தாக நின்று விரும்பித் தருதற்கு உரியாரைத் தம்வலியால் தந்தவராக நினைத்தல் முறைமையன்றே, ஆதலால், அவ்வருளாற் பெறும் பேரின்பத்திற்கு அப்பெற்றியினை யடையாநிற்கும் இவன்யார். எ-று.

இவை யிரண்டுபாட்டானும் பேரின்பமாவது அருளாலே யன்றிக் கரணங்களோடு கூடியும் தனித்தும் உயிர்களால் அடையப்படாதென்பது கூறப்பட்டது. (௭௰)

உயிர்விளக்க முற்றிற்று.



# அ-வது: இன்புறுநிலை.



ஆவதாவது, ஆன்மலாபமடையு முறைமை.

ஆன்மசுத்தி கூறிப் பின்னரதனாலெய்தும் பயன்கூறினா மையின் மேலையதிகாரத்தினோடு இதற்கியை புண்மையறிக.

இன்ப மடைத லெவ்வா றென்னில்?

இன்புறுவார் துன்புறுவா ரிருளி னெழுஞ்சுடரின்
பின்புகுவார் முன்புகுவார் பின்.

| | |
|---|---|
| (எ-து.) இன்புறுவார் | இன்பத்தைப் பொருந்துகிறவர்கள் சிலர் |
| துன்புறுவார் | துன்பத்தைப் பொருந்துகிறவர்கள் சிலர் |
| இருளினெழுஞ்சுடரின் | அந்தகாரமாகிய விருளிலே விளக்கைப் பிடித்து முன்னிட்டுப் போனவர்கள் நினைத்த பதார்த்தத்தை யெடுப்பார்கள். விளக்கைப் பின்னிட்டுப் போனவர்கள் அந்தப் பதார்த்தத்தை யெடுக்கமாட்டார்கள். இந்தமுறைமையைப்போல |
| பின்புகுவார் முன்புகுவார் பின். | ஆன்மா அருளை முன்னிட்டுக் கொண்டு நிற்கவே ஞேயத்தைப் பொருந்துவன். அருளைப் பின்னிட்டு நின்றவர்கள் ஆணவமலத்திலே யழுந்துவார்கள். எ-று. |

(தி-வ-உ.) முன்னர் ஞானத்தினைப் பின்னிட்டுத் தாமதற்கு முன்செல்வாராகில் துன்புறுவரே, பின்னர் மிக்கஞானவினைச்செய்யு மலவிருளிலே நின்று மெழுந்த ஞானவிளக்

கினை முன்னிட்டுத் தாமதன்பின் செல்வாராகில் பேரின்பத்தினை யடைவார். எ-று.

அன்பலின்ப மடைதற்குக்காரண ஞானத்திற்கு முன்பின் சேறலாயிற்று. கட்டுற்று நின்றவர்க்கும் விட்டடையடையவர்க்குந் தம்முள் வேற்றுமை யிதுவென்பது மாம்.

இதனாற் பேரின்பத்தை யெய்துவா ரிவரென்பது கூறப்பட்டது. (௬)

அருளைபோதாதோ, அதற்குமேலாகிய ஞேயமேனெனின்?

இருவர் மடந்தையருக் கென்பயனின் புண்டா
மொருவ னொருத்தி யுறின்.

| | |
|---|---|
| (எ-அ.) இருவர் மடந்தையருக் கென்பயன் | இரண்டு ஸ்திரிகளுங் கூடுனு லின்பமில்லை |
| இன் புண்டாமொருவ னொருத்தி யுறின். | ஒருவனு மொருத்தியுங் கூடுனு லின்பமுண்டு. அதுபோலஞான ஞேயத்தைக் கூடுமிடத்துப் பேரின்பமாகிய மோக்ஷமுண்டாம். எ-று. |

(வி-வ-உ.) இரண்டுபேர் மகளிர்க்குத் தம்புணர்ச்சியால் வரும்பயனென்னை? ஓர் புருடனு மோர் மகளுந் தம்மிற் புணர்வராயினன்றே யின்பமுண்டாவது. எ-று.

உயிர்க்கும் அருட்கு முதலாயஞேயம் வெளிப்படினல்லது இன்பமுண்டாகா தென்பதுபொருள். ஒருவனொருத்தியென்னும் உவமம் தலைமையும் தன்மையும் பற்றிவந்தது. இதற்கிவ்வாறன்றி யுயிரினைப் பெண்ணியல்பினதாகவும் இறை

வினை யாணிமலப்பினதாகவும் அறிவில்லார் கூறுமது பொருளன்று, அன்னாரியற்கை அசேதன வடிவிற்கல்லது சேதனவடிவிற்கின்றாதலான்.

இதனாற் பேரின்பத்தினை யெய்து மெல்லை கூறப்பட்டது. (௨)

ஆன்மா ஞேயத்தைக் கூடியிடத்து இவனுலே ஞேயத்துக்கின்பமுண்டோவென்னில்?

இன்பதனை யெய்துவார்க் கீயு மவர்க்குரிய
வின்பனா மாதலினால்.

(எ-து.) இன் — இன்பத்தைப் பெறுவோருமென்றயர்க்க
பதனை யெய்து — ருக்குச் சிவன் கொடுப்பர்
வார்க்கீயும்

அவர்க்குரிய — அந்த சிவனுக்குப் பேரின்பமே சொரூப
மின்பனா மாத — மானகையினாலே இன்ப மொருவர் கொடுக்
லினால். — கவேண்டுவதில்லை. எ-று

(தி-வ-உ.) தன்னை வந்தடையுமவர்க்குப் பேரின்பத்தினை வழங்கும் அவ்விறைவன் தனக்கு வடிவம் ஆனந்தமயமாதலால், தான் தன்னை நுகர்வதில்லை. எ-று.

அநாதியே யாணவமலத்தால் மறைப்புண்டு அநாதிக்கி யிப்பொழுது நவமாகவந்ததுபோலக் கருதுமுயிர்கள்போலாது, இறைவன் அநாதிமலமுத்தனாதலான் அவர்க்கில்லையென்றருளிச் செய்தார். புதிதாக வந்ததன்றென்பது கருத்து.

இதனால் உயிர்களுக்குக் கொடுப்பதன்றி யிறைவன் தானுமவ்வின்பத்தினை நுகர்வனோவென்னுஞ் சங்கையினை யகற்றிக் கூறப்பட்டது. (௩)

அந்நியமாயிருந் தவ்வின்ப மநுமவிப்பதோ வென்னில்?

தாடலைபோற் கூடியவை தானிகழா வேற்றின்பக்
கூடலைநீ யேகமெனக் கொள்.

(எ-து.) தாட   ளவ்வுந் தவ்வுந் தோன்றாமை டவ்வா
லைபோற்கூடிய   ய் நின்றதுபோல
வை
தானிகழா   தற்போதம் ஜீவியாதவிடத்திலே விள
வேற்றின்பக்கூ   ங்கப்பட்ட பேரின்பத்தை
டலை
நீயேக மென   நீயொன்றென்றே யறிவாயாக. எ-று.
க்கொள்.

(நி-வ-உ.) தாளுந்தலையுமென்னுஞ் சொல்லிரண்டுந் தம்பொருள் பிரிந்து தோன்றாது பொருந்தியவாறுபோல், புணர்ச்சிக்க ணொருகாலு முண்டாகாத வேற்றுமையினையு மின்பத்தினையுமுடைய கலப்பினை யிறைவனோ டொன்றுதலெனக்கொள்வாயாக மாணவகனே! எ-று.

அச்சொற்கள் ஓரொருகாற் பிரிதலும், புணர்வாற் றம்பெரும்பயனின்மையுங் கருதி, இவை யன்னவல்லவென்பதற்கு நிகழாவேற்றின்பக் கூடலென் றருளிச்செய்தார். தாளுந்தலையு மென்னுஞ் சொற்களாற் கூறியது, உயிரினது தாழ்வு மிறைவனது உயர்வுங் காட்டுதற்காம்.

இதனால் ஞேயத்தழுந்தி யொன்றுபட்டுநிற்குநிலை கூறப்பட்டது. (அ)

பின்னம் ஏகம்பெறு என்னில்?

ஒன்றாலு மொன்று திரண்டாலு மோசையெழா
தொன்றாலு மோரிரண்டு மில்.

| | |
|---|---|
| (எ-து.) ஒன்றுமொன்று | ஆன்மாவுஞ் சிவனு மொன்றென்று சொல்லுவாயென்னில் அப்பொழுது பெறுவானும் பேறுமில்லை. |
| இரண்டாலு மோசையெழாதென்றலும் | ஆன்மாவுஞ் சிவனு மிரண்டென்றுசொல்லுவாயென்னில் ஆன்மாவுஞ் சிவனு மேகத்வமாகிய சாயுச்ய மில்லையென்றும். இப்படியாகையினால் |
| ஒரிரண்டிமில். | அத்விதாத்துவிதமு மில்லை. எ-று. |

(நி-வ-உ.) இறைவனையு முயிரினையு மொன்றென்போமாயினும் பின்னர்ப் பொருந்தவேண்டுவதில்லை. இரண்டென்போமாயினுந் தம்முட்டாக்கிய வொலியெழுதலைச் செய்யாது. ஆதலா லொருபொருளுமல்ல விரண்டாவது மில்லை. எ-று.

இதனாலிறைவனையும் உயிரினையு மேகமென்பாரையு மிரண்டென்பாரையு மறுத்து அத்துவிதங் கூறப்பட்டது. அத்துவிதமாவது தம்மிற் கலப்பா லநந்நியமா யிருத்தல். (ரு)

கூடிப்பொருந்துங் கொள்கை யாதா மென்னில்?

**உற்றாரும் பெற்றாரு மோவா துரையொழியப்**
**பற்றாரு மற்றுப் பவம்.**

| | |
|---|---|
| (எ-து.) உற்றாரும் | அந்தப் பொருளைப் பொருந்தினேனென்கிறவர்களும் |
| பெற்றாரும் | அந்தப்பொருளைப் பெற்றேனென்கிறவர்களும் |
| ஓவாது | கூடாது. |
| உரையொழிய | இந்த விரண்டுவசனமு நீங்க |

| | |
|---|---|
| பற்றுரும் | இந்தப்பற்றுக்க ளற்றவரே |
| அற்றார்பவம். | ஜநநமரணங்களைநீங்கி நிட்டையைப் பொருந்தின நாதாக்கள். எ-று. |

(நி-வ-உ.) பேரின்பமாகிய முத்தியினை யடைந்தாரும், அதற்குநேரே காரணமாகிய சமாதியை யடைந்தாரும், மெய்ப்பொருளினை யொருகாலு நீங்குதல் செய்யார். அவ்வாறு வாக்கிறக்கும்படி அதனைப்பற்றி நில்லாதாரும் பிறப்பினையற்றவர். எ-று.

உரையொழியப்பற்று ரென்றதனால் கேட்டல் சிந்தித்தல் தெளிதலாகிய நிலையின்கண் நிற்பரென்பதாம். பிறப்பற்றுரென்பது பதமுத்திகளை யடைவாரென்பது கருத்து.

இதனால் வீட்டினையடைவாரது வகைமை கூறப்பட்டது.

உரை யொழியப்பெற்ற தென்போல வென்னில்?

பேயொன்றுந் தன்மை பிறக்கு மளவுமே
நீயொன்றுஞ் செய்யாம னில்.

| | |
|---|---|
| (எ - து.) பேயொன்றுந் தன்மை பிறக்குமளவும் | பேய்பிடியுண்டவன் முறைமை வருமளவும் |
| நீ யொன்றுஞ் செய்யாமனில். | உனக்கந்தச்சிவாநுபூதி பிறக்குமளவு மான்மபோதம் நீவியாம லப்பொருளிலே நிற்பாயாக. எ-று. |

(நி-வ-உ.) பேய் பிடியுண்டோரது தன்மை யுனக்குண்டாமளவு நீ மேல் யாதொரு செயலுஞ்செய்யா தசைவறநிற்பாயாக.

பேய்பிடியுண்டாரது செயலெல்லாம் பேயின் செயலாமாறு போல வுன்செயலனைத்தும் இறைவன் செயலாமளவு மென்பது கருத்து. பின்னரச்சாதனை யின்றென்பதாம். இனியென்றதனான்

முன்னர்ச் செய்யவேண்டுவனவனைத்துஞ் செய்து முற்றியதென்பதூஉம் பின்னிலைக்குச் செயலின்மையே வேண்டுவதென்பதூஉங் கண்டுகொள்க.

இதனாற் சமாதிசெய்வோர்க் கதுமுதிர்ந்து கைவருமாறு கூறப்பட்டது. (எ)

பொருள்பெறுவார் செயல்போவ தென்போல வென்னில்?

ஒண்பொருட்க ணூற்றுறு முறுபயனே யல்லாது
கண்படுப்போர் கைப்பொருள்போற் காண்.

| | |
|---|---|
| (எ-து.) ஒண்பொருட்க ணூற்றார்க்கு | ஞேயத்தைப் பொருந்தின ஞாதாக்களுக்கு |
| உறுபயனே யல்லாது | ஞேயமொன்றுமே யல்லாமல் மற்றக்கிரியைகள் செய்வாரோ வென்னில்? |
| கண்படுப்போர் கைப்பொருள்போற்காண். | நித்திரை பண்ணினவன் கையிற் பதார்த்தம் விழுந்தது தெரியாததுபோல. எ-று. |

(தி-வ-உ.) ஒள்ளியதாய மெய்ப்பொருளினது எல்லையைத் தலைப்பட்டார்க் கவ்விடத்தேயும் பேரின்பமேயன்றி மற்றுள்ள யோகமுதலிய தொழில்களியாவும் உறங்குவோர் கையிற் பண்டம்போல மெல்லெனத் தன்வயற்றிலே நீங்குவதாகவறிக. எ-று. தாமே வலிதுநீப்ப தன்றென்பதாம்.

இதனால் ஸைவர்சமயாசாரம் நீங்கு முறைமை கூறப்பட்டது.

கூடியது கூறலாமோ வென்னில்?

மூன்றாய தன்மையவர் தம்மின் மிகமுயங்கித்
தோன்றாத வின்பமதென் சொல்.

| | |
|---|---|
| (எ-து.) மூன்றாய தன்மை | ஞாதுரு ஞான ஞேயந் தோன்றாத விடத்திலே |
| அவர் தம்மின் மிகமூழ்கி | அந்தச் சிவனிடத்திலே மிகுதியும் பிரியப்பட்டு |
| தோன்றாத வின்பமென்சொல். | ஆன்மபோதத்தாலே யறியப்படாத பேரின்பத்தைச் சொல்லப்படாது. எ-று. |

(வி-வ-உ.) ஞாதுரு ஞான ஞேயமென்னு மூன்றுவகைப் பட்ட தன்மையுஞ் சிவஜீவபாவங்க ளிரண்டுந் தம்மின் மிகவுங் கூடியகலப்பினாற் றோன்றுதலைச் செய்யாத வின்பமவ்விடத்து வார்த்தையாறு. எ-று.

இதனா லவ்வானந்த மிகுதியின் அதிசயங் கூறப்பட்டது.

எவ்வா றப்பொரு ளெய்துவதென்னில் ?

இன்பி னினிதென்ற லின்புண்டே லின்புண்டா
மன்பு நிலையே யது.

| | |
|---|---|
| (எ-து.) இன்பி னினிதென்றல் | எல்லா வின்பத்துக்கு மேலானதென்கிற பேரின்பம் |
| இன்புண்டே லின்புண்டாம் | அந்தப் பேரின்பத்திலே இச்சையுண்டான வந்நேரமே யன்புநிலையுண்டாம் |
| அன்பு நிலையே யது. | குருலிங்க சங்கமத்திலே பத்தியுண்டாகவே பேரின்பம் விளங்கிநிற்கும். எ-று. |

(வி-வ-உ.) எல்லாவின்பங்களினு மினிமையுடைத்தென்று சிறப்பித்துச் சொல்லப்படும் பேரின்பமாவ தொருவற் கன்பெ ன்ப திப்பொழு துண்டாயி னிப்பொழுதே யுளதாம், அது மிக்க வன்பினது நிலையே தனக்கு நிலையாக வுடையதாகலான். எ-று.

இன்பென்ற பொதுமையா லமிர்தநுகர்ச்சி முதலாயின வெல்லா மடங்கும்.

ஏகாரந் தேற்றம்.

இதனு லன்புடையார்க் கப்பேரின்ப மெளிதினி னெய்து மென்பது கூறப்பட்டது. (௧௦)

இன்புறுநிலை முற்றிற்று.

---

## கூ-வது, ஐந்தெழுத் தருணிலை.

அஃதாவது, ஐவகைப்பட்ட திருவெழுத்தாகிய அருளினது முறைமை.

இதனையு மோர்திருவருளாகக் கூறியருளினார் வீட்டுநெறி காட்டுதலால்; அவ்வாறே சமாதியினை யடைதல்கூடாதார்க் கிதனை விதிப்படியோதவே யந்நிலை கூடுமாதலின் மேலை யதிகாரத்திற் றியைபுடைத்தெனக் கொள்க.

உரையிறந்தவின்பங் கூடாதாயின் மேலொருபாய மருளிச் செய்கிறார்.

அருணூலு மாரணமு மல்லாது மைந்தின்
பொருணூ றெரியப் புகும்.

| | |
|---|---|
| (எ-று) அருணூலு மாரணமு மல்லாதும் | கிருபையுடனே கர்த்தா வருளிச்செய்த விருபத்தெட்டாகமமும் நான்குவேதமும் இவைகளல்லாமற் சொல்லப்பட்ட பலசாத்திரங்களுமென்னத்தைச் சொல்லுமெனில் |

ஐந்தின் பொ    பஞ்சாக்ஷரத்தி னுண்மையைச் சொல்லவ
ருளு தெரிபப்பு ந்த நூல். எ-று.
கும்.

(வி-வ-உ.) சைவாகமங்களினது கருத்தினையும், வேதங்க ளினது கருத்தினையும், இவை யிரண்டுமல்லாத பலகலைகளினது கருத்தினையும் கற்றுவல்லோரா ராயப் புகுவாராயின்; அவையெ ல்லாந் திருவெழுத் தைந்தின் பொருளாகிய பதி பசு பாசங்க ளைச் சொல்லு நூல்களாம் எ-று.

இதனு லெல்லா நூற்பொருள்களும் இவ்வைந்தெழுத்தினு ள்ளே யடங்குமென்பது கூறப்பட்டது. (க)

இந்தப் பஞ்சாக்ஷர மென்னதைச் சொல்லுமென்னில்?

இறைசத்தி பாச மெழின்மாயை யாவி
யுறநிற்கு மோங்காரத் துள்.

(எ-று.) இறை கத்தாவும்
சத்தி திருவருளும்
பாசம் ஆணவமலமும்
எழின்மாயை விளக்கமான திரோதானமும்
ஆவி ஆன்மாவும்
உறநிற்கு மோ பிரணவத்திலே நிற்கும். எ-று.
ங்காரத்துள்.

(வி-வ-உ.) சிவனும் சத்தியும் ஆணவமும் அழகுடைத்தா ய மாயையும் ஆன்மாவும் ஆகிய ஐந்தும், ஐந்தெழுத்தோரெழுத் தாகிய பிரணவத்தினுள்ளே யமைந்துநிற்கும். எ-று.

இதனுல் பிரணவமென்று பேர்பெற்றுநிற்கு முண்ணியவை ந்தெழுத்தின தியல்பு கூறப்பட்டது. (உ)

இந்தப் பஞ்சாக்ஷரம் நிற்குந்தான மெங்ஙனே யென்னில்?

ஊன நடன மொருபா லொருபாலா
ஞான நடந் தானடுவே நாடு.

| | |
|---|---|
| (எ-து.) ஊன நடன மொருபால் | மலமுந் திரோதமு மொருபக்கலாகவும் |
| ஒருபாலா ஞான நடம் | அருளுஞ் சிவமு மொருபக்கலாகவும் |
| தானடுவே நாடு. | ஆன்மா விந்தவிரண்டுக்கு நடுவேயுநிற்பன் அறிவாயாக. |

(நி-வ-உ.) பிறப்பினை விளைக்கு நகார மகாரங்களாகிய கூத் தொரு மருங்காகவும், வீட்டினை யுதவுஞ் சிகார வகாரங்களாகிய கூத்தொருமருங்காகவும், யகாரமாகிய ஆன்மா இவ்விருவகைக் கு நடுப்பட்ட தொன்றாகவும், விசாரித்தறிவாயாக. எ-று.

கூத்தென்றது உயிர்களைப் பெத்தமுத்திகளி லுய்த்து நடத் துதலை.

இதனு லைந்தெழுத்தின் பொருளியல்பு கூறப்பட்டது. (௩)

இந்தப்பஞ்சாக்ஷர மிருக்கையினாலே யான்மா ஞேயத்தைப் பெறுமலிருப்பா னேனென்னில்?

விரியமன மேவியவ்வை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரிற் பெறும்.

| | |
|---|---|
| (எ-து.) விரிய மனமேவி | மன்மானது பிரபஞ்சத்திலே விரிந்துபொருந்தி |
| யவ்வைமீளவிடா | யவ்வாகிய வான்மாவை யருளினாலே திருப்பாதபடி பண்ணுவிக்கும் |

| | |
|---|---|
| சித்தம் பெரிய வினை தீரிற்பெறும். | ஆன்மாவுக்கு மகத்தாகிய புண்ணியபாவ மிரண்டுந் துலையொத்த விடத்திற் பேரின்பமாகிய மோக்ஷமுண்டாம். எ-று. |

(நி-வ-உ.) மகார நகாரமாகிய மலமுந் திரோதமு மிகவு மிறுகப்புணர்ந்து யகாரமாகிய வுயிர்களைத் திரும்பவிடா; அவ்வுயிர்கள் தம்பெரிய பிணியாகிய மலவிருள்தீருங்கால் சிகாரமாகிய சிவத்தினை யடையும். எ-று.

மலந்திரவே திரோதந் தானே நீங்குமென்பதாம். வினை என்பது ஈண்டுப் பிணியென்னும் பொருள் தந்துநின்றது.

இதனாற் கட்டுவீடென்று மிரண்டும் ஐந்தெழுத்தினானே யமையுமென்பது கூறப்பட்டது. (௮)

இந்தப் பஞ்சாக்ஷர மிருக்கையிலே யாணவமல நீங்காம லிருப்பானேனென்னில்?

மாலார் திரோத மலமுதலாய் மாறுமோ
மேலாசி மீளா விடின்.

| | |
|---|---|
| (எ - று.) மாலார் திரோதமல முதலாய் மாறுமோ | மயக்கமாகிய நகார முன்னாக ஜபித்தால் மலநீங்காது. ஆனால் நீங்குகிற முறைமை யெப்படியென்னில்? |
| மேலாசி மீளா விடின். | ஆணவமலத்தைக் கீழ்ப்படுத்தி நகாரமேற்படச் சிகாரமுன்னாய் மாறி ஜபிக்கின் மோக்ஷமாம். எ-று. |

(நி-வ-உ.) மயக்கத்தினைப் பொருந்திய திரோதானமு மலமுமாகிய நகார மகாரம் இரண்டும் ஆதிக்கண்ணதாக வுச்சரிக்கில், அவைகள் நீங்குமோ; இவற்றைக் கீழாக்கிச் சிவமாகியசிகார மேலாம்வண்ணமாற்றி யுச்சரியாதொழியின். எ-று.

இதனால் நகார மகாரங்களை முதலாக வுச்சரித்து வழங்குவது விட்டினையடைவோர்க் காகாதென்பது கூறப்பட்டது. (௯)

பஞ்சாக்ஷரத்தை ஜபித்த பேர்க்கு மலநீங்குமோ வென்னில்?

ஆராதி யாதார மந்தோ வதுமீண்டு
பாராது மேலோதும் பற்று.

(எ-து.) ஆராதி — ஆராதனை பண்ணுவாய்

ஆதாரம் — நமக்காதாரஞ் சிவனென் றறியாமலிருப்பதற்கு

அந்தோ — ஐயோ

அதுமீண்டு பாராது மேலோதும்பற்று. — இப்படிச் சிகாரமுன்னாக ஜபித்தால் மலமுந் திரோதமு மிவனை வந்துபொருந்தாது. எ-று.

(தி-வ-உ.) தமக்காதாரமாக வெண்ணியவ்வாறுச்சரித்தலால் வரும்பழுதினைத் திருப்பிவிசாரியாம லந்தோ நகார மகாரங்களை மேலாகவுச்சரிக்கும் விருப்பம். எ-று.

இதனா லவ்வாறோதுவார் அன்னையின்றித் துன்புறுதற் கிரங்கிக் கூறப்பட்டது. (௰)

இந்தப் பஞ்சாக்ஷரத்தை ஜபிக்கிறதெனனில்?

சிவமுதலே யாமாறு சேருமேற் றீரும்
பவமிதுநீ யோதும் படி.

(எ-து.) சிவமுதலே யாமாறு சேருமேல் — இப்படிச் சிகாரமுன்னாக ஜபித்தாயானால்

| | |
|---|---|
| திரும்பவும் | ஜநநமு நீங்கும் |
| இதநியோது | இதநி ஜபிக்கப்பட்ட முறைமை. எ-று. |

ம்படி. (எ)

(நி-வ-உ) சிகார வகாரமென்று யிரண்டு மாதிக்கண்ணே யாம்வண்ண முச்சரித்தல் கூடுமாயின், அந்நிலையே யுனாறு பிறவித்துன்பநீங்கும், மாணவகனே! விட்டினைக்கா முற்றநீ யுச்சரிக்கு முறைமை யிது. எ-று.

இதனால் முத்தரோதுமாறு கூறப்பட்டது.

இப்படி ஜபிக்கப்பட்ட வான்மாக்களுக்குப் பிரயோசன மெதென்னில்?

வாசி யருளியதை வாழ்விக்கு மற்றதுவே
யாசி லுருவுமா மங்கு.

| | |
|---|---|
| (எ-து.) வாசி | வகாரமாகிய திருவருள் யகாரமாகிய |
| யருளியதை வா | வான்மாவை சிகாரமாகிய சிவத்திலே |
| ழ்விக்கும் | சொரித்துப் பேரின்பமாகிய சுகத்தையுண்டாக்கும் |
| மற்றதுவே | அந்தத்திருவருள்தானே குற்றமில்லாத |
| யாசி லுருவுமு | திருமேனியாயிருக்கும் அந்த வான்மாவுக் |
| மாமங்கு. | கு. எ-று. |

(நி-வ-உ.) அவ்வாறுச்சரிக்குங்கால், வகாரமாகியவருள் சிகாரமாகிய சிவத்தினைக் காட்டி யகாரமாகிய வுயிரினை விட்டின்பத்திலே யிருத்தும். அன்றியும் அவ்வருளே யந்தச் சிவத்திற்குக் குற்றந்தீர்ந்த திருமேனியாயிருப்பது. எ-று.

இதனாற் றிருவெழுத்தைந்தில் வகாரமாகிய வருளின தன்மை வருத்தூக் கூறப்பட்டது. (அ)

அந்தவான்மா மோக்ஷத்திலேயிருப்ப தெப்படி யென்னில் ?

ஆசினவா நாப்ப ணடையா தருளினால்
வாசியிடை நிற்கை வழக்கு.

(எ-து.) ஆசி குற்றத்தைப் பொருந்திய நகாரத்திலு
னவா நாப்பண மகாரத்திலும் பொருந்தாமல்
டையாது
அருளினால் ஆசாரியனுடைய கிருபையினால்
வாசியிடை நி அருளுக்குஞ் சிவத்துக்கு நடுவே நிற்கிற
ற்கைவழக்கு. தே முறைமை. எ-று.

(நி-வ-உ.) குற்றந்தீர்ந்த திரோதானமும் அருளுமாகிய நகார வகாரங்கட்கு நடுப்பட்டு நில்லாது வகாரமாகிய வருளினாலே யகாரமாகிய வுயிர் அவ்வகாரத்திற்குஞ் சிவமாகிய சிகாரத்திற்கு நடுப்பட்டுநிற்பது முறைமை. எ-று.

அவ்வா றதற்கெழுத்துக்களைமாறி யுச்சரிப்பது குருமுகத்தாற் றெளிந்து கொள்க. ஆன்மாவை மறைக்கும் பாசங்களைச் செலுத்துவதன்றி திரோதானசத்தி தானுகமறையாதென்பதற்கு ஆசினவென் றருளிச்செய்தார்.

இதனாற் றிருவெழுத்தினைக் கூறிய முறைமையினேனு வோரடைந்துநிற்கு நிலை கூறப்பட்டது. (க)

ஆசினவா என்பதற்கிருவகை யுரையாசிரியர் கூறிய பேதங்களை யூகித்தறிக.

மோக்ஷத்திலே யிருப்பதற்குப் பிரத்தியக்ஷ முண்டோ வென்னில்?

எல்லா வகையு மியம்பு மிவனகன்று
நில்லா வகையை நினைந்து.

(எ-று) எல் வேதாகமங்களெல்லாஞ் சொல்லுகிற
லாவகையுமிய தேதென்னில்
ம்பும்

இயனகன்று ஆன்மா சிவசத்தியினை விட்டு நீங்காத
நில்லாவகையை முறைமையைச் சொல்லும். எ-று.
நினைந்து.

(பி-வ-உ.) எவ்வகைப்பட்ட வுபாயங்களினையு நால்க
ளுரைக்கும், இவ்வாறுன்மாவானவன் சிவசத்தியினை நீங்கி
நில்லா நுட்டுறுயநிற்குந் திறத்தினைக் கருதி. எ-று.

இதனு லறியுநெறிமுதல் இவ்வதிகாரமீறுள நான்கதி
காரத்தினது கருத்துந் தொகுத்துக் கூறப்பட்டது. (க0)

ஐந்தெழுத்தருணிலை முற்றிற்று.



# ௰-வது, அணைந்தோர்தன்மை.



அஃதாவது, இவ்வகைப்பட்ட சமாதியினை யடைந்தோ
ரது தன்மை.

மேலையதிகாரங்களாற் சமாதிகூடுமுறைமை கூறியது.
கூடினோரது தன்மை யிதனாற் கூறுதலின், அவற்றோடிதற்
கியையுடைத்தெனக் கொள்க.

ஞேயத்தை விட்டுநீங்காத ஞாதாக்களினை யென்னென்
னில்?

ஒன்றுணர்வி னுள்ளொடுங்கி யுள்ளத்து ளின்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல். [த்

போகநுகர் போகத்தைக் கொடுக்கத்தக்க கொடுவெந்தொழிலும் தாகிய ஸ்வர்க்காதி பதங்களையும்
மேவார்மிக. மிகவும் பொருந்தார்கள். எ-று.

(தி-வ உ.) பரமசிவனாற் செய்யப்படும் படைப்பு நிலையீறு மறைப்பு அருளென்னு மைந்தொழில்களையு மொருங்கே செய்தலும், அயன் மால் உருத்திரன் மகேசன் சதாசிவனென்னு மிவரிலொருவர்க்கு மோரோரொரு தொழிலைச்செய்தலும், மாயாபோகத்தினையருந்தும் பிறப்பிற்கேதுவாகிய வெய்யதொழிலினைச் செய்தலுஞ் சிறிதும்பொருந்தாரவர். எ-று.

அசஞ்சலமாயகண்டமா யொழிவற நிறைந்த ஞானவடிவினராய் நின்றும் பரமானந்தத்தினை யனுபவித்திருக்குமொன்றிற்குமே யுரியாரென்பது கருத்து.

மிகவென்பது குறிப்பு மொழியாய்ச் சிறிதுமெனனும் பொருள் விளங்கநின்றது. "உயிர்தானுஞ் சிவாநுபவமொன்றினுக்கு முரித்தே" என்றருளிச் செய்தவாறு காண்க.

இதனாலவர் மற்றொருதொழிற்கு முரியாரல்லரென்பது கூறப்பட்டது. (உ)

சர்வஞ்யத்வாதி குணங்கள் வந்து பொருந்திருமோவ வென்னில்?

எல்லா மறியு மறிவுறினு மீங்கிவரொன்
றல்லா தறியா ரற.

(எ-து.) எல் சர்வஞ்யத்வாதி குணங்கள்வந்து பொலா மறியு மறிவு ருந்தினாலும்
றினும்

ஈங்கு இவ்விடத்திலே
இவர் இந்நாதாக்கள்

ஒன் றல்லாத ஞேயமொன்றுமே யல்லது மற்றொன்
றியாரற. றையும் பொருந்தி யறியமாட்டார்கள்.

(தி-வ-உ.) இயல்பினுன் முழுவதூஉ முணருஞானமானா து வெளிப்படுத் தம்மை யிரண்டறக் கலந்து நிற்பினு மிவ் விடத் திருந்த ஜீவன்முத்தரானவ ரானந்த ஞானமொன்று மேயன்றிப் பிறிதொரு பொருளினையுஞ் சிறிதுமறிதல் செய் யார். எ-று.

அற என்பது மிகவென்பது போலக் குறிப்புமொழியா யின்றது.

ஜீவன்முத்தர் சிவமொன்றுமே யன்றிப் பிறிதொன்று மறியாராகவே பரமுத்தருமவ்வாறுதல் கூறவேண்டாவா யிற்று. இதனுலவர்பிறிதொன்றுமறியா தெவ்விடத்துஞ் சிவமே கண்டிருத்தல் கூறப்பட்டது. "பரஞானத்தால்" என்பதனுள் "ஜீவன்முத்தர் பரமே பார்த்திருப்பார்" என்ற ருளிச்செய்தவாறு காண்க. (௯)

இப்படிக்கொத்த ஞாதாக்களை விடயங்கள் வந்துபொருந்துறதோ வென்னில் ?

புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவர் போதார்
தலநடக்கு மாமை தக.

(எ-து,) புல விடயங்கள்வந்து பொருந்தினாலுந் தமக்
னடக்கித்தம்மு குப் பிரானாகிய ஞேயத்திலே யடங்கி
தற்கட் புக்குறு ற்பார்கள்
வர்
போதார் ஒருவிடயத்திலுஞ் சாரிந்துப் புகார்
கள். அதென்போல வென்னில் ?

நிலநடக்கு மாமைதக. — பூமியிலே நடக்கப்பட்ட வாமையானது ஆரவாரமில்லாத விடத்திலே நடக்கும், ஆரவாரமுள்ள விடத்திலே யடக்கும் அதுபோல. எ-று.

(நி-வ-உ) ஓர்விடய மெதிரிடுங்கால் அதற்கஞ்சி யதன் மேற்செல்லுந் தம்முணர்வினை மாற்றித் தமதுமுதலாகிய ஞேயத்தினிடத்திலே புக்குப்பொருந்தி மறித்தடங்குதல் செய்யார், அவர்பூமியின்கண்ணே நடந்துசெல்லுங்காலொருவ ரெதிர்ப்படி னவரையஞ்சித் தன்றலையினைச்சுரித் துள்ளே வாங்கி யசைவறக்கிடக்கு மாமையினை யொப்ப. எ-று.

ஆமை பின்ன ரெதிர்ந்தோரகலுங்காற் றன்றலையினை வெளிப்படுத்திச் செல்லும். அதுபோலிவர் விரைவிற் றிரிபுபடாமையிற் போதாரென் றருளிச்செய்தார்.

இதனா லவர்புலனுணர்வுக்கஞ்சி யகலுமாறு கூறப்பட்டது. (௭)

அப்படிச்சிலர் ஞேயத்தைவிட்டு நீங்கியிருப்பார்களோவெனின்?

அவனையகன் றெங்கின்று மாங்கவனு மெங்கு
மிவனையொழிந் துண்டாத லில்.

(எ-இ.) அவனையகன் றெங்கின்று மாங்கவனாய் — அந்தச்சிவனை விட்டுநீங்கி யான்மாவுக் கிருக்க விடமில்லை. அந்தச்சிவன்றானாய்

எங்கும் — ஜடசித்துக்களெல்லாவற்றினு நிற்கும்.

இவனையொழிந் துண்டாதலில். — இந்தச்சிவனை யல்லா தான்மா நில்லாது. எ-று.

(நி-கூ-உ.) இறைவனைநீங்கி யெவ்வுலகமு நிற்பதில்லை, அது போல விறைவனுதலடைந்த விம்முத்தான்மாவையன்றி யெவ்விடமு முளதாய் நிற்றலில்லை. எ-று.

இவனு மிறைவனைப்போல வியாபகனாய் நிற்குமென்பதாம். “ சாயங்கழிந்தக்கா லெங்குமாய்க் கருத்தாப்போல் நிற்பன் ” என்றருளிச்செய்தவாறு காண்க.

இதனு லவர் சிற்றறிவுநீங்கிப் பேரறிவுடையரென்பது கூறப்பட்டது. (ரு)

ஆனால் அந்தப்பொருளை யுள்ளே கண்டிருப்பார்களோ புறம்பே கண்டிருப்பார்களோ வென்னில்?

உள்ளும் புறம்பு மொருதன்மைக் காட்சியருக்
கெள்ளுந் திறமேது மில்.

| | |
|---|---|
| (எ-து.) உள்ளும் புறம்பும் | அந்தரங்கத்திலே யறிவாய் விளங்கி யிருக்கப்பட்ட திருவருளையும், புறம்பே குருவாகித் திருமேனி கொண்டுவந்த வாசாரியரையும் |
| ஒரு தன்மைக் காட்சியருக்கு | ஒருபொருளென்று தரிசித்தவர்களுக்கு |
| எள்ளுந் திறமேதுமில். | உள்ளென்றும் புறம்பென்று நீக்க விடமில்லை, எ-று. |

(நி-வ-உ.) அகமும்புறமு மொருதன்மைத்தாய்நிற்கு ஞானத்தினை யடைந்தோருக் கொன்றினை யிகழ்ந்திடும்வண்ண மெவ்வாற்றானு மில்லை. எ-று.

இதனு லவர்க் கெல்லாப்பொருள்களு ஞானமாயே தோன்றுதல் கூறப்பட்டது.

(வேறு.) ஆனு லிந்திரியங்களினு லறியு மறிவாலுஞ் சிவனைத் தரிசிக்கலாமோவென்னில்? தனக்குப் பிராணனாய் நின்றுய

சரிக்கிற தன்மையையு மவனவ ளதுவாய்நின் றுபகரித்தும் பின் பாசாரிய மூர்த்தியாய் நின்று மிரக்ஷிக்கிற பூரணமான பொருளை விசுவமானது மறையும்படி யொருசீர்மையாகக் கண்டவர்களுக்குச் சிவனது திருவடியை நீக்குகைக்கு வழியில்லை. எ-று.

இது ஞானவான்கள் பிரபஞ்சம் தோன்றும விற்குமுறைமை யறிவித்தது. (௬)

ஆறு லிப்படி நீக்கமறநிற்கிற நாதாக்களுந் தொழிற்படுவார்களோ வென்னில்?

உறுந்தொழிற்குத் தக்க பயனுலகந் தத்தம்
வறுந்தொழிற்கு வாய்மை பயன்.

(எ-று.) உறு — உலகத்திலே யிருக்கப்பட்ட வான்மாக்கள்
ந்தொழிற்குத் த — செய்தவேலைக்குத்தக்க கூலிகொடுப்பார்கள்,
க்கபய னுலகந்த — அதுபோல
த்தம்
வருந்தொழிற் — தொழிலற்ற நாதாக்களுக்குச் சத்யமாகிய
கு வாய்மைபயன் — ஞேயமொன்றுமே பிரயோசனம். எ-று.

(நி-வு-உ.) தன்னையாற்றிய தலைவரைப் பின்றொடர்ந்து சூழும் யானெனதென்னுஞ் செருக்காற் செய்யப்பட்ட வினைக்கேற்ற பயனுவ துலகவாழ்க்கைகள்; செருக்கினைநீங்கித் தம்மை யிகழ்ந்தோர்செய்யுந் தானந் தவமுதலிய தொழிற்குவரும் பயனுவது திரிவில்லாத வீட்டின்பமே. எ-று.

தக்கபய னென்றதனால் பயன் பலவாயிற்று. வறுந்தொழிலென் றருளிச்செய்தார், தொடர்ந்து பயன் வழங்காமையின்.

இதனு லவரோர் தொழிலினைச் செய்யினும் பிறிதொருகாமியத்தினைக் கருதிச்செய்யாரென்பது கூறப்பட்டது.

(வேறு.) ஆனால் தொழிலாலுஞ் சிவனைக் கூடலாமோவெ ன்னில்? பிரபஞ்சத்திற் றத்தந்தொழிலுக்குத் தக்க பிரயோஜ னங்களிவர்களுக் குண்டாமாறுபோல வொன்றுஞ் செய்யாதசெ யலுக் கந்தவுண்மை பிரயோசனம். எ-று.

இந்த வுண்மையிலே நின்றவர்களுக் கொருசெயலுங் கூடா தென்ப தறிவித்தது. (எ)

பிராரத்தவம் புசிக்கச்செய்தே யாகாமிய மேறுமோ வெ ன்னில்?

ஏன்ற வினையுடலோ டேகுமிடை யேறும்வினை
தோன்றி லருளே சுடும்.

(எ-து.) ஏன் பிராரத்தம் தேகத்துடனேபோம், சஞ்சி
றவினை யுடலோ தம் நிஷ்டையிலேபோம்,
டேகும்
இடை யேறும் பிராரத்தம் புசிக்கச்செய்தே கட்டுப்படுகி
வினை தோன்றில றவாகாமியஞ் சிவஞானம் விளங்கவே நீங்
ருளேசுடும். கும். எ-று.

(சி-வ-உ.) பக்குவப்பட்டமைந்த வினையானது உடம்பிற் கமைந்த காலவரையறையிலே தொலையும், இடைப்பட்டகாலத் தில் வந்து பொருந்தும்வினைகளோவாயி னருளென்னு நெருப் பினாலே வெந்துபோம். எ-று.

சஞ்சிதம்நீங்காமல் ஞானம் வெளிப்படாது, வெளிப்படா தாகவே யாகாமியந் தீர்வதில்லை, அதனை யருளே சுடுமென்பத னாற் சஞ்சிதமு நீங்கிற்றென்பது தானே போதருமெனக் கொ ள்க. தோன்றிலென்பதனாலது தோன்றாதவண்ண மிடையறா தருளோடு நிற்பரென்பது கருத்து.

இதனாலவர்க்கு வினைத்தொடர்பின்றுமாறு கூறப்பட்டது.

(வேறு.) சஞ்சிதகன்மம் தீக்ஷையிலேபோம், பிராரத்தம் தேகத்துடனேபோம், ஆகாமியம் சிவஞானத்தினாலே சுடப்படும். எ-று.

இது ஞானவான்களுக் கொருகன்மமுமில்லை யென்றுமிட மறிவித்தது. (அ)

பரமுத்தி, சரீர நீங்கியோ வென்னில்?

மும்மை தரும்வினைகண் மூளாவா மூதறிவார்க்
கம்மையு மிம்மையே யாம்.

| | |
|---|---|
| (எ-து.) மும்மை தரும்வினைகண் மூளாவாம் | சஞ்சித பிராரத்த மாகாமியம் இந்த மூன்றுவினையும் பொருந்தாவாம். ஏன் பொருந்தா வென்னில்? |
| மூதறிவார்க்க ம்மையு மிம்மை யேயாம். | மேலாகிய சிவஞானத்தைப் பெற்ற நாதாக்க ளிச்சரீராந்தத்திலே பெறப்பட்ட பரமுத்தியுஞ் சரீர மிருக்கையிலேயாம். எ-று. |

(நி-ய-உ.) இம்மை யம்மை மறுமையென்று மூவகைப் பயனையுந் தரும் வினைகள் யாவுந்தொடரா, தம் மேலாய வறிவினையுடையார்க்கும் பிறந்தெய்துமின்பமு மதனோடு கூடிநிற்கவே யுளதாமாகலான். எ-று.

இம்மை யிப்பிறப்பு, அம்மை மேலுலகினை யடைதல், மறுமை மறித்து வரும்பிறப்பு. உடம்பிறந்தகாலத்து நிலைவேறுபடுதலின்மை நோக்கி யம்மையு மிம்மையேயாமென் றருளிச்செய்தார்.

இதனா லவர்க்குச் சிறிதும் வினைத்தொடர் பின்றென்பது வலியுறுத்தப்பட்டது.

(வேறு.) அந்தப் பிராரத்தம் புசிக்க வேண்டுமாயின், வாக்கு மனங் காயங்களி லுண்டானகன்ம மவர் சிவசம்பாவனையா

லே யவர்களைவாதியாது, பின்புண்டாஞ் சாயுச்சிய முமவர்களுக் கிப்பொழுதேயாம். எ-று.

இது ஜீவன்முத்தரான நிலையிலே தன்னிலே பரமுத்தியா மென்றறிவித்தது. (௯)

இவர்களுக் கான்மாக்களை யிரக்ஷிக்கவேணுமென்கிற கிருபையில்லையோ வென்னில்?

கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக.

| | |
|---|---|
| (எ-று.) கள்ளத்தலைவர் துயர்கருதி | கவட்டிந்திரியங்களுக்கு முதன்மையாயிருக்கிற வான்மாக்கள்படுகிற துன்பத்தைத் திருவுள்ளத்திலே நினைத்து |
| தங்கருணை வெள்ளத்தலைவர்மிக. | தமக்குக் கிருபையாகிய ஞான சமுத்திரத்திலே மிகுதியு மழுந்திநிற்பார்கள். எ-று. |

(நி-வ-உ.) யானெனதென்னும் வஞ்சகத்தலைமையினையுடைய வான்மாக்கள் படுந்துன்பத்தினை யெண்ணித் தம்மிடத்தெழுந்த கருணையாகிய கடலினுள்ளே மிகவு மலைதலைச் செய்வர். எ-று.

அலைத லிரக்கத்தாற் றளர்தல்.

இதனு லவர் வீட்டினை விரும்பாத வுயிர்கள்மாட் டிறைவன்போ லருளுடையராதல் கூறப்பட்டது.

(வே.மு.) ஆனால் ஞானவான்களுக்கு விடயங்களுடன் கூடிநிற்கலாமோ வென்னில்? இந்திரியங்களுடன் கூடிநின்றுண்டான கிலேசத்தையுணர்ந்து சிவனுடைய கிருபாசமுத்திரத்திலே விழுந்து தஞ்செயலற் றறுவதுவாய் விடுவார்கள். எ-று.

"மறையோன், கழுமலமுதுபதிக் கவுணியன் கட்டுரை" கழுமலமுதுபதிக் கவுணியனறியு, மனைடதன்மையை யாதலினின்னை, நினையவல்லவ ரில்லை நீணிலத்தே" என்றவாறு காண்க.

அணைந்தோர் தன்மை முற்றிற்று.

திருவருட்பயன் மூலமும் உரையும் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



எனக்குக்கிடைத்த நிரம்பவழகிய குரைப்பிரதிகளில் இவ்வதிகாரத்தில்-௬-வது செய்யுள் முதல்-௧0-வது செய்யுள்வரை உரை வேறுபட்டிருப்பதை யிருந்தவாறு அச்சிட்டிருக்கின்றனன்.

சிவமயம்.

# திருவருட்பயன்

## அதிகார விளக்கம்.

——o——

முற்றிற்று.

சிவமயம்.

# திருவருட்பயன்

## குறள்களின்கருத்து.

| | | |
|---|---|---|
| ௯—புன்செயலி | இறைவனருளா லான்மாவிற் கறிவைவிளக்குவது | ௫௬ |
| ௮—ஓராதே | ஞானத்தை யறியுநெறி | ௫௬ |
| ௯—களியே | ஞானத்தி லழுந்துமுறைமை | ௫௭ |
| ௧௦—கண்டபடியே | ஞானமாய் நிற்றல் | ௫௮ |

௭—வது, உயிர் விளக்கம்.

| | | |
|---|---|---|
| ௧—தாநிழலார்தல் | உயிர்விளக்க முறுங்காலம் | ௫௯ |
| ௨—தித்திக்கும் | உயிர்விளக்க முறுந்தன்மை | ௬௦ |
| ௩—காண்பா | உயிர் தான்கண்டே னென்பதின் பலன் | ௬௦ |
| ௪—ஒளியுமிருளுமொருமை | உயிர் அருளோடு பொருந்திநிற்றல் இருளோடு பொருந்தினதுபோல | ௬௧ |
| ௫—கிடைக்க | உயிர் விளக்கமுற நற்கேள்விவேண்டும் | ௬௨ |
| ௬—வஞ்சமுட | உயிர் அறியாமை | ௬௩ |
| ௭—தனக்கு | உயிர்க்கு இருள்நீங்கி யருளுறுதல் | ௬௪ |
| ௮—உர்கை | அருள் கூடுமுபாயம் | ௬௫ |
| ௯—ஐம்புலனுற் | உயிரே யருளைப்பெற் றறியவேண்டும் | ௬௬ |
| ௧௦—தாமேதரு | அருளானன்றிச் சிவம்தோன்ருது | ௬௭ |

௮—வது, இன்புறுநிலை.

| | | |
|---|---|---|
| ௧—இன்புறுவார் | ஆன்மா இன்பதுன்ப மடையுமாறு | ௬௮ |
| ௨—இருவர்மடந்தைய | ஆன்மா சிவனைப்பெற்றே யின்பமடையவேண்டும் | ௬௯ |

| | | |
|---|---|---|
| ௩—இன்பத்தை | இன்புறுத லான்மா விற்கே யன்றிச் சிவத்திற் கின்று | எ0 |
| ௪—தாடலை | இன்பம் ஆன்மாவுஞ் சிவமு ங் கூடியவிடத் துறும் | எக |
| ௫—ஒன்றாலு | ஆன்மாவுஞ் சிவமும் வேறு யின்றி லொன்றாயிருக்கை | எக |
| ௬—உற்றாரும் | பேரின்புற்றோர் பிறவியற்றார் | எஉ |
| ௭—பேயொன்று | இன்புறுவோர் நிற்கு நிலைமை | எ௩ |
| ௮—ஒண்பொருட்க | இன்புறுவோர் கிரியை விடுகை | எ௪ |
| ௯—மூன்றாய | இன்பம் பொருள் கூட்டுறவி லறிதலன்றி வாயாலுரைத் தறிவதன்று | எ௪ |
| க0—இன்பி | அன்பா லின்பமடையவேண்டும் | எ௫ |

௯—வது, ஐந்தெழுத்தருணிலை.

| | | |
|---|---|---|
| க—அருணாலு | ஐந்தெழுத்தில் யாவு மடங்கும் | எ௬ |
| உ—இறைசத்தி | ஐந்தெழுத்தியல்பு | எ௭ |
| ௩—ஊனநடன | அது நிற்குநிலை | எ௮ |
| ௪—விரியமன | அது போகமோக்ஷமென்னு மிரண்டையுந் தருமுறைமை | எ௮ |
| ௫—மாலார் | ஷ | எ௯ |
| ௬—ஆரதி | மலநீங்கு முறைமை | அ0 |
| ௭—சிவமுதலே | வீட்டினைய மெய்து முறைமை | அ0 |

க0—வது, அணைந்தோர் தன்மை.



முற்றியது.



உ

சிவமயம்.

## இந்நூல் உரையாசிரியர்கள்.



இதற்குப் பதவுரைசெய்தவர் நாமம் பிரதிகளில் காணப்படவில்லை, ஆயினும் சித்தாந்தசாத்திரங்களுக்குப் பெரும்பாலும் பதவுரை வேலப்பப்பண்டாரம் செய்திருக்கின்றனர்; இவ் வுரையும் அந்நடையே கொண்டிருக்கின்றது.

சேதுப்புராணஞ் செய்தவரும், சேதுமடாலய சைவாசாரியருமாகிய நிரம்பவழகியர், இந்நூலுக்குப் பொழிப்புரை யருளிச்செய்தனர். சித்தியார்க் கோருரை யியற்றியவருமிவரே.

இவ் விருவகையுரைகளும் சிற்சிலவிடங்களில் விசேஷக்கருத்தடங்கி யிருப்பதாலும் சித்தாந்தநூலுணர்வோர் கல்விப் பயிற்சியில் சிறிதடைந் திருப்பினும் இவ்வித வுரைகளை வாசிப்பதால் பெரும்பய னெளிதிலடைந்து மிகவும் வித்தியாசாகர ராவாரெனவும் கருதிப் பலர் தெரிவித்தபடி சேர்த்து அச்சிடத் துணிந்தனன்.

இங்ஙனம்

கொ - ஜ - ச - மு-ர்.

உ

# சிவமயம்.

## திருவெண்பா விளக்கம்.

திருவெண்பா திருவியதைக் கூறும்வெண்பா திருவியறியவேண்டும்பொருளைக் கூறும்வெண்பா திருவத்தகும்வெண்பாவெனத் தன்மை முன்னிலை படர்க்கையா விறப்பு நிகழ் வெதிர்காலங்களைக் காட்டிநிற்கு மொரு பெயரைக்கொண்ட விந்நூற்குத் திமதகத்து அறிவிற்கறிவாய் விளக்கு முழுமுதற்பொருளை பாசத்தை திருவியறியவேண்டிக் கூறியவெண்பாவெனப் பண்பும் வினையு மவாய்நிலையாற் கொண்டுமுடித்துப் பொருள்கொள்க. இதனை யிந்நூற் றலைச்செய்யுள்முதல் லிறுதிச்செய்யுள்வரை கூறியுள்ள முன்னிலைச் சொல்லானுணர்க.

என்னை? தம்மாசிரியர் சம்மந்தமாமுனியை திருவியுளதேல் அதற் கவர்கூறிய விடையு முரைத்தல்வேண்டும். அங்ஙனமன்றிக் குறிப்புப்பொருளாய்த் தன்னுராய்ச்சியிற் றோன்றியதனைக் கூறினமையின் 'முன்னின் றவா றெவ்வா' றெனப் பதிப்பொருள் பசுக்களைக்காக்குமுன் பசுபதியெனப் பெயர்கொண்டு நின்றவா றெவ்வாறென வாராய்ந் துணர்ந்தவற்றைக் கூறியவாறுணர்க. ஆசிரியர் சம்மந்தமாமுனியின் பெயரைக் கூறியதென்னையெனின்? ஒரும் பெயருமில்லா வம்முழுமுதற்பொருளே ஆன்மாக்களை யிரக்ஷிக்கைவேண்டி ஒரும்பெயருங்கொண்டு குருமூர்த்தமாய் வருவதென்பது சித்தாந்த முணர்ந்தோர் துணிபாதலா னவ்வாறு கூறியவா றுணர்க.

இவ்வாறு பொருள் கொள்ளாதார்க் கிந்நூற் பொருள் விடக்கப்பட்டுப் பயன்றராதொழியும்.

இங்ஙனம் பாசநீக்கம்பெறுதற்கு வினாவி யுண்மையறியவேண்டுமென்பதை யிந்நூலிறுதியிற் கூறிய 'அருளா லுணர்வார்க்கு' என்னுஞ்செய்யுளா லுணர்க.

இதனாற் போந்த பயன் புறச்சமயத்தில் மயங்காமை.

இந்நூற்காரணம் பொருணிச்சயமுற்று நிட்டைகூடல்.

இந்நூல், தமது பேராசிரியர் சண்பையர் தலைவர் சகலாகம பண்டிதர் அருணந்திசிவாசாரியர் சித்தியாரியற்றியபின் அதன் பொருளை யாவரு நிச்சயித் துணரும்வண்ணம் தமதாசிரியர்முன்னிலையில் தமக்கு விளங்கிய ஆணவமலநிவர்த்தியை விளக்கக்கூறிய இருபாவிருபஃதென்னுநூலை முதனூலாகக்கொண்டு மரபுகாத்தலாய் உமாபதிசிவன் தமக்குந் தமதாசிரியர் முன்னிலையில்விளங்கியதனைச் சுருக்கி விளக்கியதெனக் கொள்க.

சிவப்பிரகாசம் சிவஞதி சத்திஞதி கூறியவதனானே தாமே சித்தாரக்கும் நூலகத்துப்பொருள் நூற்பெயர்களை விளக்கியும் அச்சார்பானே நூலியற்றியும் அதனால் விளங்காதையமுற்றோர்க் கவ்வையமு(மருட்கை) நீங்குதற்பொருட்டுப் பசுபாச நிலைமைகூறிய முதனூ லிரண்டாஞ்சூத்திரத் துட்பொருளாகிய திருவருட்டன்மை சுத்தமாயையா யான்மாக்கட்குப் பயனளித் துணர்த்திவருவதைத் திருவருட்பயனெனக்கூறி விளக்கியும் அதனானும் விளங்காதையமுற்றோர்க் கிது மலநிலையேயாதலின் இப்பாச நீங்கும்வழியிவ்வாறு வினாவி யாராய்வோர்க்கே யுடைமையுமென வினாவெண்பாவால் விளக்கியும் கூறப்பட்டன.

என்னை? சிவப்பிரகாசம் சிவப்பிரகாசிக்கு முறைமையையே மிகவுங்கூறும்.

திருவருட்பயன் ஆன்மாக்கள் பாசமுற்றுப் பசுத்வம்பெற்றுப் போகபோக்யங்களின் பயனனுபவித்தலும் திருவருட்செயலெனவே மிகவுங் கூறும்.

வினாவெண்பா ஆன்மாக்கள் இருண்மலநிலையெய்தி பாசமுறும்போதும் சிவம் தனதருட்செயலால் பாசவிளக்கஞ் செய்யுமாற்றே மிகவுங்கூறும்.

ஆகவிங்ஙனமிம் மூன்றாலும் மும்முதற்பொருளாகிய பதி பசு பாச நிலைமையை மூவகையால் விளக்கும்.

“பற்றிவிடாஅ விடும்பைகள்-பற்றினைப் பற்றிவிடாஅ தவர்க்கு” என்னுமோத்தின்படி பாசப்பற்று நீங்கப்பெறாமையின் பிறவித்துயர்நீங்கா. அன்றியும் “பிறவிப்பெருங்கடல் நீந்துவர்நீந்தா-ரிறைவனடி சேராதார்” என்னுமோத்தின்படி யிறைவனடி சேர்வதுமின்று.

‘காண்பானுங் காட்டுவதும், என்னு மிந்நூற் கக-வது, செய்யுளான் காண்கிற வான்மாவுங் காட்டுகிற சிவமுங் காணப்படும் பொருளும் காட்டும் சிவமொழிய விளங்காதென வாய்ந்தறிந்து சிவஞானப் பேறுற்றிருப்பதே வினாவெண்பாவிற் றேறிய பயனென்க.

சிவமயம்.

# வினாவெண்பா

## செய்யுளின்கருத்து.



முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

# தி ரு ெ வ ண் பா

## மூலமும் உரையும்.

நீடுமொளியு நிறைவிருளுமோரிடத்துக்
கூடலரிது கொடுவினையேன் - பாடிதன்மு
னொன்றவார்சோலை யுயர்மருதச்சம்பந்தா
நின்றவா றெவ்வாறு நீ.

(இ-ள்.) நீடுமொளியு நிறையிருளு மோரிடத்துக்கூடலரிது. எ-து. விரிந்தபிரகாசமு நிறைந்தவிருளு மோரிடத்திலே கூடமாட்டாது—, கொடுவினையேன் பாடிதன்முன். எ-து. கொடுவினையேன்பக்கற் றெரிசிப்பதற்கு முன்பு,—வார்சோலையுயர்மருதச் சம்பந்தா வொன்றிநின்றவா றெவ்வாறுநீ. எ-து. அழகியசோலை யுயர்ந்த மருதநகர்வாழ் சம்பந்தமாமுனியே யடியேனிடத்துத் தேவரீர்பொருந்திநின்ற தெப்படி. எ-று. (கருத்து) அந்தகன்கண்ணுக்கு ஆதித்தப்பிரகாசம் வியாத்தமா யிருக்கையிலேயுந் தெரியாதிருந்த தன்மைபோ லென்பதாம். உ-ம். சிவஞானபோதத்தில். "அருக்கனேர்நிற்பினு மல்லிருளேகாணார்க் கிருட்கண்ணே பாசத்தார்க் கீசன்" எ-று. கண்டுகொள்க. (அட்டம்) மல மான்மாவைச் சகசமாய் மறைத்திருக்கையிலே சிவ மான்மாவைப் பொருந்திநின்ற தெப்படியென்னும் வினாவுக்கு. உ-ம். சிவஞானபோதத்தில். "மெய்ஞ்ஞானந்தன்னில் வினையாதசத்தாதல்" என்றபாடத்திலும். சிவதருமோத்தரத்தில். "பரமசிவன் பராசத்திபல்லுயிர்க்கும் பயி

னிருக்க, விரவுவதெ னிருளெனிற்கேள் வெய்யவழற் பசுமரத்தின், விரவியதே பசுமரமும் வெந்தவல வெந்தழலும், பருவமுறக் கரணமுறப் பதியுமுறப் பழுதறவே.'' என்பது கண்டுகொள்க. (௧)

இருளிலொளிபுரையு மெய்துங்கலாதி
மருளினிலையருளு மானுங் - கருவியிவை
நீங்கினிருளா நிறைமருதச்சம்பந்தா
வீங்குனருளா லென்பெற.

(இ-ள்.) இருளிலொளி புரையும். எ-து. ஆணவமேலிட்டகாலத்து ஞானமொழிந்து நிற்கும்,— எய்துங்கலாதி மருளினிலையருளும். எ-து. கலாதிகளைப் பொருந்தின விடத்திலு மாணவத்தையேதந்தது,—மானுங்கருவி யிவைநீங்கினிருளாம். எ-து. என்னுடனே கூடிநின்ற கருவி நீங்கின பொழுது இருளாயிருந்தது,—நிறைமருதச்சம்பந்தா வீங்குனருளாலென்பெற. எ-து. நிறைந்த மருதநகர்வாழ் சம்பந்தமாமுனியே யிவ்விடத்துன்னருளாற் பிரயோசன மென்ன. எ-டு. (க-து.) கேவலசகலத்திலுமல்ல சுத்தத்திற் பிரயோசனமென்பதாம். உ-ம். சிவப்பிரகாசத்தில். ''காட்டிடுங் கரணமொன்றும்'' என்றபாடத்திற் கண்டுகொள்க. (உ)

புல்லறிவுநல்லுணர்வ தாகாபொதுஞான
மல்லதிலதுள்ளதெனி லந்நியமாம் - தொல்லையிரு
ளூனமலையாவா முயர்மருதச்சம்பந்தா
ஞானமலை யாவாய்நவில்.

(இ-ள்.) புல்லறிவு நல்லுணர்வ தாகாபொதுஞானமல்லது. எ-து. சிற்றறிவுபேரறிவாகாது ஞானமல்லது பொதுஞானமூன்றுவிதமாயிருக்கும்,—இலதுள்ள தெனிலந்நியமாம். எ-து. முன்பில்லாத சிவஞான மலபரிபாகத்திலே யுண்டாமென்னில்

சற்காரியவாதமாகாம லந்நியமாம்;—தொல்லையிருளென மலையாவா றுயர்மருதச்சம்பந்தா ஞானமலையாவாய் நவில். எ-து. பழைமையாகவருகிற ஆணவமலத்தின் குற்றத்தினாலே மயங்காத முறைமையையுயர்ந்தமருதநகர்வாழ் சம்பந்தமாமுனியே மலைபோல ஞானத்தை யுடையவரோ திருவுளம் பற்றவேணும். எ-று. (க-து.) ஆன்மஞானம் சிவஞானமாகாது. தத்துவங்களுடைய சுபாவத்தை இதுபொய்யென் றறிவிக்கிறது சிவஞானம் இப்படியறிகிற வேற்றுமைப்யும் விட்டு வாய்ந்த ஞானமாய்நிற்பது சுத்தம். உ-ம். சிவப்பிரகாசத்தில் "தத்துவமானவற்றின் றன்மைகள்" என்றபாடத்திலும். சிவஞானசித்தியில். "சிவன்சீவனென் றிரண்டுஞ் சித்தொன்று மென்னிற் சிவனருட் சித்திவனருளைச் சேருஞ் சித்து." எ-து. கண்டுகொள்க. (௫)

கனவுகனவென்று காண்பரிதாங்காணில்
நனவிலவைசிறிது நண்ணா - முனைவனரு
டானவற்றிலொன்று தடமருதச்சம்பந்தா
யானவத்தை காணுமாறென்.

(இ-ள்.) கனவுகனவென்று காண்பரிதாம் எ-து, கனவிலே நின்று கனவைத் தரிசிக்கப்படாது,—காணில்நனவில்வை சிறிதுநண்ணா. எ-து, நனவிலே காணும் கண்டதென்னில் நனவிலந்தக் கருவிகளில்லாதபடியினாலே காணவில்லை,—முனைவனருடானவற்றிலொன்று. எ-து. அருளிலே நின்றுகண்டதென்னிலரு ளாவத்தைகளிற் பொருந்ாது,—தடமருதச்சம்பந்தா யானவத்தை காணுமாறென். எ-து. இடாசம் பொருந்திய மருதநகர்வாழ் சம்பந்தமாமுனியே நானவத்தைகளைத் தரிசிக்கும்படி யெப்படி. எ-று. (க-து.) சுத்தசத்துவங்களைக் கொண்டறியவேணுமென்பாம். உ-ம். சிவப்பிரகாசத்தில் "இத்தகைமையிலருளா லுயிரறியும்" என்றபாடத்திற் கண்டுகொள்க. (௬)

அறிவறிந்ததெல்லா மசத்தாகுமாயின்
குறியிறந்தநின்னுணர்விற் கூடா - பொறிபுலன்க
டாமாவறியா தடமருதச்சம்பந்தா
யாமாரறிவா ரினி.

(இ-ள்.) அறிவறிந்ததெல்லா மசத்தாகுமாயின். எ-து. என்னுடையவறிவினாலே யறியப்பட்டதெல்லா மசத்தாயழிந்து போமேயாயின்,—குறியிறந்த நின்னுணர்விற்கூடா. எ-து. வாக்குமனத்துக்கெட்டாமல் குறியிறந்து நிற்கிற தேவரீருடைய ஞானத்திலே பொருந்தப்போகிறதே யில்லை,— பொறிபுலன்கடாமாவறியா. எ-து. பொறிபுலனாகிய தத்துவங்கள் தாமாயறியமாட்டா, —தடமருதச்சம்பந்தாயாமாரறிவாரினி. எ-து. தடாகம்பொருந்திய மருதநகர்வாழ் சம்பந்தமாமுனியே யானுரையறியப்போகிறதுதானினி. எ-று. (க-து.) கண்ணானதயிருளோடுகூடி யிருளாயு மொளியோடுகூடி யொளியாயுநின்றது போலப்பாசத்தோடுகூடிப் பாசமாய்நின்றவான்மா அருளோடேகூடிப்பாசநீங்கியருளாய் நிற்குமென்பதாம். உ-ம். சிவப்பிரகாசத்தில். "சத்தினுவென்றசத்துத்தானறியாது" என்றபாடத்திற்கண்டுகொள்க. (ரு)

சிற்றறிவுமுற்சிதையிற் சேர்வாரின்றாஞ்சிறிது
மற்றதனினிற்கிலருண் மன்னுவாந்-துற்றமுகின்
மின்கொண்டசோலை வியன்மருதச்சம்பந்தா
வென்கொண்டுகாண்பே னியான்.

(இ-ள்.) சிற்றறிவுமுற்சிதையிற்சேர்வாரின்றாம். எ-து. சிற்றறிவு முன்னேகெடுமாயின் பின்னருளைப் பொருந்தப்போகிறபேரில்லை,— சிறிது மற்றதனினிற்கிலருண்மன்னுவாம். எ-து. சிற்றறிவுகொஞ்சமாக நின்றாலு மருள்பொருந்தாது,—துற்ற

மூகின் மின்கொண்டசோலைவியன்மருதச்சம்பந்தாவென்கொண்டுகாண்பேனியான். எ-து. மேகங்கள் நெருங்கியவாகாயத்தையளாவிய சோலைசூழ்ந்த வியன்மருதநகர்வாழ் சம்பந்தமாமுனியே என்னைத்தைக்கொண்டு காண்பேனியான். எ-று. (க-து.) சிற்றறிவு கெட்டதுமல்ல முன்போல விருந்ததுமல்ல பாசபந்தநீக்கித் திருவடியிலே கலந்து கிடக்குமென்பதாம். உ-ம். சிவஞானசித்தியில். "செம்பிரதக்குளிகையிறைக்களிம்பற்றுப்பொன்னாய்" என்றபாடத்திற் கண்டுகொள்க. (௬)

உன்னரியநின்னுணர்வ தோங்கியக்காலொண்கருவி
தன்னளவுநண்ணரிது தானாகு - மென்னறிவு
தானறியவாரா தடமருதச்சம்பந்தா
யாமறிவதெவ்வா றினி.

(இ-ள்.) உன்னரியநின்னுணர்வதோங்கியக்கால். எ-து. நினைத்தற்கரிதாகிய தேவரீரருள்தோன்றினகாலத்து,—ஒண்கருவி தன்னளவுநண்ணரிதுதானாகும். எ-து. அழகுபொருந்திய முப்பத்தாறு தத்துவங்களாற் பொருந்தப்படாது, — என்னறிவு தானறியவாராது. எ - து. என்னுடைய பசுஞானத்தாலு மறியப்படாது, — தடமருதச்சம்பந்தா யாமறிவதெவ்வாறினி. எ-து. தடாகம்பொருந்திய மருதநகர்வாழ் சம்பந்தமாமுனியே அடியோங்களறிகிற தெப்படித்தானினி. எ-று. (க-து.) பசுகரணங்களுஞ் சிவகரணமா யான்மாவுமருளாய்ப்பொருந்திநின் றறியுமென்பதாம். உ-ம். சிவப்பிரகாசத்தில். "மாயைமாமாயைமாயா" என்றபாடத்திற் கண்டுகொள்க. (௭)

அருவேவுருவன் றருவேலருவன்
றிருவேறுமொன்றிற் றிசையா - வுருவோரிற்
காணிலுயர்சுடர்த்தைச் சம்பந்தாகண்டவுடற்
பூணுமிறைக்கென்னும் புகல்.

(இ-ள்.) அருவேனுருவன்றுருவேலருவன் றிருவேறுமொன்றிற்கிசையா. எ-து. கத்தாதிருமேனியருவமானாலுருவமாகமாட்டாது உருவமானாலருவமாகமாட்டாது அருவுமுருவுமொருபொருளுக் கிரண்டு தன்மையிசையாது;—உருவோரிற் காணிலுயர்கடந்தைச்சம்பந்தா கண்டவுடற் பூணுமிறைக்கென்னும்புகல். எ-து. திருமேனியைவிசாரித்துக்காணி லுயர்கடந்தைநகர்வாழ் சம்பந்தமாமுனியே கொண்ட திருமேனியைப் பூணப்பட்ட கத்தாவுக்குத் திருமேனியென்னத்திலே யுண்டானது திருவுளம்பற்றவேண்டும். எ-று. (க-து.) ஞானத்திலே திருமேனிகொள்ளுவனென்பதாம். உ-ம். சிவஞானசித்தியில். "மாயைதான்மலத்தைப்பற்றி" என்றபாடத்திற்கண்டுகொள்க. (அ)

இருமலத்தார்க்கில்லை யுடல்வினையென்செய்யு
மொருமலத்தார்க்காரா யுரைப்பேன் - றிரிமலத்தா
ரொன்றாகவுள்ளா ருயர்மருதச்சம்பந்தா
வன்றாகிலாமா றருள்.

(இ-ள்.) இருமலத்தார்க் கில்லை யுடல்வினையென் செய்யும். எ-து. இரண்டு மலமுடைய பிரளயாகலருக்கு மாயையில்லாதபடியினால் உடம்பில்லை வினைபொசிக்கும்படியெப்படி,—ஒருமலர்த்தார்க்காராயுரைப்பேன். எ-து. ஒருமலமுடைய விஞ்ஞானகலருக்குரை யாராகச்சொல்லுவோம்,— திரிமலத்தாரொன்றாகவுள்ளார். எ-து. மூன்றுமலமுடைய சகலருக்கல்லோ வொன்றாகவுள்ளது,—உயர்மருதச்சம்பந்தாவன்றாகிலாமாறருள். எ-து. உயர்ந்த மருதநகர்வாழ் சம்பந்தமாமுனியே யப்படியல்லவாகி லாமாறருள். எ-று. (க-து.) விஞ்ஞானகலர் பிரளயாகலர்க்குச் சுத்தமாயையிலே தேகமென்பதாம்.

உ - ம். சிவஞானசித்தியாரில். "வித்தைகளவித்தையீசர்சதா சிவரொன்றிவர்க்கு". என்றபாடத்திற்கண்டுகொள்க. (௯)

ஒன்றிரண்டாய்நின்றொன்றி லோர்மையதாமொன்றாக
நின்றிரண்டாமென்னிலுயிர் நேராகும் - துன்றிருந்தார்
தாங்கியவாழ்தண்கடந்தைச் சம்பந்தாயானஇ
யோங்கியவாறெவ்வா றுரை.

(இ-ள்.) ஒன்றிரண்டாய்நின்றொன்றிலோர்மையதாம். எ-து. ஒருபொருள் விவகாரத்திலேயிரண்டாய் நின்றொன்றுமென்னில் ஒன்றுபொருந்தமாட்டாது, — ஒன்றாக நின்றிரண்டாமென்னிலுயிர்நேராகும். எ-து. இரண்டாய்நின்றொன்றுமென்னிலொன்றிலேயொன்றழிந்துபோம், — துன்றிருந்தார்தாங்கியவாழ்தண்கடந்தைச்சம்பந்தாயானஇ யோங்கியவாறெவ்வாறுரை. எ-து. ஞானத்தைப்பொருந்தின பெரியோரால் தாங்கிவாழப்பட்ட குளிர்ந்தகடந்தைநகர்வாழ்சம்பந்தமாமுனியேயான் சிவமாகியோங்கினமுறைமையைத் திருவுளம்பற்றவேணும். எ-று. (க-து.) ஆணவத்தைப்பொருந்தினவான்மாவைப்போலவென்பதாம். உ-ம். சிவப்பிரகாசத்தில். "ஒன்றிரண்டாகியொன்றிரண்டுமையாம்" என்றபாடத்திற் கண்டுகொள்க. (௧௦)

காண்பானுங்காட்டுவதுங் காண்பதுவுநீத்துண்மை
காண்பார்களன்முத்தி காணார்கள் - காண்பானுங்
காட்டுவதுங்காண்பதுவுந் தண்கடந்தைச்சம்பந்தன்
வாட்டுநெறி வாராதவர்.

(இ-ள்.) காண்பானுங்காட்டுவதுங் காண்பதுவுநீத்துண்மை காண்பார்கள். எ-து. காண்கிறவான்மாவுங் காட்டுகிறசிவனுங் காணப்படுகிற பொருளையும்விட்டுண்மையைத்தரிசிப்பார்களென்னில்,—நன்முத்திகாணார்கள். எ-து. நல்லமுத்தியைக் காணு

ர்கள்,—காண்பானுங்காட்டுவதுங்காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன்வாட்டுநெறிவாராதவர். எ-து. ஆனல் காணுகிறவ னுங் காட்டுகிறவனுங் காணப்படுகிறபொருளுமாகவோ காண் பார்களென்னில் அப்படிக்காணுகிறவர்களுங் குளிர்ச்சிபொருந் தின கடந்தைநகர்வாழ் சம்பந்தமாமுனி வாட்டும்வழிவாரா தவர். எ-று. (க-து.) ஞாதுருஞானஞேயமென்கிற சங்கற்ப னைகளைவிட்டு ஒன்ருகச் சிவனியல்பினுணருகிற ஞானமேபெற வேணுமென்பதாம். உ-ம். சிவஞானசித்தியில். "சன்மார்க்க ஞ்சகலகலைபுராணவேதஞ்சாத்திரம்" என்ற பாடத்திற்கண்டு கொள்க. (கக)

ஒன்றினுகர்வதிவ னூணுமுறுதொழிலு
மென்றுமிடையி லிடமில்லை - யொன்றித்
தெரியாவருண்மருதச் சம்பந்தாசேர்ந்து
பிரியாவாறெவ்வாறு பேசு.

(இ-ள்.) சர்வவியாபியாயிருக்கையிலேயுந் தோன்ருத கிரு பைபொருந்திய மருதநகர்வாழ் சம்பந்தமாமுனியே தேவரீர் திருவடியைச்சேர்ந்து பிரியாமற் போகங்களைப் புசிக்குமு றைமை திருவுளம்பற்றவேணும். எ-று. (க-து.) அவன்சர்வவி யாபியாகையினுலும் இவன் சுதந்தரஹீனனுகையாலும் அவ னே போகங்களைப்புசிப்பிக்கிறவ னென்பதாம். உ-ம். திருவரு ட்பயனில். "அவனையகன்றெங்கின்ருமாங்கவனுமெங்கு, மிவ னையொழிந்துண்டாதலில்." எ-ம். சிவஞானபோதத்தில். "ஈண் டிவ்வான்மாக்களவனையன்றி யமைந்தொன்றையும்விஷயியா வாகலானவனுமவற்றது விஷயத்தையுணருமென்றும். உண் மைநெறிவிளக்கத்தில். "பர்தகங்கள்செய்திடினுங்கொலைகளவுகள்ளு" என்றபாடத்தினுங் கண்டுகொள்க. (கஉ)

அருளாலுணர்வார்க் ககலாதசெம்மைப்
பொருளாகிநிற்கும் பொருந்தித் - தெருளா
வினாவெண்பாவுண்மை வினாவாரோலூமன்
கனாவின்பாலெய்துவிக்குங் காண்.

(இ-ள்.) அருளாலுணர்வார்க்ககலாதசெம்மைப் பொருளாகிநிற்கும்பொருந்தி. எ - று. ஆசாரியனநுக்கிரகம்பெற்றஞானவான்களுக்கு விட்டுநீங்கி மலவுவராமல் செம்மைப்பொருளாகவே பொருந்திநிற்கும்,—தெருளாவினாவெண்பாவுண்மை வினாவாரோலூமன் கனாவின்பாலெய்துவிக்குங்காண். எ-து. அறியத்தக்கதாக வினாவெண்பாவினுண்மையை வினாவி யறியாதபேர் ஊமன்கனாவிலே பால்குடித்ததுக்கொக்கும். எ - று. (க-து.) ஞானமிகுதியுடையோர்க்குச் சத்தியமாகவே தோன்றுமென்றுமல்லாதபேர் எத்தனை சாத்திரம்படித்தாலும் வினாவெண்பாப்பாராராயின் ஊமன்கனாவிலே பால்குடித்ததுபோல் ஒன்றுந்தெரியாதென்பதாம். (கரு)

வினாவெண்பா மூலமும் உரையும்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

இவ்வுரைசகாத்தம் ௧௬௦௦ - இ மேற் செல்லாநின்ற பிங்களஹு வைகாசிமீ மெய்கண்டசந்ததியில் திருவாவடுதுறை நமச்சிவாயமூர்த்திமரபில் வேலப்பப்பண்டார மநுக்கிரகம்பெற்ற நமச்சிவாயத்தம்பிரான் செய்ததெனவறிக,

# புத்தகவிளம்பரம்

இப்புத்தகம் வேண்டியவர்கள் சென்னபட்டணத்தைச் சார்ந்த சிந்தாத்திரிப் பேட்டை ஐயாமுதலியார் வீதியில் ௩௬ - வது கதவிலக்கமுள்ள ம-ள-ள-ஸ்ரீ கொன்றமாநகரம் - முருகப்பமுதலியாரவர்கள் வீட்டில், அருணாசலமுதலியாரவர்கள் குமாரர் சண்முகசுந்தரமுதலியாரிடத்தில், விலைக்கு வாங்கிக்கொள்ளலாம்.

(இதன்விலை அணா௰)

## இப்பொழுது அச்சிட்டிருக்கும் புத்தகங்கள்,

திருவுந்தியார் மூலமும்உரையும். அணா ௨

இருபாவிருபஃது மூலமும்உரையும். ,, ௩

உ

சிவமயம்.

# போற்றிப்பஃறொடை.



அஃதாவது, போற்றுதலைப் பலதொடையா லமைத்துக் கூறுவது.

அஃதாவது, வெண்டாவினத்தில் இரக்ஷிக்குந்தன்மையைப் பலதொடையால் தொடுத்துக் கூறுவது.

அதுவே, ஆன்மா பாசத் தொடக்குண்டு பசுத்வமுற்று நிற்குநிலையை யறிந்த பதிப்பொருள், தமது கருணையால் அப்பாசத் தளையிற் பலவகையாற் றொடக்குற்ற காலத்தும், பசு பதித் தன்மைக்கேற்பப் பலவகையினூஉ மிரக்ஷிக்கு முறைமையைப் பல திறத்தாற் றொடுத்துக் கூறுவது.

பஃறொடைவெண்பாவி னிலக்கணத்தைத் தொல்காப்பியச் செய்யுளியலினும் ஏனைய விலக்கண நூல்களினு மாய்ந்தறிக.

அன்றியும், கலியுற்றோன் கலிதீரக் கலிவெண்பாவாற் கூறுவதென்பதூஉ மாம்.

என்னை? ஆன்மா, அசுத்தமாயையா லதனது விசித்ரலீலைகளின் பாசத்தாற் கட்டுண் டின்புறுகாலையிற் றுன்ப மிக்குத் துயருற, அக்காலத்து அருட்டன்மையால் அருளுந்தன்மையை விரித்துக்கூறியது.

பாசம்—கயிறு-சங்கிலி-தளைமுதலியவற்றைப் போன்றது.

பசு,—அதிற் (றொடக்குண்ட) கட்டுண்ட ஆன்மாவிற்குப் பெயர்.

பதி-மூவகை யாருயிர்வர்க்கங்களாய வனைத்தினையு மைந் தொழிலியற்றி யிரக்ஷித்துவரு முதற்பெரும்பொருள்.

பதி, பசுக்களைப் பாசத்தளையிற் றொடுப்புண்ட காலத்தும் இரக்ஷித்தலைக்கூறுவது போற்றிப்பஃறொடை.

இதனை யாதுபற்றிக் கூறியதெனின்? சிவாகமங்களிற்கூறிய ஞானபாதப்பொருள்க ளெல்லாவற்றினையு முதனூல்வழியே தொகுத்துப் பொது உண்மையென விருபாலாக்கி, அதிற்கூறப்படும் பதிபசுபாச மென்னு முப்பொருள்கட்கும் பிரமாணம் இலக்ஷணம்சாதனங்களைக்கூறிய ஆசிரியர் அதன்பயனையுணர்த்துவானிந் நூலைக்கூறிய தென்க.

என்னை? வடமொழிச் சிவஞானபோதத்தை முதனூலாக்கொண்டு சார்புநூலியற்றிய உமாபதிசிவன், பதி பசு பாசத்திறங்களைச் சிவப்பிரகாசம் திருவருட்பயன் வினாவெண்பா வென்னு மூன்றுநூலாற்கூறியபின், பதிப் பொருள் பசுக்கட்குப் பாசந்தொடுக்குறு முன்னும் தொடுக்குறுங்காலத்தும் தொடுக்குற்ற பின்னும் அருளும் அருட்பய னெவ்வாறிருக்குமென்ற மாணவகனைநோக்கி இரக்ஷிக்குமுறைமை யிவ்வாறெனக்கூறிய திந்நூலென்க.

இந்நூல் தா ஞசாரியரா லொண் டருளப் பெற்றதும் அதனால் தானிரக்ஷிக்கப்பட்டதும் அதனால் தா னின்புற்றதும் வியந்து, ஆசாரியர்மேற் கூறிய தெனவுங் கூறுவர்.

அங்ஙனமாயின்? இந்நூலில் 'பூமன்னு' மென்று தொடங்கி 'பிறவா முதல்வன்' என்னு மடிவரை கூறியதனாலும் 'பேரானந்த பொருளேதென்னி' லென்னுந் தொடைமுதல் 'ஊனுயிர்தான்' முன்கண்டகாலத்து நீங்காத முன்றோனை - யென்கொண்டு போற்றிசைப்பேனியான், என்னு மீற்றடி வரையினுங் கூறியதனாலும் பதி முதற் பொருளையே கூறிய தெனவும் அவ்வாறு தம தாசிரியரை வியந்துரைத்த தெனின்? தாம் வியந் துரைப்பது தம தகத்தின்கண்ணேயன்றிப் பிறர் செவிப்புலப்பட வோதவேண்டு

இன்மையானும் பிறர் செவிப்படுதலால் தமக்கோர் பயனின்மை யானும் மாணவகன் கதிபெறுமாறு கூறியதே துணிபாகும்.

பின்னைச் சம்பந்தமாமுனியின் நாமத்தைக் கூறுவானேனென்னில்? அநாதிதொட்டுபகரித்துவந்த வப்பழம்பொருளிப்போது சம்பந்தமாமுனியாய் வந்துபகரிப்பதே சித்தாந்தமாதலினவ்வாறு கூறியதென்க.

இதனைச் சித்தாந்தசாத்திரம்-கச-உள், தொகுத்ததென்னையெனின்? அதனை யிந்நூல்கட்குக் கடைநூலாகிய சங்கற்ப நிராகரணத்துக் கூறுவாம்; ஆங்குக்காண்க.

இங்ஙனம்

☞ கொ - ஷண்முகசுந்தர முதலியார்

சென்னை-சிந்தாதிரிப்பேட்டை.

உ

சிவமயம்.

# போற்றிப்பஃறொடை

## மூலமும் உரையும்.

(0)

பூமன்னு நான்முகத்தோன் புத்தேளிராங்கவர்கோன்
மாமன்னுசோதி மணிமார்ப - னாமன்னும்
வேதம்வேதாந்தம் விளக்கஞ்செய் விந்துவிட
னாதநாதாந்த நடுவேதம் - போதத்தா
லாமளவுந்தேட வளவிறந்த வப்பாலைச்
சேமவெளியெவருந் தேறும்வகை - மாமணிசூழ்
மன்றுணிறைந்து பிறவிவழக்கறுக்க
நின்றதிருத்த நிலைபோற்றி.

எ - து. பொற்றாமரைப்பூவி னிலைமைபெற்று நான்முகத்தோ டெழுந்தருளியிருக்கிற பிரமாவுந் தேவர்களு மவர்களுக்கு மன்னனாகிய தேவேந்திரனுந் திருமகள்பொருந்திய மார்பின் பிரகாசமுடைய கௌத்துவமணி தரித்திருக்கிற விஷ்ணுவுஞ் சகலபொருண்மையு நாவிலிருந்து சொல்லுகிற வேதங்களும் வேதமுடிவான வுபநிடதங்களுஞ் சகலவறிவும் விளக்கஞ்செய்கிற விந்துவு மதற்குள்ளொளியாகிய நாதமுங் குடிலையுந் தத்தமிதயத்திற் றோன்றிய போதச் செயல்களா லாமளவுந் தேடவு மளவுபடாமலப்பாற்பட்டிருக்கிற பேரின்பவொளியாகிய பதி யான்மாக்களை யிரக்ஷிக்கவேண்டுமென்கிற கிருபைஜநித்து எவர்களும் பத்தியுடனே தரிசித்து மலமயக்கநீங்கித் தெளிந்து தேறும

படிக்கு மிகுந்த விரத்தினமணிகள்சூழ்ந்து விளங்காநின்ற வழகிய திருச்சிற்றம்பலத்துள் ஞானப்பிரகாச நிறைந்து தோன்ற நின்று ஆன்மாக்களுடைய பிறவித்தொடர் பறுகைச் செய்யுமானந்தநிருத்த நிலை யெம்மை யிரக்ஷிக்க.

குன்றாத, பல்லுயிர் வெவ்வேறு படைத்துமவைகாத்து
மெல்லை யிளைப்பொழிய விட்டுவைத்துந் - தொல்லையுறு
மந்தமடிநடுவென் றெண்ணவளவிறந்து
வந்தபெரிய வழிபோற்றி.

எ-து. அநாதியாயெண்ணிறந்த வான்மாக்கள் மோக்ஷமடைந்திருக்கவுங் குறைவில்லாமல் நித்யமா யளவிறந்திருக்கிற பெத்தான்மாக்களைக் கன்மத்துக்கிடான தேகங்களிற் சராயுஜம் அண்டஜம் ஸ்வேதஜம் உத்பீஜம் ஆகிய நால்வகை யோனிகளினு மாறிமாறி வேறுவேறாகப் படைத்து மவ்வான்மாக்களுக்குள்ள வரியவினைப்போகங்களை யெருமற்குறையாமற் கூட்டிப் புசிப்பித்தும் சர்வசங்காரகாலத்திலான்மாக்கள் சகலாவத்தைப்பட்டுப் பிறந் திறந் தலைந்து திரிந்த விளைப்பு நீங்கும்படிக்குக் காரணகேவலாவத்தையி லொடுக்குவித்தும் அநாதியேதொடுத் தாதியாய்ச் சிருஷ்டித்துந் திதித்துஞ் சங்கரித்து மளவிறந் தாதிநடுவந்தமற்று வருகிற பெரிய கிருத்தியவழி யெம்மையிரக்ஷிக்க.

முந்துற்ற, நெல்லுக்குமிதவிடு நீடுசெம்பிற்காளிதமுங்
கொல்லைக்கடமேறுன்றத் தோன்றவரு - மெல்லா
மொருபுடையொப் பாவத்தா னுள்ளவா றுண்டா
யொருவமையெவ்வுயிரு மார்த்தே - யுருவுடைய
மாமணியை யுள்ளடக்கு மாநாகம் வன்னிதனைத்
தாளடக்குங்காட்டத் தகுதியும்போல் - ஞானத்தின்

கண்ணைமறைத்த கடியதொழிலாணவத்தா [டிக்
கென்னுஞ் செயன்மாண்ட வெவ்வுயிர்க்கு - முன்னை
கட்புலனுங் காணாதுங் கைக்கொடுத்த கோலேபோற்
பொற்புடையமாயைப் புணர்ப்பின்கண் - முற்பாற்
றனுகரணமும்புவன முந்தந்தனைற்றன்
மனமுதலால்வந்த விகாரத்தால் - வினையிரண்டுங்
காட்டியதனாற் பிறப்பாக்கிக் கைக்கொண்டு
மீட்டுமிவகாட்டும் வினைபோற்றி.

எ-று. ஆன்மாக்க ணித்தியமாயிருக்கச் சிருஷ்டிப்பட்டுந் திதிப்பட்டுஞ் சங்காரப்பட்டும் வருவானேனென்னில்? அநாதியிலே மலத்திலே பந்திக்கப்பட்டிருக்கையினாலே மலநீங்கும்படிக்குக் கத்தா கிருபையினாலே செய்வித்ததா யிருக்கும். ஆனால் மலமான்மாக்களைப் பந்தித்த தெப்படியென்னில்? முன்னையுண்டான நெல்லுக் குமிதவிடுமூளை முற்பிற் பாடில்லாம லநாதியிலே கூடத்தோன்றினதா யிருக்கும். இதி லாணவமல மான்மாவி னறிவைமறைத்த தெப்படியென்னில்? செம்பினுடைய நிறத்தைக் காளிதங்கூடவுதித்து மறைத்ததுபோன்றிருக்கும். கத்தாவினுடைய வியாபகத்திலே யான்மாக்க ணிறைந்திருக்கவு மாணவமல முயிரைமறைத்த தெப்படியென்னில்? பழைமையாகிய கடல் வியாபகத்திலே நிறைந்திருக்கிற தண்ணீரை யுப்புக்கலந்து பிடித்திருப்பது போன்றிருக்கும். இப்படியெல்லாம் வெவ்வேறு யொருபுடை யொப்பாகக் கத்தாவுள்ளவன்மே யுண்டாமருவமாய் மூலமை யான்மாக்களையு மாணவமலம்பிடித்தருவையுடைய மறைத்தான மாணிக்கமணியை நஞ்சுவாய்க்குளடக்கின மறைந்தாகிய சர்ப்பம்போலவும் பச்சையாய் மூளைத்து விறகாகுமட்டு

மக்கிளியைத் தெரியாமன் மறைத்து வைத்திருந்த காஷ்டம் போலவு மான்மாவினுடைய ஞானக்கண்ணை மறைத்த கடுந் தொழிலையுடைய வாணவமலத்தினாலே யறிவுஞ்செயலு மிறந்த சகலவுயிர்களுக்குங் கத்தா கிருபையினாலே நன்று மவர்களிச்சையை நாடிப்பார்த்துக கட்புலனினாற் காணாத பிறவியந்தகர்க் குரிமையுள் ளவர்களிச்சித்தபடிக்குக் கோலைக் கொடுத் திச்சித்த விடங்களிலே கொண்டுபோய் விடுகிறது போலப் பொலிவினையுடைய மாயையின் காரியமான தனுகரண புவனபோகங்களையு முன்னே யுண்டாக்கிக்கொடுத்து இச்சித்த புவனங்களிலே யிச்சித்த வினைப்போகங்களையுங் கூட்டிமுடித்துப் புசிப்பிக்கையினு மந்த வாணவமல மயக்கத்தாற் கத்தாவுபகாரத்தை மறந்து நாமென்கிற வந்தக்கரண விகார ஹிதாஹிதமுண்டாகையாற் புண்ணியபாவ மிரண்டுமுண்டாம்படி காட்டி யந்தப் புண்ணிய பாவத்தினாற் பிறக்கும் பிறவியுண்டாக்கி யதனாற்செய்யு மிருவினைகளையு மேற்றுக்கொண்டு மீண்டு மந்த வினைப்போகங்களைப் புசிப்பதற்குக் கலாதிஞானங்களையுங் காட்டுங் கிருபைத்தொழிலெம்மையிரக்ஷிக்க.

[யித்துப்

நாட்டுகின்ற, வெப்பிறப்பு முற்செயிருவினையா லிச்சு
பொற்புடைய தந்தைதாய் போகத்துட்-கர்ப்பமாய்ப்
புல்லிற்பனிபோற் புகுந்திவலைக் குட்படுங்கா
லெல்லைப்படாவுதரத் தீண்டியதீப் - பல்வகையா
லங்கேகிடந்த வநாதியுயிர் தம்பரியா
லெங்கேனுமாக வெடுக்குமென-வெங்கும்பிக்
காயக்கருக்குழியிற் காத்திருந்துங் காயத்துக்

கேயங்கைகான்முதலா யெவ்வுறுப்பு - மாசறவே
செய்துதிருத்திப்பின் பியோகிருத்திமுன்புக்க
வையவழியேகொண் டணைகின்ற - பொய்யாத
வல்லபமே போற்றி.

எ-து. கத்தா வான்மாக்களுக்கு வினைப் போகங்களைப் புசிப்பிக்கிறதற்குத் தேகங்களைக் கூட்டுகிற முறைமை சொல்லுமிடத்து முன் பாசயலங்களிலே சொல்லப்பட்ட வெண்பத்துநான்கு நூறாயிர மியோனிபேதப் பிறப்பின்வகை யெல்லா முன்செய்த விருவினைக்கிடாக வுண்டாம்படி திருவுள்ளத்திலே நிச்சயித்துப் பலபிரகாரம் வெவ்வேறு தேகபேதங்களை யுண்டாக்குவது மல்லாமல் மானுடதேக முண்டாக்குவ தெப்படியெனனின்? அழகுபொருந்திய தந்தையுந் தாயுங் காமவிகாரந் திரும்படிக்குச் சையோகபோகஞ் செய்யுங்காலத்து அவர்களுக்குப் பிள்ளைப்பே றுண்டில்லையென்பது மறிந்து தாயினுடைய கருப்பத்திற் றந்தையானவன் புல்லினுனியிற்றங்கிய பனித்திவலைபோன்ற விந்துவை விடும்போ ததற்குள் ளுயிரை யடக்கி யுட்கருப்பாசயத்திற் சுரோணிதத்துடனே கலப்பித் திருத்தி யந்த விந்து தாய்வயிற்றி லனையற்றிருக்கிற வுதராக்கினியினா லெரி சுவற்றுமலும் பலவகையாகிய வந்தவயிற்றுக்குட் கிடந்த வநாதி யுயிர்களாகிய புழுக்கள் தங்கள் பசியினாலே யந்தவிந்துவை விரைவிலே யெடுத்துப் புசியாமலும் வெய்ய கும்பிநரகம்போன்ற காயக்கருக் குழியிற் காத்திருந்து வினைக்கிடான கைகால் முதலாகிய சகலவுறுப்புங் குற்றமறச்செய்து அழகுபொருந்தத் திருத்திப் பின்பந்தத் தேகத்தையெடுத்து நேரே யோகத்திலிருந்து திரிகால வர்த்தமானங்களையு மறியும்படிக் குணர்வையுங் கொடுத்துப் பத்துமாதவரைக்கும் புசிப்புங்கொடுத்துப்

பின்பு பூமியிலே பிறக்கும்போ திரண்டுகையுஞ் சிரசிலேகுவி
த்த பாவனையாய்த் தலைகீழாய் வரும்படிச்செய்து முன்புகுந்
த சிறுவழியைப் பெருவழியாக்கிய வுயிர் துன்புற்றிறவாம லு
யிருக்குயிரா யணைத்திருந்து வெளியிலே யிழுத்துக்கொண்டு
வருகிற மெய்ம்மையாகிய வல்லப மெய்ம்மையிரக்ஷிக்க.

ஆம் மாயக்கா ருள்மறைப்ப
நல்லறிவொழிந்து நன்குதீ-தொல்லையுறு
வக்காலந் தன்னிற் பசியையறிவித்தழுவித்
துக்காவிசோரத்தா யுண்ணடங்கி-மிக்கோங்குஞ்
சிந்தையுருக முலையுருகுந் தீஞ்சுவைப்பால்
வந்துமடுப்பக்கண்டு வாழ்ந்திருப்பப் - பந்தித்த
பாசப்பெருங்கயிற்றாற் பல்லுயிரும்பாலிக்க
நேசத்தைவைத்த நெறிபோற்றி.

ஏ - து. தாய்வயிற்றைவிட்டு பூமியிலே பிள்ளை பிறந்தவுடனே சரீரத்துக்குக் காரணமான மாயைச் சண்டமாருதம்போ லலைத்து மயக்க, முன் கருப்பத்திலிருக்கும்போதிந்தப் பிறவித்துன்பத்தை நீக்கிக்கொள்ளவேண்டுமென் றவ்விடத்திலே நினைத்திருந்த நல்லநினைவையுமறந் துயிர் தேகமயமாய் நல்வினை தீவினைத்துன்பந் தொடர்ச்சியாற் பகுத்தறிவில்லாமல் அக்காலத்தி லுயிர் புசிப்பிச்சையுற்றிருப்பதை யறிந்து பசிதெரியும்படி யறிவித்து கதறியழும்படி செய்வித்துப் பிள்ளையழுவதுகண் டுடனே பெறும்போதுற்ற வருத்தத்தையுந் தாயானவள் மறந்து உட்கி யாவிசோரும்படி யள்ளோ டிங்கி யிருக்கித்தோங்கிய வன்பினாலே யவள் சிந்தையிரங்கி யுருகப் பச்சுடம்பி லிருந்த விரத்தஞ் சிவப்புமாறி வெண்ணிறவமுதமாய்க் கொங்கையில்வந்து சுரக்கிற வந்த தீஞ்சுவைப்பாலைப் பிள்ளை வாய்வைத்துக்குடித்து முகஞ் செழித்

திருப்பதுகண்டு தாய் மகிழ்ந் திருக்கும்படிச் செய்வித்திப்படிப் பிள்ளையாசை யென்கிற பெருங்கயிற்றினாற் கட்டிச் சகலவுயிர்களுக்குங் குழந்தைகளை வளர்க்கும்படிக்கு ஆனமாக்கடோறு நேசத்தைவைத்தருளிய நெறி யெம்மை யிரக்ஷிக்க.

ஆசற்ற, பாலைப்பசும்பதத்தும் பாலனாம்பதத்தும்
நாளுக்குநாட்சகல ஞானத்து — மூள்வித்துக்
கொண்டாளவாளக் கருவிகொடுத் தொக்கநின்று
பண்டாரியானபடி போற்றி.

எ — து. தாயுன்பாயிருந் திரக்ஷித்த கர்த்தா விப்படிஜநித்தவருமுயிர்களுக்குக் கருப்பத்தி லிருக்கிற பசும்பருவத்தும் பாலனாயிருக்கிற வந்தப்பருவத்தும் நாளுக்குநாள் பரிணமித்து வளரும் பால குமார விருத்தப்பருவத்தும் சகலாவத்தைப் படுத்திப் பருவத்துக்கேற்றவான கலாதிஞானத்தைக் கொடுத்துச் செயலற்றவுயிர்கள் வாங்கிக்கொள்ள வாள்வதற்கேற்ற முப்பத்தாறுவகைக் கருவிகளையுங்கொடுத்துயிர்க்குயிரா யிமைப்பொழுது நீங்காமனின்று பண்டாரியா யுயிர்க்கேவல்செய்யுங் கிருபை யெம்மை யிரக்ஷிக்க.

[ளையி

தண்டாத, புன்புலால் போர்த்த புழுக்குரம்பை மாம
லம்புசோர் கின்றனகட் டைந்தாக்கி — முன்புள்ள
வன்மைநிலைமை யொருகாலகையாது
இன்மைமலைத்தாற் சிறையாக்கிக் — கன்மறைத்து
மூலவருங்கட்டிலுயிர் மூடமாயுட்கிடப்பக்
காலநியதி யதுகாட்டி — மேலாங்கு
மூந்திவியன்கட்டிலுயிர் சேர்த்துக்கலைவித்தை

யந்தவராக மவைமுன்பு - தந்த
தொழிலறிவிச்சை துணையாகமானி
றெழிலுடைய முக்குணமு மெய்தி - மருளோடு
மன்னுமிதயத்திற் சித்தத்தாற் கண்டபொரு
ளின்னபொருளென் றியம்பவொண்ணு - வந்நிலைபோ
கண்டவியன்கட்டிற் கருவிகளீரைந்தொழியக் [யக்
கொண்டுநியமித்தற்றை நாட்கொடுப்பப்-பண்டை
யிருவினையான் முன்புள்ள வின்பதுன்பங்கள்
மருவும்வகையங்கே மருவி-யுருவுடனின்
றோங்குநுதலாய வோலக்கமண்டபத்திற்
போங்கருவியெல்லாம் புகுந்தீண்டி - நீங்காத
முன்னைமலத்திருளுண் மூடாவகையகத்துட்
டுன்னுமிருணீக்குஞ் சுடரேபோ - லந்நிலையே
யூக்கஞ்சுடருருவிற் பெய்துதொழிற்குரிய
ராக்கிப்பணித்த வறம்போற்றி.

எ - அ. கத்தா பண்டாரிபோலநின்று தத்துவங்களைக் கூட்டி யிரக்ஷிக்கும்படி யெப்படியென்னில்? நீங்காமற் புன்புலால்நாறுந் தோல்போர்த்த புழுக்கூடான சரீரமாகிய பெரியமனைக்குள் கிருபையினாலே துரியாதீதந் துரியஞ் சுழுத்தி சொப்பனம் சாக்கிரமெனனும் பெயரையுடைய வைந்து கட்டாக்கி யான்மாவுக் கநாதியிலே பொருந்தின வுண்மைநிலைமையான வாணவமல மறைப்புச் சற்றுநீங்காமற் றிண்மையா யுயிரைச்சிறைப்படுத்தி நிற்கு மூலாதாரமாகிய வீட்டில திதப்பட் டுயிர் மூடமாயுட் கிடப்ப வவ்விடத்தி லிளைப்பாறுமட்டுங் காலத்தை நியதியா னிறுத்தி யப்பால் மேலே யோங்கி

யிருக்குந் துரியமான நாபித்தானவீட்டி லுயிரைப் பிராண வாயுவுடனே கூடச்சேர்த்து அவ்விடத்திலே கலைவித்தையி ராகத்திருன் முன்னே யான்மாவினுடைய தொழிலறிவிச் சை மூன்றையு மெழுப்பி யதற்குத் துணையாகப் பிரகிருதிமா யையி லுண்டான வழகுபொருந்திய சாத்துவிக ராசத தா மத மென்னு முக்குணங்களையுஞ்சேர்த் தப்பான் மேலேசுழு த்தி வீடாகிய ஹிருதயத்தானதிற் சித்தக் கருவியுடனே கூட்டி யவ்விடத்திற் சித்தத்தாற் கண்டபொருளின்னபொ ருளென் றறியாமன் மயங்கிநின்ற வுயிரைச் சொப்பன வீடாகிய கண்டத்தானத்திற் சேர்த்து அவ்விடத்திலே சத்தாதியைந்தும் வசனாதியைந்தும் அந்தக்கரணங்கள் நான்கும் வாயுக்கள் பத் தும் புருடனுமான விருபத்தைந்து கருவியுங்கூட்டி முன்னேசெய் தவிருவினைக்கிடாக முன்சாக்கிரத்திலே யின்ப துன்பத்தைப் புசி ப்பித்த முறைமைபோலச் சொப்பனத்தி லுமிருவினைபோக முண் டானது மறிந்து சுத்ததத்வங்களினுற் பிரேரித்துப் புசிப்பித்துப் பின்பதற்கு மேலாய தூலதேகத்தின்கண் வளர்ந்து நிற்கிற சாக் கிரவீடாகிய நுதற்றானமாகிய வோலக்கமண்டபத்தின்முன் கே வலாவத்தைக்குக் கூடாமனின்ற பூதங்களைந்தும் புருடதத்வ நீங் கலாகின்ற வித்தியாதத்துவமாறுஞ் சிவதத்துவமைந்து மாகப்ப தினாறு முன்சாக்கிரத்தி லிருந்த ஞானேந்திரிய மைந்துங் கன்மே ந்திரிய மைந்துஞ் சொப்பனத்திலிருந்து வந்த விருபத்தைந்து கருவியு மற்றப்புறக்கருவிக ளறுபத்தைந்துமாகத் தொண்ணூற் றாறு கருவிகளையும் பொருத்தி ஜீவிக்கும்படி செய்வித்து முன் னேவிட்டுநீங்காம லைந்தவத்தையினு மறைந்துநின்ற வாணவமல விருள்கூடாதபடி மனையிலே நெருங்கியிராநின்ற விருளை நீக்கும் விளக்கைப்போலச் சூக்குமாதி வாக்குடனே கூடிப் பிரகாசித்து நிற்குஞ் சகலாவத்தையி லுயிரை நிறுத்திக் கன்மத்துக்கேதுவா

ன சத்தாதி விடயங்களைக்காட்டி யான்மாக்கள் யானென தென்று கர்ஜித்துநின் றவைகள் வெவ்வேறு தொழிற் குரியராம்படி செய்விக்குஞ் சிவதர்ம மெம்மை யிரக்ஷிக்க.

[து
வேட்கைமிகு, மூண்டிப்பொருட்டா லொருகாலவியா
மண்டியெரியும்பெருந்தீ மாற்றுதற்குத் - திண்டறல்
வல்லார்கள்வல்ல வகையாற்றொழில்புரித [சேர்
லெல்லாருடனே யொருங்கிசைந்து-சொல்காலை
முட்டாமற்செய் வினைக்கு முற்செய் வினைக்குஞ்செலவு
பட்டோலைதிட்டும் படிபோற்றி.

எ-து. கத்தா சகலாவத்தையிற் கருவிகூட்டி மூடிக்கு முபகாரத்தைமறந்து ஆன்மாக்கள் பிரபஞ்ச வாசைமிகுந்து புசிப்புநிமித்திய மொரு கணநேரமாறுலுங் கெடாமல் வயிற்றிலே மண்டியெரிந்துகொண்டிருக்கிற வடவாமுகாக்கினிபோன்ற பசியைத் தணிக்கும்பொருட்டுத் திண்ணியவாங்காரப் பலன்களா லவரவர் வல்லமைக்கேற்ற தொழில்கள் செய்யுமிடத் தவர்களுக்குத்தோன்றும வுடனிகழ்ச்சியான வொருமைப்பாடாய்க் கூடிநின்றவரவர் நினைவின்படி செய்வித்துக்கொடுத் தான்மாக்கள் யானெனதென் றிடையறாதுசெய்யும்வினை மிகுதியான வாகாமியத்துக்கு முன்செய்த வாறத்தவாவிலுங் கட்டுப்பட்டிருக்கிற சஞ்சிதத்துக்கு மதிலேபாகப்பட்டுப் புசிப்புக்குவந்த பிராரத்துவச் செலவுக்கு மவரவர் கணக்கப்பிள்ளையாயிருந்து பட்டோலையெழுதி யொப்பிக்குங் கருணையிரக்ஷிக்க.

[ணிலா
நட்டோங்கு, மிந்நிலைமைமானுடருக் கேயன்றியெண்
மன்னுயிர்க்குமிந்தவுழக்கேயாய்-முன்னுடைய

நாணாள்வரையி னுடல்பிரித்து நல்வினைக்கண்
வாணாளின்மாலா யயனாகி-நீணாகர்
வானாடர்கோமுதலாய் வந்தபெரும்பதத்து
நானாவிதத்தா னலம்பெறுநாட்-டான்மாள
வெற்றிக்கடுந்தூதர் வேகத்துடன்வந்து
பற்றித்தம்வெங்குருவின் பாற்காட்ட-விற்றைக்கு
மில்லையோபாவி பிறவாமையென்றெடுத்து
நல்லதொரின்சொ னடுவாகச்-சொல்லியிவர்
செய்திக்குத்தக்க செயலுறுத்துவீரென்று
வெய்துற்றுரைக்க விடைகொண்டு-மையறருஞ்
செக்கினிடைத்திரித்துந் தீவாயிலிட்டெரித்துந்
தக்கநெருப்புத்தூண் டழுவித்து-மிக்கோங்கு
நாராசங்காய்ச்சிச் செவிமடுத்துநாவரிந்து
மீராவுன்னூனைத்தின் னென்றடித்தும்-பேராம
லங்காழ்நரகத் தழுத்துவித்தும்பின்னுந்தம்
வெங்கோபமாறாத வேட்கையரா-யிங்கொருநா
ளெண்ணிமுதற்காணாத வின்னற்கடுநரகம்
பன்னெடுநாட்செல்லும் பணிகொண்டு-முன்னாடிக்
கண்டுகடன்கழித்தல் காரியமாமென்றெண்ணிக்
கொண்டுவருநோயின் குறிப்பறிவார்-மண்டெரியிற்
காய்ச்சிச்சுடவறுக்கக் கண்ணூரிக்கநன்னிதிய
மீய்த்துத்தாய்தந்தைதம ரின்புறுதல்-வாய்த்தநெறி
யோடியதேரின்கீ ழுயிர்போனகன்றுபோல
நீடுபெரும்பாவமின்றே நீங்குமென-நாடித்தன்

மைந்தனையுமூர்ந்தோன் வழக்கேவழக்காக
நஞ்சனையசிந்தை நமன்றூதர் - வெஞ்சினத்தா
லல்லலுறுத்து மருநரகங்கண்டுநிற்க
வல்லகருணை மறம்போற்றி.

எ-து. கத்தா வான்மாக்கள்செய்த விருவினைக்குங் கணக்கெழுதினபடிக்குப் புண்ணிய பாவத்துக்குள்ள பலன்களையுங் கூட்டுகிறதெப்படியென்னில்? பொருந்தி யிருந்த விருவினைமுறைமை பூமியிலுள்ள மானுடருக்கே யல்லாமலு மெண்ணில்லாத தனுக்களிலே பொருந்தியிருக்கிற பலவுயிர்களுக்கு மிந்த முறைமையாக வினைகளை நிச்சயித்தறிந்து முன்னமைந்த வாயுசுமுடிவிலுடல்களைப்பிரித்து நல்வினை பாகப்பட்ட வுயிர்களையெல்லாம் பூதசரீரமான திவ்யசரீரத்துடனே காலநீட்டிப்பாய் வாழ்ந்திருக்கும்படிக்கு விஷ்ணுவுலகத்தில் விஷ்ணுரூபமாயும் பிரமலோகத்திற் பிரமரூபமாயுந் தேவலோகத்திற் றேவேந்திர ரூபமாயுந் தேவர்களாயும் வந்த பெரிய பதப்பிராப்திகளிலே நானாவிதமான போகங்கள் புசித்திருக்கும்படி செய்வித்தும் பூமியிலே இராஜ ஐஸ்வரியத்துடனே வாழும்படி செய்வித்துமிருக்கு நாராயணபுண்ணிய காமபலன்புசித்து முடிந்து பாவகன்பலன் புசிக்குநா ளடுத்தவுடனே யங்கங்கு வாழ்ந்திருந்தவுயிர்க ளந்தந்தத் தேகத்தை விட்டு மாறும்படிக்குக் கத்தாவினுடைய வாக்கினையினாலே வெற்றிபொருந்திய யமதூதர்கள் வேகத்துடனேவந்து பாசத்தினாற் கட்டிப்பிடித்துக்கொண்டுபோய்த் தங்கள் யஜமானாகிய தருமராஜாவின்முன்புவிடத் தருமராஜர்வந்து ஆன்மாக்களைப்பார்த் திரங்கிப் பாவிகாளுங்களுக் கிற்றைவரைக்குள்ளாகப் பிறவாநெறி பெறவேண்டுமென்று கத்தாவைவிரும்புமறிவு பிறக்கவில்லையோ வென்று நல்லவின்சொல்லாக நடுவுநிலைமையாய்ப்பேசிப் பின்பவர்களசெய்த பாவத்துக்கேற்ற செயல்களைச் செய்யுமென்று கோ

யத்துடனே கிங்கரர்களைப் பார்த்துச்சொல்ல விடைபெற்றுப்
பூதசரீரமான யாதனாசரீரத்திலே யுயிரைநிறுத்தித் துன்பமுறு
ம்படிக்குச் செக்கிலே யிட்டாட்டியுந் தீவாயிலிட்டெரித்தும் பெ
ரிய நெருப்புத்தூணைத் தழுவிக்கிடக்கும்படிச்செய்து மிகுந்து
நீண்டிருக்கிற நாராசங்களைக்காய்ச்சிச் செவியிலே செலுத்தியும்
நாக்கைக் கருவிகொண்டறுத்தும் அவரவரை யவரவர் தின்னு
ம்படிக் கரிந்துகொடுத்தடித்தும் பேராதபடி யாழ்ந்தநரகங்களி
லே யழுத்துவித்தும் பின்னுந் தங்களுடைய கடுங்கோபமாறுத
விச்சையுடையரா யவற்றிலே யொருநாள்போலத் துன்பத்தைக்
கொடாநின்ற கொடிய நரகங்களிலே பல நெடுநாட் செல்லும
ட்டு மியமகிங்கரர்கள் பணிசெய்யக் காருண்ணியவடிவாகிய வத்
தா சிற்றுயிர்களை யமகிங்கரர்களிடத்திலே காட்டிக்கொடுத்து அ
வர்கள் துக்கப்படுகிறதைப் பார்த்திருப்பானேனென்னில்? உலக
த்திலே தந்தை தாயானபேர்கள் பிள்ளையினுடையநோய் மிகுதி
யை யுள்ளே நாடியறிந்து நோய்தீரும்படிக் கதற்கேற்ற முறை
மைசெய்வது கடனென்றுநினைந்து பிள்ளையை நோயறிந்து மருந்
துகொடுத்துத் தீர்க்கும் வைத்தியத்தொழில் செய்கிறவனிடத்தி
லே யொப்புவித்து அவனிருப்பு நாராசங்காய்ச்சிச் சுடவுஞ் சத்
திரமிட்டறுக்கவுங் கண்படலத்தையுரிக்கவு மிப்படிப்பலகிரியை
யுஞ் செய்யப் பிள்ளை வருத்தப்பட்டாலு நோய்தீர்ப்பதையறிந்
தந்த வைத்தியனுக்கு நல்ல திரவியமுதலான வெகுமானம் பண்
ணிச் சந்தோஷத்துடனே யவர்கள் கண்டுநிற்பதுபோலவு மனு
சக்கிரவர்த்தியான சோழராஜா தானரிய தவம்பண்ணிப்பெற்ற
வருமையான வொருமகன் திருவாரூர்த்தெருவழியே தேரேறிப்
போம்பொழுது மாயமாகத் தேர்க்காலில் விழ்ந்திறந்த பசுவின்
கன்றினிமித்த மந்தப்பாவந்திரும்படிக் கெத்தனைபேர்கள் மாறு
பாடாய்த் தடுக்கவுங்கேளாமற் பிள்ளையைக் கன்றுதங்கினபடிக்

குத் தேர்க்காலிலே போட்டு நசிக்கிப்போட வேண்டுமென்று அணிந்து தேரிலே தாய்ப்பசுவைவைத் தூர்ந்துகொன்றது மகனையமன்பிடித்து வருத்தாதப்படிக்குச் செய்த கிருபையேயாகையால் அந்தவழக்குப்போலவும் விடம்போன்ற சிந்தையையுடைய நமன்றூதர் மிகுந்தகோபத்துடனே பாவஞ்செய்த வுயிர்களைக் கொடிய நரகவாதனைப் படுத்துவதைச் சகலவுயிர்களுக்குந் தந்தையுந் தாயுமாயிருக்கிற சிவமுஞ் சத்தியு மலநோய் தீர்ந்தாற்போதுமென்று சந்தோஷத்துடனே கண்டுநிற்கிற வல்லபமான கருணை மற்றெம்மையிரக்ஷிக்க.

பல்லுயிர்க்கு, மின்னவகையா லிருவினைக்கணின்றருந்
முன்னைமுதலென்ன முதலில்லை - வல்லவினைக்க [தி
ணெல்லாவுலகு மெடுப்புண்டெடுப்புண்டு
செல்காலம்பின்னரகஞ் சேராமே - நல்லநெறி
யெய்துவதோர்காலந்தன் னன்பரைக்கண்டின்புறுந
லுய்யுநெறிசிறிதே யுண்டாக்கி - பையவே
மட்டாய்மலராய் வருநாளின் முன்னைநாண்
மொட்டாயுருவா முறைபோலக் - கிட்டியதோர்
நல்லபிறப்பிற் பிறப்பித்து நாடும்வினை
யெல்லையிரண்டு மிடையொப்பிற் - பல்பிறவி
யத்தமதிலன்றே வளவென்று பார்த்திருந்து
சத்திபதிக்குந் தரம்போற்றி.

எ - அ. கத்தா விங்ஙனஞ்சொன்ன வொன்பது வகையினாலு மிரக்ஷிக்கப்பட்ட வான்மாக்களுக்குப் பெத்தகால முடிவாகமட்டு மிருவினைப்பலன்களை யவ னவ ளது முன்னிலையாகநின்றருத்தித் தனக்குமேலொரு கத்தாவில்லாத சகலபுவன கத்தாவாகியசிவ னந்த விருவினைகளுக் கிருப்பிடமான மாயாவுலகங்க

ளை யெடுப்புண் டெடுப்புண்டு மாறிமாறிவரும்படிக் காதியாயநா திதொடுத்துச் சிருஷ்டித்துந் திதித்துஞ் சங்கரித்துந் திரோபவித்து மநுக்கிரகித்துந் நமது சத்தியினாலே பஞ்சகிருத்தியங்களைச் செய்வித்து மலபரிபாகப்பட்டதை யறிந்து பின்னரகத்திற் செல்லும்பெத்தத்தை நீக்கி யான்மாக்களுக்கு முத்திக்காலத்தை யேற்படுத்தவேண்டித் தனக்கன்பரான மெய்யடியார்களைக் கண்டவுடனே தன்னைக்கண்டதுபோல வந்தவான்மாக்களின்புற் றவரேவின பணிவிடைகேட் டுய்யும்படிக்குச் சிறிது நல்வழியை யுண்டாகக்காட்டி யதினல்வழியே சிவபுண்ணியமான புத்திபூர்வத்தினு மபுத்திபூர்வத்தினு முபாயச் சரிதையாதியினு முண்மைச்சரிதையாதியினுமாகக் கிரமத்திலே செய்யப்படுத்தி யந்தமட்டாய்மலரவிருக்கிற வரும்புப் பருவநீங்கிய வரும்பருவத்துக் கடுத்த முதனாள் மொட்டாயிருக்கிற மலர்போல் மலம் பரிபாகம் பிறந்ததனமை சமீபத்திற் கண்டு ஒப்பற்ற நல்ல சிவசமயத்திற் பத்தியிருந்த விடத்திலே பிறப்பித்து நாட்பட்ட விருவினையு மேககாலத்திலே யிரண்டுந் தராசு நுனிபோலச் சமமானபருவத்திலே பலபிறவியு மந்தமாம்படிக்குத் தமது தீவிரதரம்பொருந்தின வருட்சத்தியை யவ்வுயிர்களின் மலநீங்கும்படிக்குப் பதிக்குந்தர மெய்ம்மையிரக்ஷிக்க.

[யினையு

முத்திதரு, நன்னெறிவின் ஞானகலர் நாடுமலமொன்
மந்நிலையே யுண்ணின் றறுத்தருளிப்-பின்னன்பு
மேவா விளங்கும் பிரளயாகலருக்குத்
தேவாய்மலகன்மந் தீர்த்தருளிப் - பூவலயந்
தன்னின்றுநீங்காச் சகலர்க்கவர்போல [னுக்
முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை-யன்னவ

காதிருணமாதலினா லாடுந்திருத்தோளுஞ்
சோதிமணிமிடற்றுச் சுந்தரமும்-பாதியாம்
பச்சையிடமும் பவளத்திருச்சடைமேல்
வைச்சநதியு மதிக்கொழுந்து-மச்சமற
வாடுமரவு மழகார்திருநுதன்மே
னீடுருவவன்னி நெடுங்கண்ணுங்-கேடிலயங்
கூட்டுந்தமருகமுங் கோலவெரியகலும்
பூட்டரவக்கச்சும் புலியதளும்-வீட்டின்ப
வெள்ளத்தழுத்தி விடுந்தாளினுமடியா
ருள்ளத்தினும்பிரியா வொண்சிலம்புங்-கள்ளவினை
வென்றுபிறப்பறுக்கச் சாத்தியவீரக்கழலு
மொன்றுமுருத்தோன்றும வுள்ளடக்கி-யென்று
மிறவாதவின்பத் தெமையிருத்தவேண்டிப்
பிறவாமுதல்வன்பிறந்து-நறவாருந்
தாருலாவும்புயத்துச் சம்பந்தநாதனென்று
பேரிலாநாதனொரு பேர்புனைந்து-பாரோர்க
ளுண்டியுறக்கம் பயமின்பமொத்தொழுகிக்
கொண்டுமகிழ்ந்த குணம்போற்றி.

எ-து. இருவினையொப்பு மலபரிபாகஞ் சத்தி நிபாதம்பெற்ற பக்குவான்மாக்களுக்குக் கத்தா வாசாரியமூர்த்தமா யநுக்கிரகம் பண்ணுகிறமுறைமை யெப்படியென்னில்? முத்தியைக்கொடுக்கு நல்வழியையுடைய விஞ்ஞானகலர்க் கவர்கள் பற்றியிருக்கிற வாணவமல மொன்றினையு மவர்களறிவுக்குட் பொறிவாய்ப் பிரகாசித்துத் தோன்றி நீக்கி யருள்வடிவாக்கி ஞேயத்தி லழுந்தும்படி கடாக்ஷிப்பர். பின்பு பொருந்தி விளங்காநின்ற பிரள

யாகலருக்குத் திருவுருக்காணும்படிக்கு மானு மழுவுஞ் சதுர்ப்புஜ
முங் காளகண்டமுந் திரிநேத்திரமு முடைய திருமேனிகொண்
டிருந்து அவர்களைப்பற்றி யிருக்கிற வாணவமலங் கன்மமல மிர
ண்டையுநீக்கி யருள்வடிவாக்கி ஞேயத்தி லழுந்தும்படி கடாக்ஷி
ப்பர். அசுத்தமாயையிற் றோன்றிய பூலோகத்தைவிட்டு நீங்காம
லிருக்கிற சகலருக் கவர்களைப்போல மானுடச் சட்டைசாத்தி
மானைக்காட்டி மானைப் பிடிப்பார்போல முன்னின்று தரிசனை
கொடுத் தவர்கள்பற்றி யிருக்கிற வாணவங் கன்ம மாயையென்
னு மூன்று மலங்களையுந் தீக்ஷாக்கிரமங்களினாலே தீர்த் தருள்வ
டிவாக்கி யடிமையாக்கிக் கொள்ளுத லந்தக்கத்தாவுக் காதிகாலத்
திலே யுண்டான குணமாதலாற் றிருச்சிற்றம்பலத்தின்கண்ணே
நின்றாடுகிற திருநடனத்தொழிலும் பிரகாசம்பொருந்திய நீல
மணிபோன் றிலங்குகிற காளகண்டமுந் திருமேனியிற் பாதி
யாய்ப் பச்சைவடிவுகொண்டிலங்குஞ் சிவகாமிதங்கிய விடப்
பாகமும் பவளக்கொடிபடர்ந்து கிடப்பதுபோன்ற திருச்
சடாபாரத்தின்மேற் றரித்திருக்கிற கங்கையும் பாலசந்திரப்
பிரபையும் இந்தக் கங்கையும் பாலசந்திரப்பிரபையும் வெரு
வும்படிக்குப் படம்விரித்தாடுகிற சர்ப்பமும் அழகு மிகுந்த தி
ருநுதனடுவின் மேனோக்கி நீண்டுகிடந்திலங்கு மக்கினிநேத்
திரமும் வலக்கையிற் பிடித்திருக்கிற கேடில்லாத லயத்துட
னே முழங்குந் தமருகமு மழகுபொருந்திய விடதுகையிற்பி
டித்திருக்கிற வக்கினிகுண்டமு மரையிலே கட்டியிருக்கிற
வைந்தலை யரவக்கச்சும் புள்ளிபொருந்திய புலித்தோலுடை
யும் பக்குவான்மாக்களை மோக்ஷமாகிய பேரின்ப வெள்ளத் த
ழுத்துதற் கூன்றினபாதத்தினு மடியா ருள்ளத்திற்கலந் தின்
பபூரணமாயிருக்கிற ஞான குஞ்சிதபாதத்தினும் பிரியாமற்
றரித்திருக்கிற திருவருட்பிரகாசம்பொருந்திய சிலம்பு முமி

ர்களைச் சோரத்தனமாய்க் களவுகொண்டு தன்வசப்படுத்து
கிற முன்னை வினையையென்று பிறவித்துன்பங்களை யறுப்பத
ற்கு மலவைரிநாமென்று முழங்காளிற் றரித்துக்கொண்டிருக்
கிற வீரகண்டாமணியையு மிவைகளொன்று முருத்தோன்று
தபடி யுள்ளேயடக்கி யொளித்துக்கொண்டென்று முடிவில்
லாத பேரின்பமோக்ஷத்தி லெம்போல்வாரையு முறுத்தவே
ண்டிப் பிறவாமுதல்வன் பிறந்து வந்தானென் றதிசயமாய்ச்
சொல்லும்படிக்குத் திருமேனிக்கொண்டு தேன்பொருந்திய
செங்கழுநீர்மாலையுலாவும் புயத்தையுடைய மறைஞான சம்
பந்தநாதனென்றொருபெயருஞ் சுபாவத்தில்லாதநாத னொ
ரு திருப்பெயருஞ் சாத்திக்கொண்டு பூமியிலுள்ளவர்களைப்
போல வுண்பதும் உறங்குவதும் அஞ்சுவதும் விடயபோக
மின்பமுறுவது மொத்தொழுகிக்கொண் டெழுந்தருளி மகி
ழ்ந்திருந்தகுண மெய்ம்மையிரக்ஷிக்க.

மிண்டாய, வாறுசமயப்பொருளு மறிவித்தவற்றிற்
பேறின்மையெங்களுக்கே பேருக்கித் - தேறுத
சித்தந்தெளியத் திருமேனிகொண்டுவரு
மத்தகைமை தானே யமையாமல் - வித்தகமாஞ்
சைவநெறியிற் சமயமுதலாக
வெய்துமபிடேக மெய்துவித்துச் - செய்யதிருக்
கண்ணருளானோக்கிக் கடியபிறப்பாற்பட்ட
புண்ணுமிருவினையும் போயகல - வண்ணமலர்க்
கைத்தலத்தை வைத்தருளிக் கல்லாயநெஞ்சுருக்கி
மெய்த்தகைமையெல்லாம் விரித்தோதி - யொத்தொழு
சேணுமிருள்வடிவுஞ் செங்கதிரோன் பானிற்பக் [குஞ்
காணுதொழியுங் கணிக்கேபோ - லாணவத்தி

ணுதிகுறையாம லென்பாலணுகாம
லீதிநிறுத்து நிலைபோற்றி.

எ - து. இப்படி மானிடரைப்போலத் திருமேனிகொண் டாசாரியமூர்த்தமாய்ப் பெண்ணாகடத்தின்க ணெழுந்தருளி யிருந் தெங்களுக் ககங்காரம்பொருந்திய புறச்சமயப் பொருள்களெல்லா மறிவித் ததிலே யொருபிரயோசனமுமில்லை யென் றறிகிறதிடமே பெருகும்படி செய்வித்துத் தெருமலிருந்த சித்தந்தெளியும்படிக்குத் திருமேனி தரிசனைகொடுத்தருளிய வந்தத் தகைமையும் போகாமன் மேம்பாடாகிய மெய்கண்ட சந்தானச் சுத்தசைவநெறியில் விட்ட குறையறிந்து சமய விசேட நிருவாணம் பொருந்தப்பட்ட வபிடேகமென்று நான்குவகைத் தீக்ஷையும்பண்ணிச் சிவந்ததாமரைமலர் போன்ற திருக்கண்ணருளினாற் பார்த்துத் துன்பப்பிறப்பினாற்பட்ட புண்ணுடம்புத் துன்பமு மிருவினைத் துன்பமு முயிரைவிட்டு நீங்கும்படிக் கழகுபொருந்திய தாமரைமலர் போன்ற திருக்கைத் தலத்தைச் சிரசிலேவைத்தருளிக் கற்போன் றிருந்த நெஞ்சை யக்கினியைச்சேர்ந்த மெழுகுபோல வுருக்கித் திரிபதார்த்த மெய்த்தகைமைப் பொருள்களெல்லாம் விரித்தோதி யுபதேசித் தொற்றுமையாக வாகாயத்தை மறைத்த பூதவிருள்வடிவானது அந்த ஆகாயத்திற் சிவந்த சூரிய னுதையமானவுடனே பூதவிருட் பிரகாசமாய் மறைந்து நீங்க வாகாயஞ் சூரியவொளி வடிவாகிநின்ற முறைமைபோல வுபதேசித்த ஞானப்பிரகாசத்தைப் பற்றி மும்மலமுநீங்கி யான்மபோத மருளிலடங்கச்செய்து மலமான்மபோதத்தையும் பற்றுமற் றன்னுடைய வநாதி நித்தியமுங் கெடாமனீங்கியாக நிறுத்தின நிலைமை யெம்மை யிரக்ஷிக்க.

மேதக்கோர், செய்யுஞ்சரிதைகிரியா யோகத்தா
லெய்துஞ்சீர் முத்திபத மெய்துவித்து-மெய்யன்பாற்
காணத்தகுவார்கள் கண்டாற்றமைப்பின்பு
நாணத்தகுஞான நன்னெறியை - வீணே
யெனக்குத்தரவேண்டி யெல்லாப்பொருட்கு
மனக்குமலையன்மால் வானோர்-நினைப்பினுக்குந்
தூரம்போலேயணிய சுந்தரத்தாளென்றலைமே
லாரும்படிதந் தருள்செய்த - பேராளன்
றந்தபொருளேதென்னிற் றன்வேறு நான்வேறாய்
வந்துபுணரா வழக்காக்கி-முந்தியென்ற
னுள்ளமென்று நீங்கா தொளித்திருந்து தோன்றிநிற்குங்
கள்ளமின்றுகாட்டுங் கழல்போற்றி.

எ - து. உலகப்பற்றற மேம்பாட்டுடனே தாதமார்க்கஞ் சற்புத்திரமார்க்கஞ் சகமார்க்கஞ் சன்மார்க்கமென்று நான்கு வழியினுநின் றுண்மைச் சரிதை கிரியா யோகங்களை வீதித்ப்பாம லநுட்டித்துச்செய்த வடியார்களுக்குச் சிறப்புமிகுந்த பதமுத்தியான சாலோக சாமீப சாரூப மெய்தும்படி செய்வித்து அதனுள் ஞானதாகமுற்ற வடியார்களநுக்கிரகத்தைப்பெற்று மெய்யன்பினாலே சிவரூபத்தி லான்மதரிசனை பண்ணிச் சிவதரிசனத்தி லான்மாவின்றன் னியல்பை யறிந்து பின்பு பெத்தமுத்தி யிரண்டினு முபகரித்து இரக்ஷிக்கிற கத்தாவினுடைய கருணையை மறந்து நானொரு முதலென்றிருந்தோமே யென்று வெட்கப்பட்டுநாணிப் பதைப்பற வருளினறுந்தி யிரண்டற்ற நாதபவிக்குஞ் சிவானுபவத்தைத் தடுமாறி யாருமஞ் சிவசிவாவென்று நினையாது வெனக்கும் வீணே யிரங்கி யநுக்கிரகம் பண்ணவேண்டி வேதாகமபுராண சாஸ்

திரங்களிற் சொல்லப்பட்ட வெல்லாப்பொருளுக்கு மனத் தாக்கும் தாமரைமலரி னெழுந்தருளி யிருக்கும் பிரம விஷ்ணு முதலாகிய தேவர்களினைப்புக்குந் தெரியப்படாத தூரம் போலே நின்றும் ஜடசித்துக்களிடத்தினு மணித்தாய் நிறைந்திருக்கிற வழகுபொருந்திய சீர்பாத கமலத்தை யடியேன் சிரசின்மீதிருந்து பிரகாசிக்கும்படிக்கு வைத் தநுக்கிரகம்பண்ணிப் பெரிய மஹாதேவரென்னும் பெயரையுடைய மறைஞான சம்பந்த ஞானாசாரியரெனக் கநுக்கிரகம் பண்ணின பொருளொன்றென்னிற் றன்வேறு நான்வேறாய்வந்து பொருந்தின தில்லையெனனும் வழக்கை யறிவித் தநாதியே தொடுத் துன்னிடத்திலே யொளித்திருந்து நீ நம்மைக் காணுதிருக்க நாமென்று முன்னைக் கண்டுகொண்டிருந்தோமெனகிற கள்ளத்தை யிப்போதுயிர்க்குயிராய்ப் பிரகாசித்துநின் றறிவித்த பாதமான தெம்மையிரக்ஷிக்க.

வள்ளமையாற், றன்னைத்தெரிவித்துத் தன்றுளினுட்கிட
வென்னைத்தெரிவித்தவெல்லையின்கண் - மின்றுரும்[ந்த
வண்ணமுருவ மருவுங்குணமயக்க
மெண்ணுங்கலைகால மெய்ப்பொருளு-முன்னமெனக்
கில்லாமைகாட்டிப்பின் பெய்தியவா காட்டியினிச்
செல்லாமைகாட்டுஞ் செயல்போற்றி.

எ - அ. வளப்பமிகுந்த கிருபையினாற் கர்த்தா தன்னைத் தெரிவித்துத் தன்பாததாமரையான திருவருளுக்குள்ளே பிரியாமலொன்றுகிடந்த வென்னையுந் தெரிவித்த வெல்லைக்கண் மின்போன்று தோன்றியழிகிற வண்ணத்தையுடைய தேகமுந் தேகத்தைப்பொருந்திய குணமயக்கங்களு மறிவைவிளக்கப்பட்ட கலையாதி முதலாகிய தத்துவங்களு முன்னில்லாத

கேவலாவத்தையை முன்னேயறிவித்துப் பின்பு தேகமுதலிய கருவிகரணாதிகளுங் கூடின சகலாவத்தையு மறிவித்து இவையருளைவிட்டுத் தேகமுதலான கருவிகரணாதிகளிற் செல்லாத சுத்தாவத்தையு மறிவித்தசெய லெம்மையிரக்ஷிக்க.

[பொருளாகி

எல்லாம்போய்த், தம்மைத்தெளிந்தாராய்த் தாமே
யெம்மைப்புறங்கூறி யின்புற்றுச்-செம்மை
யவிகாரம்பேசு மகம்பிரமக்காரர்
வெளியாமிருளில் விடாதே-யொளியாய்நீ
நின்றநிலையே நிகழ்த்தி யொருபொருள்வே
றின்றியமையாமை யெடுத்தோதி-யொன்றாகச்
சாதித்துத்தம்மைச் சிவமாக்கிப்பிறவிப்
பேதந்தனிலின்பப் பேதமுறாப்-பாதகரோ
டேகமாய்ப்போகாம லெவ்விடத்துங் காட்சிதந்து
போகமாம்பொற்றாளி னுட்புணர்த்தி-யாதியுட
னிற்கவழியா நிலையிதுவே யென்றருளி
யொக்கவியாபகந்தன் னுட்காட்டி-மிக்கோங்கு
மானந்தமாக்கடலி லாராவமுதளித்துத்
தான்வந்துசெய்யுந் தகுதியினா-லூனுயிர்தான்
முன்கண்டகாலத்து நீங்காதமுன்றானை
யென்கொண்டு போற்றிசைப்பேனியான்.

எ-து. எல்லாத் தத்துவங்களையும் பொய்யென்று கண்டு நீங்கித் தம்மைத்தெளிந்தோமென்று நமக்குமேலே வேறொருபொருளில்லையென்றுஞ் சைவசித்தாந்திகளுடனே கூடலாகாதவர் நமக்குப் புறம்பென்றும்பேசித் தன்னின்பத்தைத்

தானே புசித்திருப்போமென்று மகிழ்ச்சியுற்றுச் செவ்விதா
ன நிருவிகாரி நாமேயென்றுபேசி யகமே பிரமமென்னும் வா
திகள் தன்னையுமறியாமற் றலைவனையு மறியாமன் மயங்கிநிற்
கிற வெளிபோன்ற விருளி லென்னைவிடாமல் ஞானசொரூப
வொளிவடியா யிப்போது நிற்கிற நிலையென்று நிகழ்த்தி
யிதற்குமேலே வேறொருபொருளின்றி யமையாமையு மெடுத்
தோதி யான்மாவைச் சிவத்துடனே யொன்றாகும்படி சாதி
த்துத் தம்மைச் சிவமாக்கி யிந்தப்பிறவிப்பேதமாகிய சரீரத்
திலேதானே ஜீவன்முத்தித் தன்மையும் பரமுத்தித் தன்மை
யுஞ் சரியாகக்கண்டு வெற்றின்பமான சிவபோகம் புசியாமல்
சமவாதம்பேசி யான்மசத்தியுடனேகூடி யின்பம் புசிப்போ
மென்கிற பாதகரோடுங்கூடி யேகமாய்ப்போகாமலெனக்
கெவ்விடத்துங் குருலிங்கசங்கமமாய்க் காக்ஷிகொடுத்து மே
லானபோகமுண்டாகிற திருவருட்பாதத்திற் பிரியாம லுள்
ளேயடங்கிக் கிடக்கும்படி பொருத்துவித்து ஞேயத்தி லழு
ந்திநிற்கு மழியாதசாயுச்சியநிலை யிந்தவருணிலையென்று விக
ற்பந்தோன்றாம லநுக்கிரகித்துத் தமதுபரிபூரண வியாபகத்
துள்ளே யானுமொக்கவியாபித்து நிற்குந் தன்மையுங்காட்டி
யிருந்தோங்கி யளவுபடாம னிறைந்துநின்ற தமது பேரான
ந்தத்திருவருட்கடலில் விளைந்த வாராதஞேயவமுத்தைப்
புசித்துக் களித்திருக்கும்படி தாமே "யென்னைத்தேடிவந்து
கொடுத்த பெருங்கருணைத்தகுதியினு லானுயிர்தானே முத
ன்மையென்று நினறபெத்தகாலத்து மதற்கு முதன்மையுங்
கொடுத்து நீங்காமனின்ற முன்னோனை யெந்தவிதங்கொண்டு
புகழ்ந்து போற்றுவேனியான். எ-று.

போற்றிதிருத்தில்லை போற்றிசிவபோகம் [யெங்கள்
போற்றியவன்மெய்ஞ்ஞானப்புண்ணியநூல்-போற்றி
வெம்பந்தவாழ்க்கைவிட வேறாய்வந்துண்ணின்ற
சம்பந்தமாமுனிபொற்றாள்.

போற்றிப்பஃறொடை மூலமும் - உரையும்

முற்றிற்று.

---

இந்நூலுரையாசிரியர் பெயர் காணப்படவில்லை.

உ

சிவமயம்.

# கொடிக்கவி



எ-து. கொடிகட்டிக் கூறியகவி கொடிக்கவி

அஃதாவது, ஆலயத்வஜ ஆரோஹணத்திற் கறிகுறியாய்க் கொடியைக் கட்டிக் கூறிய கவி கொடிக்கவி.

அஃதாவது, தமது குலத்தோரா லிகழ்ந்து நீக்கிக் கொற்றவன்குடியில் வசிக்குநாளில் தில்லைக்கொடியேற்றம்வர தம்மரபினர்சென்று கொடியேற்றக் கொடியேறப் பெறாது தடையுற்றது. அதுகண்டு மரபோர் மயங்கிநிற்ப அவர் கனவிற் சபாநாயகர் தோன்றி உமது ஆணவ மேலீட்டால் நம தன்பன் உமாபதிசிவனை யிகழ்ந்தீர்கள்; உமதஞ்ஞானநீங்க ஞானநாட்டமுற்ற நம்மன்பன் வந்தாலன்றி யிவ்விடையூறுநீங்கிக் கொடியேறப் பெறாதெனக் கூறினர். மரபோர் கண்விழித்து மயக்கநீங்கி வியப்புற்றுச் சபாநாதர் திருவருளைக் கொண்டாடி உமாபதி சிவன்பாற்சென்று பணிந்து நடந்தனவற்றைக்கூறித் தம்மைக்ஷமித்துத் தமதஞ்ஞானநீங்க ஞானநாட்டந்தந்து கொடியேற்றுவித்து சபாநாதர் திருப்பணி முட்டின்றி முடிந்து அடியே பின்புறச் செய்யவேண்டுமென் றிரப்ப, அது கண்டு உமாபதிசிவன் திருவருளை வியந்து தில்லைப் பதிபுக்கு 'ஒளிக்கு' மென்னுஞ் செய்யுள்முதல் 'ஐந்தெழுத்,தென்னுஞ் செய்யுளீறாகிய பாசுரங்களையோதி ஞான அஞ்ஞான விலக்கணங்களையு மதனை [illegible] சாதனங்களையு மதனைத் தம் மாசிரியராய் சிவபிரான்வந்து தந்தபெருமையினையு மது தமது பேராசிரியர்தந்த முதனூல் வழிநூல்களிற் கரந்துறைப் பொருளா யிருந்தமையும் விளங்கக்காட்டி த்வஜாரோஹணங் கொடி கட்டினர்.

அங்ஙனமாகக் கொடி தடையின்றி நிறைவேறியதைக் கண்ட யாவரும் இக்கொடிக்கவியினையும் இதற்குமுன் கூறியுள்ள சித்தாந்தசாத்திரங்களையு முற்றுநோக்கித் திருவருட்செயலை வெளியாக்கிய விக்கவி நமக்குற்ற ஆணவவிருளைநீக்கி ஞானவொளியாக்கிச் சித்தாந்தசாத்திரங்களின் முடிபினு முண்மைபிறக்கச் செய்ததேயெனவியந்து, இதன்முன்கூறியுள்ள சித்தாந்தசாத்திரங்களோ டிதனையுமொன்றாக்கினர்.

அன்றியும், இங்ஙன நடந்தவற்றை யுணர்த்துவதாய் அன்றுதொட் டிற்றைவரை கொடியேறுங்காலத்தில் உமாபதிசிவன் காவிக்கொடியு மொன்றேற்றிவருகின்றனர்.

சிவஞானபோத மாதியான சித்தாந்தசாத்திரங்களிற் கூறியுள்ளபொருள்களிதில் யாங்ஙனங் கூறியுளதெனின்? நன்றுவினவினாய்! அந்நூல்களிற் கூறியுள்ள பதி பசு பாச விலக்கணங்களையேவிளக்கி ஒளி உயிர் இருள் எனவும், உயிர் இருள்நீங்கி ஒளிபெறவேண்டுமெனவும், அவ்வாறு பெறுதற்கு அருள்வேண்டுமெனவும், அவ்வருள்தோன்றுக்கால் பஞ்சாக்ஷரமோதி யவ்வருளைப் பெற்று சிவத்துடன்கூடி யின்புறுகவெனவும், ப்ரமாணம் இலக்ஷணம் சாதனங்களைக்காட்டிப் பயன்பெறச்செய்வ திந்நூற்கருத்தென்க.

கொடிக்கவியை நன்காய்ந்தோர்க் கிப்பயனெளிதிற் கைகூடுமென்பது திண்ணம்.

இங்ஙனம்

☞ கொ - ஷண்முகசுந்தர முதலியார்

சென்னை-சிந்தாதிரிப்பேட்டை.

உ

சிவமயம்.

# கொடிக்கவிச் செய்யுளின் கருத்து.





முற்றியது.



திருச்சிற்றம்பலம்.

# கொடிக்கவி

## மூலமும் உரையும்.



ஒளிக்குமிருளுக்கு மொன்றேயிட மொன்றுமேவிடி லொன், றொளிக்குமெனினு மிருளடராதுள்ளுயிர்க்கு யிராய்த், தெளிக்குமறிவுதிகழ்ந்துளதேனுந் திரிமலத் தே, குளிக்குமுயிரருள் கூடும்படிக்கொடிகட்டினனே.

(இ-ள்.) ஒளிக்குமிருளுக்கு மொன்றேயிடம். எ-து. ஆணவத்துக்கு ஞானத்துக்கு மிடமொன்றே,—ஒன்று மேவிடிலொன்றொளிக்கும். எ-து. ஞானமேலிட்டகாலத் தாணவமொளித்துநிற்கும். ஆணவமேலிட்டகாலத்து ஞானமொளித்துநிற்கும்,—எனினுமிருளடராது. எ-து. ஒன்றுமேலிட்டகாலத்திலே யொன்றொளித்து நின்றாலு ஞானத்தையாணவமலம் பொருந்தாது, — உள்ளுயிர்க்குயிராய்த்தெளிக்கு மறிவுதிகழ்ந்துளதேனுந் திரிமலத்தேகுளிக்கும். எ-து. பூர்வவாசனாவிசேஷத்தாற் சிவஞானஞ் சற்றுவிளங்குமானாலு மும்மலங்களிலே மூழ்கிக்கிடக்குமல்லாம லதுகொண்டே நீங்கமாட்டாது, — உயிரருள்கூடும்படிக் கொடிகட்டினனே. எ-து. இப்படி மும்மலங்களிலே மூழ்கிக்கிடக்கிறவான்மா வருள்கூடும்படிக்குத் தீக்ஷாக்கிரமத்தினாலே மலங்களைப்போக்கத் துசங்கட்டினேன். எ-று. (கருத்து.) ஆணவத்துக்கு ஞானத்துக்கு மிடமொன்றா யிருக்கத் தனதுகாரணங்கெடாமலிருக்கிற மலத்தைத் தீக்ஷா

க்கிரமத்தினாலேபோக்கி மோக்ஷத்தை யடைவிப்போமென்ப தாம். (நுட்பம்) ஆணவத்துக்கு ஞானத்துக்கு மிடமொன்றெ ன்பதற்கு. உ-ம். சிவஞானபோதத்தில். "மெஞ்ஞானந்தன்னி ல்" என்றபாடத்தில். "தண்கடனீருப்புப்போற்றனேயுளமுள வாய்த்தான்." எ-து. கண்டுகொள்க. ஒன்றுமேலிட்டகாலத்தி லேயொன்றொளித்துநிற்கு மென்றதற்கு. உ-ம். சிவப்பிரகாசத் தில். "மாயைமாமாயைமாயா." என்ற விருத்தத்திற்கண்டுகொ ள்க. இதல்லாமலாணவமேலிட்டபெத்தகாலத்திலே ஞானமொ ளித்து நிற்குமென்றுமுத்திகாலத்திலே சிவம்பிரகாசித்து ஆண வங்கௌரவங்கெட்டொளித்து நிற்குமென்றுங் கூறியதற்கு. உ-ம். போற்றிப்பஃறொடையில். "என்ற, னுள்ளமென்று நீங்கா தொளித்திருந்து தோன்றிநின்ற, கள்ளமின்று காட்டுங்கழல் போற்றி." எ-ம். சிவஞானபோதத்தில். "நேசத்தர்தன்பானிக ழூந்ததிநெய்போற் பாசத்தார்க்கின்றாம்பதி." எ-ம். வருமே துக்களைக்கண்டுகொள்க. ஞானத்தை யாணவம்பொருந்தாதெ ன்பதற்கு. உ-ம். சிவஞானபோதத்தில். "அந்நியமிலாமையா ற் கொன்றுணர்வின்றாம்." என்றபாடத்திற் சூரியனையந்தகார ம் பொருந்தாமனிற்கும். எ-து. கண்டுகொள்க. முன்விட்டகு றையினாலே யுயிர்க்குயிராயிருக்கிற ஞானஞ் சற்றுவிளங்குமா றுலுமலத்திலேயழுந்திக்கிடக்கு மல்லாமல் நன்றாகச்சுத்தியா காது. இப்படியிருக்கிற வான்மாவருளைக்கூடும்படித் துசங்க ட்டினேனென்றதற்கு ஆசாரியர் தீக்ஷாக்கிரமத்தினாலே மலத் தைப்போக்கி அருளைக்கொடுப்பர். அந்தச்சிவஞான மாசாரிய னையல்லாமல்வாராது. உ-ம். சிவப்பிரகாசத்தில். "விரும்பிய மந்திராதிகாரம்." என்றவிருத்தத்திலும். சித்தியாரில். "பலவி தமாசான்பாசமோசனந்தான் பண்ணும்படி." எ-ம். "ஆசான ருளாலடிசேர்ஞானம் வந்திடுமற்றொன்றாலும் வாராதாகும்." எ-ம். கண்டுகொள்க. (க)

பொருளாம்பொருளேதுபோதேதுகண்ணே
திருளாம்வெளியேதிரவே - தருளாளா
நீபுரவாவையமெலாநீயறியக்கட்டினேன்
கோபுரவாசற்கொடி.

(இ-ள்.) பொருளாம்பொருளேது. எ - து. பொருளிலேயழியாத பொருளேது, — போதேது. எ-து. கிரணமாகிய சத்தியேது, — கண்ணேது. எ-து. கண்போலவான்மாவேது, — இருளாம்வெளியேதிரவேது. எ - து. அஞ்ஞானமாகிய சகலகேவலந்தானேது, — அருளாளா. எ - து. அருளையுடையவனே, — நீ புரவாவையமெலா நீயறியக்கட்டினேன். எ - து. வையமாகிய மலமாயாதிகன்மங்களிலே பொருந்தாமல் ஆன்மாக்களிடமாகப்பொருந்தியிருக்கிற தேவரீரறியக்கட்டினேன். கோபுரவாசற்கொடி. எ - து. கோபுரவாசலிலேகொடி. எ - று. (க - து.) சத்தாவேது, சத்தியேது, ஆன்மாவேது, கேவலசகலமேது இதுசொல்வாருமுளரோவென்று கொடிகட்டினேனென்பதாம். (ஞா - ம்.) அழியாதபொருளேதென்னிலென்றது அகண்டபரிபூரணமாயுயிர்க்குயிராயாநந்தரூபமாயிருக்கிறது தற்சிவம். அதற்கு. உ - ம். சிவப்பிரகாசத்தில். "பலகலையாகமவேதம் யாவையினும்." என்ற விருத்தத்திற்கண்டுகொள்க. கிரணவொப்பாகிய சத்திதானேதென்னில் சத்தியென்று தனியேயொருமுதலல்ல சூரியனுங்கிரணமும்போல மரமுங்காழ்ப்பும்போலத் தடையற்ற ஞானமாயிருக்கும். உ-ம். சிவப்பிரகாசத்தில். "சுத்தமாஞ்சத்தி ஞானச்சுடராகும்." என்றபாடத்தில் "இரவிகாட்டும் வளரொளிபோன்மகிழ்ந்தே." எ-ம். சித்தியாரில். "சத்திதன்வடிவேதென்னிற் றடையிலா ஞானமாகும்." எ-ம். "ஒருவனேயிராவணாதி" என்றபாடத்தில். "வரும்வடிவெல்லாஞ்சத்தி சத்திதான் மரமுங்காழ்ப்பு, மிருமையும்போல மன்னிச்சிவத்திலேபடிந்து நிற்கும்."

எ-ம். கண்டுகொள்க. கண்ணுப்பாகிய வான்மாவேதென்னி
ல் அதுவதுவாய் அடுத்தநின்றன்மையாய் வசிப்பைப்பற்றின
வியாபகமாய்க் கண்படிகமாகாயம்போல ஒப்பையுடையதாய்
அக்கினியைப்போல வொன்றைப்பற்றி நிற்கிறதல்லாமற்றனி
த்து நிற்கிறதுமல்லவாய் அருவமுருவமும் ரூபாரூபமல்லவா
ய்ப் பூவிற்கந்தம்போன்றதா யிருக்கிறதான்மா. இதற்கு. உ-ம்.
சிவஞானபோதத்தில். "மாயாதனுவிளக்காய் மற்றுள்ளம்."
என்றபாடத்திலும். சிவப்பிரகாசத்தில். "ஓரிடத்திருத்தல்."
என்றபாடத்திலும். சித்தியாரில். "அசித்தருவியாபகம்போல்
வியாபகமருவமன்றாய், வசித்திடவரும் வியாபியெனும் வழக்
குடையனாகி." எ-ம். திருவருட்பயனில். "இருளிருளாகியெல்
லிடத்திலெல்லாம், பொருள்களிலதோபுவி." எ-ம். சித்தியாரி
ல். "அங்கியானதுதானுமொன்றை யணைந்துநின்று திகழ்ந்திடு
ம், பங்கியாதுயிர்தானு மிப்படிபற்றியல்லது நின்றிடா."எ-ம்.
சிவஞானபோதத்தில், "தோன்றல்மலர்மணம்போற் றெருக்கு."
எ-ம். வருமேதுக்களைக்கண்டுகொள்க. அஞ்ஞானமாகியகேவ
லசகலந்தானேதென்னில் அதிற்கேவலமாவது தத்துவங்களோ
டே பொருந்தாமற் போகத்திற்கொள்கையில்லாதவனாய் அறி
வில்லாதவனாய் அந்தகாரத்திலே அலரவிழித்த விழிபோன்ற
தாய் மலமொன்றுமேயாயதுவா யந்தமலமாய்விட்டுநீங்கு மு
றைமையில்லாததாயிருப்பது கேவலம். இதற்கு. உ-ம். சிவப்
பிரகாசத்தில். "ஓங்கிவரும்பலவுயிர்கள்." எனறபாடத்திலும்.
சித்தியாரில். "அறிவிலன் மூர்த்தனித்தனராகாதிகுணங்களோ
டும்." என்றபாடத்திலும் வருமேதுக்களைக் கண்டுகொள்க. ச
கலமாவதேதென்னில் சகலத்துக்கு வெளியென்றுந்தீபமென்
றும்பெயர், வெளிதீபமென்றிருக்கிற சகலத்தை யஞ்ஞானமெ
ன்று சொல்லுவானேனென்னில் சகலத்திலே அஞ்ஞானமாகி
ய மாயாபோகத்தைப் புசிப்பிக்குமல்லாமல் ஞானத்தையுண

த்தாது. ஞானஞ்சுத்தத்திலேயல்லாமலுண்டாகாது. ஆகையால் சகலமும்போகத்தைப்புசிப்பிக்கிற நிமித்தமாகக்கேவலத்துக்கு இது தீபமென்றும் வெளியென்றுஞ் சொன்னதல்லாமல் இது வுமஞ்ஞானமேதப்பாது. இதற்கு. உ-ம். சிவப்பிரகாசத்தில் "புகலுமலமொழித்தற்கு." என்றபாடத்திலும். இருபாவிருபஃதில் "இருள்வெளியாக்குமருளினையறுத்து." எ-ம். வருமேதுக்களைக்கண்டுகொள்க. அருளாளாவென்றது அறிவுடையவனேயென்றது. நீ புரவாவையமெலா நீயறியக்கட்டினேனென்றதேதென்னில் சர்வத்திரபரிபூரணனாயிருக்கிறவர் பிரபஞ்சமாகிய மலமாயாதிகன்மங்களைப்பொருந்தாமலான்மாக்களிடமாக விருப்பாரென்று சொல்லுவானேனென்னில் சிவனைமலமாயாதி கன்மங்கள் பொருந்தாது. ஆனால் சர்வவியாபக மெய்யடியென்னில், சூரியனுடையசந்நிதியி லந்தகாரம் பொருந்தாமல் நிற்கிறதுபோல மலமுஞ்சிவன் சந்நிதியிலே நிற்கிறது. அப்படி சிவனான்மாக்கள்தோறு நிறைந்திருக்கச் சிவனைப்பொருந்தாம லான்மாக்களை மலம்பொருந்தின தெப்படியென்னிற் சமுத்திரமும் ஜலமு முப்பும்போல. இதற்கு. உ-ம். நெஞ்சுவிடுதூதில். "படநாகம்பூண்டபரமன்பசுவினிடமாய்நிறைந்தவிறைவன்" எ-ம். சித்தியாரில். "அனைத்துஞ்சத்தென்னிலொன்றையறிந்திடா தசத்தாலென்னில், மூளைத்திடா தசத்தாசத்தின் முன்னிருளிரவிமுன்போல், நினைப்பதிங்கசத்தேயென்னிற் சத்தின்முன்னிலாமையானுந், தனைக்கொடொன்றுணர்தலானுந் தானசத்துணராதன்றே. எ-ம். "சுத்தமெய்ஞ்ஞானமேனிச் சோதிபாலசத்தஞ்ஞான, மொத்துறுகுற்றமெல்லா முற்றிடுமுயிரின்கண்ணே, சத்துளபோதேவேறுஞ் சதசத்து மசத்துமெல்லாம், வைத்திடுமநாதியாக வாரிநீர்லவணம் போலும்." எ-ம். வருமேதுக்களைக்கண்டுகொள்க. தேவரீரறியக்கோபுரவாசலிலே கொடிகட்டினேனென்பதற்கு அந்தக்கத்தாவே க

ன்னபாரம்பரையாக அநுக்கிரகம்பண்ணி அறிகிறதல்லா
மற்றப்பேராலே அறியப்படாதென்பதுகருத்து.

வாக்காலுமிக்கமனத்தாலுமெக்காலுந்
தாக்காவுணர்வரியதன்மையனை - நோக்கிப்
பிரித்தறிவுதம்மிற்பிரியாமைதானே
குறிக்குமருணல்கக்கொடி.

(இ-ள்.) வாக்காலுமிக்க மனத்தாலுமெக்காலுந் தாக் ணர்வரியதன்மையனை. எ-து. வாக்குமனதுக்களாலு மெ காலத்திலுந்தாக்காமலறிவதற்கரிதாகிய தன்மையுடைய —நோக்கி. எ-து. விசாரித்துப்பார்த்து,—பிரித்து. எ-து க்குமிடத்து,— அறிவுதம்மிற் பிரியாமைதானே குறிக்கு ணல்கக்கொடி. எ-து. அறிவுக்கறிவாயிருக்கிற சிவத்தை யாமற் குறித்து மருள்பொருந்தத்தக்கதாகக் கொடிகட்டு ண். எ-று. (நு-ம்.) மனவாக்குக்காயங்களினாலே யொருக தாக்காதவனென்றும் ஆன்மபோதத்தா லறியப்படாதவ றுஞ் சொன்னதற்கு. உ-ம். சித்தியாரில். "மறையினாலய மாலால் மனத்தினால் வாக்கால்மற்றுங் குறைவிலாவளவி ங் கூடொணாவாகிநின்ற விறைவனார்." எ-ம். சிவப்பிரகாச "பாசமாஞானத்தாலும்பசுஞானத்தாலுமீசனையறிய ண்ணா." எ-ம். வருமேதுக்களைக்கண்டுகொள்க. விசாரித் குக்குமிடத்திலென்றது இப்படி மனவாக்குக்காயங்க ம் ஆன்மபோதத்துக்குமெட்டாத சிவனை ஆசாரியர் தீ கிரமங்களினால் மலமாயாதிகன்மங்களைப் போக்கிப் பசு ங்களைச் சிவகரணமாக்கி மலத்திலே பற்றாகவிருந்தவறி திருப்பி யருளிலேபற்றாக்கியென்றதற்கு. உ-ம். நெஞ் தூதில். "பார்த்தான்பழையவினை பஞ்சமலக்கொத்தையெ ம், நீத்தான்நினைவுவேறாக்கினான்." எ-து. கண்டுகொள்க வுதம்மிற் பிரியாமைதானே குறிக்குமென்றது இப்படி

லைப்போக்கி அறிவையருளிலே திருப்பினவாசாரியருடைய வ
னுக்கிரகத்தினாலே ஞாதுருஞான ஞேயங்களாகிய சங்கற்பனை
ஞானங்களிலேபோகாமல் தன்னிடத்திலே உயிர்க்குயிராயநா
தியேதோன்றுமற் பொருந்தியிருக்கிற திருவருளிலே அறிவுதா
ரகமாகநிறுத்தி யென்றதற்கு. உ - ம். சித்தியாரில். "ஞாதுரு
ஞானஞேயஞ் சங்கற்பனைஞானமாகுந் திருஞானமிவையெல்
லாங்கடந்த சிவஞானமாதலினாற் சீவன்முத்தர்சிவமேகண்டிரு
ப்பர்." என்பதுகண்டுகொள்க. அருணல்கக்கொடி என்றது இப்
படியாசாரியரனுக்கிரகம்பெற்ற அநுட்டானத்தினாலே சிவனா
ன்மாவைவந்து கவளீகரித்துக்கொள்ளுவனென்றும் இந்தமு
றைமையிலேயல்லாமல் மோக்ஷமடையப்படாதென்றுங் கொ
டிகட்டினோமென்பதுகருத்து. அருள்பொருந்துமென்றிருக்கச்
சிவன்கவளீகரிப்பவனென்று சொல்லுவானே னென்னில் அ
ருளென்றுஞ் சிவமென்றும் வேற்றுமையில்லையென்றது. ஆன்
மாவைச்சிவன் கவளீகரித்ததெப்படியென்னில் இரசகுளிகை
பொன்னைத் தனக்குள்ளே யடக்கிக்கொண்டதுபோலவும், தா
னாக்கினதெப்படியென்னில் அக்கினியிரும்பைத் தானாக்கினது
போலவும். சிவனான்மாவைவகித்து விடாத தெத்தன்மையென்
னில் காந்தமிரும்பைவகித்தால் ஒருகாலும்விடாது அத்தன்
மைபோலவும், சிவனான்மாக்கள் மலத்தைப்போக்கித் திருவ
டியிலே கூட்டினதெப்படியென்னில் அக்கினிகாட்டத்தைக்
கெடுத்ததுபோலவும் சூரியனந்தகாரத்தைப் போக்கினதுபோ
லவு மலத்தைப்போக்கி உப்பையணைந்த வப்பைப்போலவொ
ன்றுபட்டுத் திருவடியிலே கலந்திருப்பது. ஆன்மாசிவனைப்
பொருந்திச் சிவனாய்நீங்காமலிருக்கிறதெப்படியென்னில் கு
ளத்திலேகட்டுப்பட்டதண்ணீ ரணையை, முறித்துக்கொண்டு ச
முத்திரத்திலேசேர்ந்தபோ தந்தச்சமுத்திரசலமேயாயந்தச்ச
முத்திரத்தைவிட்டு நீங்காதமுறைமைபோல ஆன்மா சிவனைப்

பொருந்திச் சிவமேயாய்ச் சிவனைவிட்டு நீங்காமற் சிவனுடைய திருவடியிற்கலந்துகிடக்கிறதுமிந்த முறைமைத்து. இதற்கு. உ-ம். சித்தியாரில். "இரும்பைக்காந்தம் வலித்தாற்போல்" என்றபாட்டிலும், சிவஞானபோதத்தில். "மன்னுமிருளைமதிதாரந்து." என்றபாட்டிலும் "நசித்தொன்றினுள்ளம்." என்றபாட்டிலும். "சிறைசெய்யநின்ற." என்றபாட்டிலும் வருமேதுக்களைக் கண்டுகொள்க. (ங)

அஞ்செழுத்து மெட்டெழுத்து மாறெழுத்துநாலெழுத்தும், பிஞ்செழுத்துமேலைப் பெருவெழுத்து - நெஞ்சழுத்திப், பேசுமெழுத்துடனே பேசாவெழுத்தினையுங், கூசாமற்காட்டக்கொடி.

(இ-ள்.) அஞ்செழுத்து மெட்டெழுத்து மாறெழுத்துநாலெழுத்தும். எ - து. சிவாயநமவென்கிற வைந்தெழுத்தும். ஓம்-ஆம் - அவ்வும் - சிவாயநமவென்கிற வெட்டெழுத்தும். ஓம்-நமசிவாயவென்கிற ஆறெழுத்தும். ஓம் - சிவாயவென்கிற நாலெழுத்தும் ஆகவிப்படி உச்சரிக்கிற விதிப்படியே யுச்சரித்து; — பிஞ்செழுத்துமேலைப் பெருவெழுத்தும் நெஞ்சழுத்தி. எ-து. விதிப்படியுச்சரிக்கிற முறைமையைவிட்டுப் பஞ்சாக்ஷரத்தினுடைய சொருபத்தையறிந்து பிஞ்செழுத்தாகிய வகாரமாகிய பராசத்தியையும் மேலைப்பெருவெழுத்தாகிய சிகாரமாகிய சிவத்தையுந் தன்னுடைய ஹிருதயத்திலேவைக்கில், — பேசுமெழுத்துடனே பேசாவெழுத்தினையுங் கூசாமற்காட்டக்கொடி. எ-து. பேசுமெழுத்தாகிய வகாரமாகியசத்தி பேசாவெழுத்தாகிய சிகாரமாகிய சிவத்தையிரண்டறக்கூசாமலழுத்திவிக்கக் கொடிகட்டினேன். எ-று. (க-து.) பஞ்சாக்ஷரமுதலாகிய மந்திரங்களையுச்சரித்து அதின்பிறகு அந்தமந்திரத்தினுள் அக்ஷரசொருபத்தையறிந்து சத்திசிவான்மீகமாயிருக்கிற அக்ஷரத்தை ஹிருதயத்திலேவைத்தால் அந்தச்சத்திதானே சி

வனை யிரண்டறக் கலப்பிப்பனென்று பஞ்சாக்ஷரத்தினாலே மோக்ஷத்தையடையும்படிக்குக் கொடிகட்டினேன் என்பதாம். (ரு-ம்.) அஞ்செழுத்துமெட்டெழுத்து மாறெழுத்து நாலெழுத்தும் பிஞ்செழுத்துமேலைப் பெருவெழுத்தும் நெஞ்சழுத்தி. எ-து. பஞ்சாக்ஷரமுச்சரிக்கிற முறைமையிலே தூலபஞ்சாக்ஷரம் சூக்குமபஞ்சாக்ஷரம் அதிசூக்குமபஞ்சாக்ஷரமென்று உச்சரிக்கிறமுறைமை மூன்றுவிதமுண்டு அந்தமுறைமை யுச்சரித்து அந்தப்பஞ்சாக்ஷரத்தினுடைய சுபாவமறிந்து (அதுவேதென்னில் சிகாரஞ் சிவம் வகாரஞ் சத்தி யகாரமான்மா நகாரந் திரோதை மகாரமலம் ஆக விந்தமுறைமையறிந்து) இதில் ஊனநடனமாகிய நகாரமகாரத்திலே சென்று ஜநநமரணத்திலே போகாமல் ஞானநடனமாகிய சிகாரவகாரத்தைப்பொருந்திச் சிகாரமுதலாக வுச்சரித்து அப்படியுச்சரிக்கிற முறைமையும்விட்டு வகாரமாகிய ஞானந்தானுகநிற்கவே சிகாரமாகிய ஞேயத்திலே யழுத்துவிக்கும். அதுவெப்படியென்னில் சத்தியாகிய வகாரமிடமாகச் சிவமாகிய சிகாரத்தினிடையிலே அழுந்தவே அத்தன்மையுண்டாக்கும். அதற்கு. உ-ம். நெஞ்சுவிடுதூதில். "அஞ்செழுத்தை, யுச்சரிக்குங்கேண்மையுணர்த்தியுணர்த்தியபின்-வைச்சிருக்குமந்த வழியாக்கி." எ-ம். சிவப்பிரகாசத்தில். "திருவெழுத்தைந்தில்." என்றபாடத்திலும். திருவருட்பயனில், "ஊனநடனமொருபா லொருபாலா, ஞானநடந்தானடுவேநாடு." எ-ம். "ஆசினவர்நாப்ப ணடையா தருளினால், வாசியிடைநிற்கைவழக்கு." எ-ம். வருமேறுக்களைக்கண்டுகொள்க. ஆனால் பஞ்சாக்ஷரத்தையுச்சரித்தாற் போதாதோ உச்சரிக்கவு மதின்மேலே சத்திசிவான்மீகமாகிய எழுத்தினிடத்திலேநிற்கவும் அதின்மேலே மோக்ஷமுண்டாமென்றதேதென்னில் பஞ்சாக்ஷரத்தை யுச்சரித்ததினாலே அஞ்ஞானநீங்கி ஞானம் பிரகாசிக்கும். அதற்கு. உ-ம். சிவஞானபோதச் சூரணையில். ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை விதிப்படியுச்சரிக்கவென்றது

இவ்வான்மாக்களுக்கு ஞானம்பிரகாசித்து மஞ்ஞானத்தைவெம்புகின்ற புழுப்போல நோக்கிற்றைநோக்கி நிற்குமாதலி னதுநீக்குதற்கெனக்கொள்க. இந்தப் பஞ்சாக்ஷர உச்சரிப்பிலே விளங்கின ஞானத்தினாலே நகாரமகாரந்திரோதமலமென்றும் பகாரம் ஆன்மபோதமென்றும் மூன்றெழுத்துநீங்கி ஞானமேயா யந்தஞானத்தினாலே சிகாரவகாரத்தினிடையிலே நின்றழுந்துகிறதுவே சிறப்பென்றதற்கும். உ-ம். திருவருட்பயனில. "அருளினால் வாசியிடைநிற்கைவழக்கு." எ-து. கண்டுகொள்க. இப்படி ஞானத்திலேயழுந்துகிறேமென்கிறதையும்விடவே சிவன்தானே யிவனைகிரகித்துக்கொண்டு மிவன்செயலெல்லாந் தன்செயலாகவு மிவனுந்தானாகவேநிற்பன். இதற்கு. உ-ம். திருவுந்தியாரில். "நஞ்செயலற்றிந்த நாமற்ற பின்னாதன், றன்செயறானேயென் றுந்தீபற, தன்னையேதந்தானென் றுந்தீபற." இதிலிந்த மூன்றுவகையுங் கண்டுகொள்க.

கொடிக்கவி மூலமும் உரையும் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

பிரதிகள்தோறும் இந்நூலுடையாசிரியர்பெயர்
காணப்படவில்லை.

"குழமகனைக் கலிவெண்பாக்கொண்டு— விழை
தொல்குடிமுதல் விளங்கவுரைத்தாங்—கிழைபுனைநல்
லாரிவர்மணிமறுகின்— மற்றவர்பவனி வரவேழ்ப
ருவ—முற்றமானுர்தொழப் போந்ததுலாவாம்"

இ - பா - உஉ-வது, ரு,

"மலை நதி நாடூர் வனைதாரிவரி— கொலைமதக
களிறு கொடி முரசாணை— யிவையே தசாங்க மென்ம
ருர் புலவர்"

இ - பா - கக௪-வது, ரு,

"பயிறருங் கலிவெண்பாவினுலே— யுயர்திணைப்
பொருளொடு மஃறிணைப்பொருளொடுஞ்— சந்தியின்விடு
த்தல் முந்துறு தூதெனப்— பாட்டியற்புலவர் நாட்
டினர் தெளிந்தே" என்னும் இலக்கணமுணர்க.

இனி மறைஞான சம்பந்தரைக் காதற்றலைவரா
கக் கூறியதன்றோ இந்நூலென்னின்? உண்மை! அக
ளமாயார்க்கு மறிவரிதப்பொருள்— சகளமாய் வந்து
குருமூர்த்தமா யருள்வதே துணிபாதலான் அங்ஙன
ங் கூறியவாறுணர்க.

அன்றியும் இந்நூலில் "ஏற்றின் புறத்தமைந்த
வெங்கோமான்" என்னுமடிமுதல் "மட்டவிழ் தார்
வானேன் பவனிவரக்கண்டு" என்னுமடிவரை யுள்ள
பொருள்களை யுய்த்துணர்க.

இதனுள் நாயகன் நாயகியாக மெவ்வாறுவகுத்

தோதியதெனின்? ஆன்மாவை நாயகியாகவும் சிவத்தை நாயகராகவும் நெஞ்சைத் தூதுரைப்பாங்கியாகவு மமைத்துரைத்தவா றுய்த்துணர்க.

என்னை? வேசிகள்போல ஆசைகள்மிகுந்து-பாசத்தளைப்பட் டூசலாடுறுமான்மா - அற்புதமிகுந்த கற்பினில்நிலைபெற - சிற்பரம்பொருளைச் சிந்தையில்நாடிப்-புண்ணியபூமியில் நண்ணியுற்பவித்துக்-காதல்மிக் கெய்தி நாதனைமணந்திட வுரைத்ததாகும்.

இதற்குத் திருச்சிற்றம்பலக் கோவையின் கிளவிக்குறைத்த ஞாலவுரையைச் சான்றாகக்காண்க.

இஃது யாவராற் கூறப்பட்டதெனின்? கொற்றவன்குடிவாழ் நற்றவ வுமாபதி சிவனாற்கூறப்பட்டது. இவராற்கூறப்பட்ட நூலெட்டினையும் திருவருட்பயமுகவுரையிற் கூறியிருப்பதைக் கண்டுணர்க.

இது தமிழ்நூற் சைவசித்தாந்தசாத்திரம் பதினான்கினு ளொன்றாவ தெப்படியெனின்? முதனூலாகிய சிவஞானபோதத்துட்கூறிய பதிபசுபாச விதிமுறைதன்னை கதிபெறவருளியவதனா னுரைத்தவாறுணர்க.

ஏனையவுமிந்நூலை விதிப்படியாய்வோர்க் கெளிதினுணரப்படும்.

இந்நூற்குப் பலவேறு வுரைகளுள, அதனுட்சிறந்ததொன்றை ம-ள-ள-ஸ்ரீ-ம- தணிகாசலமுதலியா

ஶ்ரீ

ரவிகள் அச்சிட்டு வெளியிடுவான் கருதித் தந்ததோ டுரையை அச்சிடப்பட்டது. இவ்வுபகாரத்திற் கவர் பெறும்பயன் சிவப்பெருஞ் செல்வமென்பது யாவருமுணரக்கடவதே!

இங்ஙனம்,

ஸ்ரீ கொ - ஷண்முகசுந்தரமுதலியார்.

சென்னை - சிந்தாதிரிப்பேட்டை.

சிவமயம்.

உமாபதிசிவாசாரியார்

# நெஞ்சுவிடுதூது மூலமும் உரையும்.



பூமேவுமுந்திப் புயல்வண்ணன் பொற்பதுமத் தார்மேவு மார்பன் சதுர்முகத்தோன்—எ-து.

அழகிய உதரத்திலுந்தியிலே பிரமாவுதிப்பதற்கிடமாகிய தாமரைப்பூவையும் மேகநிறமாகிய திருமேனியையுமுடைய திருமாலும் ஸ்வர்ணநிறத்தையுடைய தாமரைமாலை சிங்காப் புயத்தையும் நான்கு திருமுகத்தையுமுடைய பிரமாவும்

தாமேவி,

இவர்களிருவரு மிகலாற்பொருந்தி

பன்றியு மன்னமுமாய்

விஷ்ணுவராக ரூபமாகியும் பிரமா ஹம்ஸமாகிய பக்ஷிரூபமாகியும்

பாரிடந்தும் வான்பறந்து மென்றுமறியா வியல்பினான்—

திரைதிரையே பூமியையிடந்து சப்தபாதாளங்களையுங் கீன்று திருவடியைச் சோதித்துங் காணாத் திருவடியும் சப்தலோகங்களினும் பறந்துதேடிக்காணாத திருமுடியும், இவர்கள் சங்கற்பத்திறுங் காண்பாமென்கையா லெக்காலத்திலு மவர்களுக் கறியப்படாத வியல்பினையுடையவன்

இதற்குப் பிரமாணம்—"தேட்டற்ற நின்றவிடஞ் சிவமாம்" என்பதறிக.

அன்றியு, மிந்திரனும் வானோரு மேனோரு மெய்ப்புவியு மந்தவெ

இருதொழிற் கடவுளராகிய இவர்களிருவரு மல்லாமற் றேவேந்திரனுந் தேவர்களு மன்றி ஸ்வர்க்க மேலடுக்குக்களிலே பலப்பிராப்திகள் பலவிதத்திலே யிருக்கப்பட்ட பேர்

ற்பு மறிகடலு— மந்திரமும், வே தமும்வேத முடி வின் விளைவிந்து வு— — னாதமுங் காணு நலத்தி னான்—

களும் மந்த்ரசஞ்சாரரும் பூமி முதலாய வதோமுக வடுக்குக்களி லிருக்கப்பட்ட பலவகை யான்மாக்களும் உலகரக்ஷை காரணமாக ஒப்பற்ற ஸ்வர்ணமலை ரூபமாகத் தாங்கியிருக்கப்பட்ட மஹாமேருவும் ஜலரூபமாகிவிரிந்து திரைக்கரங்களையுடைய சமுத்திராதிபரும் சப்தகோடியாய் விரிந்திருக்கப்பட்ட மந்திரமூர்த்திகளும் இருக்கு யஜுஸ் சாமம் அதர்வணமென்று பெயர்பெற்றுச் சப்தரூபமாகவிரிந்த வேதாதிபரும் அந்த வேதத்துக்குக் காரணமாகிய சுத்தமாயாசத்திகளும் ஓசைவடிவாகிய நாதாதிகளும் முந்தவிந்த நிலைமைகடாமே கதியென்றும் கடவுளென்றும் பற்றிநிற்கிற வான்மகோடிகளுங் காணப்படாததே குணமாகவுடையவன்

ஓத,வரியான் — சொல்லிறந்தவிடத்துத் தோன்றலாலுகையால் வாக்குகளாலே யெட்டாதவன்

எளியான் — போதாவிதற்குச் சற்றும்பிரயாசமில்லாத காக்ஷியான்

அளவிறந்து நிறை- பெரியான் — தர்க்கங்களினாலே யளந்தறிதற் களவுபடாப் பெருமையினாலே தர்க்கநிர்ணயங்கடந்த பெருமையான்

சிறியான் — அணுவுக்குத் தானணுவாய் நுணங்குவதலாற் சிறுமையையுடையவன்

பெண்பாகன் — இப்படிப் பெரிதுஞ் சிறிதுமுடைய பெற்றியனாயினும் பிரத்யக்ஷத்திற் காணும்படி யடியவர்க்குத் தனது காருண்யசத்தியை வாமபாகத்திலுடையவன்

தெரியா, வருவான — வாயுப்போல வாகாயம்போலத் தோன்றுதலருவமே திருமேனியானவன். அன்றியும் அ

பரவிந்து அபரநாதம் பரவிந்து பரநாதமாயுள்ள நான்குபேதத் திருமேனியுமானவன்

உருவான் — அசுத்தமாயை, பிரக்ருதிமாயை யதிட்டித்துச் சிருஷ்டி நடத்தும்போது மகேசுரர் உருத்திரர் விஷ்ணு பிரமாவென்று நான்குபேதமாகப் பிரத்தியக்கத் திருமேனியை யுடையவன்

அருவுருவ மல்லான் — உத்யுக்தராய்ச் சதாசிவமூர்த்தமு மல்லாமற் பேரொளியாய் விளங்குந் திருவுருவத்தையு முடையவன். அன்றியிவ் விப்படிப்பட்ட திருமேனியையுங் கடந்தவனென்றுமாம்

மரியான் — நித்தமுத்த சுத்தனாகையாற் சாதலாயவொருக்காலமுமில்லாதவன். அன்றியு மொன்றைத் தனக்குச் சுட்டியறியவேண்டும் பகுதியில்லாதவன். அப்படிப்பட்டவனாயினும்

மரிப்பார் மனத்தான் — பிறந்திறந்து திரிகிற வான்மகோடிகளினுயிர்க்குயிரானவன். அன்றியுந் தன்னை நினைக்குமவ ருள்ளநீங்காதவன்

பரிவான, மெய்யர்க்கு மெய்யன் — தனதிடத் தாராமைபூண்ட சத்தியர்க்குச் சத்தியதரிசனனானவன்

வினைக்கு வினையாயினான் — சரியை கிரியை யோகமென்னுந் தந்திரத்துநின்றவர்களுக்கு ஸ்வதந்தரந் தானாய்நின்றவன்

பொய்யர்க்குப் பொய்யாய பொய்யினான் — சாருவாகன் புத்தன் முதலாய இரிபதார்த்த நிர்ணயமில்லாத வசத்தியர்க்கெல்லா மசத்தியனாயுள்ளவன். அன்றியு நாஸ்திகிராத்திகளுக்கு மில்லாமையாகவேயானவன்

ஐயன்,

எப்படிப்பட்ட ஆன்மாக்களுக்கும் பிதாவானவன்

படநாகம் பூண்ட பரமன்

தாருகாவனத் தவிசார வோமத்தூண்டாய்ச் சங்கரிக்க விருடிகளேவலால்வரப்பட்ட பெரும்பாம்பைத் தானே தனக்காபரணமாகத் தரித்தெல்லாவற்றிற்குமேலானவன்

பசுவினிடமாய்நிறைந்த விறைவன்—

ஆன்மாக்க ளெண்ணிறந்திருந்தாலுந் தானொருவனேயாயினு மான்மகோடிகளுள்ளமட்டும் பூரணனாகினு மோவாது மேலாய்க் கத்தனாகப்பட்டவன்

சுடரொளியான்,

சோமசூரியாக்கினிமுதற் பலவாகிய பிரகாசத்துக்கெல்லா மொளியைக் கொடாநின்றவன்

என்றுமுளனன்றளவு மியானு முளனாகி—

இப்படிப்பட்ட சிவனானவன் ஆதியாகத் தோன்றாது நித்தனாகவிருக்கப்பட்டவன்றே யவனைப்போலேயநாதியா யானுநித்தனாகினும்

நின்ற நிலையிற் றிரித்து நில்லாமற்—சென்று சென்று, தோற்றியிடுமண்டஞ் சுவேதசங்கள் பாரின் மேற்—சாற்றுமுற்பீசஞ் சராயுசங்கட்—கேற்ற பிறப்,பெல்லாம் பிறந்து மிறந்தும்

அவனைப்போ லநாதிமலரகிதனாகாதபடியாலே யநாதியே யவனுடனேகலந்திருந்துஞ் சலிப்பறநில்லாமல் மலனாகையால் ஏகதேசப்பட்டுச் சிருஷ்டிகடோறுங் கத்தாவாலே யுண்டாக்கப்பட்ட தோற்ற நால்வகையாய் ஆதிலமைந்தபிறப்புத் தாபரம் ஊர்வன தேவர் நீர்வாழ்வன பறவைகள் நாற்காலிகள் மானுடர் உட்பட்ட எழுவகையெண்பத்துநான்கு நூறாயிரம் யோனிகடோறுஞ் ஜனித்து மரித்தும்

இருவினையின்— பொல்லாங்கு துய்க்கும் பொறியிலியேன்—

அந்தந்த ஜன்மங்கடோறுந் திரிவிதகரணங்களாற் றரிசிக்கப்பட்ட புண்யபாவத்தின் பகுதியாகிய பலபதத்தை யுண்டாக்கப்பட்ட தானத்தையுடையேன்

கல்லா, வுணர்வின்மிசையோடு லோகாயதனைப் — புணர்வதொரு புல்லறிவுண்டு—

நூலுணர்வில்லாத பாசவறிவான் மிக்குச் சாருவாகன்மதத்தைப் பொருந்துங் கிஞ்சிஞ்ஞவுணர்வனாகி

கணையிற், கொடிதென வேசென்று

கோரமாகப் போமிடத்து தனுவினின்றும் புறப்பட்ட பகழியினதுவேகம்போலப் போய்

ஆடிப் பழியே செய்து—

மயக்கமிகுதியாலே தொன்றுதொட்டு புண்யபாவத் தாழ்ச்சி யுயர்ச்சியினுமேல் வரப்பட்ட ஜாதியினது பேதமும்பாராமல் பிறர்மனையாள்வருங் குற்றமுநோக்காமற் பிறனில் விழைந்தும்

கடிய கொலைகளவுகாமம்—படியின்மிசை, தேடியுழன்று

இந்தபூமியினிடத்து நல்லோர்களாலு நீதிநூல்களாலு நீக்கப்பட்டுச் சற்றுங்கிருபையில்லாமற்பண்ணப்பட்ட வதைத்தொழிலும் பிறர்பொருளென் றெண்ணாமையும்புத்திபண்ணுது அதற்கான மார்க்கஞ்செய்து அபகரிப்பும் காலமிடம் வேறுபாராமல் மயக்கமாகிய மாதர்ப்புணர்ச்சி வேட்கையு மிவைகளினிமித்தமாகத் தேசந் திக்குநாடுகளின் முடிப்பில்லாமற் றிரிந்தும்

தெரிவைத்தெரியாமல்—

சகலவுயிர்ச்செய்தியு மியற்கையாகக்கண்டு அவைகளை யதற்கேற்றபடி முறைமிறமா ஆ

ட்டி யுறக்கி நடத்திப் பாராமல் நிற்கிற பேர றிவாகியும் அந்தந்த வறிவுக் கிடாக வத்தனு க்களடங்கின திருவருளொடாது

வாடி யிடையு
மனந்தனக்கு—

தான் பிறவிக்குச்சேரவுமில்லை யப்படிசெ ய்தும் வந்ததில்லையென்று நினைவுதொழிலி னாற்சோம்பி யிடையுங்கருவிகளிற் றலைமை யாகிய மனதுக்கும்

நாடியது,போ
னவழியேபோகு
ம் புந்திக்கும்

மனதாகியகருவி விளங்காமற் பற்றியவிட யங்களை மறத்தல்பண்ணாது அதற்கேற்றபடி நிச்சயம்பண்ணும் புத்திக்கும்

புந்தியுட - னு
ன திறலா மகந்
தைக்கும்—

யானெனதென்று மேற்சொல்லும் வலியி னையுடைத்தாய்ப் புந்தியினின்று மூன்றாய வா ங்காரத்துவத்துக்கும் வாராது நினைத்து நி ச்சயித்ததொரு விடயத்தினது குற்றம்பாரா து முடித்தலா லந்தவிடயத்திலே வேறொன் றுந்தெரியாமற்படுத்திநிற்குஞ் சித்தத்துக்கும்

மேனி,யயாவ
யா வழிபவழியு-
முயிரின்றுபர மு
ரையேன்—

இந்தக்கரணங்களுக்குந்தலைமையா யதன் வழிக்கா யதுக ளொன்றுசெய்ததொன்றுசெ ய்யாது மாறுபட்டுத் தனித்தனிசெயல்களுக் கெல்லாந் தானேகனாய் நித்தியனாயிருந்து அந்தரங்கத்திற்படும் விதனமுமின்றிப் பிறப் பிற்கருவியாய தனுவின் முப்பாற்சோர்வுண் டாயபோது அயர்ந்தும் அந்தத் தனுக்கெடும்போது படுந்துயரப் பகுதி முற்றும்படு மான்மாவினது துயரசாகரத்தையுரைப்பதற் கு வரையறைபண்ணமாட்டேன்

மையரமே,
கொண்டதொ

பதியுள்ளவன்றே தொடங்கி யிற்றைவ ரையுமெடுத்த தனுக்களில் விழைவுமுதலா

ருகாமனுக்கும் — ய வின்பத்தை முள்ளிப்பூவினது மதுவெனக் கண்டுங்கேட்டு மொழியாது நாடோறுமுற்றிப் பலமுடைய வாசைப்பற்றுக்கும்

கோபனுக்கும் — சிறிதுஞ் சாந்தியில்லாமல் விரோதமே விளைக்கின்ற கோபனுக்கும்

மோகனுக்கும் — தான்பொருந்திய விடயத்தினது நலந்தீமைகாணாது அதுதானாக மயக்குவிக்கு மோகனுக்கும்

மண்டுமதமாச்சரியனுக்கும் — மிகுந்த கர்வத்தையுஞ்செய்து பிறர்யாட்டு விரோதங்காட்டா தனுகூலம்போல விருந்து விரோதத்தை முற்றுவிக்குமாச்சரியனுக்கும்

திண்டிறல் சேரிந்திரியம்பத்துக்கும் — மாறுபடாத வல்லமையே வெற்றியாகவுடைய சோத்திரந் தொக்கு சக்ஷு சிங்ஙிவை யாக்கிராணமாகிய ஞானேந்திரியங்களைந்தும் வாக்கு பாதம் பாணி பாயுருவுபத்தமாகிய கன்மேந்திரியமைந்தும் ஆகப்பத்தாகியவிவைகளுக்கும்

ஈரைந்து மாத்திரைக்கும் — சத்த பரிச ரூப ரச கந்தமும், வசன கமன தான விசர்க்கம் ஆனந்தமுமானபத்துக்கும்

ஐந்தமிலா பூதங்களைந்துக்கும் — தனுவுள்ளமட்டுங் காரியகாரணங்களாயழியாதுநின்றுபகரிக்கும் ப்ருதிவி யப்பு தேயு வாயு வாகாசமென்னும் பூதமைந்துக்கும்

சிந்தை கவர், மூன்றுகுற்றம்

சித்தத்தை நல்வழி சிந்தியாதபடி பற்றிக்கொண்டு நோக்காடுசெய்யும் ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் ஆதியாத்மிகமாகிய தாபத்ரயங்களுக்கும் அன்றியுங் காமம் வெகுளி மயக்கமுமாமெனவறிக.

மூன்று குணம்

சாத்விக மிராசதந் தாமதமாகிய முக்குணங்களுக்கும்

மூன்றுமலம்

முதற்காரணமாகிய வாணவமு மாயையுங் கன்மமுமாகிய மூன்றுக்கும்

மூன்றவத்தை-

கேவல சகல மத்யமாகிய மூன்றவத்தைகளுக்கும்

ஒன்றுநின்று செய்யுமிருவினைக்கும்—

தனதுசதந்தரமாகவந்தவேளை முறைபிறழாதுபொருந்திப் புசிப்பிக்கும் புண்ணியபாவங்களுக்கும்

தோன்றாத, வாயுவொருபத்துக்கும்

பிரத்யக்ஷமல்லாத பிராணன் அபானன் உதானன் வ்யானன் சமானன் நாகன் கூர்மன் கிரிகரன் தேவதத்தன் தனஞ்சயன் ஆகப்பத்தாய வாயுக்களுக்கும்

மாருதவல்வினையே - யாயகிளைக்கும்

ஒருக்காலு மிதஞ்சொல்லாது பெற்றதினுமைமயாது குறைகளைச்சொல்லி யாதியேதொன்றுதொட்டு வரப்பட்ட மாதாபிதா மாதுலன் முதலாயினோர்க்கும்

அருநிதிக்கும்—

மிகவும் வருந்தித்தேடப்பட்ட திரவியத்தின்பொருட்டும்

நேயமா, மிச்சைகிரியையி

அன்புடனே பற்பலவாய வினைகளின் பொருட்டாக விச்சா ஞானக் கிரியாசெ

ளைதரித்தற்கு — ருபராகி யவ்விடத்துத் தன்னை வினையைத் தலைவனை யூன்றிப்பாராமல் விஷயாதியின்பொருட்டு

எண்ணிலா — வச்சங் கொடுமை யவை பூண்டு— அவைகளுக்கேற்றதொழில்செய்யுமிடத்து எப்படியாமோவென்னுஞ் சங்கையில்லாதபயத்துடனும் அவைமுடித்தற்பொருட்டுச்சாருந் தாக்ஷண்யமில்லாமையுங் கலருகத் தரித்து

கச்சரவன், நீ ரினிலேயில்லாது — அரையிலே மகாநாகத்தைக் கச்சையாகச்சாத்தியருளுஞ் சிவனருளிச்செய்த திவ்யாகமங்களினுண்டான வசனத்துவழி யாகதரியாமல்

இன்றாம் பல்கருவி—வாரிலகப்பட்டு மயங்கினேன்— ஒன்றுபோயவழியொன்றுபோகாமலிருக்க வதனாலேயம்பெடுத்துப்பல்வகையான தத்வங்களின் கூதாய குஷிவார்ச்சுத்தியிற்பொருந்தி மருண்டேன்

தெருங்கால், — விசாரிக்குமிடத்து

உன்னையொழிய வுறவில்லையென்னுமது—தன்னையறிவை — எனக்குச்சகாவாய், யான்படும் பலவாய துயர்நீக்குகைக்கு நீயன்றியிலே பொருவருமில்லையென்பதை நீதானேயறிவையே! அதாவது, எனக்குவிட்டுநீங்காத தானமாகவுடையையாகவி னியறிவையே

தனியறிவை— பாசவறிவு பசுவறிவுபோலாதுஎப்போதுமொருபடித்தா யெல்லாவறிவுக்குந்தான்முதன்மையாய்த தனக்கொரு சகாவேண்டுமென்பதில்லா ஒப்பற்ற சிவஞானத்தை

முன்னம், தலைப்பட்டார் தீரத்துறந்தார் மயங்கி-வலைப்பட்டார் மற்றையவரென்று—

பூர்வத்தில் புறப்பற்றாகிய பொருட்பற்றும் அகப்பற்றாகிய விரண்டுடம்பிற்பற்று முற்றத்துறந்தவர்களே சிவஞானம்பெற்றவர்கள். இதிலியாதானுமொன்றிற் சிறிதாயினும் பற்றிருந்ததாயி னவர்களே ஜனனமரணமாகிய பந்தமுற்றவர்களென்று

நிலைத் தமிழின், றெய்வப்புலமைத் திருவள்ளுவருரைத்த-மெய்வைத்த சொல்லை விரும்பாமல்—

தமிழ்நிலையிட்டுச் சங்கப்பலகை யிடங்கொடுத்தேறியிருந்த நாற்பத்தொன்பது பேர்களையும் விழத்தள்ளித்தனக்குமாத்திரஞ் சங்கப்பலகையாகக்குறுக்கின குறள்வெண்பாவின் சொல்லும்பொருளு நாவிடங்கொண்ட தெய்வீகவித்வானென வழங்கிய வள்ளுவநாயனாரோதியருளின சத்ய வாசகப்பயனை யாசையாகப்பாராமல்

ஐவர்க்கு, மாவதுவே செய்தங் கவர்வழியைத் தப்பாமற்-பாவமெனும் பவ்வப்பரப்பழுந்தி—

பஞ்சேந்திரியங்க ளதுவதுவேண்டிய விஷயத்திற் செல்வதற் கன்யமாக மாறுபடாமலதற்கேற்கப்பொருந்தி யதன்வரம்புகடவாதுநிற்க வதனால்விளைந்தபாவமாகிய நரகசமுத்திரத்திலே தாழக் கரைகாணாதவண்ணமமுக்குண்டு

பூவையர்தங், கண்வலையிற் பட்டுக் கலவிக்கலைபயின்று

மீண்டுவெளிப்பட்டவிடத்தினு மெல்லியராகியமாதர் தம் மான்விழிபோன்ற விழிபிறழ்வின் பாசப்பிணிப்பினுக்குள்ளாயவர்களுடனே கூடுதற்குவேண்டிய அமரகங் கொக்கோகமுதலிய நூலின்பயனைப்புத்திபண்ணி

அங்கு-உண்மைநிலை யுணர்ச்சியோராமல்— மெய்யாகிய ஞானத்தைத் தரப்பட்ட நூல்களைப்படித்தறியாமல்

திண்மையிலூ, லூவிற்கொடுமைபலபிதற்றி அறிவு சிறிதும்புகப்படாமற் சிக்கென்று நெஞ்சாகையா லூவாற்கடினமானகற்றுக்கதறியும்

நாடோறும்- தினந்தினமிந்தப்படி

சாவிற் பிறப்பிற் றலைப்பட்டிங்கு— இறக்கிறதும பிறக்கிறதுமே மேம்பாடாகப்பூண்டுதிரியும்

ஆவிநிலை, நிற்கும்வகை பாராய் நிலையானநெஞ்சமே- இப்படி யின்னதுவன்றியிலே சரிக்குமான்மாவாகியநானைசவற வொன்றினும்படாம லிருக்குநிலைக்கானவுபாயஞ் சிந்தியாய், நீயேநானேயென்று பேதமில்லாத சத்தியாகியமனமே!

பொற்புடனே யதனை புகலக்கேள்— அதற்கு வகையாவதெப்படியாமென்று கேட்பாயாகில்? உனக்குநன்று யழகுறத் தெரியும்படி நான்சொல்லுகிறேன்கேள்

வெற்பின் மிசை, வந்திருக்கவல்லான் தென்றிசை புனிதமாகவுந் தேவர்களிருடிகள்பொருட்டாகவுந் திவ்யமூனதிருமேனியாக வுமையுடனே வெள்ளிமயமாகிய கைலாயமலையி னுச்சியிலே யெழுந்தருளியிருக்குந் தகுதியையுடையவன்

மதியாதார்வல்லரணஞ்-செ அதுவன்றியிலுந் தங்கள்தவமிகுதியின் கர்வத்தாலுங் கோட்டைவலியின் பலத்

ந்தழலின் மூழ்கச் சிரித்தபிரான்— தாலுந் தேவர்களிருடிகளொருவருமெண்ணிக்கையில்லாததுபோல அவர்களுடனொப்பாக நினைந்திருந்த முப்புராதிகளுமவர்களுடைய கோட்டையுஞ் சிவந்தவக்னி சமுத்ரத்திலே காணாமற்போம்படி கோபாக்னியாகிய சிறுநகைசெய்தருளின ஸ்வாமி

அந்தமிலா, வேதமுடிவில் விளைவில்விளைவி லொளி- அப்படிப் பிரத்யக்ஷமான திருமேனியாயினுஞ் சர்வசப்தங்களையுந் தனக்குள்ளேயடக்கி முடிவில்லாமலிருக்கும் வேதத்தின் முற்பரியதின்பொருளுக்குத் தொனியத்தமான வறிவானது

ஆதியமலனி மலனருள்— முதலே மலமில்லாத நின்மலருயினுங் கிருபையானவன்

போத, வறிவி லறிவை யறியுமவர்கள் குறியுள் புகுதுங் குணவன்— எல்லாவறிவுக்கு மேலானஞானமுமதற்குத்தலைமையுந் தரிசித்த ஞானிகடிருமேனிக்கடிருமேனியே தனது திருமேனியாகவுடைய வியற்கையன்

நெறிதொள், வெளியில்வெளி யில்வெளியன் ப்ருதிவியிருக வடைவேதாரப்பட்டவாகாசவெளிக்கும் வெளியாகிய பிரகிருதி வெளி யதற்குக்காரணமாகிய கலையான வெளியிலே நிலையானவன்

வெளியில்- அந்தக் கலாதத்வத்திலிருந்து மதிற்றேய்விலாதவன்

ஒளியிலொளி யிலொளியன்— அந்தக்கலைக்குமேலாகிய வொளியான வசுத்தமாயையொளி யதற்குமேலாகிய சு

குந்தேவனாகச் சலனமற்று ஒளியாய்வழங்குவதற்கெல்லாந் தானொளிகொடுப்பதாய்ப் பெருமையுடைய பிறப்பை

உளக்கண்ணுக், கல்லாது தோன்றுவமல னகிலமெலா - நில்லாம னின்றநிலையினான் —

தற்றெரிசனிக ளறிவின்கண்ணே தோன்றுவதன்றிக் கடபடாதிகள்போல ஊனக்கண்களுக்குக் காணப்படாதவன் அனாதிமலமில்லாதவன் அண்டங்கள் புவனங்களியாவையினுமதன்கண்வாழுந் தாபரசங்கமங்கள்மட்டுந் தோன்றாத்துணையாய்நிற்பதுதானே நிலைமையானவன்

சொல்லாரு, பீசன் பெருமையிருவினையேயின்றுனக்குப் - பேசுந்தகைமையெலாம்பேணிக்கேள் —

கன்மமல மாயாமல மிரண்டுநீங்கின வஞ்ஞானவான்மாக்க ளெண்ணிறந்தபடியாக வேதாகமங்களாலே திருவுளம்பற்றப்பட்ட புகழையுடைய சிவனதுசரித்திரத்தைப் புண்ணியபாவப்பகுதியாகிய கன்மமல மாயாமல பந்தனாகியயானுமிப்போது மென்னாலியன்றமரியாதி யுனக்கின்னுமொருவகைத் தகுதிப்பட சொல்லுகிறேன். அதைநன்றாகப் புத்திபண்ணிக் கேட்பாயாக

பாசம், பலவுங்கடந்து பரிந்தருள்சேர் பண்பாற் - குலவி விளங்கு குணக்குன்றேன் —

காமியம் மாயை யாணவமென்னு மும்மலத்தின்காரியகாரணங்களை யறிந்துநீங்கின வுபசாரத்துடன் சிவஞானசம்பந்தரான வான்மாக்க ளிருதயமான பொதுவெளியிலே விளங்கிநின்ற குணமானமலையான். இதுவன்றி யெண்ணிறந்தபடித்தாகும் பிணிப்பையுடைய வைவகைச்சத்திகளினது வியாத்தி வியாபகங்களுக்கப்பா

லர்கியு மதனுட்கட்டுற் றிலக்கமிலவாய வுயிர்க ளிலையக் கந்தரம்போற் றலையளிசெய்யும் பேரறிவாய துவேபொருந்தும் இல்லைப்பொதுவி லியாவருங்கண்டு மகிழ்வுண்டாக நட்டம்பயில்வனவேகுணமான மலையென்றுமாமெனக.

இலகவே, செய்யதருமச் செழுங்கிரியின் மீதிழிந்து— விளங்கச் செய்யப்பட்ட சிவபுண்யமானமலையிலே யிறங்கி

வையம்பரவ மகிழ்ந்தெழுந்து— அபரஞானத்தின்றலைமைகண்டவராது கூர்ந்தவறிவுக்குப் பிரயோசனமாகி யேற்றும்படிக்குச் சந்தோஷத்துடனே வேகமுடைத்தாய்

அங்கு—ஐயங், களவுபயங் காமங் கொலை கோபங் காதி- யளவில்வினையெல்லாமழித்திங்கு— ஒன்றையொன்றாகத் திரியக்காணுதலையுமக்குத் தோன்றுபுத்தோன்றுமாக நினைக்குதலையு மச்சப்படுதலையு மாசைப்பற்றையும் பிறர்வுயிர்வதையையு மகங்காரத்தையு முறுகநீ சத்தியனந்தமான புண்ய பாவங்களையெல்லாங் கெடுத்து

உளமகிழ்ந், தோமெனவேயெங்குமுழங்கிச்சுருதி பயில்- செம்மைதருமாகமங்கள்சேர்ந்தோடி— களிப்புடனே ஜடசித்துக்கள் முற்றுமியல்பாய் நாதமுழக்கஞ்செய்து வேகதினாலே நடந்து ஞானத்தின்பகுதியாய் திவ்யாகமங்களினன்று யறிவாய்ச்சென்று

மும்மலத்தின், காட்டங்க வேர்பறித்து

ஆணவ மாயை காமியமென்று விரிந்திருண்ட காட்டுவிருத்தி நாசமாம்படி யதற்குக் காரணமாகிய கிழங்கைப் பிடுங்கி

கல்விக் கரை கடந்து

சர்வமுமாய்ச் சகலசாத்திரங்களுஞ் சகலசாத்திரத்தின் பொருள்களு முண்டாக்கி யறிகையா லதுவெல்லாந் தனக்குக் கீழாகையாலு மதனளவில்லாவுபடாமையாலுங் கல்வியினது வரம்பையுமுடைத்து

ஐவ்-கோடுபெல்பூதத் துணர் வழித்து—

ப்ருதிவி யப்பு தேயு வாயு வாகாயமென்னு மைந்துபூதமு மைந்து நான்கு மூன்றிரண் டொன்றென்னு மதின் ஐடட்பிரஞ்ஞைக் குணங்களின் விரிவையும் போக்கி

நீடுபுகழ், மெய் வாய் கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற வைவாய வேட்கை யவாவகற்றி—

அனித்யமான ஆரும்பேரும் சூடிமையு மழகும் பெரியனென்னுங்கீர்த்தியை யுநிறுத்தப்பட்ட வான்மாக்கள் சரீரத்தி னிற்கும் பரிசத்தினது தன்மையும் வாயினிடமாக நின்ற சிங்ஙையின் றன்மையு நேத்திரத்தினிடமாய் நின்ற ரூபத்தினது தன்மையுந் துண்டத்தினிடமாக நின்ற வாக்கிராணத்தினது தன்மையும் கர்ணத்தினிடமாக நின்ற சோத்ரத்தினது தன்மையு மிப்படிப் பலவாய தன்மையாய் சிங்கம் போன் றைந்துவாயிருனும் விளைவை விரும்பும் ஞானேந்திரியங்களாற் பற்று மாசையைப்போக்கி

நையுமியல், வாக்குப்பாதம்

தன்னைப் பெருமைக்காகாது கீழ்ப்படுத்திவிக்கு மியல்பினையுடைத்தாகிக் கடின

பாணி பாயுருப தந்தம் பலவு-நீக்கிச் செறிந்து நிறைந்தோடு—

பாடாணமாகச் சொல்லின் விளக்கும் வாக்கையும் பாவவேதுவான காரியத்திலே செல்லக் கால்நின்று கமனிக்கும் பாதத்தையும் கியாதிலாப் பூச்சியங்களைத் தரூவாத புண்ணியத்திற் செய்யாது ஆர்வங்கண்ணேட்டமாகிய பகுத் தர்மத்திலேயிருந்து மிது வேர்கவொன்றென்று விசாரியாமலேற்குங் கையினின்று செய்யும் பாணியினைய முதாரத்தினின்று ஜலத்தையும் மலத்தையும் வேறுவேறுபடுத்தும் பாயுருவையும் விடயானந்தத்தை யிருவகையான கோசுபவக்குறியினின்று விளைக்கு முபத்தத்தையு மிப்படி பலபேதப்பட்ட கன்மேந்திரியங்களைந்தையும் விடுவித்துத் தானெருங்கிய ந்தத்தானங்களெல்லா நிரம்பித்தென்று

போக்கரிய, பந்தமெனுஞ் சோலையறுத்துப் பரந்து

நீக்கப்படாத சங்கற்ப விகற்பமாகிய பொழிற்செறிவை வெளியாகவுருவியுநிறைந்தோடி-

அலைக்கு-மந்த மனம் புத்தியு-ஹங்காரஞ்— சிந்திவிழ, மோதி

நான்கு நான்கு பேதமாக வாட்டுக்காறு மந்தக்கரணங்களினுடைய தற்குணங் கெடத்தாக்கி

அருணீ ரமை போங்கி

பற்பலவாகச் செய்யுந் தத்வங்களின் சேட்டையை நிறுத்தி யாவுஞ் சிவஞானத்தின் றன்மையேயாகிப் பெருக வரப்பண்ணி

விரல் முக்குணமுங்-காதி

சாத்விதம் ராஜதம் தாமதமென்னும் பெயரினையுடைய குணத்ரயங்களின்செயல் பதி மாறிமாறிவரு மிகுவெற்றியையெல்லாந் தனதொருபடித்தாய வின்பநிறையாற் கோபித்து

உரோமமெலாங்கைகலந்து— உடல்முழுவதுள்ளு நிரம்பி மிகுதியாற் புறம்பு புக்கோடி மூன்றரைக்கோடி யுரோம வழியெல்லாஞ் சுகம்பிறந்து மயிர்கள் சிலிர்ப்ப

சீதப், புளகமரும்பப் புலன்மயக்கம்போக்கி- மாயாதனுவி னித்யகுணமான தாபசோபமு மனாதி ஜனனமரண வழலிக்கையுநீக்கித் தட்பமுடையவாய பெருஞ்சுகம்விளையப் புலன்களைந்தின் சிறுதொழிலான் மருட்டுவழிச் சார்த லறப்பண்ணி

வினைவில் புலன் முட்ட மேவி— அண்டத்துந் தனுகரணங்களுக்குக் காரணமாகிய வினைகணிரம்பிய சந்திரமுதற் கலையீரு வறுவகை நிலங்களு மடங்கச் சென்று பாய்ந்து

களபதன, மாதர்மயக்க மறுத்து பசுங்கூட்டாகிய சந்தனங்களினாற் பொதிந்துநெருங்கிய கொங்கைகளையுடைய அங்கனையார்கள் செய்யுங் கோலக்கோட்டிகளால் விழைவுற்றுச் செல்லு மறியாமையை நீக்கி

வளர்மண்டலத்துச் - சோதியொருமூன்றினையுஞ்சோதித்து— அண்டத்தும் பிண்டத்து மெழுதலியல்பாகி வாதனையுடைய வக்னிமண்டல மாதித்தமண்டலஞ் சந்த்ரமண்டலமாகிய முச்சுடர்களுந் தனதுகாருண்யவாணைப்படியே சர்வத்துக்கும்பொதுவாய் நடுவுநிலைமையாயேநில்லாது அதிகாரமலத்தால் விகாரப்படாமல் பார்த்துநிறுத்தி

நீதியினா, லாதாரமாறினுஞ்சென்றுறி மூலாதாரஞ் ஸ்வாதிஷ்டானம் மணிபூரக மனாகதம் விசுத்தி யாஞ்ஞையென்னு மாதாரத்தினடுவே முற்றுநிறைந்து

அடல் வாயுக்கள்-மீதானபத்து மிகப்பரந்து—

ஒன்றோடொன்றுமாறுபட்டுப் பொருதல் புரியும் பிராணன்அபானனுதானன் வியானன் சமானனாகன் கூர்மன் கிருகரன் தேவதத்தன் தனஞ்செயனென்னு மேலாயமாருதமுமண்டத்துக் காரணவாயுப்பத்தும் விளங்க மேற்கொண்டோடி-

காதி,

மேலடாதுகோபித்து

பிரிதிவியப்புதேயு வாயுவாகாயமெனு - முறுதிநிலைமைந்து மோடி—

தேகத்தின்காரியமாய் பஞ்சபூதத்தின்காரணமாகிய வண்டத்ததோமுகமாய் நீடுநிற்குமைவிதமான பூதத்தானங்கள் கலைகளெங்கும்பரந்துநின்று

மறுவிலா, நான்முகன்மாலீசன்மகேசனலஞ்சிறந்த - நான்முகமைந்தாஞ்சதாசிவமு•மானதொரு, விந்துநாதங்கடந்துசுத்தவெறுவெளியி-லந்தமிலாப் பாழடங்கத் தேக்கியபின்—

அண்டத்தும் பிண்டத்து முற்பவநாசகுற்றந்திரா வான்மாக்கள்போலாது கடவுளாகி நிராதாரவதிட்டிதமாகி நிவர்த்திகலை யதிபரானபிரமசிருட்டியையும் பிரதிட்டாகலையினின்று திதிபெற்றுச்செய்யும் விஷ்ணுவின்றிதியையும் வித்தியாகலையினிருந்து சங்காரத்தைச்செய்யு முருத்திரமூர்த்தி சங்காரத்தையுஞ் சாந்திகலையினிலையாகித் திரோபவத்தைப்பண்ணு மகேசுரர் மறைப்புச்செய்தலையு மாகாயபூத விடாபகவந்தமான சாந்தியாதீதகலைக்குக் காரணராகி யனுக்கிரகத்தை பைவசைநிர முடைய முகங்களாற்புரியுஞ் சதாசிவமூர்த்தியனுக்கிரகத்தையு மிந்தக்கலைகளு மிந்த சதாசிவமூர்த்திகளுந் தனுகரணமுதலியவையாகக் காரணமானசுத்தமாயையி னதோமுகமான •விந்துவான பராசத்தியை

யுமந்தச்சுத்தமாயையி னூர்த்வமுகமா யோசைவடிவாகிய வபரநாதத்தையும் பிரகிட்டு மேற்சென்று சுத்தமாயாகாரணங்கடந்து நின்மலமாகி நிராமயமான பரவிந்துவென்னும் பராசத்தியினது முடிவிலாவியாத்தியாகிச் சித்தஞ்செல்லாத சூனியமெங்குங் குறைவறநிரம்பி யவ்வளவிலுஞ்செல்லாது பரந்து

முந்திவரு, மவ்வறிவுக் கப்பாலுஞ்சென்றகண்டமுள்ளடக்கிச் — செவ்வறிவேயாசித் திசைப்பொழிந்திட்டு—

ஞானபாதங்களில் முதற்பேசப்பட்ட பராசத்தி ஞானத்துமேலாகிப் பூரணமான பரநாதத்தையுந் தனக்குள்ளேயாக மேற்றனதெல்லையளவு செறிந்தோடு நீர்மையாய்ச் சுத்தப்பேறிவேயாகி வேறுசந்தேகமில்லாது நிர்க்கு

எவ்வறிவுந், தானுபவிடளித்தித் தன்னிற்பிறிவில்லா — ஆருகிபெவ்வுயிர்க்கு முன்புதந்த—

பாதாளசத்திதொடங்கிப் பரந்தவியாபகமும் பலவாயசத்திகளுமன்றி ஜடசித்தாகிய வெல்லாப்பொருள்களின் ஞானங்களுந் தன்னதேயாகிடவாயினுஞ் சேர்ந்தவுயிர்களுக்குச் சுத்தமுத்தியுங்கொடுத்துத் தனக்கபின்னமான நிரதிகாரத்தக்குத் தான்றிருமேனியாகி யிருந்தாலு மூவகையுமல்லாதவுயிர்களுக் குயிராய்நிற்குந்தன்மையுங் குன்றுதுமாகி

மேனியிலா, வஞ்சவத்தையுங் கடந் தாயபெரும் பேடொளிக்கே — தஞ்சமெனச் சென்றுதலைப்பட்டு—

கண்டிக்கப்படாததாய்ச் சர்வமு நிரம்பித் தூலசூக்குமமான விருவகையிற் சிருட்டி திதி சங்காரந் திரோபவ மனுக்கிரகங்களாய வைந்தவதாரமு மில்லாததாகிப் பரமாய் நிர்மலமாய் நித்தமா யொன்றாய்ச் சருவப்பிராணிகளுக்கு மறிவாகி யசலமாகிப் போதங்களாற் செபபவரிதாய்த் தற்சிவமாகிய மிகு

ந்தவொளியே தனக்குக் காரணமாய்க் கதியாகவுந் தனுடனிரண்டறப்போப்புக்கு, இது வன்றியுஞ் சுத்தாவத்தையிலுண்டாகிய பஞ்சபேதமான வவத்தையுங்கடந்த பேரொளியே கதியாகச்சென்று பாய்ந்தெனவுமாம்

வஞ்ச மறத், தானந்த மில்லாத் தன்னொளியா யோங்கிவரு- மானந்தமென்ப தோரானுடையான்—

சொல்லிப்போந்தவையாவுஞ் செய்யுமிடத்துச் சர்வப்பிராணிகளுக்குந் தத்தம்வினையால் வேறுபாடுகொண்டலல்லது தான்செய்தால் பக்கஞ்சார்தலின்றி முடிவுமுதலென்பதுமில்லவாகிச் சகலவுயிர்களையுந் தனதியல்பி லிருத்துமென்னுநினைவா யளவிறந்தகாருண்ணியந்தானே மென்மேலும்வளர்கின்றமிகும்பசுகந்தானென் தசாங்கப்பொருளுக்காறுப் பக்தியுடையவன்

ஆனந்தம், பன்னூம் பயன் சுருதியாகமங்கள் பார்த்துணர்ந்து - நன்னெறிய தொருநாடுடையான்—

அருளாடைந்த வான்மாக்களுக்குஞ் சுகசொரூபமேசெய்வதற்குக் காரணமாகி யருவிலமையறிதற்குக் காரணக்கருவியான நான்குவேதமு மிருபத்தெட்டு திவ்யாகமமுங் களங்கமறவோதி யதன்முறைப்படிய முடிவையறியச்செய்த மஹாத்துக்களுக்கு மந்தவறிவாற் பொருந்தப்படாது நுண்ணியமான சிற்சத்தித்தானமே தனக்குசுத்தமான நாடாகவுடையவன்

என்னொன், கலையாலுணர்ந்து கருத் தழிந்து காம - நிலையான

விரிந்த வபரஞானமாகிய வறுபத்துநான்குவகைப்பட்ட கலைகளினது ஞானங்களையாராய்ந்து ஒன்றின்கருத்தொன்றுசொல்லாது வெவ்வேறுபேதப்பட்டுச் சொல்லுவையா

தெல்லாமு நீத்த
ங்—கலைவறவே,
தேட்டற்ற சிந்
தைச் சிவஞான
மோனத்தா -
லோட்டற்று வீற்
றிருக்கு முருடை
யான்—

ற் பயனில்லையாமைகண்டு மனதுருகிநொந்து
திரிவிதகரணங்களு மெப்போதும் பற்றுக
வாசைப்படுஞ் சுத்தமாயாபீடத் திருத்தன்
முதலிய கீழுள்ளபோகத்தானங்கள் முடிய
வனித்யமென்று நீத் தருளுருவாற் சலிப்புற
னின்ற வான்மாக்களிடத்திலே யவ்விடத்து
திக்குஞ் சிவஞானமதுவே தனுவாக வான்ம
சகாவிதமாகிய போக்குவரவற்ற பூரணத்வ
ம்வந்தவிடத் தழகுசெறியு மனுபூதியாயபகு
திக்கு நாயகன்

நாட்டத்தாற்,
றெண்ணீ ரருவி
விழச் சிந்தைமய
க்கந் தெளிந்—து
ண்ணீர்மை யெ
ய்த வுரோமமெ
லா— நண்ணும்,
புளகம்புனைமெய்
யர் பொய்யிற்கூ
டாம- லுளகம்ப
ங்கொண் டுள்ளு
ருகி— யளவிலா,
மாலாயிருக்கு ம
வர்மனத்தை வா
ங்கவருள் - மே
லாய் விளங்கலங்

என்பதை-பொய்யிற் கூடாமற் சிந்தைமய
க்கந்தெளிந்து நாட்டத்தாற் றெண்ணீரருவி
விழ வுண்ணீர்மையெய்த வுரோமமெலாநண்
ணும் புளகம்புனை மெய்யருள கம்பங்கொண்
டுள்ளுருகி யளவிலாமாலா யிருக்குமவர்மன
த்தை வாங்கவருள் மேலாய் விளங்கலங்க
ன்மெய்யிரு னெனமாறுக.—பொருளாவது,
மலையினுச்சியி னட்டுத்தெளிந்த நறுநீரான
திடையறுது விழுமாட்போல விரண்டுகண்க
ளினுலுங் கண்ணீர்தாரைவிட வான்மாவினு
டைய வையுறவுநீங்கி யுள்ளே ஞானம்விள
ங்க மயிர்க்கூச்செறுஞ் சுகபுளகமுண்டாகுஞ்
சத்தியத் திருமேனியானவ ரிந்தபிரபஞ்சப்
பொய்யை நீத்தவர்களிடத்திலே கம்பிதமா
ன வானந்தமுண்டாகத் தாமொருபொருளெ
ன்னுந்தன்மைபோய் நீராளமாய்க் கரையிருந்

கன் மெய்யினு ன்— தபர்மும் வாஞ்சையுடைய வான்மாக்கள் செயலானது விஷயாதிகளிற்செல்லாம லிறுத்தித் தன்வயத்தாக்கு மருளே யாவைக்குமதிகமாகத் தோற்றப்பட்டவையை யழகுசெறியமாலையாகத் தரித் தறிவுதானே தடித்தனவே திருமேனியாகவுடையவன்

தோலாத, வானம்புவன மலைகடலேழ்பாதாள- மூனைந்து பூதத் துயிருணர்ச்சி— ஞானமா, யெல்லா மா யல்லவா யெண்ணுவா ரெண்ணத்து— நில்லாமனிற்கு நீள் வாசியான்- பேரிருளாய் வழங்குதலில்லாத வெறுவெளிகளு மிருநூற்றிருபத்துநான்குபுவனங்களுமஷ்டகுலபர்வதங்களுஞ் சப்தசமுத்திரங்களுஞ்சப்தபாதாளங்களு மான்மகோடிகளுக்குடம்புண்டாகைக்கு மூலமுங் காரியப்படுமானபஞ்சபூதமுமந்தவான்மகோடிகளியாவைக்கு மறிவெவ்வளவோ வவ்வளவுக்குத் தேர்தலுள வவ்வளவவ்வள வுதன்றியேயாகியுஞ் சொல்லப்போந்தவையித்தனையுந் தன்னிடத்திலே யுண்டாக்கியுண்டாக்கியும் வினைப்பகுதியால்விளக்குகைடாற் றுனல்லவுமாய் போகமிக்கால் பகுத்தறியு மறிவினர் பகுத்துக் காண்கைக்குக் காணுமையுங் காட்டுவதுமான சித்தர்ய மனவேகமான விச்சை கிரியை ஞானசத்திக ளித்தன்மையவானதே கடுங்குதிரையாகவுடையவன். இதுவன்றி யப்படித்தோய்ந்தும் தோயாமையுமான விசித்ரமான வாசியே வாசியாயுடையனென்க.

சொல்லாரும், பாதாளமேடிருவி ப் பாரேழும் விண் ணேழு - மா ... ஈஸ்வரவார்க்யங்களாலே யதோமுகவுலோ ...ங்களெங்கும் தடையறப் புகுந் ததன்மே ... திடோ யதிற் பிலக்கத்திவுமுதல் புண்ட ...ரீகத்திநி விருகச் சப்ததிவுள்ளுமதன்மேலாகி

தாரமாகி யகன்
ட நிறைந்—தோ
த,வரிதா யெளி
தா யருமறை யா
றங்கத்- துருவா
யுயிரா யுணர்வா
ய்ப்—பெரிதாய்,

பூர்த்தமுகமான பூலோகமுதலாக வடைவே யுயர்ந்த சத்யலோகமீறாக வேழு மேலுலோகங்களுமுள்ளவாய்த் தானிலையாக நிற்கைக்குத் தானமாகி யன்றியு மதன்மேலாய வுலோகங்களாய்க் கண்டிதமன்றி யருவாயிருக்குஞ் சுத்தமாயாலோகமியாவு நிறைந் திப்படியிருந்தாலுஞ் சுட்டிச்சொல்வதற்குக் காட்சியிற் படாது. அணுவில்லாததோ வென்னிற் சுட்டிறந்தாற் சொல்லிற்பட்டதாய் அன்றியு மேலோர்க்கல்லது வுச்சரிக்கப்படாத வேதநான்குஞ் சிக்ஷை கற்பம் வியாகரண நிருத்தஞ் சோதிடஞ் சந்தமென்று சொல்லப்பட்ட வங்கங்களாறும் இவைக்குத் தானல்லது வேறுயிரிலவிலதா யதிற்பிரித்துப் பிரவஞ்சசருவமுஞ் சொல்லுவதா யதுவே யதனுக்குயிரா யதிலே நிச்சயமான தாற்பரியமே யந்தவுயிர்க்கு ஞானமா யிந்தவிதத்தாலாய சரீரமே மிகப்பருத்து

வெய்ய துயர்ப்
பாசமற விசியே
வெம்பிரவித்-து
ய்யகடலைத் துக
ளெழுப்பி—யை
யமுறவு, காமக்
குரோத லோப
மோக மதங் கா
ய்ந்த டார்ந்துச்-
சாமத் தொழிலி
ன்றலைமிதித்து--
நாமத்தாற், கத்
துஞ் சமையக்க

தனது மெய்யடியார்களிடத்தில் கடினப் பிரவிர்த்தியான பொல்லாத பந்தக்கட்டை யற்றுப்போம்படி செய்து திரிவிதகரணங்களிலு வேறுசெய்திக்கிடான பற்பல் ஜனிப்புத் தாபசோபமாய்ப் பற்றுக்கோடாய்க் கரையிறந்து நிலைகாணாத சாகரத்தைப்போலப் பயனிலவாய் ஜனனசாகரத்தை நன்றாய் நசையீரஞ்சிறிதுமில்லாது துகளெழக்கடந்து சந்தேகப்படுவனவும் விஷயவிருப்பு மதனுன்வரும் வெகுளியீயாமை யாதுந்தெரியாமல் மயககிற்படுகை தன்னைமதித்து கெர்வித்தன் முதலானவைகளை வெகுண்டு நெருக்கி மறித்துமறித்துத் திரிவதற்குக் காரணமாய் புவன

ஊக்கின்விறற் க
ட்டறுத்துத்-தத்
தம் பயங்கொலே
களாங் கழித்
தே — தத்திவரு
ம், பாசக்குழாத்
தைப் பட்டவடித்
துட்பாவையர்த-
மாசைக் கருத்
தையறவீசி—நே
சத்தா,லான வே
கங்கொண்டருள்
மும் மதத்தின-
லானையார் தத்து
வங்க ளுள்புகுந்
து—தேனைப், ப
ருகிக் களித்துயர்
ந்து பன்மறைநா
ற்கோட்டான்-ம
ருவித் திகழ்ஞா
ன யானையான்—

போகத்தை நசுங்கமிதித்து வேறுவேறு பெயரிட்டுக் கொள்ளேயச்சம்பொருந்தி தீர்க்கப் பிரயோசனமில்லாத நூலாகிய பர்பலவார்த்தையாகக் குரைக்கும் புறச்சமயிகளாகிய புன்மையர் கோவைசெய் தகுதியின் வெற்றியைச் சின்னபின்னமாகத் துணித்துத் தன்றிறமற்று அச்சமுறல் பிறவுயிர்கோறல் முதலிய செய்வதற் கிசைதலே நாசஞ்செய்து நாடோறு நாடோறும் புனைந்தசெயலுரைகளின் பிணிப்பாற் பெருகிவரும் புத்ரர்முதலாயின முற்றும்வேறாறவட்டுமோதிக் களத்ரப்பற்றைச் சிறிதுமில்லாம லறுத்து அளவற்றகருணையினு லெந்தவித்தத்தினுலே யான்மகோடிகளின் பந்தநீங்குமென்கிற நினைவான் கடினைதானே குணமாகி, அநுவன்றியிலு மந்தக்கிருபைதானே மிக்கவாராமையாகிய மயக்குற்று உமை திரு வாணியென்னு மூன்றுசத்திகளையு மும்மதமாகப் படைத்து அந்தமதங்களைக் குங் கர்வத்தாற் சாதாரணமாகி தேககாரியமான தத்வமெவ்வளவுள வவ்வளவு மதனுட்செறிந்து அந்தத் தத்வங்களுடம்பாய வுயிர்களவைகளினுலே விஷயநுகர்ச்சி நுகர்தற்குரியன். உட்கலந்து நிற்றலாலே யந்தபுவனபோகங்களிற் றனக்குயோக்யமான நிர்மலமாய சுத்தமாயாபோகத்தி லுண்டோ வில்லையோவெனச் சிறிதே தேன்போன்ற தெளிவைக்குடித் ததனுன் மிகுசல்லாபமடைந்து வீறிட்டு மிகவுமுன்னதமாக யாவையினுநீண்டு வெகுவிதமான வேதங்களை

ல்லாவற்றையுந் தனக்கு நாலுகொம்பாகப் பொருந்தி விளங்கா நின்ற கிரியை யிச்சா ஞானமே தனக்கு அங்கமா கொலுயானையாகவுடையவன்

இருமுச், சமயங்கடந்து தனக் கொப்பிலாது—சுமை துன்ப நீக்குந் துவசன்—

உட்சமயங்களான வாமம் வைரவம் மஹாவிரதம் காளாமுகம் பாசுபதம் சைவமாறினுங்கொண்ட பொருணிலைக்கு மேம்பட்டந்தநிலை யந்தவருளினர் நிலைக்கல்லது பின்னை யாவர்க்குங் கட்டாமையா லொப்பற்றுச் சர்வதொழிலையுஞ் சுமற்றிக்கொண்டு அன்புறுமுயிர்களினைவைத்துத் தாமியாவைக்கும் பிராத்திகனென்னு மறிவைவிளக்கி யந்தத் துன்பச்சுமையில்லாதபடி செய்தலா லவையே யவனுக்குக் கொடியாகவுடையவன்.

கமையொன்றித், தம்மை மறந்து தழலொளியுள்ளேயிருத்தி—யிம்மை மறுமை யிரண்டகற்றிச்—செம்மையே, வாயுவையோடா வகைநிறுத்தி வானத்து—வாயுவையுமங்கேயுறவைத்துத்—தேயுவா; லொன்றுமொருதன்மையா

விஷயப்பகுதியாற் புலன்வழிச்சேரலையடக்கித் தாபசோபமாற்றி யுயிரென்று வேறேயொன்றில்லை பிராணவாயுவேயென் றறுதியிட்டு முக்கோணமான மூலாதாரத் தக்கினியைஜொலிப்பதற்காம் வகையாலே ஜொலிக்கப்பண்ணி யிந்தப்பூததனுவிற் புசிப்பும் இதுவன்றிநீங்கித் தேவலோகமுதலான தானங்களுக்கான வுடம்பிற்புசிப்பும் இவையிரண்டுமல்லவா யிந்தத்தனுவிலே சுபாவமாக நடக்கு மிடைபிங்கலையான வாயுக்களிரண்டு நடவாது தம்பிக்கச்செய்து, அதுவன்றியும் புறம்பா யிதற்குச் சகாகாரணமாயுள்ள பூதவாயுவின் சகாயத்தையு நிறுவித்துச் சுழுமுனை நாடியிலுண்டாய வாயுவாலே மூலாதாரத்

யிருக்கு மின்பருளே - நின்றுமுழங்கு நெடுமுரசோன் —

தில் ஜொலிக்கிற வக்னியையெழுப்பி யிலாடத்தானத்துச் சந்திரமண்டலத்திலே தாக்கியதனுண்டாய வமிர்தகசிவாடபுசிப்பாலுள்ளெங்குமின்பாயதுவேபுசித்து முன்னுள்ளதனுக்கு ணரை திரை மூப்பு மிரதமற் றந்தவுடம்பே வஜ்ரகாயமா யிளமைபெற் றளவிறந்தகால நித்யராயிருக்கு மஹாத்மாக்களுள்ளே நீங்காம லெப்பொழுதும் விளங்கிய பேரொலியே பெரிய பேரிகையொலியா யுடையவன்

அன்றியு,மாலுமயனும் வகுத்தளித்த வையமெலாஞ்-சாலு மகற்கப்பாலுமெப்பாலு — மேலே, யுலகுமுலகாலுணர வொண்ணாவுரு-மிலகி நடக்கு மெழிலாணையான் —

அல்லதுபிரமாவினாலே சிருஷ்டிக்கப்பட்டு விஷ்ணுவினாலே யிரக்ஷியாநிற்கின்ற பிரகிருதிக்குக்கீழ்ப்பட்ட வுலகமெங்கும் பெருகினதன்றி யசுத்தமாயையினுடைய வுருத்திரமூர்த்திகளாலே நடக்கப்பட்ட வுலகங்களும், அன்றியினுந் தனித்தனியாகக் கீழுமேலுமுண்டாய வுலகங்களும் அதற்குக்காரணர்கள் மாட்டு யாவைக்குமேலா யசுத்தமாயையினுண்டாய வுலகங்களினு மதிலதிபரிடத்து மான்மாக்க ளறிவாலறியப்படாத குய்யத்தானங்களினும் விளங்கப் பிரகாசித்துச்செல்லு மழகிய வாக்கினையினையுடையவன்

அலகிறந்த,காட்சியான்

எண்ணிறந்த வான்மாக்களுக்குந் தானொருவனே புகலிடமாகவிருந்தாலு மொருப்படித்தாகாம லவரவர் கோட்பாடுகளுக்குத் தக்கதாக வேறுவே றென்றோன் றிசையாதபடியாகக் காணுந்தன்மையன்

காட்சிக்குங் காணான்

உயிர்கட்கு மேலாய ஞானங்கொண்டல்லா
து தற்போதங்களினாற் காணப்படாதவன்

கலைஞான-வாட்சியான்

வேதாகமங்களின் பொருளினாக நிச்ச
யிக்கப்பட்டுள்ளவன்

ஆட்சிக்கு மாயினான்—

அந்த வேதாகமங்களினா னிச்சயநிலை யிட
ப்பட் டவைக்கெல்லாந் தானிலையாதவன்

சூட்சியான்,

தான் மேலாய ஸ்வரூபியாயிருக்கினுஞ் சர்
வான்மாக்களுக்கு மதுவே பேருக்குணையின்
பொருட்டு அவ்வவர்கள்மதத்துக்கீடாக நன்
மைதீமை புசிப்பதற்கு வேதனைவிதமான கா
ரியங்களையு முண்டாக்கப்பட்டுடையவன்

பாருந் திசையும் படரொளியாலே நிறைந்தான்-

பூலோகமெங்கு மெட்டுத்திக்குங் கீழுமே
லுஞ் சஞ்சரிக்கப்பட்ட பரிதி யங்கி யிந்து ம
ற்றுமுள்ளவொளிகட்குத் தானொளியுமா யந்
தவொளிமூர்த்திகளுக்கும் பிரப்பைக்கொடு
த்தள்ளவன்

தூருந் தலையுமிலாத்தோன்றலான்—

ஒருமுதற் சொல்லப்படுமிடத்து அதற்க
டிமுடியுண்டாகையா லப்படிப்போல்வதோ
ரடி நடு வந்தமில்லாதாகித் தானேதோன்றிய
முதலானவன்

வேராகி, வித்தாகிவித்தின் விளைவாகி பேவுதலுச்-சத்தாகி பூதங்கடானாகி—

தாபரசங்கமமென்னு மிருவகைத்திணையிற்
றுபரங்களுக்குப் பொருந்து முயிர்காருங் க
ருவிமுதற் காரணமாகிய பீஜமு மதற்குநிலை
யாகியமூலமு மதன்மேலெழுந்துண்டாம் ப
லை சினை யடை தளிர் பலங்களுமாக்கி சங்க
மங்களுக்குப் பொருந்துமுயிர்க் கதுவதுகளு
க்கேற்குங் காரணங்களுந் தனுக்களுமுண்

டாக்கி யதற்குணடத்துங் காரணபூதங்களை யும்படைத்து அந்தப்பூதாதிக்குக்காரணமாய தன்மாத்திரையாய்ச் சத்தமுதலியவற்றைப் பூதாதியாங்காரத்தினு முண்டாக்குவித்து

சுத்த, வெறு வெளியாய்ப் பாழாய் வெறும்பாழுக்கப்பா-லுறு பொருளாய் நின்றவொருவன்—

அப்படிப் பிரகிருதி மாயாகாரியத்தை யதிஷ்டித் தாக்கினானாயினு மவனுண்மை சொல்லுமிடத்துச் சுத்தமென்றவபரவிந்துவையும் வெளியாய வபரநாதத்தையும் பாழாய பரவிந்துவையும் வெறும்பாழாய பரநாதத்தையுங் கடந் திலைகளிற்றோய்ந்த குணமில்லையாய்த் தகவுணர்ந்தவான்மாக்கள் பெறும்பேறாய்ச் சலனமற்றதனிமுதல்வன்.

அபரவிந்துவைச் சுத்தமென்றது சதாசிவமுதலிய மூர்த்திகளுக்குத் தனுவாகையினானுஞ் சுத்தமாயாமந்திர மிதிற்பிறக்கையானுஞ் சிவசத்திக ளிதிற்றோய்ந்திட்டிருக்கையானு மென வறிக.

அபரநாதத்தை வெறுவெளியென்ற தென்னையெனில்? சிவசத்திகடாக்கின் மேற்கொண்டு பராசத்தி வெளியிற்படருகையாலு மருவாகையானுஞ் சுத்தமாயையி லூர்த்துமுக மாகையானு மவ்விடத்துண்டாவ தியாதுமில்லையாலு மெனவறிக.

பரவிந்துவைப் பாழென்றது அவ்விடத்துப் பொருந்திய வான்மாக்களின் சத்தி செயலில்லாதாகையாலு நித்தநிராமயமாகிய நிர்மலமாகையாலு மெனக்கொள்க.

பரநாதத்தை வெறும்பாழென்றது அந்தத்தானங்களிற் பற்றியவுயிர்க ளுயிரென்பதொருமுதலு மற்று ஞேயந்தானே யாகுகையா லப்படிச்சொன்னதெனவறிக.

அப்பாலுறுபொருளாய்நின்ற வொருவனென்பது திரிபுடியு கஷ்டமான பெறும்பேறு யேகாந்தனுய்நிறைந்த வசலமென்றதெனவறிக. இப்படிப்பட்டவன்

பொறியிலியேன், வெம்பும்பிறவிடலை விழாமல் விடுவித்த—சம்பந்தமாமுனியென் றம்பிரான்—

அப்படி சர்வசூன்யனுகி மறைந்தவனுயினும் பிரத்யக்ஷமாகப் பிரபஞ்சத்திலே சத்தாதியாய விந்திரியங்கள் மெய் வாய் கண் மூக்குச் செவியென்னுந் தானங்களும் வழக்கமில்லாதயான். அதுவன்றியினு மவன்செய்த காரியத்துக்குப் பிருத்தியான பாத்ரமில்லாதயான் துயரவழலினுலே வாட்டும் பிறவிக்கடலி லழுந்தாமல் மோக்ஷத்தைத்தந்து சம்பந்தமாமுனிபென்னு மஹத்தாய நாமத்தினையும்புனைந்தெனக்குச் சாமியுமானுன். இம்மட்டுமல்லாமல்

அம்புவியோர், போற்றுந் திருவடியென் புன்றலைமேலே பொறித்தோன்—

சமுத்ரஞ்சூழ்ந் தழகிய வுலகிலுண்டான மஹத்துக்களும் மானுடராயினுே ரியாவரும் வந்தனைசெய்யப்பட்ட தனதழகிய பாதமிரண்டு மொன்றுமாகாத வீனமான வென்னுடையசிரசி லொருக்காலுமறையாமல் விளங்கவைத்தவன். அவன் நாமரூபியாயிருந்தாலும் அறிவால் விசாரிக்கில்

ஏற்றின் புறத்தமைந்த வெங்கோமான்—

புண்ணியரூபமான விடபநந்தி முதுகின்மேலே யிருக்கப்பட்ட வென்னுடையகர்த்தன்

சாற்றுவார், சாற்றும் பொருளான் றனிமுதல்

பற்பலவாய சமயிக ளவரவர்கள் வேறுவேருகச்சொல்லுஞ்சொற்கு வர்த்தமானவன் ஒன்றேடுங்கூடா தொருவனுகச் சர்வத்

வன்றுனல்லான்- துக்குங் காரணனுயினு மப்படிச்சுட்டிக் காணப்படாதவன்

வேற்றின்ப மில்லா விளங்கொளியான்— நிர்மலமா யழியாததாய் வேறொன்றுவந்து பொருந்தாததா யொப்பற்றதாயிருக்கப்பட்ட சுகசொரூபமாய்ப்பிரகாசிக்கப்பட்டவன் இப்படி நிகழ்த்தலாய்ப் பிரகாசத்தை யுடையனுயினும்

போற்றுங், குருவேடமாகிக் குணங்குறி யொன்றில்லாப் - பெருவேடமாய் நிறைந்த பெம்மான்— மந்தம் மந்ததரம் தீவரம் தீவரதரமென்னு நான்கு சத்திநிபாதமும்பொருந்திய சகலரை யிரக்ஷிக்கைநிமித்தமாக வவர்களறிந்து வழிபடத்தக்க வாசிரியரூபத்தைத் தரித்துளனுயினு நாமரூபக் குணங்குறியிலவாகி யெங்குநிரம்பி யொழியாத திருமேனியான் பெரியகத்தன்

கருவேடங், கட்டுமுருக் கட்டறுத்தான் நால்வகைத்தோற்றத்தி னெழுவகைப்பிறப்பினு மதற்கதற்கேற்ற யோனிகளினுருவாகைக்குக் காரணமான கன்மமல வாணவமல வநாதிப்பிணிப்பைச் சுத்தமாக வறிந்தவன்

கற்றவர்•வாழ் தில்லையான்- வேதாகம சம்பன்னராயுள்ளவர்க ளிரம்பிய வாழ்வுடைய சிதம்பரமாகிய தில்லைவனமே தனக்கூராகவுடையவன். நூலறிவாலே மிக்கவர்களைப் பிரபஞ்சவாழ்க்கையில் வாழுதலிலதாகச் செய்பவனெனவுமாம்.

எட்டுமவர்க் கெட்டா வியல்பினன்— பிரமா விஷ்ணு விருவருஞ் சபதமிட்டுக் கொண்டடிமுடி யறுதியிடுவோமென்று தேட வின்னுங்காணுதவன். அன்றியும் தற்போதமிகுத்தோ ரளவைகொண்டு மட்டிட வந்து மட்டிலடங்காதவன்.

மட்டவிழ் தார், வாரோனான் பவ வி வரக்கண்டுவல்வினையே - னேனோரு மேத்துதல் கண்டேத்தினேன் — முனென்னைப், பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக் கொத்தைப் பெல்லா-நீத்தா னினைவுவேருக்கினா — னேத்தரிய, தொண்ணூற் றறுவர் பயிருக்கிற்றுவக்கறுத்தான் - கண்ணூறு தேனமுதங் காட்டினான் —

ஞானசூரியனாக வென்னுடையஸ்வாமி எழுந்தருளுகையால் மலபந்தமாய்த் திணிந்த பூதவிருளாயந்தகாரமாய் மூடிக்கொண்டிருக்கு மான்மாக்க ளிதயமாகியமொக்கை விகசிதமாக்கி மலர்த்துதலா லதில் ஞானாமிர்த மதுக்கலையுண்டு தேக்கிடப்பெற்ற பிரகாசம் பொருந்திய ஞான சிற்சத்திவடிவாகிய கொன்றைமாலை மார்பிலங்க வெழுந்தருளிவாரா நின்ற பெண்ணாகடந் திருப்படைவீடாகிய மறைஞானசம்பந்தமாமுனி யொன்றுக்கும்பற்றாதவென்னை யடிமைக்கொள்ளும்படி பவனி வரக்கண்டு நல்வினைவல்வினை யிரண்டுமறியாத வெண்பத்துநான்குநூறாயிரம் யோனிபேதத்தில் மொத்துண்டவுயிர்களியாவருங்கண்டானந்தபரவச மடையும் பகுதியில் யானுமோருயிராகக்கண்டு தொழுதேன் அடியேன் பேரிற் சிவோகம்பாவித்துப் பூரண திருஞானப்பார்வைசெய்து யானெனதென்னும் பழவினையாகிய மூலவாணவமலம் திரோதை மாயை கன்மம் மஹாமாயை யிவ்வைந்தினுடைய மூலக்கிழங்கை ஞானாக்கினியினாற் பசையற வெரித்துப் பாழ்படுத்தி யானொரு நாயகபுருடனாகவுந் தமதுதிருவருளை நாயகியாகவும் மனிகள் மத்தமதுக் கலையுண்டு மயங்கிக்கிடப்பதுபோல வென்மனத் தெனக்குத்தெரியாமையாய்ப் பற்றறவேருக்கிப் பசுகரணஞ் சிவகரணமாக்கி யிரதகுளிகையைச்சேர்ந்த செம்புபோல வென்னைத் தன்வசமாக்கித் தத்துவக்குப்பைகளாகிய தொண்ணூற்றறுவரையுங் கீழ்

ப்படுத்திச் சரீரத்துவக்குப்பைகளனைத்தையும் பதைப்பறவறுத்து ஞானானந்தத்திருநோக்கினாலே பேரின்பவெள்ளத்தை யென்னுள்ளும்புறப்பு மொழுகும்படிகாட்டினான். தமது சிற்சத்தி விளங்காநின்ற திருவடியை யடியேனுக் குள்ளபடிகாட்டினான்.

வெண்ணீறும், வேடமும் பூசையுமே மெய்யென்றான் பொய்யென்றான் மாயையும் வாழ்க்கைமனையுமே— பராபரமாகிய வஸ்துவே திருவெண்ணீறும், அகப்பற்றும் பாழ்படுத்திய வடியார்கடிருவேடமும் பஞ்சசுத்திசெய்து சித்திர தீபம்போல மனதைநிறுத்திச்செய்கிற பூஜையுமேமெய்யென்றும், பொய்யான திரவியமும் பிரபஞ்சவாழ்க்கையும் மனைகளும் பொய்யென்றும்

நாடரிய, வஞ்செழுத்தினுள்ளீடறிவித தானஞ்செழுத்தை - நெஞ்சழுத்தி நேசமயமாக்கினான்— சம்பிரதாயவழியிற் கர்ணபாரம்பரையல்லதறியவரிதாகிய வஞ்சக்கரத்துக்கதிதெய்வஞ் சிவமுதன் மலமீறாக வைந்து காரணமு மடைவேநிற்குந் தன்மையுணர்த்தி, அதன்றியந்த மந்திரமிருதயத்திலே நீங்காதபடி வடுப்படச்செய்ததனுண்டா மனுபவத்துக்கு மாசைப்பற்றுண்டாக்கி. இப்படியல்லதி நெஞ்சை வடுவாகவு மிரையாளநிறுத்திமேற் சொல்லாதாரத்தானத்திற் ஞானநேயத்தை நிறுத்தி யதனோடுபொருந்து மாசையையுண்டாக்கி யெனவுமாம்

அஞ்செழுத்தை, யுச்சரிக்குங் கேண்மையுணர்த்தி யதனுச் இலாடந் தாலு இருதய நாபி மூலமாகிய வஞ்சகரணத்திலுஞ் சிகாரமுதலாயமைத்தபடியே யுச்சாரணம் பண்ணும்வகையையு மருளியுள்ளபடியறிந்து, அந்த

சரிப்பு - வைச்சிருக்குமந்த வழியாக்கி—

உச்சாரணம் பண்ணுகைக்கேயக்காரமுமதன்மூர்த்தியையுநிறுத்தி மார்க்கத்திலே

அச்சமறச், - சென்றுவிளக்கை யெழுத்து - ண்டிச் செழுஞ்சுடர் - ஞொன்றியொருவிளங்கினுள் ளொளியாய் — நின்ற, பெருவிளக்கின் பேரொளியாயுள்ளேபிரச - மருவுமலர்போலமதித்து

மனதினுடைய சஞ்சலத்தைநிறுத்தி இந்தச்செய்தொழிலிலே பிரவர்த்தித்து எரியுந் தீபத்தைக் கோல்கொண்டுதூண்டியபோதுண்டாய மிகுபிரபைபோன்றதாகச் சிகாரவக்கரத்தையு மதனைநீங்காத சத்திரூபமான வகரநிலையொத்த தீபநிறமாகவும் அதற்குள்ளே கனற்பொறிநிறம்பெற்று நின்றயகாரமாகியவான்மாவை வகரவொளியானதுபற்றி மேலாய் மிகுந்தசிகரமாகிய நிலையிலே யுச்சரிப்புக்கூட்டி யிலாடமுதலிருதயமீறாக வுள்ளேதான் பாவிப்பித்து இப்படிபாவிக்குமிடத்துப் பூவினுண்டாயதேன் போக்குவரத்தில்லாமலவ்விடத்துப் பருவத்தாயதுபோலப் பாவித்து

அங் — கருவினுருக், கொள்ளாவருளைக் கொளுத்திக் குணங்குறியொன் - றில்லாவிடத்தினிலைப்பாற்றி—

இப்படிப் பாவிப்பித்தவிடத் தந்தப்பாவனையிறக்க வவ்விடத் துண்டாகிய மாயையிற்சேராத வருளைப்பிரவேசிப்பித்து அருளொழியினுமில்லாது காண்டலு முணர்ச்சியிற்படலு மில்லாதாகியதானத்திலே யென்னுடைய ஜனனமரண தாபசோபத்தைப் போக்கினஞேயமான சுகத்திலிருத்தி

விள்ளாத, வுள்ளமுதலாகவு

வாயேதிரக்கவழக்கில்லாம லென்னுயிருடல் பொருளாயதெல்லாந் தான்கொண்

ள்ள தெல்லாம் வாங்க வருநர் - வெள்ள மயலளித்து மேவினான் —

டவனுக் கவனுற் றாப்பட்டது தன்னுடைய கிருபாசமுத்திரமாகத் தலையளிசெய்து பற்றேபற்றாக வாழ்ந்து மயங்கவெனக்குத் தந்து விரண்டற்றவுணர்ச்சியாகக் கூடினான்

கள்ள, மறப்பித்தான் மெய்ஞ்ஞான மாக்கி மனமெல்லா - மிறப்பித்தானென் பிறவியீர்த்தான் —

எனக்குளதாய வஞ்சவத்தையெல்லாம் போக்கிப் பேரறிவேயாகச்செய்து என் கரணச் செயல்யாவையுங்கெடுத்து எனக்குள்ளதாய நடந்தஜனனத்தையு மறுத்தான்

விறற் சொல்லுக், கெட்டானை யாற்றுவெழுதாவியற்குணங்கட் - கெட்டானையாற்றுவெழுந்தினான் —

சர்வசொற்களுக்கு மூலமாய் மேலாய் வேதங்களுக்கு மறுதியிடப்படாதவன் ஒருவராலுஞ் செய்துமுடியாக்கிரமமும் யாவராலு மொப்புதீட்டாசரீரமு முடையவன் பிரபஞ்சசிருஷ்டி யிரக்ஷைகாரணமாகிய மாயாகாரியத்துக் காரியமாகிய குணங்களைப் பொருந்தினானாயினு மதிற்றொய்விலாதவன். ஆகில் அதிற்கறுதி எப்படியென்னில்? என்றும் பசுஞானங்களைப் பொருந்தினானாயினு மதிற்றொய்விலாதவன் ஆகிலதற்கறுதி யெப்படியென்னில், நாற்செய்தியுந் தொழிலுஞ் சரித்திரமுங் காட்டலுமே வதுதானேயியற்கையாகிய சர்வகர்த்திருத்வ முடையவனென்க. இப்படிப்பட்டவனுக்கிலும் வழிபடுமடியார்விதியானவன் அன்றியும் சர்வத்துக்கு முற்பத்திக்காரணமான பிரணவாக்ஷரகாரணன்

மட்டாரும், பாடலாராட

என்பதை - ஆடலாராடல் கணபதியாங் கூடலார் பட்டாரும்பாடலா ராடலார்ப

லார் பண்பலார்
நண்பலா - ராட
லாராடல்கணப
தியாங் — கூட
லார், காணக் கி
டையாதான் கா
ண்பார்க்குக் கா
ட்சியான் - பாண
ர்க்கிலகு பலகை
யிட்டான் —

ண்பலார் நண்பலார் பாணர்க்கிலகு பலகையிட்டான் காணக்கிடையாதான் காண்பார்க்குக்காட்சியான் என்று பொருளுக்கேற்கமாறுக. பொருளாவது-தாளவகை முழுவதுநவநாடகவிதிமுழுவதும் மறிந்தெந்தவேளையினு நடம்புரியாதுபெருகிமிக்க நகரமாகியமதுரையிலே மந்தர மத்திமை தாரகமென்னு மறுதியையுடைய பண்களிராகங்களியாவையுங் கரைகண்டந்தப்பண்களுக்குள்ள தாளவகையையு நூற்றெட்டுத்தாண்டவத்தையு நிலையிட்டதுமன்றிப் பலபேதமாகிய பண்பு முழுவதுங் குணங்களியாவையினு மதிகமான நண்பாயவகையாவுநிறைந்த வடியாராகிய யாழ்ப்பாணநாயனாரேறி யெழுந்தருளியிருந்து தம்மைப்பாடி யாழ்வாசிக்க யுகந்தோறு முகந்தோறும் வித்வமுத்திரையா லயர்ந்தோர்பலரு மேறியிருக்க விட்டுக்கொடுத்து விளங்கப்பட்டுவருஞ் சங்கப்பலகை யாசனம்போட்டருளினவன். அன்றியிலும் பொற்பலகை போட்டருளினனெனவுமாம். எந்தெந்த தந்திரங்களினாலுங் காண்போமென்பவர்க்குங் காணப்படாதவன. தனதருட்காட்சியார்க்குப் பிரத்தியக்ஷமானவன்

சேணிற், சிற
ந்தவுருவான் றி
ருமாலுக் கெட்
டா-நிறைந்ததி
ருவுருவினிற்
போன் —

அதுவன்றியிலு மந்திவானில்விளங்குஞ் சிவப்புப்போன்ற திருமேனியனாயினும் பூமிமுதலஷ்டகாயமளவாக வளர்ந்த விஷ்ணுவுக்கு முயர்ந்தவன். அதுவுமன்றிச் சர்வவண்டங்களினுஞ் சர்வபுவனங்களினு மெண்ணில்வுயிர்கண்மாட்டு மொழியாதமுது பெதிநிரம்பியவன்

கறங்கு — னே, சுழற்சுழல்வங்கிசுழல்கொள்ளிவட்ட மெனு-மாறுகருணையிருள் மாற்றிருன் —

தாபரம் ஊர்வன தேவர்கள் நீர்வாழ்வன பறப்பன நாற்காலுடையன மானுடராயமெழுவகை ஜனனத்து ளெண்பத்துநான்கு நூறுயிரமியோனிவகையினுங் காற்றுடி சுழற்காற்று வட்டஞ்சுற்றும்வங்கு கையிற்பிடித்துச்சுழற்கை இவையின்வேகம்போல மாறிமாறிப்பிறக்கும் வேகச்சுற்றைத் தனதுகிருபையினுலே போக்கிச் சலிப்பறநிறுத்தினுன்

நீறணிந்த, மெய்யனிமல னமல னருள்விடளித்த- வையன்றிவுக் கதிவாயினுன் —

விபூதிதூளனவெளி மீளிருந்திருமேனியன் நிர்மலமானவன் அநாதியே மலமில்லாதவன் தனதுஞானத்தை யெனக்குநிலையாகத் தந்த முன்னேன் சர்வபிராணிகளு மறியும்படிகுதியாய் கிர்த்திக்குத்தான் காரணனுயுள்ளவன்

பொய்யற்பாற், பொய்மையாயநின்றன் புரிந்தவர்தநெஞ்சத்து- மெய்மையாயநின்றுவிளங்கினுன் —

அஞ்ஞானிகளாயுள்ள வான்மாக்களுக்கெல்லாந் தானுண்மைஞானமாகச் சூன்யமாயுந் தன்னை முதலென்றறிந்து வழிபட்ட வான்மாக்களுளத்திற் சத்யமாகத் தோன்றப்பட்டவன்

கைமழுவ, னத்தன்பா னீசென்றடையுமிடத்தை யெலாஞ் - சித்தஞ்சேர் நெ

இப்படிப்பட்டவனுகிலுஞ் சிறியுத்தத்திலே தாருகாவனத்திருடிகள் கோபித்துச் சங்கரிக்கவிட்ட பரசைத் தானே தனக்காயுதமாகச் சதாகாலமுந் தரிக்கப்பட்டவன் என்னுடைய ஸ்வாமி அவன்பக்க

ஞ்சமேசெப்பக் கேள்—

வினிபோமிடத்து நடுவேநடுவே யிடையூறுகளுண்டு அவைகளை யுனக்குளவாகச் சொல்லுகிறேன் அந்தக்கரணங்களின் பகுதியிற்படு மௌனதுள்ளமாகிய சத்தியே! சொல்லக்கேட்பாயாக

நித்தலுமே, பூசிமுடித்துண் டுடுத்துப் பூங்கு ழலார் தங்கல வி-யாசையினி ற் பட்டின்பவா ர்கலிக்கு— ணேசமுற, நின் று திளைக்குமிது முத்தியல்லது வே-றென்றுதி னைக்குமதுமுத் தி— யன்றென், றிலகாயிருளவ கை போலிகலே பேசு-முலகாய தன் பாலொன் றுதே—

நாடோறு நாடோறு மனித்தியமாய்க் குற்றமான சரீரத்தை நித்தியமாகக் குணமெனக்கருதி நலமாகச் சந்தனகளப கஸ்தூரிகளாற் றிமிர்ந்துகொண்டு சுகந்தவகைமாலைகளையுமுடித்து நல்லசாலியன்னத்துடனே பால்முதலிய வஸ்துக்கள்கூடின வறுசுவையமைந்த வைவகையுண்டியும் புசித்து மேலாயபருத்திவர்க்கம்பட்டு பீதாம்பர முதலியதரித்துப் பற்பலவாசனையுடனேகூடி நெய்த்திருண்ட குழலினையுடைய மாதர்களுடனே சரசலீலைபுரியாநி பற்றுகப் போதிக்கப்பட் டவ்விடத்தினுண்டாமினைவிழைச்சாயல் சங்கமச் சிற்றின்பசமுத்திரத்துச்குள் ளழுந்தி விடாது பண்புபெருக வனுபவிப்பதே பிரத்யக்ஷமுத்தி இதுவேயல்லது இந்தச் சரீரத்திலே நித்யருக வோரான்மா வுண்டென்று பிரத்யக்ஷமானச ராசவேயல்லது காணரகிதமாகக் காணுமொருசிவனுண்டென்று மந்தச்சிவயோகத்தை யந்தவான்மா யசரீரியாயிரண்டற்றுப்புசிப்பனென்றும்வேதாகமங்களிற்சொல்லுகிறதெல்லா மல்லவென்று கொள்ளிக்கு நீக்கங்கொடாது

மைபோன் றறியாமையேகுணமாய்ப் பசாசுகள்போலக் குற் றமே யியல்பாய்ச்செய்து திரியுஞ் சார்வாகனிட வேறு மசத் தாயகாட்சியிற்பட்டு நின்றுவிடாதே

பலகாலுந், தாம்பிரமங் கண்டவர் போற் றம்மைக் கண்டாங்கதுவே - நான்பிரம்மென் பவர்பாணன் ஞுதே—

எந்தவேளையினு மெந்தகாலத்தினு மெந் தவவத்தையினு மறவாது தன்னையும் பரத் தையும் பிரித்தறிந்து பெறுவானும் பே றுமாக விரண்டற்றிருக்கும் ஜீவன் முத் தைப்போலக் கருவிக்கத் தான்மாவை த் தரிசித்துத் தானே யகம்பிரமமென்று மாயாவாதிகள்பக்கற் போய்விடாதே

ஊன்றனக்குக், கொன்றிடுவதெல்லாங் கொலையல்லவென்று குறித் - தென்றுமறமே தெய்வமென்றென்றும்—வென்றிப், பொறையேயெனும்புத்தன்பொல்லாத புன்சொன் - மிறையேயிருட்டிவிழாதே—

உடம்பு வளர்க்கும்பொருட்டாக நாற் காலுடையவை பறவைகள் சிலஜந்துமுத லியவைகளைத் தன்பொருட்டாக வொரு வன்வதைத்துப் புசிப்பதாற் றனக்குப்பா வ மில்லையென்று நிருவ்கடித்துக்கொண்டு தன்வயத்தான வான்மகோடிகளுக்கு மு பதேசமாகச்செய்ததுமன்றி தெய்வமென் ப தறுதியாகப் புண்ணியமேதெய்வமாக வுள்ளதென்று நூலுடனுநிச்சயித்து அந் தப்புண்ணியப்பொருளைப் பெருவதற்குக் காரணம் வெற்றியாக நட்புபகையிரண்டி லிடத்தும் விருப்புவெறுப்பற் றிருத்திரு ப்பதாதலா லந்தப்புண்ணியம் பெறலாம் அதுவேநிஜமான முத்தியென்னும் பவுத்தி ரபாவத்துக் கேதுவான வினையார்த்தையி ன் வகையிலேபற்றாய் மயக்குற்றுத் தடுமா ற்றப்பட்டு நின்றுவிடாதே

நிறைமேவி,
வாழ்பவர்போ
ன் மன்னுடம்பி
ன் மன்னுமுரோ
மம் பறித்துத் -
தாழ்வு நினையா
து தூகி ரூனகற்
றி— யாழ்விக்
கு,மஞ்சமகற்று
மது முத்தியெ
ன் றுரைக்கும் -
வஞ்சமனன்பா
ழிமருவாதே—

பக்கஞ்சார்ந்துலகாப்போன்றெவ்வுயிர்க்குமொத்துத் துக்கஞ்செயாது நாடோறுநடப்பாரைப்போலப் புறந்தூய்மையுநீராற்றூய்மைசெய்யாதுடம்புபோலவுடம்புமழுக்கடைந்து புழுதிபுடைத்துத் தலைமுதலாகத் தன்சரீரத்துப்பொருந்தியமயிரெல்லாந் தனதுயிர்வருத்தமுறப்பிடுங்கியுயிர்க்கொலையைத்தவிர்ந்துடையைநீத்துச் சீவரந்தாங்கித் தாழ்வாகியபிறப்புக்கேதுவாய உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமென்னும் பஞ்சஸ்கந்தங்கெடவிருப்பது மோக்ஷமென்றுஞ் சூழ்ச்சியினைத்தவிராது முன்னினுமிகவுடையனாய் சமணருக்குமவன் பிரயோசனத்திலே சென்றுவிடாதே

செஞ்சொல்
புனை,யாதிமறை
போதியதன்ப
யனொன்றுமறி
யா - வேதியர்
சொன்மெய்யெ
ன்று மேவா
தே—

வேறு சந்தேகப்படுவதற்கிடமில்லாமல் விதிவாக்யமே சத்யமாக வெவர்க்கும் பொருந்திய பிரமாணமாய் சர்வநூலுக்கும் பிரதானமாகிக் கடவுட்டன்மையுடைய வேதத்தை நன்றாகவத்யயனம்பண்ணியுமதன்றாற்பரியத்தை முன்னொடுபின்சீர்தூக்கி மறவாதுபார்த்துப் பொருணிச்சயிக்கமாட்டாது கருமமேதுணையென்னும் பாட்டபிரபாகராதிவைதிகர்சொல்லும்போதகத்தைச் சத்தியமென்று புத்திபண்ணியவர்கள்பக்கலிற்போய்விடாதே

ஆதியின்மே, லூற்ற திருநீறுஞ் சிவாலயமு முள்ளத்துச் - செற்ற புலையர்பாற் செல்லாதே—

சர்வகடவுளர்க்குஞ் சர்வாதிகாரத்துக்கு முதலாகிய சிவன்றனது காருண்யமேனியிற் சாத்தியருளும் பெருமையுடைய விபூதியினையும் மஹாலிங்கங்களாய் ஸ்வாயம்புமூர்த்தமாகவெழுந்தருளியிருக்கு மழகிய கோயில்களையும் அன்புடனே தரித்தலும் வணங்கலுமின்றி யவ்விரண்டினுந் த்வேஷமான மனதினையுடைய பிரத்தியக்ஷமான வறிவினுக்கவகோசர் அவர்க ளண்டையிலேபோய்விடாதே

கற்றவருஞ்சேர், வேடமுடன் பூசையருண் மெய்ஞ் ஞானமில்லாத-மூடருடன் கூடிமுயங்காதே—

மாலறநேய மலிந்தவர் வேடமுமென்றும் அந்தரியாகந்தன்னை முத்திசாதன மென்றும் அறியறிவினருளானே யறிந்தென்றும் ஆசானருளாலடிசேர் ஞானமென்றும் இத்தன்மையுடைய மஹாத்துக்களுட னுசாவியிருத்தலா லான்மலாபமு முயிருக்குறுதியுந் தானேவினையும் அந்தவழியினில்லாமலென்போலிகள் போன்றபாஷாண்டியான மூடருடன்கூடினு னல்லறிவுனக்குவரமாட்டாது. அஃதெப்படியென்றால் ஆன்மசத்தி கூடினதுடனே கூடிநிற்குந்தன்மை யதன்சுபாவமாகையால் வீணாயலக்கழிந்து திரியாதே

நீடு, வழித்துப் பிறப்ப தறியா தரனைப்-பழித்துத் திரிபவரைப் பாராதே—

சகலவான்மாக்களையுஞ் சிருஷ்டி திதி, தேவதைகளையுந் தேவேந்திரன்முதலிய தேவர்களையுஞ் சரமசரங்களையுஞ் சர்வமுஞ் சிருஷ்டி திதி சங்காரப்படுத்திச் சகலவான்மாக்களுக்கும் ஜனன மரண மிலைப்பொழித்துத் தமது திருவடிகீழிலிருக்கும்படிச் செய்யுங்

கர்த்தவ்யத்தைப் பழித்துச் சொல்லப்பட்ட
பேரை நீபாராதே

"வரமுடைத்துக்கன்செய்த பாவேள்வி தீமையாகியென்றார்
மேலோர், அன்றியும் ஈசனையன்றித் தேவர்கணத்திடையாரேயோ
என்றார் மேலோர்.

விழித்தருளை
த், தந்தெம்மை
யாண்ட குருஞ்
சம்பந்த மாமுனி
வ - னந்தங்கடந்
தப்பா லாய்நின்
றன் —

சகலமுந் தனதுகாருண்யமாய் விளங்
காநின்ற பொற்பிரகாசமாய்ப் பொருந்தியிரா
நின்ற திருவடியிற் பொருந்தும்படி முன்ன
மே சத்யோநிருவாண தீக்ஷக்கிரமத்திலே
யாறத்துவாசோதித்துக் கலாசோதனை பண்
ணும்போது அடியேனுடைய பொல்லாத கரு
க்குழிக்கும்பியில் குருஸ்வாமி நாடீ சந்தான
வழியா யுள்புக்கி யவ்விடத்து ஞானசூரியனா
கி யெழுந்தருளியிருந்து அத்வாவிற்கட்டுப்ப
ட்டிருந்த சஞ்சித பிராரத்வகன்மத்தைத் தமது ஞானக்கினியி
னாலே பசையற வருள்கூர்ந்து திருநோக்கம்பாலித்து அருட்சத்
தியை நிலைக்கும்படி நிறுத்தி யென்னையுந்தன்னையுங் காட்டி யடி
மைபடைக்கவு மலங்களைப்போக்கவு நாம்வயிரியென்னும் விரக
ண்டாமணியையும் துவசக்கொடியையுங் கட்டியிருக்கிறோமென்
னும் ஆன்மாவைத் தமது திருவடிநீழலின்கீ ழிரண்டறப் புணர்
ந்து பொருந்தும்படிசெய்தான்.

"முத்தாந்தப் பாதகிழற்கீழ்வைப்பனென்னும் ஆரியனாமா
சான்வந் தருளாற்றோன்ற - வான்மாவினடிஞானந் தோன்றுந்
தோன்றத் - தூரியனுஞ் சிவந்தோன்றுந் தானுந்தோன்றுமென்
றார் மேலோர். அன்றியும் பரம்பரையாகையால் குருகொள்லீலை
யுபரிசர்தலீலை சையோகஞ் சம்பிரதாயமென்றார். அன்றியும் அன்
னத்தின்மேலேறி யாடுமணிமயில்போ, லென்னத்தாலென்னையு

யாட் கொண்டானென்றார் மேலோர். அன்றியுமந்த வந்தரங்கத்தி லடியேனுக்குச் சிந்தாமணிபோலுஞ் சிரோரத்னம்போலு முள்ளங்கை நெல்லிக்கனிபோலுங் கருணூலமாகப் போதனென்னு மொருபிள்ளையைக் கட்டளையிட்டாரானகையா லடிமைக்குங் குருவுக்குஞ் சம்பந்தமென்பதற் கோருத்தரம் வாய்திறந்து சொல்லவேண்டுவதில்லை.

அன்றியு முனிவனென்னுங்கருத்து ஒரு வடிவேயினை யடிமைப்படைக்க வெழுந்தருளி யுள்ளபடி கட்டுப்பட்டிருந்த வினைகளை ஞானாக்கினியினாலே பசையற வெரித்ததனாலென்றறிக. சட்டறுத்தெனை யாண்டுகொண்டானென்றார் மேலோர். ஆதவிருள் போமடியிற் பொருந்துமலம்போமென்றார் மேலோர்.

அந்தங்கடந் தப்பாலாய் நின்றானென்பதற் கச்சமயிக ளவரவர்கொண்ட கோட்பாட்டுக் கேற்றபொருளா யதுதனக்கும் வேறாய் உருகாட்டுங் குறியுடைத்தாய் வேதாகமங்க ளனைத்தைப் பிரமாணங்களி லளப்பரிதாய் குறியிறந்தறியு மறிவினுக்கறிவா யப்பாலுக்கப்பாலா யிருந்தான்குரு.

எந்தைபிரான், வீற்றிருக்கு மோலக்கம் — ஏகாந்தமாய் குருவிருந்தவிடம் மனவாக்குக்காயங்களினாலே யளவுபிரமாணஞ் சொல்லிமுடியாது அந்தவிடம் அத்தன் பரதத்துவமென்னுந் திருவிருத்தத்திற் கண்டுகொள்க.

அன்றியும் "ஓங்காரமே நற்றிருவாசியென்றும் உயப்பவென்னுள்ளத்தி னோங்காரமாயென்று மிருப்பது கண்டுகொள்க. குருவிருந்தசேர்லம் ஓமெனுமோங்காரத்துளென்றும் ஓங்காரத்துட் பொருளென்றும் துரியமிறந்திடமென்றும் அத்துவிதப்பொருளென்றும் முப்பாழும் பாழென்றும் அம்மாவிருந்ததுமென்றும் தான்றான் றம்பிரானென்றும் ஆதாரத்தாலே நிராதாரத்தே தசெ

ல்று மீதானத்தேயென்றும் குரவுவாரளங்கணவகே ளொன்றுக் கொன்று குழிமாரவென்றும் நின்றவைசாக்கிரத்துரியமென்றும் முற்றூர்ந்தவித்தியென்றும் உடையானுன்ற னடிமுடியாமுதலேயென்றும் பின்னு மவிறந்தபொருளென்றும் மேலோர் சொல்லுவார்கள். குருவிருந்தகோலங் கூறிதென்றார்மேலோர். அந்தரங்கியமானவிடத்தில்

எப்பியடி விழ்ந் திறைஞ் சிப்-
போற்றி சயசய
போற்றியென—

தங்க ளுயகவிருந்தவிடத்துக்குச் செல்லுகிறதற்குத் தங்குதடை யிடையில்லையென்று நீ ஆன்மசத்தி வேகமாய்ப்போகாதே, கைகட்டி வாய்புதைத்து முந்தானை யொதுக்கிப் பையப்பையச்சென்று விட்டுபாகத்தி லோவியம்போலநில்லு, அந்தவவசரத்திற் சிற்பரன்றிருப்பி நிரம்பியதிருவையுடை னுருமேனக்கம்பாலிக்க வந்தத்திரும்பினமுகத்திற் சிற்சத்திநிற்பள், அந்தவவதரத்தி லுன்னும் புறம்பு மொருதன்மையாக வட்டாங்க பஞ்சாங்க திரிவிதாங்கத்விதாங்க ஏகாங்கமாகவுன் உடையவிழ உடலவிழ உரையவிழ உயிரவிழ உணர்வவிழ உளமவிழ விந்தூடகாரியமும் விழுகும்படியாகத் தண்டனிட்டு "என் கருத்து முடியுமவண்ணமுன்னின்றென்றும் ஏகமாய்நின்றே பின்னையடிகள் உள்ளுவாருள்கிற்றை யுள்ளத்தாட்காணுமேவாவுற்று என்றும் இரும்பைக் காந்தம்வலித்தாற்போலென்றும் திருவுள்ளத்தாதிக்கு மந்தவவதாத்தில் எக்காலமு நிறைகுறைவில்லாமல் நீயிப்படியே வாழ்கவாழ்க வளவிறந்தவடிமைகளு மினிமேலுந் திருவடிக்காளாய் வருகிறவடியார்களுக்கும் அடிமையாக்கி யென்னைப்பாதுகார்த்து ரக்ஷிக்கவேண்டுமென்றும் இமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான்றாள் வாழ்க வென்றார் மேலோர் திரிகரணசுத்தியாய்ச் சிரசின்மேலிற் கைகூப்பி அபிநயமா யடியேன்படு மிடருகளெல்லாம் விண்ணப்பஞ்செய

ஆர்த்தகரி, யன்றுரித்தாய்

தாருகாவனத்து ருஷிகள் மஹாகோபத்துடனபிசாரஹோமஞ்செய்து அந்த ஹோமத்தில்வரப்பட்ட பெருமைபொருந்திய கன்னமதங் கபோலமதங் கோசமத மூன்றுவெள்ளமாய்ப் பெருக வெகுவாங்காரத்துடன் வருகின்ற வெறுமலையென்னு மியானையை கங்காளவேடமாய்வந்த ஸ்வாமியை விழுங்கும்படியனுப்ப வப்படியே யானை ஸ்வாமியைவிழுங்கவுதுகண் டுமையவளஞ்சி விநாயகனைமுன்னடத்திக் கந்தனையிடுக்கிக்கொண்டு த்வஜஸ்தம்பமட்டும்போய்த் திரும்பிப்பார்க்க ஸ்வாமி மான்மழு சூலகபாலங் கடகங் கேடைடம் வரதமபையமுடைய அஷ்டபாணியாய் விரட்டேசரமூர்த்தமா யானை வீறிட்டலறும்படி தலைகீழாகமிதித்து அட்டகாசஞ்செய்து யானையைக் கிழித்துப் போர்வையாகத் தரித்துகொண்டு குருஸ்வாமி யானந்தநிருத்தஞ்செய்ததைக்கண் டுமையவள் ஸ்வாமிபக்கத்தில் வந்து திருவாய்மலர்ந்தருளினாள் ஆதலால்

தினபவனி யாதரித்தாரெல்லோரும்—

இரண்டாயிரந் தந்தபந்தியையுடைய வைராவதத்தின்மே லெழுந்தருளி பவனிவருகிற ஸ்வாமியைக்கண்டு தேவர்கள் பொன்மாரி புஷ்பமாரிபொழியத் தேவதுந்துபிமுழங்க மூன்றுலோகத்தாரு மடியார்களுந் தோத்திரஞ்செய்து தொழுது பேரானந்தப் பெருவெள்ளத்தழுந்தித் தேக்கிட்டுப் பரவசராகியிருந்தார்கள்

வென்றிமதனம்புபட வீழ்வரோ—

தென்றற்றேராகவு மிரவுயானையாகவுங் குத்தைகுதிரையாகவும் பெண்கள் பதாதியாகவுஞ் சந்திரன் குடையாகவும் சமுத்திரம் பேரியாகவும் ரதி தேவியாகவும் பூஞ்சோலை பாசறையாகவும் கரும்பு வில்லாகவும் வண்டுகா

ணாகவும் அரவிந்தம் சூதம் அசோகு முல்லை நீலோற்பலம் பாண மாகவும் இப்படி வெற்றிபொருந்தி மூன்று லோகத்தாரையுந் தனதுவசப்படுத்த வல்லமையுடைய மன்மதன் மாய்கையில் வீழார்கள்.

உம்முடைய பவனிகண்டபேர் "யானையிரதம் பரியா ளவையில்லை, தானுமனங்கன் றனுக்கரும்பு-தேனார், மலரம்பால்வென்று வடிப்படுத்தான்மார, னுலகங்கண்மூன்று மொருங்கு. என்றார் மேலோர். இப்படி நொய்பவனுளையால் மதனம்புக் கிளையாரென்றார் மேலோர்.

என்று, நில்லாதுசெல்வ நில்லையென்றுணர்ந்திடப்- பொல்லாநரகிற்புகுவீரா—

பிரமவிஷ்ணுக்கள் தேவேந்திரன்முதலாகிய செல்வமு மதோமுகவுடுக்குகளி லிருக்கப்பட்டபேர்கள்செல்வமும் பெரிதென்று மனவாக்குக்காயத்திலு மெண்ணுவதில்லை செல்வங்கழுவேலத்துஞ் செல்வஞ்செல்வமே என்றார்மேலோர் அப்படியெண்ணும லவர்கள்செல்வத்துக் கவாவாகி நரகவேதனைப்பட் டுழலார்க ளும்முடையதிருவடி கண்டபேர்

பல்லோருங், கதறுஞ் சமயக் கணக்கிற் படுவரோ-சிற்றம்பலகார் றிசைப்பவீர—

சகல வேதாகம புராண கலைஞானம் சைவாங்கு மற்றுமுள்ள சாத்திரங்களிவைகளைத்துஞ் சைவசித்தாந்த சமயமேசமயம் யாஞ்சிவமே அதற்குக் காருண்யமான பொருளென்று சொல்லிமுறையிட பதிபசுபாசத்தினுண்மையை விளங்கச்சொல்லு மெய்கண்டசந்தானமேசந்தானம் அதைப்பெரிதென்றெண்ணுமல் மனம் பலவாலுந் திகைத்துத்திரியார்கள்

தலைப்படுசொல்லினுக்குந் தளராரென்றார்மேலோர், அன்றியும் புறச்சமயிகள்மார்க்கத்திற் செல்லார்கள் வாழ்வெனுமையல்விட்டு பேரிளமதியினானைப் போற்றுவாரருள்பெற்றாரே என்றார்மேலோர்.

முத்தம்,பொருதநகைமடவார் புணர்கலவியின்ப-மருவி மயங்கி வருவரோ—

பேதைமுதற் பேரிளம்பெணந்தஞ் சிறியன்தந்தபந்திகளைக்கண்டு முல்லையரும்பு மாதளம்பழவித்து மிகவி வெட்கி நாணும் பெண்கள் பாதாதிகேசமளவுங் கரும்புரசனையென்று அவர்களின்பங் கிஞ்சிதவின்பம் அதைப் பெரிதென்றெண்ணி மயங்கித் திரியார்கள்

இறைவன்கழலேத்துமின்பமின்பமே என்றார்மேலோர்

இருபொழுது, நாளிருபத்தேழு நவக்கிரகமுந் நலியுங்-கோளிதுவென்றெண்ணிக் குறிப்பரோ—

இரவும்பகலு மிருபத்தேழு நக்ஷத்திரமு நவக்கிரகமுங் கோள்களினாலேவரப்பட்ட நலந்தீங்குகளென்றுகுறியார்

வெள்ளை, பெரித்தவிழியாய் நிலையின்பக்கடற்கே-தரித்து மதிமறந்தையல்—

முன்னஞ்சொல்லப்பட்ட வெற்றியையுடைய மன்மதனையெரித்த பாலநேத்திரத்தினுடைய வன்மையை யிவ்வளவென்று சொல்லிமுடியாது. அதுவென்னெனில்?

ஆயநேத்திரத்தினாலே சுடரொளி கொடுத்தபண்டார் நேயமாரொளிகளெல்லாஞ் சிவனாருக்கேசதென்றார் மே

லோர் அந்தவிட நிறைவுகுறைவில்லாதவிடம் அஃதெப்படி யென்றால் அதனுடையநுட்பம் விண்ணுறவடுக்கிய விறகின் வெவ்வழ லுண்ணியபுகிலிவை யொன்றுமில்லையா மென்றார் மேலோர் சகலவான்மாக்களையு மிருவினையொப்பு மலபரிபாகம்வரும்படி யெம்முடையகுரு கருணைகூர்ந்துவிட நேயத்தழுத்தலென்னும் பேரின்பவெள்ளத்தின்ப மிருக்குமிட மிதுவென்று சுட்டிகாண்பிக்குமிடமாய் பிறவிவழக்கறுத் தானந்தவாரியி னெயத்தழுத்த லென்றார்மேலோர் அந்தவிடந் தான்பெறவேணுமென்று தன்மதிமறந்து பேரானந்தப்பெருவெள்ளதின்ப மென்றுகிடைக்குமோவென்று சகோரபக்ஷி சந்திரகிரணத்தைப் புசிக்கக் காத்திருந்துபோலுந் தலையீற்றுக்கன்றானது தாயைப்போவருமென்று அமுதம்புசிக்கக் காத்திருந்ததுபோலும் பேதைமுதற் பேரிளம்பெண்பருவமட்டு மிந்தத்தையலாகியபெண் முன்னைக் குருபரன்செய்த சகாயத்தை மறந்தவளாகையாற் பார்த்துப்பார்த்தேங்கிஏங்கி யிடருற்றாள் அன்றியு முன்னந் நிலைமையென்றுமியற்கைப்பெயரையுடைய சிவசத்தியாலென்னை யநாதியிற் பசுத்துவத்திலே லஞ்ஞானியாயிருக்கின்ற ஞானஹானத்துக்கேதுவாகிய மலமாயாகன்மங்களோடு பொருந்தாமலிருக்க ஷடத்துவாசோதனைசெய் தெடுத்துச் சமருந்தும் பாசக்கூட்டங்கூடாதவகை சின்மாத்திரஞ் சுத்தகேவலமாய்ச் சேட்டிக்கப்பண்ணிய குருவுக்குத்தெரியும்படி சொல்

| | |
|---|---|
| வருத்தமெ | அடியேன்படுந் துயரமெல்லாந் தீர்க்க |
| லாந்தீரவெ | வேணுமென்று நீகுருபரனுக்குத் தெரியும் |
| வுரைத்துச்செ | படிசொல்லிப் பொற்பிரகாசம்பொருந்தி |
| ங்கமலப்பூந் தி | யாயிரத்தெட்டிதழுடைய செங்கமலப் |
| ருத்தாள்-தாரா | பூவினுந் திருத்தாளைத் தரவேணுமென்று |

யெனப்பலகாற் றொழுந் திறைஞ் சி—

கிரசின்பேரிற் கைகூப்பி மும்முறையேதுண்டனிட்டுத்தொழுது தோத்திரஞ்செய்து மயிர்க்கூச்செறிய வந்ததிருவடியினுடையபெருமையினுட்பமும்பாவாராலு மட்டிட்டுச்சொல்லிமுடியாதென்று மேலோர்சொல்லுவார்கள் என்னவெனில்? ஏகமாய்நின்றே யிணையடிகளென்றும் மெய்ச்சுடருக்கெல்லா மொளிவந்தபூங்கழலென்றும் மின்னேரனைய பூங்கழல்களென்றும் போற்றியருளுகநின் றொழியாம்பாதமலா ராதியெழு பருவமுமென்றும் விரவியெனை யெடுத்தாண்ட செய்யதிருவடியென்றும் ஆனந்தவாரியி லான்மாவைத்தானழுத்த ருமெந்தையார்பாதந்தாமென்றும உள்ளும்புறம்பு மொழிவன்றிநின்ற வள்ளன்மைகாட்டு மலரடியென்றும் ஆடவெடுத்திட்டபாதமன்றோ நமையாட்கொண்டதே யென்றும் இப்படிச்சொல்லப்பட்ட திருவடியைத் தரவேணுமென்று திருவடியிலே தாழ்ந்து தண்டம்பண்ணிக்கேள் வேண்டுவார்வேண்டியது மெய்தருகுவானென்றார் மேலோர்

ஏராரும், பூங் கொன்றைவாங் கிப்புகழ்ந்துபுரி நெஞ்சமே-யிங் கொன்ற யாரா யினி.

அழகுபொருந்திய யருட்சத்தியாகிய சிவகந்தம்பரிமளிக்கவும ஆன்மவர்க்கமாகிய மதுகரங்கள் தேன்களையுண்டு தெக்கிட்டுச்சிவோகம் பாவிக்கப்பட்டவுமான கொன்றைமாலையை வாங்கும் படியாய்ப் புகழ்ந்து இன்பத்தைச் செய்யு நெஞ்சமே மீட்டுமென்னுடன் பொருந்தும்படி இவ்விடத்து வந்தினிச்சேருவாயாக. புகழ்வது என்னவென்றால்

''வேண்டுகவேண்டுகமறவாமை யென்றும் இன்னிலைய
தனிலேழையேற்கிரங்கி நின்னதகருணைசொல்லளவின்றெ
ன்றும் உள்குவாருள்கிற்றை யுள்ளத்தாற் காணேனென்று
என்றும் பெண்டான்சமைந்த பெரியவன்றனுட்கொண்டா
னறிவான் றனதுகுணத்தை யென்றும் எழுதாதபுத்தகத்தே
ட்டின்பயனைப் பிறவாதவண்டுமென முண்டவாறே யென்
றும் பேராதருளுதல் பெரியோர்கடனேயென்றும் ஏயவே
ண்டுமென்னும்விதி யின்றென்றும் ஒன்றுகாம லிரண்டா
காமலொன்றுமிரண்டுமின்றாகாம லென்றும் மாலையாமற்ற
மதியென்றும் உரையும்பொருளு முடனுமுயிரும் விரையுமல
ரும்போல் விம்மிப்புரையின்றி யென்றும் மாலைவருகுதென்
றும் மாலாகிருள்கொன்றை மாலைவரக்கண்டு மகிழ்ந்தானெ
ன்றும் தான்றன்றம்பிரானென்றும் இங்ஙனஞ் சொல்லிவந்
த காரணகாரியங்களெல்லா மடியேனுனக்குச் சொன்னகா
ரணமறந்து மயங்கியிருக்கப்போகிறாயென் றுனக்குத்திடம்
வரச்சொன்னது. அடியேன்செய்தபாக்கியங் குருபரனை நீக
ண்டவருடைய திருவடியைக் கண்டபேருக்குத் திங்கில்லை
யென்றாரேமேலோர். உன்கைப்பிள்ளை யுனக்கேயடைக்கல
ம், வெஞ்சேலனையகண்ணார்தம் பஞ்சேரடியாள் பாகத்தொ
ருவா பவனத்திருவாயா லஞ்சேலென்ன வாசைப்பட்டே
ன்கண்டாயம்மானே, அன்றேயென்ற றாவியுமுடலு முடை
மையெல்லாமும் - குன்றேயனையாயென்னையாட் கொண்ட
போதேகொண்டிலையோ - இன்றோரிடையூறெமக்குண்டோ
வெண்டோண் முக்கணெம்மானே-நன்றேசெய்வாய் பிழை
செய்வாய் நானோவிதற்குநாயகமே, கூசிமொழிந்தருண்ஞா
னக்குறியினின்று-கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித்திரி
யே, மாதாளும்பாகத்தெந்தை யாவர்கோ னென்னையும்வந்
தாண்டுகொண்டா னியாவர்க்குங்குடியல்லோ மியாதுமஞ்

சோமேவிரே மவனடியாரடியாரோடு மென்மேலுங்குடை
ந்தாடியாடுவோமே, செங்கமலத்தாளிணைகள் சேரவொட்
டாத் திரிமலங்களறுத் தீசனைச்சேரோடுஞ்செறிந்திட்டங்க
வரோடுந்திருவேட மாலயங்களெல்லா மரனெனவே தொ
ழுதிறைஞ்சி யாடிப்பாடி-யெங்கு மியாமொருவர்க்கு மெளி
யோமல்லோ மியாவர்க்கு மேலோமென்றுமாப்பெய்து
த்-திங்கண்முடியா ரடியாரடியோமென்று, இப்படியெல்லா
மேலோர் திருவுளம்பற்றினார்கள். அன்றியும்

வெண்பா.

அருளினருளை யருளாம்பேரின்பப்
பொருளிற்பொருளாம் பொருளை—குருவாம்
மருதத்தலைவர்கொன்றை மாலைதனை நெஞ்சே
தருகவெனக்கின்று தகும்.

வாராதுவாராது வள்ளிதழ்ப் பூங்கொன்றைத்
தாரார்புயமருதச் சம்பந்தன்—சீரார்ந்த
வெங்கிலுந்தான்சடசித் தாயிருந்தானெஞ்சே
யிங்கிவியுமுண்டோ விடர். எ-று. கண்டுகொள்க.

* வெம்புட்பிறவியலை விழாமல்வீடளித்து
சம்பந்தமாமுனிவன் றார்வாங்கி—யம்புந்தம்
வஞ்சமேவும்விழியார் வல்வினையெல்லாமகல
நெஞ்சமேவாராய் நினைந்து.

நெஞ்சுவிடுதூது மூலமும் உரையும்
முற்றிற்று.

---

* சிலபிரதிகளில் மேலிரு வெண்பாக்களையு நீக்கி இவ்
வெண்பாவை யெழுதப்பட்டுளது.

சிவமயம்.

# உண்மைநெறிவிளக்கம்

எ-து. உண்மை நெறியை விளங்கக்கூறியது.

அது கொடிக்கவி கூறியபின் அவ்வாறநுஷ்டித்தோர்க்குச் சிறிதுஞானந்தோன்றி அத்திருவருண் ஞானத்தின்வழியே பாசநீக்கஞ்சிறிதுற, அதுமுற்றிலுநீங்கிச் சிவப்பேரின்பெய்துமாறு யாங்ஙனமெனவினவ, ஆசிரியர் உலகவழக் கின்பேபோன்று பாசமினாநெஞ்சுவிடுதூதுகூறிப் பாசநீக்கமும் பதிப்பேரின்பு மடையுமாறு தெளிவிக்க, அதனையுணர்ந்தமாணுக்கர் அதனைமேன்மேலு மநுஷ்டித்துப் பயனடையுமாறு வினவ, அதனைத் தசகாரியவகையா லெளிதி லுணருமாறு விளக்கிக்கூறிய திவ்வுண்மைநெறி விளக்கமாகும்.

அன்றியும், சிவஞானபோத உண்மையினையும் ஆகமங்களினுண்மையினையும் உண்மைவிளக்கமாகத் தமது பரமாசிரியர் மாணுக்கர் மனவாசகங்கடந்தார் விளக்கிக்கூறியதேபோல் தாமு மவ்விரண்டையும் விளக்கி உண்மைநெறிவிளக்கமாக விளக்கினர்.

எவ்வாறென்னில்? மாயை ஆன்மா சிவமென்னு முத்தத்வரூபங்களை யாராய்தலும் அதனைத் தரிசித்தலும் தரிசித்தவற்றில் மயக்கஞ்செய்வதைச் சுத்திசெய்தலும் சுத்திசெய்தபின் னுண்டான ஆநந்தவின்பத்தை யனுபவித்தலுமென வொவ்வொன்றிற்கு மும்மூன்றுவகையாக ஒன்பதுவகைகாட்டி யிவ்வாறுய்ந்து சிவத்துடன் தான்போகித்திருத்தலே பயனெனவும் இதுவேதசகாரியமெனவும் கூறினர்.

அதுவே தத்வரூபம் தத்வதரிசனம் தத்வசுத்தி ஆன்மரூபம் ஆன்மதரிசனம் ஆன்மசுத்தி சிவரூபம் சிவதரிசனம் சிவயோகம் சிவபோகமென்பதாகும்.

அன்றியும், உண்மை - ஆகமவுண்மையை, நெறி - வழியாக, வொழுங்காக, விளக்கம் - விளக்கிக்கூறியது உண்மைநெறிவிளக்க மென்பதூஉமாம். இதன்கருத்தை உண்மைவிளக்க முகவுரையிற் காண்க.

இங்ஙனம்

☞ கொ - ஷண்முகசுந்தர முதலியார்

சென்னை-சிந்தாதிரிப்பேட்டை.

சிவமயம்.

# உண்மைநெறிவிளக்கச் செய்யுளின் கருத்து.





ஆ தசகாரியம்-கO

* இச்செய்யுளினும் உரையினும் சிவபோகமென்பதைச் சிவயோகமெனத் திருத்திவாசிக்க.

முற்றியது.



திருச்சிற்றம்பலம்.

# உண்மைநெறிவிளக்கம்

## மூலமும் உரையும்.



மண்முதற்சிவமதீருய் வடிவுகாண்பதுவேரூப
மண்முதற்சிவமதீருய் மலஞ்சடமென்றல்காட்சி
மண்முதற்சிவம்தீருய் வகையதிற்ருனிலாது
கண்ணுதலருளால்நீங்கல் சுத்தியாய்க்கருதலாமே.

(இ-ள்.) மண்முதற்சிவமதீருய். எ-து. பிருதிவிமுதல் நாதமீருன முப்பத்தாறு தத்துவங்களையும்,— வடிவுகாண்பதுவேரூபம். எ-து. தனுவுங் கரணமும் புவனமும் போகமும் செயலும் பிரேரகமுமாய் நின்றபெருவடிவுங் குணமுந் தொழிலுந் தனக்கு வேருய்க்காண்பதுவே தத்துவரூபமாம்,— மண்முதற்சிவமதீருய் மலஞ்சடமென்றல்காட்சி. எ-து. பிருதிவிமுதல்நாதமீருன முப்பத்தாறு தத்துவங்களையுஞ் சுத்தமாயா அசுத்தமாயா மலத்தினது காரியமென்றுஞ் சடபதார்த்தமென்றுந் தன்ருலே யறியப்பட்டதென்றுந் தன்னறிவிலே விளங்கக் காண்பதுவேதத்துவ தரிசனம்,—மண்முதற் சிவமதீருய் வகையதிற்ருனிலாது. எ-து. பிருதிவிமுதல் நாதமீருன முப்பத்தாறு தத்துவங்களினது விகற்பமாகிய சுட்டறிவுகளிற் ருனில்லாமல், — கண்ணுதலருளால் காண்டல் சுத்தியாய்க் கருதுமன்றே. எ - து. தத்துவங்கள் தன்னைத்தாக்காமல் கானலைத் தண்ணீரென்று கண்டவன் கானலென்றறிந்தவிடத்துத் திரும்

ப விரும்பாததுபோலவுஞ் சொப்பனத்தில் யானையேறிமாலைகு
டக்கண்டவன் விழித்தவிடத் ததுமெய்யாய்க் காணாமல் பொ
ய்யாய்க் கண்டதுபோலவுந்தன்னறிவிலே கண்டுநீங்கித் தான
சைவின்றி யந்நியனா யெங்குநிறைவாய் நித்தியமா யறிவாயுள்
ள முறைமையையறிந்துநிற்பது தத்துவ சுத்தியாமென்று வே
தாகமங்கள் சொல்லும். எ-று. (க)

பாயிருணீங்கிஞானந் தனைக்காண்டலான்மரூப, நீயு
நின்செயலொன்றின்றி நிற்றலேதரிசனந்தான், போயி
வன்றன்மைகெட்டுப் பொருளிற்போயங்குத்தோன்றா
தாயிடலான்மசுத்தி யருணூலின்விதித்தவாறே.

(இ-ள்.) பாயிருணீங்கிஞானந் தனைக்காண்ட லான்மரூபம் எ-து. தேசிகமூர்த்தத்தினது அநுக்கிரகத்தினாலே தன்னையுந் தன்னிடத்திலே பெந்தமாயிருக்கிற தத்துவ விவகாரங்களையுமெவ்விடத்திலுந் தோன்றாமல் சகசமாய் மறைத்து நின்ற வாணவமலத்தையு நீங்கித் தானறியுமுறைமையும் அவனது ஞான மறிவுக்கறிவாய் நின்றுபகரிக்கிற முறைமையுந் தன்னறிவிலே விளங்கக் காண்பதுவே ஆன்மரூபமாம்,—நீயுநின்செயலொன்றின்றிநிற்றலே தரிசனந்தான். எ-து. ஆன்மசெய்தியெவ்விடத்திலுந் தோன்றாமல் தத்துவதாத்திகங்களை யென்னதென்றும் பசுஞானத்தை யானென்றும்நின்ற வசத்தியபோதநீங்கிப் பழைய சிற்றறிவாகிய சுட்டுப்போதங் கழன்றுநிற்பது ஆன்மதரிசனமாம்,— போயிவன்றன்மைகெட்டு. எ-து. தனக்கெனச் செய்தியில்லாதவான்மா தனது சுட்டறி வெவ்விடத்திலுந் தோன்றாமற் கெட்டு,— பொருளிற்போய். எ-து. தன்னிடத்திலே விளங்கப்பட்ட வநுக்கிரகஞானத்திலே தற்பூரணமெல்லா மடங்கித் தனது செய்தியெல்லா மநுக்கிரகத்தினதுசெய்தியாய்,—அங்குத்தோன்றாதாயிடல். எ-து. தன்னை யந்

தஞானமடக்கின முறைமையுந் தானந்த ஞானத்திலே யடங்கின முறைமையு மெவ்விடத்திலுந் தோன்றாமல் பெத்தத்திலே தேகமேதானாயுந் தானேதேகமாகியு நின்றமுறைமைபோலச் சிவமேதானாய் நிற்கவந்ததானால்,—ஆன்மசுத்தியருணூலின் விதித்தவாறே. எ-று. ஆன்மசுத்தியாமென்று வேதாகமங்களின் வழித்திலே யடைந்த ஞாதாக்கள் சொல்லு முறைமையாம். எ-று. (உ)

எவ்வடிவுகளுந்தானா யெழிற்பரைவடிவதாகிக்
கவ்வியமலத்தான்மாவைக் கருதியேயொடுக்கியாக்கிப்
பவ்வம்விண்டகலப்பண்ணிப் பாரிப்பானொருவனன்
செவ்வையேயுயிரிற்காண்டல் சிவரூபமாகுமன்றே [ருவ

(இ-ள்.) எவ்வடிவுகளுந்தானாய். எ-து. ஜடசித்துக்களாகிய தாபரசங்கமங்களு மெல்லாந் தான்வேறற நின்று,—எழிற்பரைவடிவதாகி. எ-து. பெருமைபொருந்தி யிருக்கப்பட்ட காருண்ணியசத்தியே தனக்குத் திருமேனியாகி,—மலத்தான்மாவைக்கருதியே. எ-து. ஆணவமலஞ்சகசமா யிருக்கப்பட்ட வான்மாக்கள் பாகபேதங்களைத் திருவுள்ளத்தடைத்து,— கவ்வியே. எ-து. தனதிச்சாஞானக்கிரியையின் செய்தியாகிய மாயாதத்துவங்களினால்,— ஆக்கி யொடுக்கி. எ-து. சிருஷ்டித்துந்திதித்துஞ் சங்கரித்தும்,— பவ்வம்விண் டகலப்பண்ணி. எ-து. மலபாகவொழிவிலே யிந்தத்தத்துவங்கள் வேறும்படிக்குச் சத்திநிபாதத்தை விளைவித்து,— பாரிப்பானொருவன். எ-து. சத்திநிபாதத்தின் வழியிலே புறம்பே கட்புலனுக்குத் தோன்ற மானிடச்சட்டைசாத்தி யெழுந்தருளிவந்து தான்வேறறநிற்கிறமுறைமையைத் தருகின்றவன் ஆன்மாக்களுக்கெல்லா மறிவுக்கறிவா யிருக்கிற சிவனேயென்று,—செவ்வையேயுயிரிற் காண்டல். எ-து. பிரதிக்கினையேது திட்டாந்தங்களினு

யக்கவிகற்பமறத் தன்னறிவிலே விளங்கக்கண்டு நிற்
சிவரூபமாகுமன்றே. எ-று. சிவனதுரூபமா மென்று
ம்கள் சொல்லும். எ-று. (௩)

ாயுயிரில்யானெனதென் றறநின்றதடியாம் பார்ப்
_மெங்குஞ்சிவமாய்த் தோன்றலதுமுகமாம், உரை
பிறந்தசுகமதுவே முடியாகுமென்றிவ் வுண்மையினை மி
கத்தெளிந்து பொருள்வேறொன்றின்றித், தரைமுதலி
ற்போகாது நிலையினினில்லாது தற்பரையினின்றழுந்
தா தற்புதமேயாகித், தெரிவரியபரமாநந்தத்திற்சேர்த
ல் சிவனுண்மைத்தரிசனமாய்ச் செப்புநூலே.

(இ - ள்.) பரையுயிரில் யானெனதென்றறநின்ற தடியாம்
எ-து. ஆன்மாவென்பதெவ்விடத்திலுந் தோன்றாமலென்ன
தென்றும் யானென்றும் நின்றவசத்திய போதநீங்கத்தேசிக
மூர்த்தத்தி னநுக்கிரகஞானம்பிரகாசித்துநின்ற வவதாரஞ் சி
வனதுபாதமாம்,—பார்ப்பிடமெங்குஞ் சிவமாய்த் தோன்றல
துமுகமாம். எ-து. தன்னையுணர்த்தும் பகுதியாகத் தாக்குவ
தானவிஷய போகங்களை யவனவளதுவாய் நோக்கு மிடமெ
ல்லாமவ னநுக்கிரகத்தையே கண்டநுபவிப்ப தவனது திரு
முகமாம்,—உரையிறந்தசுகமதுவேமுடியாகும். எ-து. அந்தவ
நுக்கிரகத்திலே தற்செயல்தோன்றாமல் பரவசப்படுவதே சி
வனதுதிருமுடியா மென்றறிந்து;—இவ்வுண்மையினைமிகத்தெ
ளிந்து. எ-து. இந்தவுண்மையைச் சந்தேகவிகற்பமற வுள்ள
உவிசாரித்தறிந்து;—பொருள்வேறொன்றின்றி. எ-து. இதுவ
ாமல் சத்தியமாயுள்ள பொருள் வேறேயொன்றில்லை யெ
தெளிந்து;—தரைமுதலிற்போகாது. எ-து. என்னநியா
விகற்பமாகிய பிருதிவிமுதல் நாதமீறாகச்சொல்ல
த்தையிலும் பொருந்தாமல்,—நிலையினினில்

லாது. எ-து. இந்தக்கருவிகள் நீங்கினாற்றனக்குள்ள சகசநிலையாகிய கேவலாவத்தையிலும் பொருந்தாமல்,—தற்பரையினின்றழுந்தாது. எ-து. இந்தக் கேவலசகல மிரண்டுநீங்கின விடத்து விளங்குவதான போதபூரணமாகிய அகம்பிரமஞானத்திலும் பொருந்தாமல்,—அற்புதமேயாகி. எ-து. தேசிகமூர்த்தத்தினநுக்கிரகஞானத்திலே தற்பூரணமெல்லா மடங்கித் தனதுசெய்தியெல்லா மவனதநுக்கிரக ஞானசத்தியினது செய்தியாய்,—தெரிவரியபரமாநந்தத்திற்சேர்தல். எ-து. அறிதற்கரிதாகிய மேலான பூரணவின்பந்தோன்றும லேகதேசவியாபாரமாகிய தநுகரணாதியின்பமேதோன்ற அந்தவின்பங்களையே மெய்யென்றநுபவித்து நின்றமுறைமைபோலத் தநுகரணாதியின்ப மெவ்விடத்திலுந் தோன்றாமல் பூரணவின்பத்தொடர்ச்சியாகிய தேசிகமூர்த்தத்தி னநுக்கிரக ஞானத்தையெவ்விடத்திலுங் கண்டநுபவிப்பது,—சிவனுண்மைத்தரிசனமாய்ச்செப்புநூலே. எ-து. சிவனையுள்ளபடி சத்தியமாகப் பெற்ற தரிசனமென்று சொல்லுஞ்சிவாகமங்கள். எ-று. (சு)

இனியான்மசுத்தியாகிய போதவொழிவும் அருள்கழற்றியும் வருமாறு.

எப்பொருள்வந்துற்றிடினு மப்பொருளைப்பார்த்திங் கெய்துமுயிர்தனைக்கண்டிங் கவ்வுயிர்க்குமேலா, மொப்பிலருள் கண்டுசிவத்துண்மைகண்டிங் குற்றதெல்லா மதனாலேபற்றிநோக்கித், தப்பினைசெய்வதுமதுவே நினைப்புமதுதானே தருமுணர்வுபுசிப்புமது தானேயாகு,மெப்பொருளுமசைவில்லை யெனவந்தப்பொருளோ டிசைவதுவேசிவபோக மெனுமிறைவன்மொழியே.

(இ-ள்.) எப்பொருள்வந்துற்றிடினும். எ-து. ஜடசித்துக்களிரண்டினு நின்றுவிளங்குவதாகிய ஹிதாஹிதங்களுக் கேற்றச

த்தாதி விஷயங்களிலே யெந்த விஷயங்கள் வந்தாக்கினலு
ம்;—அப்பொருளைப்பார்த்து. எ-து. அந்தவிஷயங்களை யெதிரி
ட்டுப்பார்த்து இதுமாயாகாரியமான தனுகரணபுவனபோகங்
களினது விகற்பமென்று மிந்தவிஷயங்களினின்றும் விளங்கு
வதாகிய ஹிதாஹிதங்கள்கன்மத்தினது விகற்பமென்றுங் கண்
டுதனக்கெனச்சற்றுஞ் செய்தியில்லாதஜடரூபமாகையினாலே
தானாய்ச் செயற்படவறியாது, — அங்கெய்துமுயிர்தனைக்க
ண்டு. எ - து. அந்தவிஷயங்களை யதுவதுவாகப் புசிக்குமா
ன்மாவை நித்தியனாய்ப் பூரணனாயறிவாயிருந்தாலும் தானா
கவொன்றையு மறிதற்கறிவில்லையென்னு முறைமையையுள்ள
படிதரிசித்து, — அவ்வுயிர்க்கு மேலா மொப்பிலருள் கண்டு.
எ-து. அந்த ஆன்மாவினது அறிவுக்கறிவாய்நின்று இந்த வி
ஷயபோகங்களை யிடைவிடாமற் பாகமறிந்துணர்த்தி நிற்கிற
திருவருளையுமுள்ளபடிதரிசித்து,—சிவனுண்மைகண்டு. எ-து.
அந்தவருளினது நிறைவெல்லாந் தனது வடிவாகவுடைய பூர
ணவின்பமெனக் கண்டித்துக் குருமூர்த்தமா யெழுந்தருளி
மானிடச்சட்டைதரித்துவந் துபதேசித்தவநுக்கிரகத்தை யுள்
ளபடி தரிசித்து, — இங்குற்றதெல்லாமதனாலேபற்றிநோக்கி.
எ-து. இவ்விடத்திலேவந்து பொருந்தப்பட்ட சத்தாதிவிஷ
யங்களையெல்லா மந்தவநுக்கிரகத்தினாலே பொருந்திப் பார்
த்து, — தப்பினைசெய்வதுமதுவே நினைப்புமது தானே. எ-து.
இந்தவிஷயபோகங்களின் வழித்தாய்த் தீவினையைச்செய்விக்
கிறது மநுக்கிரகமாகிய திருவருள்தானே நல்வினையைச்செ
ய்விக்கிறது மந்தத்திருவருள்தானே, — தருமுணர்வுபுசிப்பு
மதுதானேயாகி. எ-து. இந்தநன்மைதீமைகளை யறியும்படி
க்கு அறிவித்தவறிவு மிந்தநன்மைதீமைகளை யறியும்படிக்குப்
புசிப்பாகிவந்த விஷயபேதங்களு மவ்வநுக்கிரகமாகிய வரு
ள்தானேயென் றுள்ளபடி தரிசித்து,—எப்பொருளுமசைவி

ல்லையென. எ-று. இந்தமுறைமையன்றியிலே சித்தாகியவான்
மவர்க்கத்துக்கும் ஜடமாகிய பாசஜாலங்களுக்கு மொன்றை
யொன்றறியவு மொன்றை யொன்றுபொருந்தவு மொருசற்
றுஞ் செயலில்லை யென்னு முறைமையையுள்ளபடி தரிசித்து
அந்தப் பொருளோடிசைவதுவே,—சிவபோகமெனுமிறைவன்
மொழியே. எ-று. அவனநுக்கிரக பூரணமெல்லாந் தற்பூர
ணமாகவு மிப்படி யிரண்டறநிற்கிறதே சிவனுடனே யிரண்ட
றக் கூடினமுறைமையென்றுஞ் சிவாகமங்கள் சொல்லும்
எ-று. (ரு)

பாதகங்கள்செய்திடினுங் கொலைகளவுகள்ளுப் பயி
ன்றிடினுநெறியல்லா நெறிபயிற்றிவரினுஞ், சாதிநெறி
தப்பிடினுந் தவறுகள்வந்திடினுந் தனக்கெனவோர்செ
யலற்றுத் தானதுவாய்நிற்கி, னாதனவனுடலுயிரா யுண்
டுறங்கிநடந்து நானாபோகங்களையுந் தானாகச்செய்து,
பேதமறநின்றிவனைத் தானாக்கிவிடுவன் பெருகுசிவ
போகமெனப் பேசுநெறியிதுவே.

(இ-ள்.) பாதகங்கள் செய்திடினுங் கொலைகளவு கள்ளுப்ப
யின்றிடினு நெறியல்லா நெறிபயிற்றிவரினுஞ் சாதிநெறிதப்பி
டினுந் தவறுகள்வந்திடினும். எ-று. இப்படிப்பட்ட செய்திய
ல்லாத்தொழில்களைச்செய்தாலும்,— தனக்கெனவோர்செயல
ற்றுத்தானதுவாய்நிற்கில். எ-று. தற்செய லெவ்விடத்திலுந்
தோன்றுமலநுக்கிரகமாகிய வருணிறைவிலேவேறறநிற்கில்,—
நாதனவனுடலுயிராய். எ-று. அந்தவருளுக்கு முதன்மையாகி
யஞேய மவனதறிவு பூரணமெல்லாந்தனது வடிவாகக்கொண்
டுதானந்தவறிவு பூரணத்துக்கெல்லா முயிராய்,—உண்டுறங்கி
நடந்து. எ-று. இவனதறிவு தொழிலாகிய விந்திரியபோகங்
களாய்வரும் புசிப்புந் தொழிலுந் தனது புசிப்புந் தொழி

லுமாகவே புசித்துத் தொழிற்படும், — நானுபோகங்களையுந் தானாகச்செய்து. எ-து. நானாவிதமாகிய போகங்களை யெல்லா மிவனுக்குத் தனது பூரணவின்பமாகிய சேயவடிவாகவேகாட்டி, —பேதமறநின்றிவனைத் தானாக்கிவிடுவன். எ-து. இவனதறிவுபூரணமெல்லாந் தனதின்பப் பூரணமாகவும் தனதின்பப்பூரணமெல்லா மிவனதறிவு பூரணமாகவும் வேறறத்தோன்றி நின்று தனதின்பநிறைவெல்லா மிவனதநுபோக பூரணத்தை யமிழ்த்திநிற்பது, — பெருகுசிவபோகமெனப் பேசுநெறியிதுவே. எ-து. ஜடசித்துருவமாகிய பிரபஞ்ச மெவ்விடத்திலுந் தோன்றாமல் பெருகப்பட்டசிவாநந்த மேலீடாகிய சிவபோகத்தினதுமுறைமை யித்தன்மைத்தென்று சொல்லும் வேதாகமங்கள். எ-று. (அ)

உண்மைநெறிவிளக்கம் மூலமும் உரையும்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

இந்நூலுரையாசிரியர்பெயர் காணப்படவில்லை.

உ

சிவமயம்.

# சங்கற்ப நிராகரணக் கருத்து.

ஈ-று சங்கற்பமும் நிராகரணமும் என உம்மைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாய் நூற்குக் காரணக்குறியாயிற்று.

இது பொதுவாய்ப் புறத்தேகாணு மின்பங்களை யின்புற்றுக்கூறும் புறச்சமயத்தவர்க் கிருளாயுள்ளனவற்றையே மிருதியு முன்னூல்களால் விளக்கியிருப்பதைக் கண்ட ஆசிரியர், சிறப்பால் அகத்தேகாணு மின்பங்களைக் கூறும் அகச்சமயத்தவருள் சைவர்கள் ஐயப்பாட்டின்கண் மருட்கையெய்தி மயங்காது சிவம்விளங்கிச் சாதனையுற்றுப் பயன்பெறுமாறு சங்கற்பமு நிராகரணமாகக் கூறப்பட்டது.

அதுதான், சிவஞானசித்தி விரித்த பரமாசிரியர் புறச்சமயங்களைவிரித்து அகச்சமயத்தை விரித்துக் கூறுமையினதனை விரித்தறியுமாறு கூறியதென்பதூஉமாம்.

அன்றியும், ஞானசாதனை யுறுங்காலத்துச் சித்தாந்த மூப்பொருளாகிய பதி பசு பாசங்களைச் சங்கற்பித்து விதண்டையுறாது பொருளுண்மை கூடும்வர் ஆசிரியர் கூறியவழியே பொதுவாய் நிற்றலையமைவுடைத்து. அவ்வாறன்றி மனம் விதண்டையுறின் இந்நூலாராய்ச்சியுற்றுச் சங்கற்பநிராகரணமெய்திச் சிவயோகந் துய்த்துப் பயனுறுமாறு கூறியதூஉமாகும்.

இனி, புறச்சமயம் அகச்சமயமென்பானேன்? அவரவர் மனதில் சங்கற்பித்தவற்றை யவரவர் வழிபட்டுப் பயனடைகின்றார். அதை யொருவரோடொருவர் மாச்சரிய மூற்

றுத் தூஷித்து நிராகரிப்பானேன் என்னில்? அந்தோமைந்த; நன்று சங்கித்தாய். இந்த மனச்சங்கற்ப மன்றே பிறவிக்கேது. மனச்சங்கற்ப மன்றே புண்யபாவத்தை வருவிப்பது. மனச்சங்கற்பமன்றே இன்ப துன்ப நுகர்ச்சிக்கும் அவற்றே லவையும் பயனுக்கும் (ஹேது) காரணம்.

மனச்சங்கற்பம் நன்மைகடைப்பிடித் தொழுக, நல்லாரைக்காண்பதுவும் நல்லார்சொற் கேட்பதுவும் நல்லாரோடிணங்கி அவரனுபவமாய்க் கூறும்வழியில் நிற்பதுவும் அவர்கூறும் நற்சாத்திரவழி நிற்பதுவும் நன்மைபயக்கும்.

மனச்சங்கற்பம், தீமைநாடி தீயாரைக்கண்டு தீயார் சொற் கேட்டுத் தீயாரோடிணங்கி அவரனுபவமாய்க் கூறும் வழியில் நிற்பதுவும் அவர்கூறும் தீயசாத்திரவழி நிற்பதுவும் தீமைபயக்கும்.

நன்மையால் புண்ணியமும் அவற்றா லின்பமும் கிடைக்கும்.

தீமையால் பாவமும் அவற்றால் துன்பமும் கிடைக்கும். இவைகட்குக் காரணம் மனச்சங்கற்பமே.

இனி சத்குருவையடைந்து நற்சாத்திர வழிநின்று நற்சமயத்தை யநுஷ்டிப்போர்க்கு அதனாலுறும் புண்ணியபோகங்களெய்தும். ஸ்வர்க்கமும் சாலோகாதிபலனும் வரும்.

அசத் குருவையடைந்து மோஹசாத்திர வழிநின்று மோஹசமயத்தை யநுஷ்டிப்போர்க்கு அதனாலுறும் பாசமிகுத்துத் தீமைப் பயன் றரும். நரகலோகாதிவரும்.

அதனால், மனம் சங்கற்பித்த வழி புறச்சமய நெறிபுக் குழல்வோர்க்கு நரகாதிகள் வரும்.

அகச்சமய நெறி யொழுகுவோர்க்குச் சாலோகாதி பலன் வரும்.

புறச்சமயத்துள் தெய்வ முண்டென்போரைப் புறச்சமயத்தவரெனவும், தெய்வநிந்தகரைப் புறப் புறச்சமயத்தரெனவுங் கூறுவர்.

அகச்சமயத்துள் அகச்சமயவழி தெய்வத்தை யுபாசித்து அதனால் ஆன்மாக்கள் பலனடையவேண்டு மென்பாரை அகப் புறச்சமயத்தவரெனவும் பதி பசு பாசமுணர்ந்து பாச நீங்கவேண்டுமென்பாரை அகச்சமயத்தவரெனவுங் கூறுவர்.

இவைகட் கப்பாற்பட்டு நிற்பது சித்தாந்தமுத்தி.

இனி, இன்ன வின்ன சமயம் இன்ன வின்ன சங்கற்பமுடையது, அதை யனுஷ்டிப்போர் இவர். அதனுடைய (தத்துவம்) உண்மையிது, அதை யநுஷ்டிக்கும் சாதன வழியிது, அதன் பயனிது; என அவ்வச்சமயத்தின் சங்கற்பமோதி அதனாலுறும் தீமையினை யுணர்த்தி நிராகரணம் செய்தலே சங்கற்பநிராகரணம்.

இவ்வாறு புறச்சமயத்தை யுணர்த்துவது சித்தியார் பரபக்கம்.

இதுகூறற்போந்த பயன் யாதெனின்? சமயத்தின் பொது நோக்கை யுணர்த்தி அதிலுறுந் துன்பத்தை யின்பமாக மயங்குறு திருக்க நிராகரணம்செய்து சித்தாந்தத்தி னுண்மையும் அதன்பயனு மறிவித்து முத்தியை யடையுமாறு செய்வித்தலாகும்.

சித்தாந்தத்தை யுணர்த்தும் தமிழ் நூற் பதினான்கி னுட் சிறந்த சிவஞானபோதத்துள் இவ்வாறு கூறப்படவில்லை, அதனை விரித்த சிவஞானசித்தியின் சுபக்கத்திலும் கூறப்படவில்லை, அதனைத் தொகுத்த சிவப்பிரகாசத்திலும் கூறப்படவில்லையே யெனின்? அறிவுடையோய் இவ்விரு தகுதியுடையதே! சித்தாந்த சாத்திரங்களாகிய ஆகமங்களுள் ஒன்

ஆகிய ரௌரவாகமத்தில் ஓர் படலமாகிய பாசவிமோசன படலத்துள் ஞானபாதாம்சமாகிய பதி பசு பாச விளக்கத்தினை யுணர்த்தும் த்வாதசசூத்திரமாகியது சிவஞானபோதம். அதனை ஆசிரியர் பரஞ்சோதி மாமுனிவரநுஞ்ஞையின்படி தமிழ் மொழிபெயர்த்த மெய்கண்டதேவர் சூத்திரத்திற்கிணங்கத் தமிழ் மொழிபெயர்த்து, அதன் கருத்துவிளங்க வடநூற் சாம்பிரதாயப்படி வார்த்திகமென்னும் பொழிப்புரையைக் கடாவிடையாற் றமிழிற்செய்து, அது விளங்குமாறு வெண்பாக்களால் உதாரணங்காட்டி, அப்பெயரே விளங்கவித் தமிழ்நூற்கு நாமகரணமுஞ் சூட்டினர். இதனை யிவரநுஞ்ஞையின்படி விரித்தோதிய அருணந்திசிவாசாரியர் தமிழ்நூற் சிவஞானபோதத்தின் வழியே உதாரணங்களோடு விரித்துச் சிவஞானசித்தி சுபக்கம் கூறினர். இதனையே உமாபதிசிவன் தொகுத்துச் சிவப்பிரகாசமாக விளக்கினர்.

இங்ஙனமாக, ரௌரவாகமத்தை யுள்ளிட்ட காமிகாதி வாதுளாந்தமான ஆகமங்களையும் அவற்றி னுபாகமங்களையும் வேத சாத்திர புராணமுதலியவைகளை யுமுணர்ந்த சகலாகம பண்டிதரென்னும் அருணந்தி சிவாசாரியர், தாம் விரித்தோதிய சிவஞானசித்தியுள் கடாவிடையாய் வருவன இன்னின்னார் சங்கற்பமெனவும் அவர்கள் மத மின்னதெனவும் அதனகோட்பா டின்னதெனவும் அதன்பய னின்னதெனவும் அதனால்வரும் திமை யின்னதெனவும் தாமாய்ந்தவாறு உணர்த்துவான் கருதிப் பிறர்மதமும் அவற்றின் மறுப்புங் கூறி அதற்குப் பரபக்கமென்னும் நாமகரணஞ் செய்தனர்.

இதனால், உமாபதி சிவனும் சிவஞானசித்தி பரபக்கம் புறச்சமயங்களின் கருத்தைக் கூறி மறுத்ததேயன்றி அகச்சமயத்தின் கருத்தை விளக்கிற்றிலையே! இங்ஙனமுள்ள வா

திகளு மதற்குத்தக்க நூலின்றியே யிவ்வாறு சங்கிக்கின்றனர் எனக்கருதி; அகச்சமய சங்கற்பமும் அவற்றி னிராகரணமுந் தாமாராய்ந்தவாறு இந்நூலிற்கூறி விளக்கினர்.

அன்றியும், இந்நூற்காரண மிந்நூற் பாயிரத்துட் கூறி யிருக்கின்றதனாலு முணர்க.

மாயாவாதத்தைச் சித்தியார் புறச்சமயத்துட் சேர்த்து மறுக்கிறது, சங்கற்பநிராகரணம் அகச்சமயத்தோடு சேர்த்து நிராகரணஞ்செய்கிறது, இவ்வாறு மாறிமாறி மயங்கக் கூறுவதென்னையெனின், அறியாது கூறினாய்; அதனை யமைதியாய்க் கேட்பாயாக. புறச்சமயம் ஆறு, அகச்சமய மாறு.



| புறச்சமயம். | கூறினோர். | அகச்சமயம். | கூறினோர். |
|---|---|---|---|
| க-உலகாயதம் | ப்ரகஸ்பதி | க-சைவம் | சதாசிவர் [சி |
| உ-பௌத்தம் | பௌத்தன் | உ-பாசுபதம் | மாயாதத்வவா |
| ங-க்ஷபணம் | அருகன் | ங-வாமம் | சக்திதத்வவா |
| ச-பாட்டம் | ஜைமினி | ச-பைரவம் | பைரவர் [சி |
| ரு-மீமாம்சம் | வ்யாசர் | ரு-காளாமுகம் | கலாதத்வவாசி |
| சா-பாஞ்சராத்ரம் | வாசுதேவர் என ஆறு. | சா-மாவிரதம் | வித்யாதத்வவாசி என ஆறு. |

இவ்விலக்கப்படி இதனடின இதனுட்பிரிவுகளைக் கணக்கிடப்பட்டிருக்கிறது. இந்நூலுரையாசிரியர் இதன் பாயிரவுரையுள் இச்சமயங்களை முன்பின் கூறினரேனும் அவ்வவர் தத்வ ஆராய்ச்சியை நோக்கி இலக்க முன்பின் னமைக்கப்பட்டது. அதன்விரிவைத் தத்வப்பிரகாசம் சித்தாந்த ப்ரகாசிகை ம்ருகேந்த்ர பௌஷ்கராதி ஆகமங்களி னறிக.

# இதனுள், புறச்சமயபேதம்.

(※)

## வேதாகமநிந்தகம்.

க-உலகாயதம்

சார்வாகம்

ஷைவாமி என-உ.

உ-புத்தம்

சௌத்ராந்திகம்

யோகாசாரம்

மாத்மீகம்

வைபாடிகம் என-ச.

ந-க்ஷமணம்அல்லதுஅருகம்

நிகண்டம்

ஆஜீவகம் என-உ.

இவ்வெட்டும் வேதாகம நிந்தகம்.

ஜீவ முயற்சியே பயனைத் தருமென்னும்.

---

## வேதவுடம்பாடுடையன.

ச-பாட்டம்

பாட்டாசாரம்

பிரபாகரம்

நையாயிகம்

சத்தப்ரம்மவாதம் என-ச.

ரு-மீமாம்சம்

மீமாம்சம்

பாஸ்கரம்

நிரீச்வரசாங்கியம்

வைசேஷிகம் என-ச

இவ்வெட்டும் வேத வுடம்பாடுடையன. வேதவழி கன்மமியற்றுவோர்க்கு அக் கர்மமே பலனைத் தருமென்னும்.

---

## வேதாந்த வாக்ய பேதம்.

சா-பாஞ்சராத்ரம்

வைணவம்

வைகானசம்

ஜ்யோதிஷம்

மாயாவாதம்

வேதாந்தம்

துவிதம்

அத்விதம் என-அ.

இவ்வெட்டும் வேதாந்த வாக்யபேதமுடையன. தெய்வமொன்றுண்டெனக் கொள்ளும்.

---

ஆக புறச்சமயம் இதுக்குப் பேதம் இருபத்துநான்கு.

# அகச்சமயபேதம்.

———o———

| | | | |
|---|---|---|---|
| க-சைவம் | சுத்தசைவம் | ௩-வாமம் | வாமதந்த்ரம் |
| | அசுத்தசைவம் | | மந்த்ரம் |
| | மிஸ்ரசைவம் | | யந்த்ரம் |
| | சித்தாந்தசைவம் | | ஔஷதம் |
| | அநாதிசைவம் | | கன்மம் |
| | அவாந்தரசைவ | | அத்விதம் |
| | பேதசைவம் | | துவிதம் |
| | அநுசைவம் | | மிஸ்ரம் |
| | ஆதிசைவம் | | வாமசித்தாந்தம் |
| | என-௯. | | என-௯ |

| | | | |
|---|---|---|---|
| உ-பாசுபதம் | பாசுபதம் | ச-பைரவம் | க |
| | சௌரம் | ரு-காளாமுகம் | க |
| | சாந்த்ரம் | சு-மாவிரதம் | க |
| | என-௩. | | |

ஆக உட்சமயம் என்னும் அகச்சமயம் ஆறுக்கு
பேதம் இருபத்துநான்கு.

அகச்சமயம் ஆறும், தெய்வமும் ஆன்மாக்களும் வேறு. ஆன்மாக்கள் தெய்வத்தை வழிபடின் அதனு லெல்லாப் பலனும் பெறலா மென்று கூறுமாயினும், அவ்வவர்கொண்ட தெய்வமே தெய்வமென்னும்.

ஆக புறம் அகமென்னும் உ-இ பிரிவு - கஉ-இ உட்பிரிவு சஅ.

# இனி, அகச்சமயத்தில் சைவத்துள் சித்தாந்தபேதம்.

—(ο)—

க-ஈஶ்வரனைக்யம் க
உ-பாடாணமோக்ஷம் க
ங-சிவாத்விதம்
　　பேதம்
　　சிவசமம் என-உ.
ச-மிச்ரம்
　　சங்க்ராந்தம்
　　ஈஶ்வர வவிகாரம்
　　　　என-உ.

ரு-வாம சித்தாந்தம்
　　நிமித்தகாரண பரிணாமம்
　　சைவம்
　　　　என-உ.
ஆக சித்தாந்தபேதம்-ரு-இ உட்பிரிவு-அ.

---

இச் சித்தாந்த பேத மெட்டைத்தான் சங்கற்பநிராகரணத்தில் அவ்வப் பெயரால் சங்கற்பமு நிராகரணமுமெனப் பதினாறு அகவலாகக் கூறப்பட்டது.

ஆயின், இதன்முன் மாயாவாத சங்கற்பமு நிராகரணமுமெனவிரண் டகவலேன் கூறப்பட்டதெனின், விளக்குவாம். முன் கூறப்பட்ட புறச்சமயத்துள் சு-வது பாஞ்சராத்ரம், வேதவிசாரஞ்செய்து வேதாந்தவாக்கியபேத மெட்டாய்க் கொண்டு அதில் அத்வித மொன்றாய்க் கொள்ளும்.

அகச்சமயத்துள் ங-வது வாமம், ஆகமவிசாரஞ்செய்து அதன் பேத மொன்பதாயக் கொண்டு அதில் அத்வித மொன்றாய்க் கொள்ளும்.

இவ் வத்விதங்கள் யாவும் உண்மையறிந்து உண்மை கூடி உண்மைப்பயனை யனுபவிக்குமாறு கூறாது மயக்குதலால் மாயாவாதம் போலாறவையெனப் பொதுவகையால் மு

ன்வைத்து அதன் பொருளை விளக்கி மறுத்துச் சித்தாந்தந்த முணர்த்தப்புகுந்து, அச் சித்தாந்தத்திற்படும் பேதங்களை யும் அச் சித்தாந்தபேத முன் சமயங்களோடு மயங்குதலையுங்காட்டி நிராகரணஞ்செய்து உண்மைவிளக்கிச் சைவசித்தாந்த உண்மையிதுவென நாட்டிற்று.

வேதம் பொதுவாய், பரமான்மா-சிதான்மா, பேரறிவு-சிற்றறிவு, சிவன்-ஜீவன் என்பன வாதி பெயர்களைக்கூறி அபேதலக்ஷணங் கற்பித்து அத்வித சாதனங்காட்டும். இதனால் ஆன்மா, மாயாலக்ஷணம் பிரமலக்ஷணம் பகுத்துணர்ந்து மாயைநீங்கி பிரமத்தைச் சேர்ந்துச் சிற்றின்பப் பயனைவிட்டுப் பேரின்பப்பயனைப்பொருந்தாது.

ஆகமம், சிறப்பாய் பிரமம் ஆன்மா மாயை யென்பவற்றின் ப்ரமாணம் லக்ஷணம் சாதனம் பயன் என்பவைகளை நன்குணர்த்தும் சித்தாந்தமாய்ப் பதி பசு பாசம் எனப்பெயரிட்டு பதி என்னும் பிரமத்தின் சிறப்பும், ஆன்மா பாசமாகிய மாயையின் பாற்பட்டுப் பசுவாகு மிழிவும், மாயை ஆன்மாக்களை மயக்கிப் பாசம்போற் பிணிக்குங் குணமும் பொருள்த்வனிக்க விளக்கிக்கூறும். அவ் வுயர்வு தாழ்வு தோன்ற முற்பிற்பாடு அமைக்கப்பட்டதும் காண்க.

ஆதலால் வேதப்பொருளை மயங்கி யுணர்வோர் மாயாவாதிகளெனவும், மயக்கறவுணர்வோர் சைவசித்தாந்திகளெனவும் கூறுவர்.

வேதப்பொருளைப் பொதுவென்றும்
ஆகமப்பொருளை உண்மையென்றும் கூறுவர்.

இனி, வேதத்துட் கூறும் அகம் ப்ரம்மாஸ்மி தத்வமசி வாக்கியங்களின் பொருளுணர்ந்தும் தர்மா தர்ம முணர்ந்தும் புண்ணியபாவ முணர்ந்தும் இன்பதுன்ப முணர்ந்தும் அந்த

ஞானத்தால் விஷய அபேக்ஷை நீங்கி மோக்ஷத்தில் உபேக்ஷை பிறவாததால் மாயாவாதத்தைப் புறச்சயமாகிய உலகாயதாதி மதங்களோடு வைத்து மறுக்கப்பட்டது.

அங்ஙனமாயினும், பிரமம் ஆன்மா மாயை யென்னு முப்பொருளைக் காணு ஞான முதித்தலால் மாயாவாதத்தைச் சித்தாந்தபேதத்தோடு சேர்த்து மறுக்கப்பட்டது.

| | |
|---|---|
| வேதத்துட்கூறும் தத்வ மசியாதி பொருளுணர்தல் | வேதாந்தமுணர்தல். |
| ஷை. | தர்மா தர்ம முணர்தல் ஸ்மிருதியுணர்தல். |
| ஷை. | புண்யபாவ முணர்தல் புராணமுணர்தல். |
| ஷை. | இன்ப துன்ப முணர்தல் இதிகாசமுணர்தல். |
| ஞானத்தால் அபேக்ஷைஉபேக்ஷை | மாயையில் மயக்க நீங்குதல். |

———o———

## புறச்சமயத்துள்,

க-லோகாயதன்—பூதமுதலான புறக்கரண தத்வமுணர்ந்தவன். யாவும் பூதக்கூட்டமென்பன்.

உ-புத்தன்—புத்தி முதலிய அந்தக்கரண தத்வமுணர்ந்தவன். அவற்றையே அறிவென்பன்.

ஈ-சமணன்—ப்ராணாதிவாயு தத்வமுணர்ந்தவன். இவற்றின் சேர்க்கையே அறிவென்பன்.

ச-பாட்டன்—வேதமெனப தொன்றுண்டு அது ஸ்வயம்பு. அது கூறியபடி இஷ்டியாதிகர்மஞ் செய்யின் எல்லாப்பலனும் தருமென்பன்.

ரு-மீமாம்சன்—புருஷ தத்வ முணர்ந்தவன். அப்புரு ஷனே யாவும். வேதவழிசத்கன்மஞ் செய்யின் அச் சத்கன் மமே பலன்றருமென்பன்.

ஈ-பாஞ்சராத்ரி—பாட்டன் மீமாம்சன், என்னுமிருவர் மதக்கொள்கையுங் கொண்டு வேதவழியில் சத்கன்மஞ் செய்து வேதாந்த விசாரணையால் யாவும் பிரமமாய், மாயையென்பதொன்றில்லையாய்க் காணவேண்டும். ஜகஜீவ பரம் என்பதுண்டு. வேதாந்த விசாரத்திற்கு முன்ஜீவனுக்கு ஜகத்து உபாதியைத்தரும். அதுமாயை. மாயை கற்பிதம். வேதாந்த விசாரத்தால் மாயோபாதி ஜீவனுக்கில்லை. அதனால் ஜீவான்மா பரமான்மாவாம். அதுவே பிரமம் என மாயையை ஒப்புக்கொண்டும் மாயையின் செய்கை யாவும் பிரமத்தின் லீலையென்பன். அதனால் பிரமமே யாவுமென்பன். இவன் மாயையை பிரமமென்பதனால் மாயாவாதியாயினன்.

மற்றுமுண்டான கருத்துக்களைச் சித்தியார் பரபக்ஷத்திலும் அவரவர் நூற்களினும் காண்க.

இவ் வாறு சமயமும் விஷ்ணுவவதாரமாய் துஷ்டநிக்ரஹமும் சிஷ்ட பரிபாலனமும் செய்யும்பொருட்டு மாயா மோஹஞ்செய்து கற்பிக்கப்பட்டவை. இதன் சரித்திரங்களை ஸ்காந்தமுதலிய புராணங்களா னுணர்க.

இவ்வாறினுள் முதல் மூன்றும், அதனுட்பிரிவும் வேதநிந்தை கூறும். பின்மூன்றும் அதனுட்பிரிவும் வேதமுடன்பாடும் வேதாந்தமு முணர்த்தும்.

அப்பின்மூன்றும் தர்மாதர்ம முணர்ந்தும் புண்யபாவ முணர்ந்தும் இன்பதுன்ப முணர்ந்தும் அந்த ஞானத்தால் விஷய அபேக்ஷை நீங்கி மோக்ஷத்தில் உபேக்ஷை பிறவாது லோகாயதாதி-மூவர்கள்போல் மாயாமயக்க மெய்திப் புறப்பெ

ருள்களிற் பற்றுக்கோடுடையவா யிருத்தலால் சித்தியார் உலோகாயதாதி பாஞ்சராத்ர மீறாயுள்ளது புறச்சமயமென்று கூறிற்று.

அன்றியும், புறச்சமய மாறும் முறையே ஆன்மதத்வத்துள்ள தத்வ மிருபத்துநான்கையு மாராய்ந்து அவற்றின்வய போக வதிகாரங்களின் பய னுகர்தலால் அவ்வாறு சித்தியார்கூறிற்று.

——o——

## அகச்சமயத்துள்,

க-சைவர்—சிவதத்வ வித்யாதத்வ ஆன்மதத்வ முணர்ந்து சிவமொன்று ஆன்மாக்கள் பல. சிவம் தத் ஸ்வதந்த்ர முடையது, ஆனமாக்கள் ஸ்வதந்த்ர ஹீன முடையார். சிவத்தை வழிபட்டு ஆன்மாக்கள் முத்தியடைய வேண்டும் என்பர்.

உ-பாசுபதர்—சைவரே போன்று பாசுபத சாத்திரப் படி சிவத்தை வழிபடவேண்டுமென்பர்.

ங-வாமர்—வாமசாத்திரப்படி சிவத்தைப்போன்று சத்தியொன்றுண்டு. அச்சத்தியை வழிபடின் அச்சத்தியே யாவுந் தரும். அச்சத்தியே யாவுமென்பர்.

ச—வைரவர்—வைரவ சாத்திரப்படி சிவத்தையுஞ் சத்தியையும் வழிபட வேண்டுமென்பர்.

ரு-காளாமுகர்—காளாமுக சாத்திரப்படி சிவத்தை வழிபடவேண்டுமென்பர்.

சு-மாவிரதர்—மாவிரத சாத்திரப்படி சிவத்தை வழிபடவேண்டுமென்பர்.

சிவம் ஆனமா மாயை யென்றுணர்ந்த இவ்வாறு சமயமும், வழிபட்ட அடியார்களை யிரக்ஷிக்கப் பக்குவத்துக் கிடா

ய்ச் சிவபேதங்களாய்த் தோன்றி யநுக்கிரஹித்த தெனினும் சைவசித்தாந்த உண்மையையறிந்து பாசநீக்கம் பெறுதற் கேலாது.

இச்சமயம் அகத்தேநிகழும் சிவதத்வ வித்யாதத்வங்களை யாய்ந்து அவற்றின் லய போக வதிகாரங்களிற் பயனுக ர்தலால், அகச்சமயமெனக் கூறப்பட்டது.

—— 0 ——

சங்கற்ப நிராகரணம்-அகச்சமயம் கூறுதற்கு முன் மாயாவாதத்தை யுணர்த்தி, அம் மாயாவாததநுள் பிரமமென்ப தொன்றுண்டு அது தான் யாவுமாய் நின்றதெனவுணர்த்தி; அப் பிரமம் ஆன்மாவில் வேறு, பிரமம் பலனைக்கொடுக்கும், ஆன்மாக்கள் பலனை யநுபவிப்போர் எனப்பகுத்துணர்த்து முறையால் அகச்சமயத்தையுங் கூறிற்று. அங்ஙனமாயினும் அகச்சமய மாறிற்கும் வேறுயே யெண்ணப்பட்டுப் புறம் பாய் முன் வைக்கப்பட் டிருப்பது காண்க.

அன்றியும், சங்கற்பநிராகரணம் அகச்சமய மாறினுள்ளும் சைவ மொன்றையேயுணர்த்தி அவற்றுள் சித்தாந்தநிலை பேதிக்குமாறும் அதனுல் முத்தி கூடாமையும் முத்திநெறி கூட்டும் சித்தாந்த மிதுவென்றும் கூறும்.

அன்றியும், புறச்சமயபேதம்-உசு-உள் அத்விதமும், அகச்சமயபேதம் உசு-உள் அத்விதமும், பிரமம் ஒன்று, முத்தியிற் பிரமம் ஆன்மாவிரண்டு மொன்று என்று கூறுதலாலும்; ஒன்று இரண்டு என்று பாசத்தால் மோசஞ்செய்யும் மாயை யொன்று, ஆக மூனறு முதலு, முத்தியிலு மூன்டென்று முறையே யுணர்த்துவான் மாயாவாதியை முன்னும் ஐக்கியவாதி முதலோரைப் பின்னு முணர்த்தி: முத்தியிலு மும்முதலுண்டென்னும் சைவசித்தாந்த லக்ஷணத்தை யீற்றிலமைத்துச் சிவப்பிரகாச மெய்தச் செய்தது முணர்க.

இம்மட்டோ! சிவம் சத்தி ஆன்மா மாயை மலம் என்னும் ஐந்து மூனார்த்தி, அவற்றுள் மலமற்று மாயையொடுங்கி நிற்கவேண்டுமெனின், ஆன்மாக்கள் சத்தியை வழிபட்டுச் சிவத்தைப் பொருந்தவேண்டுமென்றும் அதனை யுணர்த்துவது சைவசித்தாந்த மொன்றேயென்றும் அறுதியிட்டுக் கூறும்.

இவ்வாறு அகம் புறமென்னு மாறுமதங்களை யு நிராகரித்து முத்திலக்ஷண மொன்றையே கூறுதலால் திருவுந்தி முதல் சங்கற்பநிராகரண மீறாய பதினான்கு சாத்திரமும் சைவசித்தாந்த சாத்திரமெனத் தொகுத்தோதப்பட்டது.

அகம் ஒன்றிற்குள் ளிருப்பது.

புறம் ஒன்றின வெளியே தோன்றுவது.

புறத்தே தோன்றுவதன்றி வேறு பொருளின்று அவை யாவும் பூதஸ்வரூப மென்பன் லோகாயாதன்.

புறத்தே தோன்றும் பொருள்கள் யாவு புத்திமுதலிய அந்தக் கரணங்களால் தோன்றுவதால் அந்தக்கரணஸ்வரூபமே அறிவென்பன் புத்தன்.

புறப்பொருள் யாவும் பிராணன் ஜீவித்தகாலத்திலே தோன்றுவதால் யாவும் பிராணமயமே யென்பன் அருகன்.

பொருள்கள் யாவும் வேதவாராய்ச்சியால் விளங்குவதால் யாவும் வேதமயமென்பன் பாட்டன்.

புறப்பொருள் யாவும் புருஷனால் அறியப்படுவதால் யாவும் புருஷமயமேயென்பன் மீமாம்சகன்.

புறப்பொருள் யாவும் ஜீவ வுபாதியால் தோன்றுவது, பரஞானம்விளங்க யாவும் பரமாம். புறப்பொருள் யாவும் பிரமத்தால் காணப்படுவதால் யாவும் பிரமமே யென்பன் பாஞ்சராத்திரி.

இவ்வாறு ஒன்றிற்கொன் றகத்தேநிகழும் தத்துவாராய

ச்சியால் விளங்கினும், புறத்து நிகழ்பொருள் விளக்கமாக வே யாவும் காணுதலால் புறச்சமயமென்றே கொள்ளப்படும்.

இனி, புறத்தேகாண்பது மாயாரூபமெனவும் அதை யக த்தேயிருந்து காண்பது ஆன்மாவெனவும் ஆன்மாவி னகத் தே யிருந்து யாவையும் விளக்குவது சிவமெனவும் ஒன்றினு ளொன்று கூறுதலால் அகச்சமயமென்று கொள்ளப்படும்.

இனி முத்தியில் சிவமும் ஜீவான்மாவன்றி வேறில்லையெ ன்று அகச்சமயம் கூறுதலால், வேறின்றுயின் ஜீவான்மா விற் கெதனினு மின்பத் தோற்றமில்லை. இன்பத் தோற்றம் ஜீ வான்மாவிற்குக் காரணபபடுதலால் அவ்வாறு மயங்கித் தோ ற்றச்செய்வதே பாசம். அப்பாசமும் ஆன்மாவும் சிவமும் சே ர்ந்து பதி பசு பாசமென்னப்படும். பசுக்கட்குப் பாசமொடு ங்கிப் பதியை யடைவதே சித்தாந்தத துணமை.

இவ்வாறு புறச்சமய அகச்சமய சித்தாந்த (சிவஞான பாநு) விளக்கங் காண்க.

———o———

இனி, தமிழ்நூற் சைவசித்தாந்த சாத்திரம் பதினுன் கெனத் தொகுத்த தென்னையெனின், கூறுவாம்.

க-திருவுந்தியார்—தமிழில் ஆகமத்தின் ஞானபாதக் கரு த்தை விளககியது முதலில் திருவுந்தியார்

உ-திருக்களிற்றுப்படியார்—திருவுந்தியின் கருத்தினையும் ஆகமப் பொருளினையும் இரண்டாவது விளக்கியது திருக்க ளிற்றுப்படியார்.

ங-சிவஞானபோதம்—இவ்வாகம சூத்ரம் மாணிக்கவாச கர் முதலியோர்க்குப் பூமியின்கண் முன்பே கூறப்பட்டுள தேனும் மெய்கண்டார் காலமுதல் தனித்துச் சமஸ்கிருதத்தி னும் தமிழினும் வழங்கிவரப்படுகின்றது. இது திருக்களிற்று

ப்படியாருக்குப் பின தமிழில் கூறப்பட்டதனால் மூன்றாவதாக வைக்கப்பட்டது. இதில் சிவஞானம் விசேஷித்துக் கூறும்.

ச-சிவஞானசித்தி—இது சிவஞானபோதத்திற்குப் பின் அச் சூத்ரவழியே விரித்து அது சித்தி யெய்துமாறு கூறிற்று. அதனாலிதனை நான்காவதாக வைக்கப்பட்டது.

ரு-இருபா விருபஃது—இது சிவஞானசித்தி கூறிய ஆசிரியர் முன்னூல்களிற் கூறியுள்ள பதி பசு பாச லக்ஷணங்களில் பாசலக்ஷணம் தெளியுமாறு கடாவிடையாய்க் கூறியது. அதனாலிதனை ஐந்தாவதாக வைக்கப்பட்டது.

சா-உண்மைவிளக்கம்—இது முன்னூல்களின் பின்னர் திருவதிகை மனவாசகங் கடந்தாரால் சிவஞானபோத சிவஞானசித்தியினு மாகமங்களினும் கூறியுள்ள தத்வங்களைத் தசகாரிய வகையால் விளக்கிக் கூறியது. அதனாலிதனை ஆறாவதாக வைக்கப்பட்டது.

எ-சிவப்பிரகாசம்—இது முற்கூறிய நூல்களிற்குப் பின் அவை கூறிய சார்பானே சிவப்பிரகாச மெய்தும்படி தொகுத்துக் கூறிற்று. அதனாலிதனை யேழாவதாய் வைக்கப்பட்டது.

அ-திருவருட்பயன்—இது இதன் முன் கூறியுள்ள நூல்களில் திருவருளின்பயனைப் பிரித் துணர்த்தாமையினால் அதன துபகாரத்தைப் பிரித் துணர்த்திற்று. அதனாலிதனை யெட்டாவதாக வைக்கப்பட்டது.

கூ-வினாவெண்பா—இது இதன் முன்கூறியுள்ள நூல்களிற் றொகுக்கப்பட்ட மாயாலக்ஷணங்களை வினாவி விளக்கிற்று. இதனாலிதனை யொன்பதாவதாக வமைக்கப்பட்டது,

க0-போற்றிப்பஃறொடை—இது இதன்முன் கூறியுள்ள

நூல்களிற் கூறப்பட்ட பதி பசு பாசங்களின் சிறப்பைவிளக்கிப் பாசத்தால் ஆன்மா பசுத்தன்மை யெய்துமாறும் அக்காலத்தும் திருவருளால் பதிப்பொருள் இரக்ஷிக்குமாறும் கூறிற்று. இதனாலிதனைப் பத்தாவதாக வைக்கப்பட்டது.

கக-கொடிக்கவி—இது இதன்முன் கூறியுள்ள நூல்களிற் கூறும் ஞான அஞ்ஞான ப்ரமாண லக்ஷண சாதனங்களையும் அதனை யடைந்தோர் பயனையும் கூறிற்று. இதனாலிதனைப் பதினோராவதாக வைக்கப்பட்டது.

கஉ-நெஞ்சுவிடுதூது—இது இதற்குமுன் கூறியுள்ள நூல்களிற் கூறிய பதியையுணர்ந்து ஆன்மா கூடி யனுபவிக்கும் வழியைக் கூறிற்று. இதனாலிதனைப் பன்னிரண்டாவதாக வைக்கப்பட்டது.

கங-உண்மைநெறி விளக்கம்—இது இதற்குமுன் கூறியுள்ள நூல்களி னிலக்கணத்தை உண்மைவிளக்கம்போல் மற்றோர்வகையால் தசகாரியமாகப் பிரித்துக்கூறிற்று. இதனாலிதனைப் பதின்மூன்றாவதாக வைக்கப்பட்டது.

கச-சங்கற்ப நிராகரணம்—இது சிவஞானபோதம் சிவஞானசித்தி சிவப்பிரகாசங்களி லமைந்துள்ள அகச்சமயத்துள் சைவத்தின் பேதமும் சித்தாந்தத்தி னுண்மையும (இந்நூற் பாயிரத்துட் கூறியபடி வாதிகளின சங்கற்பத்தை நிராகரணஞ்செய்) தறிவிக்குமாறு கூறிற்று. இதனாலிதனைப் பதினான்காவதாக வைக்கப்பட்டது.

இப்பதினான்கு நூல்களு மொரேவழியா யொன்றின்பின்னொன்றாய்ப் பக்குவத்துக்குத்த தக்கபடி ஞானபாதமொன்றையே போதித்து வேதாகம வுண்மையினை வெளியாக்குதலா லிவற்றைச் சித்தாந்தசாத்திரம் பதினான்கெனத் தொகுத்தனர்.

ஏனைய காரணங்களை யவ்வவ் நூன்முகப்பிற் கூறினம்; ஆங்குக்காண்க.

அப்பதினான்கின் பெயரையு முணர்த்துஞ் செய்யுள்.

உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மைப் பிரகாசம் - வந்தவருட்
பண்புவினா போற்றி கொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப முற்று.

நூலாசிரியர் உரைசிரியர் பெயர் அவ்வவ் நூல்முகப்பிற் காண்க. காணப்படாதபெயர் ஏட்டுப்பிரதிகளினும் காணப்படவில்லை.

இங்ஙனம்,

☞ கொ - ஷண்முகசுந்தர முதலியார்

சென்னை-சிந்தாதிரிப்பேட்டை.

சிவமயம்.

# சங்கற்ப நிராகரணச்

## செய்யுளின் கருத்து.

| இலக்கம். | அகவல் | கருத்து | பக்கம். |
|---|---|---|---|
| க-திருந்திய. | | காப்பு - விநாயகர்வணக்கம். | க |
| உ-பெருங்கட | | பாயிரம் - நூற்காரண முதலிய | ரு |

க-நவிற்றிய

மாயாவாதி சங்கற்பம். இப்பெயர் இம்மதக்கொள்கையர் கூறும் பெயரன்று. இம் மதத்தின் ப்ரமாணம் இலக்ஷணம் சாதனம் பயன் என்னும் நான்கையு முணர்ந்து அது பொருளல்லவென மறுத்தச் சித்தாந்திகள் கூறும் பெயர். ஏனைய மதப்பெயர்களு மிவ்வாறே.

இனி மாயாவாதம் என்பது முடிவில்லாத வாதம்.

மாயைக்கும் பிரமத்திற்கும் அபேதங் கூறும் வாதம்.

மாயையென்ப தொன்றில்லை யென்னும் வாதம்.

மாயாமோக முண்டாக விஷ்ணுவாற் கூறிய வாதம்.

மாயவுற் கூறியவாதம்.

இவன் கருத்து- பெத்தத்தில்
ஜக ஜீவ பரமென்பதுண்டு, மு
த்தியில் யாவும் பரமே! விவகா
ரத்தில் ஜக ஜீவ பரம், பரமார்
த்தத்தில் யாவும் பரம் என்னும்
வாதம்.

இதில் ஜகத் என்பது மாயை
ஜீவம் என்பது ஆன்மா
பரம் என்பது பிரமம். ௧௮

௨-உரைதருபிரம மாயாவாதி சங்கற்ப நிராகர
ணம். சுக துக்கங்க ளனுபவ
மாய் வருதலால் ஆன்மா பிரம
த்தில் வேறு. ௨௧

௩-அரிதேர்ந்துணரா ஐக்யவாதி சங்கற்பம். பதி
பசு பாச மூன்று முண்டு. முத்
தியில் சிவமும் ஜீவமு மொன்
றுபட்டு ஐக்யமுற் றிருக்கும். ௫௮

௪-முத்தியென்ப ஐக்யவாதி சங்கற்ப நிராகர
ணம். கருவிகள்கூடி தேகமுண்
டாய் வருதலால் பாசமு முண்
டெனக்கொள். ௬௧

௫-மூல மலத்தாற் பாடாணவாதி சங்கற்பம். ப
தி பசு பாச மூன்றுமுண்டு. பசு,
பாச நீங்கிச் சுட்டிக்காண்பதற்
கொன்றுமின்றிச் சுக துக்கமுமி
ன்றிக் கல்லுப்போற் கிடப்பது
மூத்திநிலை. ௬௫

௬-வருத்துரை பாடாணவாதி சங்கற்ப நிரா
கரணம். முத்தியி லின்பமுண்
டென் றறிந்து அனுபவித்து வ
ருதலால் கல்லுப்போ லறிவில்
லை யென்பது பழுது. ௬௮

௭-ஈசனதருளாற் பேதவாதி சங்கற்பம். பதி
பசு பாச மூன்றுமுண்டு. பசு
பாசங் கெட்டுப் பெறுவானும்
பேறுமாய்ச் சிவமு மான்மாவும்
பேதமுற்று நிற்கும். ௬௯

௮-மறைகளாகம பேதவாதி சங்கற்ப நிராகர
ணம். இரசகுளிகை செம்பைப்
பொன்றாக்கின வுவமான முத்
திக்குப் பழுது. செம்பு கெட்டு
ப் பொன்றானாற்போல ஆன்
மாகெட்டு வேறொன்றாக வேண்
டு மாதலால். ௭௦

௯-பாசமும் பசுவு சிவ சமவாதி சங்கற்பம். ப
தி பசு பாச மூன்றிற்கு மூன்
றறிவுண்டு. பதி பசுக்களைத் தா
னே யாண்டுகொள்ளும். பசு,
பதியினை யுபாசித்து முத்தியில்
பதித்தன்மையுற்றுப் பஞ்சகிரு
த்தியஞ் செய்து சிவ சமத்வ
முறும். ௭௧

௧௦-சேர்ந்தமும்மை சிவசமவாதி சங்கற்ப நிராக
ரணம். ஆதித்தனையன்றிக் காண்

டல்செல்லாக் கண்போலப் பதியறிவாலன்றிப் பசு பாசங்கட்கு விளக்கமில்லை. ஆன்மாக்களால் பதி பயன் பெறவேண்டுவ தின்றாதலால் தானே யாண்டு கொள்ளா. ௭௯

௧௧-நீங்கா தொளி சங்கிராந்தவாதி சங்கற்பம். பதி பசு பாச மூன்றுமுண்டு. பதி பசுக்களிரண்டிற்கும் சுட்டறிவில்லை. ப்ராணவாயு கன்ம வசத்தால் சேட்டைப்பட்டு வரும். இருவினையொப்பில் ஆன்மா வருளா லருளாய் விடும். ௮௫

௧௨-இன்றுன துரை சங்கிராந்தவாதி சங்கற்ப நிராகரணம். இருமுதல்கூடி யொருமுத லாகாது. ௮௭

௧௩-பல்லறுனைக் ஈச்வர வவிகாரவாதி சங்கற்பம். பதி பசு பாச மூன்றுமுண்டு. பதி விகாரமில்லாதவன். பசு, தன் பாசவிகார நீங்கிப் பதியை யடைந்துத் தனது பிறவியை யொழிந்து நிற்கும். ௯௪

௧௪-இருந்தான் ஈச்வர வவிகாரவாதி சங்கற்ப நிராகரணம். ஆன்மாவிற் கறிவில்லை. அருளறிவிக்க வறியும். யாவும் திருவருளின் செயல். ௯௯

க௫-புவன மியாவை — நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்பம். எல்லாப் பிரபஞ்சமும் சிவரூபம். அரூபமா யிருப்பது சிவம், ரூபமா யிருப்பது சத்தி, இவ் விரண்டு மன்றி அசேதந மென்ப தொன்றில்லை. ஆன்மா பிரபஞ்ச மென்பது கிடையாது. யாவும் சிவமாய்ப் பாவனை பிறக்கும்வரை ஆணவாதி நீங்கா. க0உ

க௬-திறம்பெற — நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்ப நிராகரணம். நிமித்தகாரணம் துணைக்காரணம் முதற்காரணமென்னு மூன்றும் வேண்டும். நிமித்தகாரண மொன்றுமே யாவுமாய் நிற்றல் உலகிற் கண்டதில்லை. ஆதலால் முன்கூறிய மூன்றுடன் ஆன்மாவும் அதற்கு வேண்டிய விஷயமும் ஆக ஐந்துமுதல் வேண்டும். க0௩

க௭-அறிவா யறியு — சைவவாதி சங்கற்பம். பதி பசு பாச மூன்று முண்டு. மூன்றிற்கும் மூன்றறி வுண்டு. இம் மூன்றறிவுங் கெட்டு ஓரறிவாதலே முத்தி. க௨அ

க௮-இது கதியாக — சைவவாதி சங்கற்ப நிராகரணம். மூன்றறிவும் ஒன்றுமின் பெறுவானும் பேறுமில்லையாம். க௩0

முக்யமானவற்றை யிங்குக் குறிப்பிக்கப் பட்டன. ஏனைய சங்கற்ப நிராகரணங்களை யிந் நூலினு மற்று முள்ள நூல்களினும் வாசித்துக் காண்க.

இந் நூலில் திருவள்ளுவப்பயன் திருப்பாட்டு காளத்தியந்தாதி திருவாசகம் தேவாரம் திருக்கடைகாப்பு அற்புதவந்தாதி திருவிசைப் பாக்களின் செய்யுள்களைப் பிரயோகித் திருப்பதை யாய்ந்துணர்க.

---

ௐ

சிவமயம்.

# சங்கற்ப நிராகரண

## உரை.

—(o)—

### விநாயகர் வணக்கம்.

| செய்யுள். | உரை. |
| --- | --- |
| திருந்திய வருந்தவம் பொருந்து பன்முனிவர்- | சாத்திரங்களில் உத்தமப் பிரகாரமாக விதிக்கப்பட்ட வரியதவசுகளோடுங் கூடியிருந்துள்ள மஹாஇருடிகள் பலருங் கூடி |
| கமையாக்காத லமையாது பழிச்சும்- | ஒருக்காலு நிறம்பாத வாஞ்சையோடுங் கூடி யநவரதமுந் தோத்திரம்பண்ணும் |
| திகரில் செக்கர்ப்புகர்முகத்தெழுந்த - புனிற்று வெண்பிறைத் தவிப்பெருங் கோட்டு- | ஒப்பில்லாமலிருக்கிற செக்கர் வானம்போன்ற சிவந்த புகரோடுங் கூடியிருக்கிற முகத்திலே தோன்றப்பட்ட வின்றணித்தாயுள்ள வெள்ளியபிறைபோலு மொப்பில்லாத பெரிய கொம்பினையுமுடையதாய் |
| தழைசெவி மழைமதப் புழை நெடுந்தடக்கை- | தழைந்த செவியினையுங் கார்போலும் பொழிகாநின்ற மதத்தினையு மிரண்டுதுவாரத்தோடுங்கூடி நெடியதாய்ப் பருத்திருக்கிற துதிக்கையினையு முடையதாய் |
| வாட்டரு மும்மைநாட்ட நால்வாய்- | ஒளியினையுடைய மூன்று கண்ணினையும் நான்ற வாயினையு முடையதாய் |

## காப்பு.

பாச மங்குசந் தேசுறுமெயி றொண்-கனி யிவை தாங்கும் புனித நாற்கரத்து-

பாசத்தினையுந் தோட்டியினையும் பிரகாசத்தினையுடைய கொம்பினையு மழகிய மாங்கனியினையு மிவையிற்றைத் தரித்துக்கொண் டிருக்கிற சுத்தமாயுள்ள நாலு கையினையு முடையதாய்

அங்கதங் கடகம் பொங்கிழை யார-நிரைமணிச் சுடிகைக் கறையணற் கட்செவி - கொண்ட திண் பெரும் பண்டிக் குறுந்தாள்-

தோள்வளையினையு மிரத்தின கடகத்தினையு மிக்க நவரத்தினங்களை யழுத்தி யிழைக்கப் பட்டிருக்கிற வாபரணத்தினையுங் குறைவற வணிந்து, இரத்தினத்தையுடைய தலையினையுங் கறுத்திருக்கிற கண்டத்தினையு முடையதாய்க் கண்ணே செவியாகக்கேட்கிற பாம்புகொண்டு கட்டப்பட்டுச் சிக்கென்று பெரிதாயிருக்கிற வயிற்றினையுங் குறுகியிருக்கிற காலினையு முடையதாயிருக்கிற

களிறுநன் னிருகழல் கருதா-

இப்படிக்கொத்த வானையினது இரண்டு பாதங்களையு மென்மனதார நினைந்து

வெளிறுறு துயரம் வீட்டினம் பெரிதே.

குற்றத்தோடுங் கூடியிருக்கிற துக்கங்களை மிகவும் விடுவியாநின்றேம். எ-று. (க)

காப்பு முற்றிற்று.

———o———

# பாயிரம்.

பெருங் கடலுதவுங் கருங் கடு வாங்கிக்-கந்தரத் தமைத்த வந்தமில் கடவுள்-

பெரிதாயுள்ள திருப்பாற்கடலிலே நின்று முண்டாகப்பட்ட கறுத்த நஞ்சினைத் தனது ஸ்ரீயத்தினாலே வாங்கி யமுதுசெய்து கண்டத்திலே தரித்துக்கொண் டிருக்கையிலேயுந் தனக்கு முடிவில்லாத கடவுள். என்னவே கத்தாவைநீக்கி முற்காலத்திலே தேவர்கள் அமுதங்கடைய வதிலே நஞ்சுபிறந்தது. அதினாலேயவர்கள் பீடைப்படுகையினாலே துஷ்டநிக்கிரகமும், அவர்கள் கத்தாவைநோக்கி யபயமிட வஞ்சாதீரென் றந்நஞ்சை யமுதுசெய்தவர்களை யிரக்ஷிக்கையினாலே சிஷ்டபரிபாலனமுமாகி நின்றதெனக்கொள்க. இப்படித் துஷ்ட நிக்கிரகமுஞ் சிஷ்ட பரிபாலனமுமுடைய கடவுளானவர்

பாலரை யுணர்த்து மேலவர் போல-

தங்கள் பிள்ளைகளுக் கந்தப் பக்குவங்கடோறு மறிவையுந் தொழிலையுங் கொடுத்துவந்த மாதாபிதாக்களைப்போல

கேட்போரளவைக் கோட்படு பொருளா-லருளியகலைகளலகில

கேட்கிற சீடர்களுடைய வெல்லைக் கோட்பாடுகளுக் கீடாயுள்ள வத்தங்களைக்கொண்டருளிச் செய்யப்பட்டிருக்கிற சாத்திரங்களெண்ணிறந்ததாயிருக்கும்.

ஆலவை - பலபல சமயப் பான்மைத்தன்றே-

அப்படியிருக்கையால் அந்தச்சாத்திரங்கள் வெகுவிதமாயுள்ள சமயப் பகுதிகளோடுங் கூடியிருக்கும்.

அஃதா லந்நூ ற்றன்மை யுன்னி ய-மாந்த ரிதுவே பொருளெனன் றத னிலை - யறைதலி ன்

ஆகையால், அந்தச்சாத்திரங்களின துண் மை யாராய்ந்தறிந்தவர்கள் நமக்கிதுவே சாத் திரமு மிதுவே யத்தமுமென் றந்தச் சமயத் தையே பலமாகச் சொல்லிநிற்கையினாலே

வே றற்றோர் ப னுவ லேற்றோர் க்-கிசையா மாறு பாடுகூறுவர்

மற்றொரு சாத்திரத்தை யாராய்ந்தறிந்தவர் களுக்கு அவன்சொல்லுகிற சாத்திரமு மத்த மும் பொருந்தாதாகையால் அவன்சொன்ன திவனுக்குப் பொருந்தாம லிவன்சொன்ன த வனுக்குப் பொருந்தாம லொன்றுக்கொன்று மாறுபடச் சொல்லாநிற்பர்கள்.

அதனாற்-புறச் சமயங்கள் சிறப் பிலவாகி - யருளி ன்மாந்தரை வெ ருளுறமயக்கி - ய லகைத்தேரினிலை யிற்றிரும்-

அப்படியிருக்கையினாலே உலகாயதன் புத் தன் சமணன் மீமாங்கிசன் மாயாவாதி பாஞ் சராத்திரியென்று சொல்லப்பட்ட புறச்சமய ங்களினுள்ள வத்தங்களி னுண்மைப்பகுதியி ல்லாததாய் சிவனுடைய வநுக்கிரகத்திற் கே துவல்லாத வபக்குவான்மாக்களை யித்தோரத் தமிருந்தபடியென் றச்சப்படத் தக்கதாக ம ருட்டிப் பேய்த்தேரைத் தண்ணீரென்று கரு தி இத்தைக்குடித்துத் தாகந்தீரலாமென்று வந்தவனுக் கந்தத் தண்ணீர்ப் பொய்யாய்ப் பேய்த்தேர் மெய்யான தன்மைபோல, விந்தச் சாத்திரங்களு மத்தங்களுஞ் சத்தியம்போ லத் தோன்றி யசத்தியமாய் முடியும்.

ஈங்கிவை நிற்க நீங்காச் சமய-மூ

ஆகையால், இவ்விடத்திற் சொல்லப்பட்ட சமயங்களு மத்தங்களு நமக்கு வேண்டுவதி

விருதகுதி மேவி யதாமும்-

ல்லை. தன்னி லொன்றோடொன்று கூடிக்கொண்டிருக்கிற சைவம் பாசுபதம் மாவிரதம் காளாமுகம் வாமம் வைரவம் என்கிற வுட்சமயங்களாறும்.

ஒன்றோ டொன்று சென்றுறுநிலையி-லாறு மாறு வீறுடைத்து

இவை யொருசமயத்தோ டொருசமயந் தாக்கிப்பார்க்குமளவில் அந்தவாறுசமயங்களுந் தனித்தனியே மகத்துக்களாயிருக்கும்

இவற்று - ளெவ்வமில்லாச் சைவநற் சமயத்-தல லாகம நிலவுதலுள

இந்தச்சமயங்களில் வைத்துக்கொண்டு ஒரு சற்றுங் குற்றஞ் சொல்லவொண்ணாமலிருக்கிற சைவமாகிய நல்லசமய மொன்றையுநோக்கித் தம்பிரானா ரருளிச்செய்யப்பட்டிருக்கிற வாகமங்க ளெண்ணிறந்து பொருந்தாநிற்கும். அந்த ஒருசமயத்தைநோக்கிப் பலசாத்திர மருளிச்செய்வா னேனென்னில்?

அவை - கனக மிரணியங் காஞ்சன மீழந் - தன நிதி யாடகந் தமனியமென் றிப் - பலபெயர்பயப்பதோர் பொருளை போலப்-பதிபசு பாச விதிமுறை விளக்கும்-

அப்படிப் பலவாகவருளிச்செய்தது மொருபொருளைப் பற்றியிருக்கும். அஃதெங்ஙனே யென்னில்? கனகமென்றும் இரணியமென்றும் காஞ்சனமென்றும் ஈழமென்றும் தனமென்றும் நிதியென்றும் ஆடகமென்றும் தமனியமென்றும் இங்ஙனம் பலபெயராகச் சொல்லப்பட்டவையெல்லாம் பொன்னாகிய வோர் பொருளையேபற்றி நின்றாற்போல வந்தச்சாத்திரங்களும் பதியி னிலக்கணத்தையும் பசுவி னிலக்கணத்தையும் பாசத்தி னிலக்கணத்தையுமே சொல்லாநிற்கும்.

வாய்ந்த நூல்க ளாய்ந்தன ராகி - பாசாணுகி வீசிய சமத்துடன்-

இங்ஙனம் பொருந்தப்பட்டிருக்கிற வாகமங்களைக் கற்றுணர்ந்தாராய்ந்த போதவான்களாய் சமய விசேஷ நிருவாண வபிஷேக மென்கிற நாலு தீக்ஷைகளையு முடையவர்களா யெங்கும் பிரகாசிக்கப்பட்டிருக்கிற பக்ஷப் பிரதிபக்ஷ மில்லாத சம போதவான்களாயுள்ள விந்தப்பெரியோர்கள்

ஏழஞ் சிறுநூ றெடுத்த வாயிரம்-வாழுநற்சகன மருவாநிற்ப-

சகாத்தம் ஆயிரத் திருநூற்று முப்பத்தைந்து செல்லாநின்ற காலத்திலே

பொற் பொது மலிந்த வற்புத னானி-யாரும் விழவில்

பொன்னினாற் செய்யப்பட்ட திருவம்பலத்தின்கண்ணே நிறைந்தெழுந்தருளியிருக்கிற வாச்சரியவானாயுள்ள திருவம்பலமுடைய தம்பிரானாருடைய வானிமாதத்தி லாரூந் திருவிழாவிலே

பொற்றேரானை யத்-தேரு வெண்மர் நிரையி லிருப்ப-

பொலிவினையுடைத்தாகிய தேர்மண்டபத்திலே யேறி முன்சொல்லப்பட்ட வாசாரியமா ரெட்டுத் திருப்பெய ரொழுங்கிலே யெழுந்தருளியிருக்கிற வவதரத்திலே

மயங்கு வாத மாயாவாதி - முயங்கிடவொருதலை

சற்காரியவாதமின்றி யொருகாற்சொன்ன தொருகாற்சொல்லாமல் முன்னொடு பின்மலைந்து வருகிற வர்க்கத்தோடுங் கூடியிருக்கிற மாயாவாதியென்கிற சமயி யொருபுறத்திலே கூடியிருக்க

முதுவெதிர் மணிசேர்-பெண்

முதிர்ந்த மூங்கில்களிலுண்டாகிய முத்துக்களோடுங் கூடியிருக்கிற பெண்ணையாறு

ணைசூழ்ந்தவெண்
ணெயம்பதி திக
ழ்-மெய்கண்டவ
னருள் கைக்கண்
டவர்களி-லொரு
வரொருதலை ம
ருவியிருப்ப-

சூழப்பட்ட திருவெண்ணெய் நல்லூரென்கிற திருப்படைவீட்டிலே திருவவதாரஞ்செய்யப் பட்ட மெய்கண்டதேவநாயனாருடைய வநுக்கிரகத்தைப்பெற்ற வடியார்களிலே யொருத்தரந்தக்கூட்டத்தி னொருபுறத்திலே பொருந்தி யெழுந்தருளியிருக்கிற வவதரத்திலே

அஞ்சப் பிறவி
க் கஞ்சிவந் தொ
ருவ-னே இறை
யருளென

பொல்லாங்கை விளைப்பதாயிருக்கிற பிறவிப்பிணிக்குப் பயப்பட்டானொருபக்குவன்வந்திவர்களைத் தண்டம்பண்ணித் தம்பிரானார் திருவருளெப்படி-யிருப்பதென் றவன்வினவ

ஈதெனு மா
யா-வாதியை ய
யலினர் மறுத்
தருடா-

தன்னுடையமத்தத்தைப்பார்த் திதுவே பொருளென்றுகாட்டின மாயாவாதியை யருகேயெழுந்தருளியிருந்தவ ரவன்சொன்னமத்தத்தைக்கண்டித் திதுமத்தமல் லவென்றுதள்ளித் தம்முடையமத்தத்தை யிதுவே பொருளென்றுகாட்ட

மற்றவ னயலி
ன ரவருரை ம
றுத்துச்-சொற்
றா

அவருடையபக்கத்தி லிருந்தவர் அவர் சொன்னமத்தத்தைக்கண்டித்துத் தம்முடையமத்தத்தை யிதுவே பொருளென்று காட்ட

அயலின ரய
ருந் தொலைவு
ற்று-

அவருடையவருகே யிருந்தவராலே யவரும் கண்டிக்கப்பட்டு

இன்னே யெ
வரு முன்னே க
ழியுழி-

இப்படி யொருவரையொருவர்மறுத்தெ ட்டிப்பேரு முன்னே தள்ளுண்ட வவதரத்து

ஆங்கயலிருந்த வருளினாரழகிது - நீங்கள் சங்கற்ப நிராகரித்தமையென - மற்றவருரைத்த சொற்றரு பொருள்கொடு-

அவ்விடத்தவர்களருகேயெழுந்தருளியிருந்த வாசாரியவான்களைப்பார்த்து நீங்களுங்க ளத்தங்களைச் சங்கற்பித்தது மத்தைநிராகரித்தது மிகவு நன்றாயிருந்ததென்றருளிச்செய்து அவர்கள்சொன்ன சொற்களிலுண்டாகிய பொருள்களையெடுத்துக் கொண்டிடான்

வாத செற்ப விதண்டையுமேதவு- மோதுநால்வகை யுவமை யுக்திகடா-

வாதமென்ற சொல்லுதான் விகாரமென்றும் விசியுழியென்று மிரண்டாம். இதில் விகாரமென்றது குருவுஞ் சீஷனுமாகுதல், தன்னொடொத்த பக்ஷபாதனாகுதல், மாறுபாடின்றிப் பிரமாணங்களி லுண்டாகிய வத்தங்களைத்தர்க்கித் ததிலுண்டாகிய குற்றங்களைநீக்கிச் சத்தியமானவத்தத்தை நியமிக்கப்படுவதெனக் கொள்க. விசியுழியென்றசொல்லுதான் செற்பையென்றும் விதண்டையென்று மிரண்டாம்.

இதிற் செற்பையென்றது பிறருடையவத்தங்களை நிராகரித்துத் தன்னுடைய பொருளை மலைவறநாட்டுகை யெனக்கொள்க.

விதண்டையென்றது பிறருடைய வத்தங்களை நிராகரித்துத் தன்னுடைய வத்தந் தோன்றாமலின்று சாதிக்கப்படுவதெனக் கொள்க.

ஏதுவென்றது அளவைப் பிரமாணங்களிலே விதிக்கப்பட்டிருக்கிற பலவேதுக்களும்.

ஓதுநால்வகை யுவமையுமென்றது வினை பயன் மெய் உருவென்று சொல்லப்பட்ட நாலுவகை யுவமையு மிந்நூலிலே விளங்கத்தக்கதாக

அருள்சேர்மாந்தர் வெருள்சேராமல்—

திருவருளுக் கேதுவாயுள்ள பக்குவான்மாக்களுக்கு அத்தமலைவென்கிற வச்சம்வந்துபொருந்தாமல் அவர்கள்

தர்க்கமும் விடயமுங் கற்க— நற்கவி மாந்தர் நக நவிற்றுவனே.

இந்நூலிலுண்டாகிய தர்க்கங்களையும் விடயங்களையுங் கற்கத்தக்கதாகவும் நல்லகவிதையோடுங் கூடியிருக்கிற வித்துவான்கள் இவனுமொருநூல்செய்வதே யென்று சிரிக்கத்தக்கதாகவும் இந்நூலைச் சொல்லாநின்றேன். எ - று. (௨.)

பாயிரமுற்றிற்று.



# மாயாவாதி சங்கற்பம்.

| | |
|---|---|
| கவிற்றிய நிரையினவித்தை யிலேனுனை- | முன்சொல்லப்பட்ட வொழுங்கில் மாயாவுபாதிகளாலே வாதிக்கப்பட்டுப் பரப்பிரமமிப்படி மயங்கிநிற்குமென்று சொல்லுகிற மாயாவாதியினுடைய மதமிருக்கும்படி |
| நித்த னறிவன் சுத்த னகண்டிதன்- | ஒருக்காலு மழிவில்லாதவனுமாய் சர்வக்கியனுமாய் நிர்மலனுமாய் கண்டிக்கிப்படாதவனுமாய் |
| நிருவிகற்ப னிர்த்தத்துவ நிரஞ்சனன்- | விகற்பமில்லாதவனுமாய் தத்துவாதீதனுமாய் மறைப்பில்லாதவனுமாய் |
| சொல் வகையெவையுந் தொடராத்துய்மணி- | சொல்லும் பொருளுமாயிருக்கிற சாத்திரங்களொன்றாலுஞ் சென்று கிட்டவொண்ணாமலிருக்கிற சுத்தரத்தினமாய் |
| வரம்பில் வேதச்சிரந் தருபரம்பொருள்- | எந்தச்சாத்திரங்களிலு மளவிடப்படாமலிருக்குமுள்ளதாமாயினு மெல்லையற்றிருக்கிற வேதத்தினது தலையிலே சுமந்துதரப்பட்ட வெல்லாத்துக்கு மேலாயிருக்கிற வத்துமாய் |
| சுத்தாய் | சுத்த சைதன்யமாய் |
| எவையுந் தானாய் | எல்லாவுபாதிகளுந் தானேயாய் |
| அவித்யை- தொத்தா துயர்ந்தொல்சுடர் | அப்படியிருந்ததாமாயினு மந்தவுபாதிகடானவனைத் தொங்கியாதபடி மிக்கயழைய்தாயுள்ள பிரகாசமாய் |

மூவா-வின்னா தன்மையன் — ஒருக்காலும் போது செய்யாமலிருக்கிற விந்தநியாயத்தோடுகூடி யிருப்பானாய்

ஏக னனேகன் - — ஒருத்தனுமாய்ப் பலயோனிகளிலு நிற்கிறவனுமாய்

கன்னற்பெருஞ்சுவை தன்னிற் பிறவாப்-பெற்றியினிருந்து — கரும்பிலுண்டான மிக்கவிரதமான தன்னுக்கரும்புக்குத் தோன்றுதவியல்புபோலத் தன்னிடத்திலுண்டாகிய வின்பத்தையுந் தானறியாமலிருந்துள்ள பரப்பிரமமானது பிரபஞ்சலீலையை யுண்டாக்குமிடத்து

பொற்பணியியல்பினின் - — பொன்னானது பலவானவாபரணங்களாயிருந்த தன்மைபோல

வான் வளி யனனீர் மண் மருந் துன்ன-மான தாதுவா யைங் கோசத்-தொகுதி யாக்கைப் பகுதிய தொருபுடை- — பரப்பிரமந்தானே ஆகாசமும் வாயுவுமக்நியு மப்புவும் பிருதிவியு மௌஷத வன்னங்களு மதனு லுண்டாகப்பட்ட தாதுக்களாறு மனனமய பிராணமய மன்னமய விஞ்ஞானமய ஆனந்தமயமென்கிற ஐங்கோசங்களும் ஒருபக்ஷ மிவையெல்லாமாகக் கூடியிருக்கிற சரீரத்தின்பகுதியாயிருக்கும். இங்ஙனந் தோன்றப்பட்ட பிரபஞ்ச நித்தியமோ வநித்தியமோ? அநித்தியமென்னில், இது நித்தியமாய்த்தோன்றுவானேனென்னில்?

சுத்தி வெள்ளி யொத்தன மித்தையில் - — சுத்தியாகிய சிப்பியானது வெள்ளியையொத்துத்தோன்றிறுறபோலத் தோன்றிற்றென்று சொல்லலாமாக, மதிப்பிரமையினாலே யநித்தியமாயுள்ள பிரபஞ்சமு நித்தியமாய்த்தோன்றும். ஆறு லயதப் பரம்

# மாயாவாதி சங்கற்பம்.

பிரமமு மிந்தப்பிரபஞ்சமும் தன்னில்வே றென்னில்?

*தானென லாகுந் தன்மைத்து*

அந்தப் பரப்பிரமந்தானே யிந்தப்பிரபஞ்சமுமென்று சொல்லுந் தன்மையையுடையதாயிருக்கும். அந்தப்பிரமத்தைப்போலே யிராம லிந்தப்பிரபஞ்சம் வேற்றுமையாயிருப்பானே னென்னில்?

*உலூதையிற்-சின்னூற்றகையின் வேற்றுமைமரீஇயது-*

சிலம்பியினிடத்துண்டாகிய சிறிய நூலினையொக்கப் பிரபஞ்சமும் பிரமத்துக்கு வேற்றுமையைப் பொருந்தியிருக்கும்.

*என்னப் பன்மையதெனின்*

சிலம்பினூல் போலேயென்று சொல்லவது வொருதன்மையாயிருந்தது. பிரபஞ்சம் பலபிரகாரமா யிருப்பானேனென்னில்?

*இலை பழம் பூத்-தோ ஞர் வயிரந் தருத்தருந் தொன்மையின்-யாணரந் திரை நுரை தருவாய்மையிற்-கூடும்*

இலையும் பழமும் பூவுங் காயுந் தோலு மாரும் வயிரமு மிவையெல்லா மரமானது தங் தொடுங்குந் தன்மைபோலவும் பெருமையினையுடைய தண்ணீரானது திரையையு நுரையையுந் திவலையையுங் குமிழியையுந் தந்தொடுக்குந் தன்மைபோலவும் இப்படிப் பிரபஞ்சமும் பலவாகத்தோன்றி யொடுங்குமென்று சொல்லப்படும்.

*அசித்தைச் சித்துதவாதெனில்-*

அசித்தாயுள்ளபிரபஞ்சஞ் சித்தாயுள்ள பிரமத்திலே தோன்றுதென்னில்?

*நெற்பதர் பலாலத்திற் பாந்தரும்*

நெல்லானது பதரையும் வைக்கோலையுந் தந்ததன்மைபோலச் சத்தாகியபிரமமும் சித்தாகிய பிரபஞ்சத்தைத் தாராநிற்கும்.

இந்தப்பிரம மிப்படிச் செய்யவேண்டுவானேனென்னில்?

*இது - தன்னியல்பென்றும்*

இப்படிச்செய்துவருகிற திந்தப்பிரமத்தினுடைய வியல்பாயிருப்பதோன்றென்றும். பிரம மிந்தவுபாதிகளினாலே வாதிக்கப்பட்டிருப்பானே னென்னில்?

*விளையாட்டென்றும்-*

இந்த வுபாதிகளோடுங் கூடிக்கொண்டிருக்கிறதைப் பிரமத்துக்கு விளையாட்டாயிருப்பதொன்றென்றும். பிரமத்துக்கியல்பென்றும் விளையாட்டென்று மெங்கேகாணப்பட்டதென்னில்?

*முன்னுள மறைகண் மொழிதலின்*

அநாதியேயுள்ள வேதங்கள் சொல்லுகையினாலே. இந்தவுபாதிகள் பலவாகக் காண்பிக்கப் பட்டாற்போல வந்தப்பிரமு மிப்படிப் பலவாகக் கண்டிக்கப்பட்டிருக்குமோவென்னில்?

*ஒருநூற்-பன மணிநிரையும் பசுப் பாலெனவும்- பலவகனிரிலலர் கதிரெனவுங் - கூவலாழி குளஞ்சிறுகுழிகால்- வாவியாவையும் வருபுன லெனவு - மவ்வயற்றடங்கி*

மணிகள் பல நிறமா யிருந்ததாயினும் அதிற்கோர்ப்புண்டான நூலந்நிறம்போற் றோன்றியு மொருதன்மையாயிருந்தாற்போலவும் பசுக்கள் பலவர்ணங்களாயிருந்தாலும் பா லொருதன்மையா யிருந்தாற்போலவும் நீர்பொருந்திய பாத்திரங்கள் பலவாயிருந்ததாயினும் அதிற் பிரதிபிம்பஞ் செய்கிற வாதித்த னொன்றாயிருந்த தன்மைபோலவும் கிணறுங் கடலுங் குளமுஞ் சிறிதாயுள்ளகுழிகளும் வாய்க்கால்களும் இவையெல்லாம் பலபேதமாயிருந்ததாயி

னுந் தண்ணீரொன்றாயிருந்த தன்மைபோலவும் இப்படியே யோனிகள் பலவாயிருந்ததாயினு மறிவேகமாய் அநந்த யோனிகடோறுங் கூடியிருக்கும். அப்படி யோனிகடோறுங் கூடியிருந்ததாயி லிந்தவுடல்கடோறும் பந்தப்படாதோவென்னில்?

ஆடியுநிழலெனத் - தோன்றியாக்கை

கண்ணாடியிலே நிழலானது தோன்றிநிற்கும். அந்தநிழ லதிற்றோய்வற நின்றாற்போலவும் உடலிலே பிரமமானது தோன்றிநிற்கு மிடத்தேயு மந்தவுடலிற் றானுந் தோய்வறநிற்கும். அப்படி யந்தவுடலிலே தோய்வறநிற்குமாயின இந்தவுடல் காரியப்படுகிறதெப்படியென்னில்?

நற் காந்தத் திரும்பும்-

நல்ல காந்தமானது தோய்வறநிற்க வதின் சந்நிதியிலே யிரும்பானது காரியப்பட்டாற்போலப் பிரமந் தோய்வற நிற்க வதின் சந்நிதியிலே யுடலானது காரியப்படாநிற்கும். அந்தவறி(ஞ)ன் இந்தவுடலிலேநின்று சுகதுக்கங்களை யநுபவிக்குதே யதுவருவானேனென்னில்?

கனவிற் றீங் குங் கவ்குலிற்க விறும் - புனலிற் றோன்றும் பேய்த் தேர்ச் செய்தி யும்-

ஒருவன் சொப்பனங்காண்கிறவிடத் தவனை யோரானை பின் பிடித்துக்கொண்டு வர வதற்குப்பயப்பட் டியோடி யெடுமிடத்து விழித்தவவதாத் திவையெல்லாம் பொய்யாயிருந்த தன்மைபோலவும் ஒருவனிராக்காலத்திலே யொருபுற்றின் வாசலிலே கயிறுகிடக்கிறதைக்கண் டொருபாம்பு கிடக்கிறதைப் பாரென்று பிரமித்து நிற்குமிட

த்து விழுந்த வடதாரத்துப் பாம்புபொய்யாய்க் கயிறுமெய்யான தன்மைபோலவும் ஒருவன் தண்ணீர்த்தாகத்தின் மிகுதிகொண்டு கானலைத் தண்ணீரென்று புத்திபண்ணிக்கொண்டு வந்தானதினுடைய வுண்மையைப்பார்த்தவிடத் தவனுக்குத் தண்ணீர்ப் பொய்யாய் கானல் மெய்யானதன்மைபோலவும் இந்தப்பிரம முடலோடுங் கூடிநின்று சுகதுக்கங்களை யநுபவித்தாற்போல விருக்குமொழிந்த தன்னுண்மை பார்க்குமிடத்து இந்த சுகதுக்கங்களுமந்த வறிவுக்குண்டாகாது. இப்பொழுது பிரத்தியக்ஷமாக சோத்திராதிகளோடுங் கூடியதுதானாய்க் கன்மங்களைப் புசிக்கிறதாகக் காணப்பட்டிருக்கிறதென்னில்?

அன்னதன்பி னன்னிறப் பனிக்கென—

அப்படியந்தவிந்திரியங்கள் தானாயின்றதாயினும் பிரமத்துக்கந்த வநுபோகமுண்டாகாது. அஃதெதுபோலவென்னில்? படிகமானது நல்ல பஞ்சவன்னங்களோடுங்கூடியதுதானாயிருந்ததாயினு மவையிறதிறேறும்படிக மொருசற்றுந் தோய்வற நின்றாற்போலவு மெனக்கொள்க. இதன்றியும்

பதினூற் கரணந் தொகுமொன் றவத்தை—காணுகாணு கயத்துளம்

சோத்திராதிகளைந்தும் வாக்காதிகளைந்தும் அந்தக்கரணங்களுமாகப் பதிறலோடுங்கூடிப் புருவமத்தியத்திலே சாக்கிராவத்தையும் அதிலே சோத்திராதியும் வாக்காதியுமிற்ற வந்தக்கரணங்க

ளோடுங்கூடிக் கண்டத்தானத்திலே சொப்பனாவத்தையும் அதிலே மனோபுத்தியாங்கார சித்தத்தோடுங் கூடி யிதயத்தானத்திலே சுழுத்தியவத்தையும் இந்த வவத்தைகளிலே நாடோறும் பொருந்தியநுபவியாநிற்கும். அறிவான திந்தவவத்தைகளோடுங்கூடி யநுபவிக்குமாயி னிதற்குப் புண்ணியபாவ தொந்தனை யில்லையோவென்னில்?

இருபயன் - நன்னிற் சாராத் தொன்மைத்தன்மை - தற்பண நிழற்கட் குற்றி பாய்ந்தற்றே-

இந்த வவத்தைகளோடுங் கூடி நின்றதாயினு மநாதியே புண்ணியபாவ தொந்தனை யிந்தப் பிரமத்துக்குச் சாராது. அஃதெத்தன்மைத்தென்னில்? கண்ணாடியிலே யொருவன்முகம் பிரதிபிம்பஞ்செய்ய வவ்விடத் தந்த முகத்தின்கண்ணே பாரைக்கோல்கொண்டு பாய்ந்தவிடத் தந்தக்கண்ணாடியுடைந்தொழிந்து கண்ணுக்கினம் வாராதிருந்தாற்போலு மெனக்கொள்க.

இது பெத்தவிலக்கணம். மேல்முத்தி

இவ்வியற்பந்தப் பௌவமதகல -

இப்பொழுது நான்சொல்லிவந்த முறைமையிலே இந்தப்பிரமத்தை வாதிக்கப்பட்ட மாயாவாதைகளி லுண்டாகிய பிறவித்தொந்தனை நீங்குகை நிமித்தமாக

விண்முதற் றந்தகொண்மூப்படலத் - திருளற வுதித்த காறகை

ஆகாசமென்கிறதிலே நின்று மேகமானது தோன்றி யந்தவாகாசத்தை மறைக்கவதனாலுண்டாகிய விருளானது நீங்குகைநிமித்தமாக வந்த வாகாசத்திலே நின்று

தோன்றி யந்தமேகங்களை நீக்கி யாகாசத்தை நின்மலமாக்கின வாயுவைப்போல

விவேகம் - தன்னிற் றோன்றி

அந்தப்பிரமத்திலே நின்றும் விவேகஞானமானது தோன்றி

சாதகமனைத்தையும் -

இந்தப் பிரமத்துக் குண்டாகிய மறைப்புக்களெல்லாத்தையும்

மன்னகப் பிரிப்பு மடி யிழை வாங்கலும் - போல ஞானம் பொய்யறக் கடிந்து -

நிலைபெற்றுவாராநிற்கிற தொருவீட்டை யொருத்த னொருவைக்கோலாகவு மோரொருமரமாகவும் நாளிலே பிடுங்கிப்போட்டபின் அந்த வீடென்கிற சொரூப மில்லையாய்ப்போன தன்மைபோலவும் மடியாகிய புடவையு மப்படித்தானே ரோரிழையாக வாங்கிப்போட்டாற் புடவையென்கிறதன்மை போனாற்போலவும் பிரபஞ்சமாகிய பொய்யையும் பிருதிவி முதலாகக்கண் டது நானல்ல விது நானல்லவென்று நியதிப்பன்னி நாளிலே நீக்கிக்கொண்டு

தானே தானாய்த் தன்னிற் றன்னைத் - தானே கண்டு தன்வயமூற்று -

இப்படி யந்த வுபாதிக ணீங்கினவிடத் தித்தவறிவான இந்தப்பிரமந்தானேயாய் தன்னிடத்திலே தற்சொரூபத்தைத் தானே தரிசித்துத் தன்னிடத்திலுண்டாகிய வின்பத்தைத் தானேயநுபவித்து

வசையிறத் தவமசி பதத் தெளிவா - லகமெபிரம மாயினனென வுதித்து -

குற்றமற்றிருக்கிற தத்துவமசியென்கிற மஹாவாக்கியச் சொம்பதந் தத்பத மசிபதமென்னு மிலக்ஷணை மூன்றுமறிந்து தெளிவுகொண்டந்தப் பிரமந்தானென்கிற பிரமஞானத்தைத் தீர்விளங்கி

அசலஞானி

இந்தப் பிரமஞான முண்டானவிடத்துப் பின்னைச் சற்றுஞ்சலனமில்லாதவனாய், உபாதிகளோடுங்கூடிச் சத்தாதிவிடயங்களைப் புசிக்குமிடத்துஞ் சலனமில்லை யென்றதென்னையெனில்?

நற்சல சலம றியெனக்- கண்டிடும்

உபாதிகளோடுங்கூடிச் சத்தாதிவிடயங்களைப் புசிக்குமிடத்தே யந்தவுண்மைக்குச் சலனமில்லாதது நல்லஜலமான தசைந்தவிடத் தந்தஜலத்தோடுங்கூடின சந்திரனு மொக்க வசைந்தாற்போலேயிருக்க வந்தச்சந்திரனுண்மையைப் பார்க்குமிடத் ததற்கில்லையானாற்போ லிந்தவறிவையுங் காணப்படும்.

இது ஜீவன்முத்திலக்கணம்.

இனி பரமுத்திலக்கணம்.

உடலம் விண்டகல் கடத்து- மங்குல துடைதா வெங்குமாந் தகைத்தே-

இந்தச் சரீரதொந்தனை விட்டவவதாரத் தந்தவறிவு மந்தப்பிரமமு மொன்றுபட்டவிடத் தென்போலவெனில்? விசாலமாக விருக்கிற கடத்துக்குள்ளே யகப்பட்டுநின்ற வாகாய மிந்தக்குடமான துடைந்தவவதாரத் தந்தப்பிரகாசமுந் தானு மொன்றுபட்டாற் போலவா மெனக்கொள்க.

இது பரமுத்தி.

இவ்வகை யுணர்ந்து செய் தொழிலறுத-மடவோர் தாமும்

அது நானென்கிற பிரமஞானத்தை யறிந்து தானமுனபுசெய்து வந்த கன்மங்களெல்லாத்தையும் விடமாட்டாத வறிவில்லாதவர் தாமும்

கட்டுரு வியற்றுங் - கன்மகாண்டத் தொன்மைப் புரிவாற்- றேற்றிய வித்தை

அந்தப் பிரமஞானமுண்டாகை நிமித்தமாகச் சாதநா சதுஷ்டயமாகிய கன்மங்களை யநுஷ்டித் தந்தத்தொழில்களைப் பழகிச்செய்துவர விவேகஞானமான தவர்களுக்குண்டாகாநிற்கும்.

யேற்கடைய ரணியி- லெழுந்தெரி யவறறை விழுங்கியதென்னத்-தன்றொழிந்துள்ள தாறு யழியும்-

அப்படியுண்டான விவேகஞானமுந் தீக்கடைக்கோலை மேலேவைத்துக் கடைய வந்தத்தொழிலினாலே யுண்டாகிய நெருப்பந்த வரணியையுங் கோலினையுஞ் சேரச் சுட்டுப்போட்ட தன்மைபோலத் தானொன்றுமொழிந்து மற்றுண்டாகிய கன்மங்களனைத்தையு மழித்துப்போடாநிற்கும்.

அந்நிலை யன்றி

அந்தநிலையிலே நின்றுவிடக்கடவன். அஃதொழிந்து

அழிவறு முத்தி - யெய்தென்று தன்னியல்பை-மாயாவாதி வகுத்துரைத்தனனே.

நிலைபெறுடையதாயிருக்கிற முத்திபொருந்தாது. இப்படியே தன்னுடைய பெத்தத்திலு முத்தியிலுமுண்டாகிய முறைமையினை மாயாவாதியானவன் விரித்துச்சொன்னான். எ - று. (௬)

மாயாவாதி சங்கற்ப முற்றிற்று.

---

# மாயாவாதி சங்கற்ப நிராகரணம்.



உரைதருபிரமமொன்றெனு முரைக்கண்-வருபிரமாணமறையெனில்

நீ பெத்தமாகவு முத்தியாகவுங்கூறின வுனனுடைய மதத்தின் முற்பரியம் பிரமமொன்றுமேயுள்ளதென்று சொல்லுமிடத்து ஒன்றெனறதற்குப் பிரமாணமேதென்னில், இதற்குப்பிரமாணமாகச் சொல்லப்பட்டது வேதமாயிருக்குமென்னில்?

அருமறை-யொன்றென்றதன்றி யிருபொருளுரைத்த-னன்றன்று

அரியவேதமானது பிரமமொன்றுமேயுள்ளதென்றுசொல்லுவதன்றி ஜீவபரமிரண்டென்றுசொல்லுகிறது நீயிட்டபிரமாணத்துக்கு நன்றாகாது.

அபேதநாடிய பொருளேல்-

வேதமப்படி யிரண்டென்றது மபேதசித்தாந்தத்தைச் சொனனதாயிருக்குமென்னில்?

பேதமுமபேதமு மோதவேண்டா-

நீ யொன்றெனறதற்கிட்டபிரமாண மிரண்டென்று மிரண்டல்லவென்றுஞ் சொல்லவேண்டுவதில்லை. பேதமென்று மபேதமென்றும் பேதாபேதமெனறும் வேதஞ்சொல்லுகிறதெல்லா மத்தப்பிரம மொன்றையுமா யிருக்குமென்னில்?

பேதமெனினு மபேதமெனினும்-பேதாபேதமெனினுமமையுமின்-னையமிலு

வேதமிரண்டென்றுமிரண்டல்லவென்றுமிரண்டுமாயிரண்டல்லவுமா யிருக்குமெனறு மமைவுபிரந்திருக்கிற வுன்னுடைய சந்தேகமற்றசாத்திரத்திலே விசாரித்துப்பார்க்குமிடத்து உன்மதத்திலே விள

ரையிற் பையவந்தாதாக்-இகழ்பிரமாணவிகழ்வும்

ங்கப்பட்ட பிரமாணவிரோதமுண்டாகா நிற்கும்.

உண்டன்றிப்-பெத்தம் பேதமுத்தியபேதமெல்-

அப்படிப் பிரமாணவிரோத முண்டாகாதாகாலும். அந்தவேதம் பெத்தத்திற்பேதமென்று முத்தியிலபேதமென்றுஞ் சொல்லுமெனனில்?

அவ்வத் திருமா மறையிருதிறனும்-

சாத்திரம் பெத்தத்திற்பேதமென்று முத்தியிலபேதமென்றுஞ் சொன்ன விரண்டுவகையும் விசாரித்துப்பார்க்குமிடத் துன்னுடையசாத்திர மறுதியில்லாததாம். ஆகையாற் சாத்திரவிரோதமுண்டெனகிறது தப்பாது.

இனியப் பழமொழி யிரண்டலவொன்றே-

ஞானநவத்திதமாயிருக்குமென்றதுகொண்டு நீயிப்பொழுதந்தப் பழையமொழியாகிய வேத மிரண்டென்றுசொல்லாது ஒன்றென்று சொல்லுமென்னில்?

அனாதியும்பெத்தம் பேதத்தனாதுவு-மொன்றியமுத்தியபேதத் தரைத்தலும்-பழுதாயிற்றிறம் பழையதாய்க

சாத்திர முனமே யிரண்டென்றுசொல்லியிப்போ தொன்றென்றுசொன்ன தோஷமனாதியும் பெத்ததசையில் ஜீவபரமிரண்டாயிருக்குமென்றதும் முத்திதசையில் ஜீவபரமிரண்டு மொன்றாயிருக்குமென்றதுங் குற்றத்தையுடைத்தாம், இப்படி நான் சொன்னவகையைப் பதறாமலாய்ந்துபார்ப்பாயாக.

மற்-றெழுதா மறையெனு மிப் பிரமாண-மாருரை

அதொழிந்து எழுதப்படாதவேதமாகிய இந்தப்பிரமாண மாராலே சொல்லப்பட்டது.

தானே யாயி னதேல்

அஃதொருவராற் சொல்லப்பட்டதல்ல சுயம்புவாயுள்ள தொன்றென்னில்?

உன-தேக மநேகமுறும்

நீ பிரமமொன் றென்றது பொய்ப்பிரம மொருமுதலும் வேதமொருமுதலுமாக வுன்னுடைய ஏக மநேகமாய்ப்பொருந்தா நின்றது. இதனறியும்

இயம் பாமற்-சத்தரூபந் தகாதெனில்

ஒருவ னுச்சரியாமற் சத்தத்தினுடைய சொரூபந் தானாகத்தோன்றாதென்னில்?

வானத்-தொத்தொலி யுறமுமெனில்

ஆகாசத்திலே யொருவருச்சரியாமற் சத்தமானதுண்டாமாற்போல வேதமு மொருவருச்சரியாமற்றானே யுண்டாகாநிற்குமென்னில்?

வறி தறியாது-

ஆகாசத்திலே வாயு வேதுவாகக்கொண்டு சத்தமுண்டாவதொழிந்து சும்மாச் சத்தந்தோன்றாது.

அன்றியும் பதமும் பாழியு மனைத்து-மின்றியோ றொலியா யெழுந்திடு மதுனுக்-கறிவிலது

அன்றியும் பதமென்றுங் கிரமமென்றும் பாழியென்று மின்னும் பலசத்தங்களு மத்தங்களுமாயிருக்கும் வேதமானது. இப்படி யாகாசத்திற் சத்த மொருவிகாரமாயிருக்கும். அந்தச்சத்தத்துக் கறிவென்ப தொன்றில்லை, இந்தவேத மறிவாயிருப்ப தொன்றாகையா லந்த வாகாசத்தி லுண்டாகிய

சத்தம்போலு மித்தவேதமென்று சொல்லலாகாது. வேதந் தானே யுண்டாகாதென்றே லந்தவேதத்தைச் சொன்னார் சிலர்வேண்டும். இதற்கு

உருவில தறி யா தறையாது-

இந்தச் சரீரத்தாலே சொல்லப்பட்டது வேதமென்னி லிது சுத்தஜடமாயிருந்தபடியாலே யொருசத்தத்தையு மத்தத்தையுஞ் சொல்லமாட்டாது.

அன்றியு மவ் வகை யகண்டித மதுவிது-வென்றது குறிப்ப தெவ்வகை

(அந்வயம்.) அவ்வகை யன்றியு மகண்டித மதுவிதுவென்றது குறிப்பதெவ்வகை— அந்தசரீரத்தின பகுதிய மன்றியும் பிரமத்தினுடையதன்மையை விசாரிக்கி லதுகண்டிக்கப்படாததா யகண்டிதமாயிருந்தபடியாலே சத்தத்தையு மத்தத்தையு மதுவிதுவென்று சுட்டிச்சொல்லும்பகுதி யெப்படி?

யாவு-மொன் றெனு முரையு மொழிந்தனை யன்றே-

ஆகையா லெல்லா மொன்றேயென்றுசொன்னசொல்லையும் விட்டுவிட்டாயாகும்.

அருமறைபிர ம வுரையெனில்

அரியவேதமான தந்தப்பிரமத்தாலே யுச்சரிக்கப்பட்டதென்னில்?

அதற்குத்-தந் ததாலுமுத னவிற்பொறி யிலது-

அந்தப்பிரம மகண்டிதமாகையால் பல்லு நாக்குமுதலாக விதற்குச் சொல்லப்பட்டகருவிக ளில்லாதபடியினாலே யந்தப் பிரமத்தாற் சொல்லப்படாது.

என்னிலோரு டற்கண் மன்னி

அந்தப்பிரமத்திலே வேதஞ்சொல்லப்படாதென்னில் பேயானது ஒருவன்சரீரத்தி

*யவலனைக-யறைந்தற்று*

லே நிலைபெற்றுநின்று வருகாலநிகழ்ச்சி கள் சொன்னாற்போல வந்தப்பிரமமே மொ ருவனுடலைச் சார்ந்துநின்று வேதத்தைச் சொல்லாநிற்கும்.

*என்பதார் சொலதமலத்-திறம்பெற்றின்றே*

அப்படி யொருடலைச் சார்ந்து நின்று சொல்லுமென்றது ஓர் தேவனைச் சார்ந் தோ ஓரிருடியைச்சார்ந்தோ யாரைச்சார் ந்துநின்று வேதத்தைச்சொல்லப்பட்டது. அப்படி யொருவனைச் சார்ந்துநின்று சொ ன்னதாமாகிலது பசுவாக்கிய மாகையா லிந்தச் சொல்லுக்கு நின்மலத்துவ முண் டாகாது. பின்னை யெப்படிப் பிரபஞ்சமெ ல்லாஞ் சுயம்புவென்று சொல்லுவதென் னில் ?.

*செய்தோர் பெயரார்-சுயம் புவென்றுலகியம்புமென்றறி யினி-*

நிஷ்களமாய்நின்ற கத்தா சகளீகரித் துவருமேனியிற் றந்தவேத முச்சரிக்கப்ப டுகையினாலே இத்தைச் சொன்னவன் சுவ யம்பாகையாலிந்த வேதத்தையுஞ் சுயம்பு வென்றுலகஞ் சொல்லாநிற்கும். இஃது இப் படியிருக்குமென்று மேலறிவாயாக

*தற்கிட்டலை வரைத்தான் றொழுதுரைக்குஞ்-சொற்கேல்*

வேத மும்முடைய கத்தா சொன்னதா கில் அவன் றனக்குக் கீழாயுள்ள தேவதை களைத் தானமஸ்கரித்துச் சொல்லவேண் டுவானேனென்னில்?

*புரவலனேவ லமைச்சரை-யடிகண் மற்றெ*

இராஜாவினுடைய குடிபடையுள்ளவர்க ளெல்லாரு மந்த ராஜாவைக்கண்டு தங்கள் மேற்குறமுஞ் சொல்லிக்கொள்ளமாட்டார்

ங் குடிமுழுதாண்மினென் - றேத்தி யிறைஞ்சிக் காப்பர்களென்றுங் - கிசறுஞ் செயப் பேசினன்

கள். வசசற்காரியம்பார்க்கிற மந்திரமூர்த்தலானபேர்களைக்கண்டடியோங்கள் தேவரீருக்குப் பழைய வடிமையாக விருக்குமென்று வணங்கனவிடத்தவர்களுக்குண்டாகிய மேற்கருமமந்தக் காரியப்பெயர்களாலே தீர்க்கப்பட்டாற்போலக் கத்தாவுமெல்லாரும் பக்குவர்களல்லாதறுகொண்டேயபக்குவர்களாயுள்ளவர்கள் வழிபாடு செய்யத்தக்கதாக அந்த தேவதைகளையுஞ் சொன்னதாயிருக்கும்.

அன்றி - யிவையவை பிறரிற்களவிலுமிலனே -

இஃது தொழுது பிறதெய்வங்களை யவனமஸ்கரித்துச் சொன்னானென்கிற தவறுகளுக்குச் சொப்பனத்திலு முண்டாகாது. உம்முடைய கத்தா தன்னைத்தான் தோத்திரம்பண்ணுவானேனென்னில்?

தன்னைத் துதிக்குஞ் சொன்னவந்தானுந் - தறையறிவானார்க் கறைவதொன்று

கத்தா தன்னைத்தான தோத்திரம் பண்ணுகிறது பக்குவான்மாக்களாயிருக்கிறவர்கள் தன்னை வழிபாடுசெய்யத்தக்கதாகச் சொன்னதாயிருக்கும்.

அன்றியுந் - தனக்குத் தானே தன்னலம் பகர - தசத்துக்குரையாதார்க்குரை யுயிர்க் கெளிது -

இதன்றியுங் கத்தா தன்னுடைய பெருமையைச் சொல்லுமிடத்து வேறேயொருவர் கேட்கச் சொல்லுவதொழிந்து தனக்குத்தான் றன்னுடைய பெருமையைச் சொல்லிக்கொள்ளாது. பின்னைச் சரீரம் ஜடமானபடியினாலே யந்தச் சரீரத்தைச் சொல்லிச்சொல்லாது, பின்னை யவனுடைய பெ

ருமையைச் சொன்ன தாரைநோக்கி? அது பிறரைநோக்கிச் சொன்னானென்னில்?

உரை பிரமாண மிறைபிரமேய-நீபிரமாதாவி ன்பிரமிதியெனா-நால்வகை யுமா னுனேதக நின்ற ன்றே-

சாத்திரமாகிய பிரமாணங் கத்தாவாகிய பிரமேயம் ஆன்மாவாகிய பிரமாதா ஆன்மாவினுடைய வறிவாகிய பிரமிதியென்று நால்வகையாகக் காணப்பட்டதாகையாலேயொன்றென்றது நன்றாயிருந்தது.

நற்பிரமாண நிற்பதொன்றன் றால்-

ஆகையால் நன்றாக விதற்குப் பிரமாணமொன்று காட்டப்பட்டவேதமு மொன்றென்று சொல்லி நிலைநிற்கப்பட்டதில்லை.

அப் பிரமேய மு மதனியல் ப ன்றே-

இந்தப் பிரமாணத்தாலே யளவிடப்பட்டதாய் மேல் மறுக்கப்போகிற பிரமேயமு மந்தச் சாத்திரத்தினுடைய வியல்பாகப் படும்.

இது அவன் வேதஞ் சுயம்புவென்றதை மறுத்தது.

மேற்பிரமேயமென் றதைக்கொண்ட பிரமத்தை மறுக்கிறார்.

கன்னற் சு வையி லங்கியம்பி லதா - லினிமை தோன்றாத் தன் மைத் தென்ற னை-

கரும்பிலுண்டாகிய விரதந் தன்னிலே வேறுபாடில்லாதது கொண்டு தன்னுடைய விரதந் தனக்குத் தோன்றாத் தன்மைபோலும் பிரமமுந் தன்னுடைய வின்பத்தைத் தானறியாதென்றும் நீ யுன்மதத்திலே சொன்னாய்.

அறிவிற் குவ மை யசத்தாங் க

அறிவாயுள்ளதற் குவமை சொல்லுமிடத் தறிவாயுள்ளதைச் சொல்லாமல் ஜடமாயுள்ள

ட்டி - பிறிவித்தொட்டினும் பேறதுறுதே-

கரும்பு மிரதமும்போலுமென்று சொன்னாய். அந்தத்தோஷமன்றியுங் கரும்பிலுண்டாகிய கட்டியைத் தன்னிலே பிரித்துவைத்துமேலோரவதரத்திலே கூடினவிடத் தித்தனைநாளிந்தவிரதத்தையிழந்தோமே யிப்பொழு திந்தவிரதத்தைப் பெற்றோமே யென்கிறதன்மை கட்டிக்குண்டாகாதாகையா லது பிரமத்துக்குவமையன்று. இதன்றியும்

தற்பர விரிவு பொற்பணி தகுமெனில்-

பரப்பிரமந் தேகாதிபிரபஞ்சமாகப் பலவாக விரிந்ததன்மை பொன்னானது பலபணியாயிருந்ததன்மைபோலுமென்று நீசொல்லில்?

செய்வோரின்றிச் செய்வினையின்மையிற்- பொன் பணியாகை தன்பணியன்றே-

இந்தப்பிரபஞ்சத்திற் செய்வோரொருவரையன்றிச் செய்தொழிலானது காணப்படாதாற்போலப் பொன்னானது வொருவன்பண்ணப் பல பணியாகவிருந்ததொழிந்து தானாகப்பல பணியாகாது. நீ சொன்னபிரமம் பிரபஞ்சமாகவிரிந்ததும் வேறேயொருவனாலே செய்யப்பட்டதாகவேண்டும். அப்படியன்றுகாணும், எல்லாத்தையுஞ்செய்தது பிரமந்தானே யென்னில்?

செய்வோர் போலச் செயப்படுபொருண்முதல்-

இந்த வுலகத்திற் செய்கிறவர்கள்போலேயிராதிவர்களாற் செய்யப்படும் பொருள்களுக்கு முதலாயுள்ள வுபாதானமும். அதென்போலவென்னில்? குலாலனைப்போலேயிராது சால் குடம் சட்டி பானைக் குபாதானமாகிய மண்ணும். ஆகையா லிந்தப் பிரமத்தையின்றிப் பிரபஞ்சத்துக் குபாதானம் வேறேயொன்

றுண்டாகவேண்டும். அப்படி யோருபாதான மூண்டாகி லதுவே யமையாதோ, இந்தப் பிரம மேனென்னில்?

செய்வோ ரோயாச் செய்யவும் படுமே—

அந்த வுபாதானம் ஜடமாயிருந்தபடியாலே யது தானுகப் பிரபஞ்சமாகாது. அந்த வுபாதானத்தைக்கொண்டு செய்கைகளுக் கர்த்தா வேண்டும். அதுவன்றிப் பிரபஞ்சத்தி லியாதொருபொருள்களுஞ் செய்வோரொருவரை யில்லாம லந்தத்தொழில்கள்தான் செய்யப்பட்டுவருவது முண்டாமோ?

சுத்தி வெள்ளியிற் றோன்றிற் றயினுஞ்—சத் தலகேதுந்தாரா தருமெனில்—

சுத்தியென்னுஞ் சிப்பியானது வெள்ளியாகத்தோன்றினுற் போலக் கண்டவர்களுக்கு அசத்தியமாயுள்ளபிரபஞ்சமுஞ் சத்தியமாகத் தோன்றிற்றாயினும் அறிவாயுள்ளபிரமம் ஜடமாயுள்ளபிரபஞ்சத்தை யொருபிரகாரத்தாலு முண்டாக்காது. உண்டாக்குமென்னில்?

உலக மித்தை யென் றோராதுரைத்தனை—

நீமுன்னே யிந்தவுலகத்தைப் பிராந்தியென்றுசொன்னது விசாரியாமற்சொன்னதாக வேண்டும்.

நிலவுநின்மரபு நினைந்திலை யாங்கொல்—

இப்படிமலைகையாற் பொருந்தப்பட்டவுன் னுடையமதத்தினது கிரமத்தை மறந்தாயாக வேண்டும்.

வியவகாரத்தில் வேண்டுது முலகம்—பரமார்த்தத்திற் பகராமென்னில்—

இந்தப்பிரம முபாதிகள்வசத்தினாலே தன்னைஜீவனென்று பிரமாணம்பண்ணிக்கொண்டு நிற்கிற விந்தவியவகாரநிலைக் குலகமென்று கொள்ளப்படும். அஃதொழிந்து, நான்பிரமமென்றறிந்த பரமார்த்தநிலையிலே யெல்லாம்

பொய்யாயிருந்தபடியாலே யவ்விடத்துக் குலகமென்று சொல்லப்பட்டிராதென்னில்?

பரத் துளதே விளையும் பரமார்த்தம்-

இந்தவுலகம் பரமார்த்தமாயுள்ளபிரமத்திலேநின்று முண்டானதாயின் அசத்தியமாயுள்ளபிரபஞ்சமுஞ் சத்தியமாயுள்ளபரமார்த்தமாகவேண்டும்.

பரத் திலதேல்

உலகம் பொய்யாயிருந்தபடியாலே யிந்தப் பரமார்த்தத்துக்குப் பணியல்லவென்னில்?

ஒழி முன்பகர் மாற்றம்-

முந்தப் பிரமத்திலேநின்றுந் தோற்றிலதென்றுசொன்ன வார்த்தையை நீ யொழித்துவிடுவாயாக.

அதன் முதலி ஆவென வுதவுக

இந்தவுலகம் பிரமத்திலே தோன்றின தல்லவாயின் அதுதோன்றின வுபாதான முனக்குத் தெரியுமாயி னின்னதென்று சொல்லுவாயாக.

அன்றியும் - விகாரிக்குங்காற் றிகழ்பரமார்த்த - நிலையது

இந்தத் தோல்வியன்றியும் இன்னமுஞ் சொல்லுமிடத்து நின்மலமா யெல்லா வுபாதிகளையுங் கழன்ற பரமார்த்த நிலையாயிருப்பதொன் றந்தப் பரப்பிரமம்.

தெரியி னீதுநீ

அந்தப் பிரமந்தான் காணு நானென்னில்? அது அறிவாயிருப்பது. விசாரித்துப் பார்க்குமிடத்து மலமாயிருக்கிற விந்த மாயாவுபாதிகளோடுஞ் சம்பந்திபா யிருப்பா னொருத்தனியாகையா லிந்த ஜீவனுந் தனித்தொருமுதலென்?

நீயேல்-

அந்தப் பிரமந்தான் காணு நானென்னில் அஃதறிவாயிருப்பது. இஃதறியாமலிருப்பானேன்?

தெரியாது

இது உபாதிவசத்தினாலே யறியாமலிருக்கும்.

ஆயி னஃதுந் தெரியாது-

நீயு மந்தப்பிரமமு மொரு முதலாயிருக்கையினாலே இஃதுபாதிவசத்தினாலே யறியாமலிருக்குமாயின அந்தப் பிரமமு மறியாதாகவேண்டும்.

உரையாரளவையு மொழிந்தனை யன்றே-

உன்னுடைய வத்தத்தை யளவிட்டுச் சொல்லிவைக்கிற பிரமாணத்தையும் விட்டுவிட்டாய். அதேதெனின் அஃதொன்றைச்சொல்ல நீயொன்றைச் சொல்லுகையால். அந்தச் சாத்திரத்தின்படி காணு நான்சொன்னதென்னில்?

அளவை காண்டல் கருத லுரையெனவுளது

பிரமாணமாவது பிரத்தியக்ஷமென்று மநுமானமென்று மாகமமென்று மூன்றுவகைப்படும்.

அவை மூன்றின் மொழிவழி நுழைபி - னின்பிரமேய மென்பதென்கொல்-

அங்ஙனஞ் சொல்லப்பட்ட பிரத்தியக்ஷத்தின்வழியாலு மநுமானத்தின்வழியாலு மாகமத்தின்வழியாலு நுழையுந் தொன்றை யறிந்து கொண்டு வருமாயின் வாக்குமனத்துக்கு மெட்டாத வுன்னுடைய பிரமேயமென்று சொல்லப்பட்ட தென்னமாய்முடியும்.

இது அவன்பிரமேயமென்றதை மறுத்தது.

மேற் சித்தினிடத் தசித்துத்தோன்று மென்பதை மறுக்கிறான்.

பொற்பிதிர் பிதிர்க்தும் பொன்னேயா மின் - றற்பரமசித்தைத்த

பொன்னும் பணியும்போலப் பிரமமும் பிரபஞ்சமுமென்றும். பலபணியானதும் பொற்கட்டியானதும் மாற்று நிறமு மொருபடித்தாகக்கண்டோம். பின்புபொன்மேறுடுங்கூடப்

ருமாறென் னெனில்—

பொன்றாய்நின்றதுங் கண்டோம். ஆகையா லுன்னுடைய சத்தாயுள்ள பிரமமந்த வசத்தாயுள்ள பிரபஞ்சத்தைத் தந்தப்பிரகார மெப்படியென்று நான்முன்னே யுன்மதத்திலே கேட்டபொழுது

சிலம்பிநா றருநலம்போற் றோன்று—மென்றனை

சித்தாயுள்ள சிலம்பி ஜடமாயுள்ள நூலைத் தந்ததன்மைபோலுஞ் சித்தாயுள்ள பிரமத்திலே ஜடமாயுள்ள பிரபஞ்சந்தோன்றினதென்று சொன்னாய்.

அதுவதன் றொழில்

அந்த நூலை யநவரதமுந் தோற்றுவித்துக் கொண்டு நிற்கிற தந்தச் சிலந்திக்குள்ள தொழில். பிரபஞ்சம் பிரமத்திலே யின்றோ ரவதரத்திலே தோன்றுவதொழிந் தநவரதமுந் தோன்றிக்கொண்டு நில்லாது.

அன்றியு—மொன்றதனியல் புலகோரியல் பன்றென—

அதன்றியுஞ் சிலந்தியினிடத்திலே தோன்றினநூ லொருதன்மையாகக் காணப்பட்டது. பிரமத்திலே தோன்றின பிரபஞ்ச மொருதன்மையாகக் காணப்பட்டதில்லையென்று நான் முன்னே சொன்னபொழுது

பலமிலை பழம்பூப் பாதவந்தருகீர்—திரைநுரை திவலை சிலதருமிவை போற்—றுனே பலவா மெனச் சாற்றினை—

காயையு மிலையையும் பழத்தையும் பூவையு மரமானது தந்த தன்மைபோலவும் திரையையு நுரையையுந் திவலையையுங் குமிழியையு நீரானது தந்த தன்மைபோலவும் பிரமந்தானே பலவிதமாயுள்ள பிரபஞ்சமா யிருக்குமென் றுன்மதத்திலே சொன்னாய்.

சத்தசத்தாக வுஞ் சத்தினிலச

அறிவாயுள்ள தறியாமையாயிருக்குமென் றறிவினிடத்திலே யறியாமையினது கூட்டஞ்

த்தின் - கொத்தா ளதாகவுங் கூறி னரிலரால்-

க டோன்றுமென்று நீசொன்ன வித்த மலைவு புத்தர் சமணாதிகளுஞ் சொல்லார்கள். (அஃதைச.) பினனை யிந்தப்பிரபஞ்சந் தோன்றின படி யெப்படியெனனில்?

வித்திலே கனி கனிவிழு தாறரு நெறி - சத்தல தோன்று தான்ற தவேண்டும்-

சூக்குமமாயுள்ள வித்தானது இலையையும் பழத்தையு மிகுதியாயுள்ள விழுதையுமுடைய தூலமாகிய வாலமரத்தையுந் தந்ததன்மைபோலத் தூலமாய்ப் பலவாயிருக்கிறபிரபஞ்சத்தையுஞ் சூக்குமமா யசத்தாயிருக்கிற தோருபாதானந் தந்ததாகவேண்டும். அப்படியன்றாகாணும், நெல்லிலேநின்றும் வைக்கோலும் பதருந் தோன்றினாற்போலச் சித்திலேநின்று ஜடமாயுள்ள பிரபஞ்சந் தோனறுமென்னில்?

நெற் பதர் ப ஞாலத்திற் குபா தானமென்-

நெல்லுஞ் சூக்குமமாய் ஜடமாயிருக்கையாலதுவும் வைக்கோலுக்கும் பதருக்கு முபாதானமென் றறிவாயாக.

காரண மின்றி க்காரியம்பிறவா-

ஆகையாற் றனதாகவுடைய காரணத்திலே நின்றுங் காரியந்தோன்று மொழிந் தந்நியகாரணத்திலே நின்றுங் காரியந்தோனறாது. அப்படித் தோன்றுமென்பையாகில்?

பாரிடை யொருபடம் பண்ணை வும்படுமே-

பருத்தி காரணமாகப் புடவையுண்டானதொழிந்து மண்காரணமாகப் புடவை பண்ணப்படுமோ? ஆகையால் ஜடங் காரணமாக ஜடமுண்டாவதொழிந்து சித்துக்காரணமாக ஜடமுண்டாகாது. இப்படி யிருக்கையிலே நீ

அந்தமில்பிரம மவித்தை காரண மெனத்-தந்தனை

ஜடமா யழிந்துபோவதாயிருக்கிற தேகாதி பிரபஞ்சத்துக்குச் சித்தா யழிவில்லாமலிருக்கிற பிரமம் காரணமென்று சொன்னாய்.

*அவித்தை தானெய்துறுதல் - தன்னியல் பெனில்*

சித்தாயுள்ள பிரமத்திலே ஜடமாயுள்ள பிரபஞ்சந் தோன்றுவானேன்?

இந்தப் பிரபஞ்சந்தோன்றுகிறதந்தப் பிரமத்துக் கியல்பாயிருப்ப தொன்றென்று நீ சொல்லில்?

*வன்னிதன் வெப்மையிற் - சத்தினியல்புஞ் சத்தே*

அக்கினிக் குஷ்ண மியல்பாகுற்போல நீ சித்துக் கியல்பென்று சொன்ன பிரபஞ்சமுஞ் சித்தேயாகவேண்டும்.

*அசத்தெனில் - வைத் தனியல்பெனும் வழக்கொழி*

பிரபஞ்சத்தை ஜடமென்னில்?

சத்தாக வைக்கப்பட்ட பிரமத்தினுடைய வியல் பிந்தப் பிரபஞ்சமென்றுசொன்ன வழக்கை விடுவாயாக.

*அன்றியு - மிருள் பொதி விளக்கெனவரும்*

இந்தக் குற்றமன்றியுஞ் சித்தாயுள்ள பிரமத்துக்கு ஜடமாயுள்ள பிரபஞ்ச மியல்பென்று நீ சொல்லுகிறது, பிரகாசமாயுள்ள விளக்கு இருளானதைப் பொதிந்துகொண்டு நின்றதென்றதை யொக்கும். அப்படியன்றுகாணும்,

*மருவிளக்கிற் - கருமை பயந்த பெருகொளி தருமெனில் -*

பெரிய விளக்கினிடத் துண்டாகிய மிக்க பிரகாசமானது கறுத்த மையைத் தந்த தன்மையையொக்கும், சித்தாயுள்ளபிரமம் ஜடமாயுள்ள பிரபஞ்சத்தைத் தந்ததென்று நீ சொல்லில்?

*தன்னியல் பன்றதனுபாதி வசத்தான் - மன்னியது*

அங்ஙனம் விளக்கினிடத்திலே கறுத்தமையானது தோன்றினது விளக்கினுடைய வியல்பல்லவென்றறி. திரியென்றும் நெய்யென்றுஞ் சொல்லப்பட்ட வுபாதிகள்வசத்தினாலே மையானது நிலைபெற்றதென்று கொள்.

*அன்றி மைத் தானறனின் மாயாது-*

அன்றியும் பிரமத்திலே தோன்றின பிரபஞ்ச மீளவும் பிரமத்திலே யொடுங்காநிற்கும். விளக்கிற்றோன்றிய மையானது மீளவு மந்தவிளக்கிலே சென்றொடுங்காது. அன்றியும்

*ஒன்றானசுத்த னன்றாமன்றே-*

இந்தப் பிரமமென்று சொல்லப்பட்ட ஒப்பில்லாதவன்றான் சுத்தனெனுந் தசுத்தனுமாயிருப்பா னொருத்தனல்லவே! அப்படியிருக்கச் சே யிந்த மாயாவுபாதிகளோடுங் கூடியிருக்கவேண்டுவானேன்?

*ஆங் கொருகாலத் தோங்கியதாயின்-*

அந்தப் பிரமத்தினிடத்திலே யோராவதாரத்திலே யிந்த வுபாதிகள் வந்து கூடினதாயின

*அந்தமி லவித்தை வந் தணைவதற்கோ-ரேது வேண்டும்*

முடிவில்லாத மாயாவுபாதிகள் பிரமத்தினிடத்திலே வந்து கூடினதற்கு முன்னே யொருகாரண முண்டாகவேண்டும்.

*புய லியல்பெனின்*

நின்மலமாயிருக்கிற வாகாசத்தை மேகமானது வந்து மறைத்த தன்மைபோல, சுத்தமாயுள்ள பிரமத்தை மாயாவுபாதிக ளியல்பாகவந்து கூடிற்றெனின் இதற்கொரு காரணம் வேண்டுவதில்லையென்னில்?

*வீ-டோத வேண்டா*

இந்த வுபாதிக ளியல்பாகவந்து பொருந்தின், மோக்ஷமென்று சொல்லவேண்டுவதில்லை. அதேதெனன்னில்?

*ஒழிந் தோரினு முறும்-*

எல்லா வுபாதிகளையு நீங்கிப் பழைய சுத்தத்தைக் கூடினவர்களிடத்திலு மிந்தவுபாதிக ளியல்பாகவந்து பொருந்தும். அப்படியன்று காணும்,

களங்கம துறவுமவித்தைதந்கவித்தல் - விளங்கிய பிரம விளையாட்டாயின் -

பிரமத்துக்கு மயக்க முண்டாகத்தக்கதாகப் பொருந்தப்பட்ட மாயாசரீரங்களிந்தப் பிரமத்தைப் பொருந்திக் கொண்டது மிக்க பிரமத்துக்கு விளையாட்டாயிருப்ப தொன்றாயின்

அவித்தை யென்ப தொன்றந்நியந் தன்னி - லுதிக்குமெனற முன்னுரையு மறந்தனை -

விளையாடுகிறவர்களுக்கு விளையாடப்பட்டபொருள் வேறானாற்போலப் பிரமத்தினுடைய விளையாட்டாகிய மாயாசரீரமும் வேறாயிருப்ப தொன்றாகையாம். பிரமத்தினிடத்திலே யுபாதிகடோன்றிப் பிரமத்தை மறைக்குமென்று நீமுன்னேசொன்ன சொல்லையு மறந்தாயாகவேண்டும்.

நுண்ணூற் குடம்பை நுந்துபு போலுட் - படுநெறியதனால் விடுநெறியிலதாற் - றலைமையு மறிவுமிலதென்

உலட்டுப்புழுவானது தன்னிடத்திலே நின்றுந்தோன்றிய நுண்ணிய நூலாலே தனக்குக் கூடாகப்பண்ணித் தானதற்குள்ளே புகுந்து பின்னைத் தானாகப் புறப்படமாட்டாமற் செத்ததன்மைபோல வந்தப்பிரமமு மாயாசரீரத்துக்குள்ளே விளையாட்டாகவந்து புகுந்து பின்னைத் தானாகப் புறப்படமாட்டாமலிற்கையா லந்தப் பிரமத்துக்குச் சர்வமுதன்மையுஞ் சர்வஞ்ஞியத்துவமு மில்லையென்றுசொல.

அவித்தையை - விடுத்தெடுத்தாரும் வேற்றோரன்றே -

இதுபாசபந்தியாயிருக்கையாலே இந்தமாயாசரீரத்தைத் தானாகவிடுவித்துக்கொள்ளமாட்டாம னின்மலமாயிருக்கிறதொரு குருமுத லிந்தமாயாசரீரத்தைநீக்கிப் பாவக்குழியிலுநின் றெடுத்துந் தனக்கடிமையாகவாண்டு கொள்கையினு லந்தச்சரீரத்தோடேகூடிநிற்கிறது பிரமமாகாது. அப்படியன்றாகாணும்,

ஒளிகொடாமி ரங்குளிகைபெற் றுங்கத - னவித் தையை வித்தை தவிர்க்கு மென் றுரைக்கின்-

பிரகாசத்தோடுங்கூடியிருக்கிற செம்பானது இரதகுளிகையோடுங்கூடினவிடத்துக் காளிதநீங்கிப் பொன்னானதன்மைபோல வந்தப்பிரமத்துக்குண்டாகியசரீரசம்பந்தத்தையு மதனிடத்திலேதோன்றினவிவேகஞானநீக்க வந்தப்பிரமஞ் சுத்தமாமென்று நீ சொல்லில்?

நித்த னறிவன் சுத்தனென்றுரைத்த - வித்தகமென்னீ

-அப்படியசுத்தமாயிருக்கிறதுமல்ல, நீ முன்னே நித்தியனென்றுஞ் சர்வஞ்ஞியனென்று நின்மலனென்றுஞ்சொன்ன சாமர்த்தியமென்னதான்.

வித்தையும் வேறென்று-

நீ விவேகமென்றுசொல்லுகிற இந்தவவித்தையோடுங்கூடிக்கொண்டிருக்கிற முதலல்ல, அதை வேறே முதலென்றுசொல். இந்தவிவேகந்தானகாணு மந்தப்பிரமமென்று நீசொல்லில்?

எய்யமேறொரி னொருவனின் னிறை-

அம்ம

நீ கர்த்தாவென்றுசொல்லுகிறமுதல் பாசபந்திகளாயுள்ள வெங்களிலே பொருந்தனாக வேண்டும்.

நான்சொல்லுகிறசொல்லைப் புத்திபண்ணிக்கேட்பாயாக.

சைவந்தவனீ யன்றே-

யாதொருத்தனைப் பொல்லாதவனென்று சொல்லப்பட்டது அப்படிச்சொல்லப்பட்டவனீயாகவேண்டும்.

இதுபிரமிதிமையமறுத்தது.

இனிபிரமாதாமறுப்பு. இதன்றியும்

பன்மணி பசுந்பாத்திரமென

இரத்தினங்கள்பலவாயிருந்தாயினு மதிற்கோர்க்கப்பட்டநூற்சர டொருதன்மையாயி

வு - நன்னூல் பா
னீர் நற்கதிரென
வு - முடலையு மு
ணர்வையு முவமி
த்தனையேல்-

ருந்தாற்போலவும் பசுக்கள் பலவாயிருந்ததாயாயினு மவையிலுண்டானபா லொருதன்மையா யிருந்தாற்போலவும் பாண்டங்கள் பலவாயிருந்ததாயாயினு மவையிற்றிற்பிரதிபிம்பஞ்செய்கிறவாதித்த னொருதன்மையாயிருந்தாற்போலவுங் கூவ லாழி குளஞ் சிறுகுழி கால் பலவாயிருந்ததாமாயினு மவையிற்றிலுண்டாகிடதண்ணீ ரொருதன்மையாயிருந்தாற்போலவுமென்று யோனிபேதங்களாயிருந்தாலு வுடல்களுக்கும் அவையிற்றிற்கூடிநிற்கிற பிரமத்துக்கு முவமையாகச்சொன்னாய். அப்படியாகில்

நூட மணி சர
டொடு தாய்கூட
லவே-

பிரகாசத்திலேயிருக்கிற மணிகளுஞ் சரடுந் தாமாகக்கூடினதில்லை, அவையிற்றை வேறேயொருத்தன்கோர்க்கச் சேர்ப்புண்டுநின்றதன்மைபோல; உன்னுடையபிரமத்தையு மித்தவுடலையுங் கூட்டினவ னொருத்தனுண்டாகவேண்டும். அதன்றியும்

உணர் வொணர்
வொழியி னுவ கு
ணர்வுறி னிவ-
பாலும் பசுவுஞ்
சாலும்

உன்னுடையபிரமமான தறியாததாயுங் கூடிநிற்கிறதேகாதிபிரபஞ்ச மறிவேயாயிருந்ததாயாயி னீ பாலையும் பசுவையு முவமையாகச் சொன்னதற்கொக்கும். அதன்றியும்

சாலக் - கலம்
பல்வன்றிச் சலம்
பல வில்லெனக்-
காணுநினைறி னீ

மிகவும் பாத்திரங்களிற் பின்னமொழிந்தாதித்தனிற் பின்னமில்லையென்றுங் கூவ லாழி குளஞ் சிறுகுழி கால் தங்களிற்பின்னமொழிந்து ஜலத்திற்பின்னமில்லையென்றுங் கன்

ணின் விளம்பினை-

டுசொல்வார் சிலரையின்றி விருதாவிலே மிகவுஞ் சிறிதுவார்த்தைகளை நீசொன்னது திருஷ்டாந்தவிரோதமாகையா லதத்தமாகாது.

ஆடியு ணிழல் போற் கூடுதல் கூறில்-

கண்ணாடிக்கு ணிழல் தோய்வறநின்றாற்போலச் சரீரத்திலே பிரமந்தோய்வறநிற்குமென்று நீசொன்ன வத்தத்தை நான்சொல்லுமிடத்து

தன்னிழல் கொண்டு தற்பணஞ் சலிக்கின்-மன்னிழல் கொண்டுடல் வந்தகன்றிடுமே-

தன்னிடத்திலேநிற்கிற பிரதிபிம்பம் பிரதானமாகக்கொண்டு கண்ணாடியானது சலித்துதாமாயின் பிரமத்தினுடைய பிரதிபிம்பம் பிரதானமாகக்கொண் டிந்தவுடல் கூடியும் பிரிந்தும் நிற்கும். அவையிற்றுக் கில்லாதபடியினாலே யீதத்தமன்று.

மன்னயக் காந்த மென வுடல் பிரம-சந்நிதியளவிற் சலித்திடுமாயின்-

நிலைபெற்றுவாராநிற்கிற விரும்பானது காந்தம் விகாரமறநிற்க வதனுடையசந்நிதிமாத்திரத்திலே விகாரப்பட்ட தன்மைபோலப் பரப்பிரமமும் விகாரமறநிற்க வதனுடையசந்நிதிமாத்திரத்திலே யுடல் போக்குவரத்தைச் செய்யாநிற்குமாயின

அகண்டிதஞ் சந்நிதியல திலதெவையு-நடந்திடவேண்டுங் கிடந்திடப்பெறுவே-

பரப்பிரமமென்றுசொல்லுகிறது கண்டிதமல்லாமலகண்டிதமாகையாலே யதனுடைய சந்நிதியல்லாதவிட மோரிடமு மில்லையாகையாற் கடபடாதியாயுள்ளவையெல்லாம் போக்குவரத்தைச்செய்யவேண்டும். அதன்றியும் உடலானது சேட்டித்துங் கடபடாதிகள்சேட்டையின்றிக்கிடக்கிறதுஞ் சந்நிதியிலே யெல்லாங்காரியப்படுமென்கிறதுக்குப்பெறுது. இதன்றியும்

காந்தத் திரும்பு காட்டுநேர்ப் பெறி லயஞ்சேர்ந்திடும்

காந்தமு மிரும்புங் கூடிக்கிடந்ததாமாயினு மவை தாமாகக்காரியப்படமாட்டாது. அவையிற்றை முயல்வார்க்குக் காட்டுவார்சிலரைப் பெற்றகாலத் திரும்பானது காந்தத்தைச் சென்றுபொருந்தாநிற்கும். ஆகையா லுன்னுடைய பிரமத்தையு முடலையுங்கூட்டிக் காரியப்படுத்துகிறது வேறேயொருமுதலுண்டென்று கொள்ளுவாயாக. இதன்றியும்

நீக்குஞ் செயலதற்கிலதே-

காந்த மிரும்பைக்கூட்டிக்கொள்ளுமல்லது நீக்கிக்கொள்ளுந்தன்மை யதற்குண்டாகாது. பிரமத்தின்சந்நிதியிலே யுடல் கூடியும் பிரிந்தும்வருகையா னீ காந்த மிரும்பென்றது திருஷ்டாந்தவிரோதமாகையா லது வத்தமன்று. இதன்றியும்

கனத்துயர் கயிற்றரவெனுச் சிலநொடித்தனை-

சொப்பனத்திலேயதிபயங்களாயுள்ளகாரியங்களைக்காண்கிறவன் விழித்தவிடத் ததுபொய்யானதன்மைபோலவும் இராக்காலம் புற்றின்வாசலிலேகயிறுகிடக்கிறதைக்கண்டு பாம்பென்று புத்திபண்ணி பயப்பட்டவனுக்கு விடிந்தவவசரத்துப் பாம்புபொய்யானதன்மைபோலவுஞ் சுகதுக்கங்களா லுண்டாகிய வநுபோகங்களு மந்தப்பிரமத்துக்குண்டாகாதென்றுசொன்னாய்

கனவின் பயனு நனவின் பயனும் - வினையின் பயனைவொய்

சொப்பனத்திற் சூக்குமதேகத்தோடுங்கூடிச் சத்தாதிவிடயங்களை யிவன்புசித்துஞ் சாக்கிரத்திலே தூலதேகத்தைப்பொருந்திச் சத்தாதிவிடயங்களைப் புசித்து மீண்டு மிவன்

யென வேண்டா- முன்னேசெய்தபிராரத்தம் புசித்ததொழிந்து சாக்கிரத்திற்புசித்ததுமெய் சொப்பனத்திற் புசித்தது பொய்யென்று சொல்லவேண்டுவ தில்லை.

உடன் மாறுட் டக் கடனது கரு துக- சாக்கிரத்துக்குத் தூலதேகத்தோடே கூடி யநுபவிக்கும். சொப்பனத்துக்குச் சூக்கும தேகத்தோடே கூடியநுபவிக்கும். ஆகையால் சரீரவொற்றுமையுள்ளதென் றறிவாயாக.

உற்றபுற்றுமற் றதிற் கயிறு - மு டனுங் கூடச் ச டமெனவறிதி- இவன்சென்றிராக்காலத்திலே பொருந்தப் பட்டபுற்றும் அதன்வாசலிலேகிடக்கிறகயிறு மிவனுடையசரீரமு மாகமூன்றும் ஜடமென் கிறது நீயுமறிவை.

அறிவு கயிறெ ன் றறியாதன் றே- அறிவாயுள்ளபிரமங் கயிற்றைக் கயிறென் றறியமாட்டாமற் பிரமிக்குமாகிலதை யறிவென்று சொல்லப்படாது.

அச்சமதடைத ல் சொச்சமையு டைத்தே- பிரமங் கயிற்றைப் பாம்பென்று பயப்படு மாயின் அதைக்கத்தாவென்றுசொல்லப்படா து. இதன்றியும்

இன்னு மக்க னவி லிருளுறுக யிற்றிற் - பின்னு நின்பிரமம் பிர மித்திடுமே- இன்னமொருகுற்றமுண்டு. கனவிற்றீங்கு பொய்யென்றறிந்துங் கங்குலிற்கயிறு பொய் யென்றறிந்து மிருக்கையிலேயு மீளவுங் கன வைக்கண்டவிடத்துங் கங்குலிலே கயிற்றை க்கண்டவிடத்து முன்னுடையபிரமமான துச் சப்படுகிறதுதகுமே! ஆகையாலிந்தவுடம்போ டுகூடி யிப்படிமயங்குகிறது பிரமமன்று. இத ன்றியும்

துன்னியவினை யிற் செம்மலர்ப் சிவந்தபூவோடுங்கூடியிருக்கிற படிகந் தன் னுடையதன்மையிழந் தந்நிறமேயாயிருந்

பளிங் கெனத்-
தானுந் தகைமை
யானல்

தந்தாமாயினு மதிலொருசற்றுந் தோய்வறாதின் ருற்போலப் பிரமமு நெருங்கிவருகிற கன்மங்களைப் புசிக்குமிடத் தந்தவிடயங்கள் தாமாயிருந்ததாமாயினு மதிலொருசற்றுந் தோய்வறாதிருக்குமாயின்

மலரென-வொ
ருபயனன்றிப் ப
லபயன் பரிஇய-
இருவினை தருபய
னென நனி வே
ண்டில்-

படிகம் பூவோடுகூடியிருந்தபொழுது சிவந்தவண்ணமொன்றுமேயாயிருந்தாற்போல வினையோடுகூடின பிரமமு மேகப்பிரகாரமாயிராமல் நானாவிதமாய்க்கொண் டிருப்பானேனென்ன, அதுபுண்ணியபாவங்கள் பலவாயிருக்கையினாலே யத்தையநுபவிக்கவேண்டி யப்பிரமமும் வெகு பிரகாரமாயிருந்ததென் றுமிகவு முனைக்குப்பக்ஷமாயின்

ஆண்டவித்
தையு மவித்தைத
தொடாக்கையு-
மீண்டிருவினையு
மியம்பினை

இவ்விடத் திவளையநிலையாக வாண்டு மிரக்ஷித்துக்கொள்ளுகிற தொருவிவேகஞானமும் அவித்தையையோடுங் கூடியிருக்கிற வோர்சரீரமும் பலவிதமாயிருக்கிற புண்ணியபாவங்களு முண்டென்றாய். ஆகையால்

பாதகர்க் - க
ள்வரைப் பிணிக்
குங் காவலரென
முப - முதல்வினை
த் தொடக்கிற்
றோன் றுடற் சி
றையிட் - டிருவி
னையூட்டு மெம்
மானம் மான் -

இவ்விடத்துக் களவுகொண்ட கள்வரைக் கொண்டுவந்து சிறைசெய் தநற்குத்தக்கதண்டங்களையுஞ்செய்கிற விராஜாக்களைப்போல முன் ஜநநங்களிலேசெய்த பழவினையினது தொந்தத்தினுலே யுண்டாகப்பட்டவுடலாகிய சிறைச்சாலையிலே யுன்னுடைய பிரமத்தை விட்டுப் புண்ணியபாவங்களென்கிற தண்டங்களைப் புசிப்பிக்கும் சர்வான்மாக்களிடத்துங் கிருபையுதித்த வெம்முடைய கர்த்தாவாயுள்ள ஈசுவரனென்கிற கர்த்தா. இதன்றியும்

அருவினை யுடற்க ணவத்தைக ளுரைத்தனை-

அரிதாயுள்ள வினைக்கீடாகவெடுக்கப்பட்ட வுடலிலே மூன்றவதைப்படுமென்று நீ யுன்மதத்திலே சொன்னாய்.

ஆருறுபவர் பரமகண்டித மடங்காது

இந்தச் சரீரத்தோடுண்டாகிய மூன்றவத்தையு மநுபவிக்கிறதார்தான். பரப்பிரமமோ வென்னில்? அது பரிபூரணமா யிருந்தபடியாலே நனவு கனவு சுழுத்தியென்கிற வவத்தைகளி லடங்காது.

ஓர்வில துடல்சட முறுநெறி யாதெனின்-

உடல் ஜடமாயிருந்தபடியாலே யவத்தைப்படுமென்கிற வார்த்தை யதுக் குண்டாகாது. பின்னை யிந்த வவத்தைப்படுகிற நெறி யாதென்றுகேட்க

மன்னிய கரண மாருட்டத்திற் - பன்னின மென்னின்

நிலைபெற்று வாராநிற்கிற வந்தக் கரணங்கள் பிரிந்தவிடத் துண்டாகிய மயக்கத்தை யுடையதாயிருக்கு மியா மவத்தையென்று சொல்லப்பட்டதென்னில்?

இவையோ பரமோ - முதலி யது

அந்தக் கரணங்களோ பரப்பிரமமோ விந்தச் சரீரத்துக்கு முதன்மையுடையது.

ஆயி னிவைபி றழ்வெய்தாது-

பரப்பிரம முதன்மையுடையதாயி னந்தப் பரப்பிரமநிற்க விந்த வந்தக்கரணங்க ணீங்கமாட்டாது. அதனால்

இவை யெனி லூனது மொழி பழுதுளதே-

இந்த வந்தக்கரணங்கள் முதன்மையுடையதென்னி லெல்லா முதன்மையுமுடையது பரப்பிரமமேயென்று வேதஞ் சொல்லுமென்று நீ சொன்னது பழுதாகவேண்டும்.

உடற்படுபி ரமமுறுமெனில்

அப்படியன்றாகாணும், அவத்தையுறுகிற தூடலுக்குள்ளே யகப்பட்டுநிற்கிற பிரமமேயாகில்?

சாளரத் - திடத்தகுமுறு விரனுதியளி யெறிதுய- ரங்குலிதானே யருந்திடி னுடற் கட்-டங்கிய வறிவு தனித்தூறு. யன்றே-

பலகணிவாச லிடத்திலே புறம்பே நின்றுள்ளே யொரு விரலை நீட்ட வந்த விரல் நுதியிலே யொரு வண்டானது கொட்ட வதனா லுண்டாகிய விதனை மந்த விரல்தானே யநுபவித்ததாமாயின், இந்த வுடலிலே பொருந்திநிற்கிற பிரமமவத்தையைத் தனியே யநுபவித்ததென்று சொல்லலாம். அந்த விர னுதியிலே வண்டுகொட்டின கடுப்புப் பாதாதிகேச மளவுநின்று கடுக்கிறபடியினாலே யுடலிலேநிற்கிற வறிவு அவத்தையைத் தனியே யுறுமென்று நீ சொன்னது அத்தமாகாது. இதன்றியும்.

தர்ப்பணநிழற் கட் குறற். பாய்ந்தற்ற-ன றகணிற்றுயர நணுகாத் தகைத்தெனின்-

கண்ணாடியினிடத்திலே தோன்றின நிழலினது கண்ணினிலே கூர்ச்சிகொண்டு கடாவினவிடத்துக் கண்ணாடி யுடைந்தொழிந்து கண்ணுக்கு லயம் வாராத்தன்மைபோலச் சுகதுக்கங்களா லுண்டாகிய வநுபோகங்களு முடலுக்கொழிந்து பிரமத்துக்கில்லையென்னில்?

நின்மொழிவி ரோதமுங் காட் சிவிரோதத் - தன்மையு முறுமவை தவறிலவா கா-

உன்னுடைய சாத்திரஞ் சுகதுக்கங்களை யநுபவிக்கிறதறிவென்றுசொல்லும் நீ யிப்பொழு துடலுக்கொழிந்து வறிவுக் கநுபோகமில்லை யென்கையாற் சாத்திரவிரோதமும் பிரத்தியக்ஷமாக வறிவு சுகதுக்கங்களை யநுபவிக்கையிலே யநுபோகமி

ல்லையென்கையாற் பிரத்தியக்ஷ விரோதமு மிவையிரண்டுந்தப்பாம லுண்டாகாநிற்கும்.

யாருடைப்ப திவகை யாவரு ம்பயலகலை-சொ ல்லுதலெளி தரி தத் தொழில்பு ரிவெனப்-புல்லி யபழமொழி பு துக்கினையன் றே-

நாம்வஸ்து நிர்ணயமாக நாட்டட்டது "சொல்லுதல்யார்க்குமெளிய வரியவாஞ் சொல்லியவண்ணஞ்செயல்." என்றுசொல்லப்பட்ட திருவள்ளுவப்பயனிற் குறளினி னிப்பொழுது புதுக்கிறு யாகவேண்டும். (யாமெனறநாசேக்ஷபச்சொல்.) இதனதியும்.

அகண்டித மெனநீபகர்ந் தமைதனக்குப்- பந்தமிதுவெனத் தந்தமை க ருதில்-

பரப்பிரம மொன்றுலுங் கண்டிக்கப்படாத வகண்டிதமாயிருப்பதென்று நீமுன்னே சொன்னதற் கிப்பொழுது மாயாவுபாதிகளாலே யிப்படிப் பந்திக்கப்பட்டிருக்குமென்று சொன்னதை விசாரித்துப்பார்க்கில்,

வானி னடக் குங் காலினைப் பிடித்துப் - பரு விலங்கிட்ட வொருவனியன் றே-

ஆகாயத்தின்கண்ணே வியாபித்துநடக்கிற காற்றினைப்பிடித் தாங்கிங் கசையாத வண்ணம் பெரியவிலங்கையிட்டு வைத்தவனியாவனென்று சொல்லப்படும்.

இதுபிரமாதானைமறுத்தது.

இப்ந்தவனுடைய பெந்தம்.

மேலவனுடைய முத்தியைமறுக்கிறார்

பந்தம தகல முத்து விவேக

பிரம மாயாவுபாதிகளாலே பந்திக்கப் பட்டிருக்குமென்று சொன்ன வந்தப்பந்

ம் - வான் வளியெனத்தனிற்றுனேதோன்றின் -

தும் பிரமத்துக் கெப்பொழுது நீங்கத் தக்கதா
க வந்துதோனறின விவேகஞான மாகா
சத்தினிடத்திலே யொருவாயுதோன்றி யந்
த வாயு வாகாசத்தைமறைத்து நின்றமேக
ங்களை யொதுக்கி யதனை நின்மலமாக்கினது
னைப்போல விந்தவிவேகஞானமும் பிரம
த்தினிடத்திலேநின்றுந் தானேதோன்றின
தாயின்

முன்புளதாயின் மயங்காது

இந்தவிவேகஞானம் பிரமத்துக்கு முத
லேயுள்ளதாயின் அது நிற்கையிலே பிரமத்
துக்கு நடுவே மயக்கம்வாராது.

இலதெனில் -

இந்த விவேகம் பிரமத்துக்கு முதலேயு
ள்ளதல்ல நடுவே யோரவசரத்திலேவந்
துண்டானதென்று நீ சொல்லில்?

பின்புளதாகாது

முன்பில்லாதது பின்போரவசரத்திலே
யுண்டாகாது.

இலதுளதெனின்

முன்பில்லாதது பின்புண்டாமென்னில்?

வெளி - மலராதரும்

இல்லாததுண்டாமென்கிற தாகாசத்தி
லே யொரு பூவுண்டென்கிறதுக் கொக்கு
ம். அப்படியன்றுகாணும்,

அனல் மரக்கண்ணின்றுகித்து - தருவது தகுமெனில்

அக்கினியினுடைய பிரகாச மரத்தினிட
த்திலே முன்பு காணப்படாதிருந்து பின்
பொருகாலத்திலே காணப்பட்டாற்போல
முன்பில்லாத விவேகஞானம் பின்புண்டா
ங் காணுமென்று நீசொல்லில்?

தானே தோன்று -

விறகினிடத்து முன்பில்லாதவக்கினி பின்பு
ண்டா மிடத்து ஒரு அரணியைவைத்துக்க

யை யுண்டானதொழிந்து தானாக வுண்டாகாது. ஆகையா லுன்பிரமத்துக்கும் பின்புண்டாகிய விவேகஞானமும் வேறேயொருத்தனுண்டாக்க வுண்டானதென்று கொள். இதனறியும்.

விறகினுதித்த கனறகுமாயின வித்தையினுதித்த வித்தை

(அந்வயம்.) அவித்தையினுதித்த வித்தை விறகினுதித்த கன றகுமாயின்–அறியாமையாகிய பெத்தநிலையிலேதோன்றின விவேகம் விறகினிடத்திலே தோன்றின வக்கினியை யொக்குமாயின்

அம்மரத் - துதித்த விவேகம் வித்தையென்றுரைத்த - வெந்தழலனைய

(அந்வயம்.) வித்தையென் றுரைத்த விவேகம் அம்மரத் துதித்தவெந் தழலனைய- வித்தையென்று சொல்லப்பட்ட விவேகஞான மந்த விறகிலே தோன்றின வெவ்விய தழலையொக்கும்.

விவேக முதித்த - திந்தனமனையது

விவேகஞானந்தோன்றினது தானந்த விறகினையொக்கும். ஆகையாலே

இறையிலன்றற்றே-

விவேகஞானந் தோன்றினது பிரமத்திலேயென்று சொல்லப்படாது, பாசாவவித்தையிலே யாகவேண்டும். இது திருஷ்டாந்தவிரோதமாகையால் நீசொன்ன தத்துமாகாது. இதுவன்றியும்

இற்படப் பிரிப்பின் மெய்ப்படு மெவற்றையு- மிதுவன்றிதுவ

வீடான்றை யோரோர்வைக்கோலாகவு மோரோர் கழியாகவு நாளிலே பிடுங்கிப் போட்டபின்பு வீடென்கிறசொல் லில்லையாய்ப்போன தன்மைபோலவும் சீலையையோ

ன்றெனக் கழி காலை - யதுவே தானே யாயின தெனறனை -

ரோரிழையாகவாங்கிப்போட்டாற் சிலையெ ன்கிறதன்மைபோனது போலவும் சரீரமாக க்கூடிக்கொண்டிருக்கிற வெல்லாவுபாதிக ளையு மிதுநாமல்ல விதுநாமல்லவென்று நி யதிபண்ணி நீங்கிளவிட்ட தந்தப்பிரமந்தா னே யிந்தஜீவனாயிருந்ததென்று நீசொன் றாய்.

வித்தை முன் னரவித்தையும வித்தைமுன் - வித்தையு மில்லா.

அறிவாகிய பிரமத்தின்முன்னே யறியா மையாகிய தேகாதிபிரபஞ்சந் தோன்றியி ல்லாது. அறியாமையாகியதேகாதிபிரபஞ்ச த்தின்முன்னே யறிவாகியபிரமந் தோன்றி யில்லாது. அதெனைபோலவென்னில்?

வியனொளி யி ருளென -

மிக்க பிரகாசத்தினையுடைய வாதித்த ன்முன்னே யந்தகாரமில்லாதாற்போலவு மந்தகாரத்தின்முன்னே யாதித்தனில்லா தாற்போலவு மெனக்கொள்.

இருளலவொ ளிக்கு மொளியல விருட்கு - மொருகாலத்து மொருபயனில து

இருளல்லாதசுத்தவொளிக்கு மொளிய ல்லாதசுத்தவிருட்கு மொருகாலத்தினு மி வையிற்றுக்கொருபயனுமுண்டாகாது.

ஆல் -

அப்படியிருக்கையால்

இரண்டையு நுகருமொரண்ட ரு விழியென -

இருளோடுகூடியிருளையநுபவித்து மொ ளியோடுகூடி யொளியை யநுபவித்து மி வையிரண்டுமுதலுமாகாமற் றனியேயொ ருமுதலாய்நின்ற பெரிய கண்ணினதுதன்

மையைப் போலுமென்று சொல்லலாமா கில்

வித்தையுமவித்தையு முப்பத்தொன்றுளதே—

அறிவாயுள்ள பதியோடுகூடி யிருப்பதி யென்றறிந்து மறியாமையாயுள்ள பாசத்தோடுகூடி யிருப்பாசமென்றறிந்து மிரண்டுமல்லாமற் பசுவென்றொருமுதல் தலையையுண்டென்றறிவாயாக.

தானேதானு மாளுற் பயனென்—

இந்தப்பிரமந்தானே பிரமமானதாலும் இந்தப்பிரமத்துக்குண்டாகிய பிரயோசனமென்னதான்.

தன்னிற் றன்னைத் தானே காணில்—

இந்தப்பிரமந் தன்னிடத்திலே தன்னுடையவியல்பைத் தானே காணப்படுமாயின்

கண்ணிற் கண்ணைக் காணவும்படுமே—

கண்ணானது தன்னிடத்திலே தன்னுடையசொரூபத்தைக் காணுமென்று சொல்லவும்படுமே. அதுண்டாகாதாகையால் நீ பிரமந் தன்னிலே தன்னைக் காணுமென்று சொன்னது தத்தமன்று. இதனறியும்

தன்னை மறந்தனைத் தானே நுகரு—மென்னின்

பிரமந் தன்னிடத்திலேயுண்டாகிய சுகத்தைத் தானே யநுபவியாநிற்குமென்று நீ சொல்லின்?

முன்னிலைமெய்தாதிருந்ததென—கட்டிபோலெனக் கதறினை

பிரமமிந்தப்பேதமுண்டாவதற்கு முன்னே தன்னிடத்திலுண்டாகிய சுகத்தைத் தானநுபவியாம லிருப்பானேனென்று நான் கேட்டதற்குக் கருப்புக் கட்டியானது தன்னிடத்திலுண்டாகிய விரதத்தைத் தானநுபவியாம லிருந்தாற்போலென்று நீ கதறினாய்.

இன்பம் வந்-தொட்டிடும் வித்தை யுடையையாயிடினே-

அந்தப்பிரமத்தி லுண்டாகியசுக மூனக்கிந்தமுத்தியிலேயநுபோகமானது நீதனியேபசுவென்றொருமுதலா யதிலேபாசபந்தியாயிருந் திப்பொழு தப்பாசநீங்கிப் பதியோடுகூடுகையிலுலே யெனக்கொள்.

தத் துவ மசியென வைத்த முப்பதத்திற்கு-

தத்-அது,—தொம்-நீ,— அசி-ஆகின்றாய் என்கிற மஹாவாக்யத்துக்கு உண்மையர்த்தம் விசாரிக்குமிடத்து

ஒன்றே பொருளொன் றன்றே பகர்வது-

நீயொன்றேயாயிருக்குமென்றது பொருளல்லவே. இதற்கத்தமொன்றல்லவென்றேயந்தமஹாவாக்கியஞ் சொல்லுவது. பின்னையெங்ஙனேயென்னில்?

நீ புலியாயினையென் றங்குணரில்-

ஒருவ னொருவனுடையவீரத்தைகண்டபோது நீ புலியாயினை யென்றவன்சொன்னசொல்லை விசாரித்துப்பார்க்கில்

ஆயினை யென்றது தாருவமைத்தான்-

ஆயினையென்ற தாருவமைத்தென் றிலக்கணவிதியிற் சூத்திரங்கள் சொல்லுகையினாலவன் புலியாகின்றானல்லன். இஃதன்றியும்

நோயாயினமே லாயாய்

ஒருவனொருவனைப்பார்த்து நீயிப்படிப் பொல்லாதிருப்பானேனென்ன, நானோயாய்க்கிடந்தேனென் றவன்சொன்னசொல்லுக்கத்தம் நீதானேயாராய்ந்துபாராய். அவன்கொண்ட வெப்பக்குளி ரவனாகிறதில்லையே!

என்றல்-

அப்படியிருக்கையிலே

அகமே பிரம

அகந்தானே பிரமமாகாநின்றதென்று

மாயினதென்று ல்-

மஹாவாக்கியஞ் சொல்லுகையினால்

சகமேயறிய த்தான் வேறன்றே-

ஒருத்தனறி இந்தப்பிரபஞ்சமித்தனையு மறியத்தக்கதாக விவனந்தப்பிரமத்துக்கு வேறென்கிறது தப்பாதென் றறிவாயாக. அன்றியும்

உண்மையிற் சலமில்லை உடற் ச ஞ்சலம்

நம்முடைய உண்மையைப்பார்க்குமிடத் திலே நமக்குச்சலனமில்லை, இந்த வுடலி னிடத்துண்டாகிய சலநமுடலுக்காயிருக் கும். அதேதன்போலவென்னில்?

சலமுறும்- வெண்மதி போல

ஜலத்தோடேகூடியிருக்கிற பிரதிபிம்ப மதியந்தஜலமசைந்தபொழுது தானுமசை ந்தாற்போல யிருந்ததொழிந் ததனுடைய வுண்மையைப்பார்க்குமிடத் தந்தமதிக்கசை தலில்லையானாற்போல

விளங்கிடுமெ ன்றனை-

இங்ஙன மந்த முத்திக்கிரியையில் விளங் காநின்றேருமென்று நீ சொன்னாய்.

அசலனாகிச் சஞ்சல சலத்து ச்-சலநமேவின மெனமதிகா ண-வேண்டும்

நாம் சலனமில்லாம லிருப்பாளொருத்த ன் ஆற்றிலேயோடுகிற ஜலத்தினுடைய ச ஞ்சலங்கொண்டு நாமுஞ் சஞ்சலித்தாற் போலேயிருந்ததொழிந்து நமக்கந்தச் சஞ் சலமில்லையென்றுகண்டாற்போல வாகாச த்திலிருக்கிற வந்த மதியானது காணவேண் டும்; அப்பொழுது நீ சொன்ன திருஷ்டா ந்தமு மொக்கும்.

அதன்றிக் கா ண்பவர் பிறரே ல்-

அதொழிந் திந்தப்பிரதிபிம்பமதிக் கசை வில்லை தண்ணீருக்கேயசைதலென் றந்தம தியையொழிந்து வேறேயொருத்தன் கண்

டுசொல்லுஞ் சொல்லுண்மைபோல, அந்தப்பிரமத்துக்குச் சலநமில்லை யுடலுக்கேசலநமென்று அந்தப்பிரமத்தையொழிய வேறேபொருத்தன்கண்டு சொல்லுகையினாலே

ஈண் டினதே கமென் செய்த தியம்புக-

இவ்விடத்துப் பிரமமொன்றுமேயுள்ளதென்று நீ சொன்னசொல் லேதாய்முடிந்தது சொல்லாய்.

இஃது தவனுடைய ஜீவன்முத்தியை மறுத்தது.

மேற் பரமுத்தியை மறுக்கிறார்.

உடல்விடக்கடத்துட் படு வெளிபோ லெ னில்-

பரமுத்தியான திந்தச்சரீரநீங்கினவிடத் திந்தச்சரீரத்திலே நின்றவறிவு தன்னிலொன்றுபட்டுநின்றது, கடத்துக்குள்ளேயகப்பட்டுநின்ற வாகாசமந்தக்கடமுடைந்தவவதரத் தந்தக்கடத்துக்குள்ளே நின்றவாகாசமும் பராகாசமுந் தன்னிலொன்றுபட்டு நின்றாற்போலுமென்று நீ சொல்லின்?

விட் டென் பெற வுடர்பட் டென்பட

ஆகாசங் குடாகாசமாய் நின்றகாலத் தொருதுக்கத்தை யனுபவித்ததுமில்லை, குடமுடைந்தகாலத் தொருசுகத்தையநுபவித்ததுமில்லை, அதுபோலப் பிரம முடலுக்குள்ளே யகப்பட்டுநின்றகாலத் தொருசுகத்தை யநுபவித்தது மில்லையாகவேண்டும். இந்தவுடல் விட்டகாலத்து மொருசுகத்தை யநுபவித்தது மில்லையாகவேண்டும். இதன்றியும் இந்தவுடலிலே நிற்கிறவறிவு

பிரத்தியக்ஷமாக விப்பொழுது துக்கத்தை யநுபவித்து விட்டகாலத்துச் சுகத்தையநுபவித்துநிற்கையால் நீ குடாகாசவாகாசம்போதுமென்ற தத்தமன்று. திருஷ்டாந்தவிரோதம்.

மற்-றிகலற வொருவனிவ்வகைதெளியி-லெகிலமுமுத்தியடைந்திட வேண்டும்-

இஃதொழிந்து நீ சொன்ன சாத்திரப்பிரமாணத்திலே மாறுபாடற வொருத்தஞன்பிரமமென்று தெளிந்தகாலத் தெல்லாவறிவுமொன்றென்று சொல்லுகையாற் சர்வான்மாக்களு முத்தியடையவேண்டும்.

அறிந்தோர் முத்தியடைந்தோராயின்-

பிரமஞான முண்டானவர்கள் முத்தியடைவர்கள், இல்லாதவர்கள் முத்தியையடையார்களாயின்

பிறிந்தோருயிர் பலபேதத்தன்றே-

அறிந்தவர்களென்று மறியாதவர்களென்றுஞ் சொல்லுகையா லந்தப்பிரமத்தையொழிந்து சொல்லப்பட்ட ஜீவான்மவர்க்கமும் பலபேதமாயிருக்குமென்று கொள்வாயாக.

இது பரமுத்தியைமறுத்தது.

மேலிந்த விவேகத்தன்மை கூடாதவர்கட்குச் சாதந சதுஷ்டயங்களினலே பிரமஞான முண்டாமெனபதனை மறுக்கிறார்.

கன்ம காண்டங் காரணமாக-மன்னும் விவேகமென்னில்

இத்தன்மை கூடாதவர்கள் யாகாதிகளாயுள்ள கன்மகாண்டங்களையநுஷ்டிக்க வதுகாரணமாக வவர்களுக்குப் பின்பு விவேகஞான முண்டாமென்று சொல்லில்?

அவித்தைக்-கேதுகாரண மொன்றுமில்லை

பிரமத்தை மாயாவித்தைகள்வந் தோரா வதாரத்திலே பொருந்தி யத்தைமயக்கிக் கொண்டுநிற்குமென்று நீ சொன்னதற்கு இன்னது காரணமாகப் பிரமத்தைவந்து பொருந்திற்றென் றொன்றைச் சொன்னாயில்லை.

இதற்குங் காரணம் விதித்தல் வேண்டின்றே-

கன்மகாண்டங் காரணமாக விவேகமுண்டாமென்றதுபோலப் பிரமத்துக்கு முன்னே யிப்படி யிருப்பதொரு குற்றமுண்டு. அதுகாரணமாக விந்த வவித்தைகள்வந் திப்பொழுது பொருந்திற்றென் றொன்றை நாட்டவேண்டும். இப்போது

அரணியினுதித்த கனலவைகவர்வென-விரதத் துதித்த விவேக மழித்தல்-

திக்கடைக்கோலை மரத்திலைவைத்துக்கடைந் தந்தத்தொழிலினாலே யுண்டாகிய வக்கினி யந்த விரண்டுகோட்டத்தையுஞ் சுட்டுப்போட்டதென்று சொல்லலாமாக, கன்மங்களைச்செய்வதனாலே யுண்டாகிய விவேக மந்தக்கன்மங்களை யில்லையாக்கிப் போடுமென்கிறது

வருந்தியாயினுந் திருந்திய வேத-நீதியெல்லா நீத்து

சதாசாரங்களையு நன்றாகச் சொல்லப் பட்டிருக்கிற வேதவொழுக்க மெல்லாத் தையும் வருந்தியுங் கைவிட்டு

போதமொன்-றறியோர் தாமு மவ்வழி நடத்தல்-

பிரமஞானமென்கிற தேகதேசமுங் கூடியறியாதவர்களும், ஓர் பிரமஞானமுண்டாயிற் றெங்களுக் காசாரமவேண்டுவதில்லை யென் றநாசாரங்களைச் செய்துகொண்டு திரிகிறது

பொறியோ போதநெறியோ இது பவ-நீங்கிடுநெறிதருபாங்கினைப் பழித்தல்-

இவர்களுடைய தலையிலெழுத்தோ வல்லதறிவீனந்தானோ

இவனைவிட்டொருகாலத்திலு நீங்காமற் றொடர்ந்தித்துக்கொண்டுவருகிற பிராவித்துன்பங்க ணீங்குதைக் கேதுவாயுள்ள விந்தக்கனமதத்தின் பகுதிகளை யெனக்காகாதென் றிதனைக்கைவிட்டி விடுகிறது

நன்றிகொன்றலன்றே

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை- செய்நன்றிகொன்ற மகற்கு." என்றுசொன்ன செய்நன்றிகொன்ற திதுவாயிருக்கும். விரதத்துக்கிந்த விவேகமதழித்தல் நன்றிகொன்றலன்றே என்று பொருள் கூட்டுக.

அன்றியு- ஞாலநீதியு நான்மறை நீதியும்-

இதன்றியு முலோகாசாரங்களும் வேதஞ்சொல்லப்பட்ட வாசாரங்களு மிவை.

பாலருன்மத்தர் பசாசிரெனவு- முறங்கினோன் கைவெறும்பாக்கெனவுந்-தானே தவிராது

யாதொன்றினையும் விகற்பியாமல் நிர்விகற்பமாய்க்கொண்டு காண்கிற பாலரைப்போலவும், வைதாரையும் வாழ்த்தினாரையுஞ் சுட்டியறியாத மதுபானஞ்செய்தவர்களைப்போலவும், ஆகாரமுதலில்லாத பசாசரைப்போலவும், நித்திரைசெய்கிறவன் கையிலே தனியேபிடித்திருந்த பாக்குப்போலவும், உனக்குப்பிரமஞானமில்லாதபடியாலே யந்தவாசாரங்களுந் தானாகப்போகவறியாது.

ஆறாற் புரியா- தொழிந்திடினி

அவை தானே போகாதென்றால், அவன் றனே யெனக் கந்தவாசாரங்கள் தேவை

ாபத் தழுந்துதலிடமே-

யில்லையென்று விட்டுவிடிற் றேகாந்தத்திலே மீளாநரகத்திலே போய்க்கிடந்து துக்கங்களை யநுபவிப்பானென்கிறது தப்பாது.

உய்த்தோனன்றி முத்தியுரைத்தல் - பித்தோ

நீ யந்த வாசாரத்தினாலே பிரமஞானமுண்டாமென்னுமல் நான் முத்தனென்று சொல்லுகிறவிது பித்து மேலிட்டுக்கொண்டோ?

பிரமஞ் செத்தோ பெறுவது-

இவனிருக்கையிலே பிரமஞானமுண்டாகவேண்டுமொழிந்து, இவன் செத்துப்போய்ப் பிரஞானத்தைப் பெறப்போகிறதில்லை. அதேதென்னில் ?

உடலையு நீயே சடமெனச் சாற்றினை -

இந்தவுடலை நீதானே ஜடமென்று சொல்லிவைத்தாய்

வையினும் வாழ்த்தினுங் கொய்யினுங் கொளுத்தினும் வணங்கினு முதைப்பினும் பிணங்குதல்செய்யாப்-பிரமத்தன்மை பெறுவதெக் காலம்-

ஒருவனிவனை வைதவிடத்து மொருவனிவனை வாழ்த்தினவிடத்து மொருவனிவனுடைய கைகாலைத்தறித்தவிடத்து மொருவனிவன்மேலே நெருப்பைக்கொளுத்தினவிடத்து மொருவன் தண்டம்பண்ணினவிடத்துங் கால்கொண்டு மிதித்தவிடத்து மிதமகிதப்படாமலிருக்கிற பிரமஞானமிவனிடத் திற்றைவரையாகக் காணப்பட்டதில்லை. யந்தப்பிரமஞான மெந்தக்காலத்திலே யுண்டாகப்போகுது.

இருக்குநாள் சில

புருடாயிற்றுநூறு. இதிலே பாதி நித்திரையிலேபோம். நின்றவைம்பதிலே வாலியமாய்ப் பதினைந்துபோம். விருத்தனாய்

ப்போம் பதினைந்து. நின்ற விருபதிலே நோயாய்ப்போஞ் சிலநாள். இதிலே யிடையிலே யிறந்துபோகிறகாலமு மிகுதி. இதற்கு நடுவே

எண்ணி னூல் கதறித்-தருக்கம் பேசித் தலை பறியுற்று

எண்ணிறந்த சாத்திரங்களையெல்லாங் கற்று அதுகொண்டெல்லார்களோடுந் தருக்கங்கள் பேசி யதனாலே தலைபறியுண்டு

கண்டோரீய்ந்த பிண்ட முண்டலறி-

இவர் நல்ல வத்யான்மியென்று கண்டவர்களிடப்பட்ட வசனங்களையும் புசித்து பிரமஞானஞ் சொல்லுகிறேனென்றவர்களிடங்களிலே சீவனவயிற்றைக் கூப்பிட்டு

பன்னோ யாக்கை தன்னோயுற்றுடல்-விடவருமென்று நடுநடுங்கி-

பலநோய்களுங்கூடி யொன்றாயெடுக்கப்பட்ட சரீரத்துக் கடைத்தவியாதி யிவனை வந்துபொருந்தினபோதி லதனாலே நமக்குச் சாக்காடு வருமென்று பதைபதைபதைத்து

விட்டோர் தெய்வத் தொட்டின்றனறியும்-

உடல்விடுகிறகாலத்து நீ பயப்படாதே நானுண்டென்றுசொல்லி யுன்னையிரக்ஷித்துக்கொள்ளுகைக்கு ஒரு தெய்வ தொந்தனையுமில்லையா யிருக்கிறது. அன்றியும்

யானே யெவருமானேனென்றலின்-

நான்றானே பிரமாவும் விஷ்ணுவும் உருத்திரனும் இந்திரனும் இயமராஜா மற்றுமுள்ளவர்களெல்லாருமா யிருந்தேனென்றுசொல்லுகையால்

அவ்வவர் சீறியவ்வவர் வா

அந்தத்தேவதைகள் நம்மை யிவன்றானென்றுசொன்னானென்றுன்றோடேகோ

ளுட்-செவ்விதி னிரயஞ் சேர்த் தவர்

பித்துக்கொண்டு தங்களுக்குச் செல்லாநிற்கிறகாலங்களெல்லா நன்றாகக்கொண்டழுந்த நரகங்களிலே தள்ளிவிடாநிற்பர்கள்.

அதனால்-மாயாவாதப் பேயா வுனக்குத்-தேவரி லொருவருண்டாக-மேவரு நரகம் விடுத்தலோ வரிதே.

அங்ஙனமிருக்கையால் மாயாவாதமென்கிற பேய்ச்சமயத்தை யுடையவனே! உனக்கெல்லாருஞ்செத்துப்போய்த் தேவவர்க்கத்திலே யொருத்தரிருந்தாராயினு மொருவராலுங்கிட்டுதற் கரிதாயிருக்கிற நரகமுனக்கு நீங்குதலுண்டாகாதென் றறியாயாக. எ-று. (உ)

மாயாவாதி சங்கற்பநிராகரண முற்றிற்று.

# ஐக்யவாதி சங்கற்பம்.



அரிதேர்ந் துணராப் பெரியோ னுரைத்த — பதி பசு பாச விதிமுறைகிளக்கில்—

விஷ்ணுவானவன் பூமியைக்கிண் டாராய்க்துபார்த்தவிடத் திப்படியிருக்கு மிவனுடைய சொரூபமென் றறியப்படாத பெரியவனென் றுசொல்லப்பட்டிருக்கிற சிவனாலே யருளிச் செய்யப்பட்ட பதியினுண்மையினையும் பசுவி னுண்மையினையும் பாசத்தினுண்மையினையு முள்ளபடி சொல்லுமிடத்து

ஈசனேக னெண்ணிலி பசுக்கள் — பாச மிருவகைப்பரிசினது

பதியென்று சொல்லப்பட்ட பரமேஸ்வர னொருமுதலா யிருப்பதொன்று. பசுவென்று சொல்லப்பட்ட வான்மாக்கள் பலமுதலாயி ருப்பதொன்று. பாசமென்றுசொல்லப்பட்டது மாயையென்றுங் கன்மமென்று மிருவகைப்பட்டிருப்பதொன்று.

உலகத்—தாயவனுயிர்க்கு மாயையி னருளா — லிருவினைத்தொகையி னுருவினைத் தருமால்—

பிரபஞ்சத்திற்கு மாதாபிதாவுமாயுள்ளசிவன் றனதுகாருண்ணியத்தினாலே யான்மாவுக்குப் புண்ணியபாவங்களுக்கிடான சரீரங்களை மாயையிலேநின்றுங் கொடாநிற்பன். (ஆல்அசை.)

கருமுகி லடர விரிதருகதிர்போல—றிவா முயிரிற் பிரியாதேயும்—

கறுத்தமேகமானது பிரகாசத்தினையுடைய வாதித்தனிடத்திலேசென்று பொருந்தினவிடத் தந்தவாதித்தனுடைய கிரணங்களெல்லா நீங்கினதன்மைபோல, முதலிலே சுத்தமாயறிவா யிருக்கிற வான்மாவினிடத்திலே யந்தமாயா

தேக மொருக்காலு நீங்காமற்பொருந்திவாரா நிற்கும்.

வீட்டு மிருபய னூட்டிடு நியதி-

முன்னேசெய்தபுண்ணியபாவங்களை யிந்தச்சரீரத்திலே கத்தாவானவ னிவனுக்கெந்நாளும் புசிப்பியாநிற்பன்.

ஒருபொழு திருபய னுகர்வுற மருவுத-லின்மை யாதன் முன்னிய காலை-

புண்ணியபாவங்க ளிரண்டுந் துலையொத்தொரு ஜநநத்திலே யெல்லாக்கன்மங்களும் புசித்துத் தொலையத்தக்கதாக வேறெதனினு மொருசிவபுண்யம்வந் தெதிர்ப்பட்டவதரத்து

சத்தி நிபாத முற்று

இவனுக்குச் சத்தி நிபாதமென்பதொன் றுண்டா யந்தவவதரத்திலே

இறையருளா- லுருவுகொ டுலகு தெரிவுற மருவி-

கத்தாவானவன் றனதாகாருண்ணியமே தனக்குத் திருமேனியாகக்கொண்டருளி யுலகத்திலுண்டானவர்க ளெல்லாருங் காணத்தக்கதாக வாசாரியருாக வெழுந்தருளிவந்து

மாசுறுந் தாசு தேசுற விளக்குந் - தன்மையி னுணர்ந்தும்

அழுக்கினாலே மிகுத்திருக்கிற புடைவையை நன்றாக வெள்ளாவிவைத் தந்தவழுக்கைநீக்கித் தூய்தாக வெள்ளையாக்கின தன்மைபோல, இவனிடத்திலுண்டாகிய பாசங்களைத் தீக்ஷைகளைச்செய்து கிரமத்திலே போகத்தக்கதாக வுபதேசங்களையருளவே

புன்மைக ணீங்கி - நீருநீருஞ் சேருந் தகைமை யி-னறிவினோ டு

இவனிடத்துண்டாகிய குறைகளெல்லா நீங்கச் சுத்தனாகித் தண்ணீருந் தண்ணீருந் தண்ணீரிலேகூடி யைக்கியமா யொன்றுபட்டு நின்ற தன்மைபோல, இவனுடைய வறிவோடே கூ

| | |
|---|---|
| றிவு செறிவுறப் பொருந்தி - யொ ன்றும் | ன்னுடையவறிவு கூடி யைக்கியம்பிறந் தோன்றுபட்டுநிற்கும். |
| என்பதை யுல கோர்-நன்று மு த்தியென நவின் றனரே. | என்றிங்ஙனஞ் சொல்லப்பட்டதை யுயர்ந் தோராயுள்ளவர்கள் முத்திகளெல்லாத்திலும் வைத்துக்கொண்டிதுவே நல்லமுத்தியென்று சொல்லாநிற்பர்கள். (௯) |

ஐக்யவாதி சங்கற்ப முற்றிற்று.

---

## ஐக்யவாதி சங்கற்ப நிராகரணம்.



| | |
|---|---|
| முத்தியென்ப தெவனோ | இதை நீ முத்தியென்று சொன்னதென்னை காண்? அது பின்சொல்லுகிறோம். |
| சுத்த-வறிவெ னிற் பாசஞ் செறியா | ஆன்மா வநாதியிலே சுத்தமாய் அஃதறிவு மாயிருக்குமென்றுசொல்லின் நடுவே யோரவதாரத்திலே சுத்தமாயிருக்கிற வான்மாவைப் பாசம்வந்து பொருந்துகைக்கு வழக்கில்லை. |
| மாயை-யுருவி ரு வினையால் வ ரும் | இந்தமாயாசரீரமான திவனைவந்து பொருந்துமிடத் திவன்செய்த புண்ணியபாவங்களுக்கிடாக வந்துபொருந்துவதொழிந்து தானுகவந்து கூடமாட்டாது. |
| இருவினையு-மு ருவா லன்றி மரு வாது | அந்தப்புண்ணியபாவங்கடா னுண்டாமிடத் தொருமாயாசரீரமுண்டா யதிலுண்டாகிய திரிவிதகரணங்களினாலே யிவன்செய்ய வுண்டா வதொழிந்து தானேயுண்டாகா தாகையால், |

இவற்றின் - முந்திய தேதோ

இந்த மாயாமலங் கன்மமல மிரண்டினும் வைத்துக்கொண் டிவனை முந்திவந்து கூடின பாச மெதுதான்? இதனறியும்,

வந் தணைவதற்கோ - ரேதுவேண்டும்

இந்தப் பாசங்கள் நடுவே யோரவதரத்திலே யிவனைவந்து பொருந்துமென்கிறதற் கநாதியிலே யிவனுக்கு மலமென்ப தொன் றுண்டாயதுகாரணமாக வந்துகூடிற்றென்று சொல்லவேண்டும்.

தானியல் பென்னின் -

அப்படிமலமென்ப தொன்றில்லை. இந்தப் பாசங்கடா னடுவேவந் திவனைப்பொருந்தினது வெள்ளைப் புடைவைக் கழுக்கேறினாற்போலே, இயல்பாகவந்து பொருந்து மென்று நீ சொல்லில்?

வீ டுற்றவரினுங் கூடக்கூடும்-

மாயாகன்மங்களினீங்கி மோக்ஷத்தைப் பெற்றிருக்கிறவர்களிடத்திலு மாயாகன்மங்க ளியல்பாகவந்து பொருந்தப்படும்.

ஈங் கிவை நிற்க

இவ்விடத்து நான்சொன்னதற் கோருத்தர முனக்குச் சொல்லப்பட்டதில்லதாகையா லிவைநிற்க

நீங்காக் கருவிகள் - கொண் டறி வறியக் கண்டது மன்றி-

அநாதியிலே யுன்னைவிட்டு நீங்காமனிற்கிற மலசம்பந்தத்தை யிந்த மாயாகருவிகள் வந்து நீக்க வந்தக்கருவிகளைக்கொண் டுன்னுடைய வறிவு சத்தாதிவிடயங்களை யறிந்துவருகிறது பிரத்தியக்ஷமாகக் கண் டிருக்கையிலேயு மல மென்பதொன்றில்லையென்றாய். இதன்றியும்,

மருவிய வுருவுதுயில். பெறுங்

அநாதியே யிவனுக்கு மலமென்ப தொன்றில்ல நடுவே யியல்பாகவந்து பொருந்திற்றெ

காலை- ன்று நீசொன்ன விந்தவுடம்பில் நித்திரை செய்கிறவவதரத்து?

சிறுபொறித் தறுகட் கறையணற்சுடிகைத் - துத்திக் கடுவுட்டுளை யெயிற் றரகக்- கொத் தயல் கிடப்பினும்

உடம்பிலே சிறிதாயிருக்கிற பொறிதனையுமுடையதாய்த் தறுகண்ணினையுமுடையதாய்த் தலையிலே துத்தியினையுமுடையதா யுள்ளேதுளையாயிருக்கிற பல்லுகளிலே நஞ்சினையுமுடையதாயிருக்கிற பாம்பினதுகூட்ட மொருபக்கத்திலேவந்து கிடந்ததாமாயினும்

குவைதரு நவமணி - யொருபாற் றுதையினும்

கூட்டங் கூட்டமாயிருக்கிற நவரத்தினங்களொருபக்கத்திலே மிகவுங் கிடந்ததாமாயினும்

பெரு கார்வத் திரோ - டச்சமுமணுகாக் கொச்சமை யென்னே-

இந்த விரத்னங்க ளிருக்கிறதைக்கண்டு மிகவும் பிரியம்வாராமலும் இந்தப்பாம்புகள்கிடக்கிறதைக்கண்டு மிகவும் பயம்வாராமலு மிருந்த வறியாமை யென்னதான்?

கருவி யாவும் பிரிவுறு நிலையேல்-

எல்லாக் கருவிகளு நீங்குகையினாலே யவ்விடத்து விருப்புவெறுப்புக் காணப்பட்டதில்லையாலோ

பொறி புலனாதி குறைவற நிறைந்து- காட்சியதனிக்கு மூட்சியின்

பொறியும் புலனுமாதியாயுள்ள கருவிகளெல்லா மொன்றிற்குறைவற நிறைந்துநின் றிவனுக்கறிவைக் கொடுக்க விவனுடையவறிவு சத்தாதிவிடயங்களிலே மூண்டு ஜீவியாநிற்கிற வவதரத்திலே

முன்னர்க்- கொடுத்தோராழி விடுத்தவர் நாடி-

அரைநாழிகைக்கு முன்னாக வொருத்தன் கையிலே யொருமோதிரத்தைக்கொடுத் திந்த மோதிரத்தை விற்றுக்கொண்டு வாருமென்று

க்-கொள்வோர்க் காணு துள்கி மீண்டுமித்-தந்தவர்க் கண்டாங் கந்தமி லதனைத்-தருக வென்னும் பெருமதி பிறங் கும்-

சொல்லிப் போகவிட அந்தமோதிரத்தைக்கொள்வோ ரொருத்தரையுங்காணும லிந்தமோதிரத்தை நம்முடையகையிலே வைத்துக்கொண்டிருக்கக்கடவோமல்லவென்று விசாரித்துன் னிடத்திலே மீண்டவன் றந்த மோதிரத்தை வாங்கிவைத்துக்கொண்டு பின்னேயுமரைநாழிகைக்குள்ளே யந்தமோதிரத்தைத் தந்தவரைக்கண்டு நான்முன்னே யும்முடையகையிலே விற்கத்தந்த விலைமதிக்கவொண்ணுத மோதிரத்தைத் தருவீராக வென்றுசொன்ன புத்திப் பெருமை மிகவு முண்டான தென்னதான். (பெருமதியென்ற தாக்ஷேபச்சொல்.)

அதறி விலாமை யென்றனை

அப்படியவனுக்கு மயக்கம்வந்த தறியாமை கொண்டென்றுசொல்லில்?

அது மலமாக்-குறிகொளா ரறைகுவரன்றே-

அப்படி யறியாமையென்று நீ சொன்னது தன்னைக்காணும், மலமாகக்கொண்டு திரிபதார்த்தநிண்ணயம்வந்த பெரியோர்கள் சொல்லுவார்கள். (அன்றென்ற தாமெனக் கொள்க.)

ஈதைக்கியவாதியுடைய பெத்தநிலைமையை மறுத்தது.

மேல் முத்திநிலைமையை மறுக்கிறுர்.

அறிவிற் கறிவு செறியவேண் டின்றே-

ஆன்மா வறிவேயாயிருக்கில் வேறோ ரறிவோடேசென்று கூடவேண்டுவதில்லை. இதன்றியும்,

உண்மையி லிருமையு மொளியே யெனில்

முத்தியில் நீருநீருங்கூடினாற்போலப் பதியும்பசுவு மிரண்டுங்கூடிப் பிரகாசமாயிருக்குமென்று நீ சொல்லில்?

ஒரு - தன்மையாக முன் சாற்றினரிலரே-

அவன்சர்வஞ்ஞன் இவன்கிஞ்சிஞ்ஞன் அவன்பரிபூரணன் இவனேகதேசி அவனின்மலன் இவன்மலசகிதன் அவன்பதி இவன்பசு இப்படியிருக்கையால் சிவனையு மான்மாவையு மொருதன்மையாகக்கொண் டிதற்குமுன் பொருவருஞ் சொல்லுவார்க ளிலர்.

முன்பு நன்றுடனொன்றிய காலை-யின்ப மெய்துதற் கிலதுயிராதலின்-

அநாதியிற் சுத்தமாயிருக்கிற வான்மாவைப் பின்புகூடினவசுத்தங் கணீங்க முத்தியிற் சிவனோடேகூடி யின்பத்தையநுபவிக்குமென்றாய். இந்தமாயாகன்மங்கள் கூடுவதற்குமுன்னே யான்மா சிவனோடேகூடிநிற்கையிலே யின்பத்தை யநுபவிக்கக் கண்டோமில்லையே! ஆகையால்,

நீ யலைபொருந்த மாயாவாதி-யாயினை யமையுமருணிலை கேண்மதி.

நீயும் பிரமந்தானே குடாகாய மாகாயம்போல நிறைந்த வுடனீங்கினவவதரத் திரண்டுபிரமமு மொன்றாய்நிற்குமென் றுன்னோடேயடித்துக்கொள்ளப்பட்ட மாயாவாதிதானாய் விட்டாய், ஆகையால் நீசொன்னதெல்லா மமையும். மேற்றிருவருணிலைமையை நான்சொல்லுகிறேன் கேட்பாயாக. எ - று. மதியென்ற தசைச்சொல். (௪)

ஐக்யவாதி சங்கற்பநிராகரண முற்றிற்று.

## பாடாணவாதி சங்கற்பம்.



**மூலமலத்தாற் சாலு மாயை—** அநாதியே யான்மாக்களுக் காணவமலமென்ப தொன்றுண்டு. அந்த மலத்தைப்போக்குவதுநிமித்தமாக மாயை யிவனைவந்து பொருந்தும்.

**கருமத் தளவிற் றரு முரு விறைவன்—** ஆன்மா முன்னேசெய்த கன்மங்களுக் கீடான சரீரங்களைக் கத்தாவானவன் கொடுப்பன்.

**செறிந் திருபயனு நுகர்ந்திடு முயிர்கள்—** அந்தச்சரீரங்களைப் பொருந்தித் தங்களுக்குண்டான புண்ணியபாவங்களிரண்டையு முயிர்கள் புசித்துவாராநிற்கும்.

**இருளுறுமலத்திற் பருவரற்படுதலின்—** இப்படியநுபவித்துவருமிடத் தாணவமலத்தினாலே மறைப்புண்கையினாலே

**இடை யிருநோக்குந் தடை பட்டோரிற்— அயருறும்** முன்புகண்டுவந்தகண்ணடுவே காசமேலிட்டதினாலே காணுமலிருந்த கண்ணினையுடையவர்களைப்போல வவத்தைப்படும்.

**அதனாற் செயிருறு துன்பம்—** அப்படியவத்தைப்பட்டுவருகையினாற் குற்றத்தையுடைத்தாகிய பிறவித்துக்கம் மேனமேலே யுண்டாகாநிற்கும்.

இது பெத்தம்.

மேன் முத்தி.

**கொத்தை மாந்தருய்த்துறுந் துயில் போல்—** அஞ்ஞானிகளாயிருக்கிற வான்மாக்களெல்லாவவத்தைகளுநீங்கி யதீதத்திலே யழுந்திக்கிடக்குந் தன்மைபோல

காட்சி யென்
னக் காணுத் துய
ர- மாட்சியை மு
த்திடென வகுத்
தனரே.

அவ்விடத்துச் சுட்டிக்காண்கைக் கொரு காட்சியுமில்லையாய்ச் சுகதுக்கங்களினுடைய வருபோகங்களு மில்லையாயிருக்கிற வவத ரத்தை முத்தியென்று சொல்லாநிற்பர்க ள். எ - று. (௫)

பாடாணவாதி சங்கற்ப முற்றிற்று.

## பாடாணவாதி சங்கற்ப நிராகரணம்.



வகுத் துரை
பெருகத் தொகு
த்திடு முத்தி - ந
ன்று நன் றிரு
ளொன்றிய மல
த்தாம்-

சொல்லைப் பலவாகவகுத்துச் சிலதிருஷ்டாந்தங்களையுஞ்சொல்லி முடிவில் யான் மலத்தோடுங் கூடிநிற்கிற கேவலக்கிடையை முத்தியென்று நீசொன்னது நல்லது, இப்படிப்பொருத்தருஞ் சொல்வாரில்லை. (நன்றென்றதா க்ஷேபச்சொல்)

உளத்திற் குறு
பொறி செறி புல
னுகர்தல் - விளக்
கிற் றிகழு மேன்
மைய தன்றே-

சகலத்தி லான்மாவுக்குப் பொருந்தப்பட்ட விந்திரியங்கள்காட்டாக வந்தவாலமா செறிந்திருக்கிற சத்தாதிவிடயங்களைப் புசித்துக்கொண்டுவருகிறது கண்ணுக்கு விளக்கினது காட்டாகக் கண்டுவருகிற தன்மைபோலுமாகையாற் சகலங் குற்றமாகச்சொன்னாய்.

கருவிக ளகல்வுழி மருவிய துயரமு-நன்றெனலாகும்

விளக்குப்போல விவனுக்குக் காட்டாநிற்கிற கருவிக ணீங்கினவிடத் தாணவமலத்திலே யழுந்திக்கிடக்கிற கேவலமு முன்னே சொன்னசகலம்போல நன்றென்று சொல்லலாமாகும். அஃதெதுகொண்டெனில்?

அன்றிய படலத்-திடை நடைப்பட்ட சுடர் விழி மாந்தர்- படல நீங்குதல் கடனுதவினே-

மிக்க படலத்தினாலே நடுவே காசுநி நடைப்பட்ட கண்ணினையுடைய வான்மாக்களுக்குப் பின் போரவதரத்திலே யௌஷதபிரயோகங்களினாலே யந்தக்கண்ணிற் படல நீங்குகிறது முறைமையாயிருக்கையினு லெனக்கொள்க.

இது பெத்தத்தை மறுத்தது.

மேன் முத்தியை மறுக்கிறார்.

காட்சி யென்னக் காணுத்துயர-மாட்சியை முத்தியென வருத்துரைகில்-

சுட்டிக்காண்கைக் கொரு காசுநியு மின்றிச் சுகதுக்கங்களினுடைய வநுபோகமு மின்றி யிருக்கிற விந்தவவதரத்தை முத்தியென்று நீ பலவாக வருத்துச் சொல்லில்?

கரணபாவ மரணங் கரு மர-மேய்ந்தவர் முத்தி சேர்ந்தவ ரன்றே-

கரணங்களினுடைய பிரிவினைப்பொருந்தின வான்மாக்களில் மரணத்தைப்பொருந்தினவர்களுங் கருவைப்பொருந்தினவர்களு மரவர்க்கங்களைப் பொருந்தினவர்களு மிவர்களத்தனைப்பேரு முத்தியைப் பொருந்தினவர்களாகவேண்டும்.

அனைய கதிக்கோர் முனைவரும் வேண்டா-

அப்படிக்கொத்த முத்தியைப் பெறுகைக்கோராசிரியனும் வேண்டுவதில்லை.

கஅ பாடாணவாதி சங்கற்பநிராகரணம்.

தனி தரு துய ரமெனு மிது திடமே- இந்த முத்தியெல்லாக்கருவிகளு நீங்கி யாணவமலத்தோடுங் கூடி யொன்று மறியாமற்கிடக்கிற கேவலத் துயரமென்பது தப்பாதாகையால்

பாடாணத்திற் கூடா முத்தி. கல்லுப்போலே யொன்றுமறியாமற்கிடக்கிறது முத்தியென்று சொல்லப்படாது. (கூ)

பாடாணவாதி சங்கற்பநிராகரண முற்றிற்று.

---

# பேதவாதி சங்கற்பம்.

ஈசன தருளாற் பாசத் தொகுதி- செறிவுறு செம்பிற் களையுறு களிம்பு-குளிகை தாக்க வொளிபெற் றாங்கு-

(அந்வயம்.) செறிவுறு செம்பிற் களையுறு களிம்பு குளிகை தாக்க வொளிபெற்றாங்கு ஈசன தருளாற் பாசத் தொகுதி-குகைக்குள்ளே செறிந்துகொண்டிருக்கிற செம்பினிடத்துண்டாகிய கருமைபொருந்தியிருக்கிற காளிதமான திரதகுளிகை சென்று கூடினவிடத் தங்தக் காளிதங்கெட்டுப் பத்துமாற்றுப் பொன்னான தன்மைபோல, பக்குவப்பட்ட வான்மாக்களுக்குக் கத்தாவினுடைய காருண்ணியத்தினாலே ஆணவ மாயை காமியமென்று சொல்லப்பட்டு வருகிற மலங்களினது கூட்டங் கெட்டு

நித்த சுத்த முத்தராக-வைத்தனா லகின் மறை வல்லோரே.

அழியாததாய் நின்மலமாயிருக்கிற முத்தியினைப்பெற்றுப் பெறுவானும் பேறுமாயிருப்பார்களென்று சொல்லிவைத்தனா லகத்தின்கண்ணே வேதத்தினுண்மையை நன்றாகப் பொருந்தின பெரியோர்கள். எ-று. (எ)

பேதவாதி சங்கற்ப முற்றிற்று.

---

# பேதவாதி சங்கற்ப நிராகரணம்.

மறைகளாகமத் துறைகண் மற்றவையும்-

நாலுவேதங்களு மாகமங்களு முதன்வழிநூலாகிய புராணங்களு மற்றுமுண்டானசாத்திரங்களும்

நாசமில் பதி

பதி பசு பாசங்களுக் கழிவில்லை யென்று

பசு பாச மென்றுரைத்தல்- சொல்லுகிறதை

அயர்த்தோர் குளிகைச் சயத்தாற் றும்பிரக்காளித நாசம் மறந்திப்பொழுதோ ரிரதகுளிகையின் சாமர்த்தியத்தினாலே செம்பினுண்டான காளிதமானது கெட்டுப்போகிறதை

பாசத் தேய்த்தல்-கூடாது பாசத்திற்கு நீ யுவமைசொன்னது சாத்திர விரோதம்.

அன்றியுங் குளிகை சேருண-நீடா தழித்த நிலை நிலையாதலில்- அதுவல்லாமலு மிரதகுளிகையானது செம்மை நிலைநிற்கவொட்டாம லதை யழித்துப் பொன்னாக்கின திருஷ்டாந்தநிலை யுனக்குத் தாஷ்டாந்தநிலையாகையால்,

பேதவாத மோதுதல் பிழையே- பசுமுதல் கெடாது பெறுவானும் பேறுமா யிருக்குமென்று, நீ முன்னேசொன்ன பேதவாதமும் பழுதாம்.

இன்னு மின்னுயிரேயங் குளிகை-தன்னி லந்நியந் தருவது திடமே- இதுவல்லாமல் செம்பானது தன்னைச்சுத்தமாக்கின குளிகையு மாகாமற் றன்னுடைய தன்மையுங் கெட்டு நடுவே பொன்னான தன்மைபோல, இந்தவான்மாவுந் தன்னைச்சுத்திதமாக்கின சிவனுடைய சொரூபமுமாகாமற் றன்னுடைய தன்மையுங்கெட்டு வேறொரு சொரூபமாக வேண்டுமாகையாற் குற்றமுண்டாகிறது தப்பாது.

வீடித்திறனிற் கூடக் கூடா. மோக்ஷம் செம்பு மிரதகுளிகையும்போலு மென்று சொன்னவகையிற் கூடுமென்கிற துண்டாகாது. (அ)

பேதவாதி சங்கற்பநிராகரண முற்றிற்று.

# சிவசமவாதி சங்கற்பம்.



| | |
|---|---|
| பாசமும் பசு வு மீசனு மென் றிம் - மூவகையு ணர்வு தான் முத ன்மையவாய்- | பதி பசு பாச மூன்றிற்கும் பதிஞானமெ ன்றும் பசுஞானமென்றும் பாசஞானமென் றுஞ் சொல்லப்பட்ட ஞானங்க ளநாதியே த னித்தனியே முதன்மையாயிருக்கையால், |
| பாச வைம்புல ன் றேசுற வுணர் த்த- | பாசஞானமாகிய விந்திரியங்கள் விடயங் களை மயக்கமற வறிவிக்க |
| பசுத் தனி ஞா னம் புசித்திடும ன்றே- | பசுவின தொப்பிலாத ஞானமான தந்தவி டயங்களைப் புசிக்கும். |
| இனைய ஞானம் பிரிவுற வெரியா ச் - செந் தழ ற கு நெறி | இந்தவிரண்டுவகை ஞானமு நீங்கினவிட த்துக் கொழுந்துவிட்டெரியாமற் கிடக்கிற சி வந்த தழலை யொக்குமென்று சொல்லலாம். |
| அந்தமி லுயி ரு-மறிவா யொன் று மறியா தன் றே- | அவத்தையி லழிவில்லாமலிருக்கிற வான் மாவு மறிவாயிருக்கையிலே சுட்டியறிவதற் கு ண்டாகாது |
| | இது பெத்தம். |
| | மேல் முத்தி. |
| இவ்வா றுழு கு மேனை யுயிர்க் கு- | இப்படி நாடோறுங் கேவலசகலப்பட்டு வருகிறவான்மாவுக்கு |

| | |
|---|---|
| மூன்றோன் றனது முதிரொளி ஞானம்- | மூன்றுமுதலுக்குள்ளே முந்தின பதியினுடைய மிகுந்தவறிவாயிருக்கிற ஞானமானது |
| அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த-வண்டென வுயிராக் கொண்டிடும் | ஒன்றுமறியாமற் கிடக்கிற பச்சைநிறத்தையுடைய சிறியபுழுவினைவந் தெடுத்துக்கொண்ட வேட்டுவாளியைப்போல வொன்றுமறியாதவான்மாவைவந் தெடுத்துக்கொள்ளும். |
| உயிரது - தன்னை நோக்கித் தானதுவாகி- | புழுவான தந்தவேட்டுவாளியினை நினைந்திருந் தந்தவேட்டுவாளியினுடைய சொரூபமானாற்போல வான்மாவு மந்தச் சிவனைத் தியானம்பண்ணி யந்தச்சிவனுடையசொரூபமாகி |
| ஐவகைத் தொழிலு மெய்வகையுணர்வும் - பிறியா வாறு பெற்று- | வேட்டுவாளியானபுழு வந்த வேட்டுவாளி செய்யுந் தொழிலுஞ்செய் ததனுடைய சொரூபமுநீங்கா ததனுடையகூட்டத்தோடுங் கூடியிருந்த தன்மைபோல, இந்தவான்மாவுஞ் சிவனுடைய பஞ்ச கிருத்தியங்களுஞ் சர்வஞ்ஞியத்தையுந் தன்னைவிட்டு நீங்காதவாறு பெற்று |
| திரியாப் பெரியோர் திரட்சி சேர்ந்திடுமே. | முன்னே யிந்தவறிவுந் தொழிலும்பெற்று நீங்காமலிருக்கிற பெரியோர்கள் கூட்டத்தோடுங் கூடிநிற்கும். எ-று. (கூ) |

சிவசமவாதி சங்கற்ப முற்றிற்று.

# சிவசமவாதி சங்கற்ப நிராகரணம்.



சேர்ந்த மும்மை வாய்ந்த ஞானமு - மொருகாலன்றித் தெரிவுற நிற்கில்-

இங்ஙனங் கூடிவருகிற பதி பசு பாச மூன்றினுக்கும் பொருந்தப்பட்ட மூவகைஞானமுமொக்கக்கூடிநின்றே யொருமுதல்க ளறியப்படவேண்டுமாயின்

ஒண் பொருள் காணும் பண்பினுக கொருகால்-

கண்ணுன தழகிய பதார்த்தங்களிலே யொன்றைக் காணவேண்டின வொழுங்கினுக்கு விசாரித்துப்பார்க்குமிடத்து

பருதியு மதியு மெரிதரு விளக்கும்-

ஆதித்தனுகுதல் சந்திரனுகுதல் எரிகிற விளக்காகுதல்

வேண்ட வின்றே காண்டற்குகாலே-

ஒன்று காட்டக் காணுமதொழிந் திவைமூன்றுங்கூடிநின்று காட்டக் கண்ணென்றைக் காணவேண்டுவ தில்லை; ஆகையால் மூன்றுஞானமுங் கூடியறியுமென்ற தத்தமன்று.

ஒன்றென்றாக நின் றறிவுறுமெனில்-

அப்படியன்றுகாணும், ஒவ்வொன்ருகத் தனித்தனியேநின் றெவ்வொரு விடயங்களை யறியுமென்று நீசொல்லில்?

அந்நிய மறியா மன்னுயிர்

நிலைபெற்ற வான்மாவுக்கு விடயங்கள் வேறுயிருக்கையினுலே, பசுஞானந் தானுக வொருவிடயங்களை யறியமாட்டாது.

பொறி புலன்-றுனே வறியா

பாசஞானம் ஜடமாகையினுலே யொருவிடயங்களையு மறியாது.

தலைவர்க் குலகினை - யானாவறிவா லறிய வேண்டின்றே-

பதிஞான மனாதியே பேரறிவாயிருக்கையினாலே விடயங்களைப் புதிதாகச் சுட்டி யறிய வேண்டுவ தில்லை.

கொழுந் தழற்கு மெனி லழுந்திடு மவத்தையில்-

கருவிகணீங்கி யாணவமலத்தினாலே மறைக்கப்பட்டிருக்கிற வவத்தையி லான்மா வெரியாமற்கிடக்கிற கொழுவிய தழலை யொத்திருக்கு மாகில்,

திரியாத் தலைவர் தெரியாத் தன்மை வந்-தெய்தலாகா

ஒருகாலத்திலு மிவனை விட்டுநீங்காத கத்தாவை யிவ னறியாமலிருக்கிற முறைமை பொருந்துத லிவனுக் குண்டாகாது.

இது பெத்தத்தை மறுத்தது.

மே லான்மா பஞ்சகிருத்தியஞ் செய்யுமென்பதை மறுக்கிறார்.

மெய்யுறு பொருட்கு - முன்னர்க் கிடந் தன்னை வெடுத்த

சிவனோ டொன்றுபட்டிருக்கிற முத்தித்தன்மைக்கு முன்னே யொன்றுமறியாமற்கிடந்த பச்சைப்புழுவைத் தன்னுடையசொரூபமாகவேண்டுமென் றெடுத்த

வேட்டுவ னியல்பு கூட்டல் பெறாதே-

வேட்டுவாளியின தியல் புவமையாகக் கூட்டிச் சொல்லுகிறது பெறாது.

வண் டி றும் பெடா வுட்கொண்டது தனக்கு- மந்திரவாதந் தந்தது மிலதே-

இவ னிந்த வான்மாக்களுக்கு மந்திரவுபதேசங்களைச் செய்து தற்சொரூபமாக்கினாற்போல வேட்டுவாளியானது புழுவையெடுத்ததற்கு மந்திரவுபதேசங்களைச்சொல்லித் தற்சொரூபமாக்கினதாகச் சொல்லப்படாது. ஆகையால் நீ வேட்டுவாளியையும் புழுவையு முத்திக் குவமைசொன்ன தத்துமாகாது.

எடுத்திடு மத ஞெடுத்ததென் றுறையில்—

அப்படியன்று காணும், அந்த வேட்டுவாளி சென்றெடுத்ததுதானே யுபதேசமாக வந்தப் புழு தற்சொரூபமானதென்று நீ சொல்லில்?

கருமயிர்க்குட்டியிருசிறைப் பறவை - யாயினது

கருமைபொருந்திய மயிர்க்குட்டிப்புழு வானது பெரிய சிறகினையுடைய வண்டுப் பறவையாய்ப்போனது,

எடுத்த தாயர் சாற்றிலரே-

அதற்கொரு தாயாய்வந்தெடுத்தது உப தேசமாய்ப் பறவையாய்ப் போனதென் றொருவருஞ் சொல்லுவாரில்லை.

பிறவிப் பேதத் துறையிவை கிடக்க-

ஆகையால் பச்சைப்புழுவு மயிர்க்குட் டியுங் கன்மத்துக்கிடாக வச்சுமாறினது முத்திக்குவமைசொல்லப்படாது; இவை கிடக்கட்டும். இதன்றியும்,

ஏயு மித்திற னுயுங் காலே- யோகத் தகுதி- யாகத் தகுமே-

புழு வேட்டுவாளியானாற்போல வான் மாவுஞ் சிவசொரூபமானதை விசாரிக்கு டத்து யோகததிற்கு சொல்லலாமொழிந் து ஞானத்திற்காகாது.

ஞானமின்மை யென் றோதுவ தெவனெனில்-

இது ஞானமார்க்கமாகாதென்றதெதி னாலேயென்னில்?

உயிருமுணர் வும் பயிலுதலின்றி-

ஆன்மாவுஞ் சிவனுங் கூடியொன்றுபட் டிருக்கிறதே முத்தியென்றிருக்கையிலே வேறுபட்டிருக்குமென்று நீசொன்னதன் றியும்

வேட்டுவனுரு வு மென் புழுவு

வேட்டுவாளியினுடைய சொரூபத்தை மெல்லிய புழுவினுடைய நினைவானது கூடு

| | |
|---|---|
| ணர்வு-கூட்டுத லானுருக் கூடுத லானும்- | தலாலே யுனக்கு முத்தியி லொருசரீரங் கூடுகையாலும் |
| முத்தியி லி றையிற் பற்றுத லின்றி | மோக்ஷத்திற் கர்த்தாவினிடத்துக் கூடியி ருத்தலன்றி வேருயிருக்குமென்று சொன தோஷமன்றியும் |
| தன் னுருவணை ந்த பின் னதனு ணர்வு - மாறுத லானும் | புழுவானது வேட்டுவாளியினுடைய சொ ரூபத்தைப் பெற்றபின்பு முன்னுண்டான வறிவதற் கில்லாதபடியிருநூலும் |
| ஊறுடைத் த னறே- | இத்தை ஞானத்திரு லுண்டாகிய மு த்தியென்று சொல்லுகிறது குற்றமுடைத் தாம். |
| ஈசன தியல் பரு ளெய் தியி ரியற்றல்- | கர்த்தாவுக்குண்டாகிய பஞ்சகிருத்தியங் களைத் திருவருளைப் பெற்ற வான்மாக்க ள் செய்யுமென்று |
| பேசுத றவ றெனப் பெரும றை யறைய- | சொல்லுகிறதுங் குற்றமென்று பெரிய வேதமானது சொல்லுமிடத்து |
| ஐந்தொழி லு யிருந் தந்திட ற குமோ- | கர்த்தாவினாலேசெய்கிற பஞ்சகிருத்திய ங்களை யான்மாவினாலே செய்யப்படுமென் றது தகாது. |
| ஆவதென் மு ன்னு ளாவலர் பெருமான்-பண் டொருமுதலை யு ண்ட மைந்தனை- | அப்படி சொல்லுகிறதென்னதான்? முற் காலத்திலே நம்பியாரூரர் முன்னே யொரு முதலை விழுங்கின பிள்ளையை வரத்தக்க தாக வழைத்தாரில்லையோ வென்றுசொன் னாய். |

வர வழைத்தன னென்றாய்

பிழைப்பில தா-தந்திட வேண்டு மென்றன ரன்றே-

அப்படிச்சொன்னது குற்றமில்லை. அந்த முதலைவாயிலேநின்று பிள்ளை மீளவரவழைத்ததும், திருப்பாட்டு- "உரைப்பாருரையுகந் துள்கவல்லார்தங்களுச்சியா, யரைக்காடரவா வாதியுமந்தமுமாயினாய், புரைக்காடுசோலைப் புக்கொளியூ ரவிநாசியே, கரைக்கான்முதலையைப் பிள்ளைதரச்சொல்லுகாலனையே." இப்படித் தேவரீ ரந்தப் பிள்ளையைத் தந்திடவேண்டுமென்று சொன்னதொழிந்து தாமாக வரவழைத்த தில்லையாதலாற் றிருவருளைப்பெற்ற வான்மா பஞ்சக்கிருத்தியஞ் செய்யுமென்று நீ சொன்ன தத்தமன்று.

இன்னவை கிடக்க முன்னவன் றன்மை-யெய்தினர்-

இதுவெல்லா நீர்சொன்னது கிடக்கட்டும். கத்தாவினுடைய திருவருளைப் பெற்றவர்களே

எல்லாச் செய்தியுஞ் செய்வர்-

கத்தாசெய்கிற சிருஷ்டிமுதலான கிருத்தியங்களெல்லாஞ் செய்வர்கள். அதென்போலவென்னில்?

இரும் பெரியெய்தித் தருஞ் செயறகவெனில்-

இரும்பான தக்கினியைப்பொருந்தி யதனுடைய சொரூபத்தையும்பெற் றதனுடைய தொழிலையுஞ் செய்தாற்போல வென்று நீ சொல்லில்?

பொருளிலை கிடக்க வொரு

திருவருளைபெற்ற நம்பியாரூரராலே பஞ்சகிருத்தியங்களைச் செய்யப்பட்ட தில்

திட்டாந்தப் -
பேறேயாயின் -

லையென்று பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்
கையிலே யதைப்போட் டிரும்பு மகக்கினியு
ம்போலே யென்று திருஷ்டாந்தத்தினா
லே யுனக்குச் சாதிக்கலாமாகில்,

நீருக் கனுவி
ய-புன லொரு
புடை சேர் க
னறகுமாயினும்-

ஆரவாரித்துச் செல்லுகிற தண்ணீரான
தக்கினியைப் பொருந்தி யைக்யமாயிருந்
ததாயினும்

வே றுரு
பொருளை நீருக்
கிலதே-

அக்கினியைச்சேர்ந்த விரும்புபோல, இந்
த வெந்நீர் வைக்கோல் முதலானவற்றைச்
சுட்டுப் பொடியாக்கமாட்டாது. அது
தண்ணீரோடே நிற்கையாற் சுட்டதில்லை
காணும், தனித்துநின்றாற் சுடுமென்று
நீ சொல்லில்?

நெருப் பெனு
மிதனி னுருத் த
னி காட்டுக-

நெருப்பென்று சொல்லுகிற விந்தப்பூத
ரூபந் தனித்துநின்று தன்னுடையதொழி
லைச் செய்யமாட்டாது. எங்கேயாயினுந் த
னித்துக் காரியப்பட்டதுண்டானாற் காட்
டுவாயாக.

அங்கிய மொ
ன்றிற் றங்கி நி
ன்றலது - தன்
றொழி னடத்தா
தென் றறியினி
நீ-

அக்கினியு மொன்றைச் சார்ந்து நின்றல்ல
து தன்னுடைய தொழிலைச் செய்யமாட்டா
தென் றறிவாயாக. ஆகையால்

இரும் பனற்
செய்தி தரும்ப
ரிசு ளதோ-

அக்கி யிரும்பைச் சார்ந்துநின்று தன்னு
டையதொழிலைச் செய்ததொழிந்து இரும்
பக்கினியுடைய தொழிலைச் செய்ததுண்

டோ? ஆகையாற் றிருவருளைப்பெற்ற வான்மாக்கள் பஞ்சகிருத்தியஞ் செய்வார்களென்று நீ சொன்ன தத்தமன்று.

அது வென்றோ ரலகை பொதிந் ருங்காலே-

ஒருவனை யொருபசாசு பிடித்தவிடத்து

அதன் செயலினைத்து மிவன்செயலாமல்-

அந்தப்பசாசினுடைய செயலெல்லா மிவனுடைய செயலாகக் காணப்பட்டதோ வில்லையோ? ஆகையால் அருளைப்பெற்றவர்கள் பஞ்சகிருத்தியஞ் செய்வார்களென்று நீ சொல்லில்?

அவ னிவனாகி யிவ னவன் செய்திக்-கென்

அந்தச்சிவ னிந்த வான்மாவாயிருந்து தன்னுடைய தொழில்களைச் செய்தானு மாகில் இந்த வான்மா வந்தச்சிவனுடைய தொழிலைச் செய்வ தெதனாலே செய்யும்.

அவை யென்னில்

அந்தத்தொழில்களைச் செய்தற் கிந்தவான்மா வுரித்தென்று நீ சொல்லில்?

பின்னுறு செயலு-மதனா செயலன்றி யிவன் செயலாகில்-

ஒருவனைப் பேய்பிடித்துவிட்டு நீங்கின போ திவன்செய்த செயல்களெல்லா மிவனுடையசெயலாமோ, அந்தப்பேயினுடைய செயலாமோ, அதெல்லாம் பேய்ச்செயலாகா திவனுடைய செயலாமாகில்?

இவன் செயல் பேயின றன்செயலாகி- யிருந்த வா வெனத் தெரிந்திட வேண்டும்-

அப்படி யிவனுக்குப் பேய்பிடித்தபோ தூ செய்ததொழில்களை யறியவேண்டும். அறியப்படாததென் னென்று நீ சொல்லில்?

தெரியா தாகில்

அப்படி யிவனுக்குப் பேய் பிடித்தபோது செய்த தொழில்களை அறியப்படாதாகில்,

புரியிற் கடுங்கன - லெரிந்ததென்னு மிது தரும்

புரியினிடத்துக் கடிதாயுள்ள வக்கினி கூடிநின்று தன்னுடையதொழிலைச் செய்தாற்போலச் சிவனு மான்மாவினிடத்திலே நின்று தன்னுடையதொழிலைச் செய்ததொழிந் தான்மா சிவனுடையதொழிலைச் செய்யமாட்டாது.

அன்றியு - மவனிய ளுகி லிவனவன் செய்தி -

இதன்றியும், அந்தச்சிவ னொருகாலத்திலும் ஜநநமரணமில்லாதவன். இந்தவான்மா வொருகணப்பொழுதிலே ஜநநமரணப்படுகிறவன். இப்படிக்கொத்தவான்மா வப்படிக்கொத்த சிவனுடையதொழிலைச் செய்தானுமாயினும்

என்று செய்வா னொன்றிய மதத்தாய் -

எந்தக்காலத்திலே செய்து நிறைவேற்றுவான் உன்மதத்தோடே கூடியிருக்கிறவனே! இதற் குத்தரமுண்டாயிற் சொல்.

இஃது ஆன்மா பஞ்சகிருத்தியஞ் செய்யுமென்பதை மறுத்தது.

மேல் ஆன்மாவிற்கு சர்வஞ்ஞியத்துவமுண்டென்பதை மறுக்கிறார்.

- எல்லா மறிதல் செல்லா துயிர்கள் -

இதுவன்றியும் சர்வஞ்ஞியத்துவ மான்மான்மாவுக் குண்டென்றுசொன்னாய், எல்லாத்தையு மறியும்பகுதி யான்மாக்களுக் குண்டாகாது. எல்லாத்தையு மறிந்திருக்கிற திருவருளிவனிடத்திலே பதிகையினாலே

யிவனு மெல்லாத்தையு மறிவனென்று நீ சொல்லில்?

சிற்றறி வெனு மிச் சொற்றவ றுகும்-

இந்தவான்மா கிஞ்சிஞ்ஞனென்று சொல்லுகிற சொற் பழுதாம்.

என்பதெனல கை தன்பதம டைந்தோர் - கொண்டவாறு கண்டன மென் னில்-

என்று நீர் சொல்லுகிறதென்ன? பேயினு டைய பதவியைப் பெற்றவர்க ளந்தப்பே யிக்குண்டாகிய வருகாலத்தி னிகழ்ச்சிக ளையெல்லாஞ் சொன்னது கண்டோமே யென்னில்?

மூங்கை யந் தருற்றோங்கிய குணங் குறி-செ ய்வதென்

ஊமையுமாய்க் குருடனுமா யிருக்கிறவ னொருவனை யிவையெல்லாங் குறைவற்றிரு க்கிற பேய்ப்பிடித்ததினாலே யவ னூமைநீங்கி ச் சொன்னதுமில்லை, கண் டெரிந்தொன் றைக் கண்டதுமில்லை. ஆகையால் பேயின் றன்மையெல்லாம் பிடியுண்டவனுக் குண் டாகாது.

இன்னும் பௌவ முற்ற மூந்தினு - நாழி கொளளா தாழி யினலைபுனல்-

இதன்றியு நாழியானது சமுத்திரத்தி லே பொருந்தி யமிழ்ந்தினாலு மலையையு டைய வந்தச் சமுத்திரத்தி னீரையெல்லா ங் கொள்ளமாட்டாது.

அதனாற் கரு த்து முத லுள தாக-வேண்டும்

அப்படியிருக்கையினாலே பொறியோடு ங்கூடியிருந்தாலு மான்மாவுக்குள்ள வறி வுண்டாமொழிந்து கர்த்தாவுக்குள்ள வறி வெல்லா முண்டாகா தாகவேண்டும்.

அன்றே யீண் டினி யமையும்-

அநாதியிலே யிப்படியிருக்கையினாலே நீ யிவ்விடத் தருளோடுங் கூடின வான்மா வெல்லாததையு மறியுமென்ற சொல்லை யினி விடுவாயாக. அதேதென்னில்?

எல்லா மெனு மிச் சொல்லாற் படும்பொரு-ளனைத்துந் தாக்கா தனிப்பரத் துற்றவர்க்-கெவ்வகை யுணர்வு செய்வதென் செப்புக-

சர்வமுமென்று சொல்லப்பட்ட சொல்லினாலுண்டாகிய பொருளனைத்திலுந் தோய்வறநிற்கிற வொப்பற்ற சிவனிடத்திலே பொருந்தினவர்க் கெந்த முறைமை சர்வஞ்ஞியமுண்டானது, அவ்விடத்துச் செய்யப்போகிறதொழி லேது, சொல்லுக. ஆகையால் சிவனைப் பெற்றவர்களுக்குச் சர்வஞ்ஞிபத்துவமென்பது கூடாது.

இஃதான்மாவுக்குச் சர்வஞ்ஞியத்துவமுண்டென்றதை மறுத்தது.

மேன் முத்தியை மறுக்கிறார்.

இதன்றியும்,

ஒன்றி லொன் று மொன்றா துலகி-னின்ற போதுயிர் நேரா மன்றே-

முத்தியி லான்மாவுஞ் சிவமு மொன்றாமென்னில்? ஒருமுதலில்லையாம். அப்படிப் பரமுத்தியடையாமற் சரீரத்தைப்பெற்று ஜீவன் முத்தனா யிருக்குமென்னில்? அப்படியிருந்த வான்மா சிவனுக்குச் சமமாகாதே! ஆகையா லீ தத்தமன்று. இதன்றியும்,

முத்தி யுற்ற நற்றவ ரவையிடை - சேர்வ ரென்றனை

முன்னை திருவருளைப் பெற்றவர்கள் முத்தியைப் பெற்றிருக்கிற நல்ல தவத்தினையுடைய பெரியோர்களுடைய கூட்டத்தினடுவே சென்றிருப்பார்க ளென்று சொன்னாய்.

சார்தரு முத்தி-சாலோக்கியமோ

இப்படிப் பொருந்தினோர்களென்று நீ சொன்ன முத்தி சாலோக்கிய முத்தியைச் சொன்னாயோ?

சாயுச்சியமெனில்-

அப்படியன்றுகாணும், நான் சாயுச்சிய முத்தியைச் சொன்னேனென்னில்?

பந்த முற்ற கந்தல கழித்த-வறிவிரோடறிவு

ஆன்மாக்களைப் பொருந்தின மலங்களைப் போக்கின கர்த்தாவினுடனே யான்மா கூடினவிடத்து

பிரியாப் பெற்றி-வேண்டுமென்றதற்கு

பிரியாம லொன்றுபட் டிருக்கவேணு மென்ற வியல்பினுக்கு

ஈண்டுவரிவ்வா-றிருப்பரென்பதற் குருத்தான் வேண்டும்-

இவ்விடத் தந்தப் பரமுத்தியைப் பெற்றவர்கள் முன்னே முத்தியைப்பெற்றிருக்கிற பெரியோர்களோடுங் கூடியிருப்பார்களென்று நீ சொல்லுகையா லிவர்களுக்குமொரு சரீர முண்டாகவேண்டும். இதன்றியும்,

அண்ணல தருளினண்ணியிருப்பினுஞ் - சீவன் முத்தரென்றேகினர்

கர்த்தாவினுடைய திருவருளைப் பெற்றுப் பரமுத்தியை யடையாம லிந்தச் சரீரத்தோடே யிருந்தார்களாயினு மவர்களை சீவன் முத்தரென்று நல்லோர்கள் சொன்னார்கள். அப்படி நல்லோர்கள் சொல்லப் பட் டிருக்கையிலே

அகன்று-நீங்கியு முருவ நீங்காதாயின்-

இந்தச் சரீரதொந்தனை விட்டுப்போய்ப் பரமுத்தியைப் பெற்றவிடத்துஞ் சரீர தொந்தனை நீங்காம லிருக்குமாயின்,

ஓங்கிய முத்தியாவதென்னுரைக்க-

அதமேலான பரமுத்தியாவதெப்படித்தான் சொல்லுக. அப்படியன்றாகாணும்,

செடியுடலுறுகாக் குடிலை கொடுக்குமென்றே குறித்தனை நீயே

அந்த முத்தியிந்த வசுத்த மயாதேகம் பொருந்தாது, சுத்தமாயாதேகத்தைக் கொடுக்க வந்தச் சரீரத்தோடுங் கூடியிருப்பார்களென்று நீசொன்ன முறைமை

பேதாய் பகட்டுர - வொளிர்கினை முச்சித்தளிரெனு மிது தகும்-

வேம்பின தடிக்கட்டைக் கைக்குமென்றறிந்துவிட்டு விளங்காநின்ற கொம்பினுனியிற்றளிரைக் கசவாதென்று கொண்டதற் கொக்கும். இதன்றியும்

இச்சாருப நச்சின ரெனவில்-

சுவேச்சையினாலே யெடுக்கிற சரீரத்தோடுங்கூடிப் பிரியப்பட்டிருந்தார்களென்று நீ சொல்லின்?

மும்மலத்தேது மின்மையதன்றே-

ஆகையாலே முத்தியிலு மலமாயா கன்மங்களி லொருமலமாகிலு நீங்கினதில்லையாம்.

இது வளர் முத்திப் பதமென வியம்புவர்.

இப்படிச் சரீரத்தோடுங்கூடியிருக்கிற முத்தியைச் சாலோகாதியாகிய பதமுத்தியென்று நல்லோர்கள் சொல்லுவார்கள்.

ஈங்கிவை நிற்க-

இவ்விடத்து நீ பழுதாகச் சொல்லிவந்த பெத்தமுத்திகளை விட்டு நான்சொல்லுகிறதைக் கேட்பாயாக. (௧0)

சிவசமவாதி சங்கற்பநிராகரண முற்றிற்று.

# சங்கிராந்தவாதி சங்கற்பம்.



| | |
|---|---|
| நீங்கா தொளி ருயிர்-விளக்கென நிற்கு மளப்புறு மறிவின்று- | ஆன்மாவானது நீங்காத பிரகாசத்தையுடைய விளக்கைப்போலே சுட்டற நிற்கும், அது விதுவென்று சுட்டியறிகிற வறிவிதற்கில்லை. |
| இறைவற் கேது மறியவேண்டின்றே- | கத்தா விகாரமில்லாதவ ராகையாலேயவருக் கொன்றையு மறியவேண்டுவதில்லை. |
| மன்னு மான்மசந்நிதியளவிற்-காந்த பசாசத் தேய்ப்ப வாய்ந்த-வுயி ருடலியக்கும் | காந்தமானது விகாரமறநிற்க வதன்சந்நிதியிலே யிரும்பு காரியப்படுமாறுபோல நிலைபெற்ற வான்மா விகாரமறநிற்க வதன் சந்நிதியிலே பொருந்தப்பட்ட பிராணவாயுவான துடலைக் காரியப்படுத்தும். |
| செயலுறு பூட்டையி- பலவகை யுருப்புமிலகிய தொழில் போல்- | சமைக்கப்பட்ட நீரிறைக்கிற பூட்டையினது பலவகையாகிய வயையவங்களும் விளங்கபபட்ட தொழில்களைச் செய்தாற்போல |
| ஐம்பொறி புலன்க ளின்புறு மன்றே- | பஞ்சேந்திரியங்களுஞ் சத்தாதிவிடயங்களை யநுபவியாநிற்கும். |
| இணைய வாயிலினிகழ்தரு பயனை - யந் | இந்த விந்திரியங்கள் பொருந்தப்பட்ட விடயங்களை யறிவதற்கு முன்னே யந்தக் கரணங்க ளறியாநிற்கும். |

தந்கரண மூந்தி யுணர்ந்திடும்- இவை யகல் வுநீஇ யைம் பொறி புலநிக ழா-

இந்த வந்தக் கரணங்க ளீங்கினவிடத் துப் பஞ்சேந்திரியங்களோடுஞ் சத்தாதிவி டயங்கள் பொருந்தாது.

இது சகலம்.

உயிர் நீங்கிடி னுடல் செய லி லதன்றே-

பிராணவாயு நீங்கினவிடத் துடல் சேட் யின்றிக் கிடக்கும்.

இது கேவலம்.

இவ்வகை வி னையின் செவ்வி னடத்தும்-

இப்படி யான்மாவின் சந்நிதிமாத்திரத் திலே பிராணவாயுவானது பிராரத்துவத் தைப் புசிப்பித்துக்கொண்டு நிற்கும்.

இஃது தவன்பெத்தம்.

மேன்முத்தி.

பழமல நீங்கி நிகழுங்காலை-

இப்படிப் பிராரத்துவ மநுபவித்து வ ருமிடத் திவனுக் கநாதியாகிய வாணவம ல நீங்க விருவினையொப்புஞ் சத்திநிபாத மும் வந்தவிடத்து

ஏற்றோர் முக வொளி தோற்று ங் கலனென-

எடுத்துப் பார்த்தவர்கள் முகத்தினது பிரதிபிம்பம் தோன்றுகிற கண்ணாடியைப் போல்

தலைவன தரு ளுயிர் நிலவிடும் நிலவக்-காட் டத் தங்கி மாட் டத் தங்கிய -த ன்மையும்

கத்தாவினுடைய திருவரு ளான்மாவி னிடத்திலே பொருந்தும்.

இப்படித் திருவருள் பொருந்தவே விற கினிடத்து நெருப்பைக் கொளுத்தினபோ தந்த விறகுகெட் டக்கினியானது போல வும்,

அளத்துப் புல் வையி னிப்பும் - போன்றதுவாகித் தோன்றிடும் — உப்பளத்திற் போட்ட புல்லும் வைக்கோலுங் கெட்டுப்போன தன்மைபோலவு மிந்த வான்மாவுந் தன் னுண்மைகெட்டு அருட் சொரூபமாய்த் தோன்று நிற்கும்.

அதனாற் - பசு கரணங்கள் சிவ கரணங்களாக மாறி யறிவு - மேகமா முயிரியா னென்ன தின்றே. — அறி விரண்டாய் நில்லாம லருளோடுங் கூடி யொன்றும், பின்னை யிந்த வான்மா விற் கியானென்ன தென்கிற தில்லை. (கக)

சங்கிராந்தவாதி சங்கற்ப முற்றிற்று.

---

## சங்கிராந்தவாதி சங்கற்ப நிராகரணம்.

இன் றுன் துரையி லன்றி — இப்பொழுது நீ பலவாகச் சொல்லியந்த பெத்தமுத்தி நன்மையை விசாரிக்குமிடத்து

உயிரொளிர் - தீபம் போலத் தாபந் தரின் — ஆன்மா பிரகாசத்தையுடைய விளக்கைப்போலத் தாவுதலைச் செய்யுமாயின்

இருள் - செறியுந் தன்மை யென் — அஞ்ஞானமாகிய விருள் பொருந்தின தன்மை யென்னைதான்?

அறிவில தாகில்-

அறிவில்லாமை யாகில்

ஒளியென வுரைத்த தெளிவதற் கேதாம்-

பிரகாசத்தைப்போல வென்று சொன்ன திடப்பாடு அதெப்படியாகும், விசாரித்துப்பார்.

சந்நிதி யளவில் மன்னுஞ் செயலுடல்-

ஆன்மாவினுடைய சந்நிதியிலே பொருந்தப்பட்ட பிராணவாயுவானது காரியப்படுத்த வுடல் காரியப்பட்டுவரும். அதென் போலவென்னில்?

காந்தம் போல வாய்ந்த தென்ற- தன்மையு முணராப் புன்மைய தன்றே-

காந்தத்தின் சந்நிதியிலே யிரும்பு காரியப்பட்டாற்போல வென்று நீ முன்னே சொன்ன தன்மையினையு மிப்போது விசாரியாத சிறுமையினையு முடையது. அதன்றியும்,

உயிருடலியக்கிற் றுயில்பெறுங் காலை-செய்த தென்

பிராணவாயுவான துடலைக் காரியப்படுத்துமாயின நித்திரை செய்கிற வவதரத்துப் பிராணவாயுவு மொக்க நிற்குமிடத் துடல் காரியப்படக் கண்டோ மில்லையே! ஆகையா லான்மா வுடலைக் காரியப்படுத்துமதொழிந்து பிராணவாயு காரியப்படுத்தமாட்டாது. ஆன்மா வவிகாரியாயிருப்ப தொழிந் திவையிற்றைக் காரியப்படுத்த மாட்டாதென்று நீ சொல்லின?

மனாதி யெய்துயிர் பொறி புல-னடத்த வாவியுஞ் சடத்தன வாயின்-

மன முதலாகிய வந்தக் கரணங்கள் பொருந்தப்பட்ட பிராணவாயு விந்திரியங்கள் விடயங்க ளிவை யெல்லாத்தையுங் காரியப்படுத்துதற் கான்மாவும் ஜடமாயிருக்குமாயின்

பூட்டையிற் பூணி கூட்டல் பெருதே-

நீரிறைக்கிற பூட்டைபோலெனில்? பூணியாகிய வெருதினுலே பூட்டையி னிடத்துண்டாகிய வவையவங்கள் காரியப்பட்டு வருகையால் நீ செயற்படுத்துகிற பூணியை யான்மாவிற் குவமைசொன்னது திருஷ்டாந்த விரோதம். ஆகையா லீ தத்தமன்று. இதன்றியும்,

புலனைம் பொறியி னில விடு மென்றனை-

சத்தாதி விடயங்களைப் பஞ்சேந்திரியங்களானது பொருந்தி யநுபவிக்குமென்று சொன்னுய்,

அஞ்சு மொரு காற் றுஞ்சாத றிதற்-கழிவென்

சத்தாதி விடயங்களைப் பஞ்சேந்திரியங்க ளநுபவிக்குமாயின் பஞ்சேந்திரியங்களு மேககாலத்திலே யறியாமலொன் றறிந்தது மற்ற நாலு மறியாம லிருப்பதற்குக் குறைவென்?

தருச் செழு மலரிலை பலங்கனி தருவது போல்

நல்ல மரமானதொரு காலத்திலே யிலையையு மொரு காலத்திலே பூவையு மொரு காலத்திலே காயையு மொரு காலத்திலே பழத்தையுந் தோற்றுவித்து நின்ற தன்மைபோல

இனையவை வையைந்து-மொன் றென்றாக நின் றறிவுறு மெனின்-

இந்த விந்திரியங்களையு மொவ்வொரு விடயங்களாக வறியுமென்று சொல்லின்

ஒன்றின் பயனை யொன்ற

ஓ ரிந்திரியத்தின் விடயத்தை மிகவுமோ ரிந்திரிய மறியாது. ஈதல்லாமலும்,

றியாதா - விது
வே யல்லது

கருமென வி
ரு செவி-யிருக-
ற் றொருகாற்
றெரியாத் தன்
மைவந் -தெய்து
ம்

ஓரிந்திரியமாயிருக்கிற விரண்டு செவியிலுஞ் சடக்கென விரண்டுபேர் சத்த மொருகாலத்திலே சொல்ல வொருவன் சொன்னதை யறிந்து மொருவன் சொன்னதை யறியாமலு மிருந்ததன்மைவந் தபொருந்துகையினாலே யந்தவிந்திரியத்தின் றொழில்க ளதற்கின்றி யான்மாவிற் கானாற்போல

மனாதிய மெ
ய் யுயிர்ச் செய
லுங் - தனக்கில
தொருவர்க் கெ
னத் தெளிகிலை
யே-

அந்தக் கரணங்களுக்குஞ் சரீரத்திற்கும் பிராணவாயுவுக்கு முண்டான தொழில்களு மவையிற்றுக் கில்லை, ஆன்மாவிற்கே யென் றறிவாயாக. எனவே யான்மா வவிகாரியல்ல விகாரியென்பது கருத்து.

இஃ தவன் பேதத்தை மறுத்தது.

மேல் முத்தியை மறுக்கிறார்.

இதன்றியு நீ முத்தித்தன்மை சொல்லுகிறவிடத்திலே கண்ணாடியிலே பார்ந்தவர்களுடைய முகத்தி னொளி யந்தக் கண்ணாடியிலே தோன்றினாற்போலக் கர்த்தாவினுடைய திருவருளு மிந்த வான்மாவிலே பிரகாசிக்குமென்று சொன்னாய்,

நோக்கு முக
வொளி நீக்காதா
னெனக் - கவருந்
தன்மை முகுரம்
போல-

கண்ணாடியானது பார்த்தவர்களுடைய முகத்திலுண்டாகிய வொளியைத் தள்ளிவிடாமற் றானே யென்னத்தக்கதாகத் தன்னிடத்திலே கவளீகரித்துக்கொண்டு நின்றாற்போல

கொடுத்தது கோடற் கடுத்தன்றே-

கொடுத்தது கொள்ளுந்தன்மை யுனக் கடுக்குமதொன்றன்று. இதன்றியும்,

காட்டத் தங்கி கூட்டக் கூடி- மிந்தனத் தியற்கை வெந் தழ லுங் கா-

விறகினிடத் துண்டாகிய நெருப்பை யான்மாவினோடுங் கூடிநிற்கிற வருளிற் குவமையாகச் சொல்லப்படுவது, நெருப்பு விறகைச்சுட்டுப்போடாமற் றொண்டிருந்தாலாம், அன்றி நெருப்பு விறகைச் சுட்டுப்போட் டவிகை யினு லதத்தமன்று. இதன்றியும்,

உப்பளத் தடுத்த புற் பலாலங் கள் - சடத்தவே னும்

அளத்திலே கூடின புல்லும் வைக்கோலும் ஜடமாயிருந்ததாயினும்

கொடுத்தது கொள்ளுந் - தன்மை யுண் டெனக் கின்மையதன் றே-

தற்சொரூபத்தைக்கொடுத்த ததனுடைய சொரூபத்தை முன்னுருப்போலப் பெறுந்தன்மை யதற்குண்டு. உனக் கதனுடைய முறைமைதானு மில்லை. இதன்றியும்,

அவ முறு கருவி சிவ மய மா மெனக்- கூறினை

அஞ்ஞானங்களுக் கேதுவாயிருக்கிற கருவிகளைச் சிவரூபமென் றுன் மதத்திலே சொன்னாய்

யாகம் வே றுருக் கவராது-

அதினந்தச் சரீரத்தோடுண்டாகிய வாசைநீ சொன்னதொழிந் திந்தச் சிவசொரூபஞ் சுத்த நின்மலமாயு மிந்தமாயாசொரூப மசுத்தமலமாயு மிருக்கையா லிது வேறு வாகாது

என்பதென வை முழ் றுன்ப

என்று நீர்சொன்ன தென்ன? அந்தமாயாகருவிக டொன்றுதொட்டுவருகிற பிறவித்துன்

ந் தடைக்குந்-திருவருள் மருவ வுரியன வென்னில்-

பத்தை நீக்கித் திருவருளைப் பொருந்திய தனுடைய சொரூபமாகைக் குரியதெனறு நீ சொல்லில்?

அருளுரு மாயா விருளின தாங்கொல்-

அப்பொழுது திருவருளு மாயையாகிய வஞ்ஞான மாகவேண்டும். (கொல்ஐசை.)

சத்தப் பரிச ரூப ரச நறை-யெத் திறத்தின தருளியம்புக

சத்தப் பரிச ரூப ரச கந்தங்களோடுங்கூடி யறிந்துவருகிற மாயாகருவிகளுக்குத் திருவருளெத்தனை தூரம், இதற் குத்தரமுண்டாகிற் சொல்வாயாக.

அன்றியு - நிறைந்து நீயாய் நின்றனையேனு - மறைந் தைம்புலனாய்வாரா யென்றுங்-கரணமெல்லாங் கடந்தனையென்று - மரணமையந் தினப்புறத்தென்று - முன்னருட் டலைவர் பன்னினரெனவு - மினையவை யொழிய வறிகுவதெவ்வா - றென்றநிற் கலிக் கொ

இதன்றியும் காளத்தியந்தாதி. "நிறைந்தெங்கு நீயேயாய் நின்றாலுமென்று, மறைந்தைம்புலன்காண வாராய்—சிறந்த, கனியாருந்தண்சோலைக் காளத்தியாள்வாய், பனியாயே லென்னுண் பரிசு." என்றும். திருவாசகம். "கரணங்களெல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றன், சரணங்களேசென்று சார்தலுமே தானெனக்கு, மரணம்பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த, கருணைக்கடலுக்கே சென்றூதாய்கோத்தும்பீ." என்றும். தேவாரத்திருப்பாட்டு "பையஞ்சுடர்விடுநாகப் பள்ளி கொள்வா னுளத்தானுங், கையஞ்சு நான்குடையானைக் கால்விரலாலடர்த்தானும், பொய்யஞ்சிவாய்மைகள்பேசிப் புகழ் புரிந்தார்க்கருள்செய்யு, மையஞ்சினப்புறத்தானு மாருரமர்ந்த வம்மானே." என்றும். முற்காலத்திலே

ன்றிய வின்பக்- கூறுதற்கும்

திருவருளைப்பெற்ற பெரியோர்க ளருளிச்செய்தார்களென்று நான்சொல்லவு மிந்திரியங்களைவிட்டா லிவனுடைய வறிவு ஜீவியாதாகையா லிந்தவிந்திரியங்களன்றித் திருவருளை யறியும்பகுதி யெப்படியென்று கேட்கிற வனுக்குச் சொல்லுகிறது ஒருவனு மொருத்தியுங்கூடி யநுபவித்த வின்பத்தைத் தானநுபவியாத வலியாயுள்ளவனுக்குச் சொல்லுகிறதை யொக்கும்,

அருட் பேறி னை யன்றே-

மாயைக்குளளே மயக்கப்பட்டு வருகிற பொருள்களை யறிகிறதுதானே பெருகக்கொண்டா யாகையா லிதுவு மத்தமன்று. இ˚ தன்றியும்,

ஏக முமீ ரறி வாக மொழிந் தனை-

அருளு மானமாவுங் கூடினவிடத் திரண்டு மொன்றாய்விடுமென்று சொன்னாய்,

இரு பொரு ளொருமை மருவிய திலதே-

இரண்டு முதல் கூடி யொருமுதலாய் நிற்குமென்ப துண்டாகாது.

இவ்வகை கிடக்க மெய்வகை கேண்மதி.

இங்ஙனம் பலவாகச் சொன்ன வத்தங்களைப் போட்டு நாம் சொல்லப்போகிற சத்தியத்தைப் புத்திபண்ணிக் கேட்பாயாக. (மதி- அசை.) (௧௨)

சங்கிராந்தவாதி சங்கற்பநிராகரண முற்றிற்று.

---

# ஈஸ்வர வவிகாரவாதி சங்கற்பம்.



பஞ்சு றுளைக் குடத்தினுள் விளக்கேய்ப்ப - வறிவுளதாகு முருவுறு முயிர்கள்-

பலத் துவாரங்களையுடைய குடத்துக்குள்ளிருக்கிற விளக்கைப் போன்ற நவத்துவாரங்களையுடைய சரீரத்திலே நிற்கிற வான்மாக்களு மறிவா யிருக்கும்.

கண்ணு லோசையுங் கந்தமுங் கருத-வொண்ணு தென்னு முணர்வுடைமையினுல்-

கண்ணைக்கொண்டு ரூபத்தை யறிவதொழிந்து சத்த பரிச கந்தங்களை யறியவொண்ணு தென்கிற வறி விந்தவான்மாக்களுக் குள்ளதா யிருக்கையினுல்

அவ்வப் புலன்கட் கவ்வப் பொறிகள்-

இந்த வான்மா தனக்குக் கொள்ளவேண்டின விடயங்களுக்குற்ற வந்தவிந்திரியங்களை

செவ்விதி னுவிச் சேர்ந் தவை நுகரும்-

மாறுபாடற நிருத்தியவையிற்றிலே பொருந்தப்பட்டு வருகிற விடயங்களைப் புசியாநிற்கும்.

இது பெத்தம்.

மேன் முத்தி:

மூல மலத்தின் பாகம் வந்து தவுமீஇ-

இப்படிக் கன்மத்தைப் புசித்துவருமிடத்து வாணவமலநீங்கிப் பாகம் வந்தவிடத்து

இருடரு மிற்புக் கொரு பொருள் கவர-

இருட்டு வீட்டிலே விளக்கைமுன்னிட்டுக் கொண் டொரு பதார்த்தத்தை யெடுக்கவேண்டினவிடத்து

தீபம்வேண்டு மானவாபோல-

ஒருவிளக்கை முன்னிட்டுக்கொண்டு சென்றந்தப் பதார்த்தத்தை யெடுத்த தன்மைபோல

| | |
|---|---|
| மோக மாமலம் போக | அஞ்ஞானவிருளாகிய வாணவமல நீங்க |
| ஞான - விளக்கரனருளாற் றுளக்கறப் பொருந்தி- | ஞானமாகிய தீபத்தைச் சிவனுடைய வநுக்கிரகத்தாலே யசைவறப் பெற்று |
| நீர் நிழ லனைய சீர்பெறு கடவுளை- | தண்ணீரைப்போலவு நிழலைப்போலவு மொருவரளவிலும் பக்ஷப் பிரதிபக்ஷமின்றி யிருக்கிற சிறப்பினையுடைய கத்தாவை |
| சல மிலனாகிச் சார்ந்தவர்க் கென்றும்- | அப்படிப் பக்ஷப் பிரதிபக்ஷ மில்லாதவனாயிருக்கையிலேயுந் தன்னை யடைந்தவர்களுக் கெப்பொழுதும் |
| நல மிக நல்கு நாதனையணைந்து- | நன்மைப் பகுதிகளை மிகவுங் கொடுக்குஞ் சுவாமியைக் கூடி |
| பூழி வெம்மை பொருந்தா தயர்ந்த-நீழல் வாழு நினைவினர் போல- | மத்தியானத்திலே வழிநடந்தவர்களுக் கந்த வழியிலே யுண்டாகிய பொடிச் சூடு நீங்கத்தக்கதாக வுயர்ந்த மரத்தி னிழலிலே வந்து பிரியப்பட்டிருக்கிற நினைவை யுடையவர்களைப் போல |
| திருவடி நீழல் சேர்ந்து - கருவுறு துயரங் களைந் திருந்திடுமே. | இந்த வான்மாவுங் கத்தாவினுடைய திருவடி நிழலைப் பொருந்தித் தனக்குண்டாகிய ஜநந துக்கங்களையெல்லா நீக்கிக்கொண் டிருக்குமென் றறிவாயாக. எ-று. (௧௫) |

ஈஸ்வர வவிகாரவாதி சங்கற்ப முற்றிற்று.

---

# ஈஸ்வர வவிகாரவாதி சங்கற்ப நிராகரணம்.



இருன் தன் கேள்வி

இப்படியிருந்தது நீகேட்ட கேள்வி நான் சொன்னதற்குக் குற்றமென்ன?

திருந்திடு முயிர்க-ளறி வெனில் வாயிற் பொறி புல னென்னை-

திருந்த முண்டாகிய வான்மாக்கள் அறிவோடுங் கூடியிருந்ததாமாயிற் சத்தாதிவிடயங்களை யறிதற் கிந்திரியங்கள் வேண்டுவதில்லை. இந்த விந்திரியங்களைக்கொண் டறிகையினாலே யான்மாவுக் கறிவில்லையென்ப துவன் கருத்து.

மற்றவை பற்றியுற் றறிந் திடுதலின்-

அந்த விந்திரியங்களை யான்மா பொருந்தியொருவிடயங்களை யுற்றறிந்து வருகையினாலே

அறிவென வழங்கு முயிரென வுரைத்தல்-

ஆன்மாவை யறிவென்று சொல்லப்படுமென்று நீ சொல்லுகிறது

காணுங் கண்ணினன் கைகொடு தடவிப்- பூணும் பொருளின் பெயர்பல புகறலென்னுங் கிளவி தன்னொடு தகுமே-

கண்ணிரண்டுந் தெரிகிறவன் கண்ணைக்கொண்டு பதார்த்தங்களைக் கண்டு சொல்லாமற் கைகளைக்கொண்டு தடவி கைகளிலே தட்டின பண்டங்களுடைய பலபெயர்களைச் சொன்னானென்கிற சொல்லோடொக்கும். ஆன்மா வறிவாயிருக்கையிலே தானா யறியாம லிந்திரியங்களைக்கொண் டறிந்ததென்று சொல்லுகிறது. இதன்றியும்,

அவ்வப் புலன் கட் கவ்வப் பொ

ஆன்மாவிற் கறியவேண்டின வந்த விடயங்களுக் கேற்ற வந்தவிந்திரியங்களைச் செய்

| | |
|---|---|
| றிகளைச் – செவ்<br>வி தி ளிறுவலி<br>னறிவெனச் செ<br>ப்பினை – | வையிலே மாறுபாடற நிறுத்திக்கொண்டறி<br>கையினுலே யான்மாவை யறிவென்று நீ சொ<br>ன்னாய், |
| அறிவிலாமை<br>கண்டனம் | இது கொண்டே யான்மாவுக் கறிவில்லை<br>யென்கிறது கண்டோம். |
| அவை புலற்கு<br>ட்- பொறிகளே<br>வழி னறிவொடு<br>பொருந்தில் – | தன்னோடு பொருந்த வேண்டின விடயங்<br>களுக் கேற்ற விந்திரியங்களை யேவிக் கொள்<br>ளுகையினுலே யான்மா வறிவோடுங்கூடி யிரு<br>க்குமென்று நீ சொல்லில், |
| கண்டோர்<br>பொறியாற் கொ<br>ண்டிட வேண்டு<br>ம் – | ஆன்மா வறிவேயாகி லிந்த வவதரத்திற்கு<br>க் கிட்டினதோ ரிந்திரியத்தைக்கொண்டு தன<br>க்குவேண்டின விடயத்தைப் புசிக்கவேண்டு<br>ம். அதில்லாதபடியாலே யானமா வறிவன்று.<br>பின்னும், |
| உதவிய தொன்<br>றுற் ம றமென<br>வியற்றினு – ருண்<br>டோ வென்னில் | சோத்திரத்தைக்கொண்டு சத்தத்தை யறி<br>வதொழிந்து யாதொன்றாகிட்டின விந்திரியங்<br>கொண்டு சடகனை வோர் தொழிலைச் செய்<br>தவர்களு மிந்தப் பூமிக்குள்ளே யுண்டோ<br>வென்னில், |
| கண்டனம் | அப்படிக் காணப்பட்டதுண்டு. அஃதெங்<br>ஙனே யென்னில்? |
| மேனாட் – கட<br>வுளிற் கடி மலர்<br>முடுகிய மதன<br>ன் – | முற்காலத்திலே கத்தாவினுடைய யோகத்<br>தைத் தவிர்க்கவேண்டி மன்மதன் மணம்பொ<br>ருந்தின புஷ்ப பாணத்தைக்கொண்டு கிட்டி<br>னபோது |
| அங்க முங்கள் | அவனுடைய சரீரமானது அசரீர மாகிப் |

தங்கிடக் கிடந்த து- பொருந்தத் தக்கதாகச் சாம்பராய்ப் போய்விட்டது.

வையின் றிரள்ற் செய்ய சிறுபொறி - மாட்டி மூட்டின தன்றே மீட்டும்- கண்கொண்டு பார்த்ததொழிந் தவன் மேலே வைக்கோற் றிரளைக் குவித்துச் சிவந்த சிறிய நெருப்புப் பொறியை மாட்டி யூதி யெரித்த தல்லவே!

இதன்றியும்,

தேனமர் தவிசி னான்முக னுச்சி - யறுத்ததுங் கருவி பொறுத்தோ வன்றே- வண்டுகள் பொருந்திய தாமரைத் தவிசின் மேலே யிருக்கிற பிரமாவினுடைய நடுவிற் றலையை கைநகங் கொண்டு கிள்ளிப்போட்ட தொழிந்து ஒரு வாட்கொண் டறுத்துப்போட்ட தில்லை.

ஈசன தியல்பு பேசுத றவிர்க- நானான்மாவுக்குச்சொல்ல நீ கர்த்தாவைக் கொண்டுவந்து சொல்லுவானேன், அதைவிட்டான்மாக்களிலே யுண்டாகிற்சொல்?

காழி மாநகர்க் கவுணியர் கடவுள்- சீர்காழியாகிய பெரியநகரிடத் துண்டாகிய கவுணியகோத்திரத்திற் கெல்லாந் தலைவராகிய சம்பந்தராலே

ஞான மாகிய நற் பதிகங்க ளெழுதுறு மன்பர்த மின்புறு மொழியால்- அருளிச்செய்யப்பட்ட ஞானமாகிய நல்ல திருப்பதிகங்களை யெழுதப்பட்ட வண்மையுடைய சம்பந்த சரணாலயருடைய வினியவாக்கினால்

களிறென வணைந்த கன்மனப் புத்தன்-முருட்டுச் சிரமொன் றுருட்டின மன்றி- மதயானையைப்போ லெதிர்ந்துவந்த புத்தனுடைய மொட்டந்தலையை யுருண்டுவிழத் தக்கதாகச் செய்ததல்லது

வாய்ந்த வாளொன் றேந்தினரிலரே-

கூர்மைபொருந்திய வாளை யெடுத்துக்கொண் டல்லவே! ஆகையாலே யான்மாக்கள் கண்டதோர் பொறியாற் கொண்டிட வல்லார்களென்று சொன்னது

என்றநுமீர் வாள் கொன்றதென்பது போற்-றனித்துணை யருளாற் றுணித்தன னொன்ப-

ஈர்வாள் கொன்றதென்றால் அவ்வாள்கொன்றதாகாம லந்தவாளைக்கொண் டொருத்தன் கொன்றாற்போல வொப்பில்லாத கர்த்தாவினுடைய வநுக்கிரகத்தினாலே புத்தனுடைய தலையைத் துண்டித்துப்போட்டார்களென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

ஆதலின் வாயி லளவினி லறிதலி-லேதமி லறிவுயிர்க் கெய்துதலிலதே-

ஆகையா லிந்த விந்திரியங்களுடைய வெல்லையிலே நின் றறிந்து வருகையினாலே குற்றமற்றிருக்கிற வறிவான்மாவிற் குண்டாகாது. திருவருளறிவிக்கவேண்டும்.

இது பௌத்தத்தை மறுத்தது.

மேன் முத்தியை மறுக்கிறார்.

இருட்கு விளக் கொண் டேந்தினர் போல-

இருளினிடத்திலே யொருபண்டத்தை யெடுக்கவேண்டினவர்கள் கையிலே விளக்கைப் பிடித்துக்கொண் டந்தப்பண்டத்தை யெடுத்தாற்போல

மருட்கு ஞான மன்னுத லுளதே - யென்றனை

இவனுடைய வஞ்ஞானமாகிய விருணீங்குகைக்கு ஞானவிளக்கு நிலைபெற்று நிற்கத்தக்கதாகக் கர்த்தா வநுக்கிரகஞ் செய்யுமென்று நீ சொன்னாய்,

கருவிக ளியாவு மசேதனங்-துன்றியவுயிருந் துரியத் தன்மையன்-

தத்துவங்கள் முப்பத்தாறும் ஜடம், ஆணவமலத்திலே செறியப்பட்ட வான்மாவுந் துரியத்திலே நிற்பானொருத்தன்,

ஆதலி னந்த ரனைவருங் கூடித்-
தி தற வருநெறி தெரியு மென்றற்றே-

ஆகையால் இது தன்னிற்கூடித் திருவருளைப்பெற்றது தமக்குக்காட்டாகச் சிவனைப்பெறுமென்றது அனேகங் குருடர் தம்மிற்கூடிக் குற்ற மற்றிருக்கிறதொரு பெரிய வழியைக்கண்டந்த வழியேயோ யோரூரிலே சென்றார்களென்று சொல்லுகிறதற் கொக்கும். இதன்றியும்

நீர் நிழ லனைய சீர்பெறு கடவுளைச்- சேர்ந்தவர்க் கின்பம் வாய்ந்திடு மென்றனை-

நீரைப்போலவு நிழலைப்போலவும் பக்ஷப்பிரதிபக்ஷ மில்லாமலிருக்கிற சிறப்பினையுடைய கத்தா தன்னைவந்து கூடின பக்குவான்மாக்களுக்குப் பேரின்ப முண்டாக வருக்கிரகஞ் செய்வனென்று நீ சொன்னாய்,

பாதவ மென்றுஞ் சேதன மின்மையின்-

மரமான தெப்பொழுதும் அறிவில்லாமல் ஜடமாயிருக்கையினாலே

இனைத்தோர் வம்மி னென்பதுந் துன்பம்-விளைத்தோர் தம்மில் வெறுப்பு மொன்றிலதே-

வெய்யிலினாலே யிளைத்துப்போகிறவர்களை வாருங்களென்று பிரியப்பட்டழைத்ததுந் தன்னை வெட்டிப்போட்டவர்களினபேரிலே யகிதப்படுவது மில்லை. இதன்றியும்

பொடித்திடு கொப்புள் வெடித்திடு பாதம்-வெய்ய பூழியி னுள்ளுற வழுங்கி-யாற்றுதலின்றி

பொடியினாலே யுள்ளங்காலிலே கொப்புளங்கொண்ட தடைந்து சுடுகிற புழுதியுள்ளே பட்டழுந்தி யதனாலே யாற்றமாட்டாமல்

| | |
|---|---|
| ஆறியங்கினர் முன் - னேற்றிடு மென்று சொல்ல வு மிலதால்- | வழி நடந்துவருகிறவர்கள் முன்னே மரா மானது சென்றுதோன்றி யவர்கள் விதனத் தைத் தீர்த்ததென்கிற சொல்லு மதற் கில்லா தபடியாலே |
| இவ்வகை கட வுட் கியம்புந ரவ ரே- | நீரு நிழலும்போலு மென்கிற அவிகாரவா தங் கத்தாவிற்கு நீ சொன்னது மிகவும் பழு தாம். ஆதலால் |
| பாசஞானப் ப ழிவழியொழிக-வி சன தருள்வழி யி யம்புவன் கேண் மதி. | இனி சரீரசம்பந்தமு நீங்காமற் கத்தாவை யும் அவிகாரவாதஞ்சொன்ன குற்றத்தையுமு டைத்தாய முத்திநெறியைவிட்டுக் கத்தாவினு டைய திருவருளின்வழி சொல்லுகிறேன் புத் திபண்ணிக் கேட்பாயாக. எ - று. (மதி - அசை.) (௧௭) |

ஈச்வர அவிகாரவாதி சங்கற்ப நிராகரண முற்றிற்று.

# நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்பம்.



| | |
|---|---|
| புவனமியா<br>வையும் புனிதன<br>துருவாஞ்-சிவமு<br>ஞ் சத்தியு மென<br>த்தெளி | இந்தப்பிரபஞ்சமெல்லாஞ் சிவ சொரூபமா<br>யிருக்கும். இதி லருவமாயிருக்கிறது சிவமு மு<br>ருவமாயிருக்கிறது சத்தியு மென்று தெளிவா<br>யாக. |
| அவற்று-ளசே<br>தநமென் றொன்<br>றைதற் கிலது | அந்த விரண்டுவகைக்குள்ளு மசேதநமாக<br>ச் சொல்லப்பட்ட தொரு பொருளு மில்லை. |
| அது-சேதந னு<br>கர்பொழு திரண்<br>டு மோர் திறத்<br>தே- | அநுபமா யறிவா யிருக்கிறவ னநுபவிக்குமி<br>டத் தந்த விரண்டுபகுதியு மொன்றாயிருக்கும். |
| இதுவெனு<br>மொன்றை யது<br>வாய்ப் படுத்து<br>ப்-பொதுமையி<br>னிற்கும் போத<br>மென் றறிக- | இதுவென்று சுட்டப்பட்ட தொரு விடயத்<br>தை யநுபவிக்குமிடத் தந்தவிடயந் தானேயா<br>ய் அந்தவறிவென்னும் விடயமென்னு மிரண்<br>டாகாமற் பொதுமையிலே நிற்குமென் றறிவா<br>யாக. இதன்றியும் |
| பொற் பணிப்<br>பேதம் புரைவழி<br>யொருவழி- | பொன் னொன்றாயிருக்கையிலே பொன்னு<br>க்கும் பணிக்கும் பின்னஞ்சொன்னாற்போல<br>வறிவிற்கும் பிரபஞ்சத்திற்கு மொருபக்ஷமி<br>ப்படியுஞ் சொல்லலாம். |
| நற் பொனிற்<br>றிகழ்வென் நய | நல்லபொன்னி னுண்டாகியமாற்றுப் பணியி<br>லிடத்துங் காண்கையாற் பொன்னும் பணியு |

ப்பதொன் றன்றல்-

மொருதன்மையாகவிருக்கப் பொன்னையும் பணியையு மறிவிற்கும் பிரபஞ்சத்திற்கு முவமையாகச்சொன்ன தென்னதாமென்று கேட்கில்—

ஆவது மாகாதொழிவது மெனுமிப் - பாவக முண்மை யாராதோர்க்கே-

இந்தவுவமை யாம்பகுதியிந்தவுவமை யாகாப்பகுதியெனறு சொல்லுகிற விந்தப் பாவக முண்மையைத் தரிசியாதவர்களுக்கா யிருக்கும். உண்மை பார்த்தவர்களென்றும் பாராதவர்களென்றுஞ் சொன்னதுகொண்டே யறிவிலே பின்னமுண்டென்னில்,

பாராதோரெனப் பல்லுயிர் பகர்தலின்-

உண்மையைத் தரிசியாதவர்களென்று நான் சொன்னதுகொண்டே நீ யான்மாக்களைத் தனித்தனியே பொருமுதலென்று சொல்லில், பலவாகச் சொல்லப்பட்டிருக்கிற வான்மாக்கள்

ஆராய்ந் துரைக்கி னவை பிற வல்ல-

அத்தன்மையை விசாரித்துச் சொல்லுமிடத் தந்த வான்மாக்கள் சிவனுக்கு வேறுயிருப்பதொன்றன்று, எல்லாஞ் சிவமுதலே யென்றறி. இதன்றி

பலபல பேதமில வெனபோருமில்-

சிவமு மான்மாக்களும் பிரபஞ்சமுந் தனித்தனி யொவ்வொருமுதலென்று பலபேதங்களாகச் சொல்லுவார்களுமுண்டு; அது சித்தியமன்று. கண்ணென் றொருமுதல் கண்டுவருமாபோல வானமாவென் றொருமுதல் தனித்தறிந்துவருமிடத் திதனை யில்லையென்பா னேனென்னில்,

கண்ணின தொளியைக்க

கண்ணென்றைக் கண்டுவருகிற காக்ஷியந்தக் கண்ணுக் குண்டாயினபடிக் காண்கிற

ண்ணின தெளி கன்லது- துன்னிய விருளிற்செறி பொருடெரித்தலு-மின்மை

மின்மினி யென விரு கண்மணித்-தன்மைதானுந் தாவிலது

நெருங்கியிருக்கிற விருளுக்குள்ளே பொருந்தியிருக்கிற பொருளின்ன பொருளென்றுண்மைக் காணும் பகுதியுண்டோவில்லையோ? இதன்றியு

மொருமின்மினி யிருளை நீக்கினமையாதி யிரண்டு கண்மணியுங்கூடி யிருளை நீக்கிக்கண்டோமில்லை.

அதனாற்- கண்ணின துருவு மதிற் கதிரொளியு- நன்னருஞ்சத்தி சத்தர்க ணடிப்பே-

கண்ணுடைய வடிவுமதனிடத் தாகித்தப் பிரகாசத்தாலுண்டாகிய காட்சியுமிவையெல்லா மனதினாலே யெட்டுதற்கரிய சிவம் சத்திகளுடைய நாடகமென்றறிவாயாக. ஈதெங்கே காணப்பட்டதென்னில்,

உலகேழெனத்திசை பத்தென வொருவன்- பலவாய் நின்ற படியிது வென்றும்-

திருவாசகத்தில். ''நிலநீர் நெருப்புயிர் நீள் விசும்பு நிலாப்பகலோன், புலனாயமைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றாய், உலகேழெனத் திசைபத்தெனத் தானொருவனுமே, பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ'' என்றும்

ஊனாயுயிரா யுணர்வா யென்றும்-

தேவாரத்தில் ''ஊனாகி யுயிராகி யதனுணின்ற வுணர்வாகிப் பிறவனைத்து நீயே நின்றாய், நானேது மறியாமே யென்னுள் வந்து நல்லனவுந் தீயனவுங் காட்டாநின்றாய், தேனாருங் கொன்றையனே நின்றியூராய் திருவானைக் காவிலுறை சிவனே ஞான, மானாய் நின்

பொற்பாத மடையப்பெற்று லல்லல்கண்டங் கொண்டடியே னென்செய்கேனே." என்றும்

மானக் கண்ணே மணியே யென்றும்-

திருவாவடுதுறைத் தேவாரத்தில் "திருவே யென் செல்வமே தேனேவானோர் செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதிமிக்க, வுருவே யென் னுறவே யென்னூனே யூனின் னுள்ளமே யுள்ளத்தி னுள்ளேநின்ற, கருவேயென் கற்பகமே கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடும் பாவாய்காவா, யருவாய வல்வினைநோ யடையாவண்ண மாவடுதண் டுறையுறையு மமரரேறே." என்றும்

தாமே தாமாய்ச் செய்தன ரென்றும்-

திருக்கடைக்காப்பில் "பத்திப்போர் வித்திட்டுப் பரந்த வைம்புலன்கள்" என்னும் திருத்தாளச்சத்தியில். "தாமே தாமாகச் செய்யு மவன்." என்றும்

நாமே சிவமாய் கண்ணின மென்றும்-

திருவாசகத்தில் "அவமாய தேவ ரவகதியி லழுந்தாமே" என்கிற திருப்பாட்டில் "நாமொழிந்து சிவமான" என்றும்

காயிப் பழமாய்ச் சுவையாய் நுகர்வு - மோயா துண்போன் றானேயென்றும்-

தேவாரத்தில். "தீயாகி நீராகித் திண்மையாகி" என்னும் திருப்பாட்டில் "காயாகிப் பழமாகிப் பழத்தி னின்ற விரதங்க ளுகர்வானுந் தானேயாகி." என்றும்

அறிவோன் றானு மறிவிப்போனு-மறிவா யறிகின்றோனு மறிவுறு- மெய்ப்பொரு

அந்தாதியில் அம்மைவாக்கு "அறிவானுந் தானே யறிவிப்பான் றானே, யறிவா யறிகின்றான் றானே-யறிகின்ற, மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்ப்பா ராகாயம், அப்பொருளுந் தானே யவன்." என்றும்

டானும் வியந் தி
து வெனப்படு-ம
ப்பொரு ளியாவு
மவனே யென்
றும்-

தாய் தலைப்ப
ட்டங் கொன்று
ய்த் தென்றும்-

திருவிசைப்பாவில். "மோ தலைப்பட்ட க
டல்." என்னும் திருப்பாட்டில். "தாய் தலைப்
பட் டங் குருகி யொன்றாய." என்றும்

ஏதம தற நான்
கெட்டே னென்
றும்-

திருவாசகத்தில். "வான்கெட்டுமாருதம்."
என்னும் திருப்பாட்டில், "நான்கெட்டேன்."
என்றும்

இன்னு மின்னு
மிறையோ னளி
த்தவை - பன்னி
லெண்ணரும் பா
ன்மைத்து

முதலே சொல்லிவந்த திருவாக்குக ளன்றி
யின்னமு மேனு மநுக்கிரகம்பெற்ற தம்பிரா
ன்க ளருளிச்செய்த செயல்களைச் சொல்லுமி
டத் தெண்ணிறந்த பகுதியினை யுடையது.

ஆதலிற் - றரு
பொருள் கொள்
பொரு டருவோ
ன் கொள்வோ-
னொருபொரு ளி
வ்விய லுவப்பெ
ன வுணர்க-

ஆகையாலே யொருவ னொருத்தனுக்குக்
கொடுக்கிற பொருள், தான் கொள்கிறபொரு
ள், ஒருபொருளினைக் கொடுக்கிறவன், அந்தப்
பொருளைக் கொள்கிறவன், எல்லா மொருபொ
ருளாயிருக்கு மிந்த முறையுள்ளதாகிய வத்து
வென் றறிந்து பிரியப்படுவாயாக. ஆகையால்

நுகர் பொரு
ள் சத்தி நுகர்
வோன் சத்த
னென் - றிகலறு
முணர்வு வந் தெ
ய்துத லரிதே-

இதனாற் புசிக்கப்பட்டிருக்கிற சத்தாதி வி
டயங்களு மந்த விடயங்களைப் புசிக்கிற விவ
னுஞ் சத்தி சிவமாகிய சைதன்னியம்; இவை
யிரண்டும் வேறல்லவென்றும் மாறுபாடற வ
றிகிற வறி வொருவனுக் குண்டாகிறது மிகவு
மரிது.

இது பெத்தம்.

மேன் முத்தி.

நானவ னெனு மிது நவை வழி

ஆன்மாவுந் தனியே யொருமுதல், சிவமுந் தனியே யொரு முதலாமென் றிங்ஙனந் துவித பாவகமாகச் சங்கற்பித்துக்கொண்டு நிற்கிறது குற்றத்தை யுடைத்தாகிய வழியாயிருக்கும்.

நல் வழி-தானவருகை யிது சாயுச்சியம்-

நல்வழியானது தானொருமுதலறச் சிவமுதலேயாய் நின்று வருகைச் சாயுச்சிய மென்று சொல்லப்படும்.

இத்திறன் றெளியு வுய்ந்திடு மளவும்-

இப்படி யிவனுக் குண்டாகத்தக்கதாக விவன் போதஞ் செலுத்துமளவும்

யாதொரு வகையி னீதியதாகத்-தானறிவழியே தலைநின்று

சங்சாரத்தோடுங் கூடி யிருந்தவன் அவற்றைவிட்டுத் தானின்றது நீதியாக விது தமக்கு முத்திக்குவழியென்று தன்னுடைய போதத்துக்குத் தோன்றின வழியிலே தலைநின்று

என்று-மூனுயிர் சிவத்தி லொடுங்கிட நடத்தி-

கனவிலு நனவிலு மிந்த வுடம்பையு முயிரையுஞ் சிவத்திற் குள்ளே பொருந்தத்தக்கதாகச் செலுத்தி

மூடு முழுமலம் வீடுங் காலை-

ஒன்றையு மறியவொட்டாமற் பொருந்திக்கொண்டு நிற்கிற வாணவமல நீங்கு மவதரத்து

கருவிக ளௗ விற் புரிதரு மறி

சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரிய மென்று சொல்லிப்பட்ட நாலவதரத்திலு

வு-சாக்கிரங் கனவு நீக்கமில் சுழுனை - துரிய மெனறவை பயிறரு மறிவு-

மறிகிற வவதரம் அறிகருவிக ளிந்த வவத்தைகடோறு மேற்றக் குறைச்சல்களாக நிற்கிறதாக விருக்கும். ஆகையால் இந்தக் கருவிகளெல்லாம் சூழன் றொன்று மறியாமற் கிடக்கிற வவதரந் துரியாதீதம்.

இது கேவலம்.

துரியா தீதந் திரியாத் தன்மையி - லிறை யருளுதவும்

இந்தத் துரியாதீதத்தை விட்டு நீங்காமனிற்கிற வவதரத்திலே கத்தாவினுடைய திருவருளானது கருவிகளைக் கூட்டி யிவனுடைய பெத்தத்தை ஜீவிக்கப் பண்ணும் பொழுது

கறை யறமாறி - யறிவே யாகும்

ஆணவமல நீங்கிக் கருவிகளோடுங் கூடி யறிவாகிநிற்கும்.

இது சகலம்

மேற் சுத்தாவத்தை.

பிரியாக் கருவிக-ணிறை மூதலவத்தையில்

இவனை விட்டு நீங்காமனிற்கிற கருவி முப்பத்தாறும் நிறைந்துநிற்கிற சாக்கிராவத்தையிலே

அறிவிலதாகத் - துரியாதீதத் தோற்றந் - திரியாதது மற் சிவகதித் திறனே.

எல்லாக் கருவிகளுங் கழன்றிருக்கிற துரியாதீதந் தோன்றினவிடத் தந்த வவதர நீங்காமனிலைபெற்று நிற்கிறதே யிவனுடைய சிவகதி. எ - று. (௧௫)

நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்ப முற்றிற்று.

# நிமித்தகாரண பரிணாமவாதி

## சங்கற்பநிராகரணம்.



| | |
|---|---|
| திறம்பெறநீ யிங் கறைந்தமை கருதின் - | நீ நன்றாக இவ்விடத்திற் பெத்தமுத்திகளைச் சொன்னவையிற்றை விசாரிக்குமளவி லெப்படி யிருந்தது. இதற்குக் குற்றமென்ன? |
| புவன மியாவையும் புனிதன துருவெனில் - | பிரபஞ்சமாகக் காணப்பட்டிருக்கிறதெல்லாங் கர்த்தாவி னுடைய சொரூபமென்று நீ சொல்லில், |
| அவன் முதற் காரணம், | விசுவாதீதனாயுள்ள வந்தச் சிவன் இந்தப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாக வேணும். |
| அன்றுமென்னில் - | அவன் முதற்காரண மல்லவென்று நீ சொல்லில், |
| நிமித்த காரண நிமித்தனாக வென் | அவனை நிமித்தகாரணமென்று சொல்லென்று நான் சொல்ல |
| நீ - யவனே காரண மனைத்து மென்றறைந்தனை - | நீ பின்னையு மந்த விசுவாதீதனாயுள்ள சிவன்றானே நிமித்தகாரணமுந் துணைக்காரணமு முதற்காரணமு மெல்லாமென்று சொன்னாய். |
| மண்டனிற் குலாலன் றண்ட சக்கராதி - காரணமூன்றும் | மண்ணாகிய முதற்காரணமு மொப்பில்லாத குயவனாகிய நிமித்தகாரணமு மவனுக்குக் கருவியென்று சொல்லப்பட்ட தண்டசக்கர மாதியாகிய துணைக்காரணமு |

மிவைமூன்றும் மூன்றுகாரணமா யிருப்ப தொழிந்து

ஓர்போரணை நதித் - தாரணி யதனிற் கண்ட து சாற்றுக-

மூன்று மொரு காரணமாயிருக்கிற திந் தப் பூமியினிடத்திற் கண்ட துண்டாகிற் சொல்லுவாயாக.

நிமித்தகாரண மென்றது சிவனை.

துணைக்காரண மென்றது சத்திகளை.

முதற்காரண மென்றது விந்து மோகி னிமானென்கிற வுபாதானத் திரயங்களை. இதன்றியும்,

அத்த னியற்று மித் தொழில் பிறர்க்கோ - தனக்கோ வீணோ வெனக்கி தியம்புக-

கத்தா செய்கிற பஞ்சகிருத்தியம் பிறர் நிமித்தமாகச் செய்துவருகிறுரோ வல்ல து தன்னிமித்தமாகச் செய்துவருகிறுரோ யவை யிரண்டுமன்றிச் சும்மா பயனற்ற தாகச் செய்துவருகிறுரோ இதனை யென க்குத் தெளியச் சொல்வாயாக? சொல்ல மாட்டாயாயின் நான்சொல்லக் கேட்பா யாக.

வீணெனிற் பித்தர் மாண்பறு ந் தொழில்போ ற் - றலைமையு மறிவு மிலதென விகழ்வர்-

சும்மா பயனற்றதாகச் செய்தாரு மா கிற் பித்தராயுள்ளவர்கள் செய்கிற மாட்சி மை யற்ற தொழில்போல விருக்கையாற் க த்தாவிற்குச் சர்வமுதன்மையுஞ் சர்வஞ் ஞத்துவமு மில்லை யென்று சொல்லிப் பெ ரியோர்க ளிகழ்வார்கள். ஆகையால் வீ ணாகச் செய்தானென்று சொல்லவொண் ணுது.

தனக் கெனி லஃது முனிற்ப தொன் றன்றே-

தன் னிமித்தமாகச் செய்தானென்னி லதுவு முன்சொன்னதுபோலப் பொருந்துவ தொன்றன்று. அதேதென்னில்,

தன்போ லறிஞருந் தலைவரு மிலரான் - மின்போ னிலைமையை வேண்டலும் பழுதே-

தன்னைப்போலச் சர்வஞ்ஞத்துவமுஞ் சர்வ முதன்மையும் பிறரொருவருக்கு மில்லாதபடியினாலே மின்போலத் தோன்றி மறைந்துபோகிற பிரபஞ்ச வியற்கையைத் தனக்கு வேண்டிச் செய்தானென்று மிது மிகவும் பழுதாம். ஆகையாற் றன்னிமித்தமாகச் செய்தானென்று சொல்லவு மொண்ணாது.

பிறர்க் கெனிற் பிறரும் பிறர்க்காம் பொருளும்-

இந்தத்தொழில் கத்தா பிறர் நிமித்தமாகச் செய்தானென்னில் தன்னை யொழிந்து பிறரென் றொரு முதலும் அந்தப் பிறரென்று சொல்லப்பட்டவர்களுக்கு வேண்டின விடயமும்

பொருட் கமை கருவியுந் தற் கோருபாதானமும்-

அந்த விடயங்களைப் புசிக்கத்தக்கதாகவதற்கேத்த கருவியு மந்தக்கருவிகடோன்றுகைக் கோருபாதானமும்

செய்கையு மென்றோ ரைவகைத் தாமொடு- மாறுச் சைவர் கூறுர்

இந்த வுபாதானத்திலே நின்று பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கிற சிவனோடுங் கூடவிந்த வைந்து வகைக்கு மாறுபாடாகச் சைவராயுள்ளவர்கள் சொல்லார்கள்.

என்று - னின் சித்தாந்த மவசித்தாந்த-மென்

என்றிப்படி யிருக்கையால் நீகொண்டிருக்கிற சித்தாந்தஞ் சித்தாந்தமல்லவென்று நீதானேசொல். இதன்றியும்

சித்தான்றவசித்தை மற்றீன்றது-

சித்தாயுள்ள சிவம் அசித்தாயுள்ள பிரபஞ்சத்தைத் தன்னிடத்திலே நின்றுந் தோற்றுவியாது.

அசித்திலதென்னில்

அசித்தென்கிற லக்ஷணம் பிரபஞ்சத்திற்கில்லை. எல்லாஞ் சிற்சொரூபமேயென்னில்,

அசித்தென்னுலகில்-

இந்த வுலகத்தின் கண்ணே பிரபஞ்சம் ஜடமாயிருப்பதென்று சாத்திரங்கள் சொல்லுவானேன்? இதன்றியும்

உலகாயதனும் பூதக் கூட்டஞ்-சலமேற் கொப்புட் டகுமெனச் சாற்றினன்-

உலகாயதன் முதலாய்ப் பூதக்கூட்டமாயிருக்கிற பிரபஞ்சத்தை நீர் மேற் குமிழி போலு நிலைநிற்பதல்லவென்று சொன்னான். அப்படியிருக்கையிலே நீயிந்தப் பிரபஞ்சத்தைச் சிற்சொரூபமென்று சொன்னது வுண்மையன்று.

மேலவ ரான்மா வில்லையென்ன வுண்டென்கிறார்.

தீயகருமச் சீனர் சாவகர் பிறர் - ஞேயமில் லென நிகழ்த்தினரிலரே-

பொல்லாத தொழிலுக் கேதுவாயிருக்கிற புத்தர்கள் சமணர்கள் மற்றுமுண்டான சமயிகளனைவரு மிந்தச் சரீரத்திலே யோரறிவுண்டென்று சொல்லுவார்கள்; அதனை யொழிந் தன்னைப்போல வான்மா வில்லையென்று சொல்லுவார்களில்லை.

காண்டல் விரோத நிற்பிறர் கணித்திலர்-

பிரத்தியக்ஷ விரோத நீ நாட்டினாற்போலப் புறச் சமயத்திலுள்ளவர்களு மிப்படிச் சொன்னவர்களில்லை.

ஈண்டுனதுரைக்கு மற்றியார் கரி

இவ்விடத்து நீ யான்மா வில்லையென்று சொல்லுகிறதற் கியார்தான் சாக்ஷி. இன்றொ ரொருவரை நாட்டு. இதன்றியும்,

உடலுஞ்-சித்தோ

இந்தச் சரீரமு மறிவோ வறிவல்லவோ?

சித்தின் சேர்வாற் சித்தெனில்-

அறிவோடுங்கூடி வாதனைப்பட்டு வருகையினாலே யிந்த வுடலு மறிவென்று நீ சொல்லில்,

கடபடாதியுமுடற்கட் சிதைவென்-

கடபடாதிகளு மிந்தவுடலைப்போல வவையு மோருடல்களா யிருக்கையிலே யிந்த வுடலைப்போலச் சஞ்சாரமின்றிக் கிடப்பானேன்?

தாபர வுயிர்போற் றனுவொழிந் திவற்றின்- மேவிய வுணர்வு விரவிடு, மெனில்-

அந்தக் கடபடாதிகளிலே பொருந்திநிற்கிற பேரறிவு எல்லா ரூபங்களினுங் கலந்து நிற்குமிடத் துயிர் கூடிநிற்கிற வுடம்பிலே தாக்கினாற்போல மற்றக் கடபடாதிகளிலே தாக்கி நில்லாதென்று நீ சொல்லில்,

சடத் துயிர்போலெனச் சாற்றினை யாகவி- னுடற் றுயி ரிறையை யொழித் துண்டன்றே-

உயிர் நிற்கிற வுடம்புபோல வுயிரில்லாத வுடம்புகளி லிந்தப் பேரறிவு பொருந்தாதென்று சொன்னா யாகையா லிந்த வுடற்குக் கத்தாவை யொழிந் தோருயி ருண்டாகவேண்டும். நான் திருஷ்டாந்தஞ் சொன்னது கொண்டே னப்படிச் சொல்லுகிறீரென்று நீ சொல்லில்,

தரு திட்டாந்தமுந் தாட்டாந்திகமு-மொருபொரு ளாகி லுவமை பெறுதே-

ஒன்றிற் குவமையாகச் சொல்லப்பட்ட திருஷ்டாந்தமு முவமைப்பற்றி நின்ற தாஷ்டாந்திகமு மொருபொருளா யிருக்குமாயின் பொன்போலுங் கொன்றை யென்கிற வுவமை யிந்த வுலகின்க ணுண்டாகாது,

ஒன்றே யாகி லுடற் கிறை தாபரத் - தோன்றிய நிலையில் விசேட மெனவுரைக்க-

பசு முதலின்றிப் பதி முதலொன்றுமே யாகி லிந்தப் பதிமுத லெங்கு நிற்குமிடத்துத் தாபரங்களைப்பார்க்க விந்த வுடலிற்கு விசேடமுண்டானதென்ன நீ சொல்.

பூதச் சேர்வைப் பேத மென் றறையில்-

பூதக் கூட்டரவினேற்றக்குறைச்ச லென்று நீ சொல்லில்?

சேர்வைப் பேத மென்கொடு செப்புக-

பூதங்கள் கூடுகிறவிடத்திலே பேதந்தான் வந்ததேதுகொண்டென்று சொல்லுவாயாக.

கருமத் தளவில் வருமெனில்

கன்மத்துக் கிடாகப் பேத முண்டாமென்று நீ சொல்லில்,

பித்து - ருரையிற் றிகழு முணர் வொழிந்தனையே-

நீ கன்மத்துக் கிடாய் வருமென்று சொன்னது, பித்தர் சொல்லுகிற சொல்லைப்போல விளங்காநின்றது; நீயுமறிவு கெட்டுவிட்டதாயிருந்தது.

கருமஞ் செய்வோன் கடவுளன்று

யாதொரு கருமத்தைச் செய்துவருகிறவனைக் கத்தாவென்று சொல்லப்படாது. ஆகையாலிந்தக்கன்மஞ் செய்தது சிவமல்ல.

உடலு - மருவி நின் றுருவினை வளரா துகரா-

உடலும் ஜடமாகையாலொரு ரேதுவுமின்றிக் கன்மத்தை யுண்டாக்கிக் கொள்ளவு மாட்டாது, பிராரத்த கன்மத்தைத் தானாகப் புசிக்கவு மாட்டாது. சிவன கூடிநின்று புசித்தாரென்னில்,

கடவுளு முடலின் கண்படறுஞ்சல்-

யாக்கு மனாதீதனா யிருக்கிறசிவன், கன்மத்துக்கீடாக வோருடலினிடத்துவந்து பொருந்துதல், பிராரத்தந் தொலைந்தவுடனே யந்த வுடலைவிட்டுவிடுதல்,

இடர்நல முழுத லிறங்குத லேறுதல்-

இந்த வுடலோடுங் கூடிநின்று புண்ணிய பாவங்களைப் புசித்துக்கொண்டுவருதல், சாக்கிராதி யவத்தைகளிலே யிறங்கி யதீதப்பட்டுக்கிடத்தல், மீண்டு முணர்த்துமுறைமையிலே யேறிச் சாக்கிரத் தானத்திலே வருதல்,

எவ்வகையேனுஞ் செய்கை யின்றாதலும்-

இவையெல்லா மெந்தப் பிரகாரத்தானுங் கடவுளுக்கிந்தத் தொழிலில்லாதபடியாலும்;

பலகலையுங் கிளிலவுதலானும்-

கர்த்தா சர்வஞ்ஞனாகையாலும் பாசஞ் ஜடமாகையாலும் இவையிற்றைக் கற்கவேண்டுவதில்லை. இந்த விரண்டுவகைக்குமின்றிப் பலசாத்திரங்க ளிந்தப் பிரபஞ்சத்திலே யுண்டாய்வருதலினாலும்,

எண்ணரும் பொருளு மிரவியு மொழியக்-கண்ணென வொன்று காண்கையினாலும்-

எண்ணிறந்த பேதமாயிருக்கிற பிரபஞ்சங்களு மிவையிற்றை விளக்குஞ் செய்கின்ற வாதித்தனுமின்றிக் கண்ணென வொருமுதனடேநின்று கண்டுவருகையினாலும்,

பாசப் பகுதியு மீசனு மொழியப்-பசுவு முண்

பாசத்தினுடைய வகையும் பதியினுடைய வகையுமின்றியே பசுவினுடைய வகையுமுண்டென்று நீ பொருந்தவேண்டும்.

டென்றிசைய வேண்டினறே-

இது வெனு மொன்றை யது வாய்ப் படுத்துப்- பொதுமையி னிற்கு மாயையி ன் பொற்பென-

இதுவென்று சுட்டப்பட்ட வொருவிடயத்தை விடையந்தானு யந்த வறிவானது பொதுவிலே நிற்குமென்றது மாயா மயக்கத்தினுடைய பெருமையென் றறிவாயாக.

பொற்பணி யாவும் பொன் ளுந் தன்மையின்-

பொன்னிலே யுண்டான பணிகளெல்லா மந்தப் பொன்போல விருந்த தன்மைபோல்

நிட்கள சகளத திருவுருவிலையு-மீசனேயெனப் பேசுவர்

நிஷ்களமாகிய வருவமுஞ் சகளமாகிய வுருவமு மிவையிரண்டுங் கர்த்தாவினுடைய சொரூபமா யிருக்குமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

அன்றி-யருவுருவாகி வருமுல கென்னில்-

அன்றி யருவாயுள்ள சிவமு முருவாயிருக்கிற பிரபஞ்சமாயிருக்குமென்று நீ சொல்லில்,

அனைத்து மாயையெனத் தெளிந்திலையே-

பிரபஞ்ச மாயையாயிருக்கையா லிந்தப் பிரபஞ்சத்திற் குபாதானமா யிருக்குமென்ற சிவமு மாயையென்று தெளிகின்றா யில்லையே! எனவே பிரபஞ்சத்திற் குபாதானஞ் சிவமல்லமாயையென்பது கருத்து.

இதன்றியும்

ஆவது மாகா தொழிவது மில

இதாம்பகுதி ஈதாகாப்பகுதி இவையிரண்டு மிலையென்கிற பாவக முலகாயதனு

தெனும்- பாவக மூல காயதன னூ பான்மை-

டைய பக்ஷமாயிருக்கும். அந்தமுறைமைகள் ஞானவான்களுக் கில்லையென்னில்,

கட்கொலை வெகுளி காமங் களவுக-ளுட்படுமிவை விட மொழியாதாரிலர்-

மது பாகஞ்செய்கிறது கொன்று பறிக்கிறது கோபித்துச் சொல்லுகிறது பாதாரகமனஞ் செய்கிறது பிறருடைய பொருளைக் களவுகொள்ளுகிறது இப்படிப்பின்னையுஞ் சொல்லுகிற பொல்லாங்குகளெல்லாத் தையு மாகாது; இவையிற்றை விட்டுவிடுங்களென்று சொல்லாதிருப்பாரொருவருமில்லை. இப்படிக்கொத்தவையெல்லாஞ் செய்தாலும் ஞானவான்களுக்குத் தேவையில்லை தோஷமேறுதென்று சாத்திரஞ்சொல்லுமென்னில் ?

சோமபானஞ் சுரு பானங்க-ளாமென மறைகளோர்செவிப் பறைந்தன-

சோம பானஞ் செய்கிறது சுரு பானஞ் செய்கிறது இவையிரண்டுங் கொள்ளலாமென்றொருத்தருமறியாமல் வேதங்களாருடைய செவியிலே சொல்லிற்று. இதன்றியும்

மறையோன புலைச்சியை மருவு மென்பது-முறையோ

பிராமணன் பறைச்சிக் காசைப்பட்டவளோடே கூடுகிறது முறைமையோ முறைகேடாயினமோ?

எனி லது புனை மொழியென்னில்-

பிராமணன் பறைச்சியைப் பரிசிக்கலாகாதென்று சொல்லுகிறது ஒரு வரம்பு கூடிச் சொன்னதொழிந்து அவளிடத்திலே கூடினவிடத் தின்பம் விளைந்ததில்லையோவென்று நீ சொல்லில்,

## கக அநிமித்தகாரணபரிணாமவாதிசங்கற்பநிராகரணம்.

*சாதிபேதநீதி நீ தவறினு - மேதியையேறு விழையா விரும்பும் -*

பிராமணனென்றுஞ் சண்டாளனென்றும் வழங்கிவந்த சாதித்தன்மையை நீ யிப்போது தவிர்ந்துவிட்டாயாயினு மெருமையை விருஷபமானது விரும்பாது பசுவை விரும்பும். ஆதலால் ஞானவான்களுக் கெல்லா மாமென்கிற தத்தமாகாது.

*கண்ணினுருவு மதிற் கதிரொளியு - நண்ணருஞ் சத்தி நாடக மெனில்*

கண்ணினுடைய பிரகாசமு மதிற் கூடிநிற்கிற வாதித்தனாலுண்டாகிய காந்தியும் பொருந்தாதற்கரிய சிவசத்தியினுடைய நாடகமா யிருக்குமென்று நீ சொல்லில்,

*அதற் - கேதுவும் பயனு மோதவேண்டும்.*

அப்படிச் சிவனொருவுருவத்தைக் கொண்டானாகில் அவனுக்கிப்படி யொரு குற்றமுண்டென்று மது நீக்கிக்கொள்ளுகைக் கிப்படிப் புசித்தானென்றுஞ் சொல்லவேண்டும்.

*நின்மொழி விரோதமு நீடுலகியற்கையும் -*

விசுவாதீதனா யிருக்கிற சிவனிப்படிப் புசித்துவருவானென்று நீ சொல்லுகிற சொல் விரோதமு நல்லவனின்றுன் பொல்லாதவனின்றுனென் றுலகிலுள்ளவர்களெல்லா மங்கீகரித்துக்கொண்டு வருகிற முறைமையும்

*தன்ம சாத்திரமுஞ் சகலமு மென்செயும் -*

புண்ணிய பாவங்க ளின்னதென்றும் பாவஞ்செய்தவர்களை ராஜா தண்டஞ்செய்யக் கடவனென்றுந் தன்ம சாத்திரங்களிற் சொல்லுகிற முறைமையு மிப்படிச் சொல்லப்பட்டவையெல்லா மான்மா வொன்றில்.

லையாமாயி னவையெல்லா மென்னபிரயோஜனத்தைச் செய்யும். இதனறியும்,

உலகேழென விறை பலவாந் தன்மை—

“உலகேழெனத் திசைபதெனத் தானொருவனுமே” என்ற திருவாசகத்தின் றன்மை

கடமொடு சார்வங் கலசமாதிக — ளடலுறு குயவ னாயின னென்றால்—

குடங்கள் சட்டிகள் கலசங்க ளிவையாதியாகச் சொல்லப்பட்ட பாத்திரங்களெல்லாம் விரைவிலே பொருந்திச் செய்யப்பட்ட குயவனாயின னென்று சொன்னால்

தானேயாகா வவை தானாகான்—

அந்தக் குயவ னந்தப்பாத்திரங்களாகான் அந்தப்பாத்திரங்க ளிந்தக்குயவனாகா.

ஆயின னென்ப தாக்கின னெனவே—

ஆயினனென்ப தாக்கினனென் றிலக்கணங்களிற் சூத்திரஞ் சொல்லுகையினால்

ஆறா யென்ப தனைத்து மவ்வகை—தானாகாமையைச் சாற்றிடு மென்க—

வாறாய் மண்ணாறாயென்று சொல்லப்பட்டதெல்லா மந்தச்சிவ னந்தவாறு மண்ணுமாகா னென்பதைச் சொல்லுமென் றறிக.

தாமே யெனுமித் தனியேகாரம்—

தாமே தாமாகச் செய்யுமென்கிற வொப்பில்லாத வேகாரத்தோடுங் கூடியிருக்கிற திருவாக்கு

அழிந்திலர் ஆவே யாய்த்திலர்.

தாங்க ளழிந்தார்களுமில்லை, அந்தச் சிவமுதலானோர்களுமில்லை,

அதுவிட்டொழிந்திலர்பிரிவில ரெனுமிவை யுணர்த்தும்- அந்தச் சிவமுதலையின்றிக் காரியப்பட்டார்களுமில்லை, அந்தமுதலிற்கு வேறாயிருந்தார்களுமில்லை, என்றிப்படியிருக்குமென்று சொல்லும்.

காயும் பழமுஞ் சுவையு நுகர்வ- தாயவன் றானு மவன் முதற் றென்னும்- "காயாகிப் பழமாகிப் பழத்தினின்ற விரதங்க ளுகர்வானுந் தானேயாகி" என்றதிருவாக்குக் காயும் பழமு மவற்றுநின்ற விரதமும் மவயிர்றைப் புசிக்கிறவனு மந்தக்கத்தாவாலே யுண்டாகையா லிவையெல்லாஞ் சிவமுதலாக வுண்டானதென்று சொல்லும்.

அகிலமுந் தெளிய வறிவோன் றானும்- பிரபஞ்சமெல்லாத்தையு மயக்கமற வறிகிறவனும்

அகிலமு மறிஞரை யறிவிப் போனும்- அறியும் பகுதியுள்ளவர்களுக் கெல்லாத்தையு மறிவிப்போனும்

அறிஞர்க் கறிவா யறிகின்றோனும்- அறியும் பகுதியுள்ளவர்களுக் கவர்களுடைய வறிவாய்நின் றறியும் பகுதியையுடையவனும்

அறிவிற் கறிபொரு ளாவோன்றானும்- மூத்தான்மாக்களுக் கறிபொருளாயிருக்கிறவனும்

அகிலமு மேனி யானவனென்னும்- பிரபஞ்சமெல்லா மவனுக்குத் திருமேனியாகையா லிந்த முறைமைகளையுடையவனென்று சொல்லாநிற்கும்.

தருபொருள் கொள்பொருட்டருவோன் கொள்வோன்- ஒருவன் கொடுக்கப்பட்ட பொருள், தான் கொள்ளப்பட்ட பொருள், ஒரு பொருளைக்கொடுக்கிறவன், அந்தப்பொருளை வாங்கப்பட்டவன், இவையெல்லாம்

ஒரு பொருளாயினுவப்புண்டென்க- ஒருபொருளாயிருக்குமாயின் மிகவும் பிரியம்வருமென்க. இப்படியுஞ் சொல்லுவார்களோ!

நுகர்வோன்றனக்கு நுகர்பொருள் வேண்டிற்று- புசிப்பானொருவனுக் கொருபொருளைப் புசிக்கவேண்டினவிடத்து

இகலறக் கிடையாதிருந்ததெனிரையமும்- அந்தப்பொருளிவனுக்கு மாறுபாடின்றி வந்து பொருந்தாதிருப்பானேன்? எல்லா மொருபொருளாயிவனினைத்தபொழுது புசிக்கக்கண்டோமில்லையே! ஆகையாலெல்லா மொன்றாயிருக்குமாயின் நரகமுண்டாகாது. அதேதென்னில்,

வேண்டாராயினுமெய்யுறுவியாதிகளுண்டாதொழியாது- குன்மஞ் சூலை முதலான வியாதிகளை யநுபவிக்க வேண்டாவென்றவர்களிருந்தாலுஞ் சரீரத்திலே யுண்டாயிருக்கிற வியாதிகளிவர்களை வந்து பொருந்தி யநுபவியாமல் விடாது. ஆகையாலெல்லா மொன்றென்றுசொன்ன தத்துவமன்று. ஆன்மாவில்லையெல்லாஞ் சிவ மநுபவிக்குமென்றாய்,

இறைக்கிவையிடல- வேண்டின பொருள் கிட்டாமலும் வேண்டாத வியாதிகள் கிட்டியும் இவையிற்றிலுண்டாகியவிருத்த மான்மாவுக்கேயல்

லது சிவனுக்குண்டாகாது. இப்படியிருக்கையிலே

சத்தியுஞ் சிவமுந் தாமேநுகருமென் – றித்திறனுணர்வு வந் தெய்துவதெவர்க்கோ-

ஆனமாவில்லை சத்திசிவங்களே யெல்லாச் சுகதுக்கங்களையு மநுபவிக்குமென்று சொன்ன விந்தப்பகுதியி லுண்டாகிய ஞானமிந்தப்பிரபஞ்சத்திற்குள்ளே யாவர்க்குத்தான் வந்துண்டாவது. (என்றதாக்ஷேபம்)

தமக்கே யென்னிற் றாமுணராமையும்-

சத்திசிவங்களுக்கே யிந்த வநுபோகமென்னில்? அந்தசத்திசிவங்க ளிந்தபிரபஞ்சத்தை யறியாதபடியாலும்

அமைப்பறவுணர்தலுமவர்க் கடைவன்றே-

அறியுமிடத்துச் சுட்டியறியாமற் றடையற வெல்லாத்தையு மொக்கவறிகையாலுஞ் சுகதுக்கங்க ளான்மாவிற் கொழிந்து சிவசத்திகளுக் குண்டாவ தல்லவே.

இது பெத்தத்தை மறுத்தது.

மேன் முத்தியை மறுக்கிறார்.

நானொருமுதலவனொருமுத லென்கிற அது குற்றத்தையுடைய வழியென்று நீயவனாவனால் விடுகிறது நல்லவழியாகிய சாயுச்சியமென்றுஞ் சொன்னாய்,

நானு மவனு நவையு நலனும்-

நானென்கிற வான்மாவும் அவனென்கிற சிவமு நவையென்கிற குற்றமு நலனென்கிற நன்மையும்

தானவ னாகையு நின் சாதனத்தில்-

இந்தவான்மா வந்தச் சிவனாகவேண்டு மென்கையும் நீ யெல்லாமொன்றென்கிறவனாகையா லுன்னுடைய சாதனத்திற் கூட்டப்பட்டதல்ல. இதன்றியும்

சக யோகத்தைச் சாயுச்சியமெனப்- பகர்வது பதி பசு பாசத்தவர்க்கே-

சிவனோ டொன்றாய்க் கூடிப்போகிறதைச் சாயுச்சியமென்று சொல்லுகிறவிது திரிபதார்த்த நிர்ணயம்வந்தவர்கள் கொள்ளும் பகுதியாமே! இதன்றி

யாதொரு வகையென வோதிய திறைநூல்- சொன்னவற் றொன்றன்று

இந்த முத்தித்தனைமை கூடுமளவுஞ் சங் சாரத்தோடே கூடியிருக்கிறவனையிற் றைவிட்டு நின்றதே நிலையாகக் கொண்டு பசரித்துவரக் கடவனென்று நீ சொன்னது, சிவாகமம் மோக்ஷத்துக் கேதுவாயுள்ளவர்கள் சரிக்கவேண்டிய முறைமை பல வழியுஞ்சொல்லும், அவையிற்றிலே யொரு வழியுங் கூடப்பட்டதல்ல.

என்னில்வீ டெளிதே-

அப்படிச் சரிக்கிறதுதானே முத்திசாதனமென்னின், மோக்ஷத்தை யரிதென்று சொல்லவேண்டுவதில்லை, எல்லார்க்கு மெளிதாய்ப் பெற்றுவிடலாமென்று சொல். இதன்றியும்

தானெறி வழியே தலைப் பொருள் பிடித்து-

ஆசாரியர் கற்பித்தவழியே யொழுங்கில் வாராமல் தன்னுடைய போதத்திற்குத் தோன்றினவழியே தலையானவழியாகப் பிடித்து

மெனிகழ் பலமும் வீடளித்திடுமே-

அந்தவழியே யொழுகிவர வதனாலுண்டாகியபலமும் வீட்டினபத்தைத் தருமேல்,

நிலையாக் கருவியை நிலையாக் கருதி-

நிலையில்லாமைக்குச் சாக்ஷியான தேககிரியபஞ்சத்தை நிலைநிற்குமென்று கருதி

௧உ௪ நிமித்தகாரணபரிணாமவாதிசங்கற்பநிராகரணம்.

| | |
|---|---|
| புலையாடுதலு மூலகாயதன் பொருள்- | செய்யாத காரியத்தைச் செய்துகொண்டு வருகிற லுலகாயதன் கொள்ளும்பொருளா மொழிந்து சைவர்கொள்ளும் பொருளல்ல. |
| குட்டிய மின்றி நற்கோலமெழுதத - லிட்டமதாயில் | சுவரில்லாமற் சித்திரமெழுதுகிற தொருவருக்குங் கூடாதது உனக் கிஷ்டமாயிருக்குமாயின் |
| கருவியு மிடங்களுங்-கருத்துறவுரைகக | தனு கரண புவன போகங்க ளான்மாவிற்கே யென்று சாத்திரஞ் சொல்லுமிடத்து |
| தெரித்திடுமதித்து- | (அங்வயம்) அதிதத்து தெரித்திடும்-சிவன் விசுவாதீதனா யிருக்கையினாலே யவனுக்கிவை வேண்டுவதில்லை. இவையெல்லா மான்மாவிற்கு வேண்டியிருக்கையிலே யான்மாவிற்கில்லை. இவை யந்தரத்தே நிற்குமென் றுன்னுடைய போத மொன்றுங் கூசாம லினைத்துச் சொல்லிடும். இதன்றியும், |
| அறிவொன்றில்லோர்க் கிறையரு ளுதவுதல்- | சற்று மறிவில்லாத வான்மாக்களுக்குக் கர்த்தாவினுடைய வருளறிவைக் கொடுக்குமென்றாய். அங்ஙன மதுசெய்தல் |
| பிறிவறிவரியச் செறியிருளிடத்து- | ஒரு சற்று நீக்கங்காணமற் செறிந்த விருளிடத்திலே யிருக்கிற |
| ஓ-ரந்தகர் காணவந்தோரெம்மை-நீவிருங் காண வேணுமென் | அந்தகரைக் காணவந்த வொருவர் விளக்கைக் கொண்டுவந்து கண்டந்த விளக்கை யந்தகர்கையிலே கொடுத் தென்னை நீவிருங் காண வேண்டுமென்று சொல்ல வவரை யந்தகர் |

| | |
|---|---|
| றுங்-கெடுத் தோர் தீபங் கொடுத் தனைத யொக்கும்- | கண்டாறென்கிறதற் கொக்கும்; அறிவில்லாத வான்மாக்களுக்குக் கத்தா வறிவைக்கொடுக்க வந்ததென்றும் நீ சொன்னது. |
| இச் செயற் கிறைவன் கொச்சையனன்றே- | அறிவில்லாத வான்மாவிற்குத் தன்னுடைய வருளைக் கொண் டறிவைக் கொடுத்தா னென்கிறது, கத்தாவு மிந்த வான்மாவைப்போல வறிவில்லாதவ னாகவேண்டும். இதன்றியும், |
| கருவி வசத்திற் றெரிவுறக் காண-வேண்டினா ரில்லரால், | கருவிகளைக் கொண்டு தேகாதி பிரபஞ்சத்தை நன்றாகக் காண்கிற காக்ஷியை சிவஞானிக ளொருவரு மத்தைவேண்டி யிருப்பாரில்லை. அப்படி யிருக்கையிலே |
| கண் டறிவியாவுஞ்- சிவமே யென்று செப்பினை | இவ்விடத்துக் கருவிகளைக் கொண் டறியு மறிவெல்லாஞ் சிவமே யென்று நீ சொன்னாய், |
| அவமுறு-பொறி புல னறியா | இந்திரியங்கள் ஜடமாயிருக்கையினாலே விடயங்களை யறியமாட்டாது. |
| அறிவுறு பிரம-மென்றோர்க் குண்போ லிடர் படலிலதே- | எல்லாத்தையு மறிகிறது பரப்பிரமமென்றுசொன்ன மாயாவாதிக்கு முன்னைப்போலக் குற்றஞ் சொல்லத்தக்க தில்லை. அதேனென்னில் அவன்பிரமத்தை யறிவென்றும் பிரபஞ்சத்தை ஜடமென்றுஞ்சொன்னான். நீ யெல்லாத்தையுஞ் சித்தென்று சொல்லுகையினாலே குற்றம். இதன்றியும், |
| ஏற்றங் கருவி யிருபதோ டிரண்டும்- | அந்த மாயாவாதி பதினாலுகருவியு மூன்றவத்தையுஞ் சொன்னான். நீ யவனிலும்பார்க்கவே யிருபத்திரண்டு கருவியும் |

| | |
|---|---|
| போற்றுமைந் தவத்தையும் புகநிமலமு- மீசனு முயிரும் பேசினை | சைவ ரூபசரித்துக்கொண்டுவருகிற வஞ்ச வத்தையு மவர்களாற் சொல்லப்பட்ட மூன் றுமலமுங் கத்தாவு மான்மாவு முண்டென்று சொன்னாய். |
| அஃ தொழிந்- தொன்றே யாகு மென்றநின் னியல்பு- | அவையிற்றையெல்லாம் விட் டிப்பொழு தெல்லா மந்தச் சிவ மொன்றுமேயென்று நீ சொல்லுகிற வியல்பு எத்தோடொக்கு மென்றால், |
| தாயர் மனைவி யர் தாதியர் தவ் வையர்- | தாயையுந் தன்னுடைய பெண்சாதியையும் வெள்ளாட்டியையுந் தமக்கையையுந் |
| ஆயவ ரெவரை யு மோர்மையிற் காணும்- | அப்படிச் சொல்லப்பட்ட வெல்லாரையும் விடயப்பார்வையாய்ப் பார்க்கும் |
| கோகழி தூர்த் தர் கொடுந் தொ ழி றகுமே- | கோவினாற் கழியுண்டுபோகிற தொழிலைக் கொண்டு அவர்களைக்கண்டு தன் னெல்லையி லே யில்லாம லப்பாற்பட்டுக் கண்டுவருகிற தூர்த்தனுடைய கொடுந்தொழிலை யொக்கும். |
| ஆக மற்றதன் | நீ சொல்லிவந்த ஞானத்தினது தன்மை இப்படி தவறுகக்கிடக்க |
| அருணிலை நன் னிலை- யேகநாயக னாகிய விறை நிலை- | அரு ளான்மாக்களை யுபகரித்துநிற்கிற மு றைமை, ஆன்மாவிற்குத் தனக்கென வோர் சுதந்தரமில்லாமலே நிற்கு முறைமை, கத்தா சர்வத்திலு நிறைந்து நிற்குமிடத் தொன்றி லுந் தாக்கற்றுநிற்கிற முறைமை நிலை. |
| நாசமில் பாச ம் வீசிய வியனி லை- | அழிவின்றி யிருக்கிற பாசஞ் சர்வான்மாக்க ளையும் பந்தித்துநிற்கிற முறைமை |

| | |
|---|---|
| இனையவை<br>யொன்று நினைவி<br>னு மின்றி- | இப்படிச் சொல்லப்பட்டவை யொன்று<br>முன்னுடைய நினைவினுக்கூட வில்லாமல் |
| உன்றெனு மு<br>ணர்விற் கன்ற<br>று கருதில்- | ஆன்மாவிற் கறிவில்லை அறிகிறது சிவனே<br>யென்று நீ நாட்டப்பட்ட வறிவினாலே நீ ய<br>நாசாரமாகச் சொன்னதை விசாரிக்கில், |
| இழுக் கெனும்<br>புலன் வழி யொ<br>ழுக்கமு மதுவா<br>ய்க்-கொண்டு | இந்திரியவாதனை பொல்லாதென்று சொல்<br>லுமிடத் தந்த விந்திரியவாதனையை நீ யநாசார<br>மாகக் கொண்டு |
| பண்டையி<br>லெல்லாருமடங்<br>கு-வந்தவர் செ<br>ய்த தந்தைதனுடைய<br>ன்றே- | பெத்த திசையிற் செய்துவந்த வநாசாரத்<br>திலும் பார்க்க முத்தித்திசையி லெட்டுமடங்<br>கநாசாரஞ் செய்ய மயக்கத்தைத் தந்த வஞ்<br>ஞானத்தை வெறுக்கிறதல்லது உன்னை வெறு<br>க்க வழக்கில்லை. |
| புன்மைகளி<br>ங்க வுண்மை கே<br>ண் மதி. | இப்படிக்கொத்த வஞ்ஞான முனக்கு நீங்<br>கத்தக்கதாக நான் சத்தியஞானத்தைச் சொ<br>ல்லுகிறேன், அதை புத்திபண்ணிக் கேட்பா<br>யாக. எ - று. (மதி - அசை.) (கஎ) |

நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்ப நிராகரண
முற்றிற்று.

# சைவவாதி சங்கற்பம்.

அறிவா யறியு மறி வுயிர்

அநாதியே சகலத்திலறிவா யறிந்துகொண்டுவருகிற வறிவாயிருக்கு மான்மா

கேவலத் - தறிவில விருளொடும் பிரிவிலன்

கேவலாவத்தையிலே யொன்றையு மறியான். அறிவில்லாம லவ்விடத் தாணவ மலத்தையும் விட்டுநீங்கான்.

அண்ணல் - கலைமுதலாக நிலவிய கருவிகள்- விளக்கென வுதவும்

இப்படிக் கேவலப்பட்டுக் கிடக்கிற வவதரத்திலே யான்மாவிற்குக் கத்தாவானவர் கலைமுதலான தத்துவங்களைக் கண்ணுக்குக்காட்டான விளக்கினது தன்மைபோலக் காட்டாகக் கூட்டுவன்.

துளக் கரப் பொருந்தி - யிருவினை நுகர்வில் வருவினை செய்து-

அந்தக் கருவிகளோடு மசைவறக் கூடிப் பிராரத்தகனமமான புண்ணியபாவங்களைப் புசித்துவருமிடத் தாகாமியத்தை யார்ஜித்துக் கொள்ளும்.

மாறிப் பிறந்து வரு நெடுங் காலத்து-

இந்தக் கன்மத்துக்கீடாக நெடுங்கால மச்சுமாறிப்பிறந்து வருமிடத்துச் சிவபுண்ணியமுண்டாய் அதனாலே

இருண்மல பாகமுஞ் சத்திநிபாதமு-மருவுழி

மலபரிபாகமுஞ் சத்திநிபாதமும் பொருந்தினவிடத்து,

இது பெத்தம்.

மேன் முத்தி.

அருளுருமன்னவனணைந்து-

அருளே திருமேனியாகிய கத்தா வாசாரியமூர்த்தமாகவந்து

செல்கதியாய்ந்து பல் பணி படுத்தி-

இவன் பொருந்தப்பட்ட மோக்ஷத்திற்கே துறையை யாராய்ந்து பல பணியாகிய சரிதை கிரியா யோகங்களிலே நிறுத்தி

கருவியு மலமும் பிரிவுறப் பிரியாஞான நல்கலும்

அந்தச் சரிதை கிரியா யோகங்களை முற்றச் செய்கையினாலே கேவலசகலமிரண்டையு நீக்கி யநாதியே யிவனை யுபகரித்துக்கொண்டு வருகிற வுண்மைஞானத்தைக் கொடுப்பன். அப்படிச்செய்த மாத்திரத்திலே

ஞானநு நோக்கித்-தன்னையு மதனையுந் தன் முதற் பொருளையும்-

இந்த வான்மா வுண்மைஞானத்தைத் தரிசித்து ஞானுருவாகிய தன்னையும் ஞானமாகிய வுண்மைஞானத்தையு மந்த ஞானத்திற்கு முதலாயுள்ள ஞேயத்தையு மிந்த மூன்று முதலையும்.

இன்ன வென்றறியா விருவரு முயங்கி-

அவ்விடத்திற் சுட்டி யறியாம லிந்த வான்மாவுஞ் சிவமுந் தம்மிலேகூடி

ஒன்றா யுறுபய னுவப்பு- மின்றாய் நிற்கு மிது சிவ கதியே.

இரண்டு மொருமுதலாகி யவ்விடத்துற்றதொரு பயனும் பிரியமு மிரண்டு மில்லையாயிருக்கிற வவதரத்தைச் சிவ சாயுச்சியமென்று சொல்லப்படுவது. எ-று. (கஎ)

சைவவாதி சங்கற்ப முற்றிற்று.

# சைவவாதி சங்கற்பநிராகரணம்.

இது கதியாக முதலறிவுயிரோல்-

நீயிப்பொழுது சொல்லிமுடிந்த விறுமுந்திடாகட்டும், அது பின்புசொல்லுகிறோம். ஆன்மா வநாதியிலே யறிவாயிருக்குமாயின்.

பொறிபுலனீங்கவறிவுயிரான்றே-

இந்திரியங்களுமதனு லறியப்பட்ட விடயங்களுநீங்கினவிடத் தான்மாவிற் கறியும்பகுதி யுண்டாமோ? அஇந்திரியங்கள் கூடின பொழுதறிந்து மவைநீங்கின பொழு தறியாமையுமாயிருப்ப தான்மாவிற்குள்ள சுபாவமென்று நீ சொல்லில்?

அடைகாய்நூறினிடைசேர் சிவப்பென-

பாகுவெற்றிலை சுண்ணம்புகூடி மத்திக்கவிடத்திலே யவையிற்றின தன்மையின்றி நடுவே யொரு சிவப்பெழுந்தாற்போல

இந்தியந்தொகையின் வந்தறிவொன்றுநின்-றின்றுமென்றலன்றே யென்கை-

இந்திரியங்களினுடைய கூட்டத்தி னடுவே யோரறிவுதோன்றி யுடனே யழியுமென்று கணபங்கஞ்சொல்லுகிற புத்தருமே யப்பாகீர், இதன்றியும்

அறிவிலனதீதச் செறிவிலென்றுரைத்த-

அறிவாயறிந்துவருகிற வான்மாவிற்கு மலத்தினாலே நெருங்கியிருக்கிற வதீதத்தானத்தி லறிவில்லையென்று சொன்ன

நின்மொழி விரோதமும் பின்முன் மலைவு-மன்னுயி னிகழுவ

உன்னுடைய சொல்விரோதமு மொருக்கா லறிவில்லையென்று மொருக்கா லறிவென்று நீ முன்னொடு பின் மலையச்சொன்ன வினையுநிலைபெற்ற நல்லோர்களுடைய கூட்டத்திலிட

த்துச் சொல்லிக்கொள்ளப் படாது. இதன்றியும்,

மல மிருள்

ஆணவமலமோவென்றாற் சுத்தவிருளா யிருப்ப தொன்று.

இறை யொளி-

கர்த்தாவோ வென்னின் மகா பிரகாசமா யிருப்பா னொருத்தன்.

ஆன்மா விளக் கிற் றகு மருட் கலாதிகள்-

ஆன்மாவிற்குத் தான் விளக்கைப்போலே காட்டாயுள்ள கலைமுதலான தத்துவங்களு மாயாகாரியமா யிருக்கையினாலே மயக்கமா யிருப்பதொன்று. ஆகையா லந்தக் கருவிகள்

ஏன யிவனி டத் தெய்வா றி சைந்தன-

இருளாயிருக்கிற கேவலத் தானத்திலே யறிவின்றி யிருக்கிற வான்மாவிற்கு மகா பிரகாசமாயிருக்கிற கருவிகள் சென்று பொருந்தின படி யெப்படி?

இசைந்த தாயி னு மிசையா தாயினும்-

அந்தக் கருவிகள் கூடி யறிந்தாலும் அந்தக் கருவிகள் கூடாமற் கேவலத்திலே கிடந்தாலும் போகட்டும்.

அறைந்திடு முத்தி சாதன மவமே-

நீ நிலை நிற்கமாட்டாமல் முத்தி சாதனஞ் சொன்னது மிகவு நன்றா யிருந்ததில்லை.

இது பெந்தத்தை மறுத்தது.

. மேன் முத்தியை மறுக்கிறார்.

சத்தி நிபாத மோ தரு மலபா கமோ - வுய்த்த காரண காரிய மோதுக-

முன்னே யிருண்மலபாகமுஞ் சத்திநியாதமு மருவுதியென்றாய், அதிற் சத்திநிபாதங் காரணமாக மலபரிபாக முண்டாயினதோ மலபரிபாகங் காரணமாகச் சத்திநிபாத முண்டாயினதோ? இவையிற்றிற் செலுத்தப்பட்ட காரணகாரிய மியாதென்று சொல்லுவாயாக.

பாகங் காரண மாகின்

மலபாகங் காரணமாகச் சத்திநிபாத முண்டாயிற்றெனின்,

மற்றது-காலா வதியிற் காயாவதியின்-

அந்த மலபாகமென்று சொன்னது எண்ணிறந்த சரீரமெடுத்துப்போட்டு வருகிறதற்குள்ளே யின்னசரீரத்திலே முத்தியென்றிருக்குமோ வந்தச் சரீரத்தினுடைய வெல்லையிலே யெண்ணிறந்தகாலஞ் செல்லுகையிலே யதிலே யின்னகாலத்திலே யிவனுக்கு முத்தியென்றிருக்குமோ?

மேலாமென்னும் வினை யுறுமவதியில்-

அந்தக்காலத்தி னெல்லையிலே யொன்றுக்சொன்று மேலாகவருகிற புண்ணியபாவங்களிரண்டுந் துலையொப்பு வந்த வெல்லையிலேயோ?

துயரென வுயிர்க்குத் தோன்றிடு மவதியில்-

எண்ணிறந்த காலம் பிறந் திறந்து வருகிற வான்மாவிற்கு ஜநநந் துக்கமென்று தோன்றினவெல்லையிலேயோ?

நயமிகு மிறைவனல்கிடு மவதியி-லேதிற் கூடுமோதுக

ஆன்மாக்கள்பேரிலே மிகவும் பிரியத்தையுடைய கத்தா அவனை யின்ன வவசரத்திலே யிரக்ஷிப்பனென்றுண்டே யந்த வெல்லையோ? இவையிற்றி லெந்தவவசரத்திலே கூடுமென்று சொல்லுவீராக.

இருவினை-யொத்த வெல்லையில் வைத்தனரென்னில்-

புண்ணிய பாவ மிரண்டுந் துலையொத்தவவசரத்தில் மலபாக முண்டாமென்று பெரியோர்கள் சொல்லுவார்களென்று நீசொல்லில்,

அருவினை துக்கவரு வினைநி

கன்ம மருவாயிருக்கையினாலே புண்ணியமொருகட்டிலும் பாவமொருகட்டிலும் போ

வில்லா—

ட்டிரண்டு மொத்ததோவென்று தூக்கிப்பார்க்கைக்கு உருவாகக் காணப்படாது. இதன்றியும்

ஒரு வினை புரிகா லிரு வினை யாகா—

ஒருபுண்ணியத்தைச் செய்யுமிடத்துப் பாவம் பாதியாகப் பகுத்து நில்லாது. ஒருபாவத்தைச் செய்யுமிடத்துப் புண்ணியம் பாதியாகப் பகுத்துநில்லாது. புண்ணியம் புண்ணியமாகவும் பாவம் பாவமாகவும் வரும்.

ஒப் புறுமாறு செப்புக

புண்ணிய பாவ மிரண்டுந் துலையொக்கிறபடி யெப்படியென்று நீ சொல்லவேணும். இதன்றியும்,

தேசிக – னரு ளுருவென்றபொருளினை யாயின் –

ஆசாரியனுடைய வடிவு அருள்வடிவாயிருக்குமென்று நீசொன்னதனுடைய வஸ்துத்தை விசாரிக்குமிடத்து

மாயா வுருவ ன் மாயா வுருவினை—யேயான் —

அழியாத் திருமேனியுடைய கத்தா வழிந்துபோகிற மாயா சரீரத்தைப் பொருந்தான். அப்படியன்றுகாணும் ஆன்மாக்களை யிரக்ஷிக்கைப் பொருட்டாகப் பொருந்துவனென்று சொல்லில்,

ஏய்ந்தவ ரெம் மனோரே—

யா தொருத்தர் மாயாசரீரத்தைப் பொருந்தினவர்களெட்மைப்போல வான்ம வர்க்கத்திலே யொருத்தர், அதனை யொழிந்து வேறொன்றாகச் சொல்லப்படாது. இதன்றியும்

பல்பணி ஞான காரண மென்னில்—

பலபணியாகச் சொல்லப்பட்ட சரிதை கிரியா யோகங்களைச் செய்வது காரணமாக ஞானமுண்டா மென்னில்,

தொல் ப ணி

பழையதாகச் சொல்லப்பட்டு வருகிற சரி

| | |
|---|---|
| தொறும் பயன் ஜெடுப்பதனாலு ம்- | தை கிரியா யோகங்களைச் செய்வது காரணமாகச் சாலோக சாமீப சாரூபங்களுண்டா யநுபவித்துப்போமென்பது திருவாக்குச் சொல்லி யிருக்கையினாலும் |
| ஒருபணி செய்யாச் சிரபுரச் சிறுவரும்- | ஒருதொழிலுஞ் செய்யாத சீகாழித் தலைவராகிய திருஞான சம்பந்தரும் |
| அரசராய தருணத் தலைவரும்- | இராஜகுமாரராகிய வாலிபத்திற்கெல்லாந் தலைவராகிய சுந்தரப்பெருமா னாயனாரும் |
| மூதிர் பரசமயத் திருமூறு மரசரும்- | மிக்க வமண சமயத்திலேநின் றவையிற்றைச் சமயமல்லவென்று சைவசமயமே சமயமென் றறுதியிட்டுவந்த திருநாவுக் கரையரும் |
| ஞானம் பெற்ற நன்மையினாலு - மீனமில் பணி யருட் கேதுவன்று | குற்றமற்றிருக்கிற சரிதை கிரியா யோகங்களென்னுந் தொழில்களைச் செய்யாமல் ஞானத்தைப் பெற்றுநின்ற நன்மைப் பகுதியினாலும் ஞானத்திற்குக் காரணம் பதியேயல்ல துவை காரணமென்று சொல்லப்படாது. |
| என்றால்- | அல்ல வென்று சொல்லியிருக்கையிலே நீ யுள்ளதென்று சொல்வதென்? |
| ஞானோற்பத்தி நிமித்த மித் தொழிலென- | ஞான உற்பத்தி நிமித்த மித் தொழிலென்று |
| ஏனோர்க்கிறைநூ லியம்பிற் றென்றுட்- | உன்னை யொழிந்தவர்களா ரெல்லார்க்குஞ் சுத்தா நூல்களிலே யருளிச் செய்தவைத் திருக்க ஞானத்தைப் பெறுதற்கு நிமித்தமன்றி ஞானங் கொடுப்பதற்குச் சரிதை முதலாகிய துநீ காரணமென்ற தென்னபடியாய் முடியும். |

(என்னவே ஞானம்பெறு நிமித்தந் தவமாமெ ன்பது கருத்து.) இதன்றியும்,

கருவியு மலமும் பிரிவுற வருட்கு - மென்றனை

அறிவாகிய கருவியு மறியாமையாகிய மலமு நீங்கத்தக்கதாக வருட்பிரகாச முண்டாமென்று நீ சொன்னாய்;

கேவலத் தேது மறிவிலன் -

கேவலாவத்தையிலே யான்மா வொன்று மறியாமற் கிடக்கையினு லவ்விடத் தருட்பிரகாச முண்டாகாது.

அன்றிய சகலத் தருளிலை தோன்று -

கருவிக ணெருங்கியிருக்கிற சகலாவத்தையினு மருட்பிரகாச முண்டாகாது.

...வ் வவத்தையினிறை யருள் பெறுகுவம் -

முன்சொன்ன விரண்டவதரத்தினு மருட்பிரகாச முண்டாகாதென்றாற் பின் னெந்த வவதரத்திலேதான் கர்த்தாவினுடைய திருவருளைப் பெறுவோம்.

செவ்விய ஞானத் திரிசமாவது -

மயக்கமற நீ தரிசித்த ஞானமாவது

நால்வகை மாயைப் பால் வரு ஞானம் -

தனு கரண புவன போக மென்கிற நால்வகையையுங் கூடியிருக்கிற மாயையின் பகுதியிலே நின்றறிந்து வருகிற ஞான மெப்பொழுது முள்ள ஞானமாகவேண்டும்.

பண்டை ஞானமிது வறிதாவாக் - கண்ட ஞான மிதுவாக் காணில் -

இந்த மாயையினாலே யறிந்துவருகிற ஞான மெப்பொழுதுமுள்ள ஞானம். இது நீக்கத்தக்கதாகவே வருகிறஞானம் இந்தத் தனுகரண புவனபோகங்களாகக் காணப்படின்

...ஞானிக

அஞ்ஞானிக ளொன்று சொல்லத்தக்கதாக

| | |
|---|---|
| ளென்போர் யாருமில்— | வொருத்தருமில்லை; நீ சொன்ன வசனத்தினாலே யெல்லாரு ஞானவான்களாகவேண்டும். |
| ஞான வேற்றுமை நாடலு மரிதே— | ஞானத்தினுடைய வேறுபாடறியும்பொழுதரிதாயிருக்கும். இதன்றியும், |
| தானு ஞானமுந் தலைவனு மென்றனை— | ஆன்மாவுஞ் சிவஞானமுஞ் சிவமுமென்று மூன்றாகச் சொன்னாய். |
| ஆனபி னிவனுமிவனது ஞானமும்— | சிவனுஞ் சிவனுடைய ஞானமுமென்கையினாலே ஆன்மாவு மான்மாவினுடைய ஞானமும் |
| பாசமும் பாசஞானமுமென் றிவை—பேசுவர் | பாசமும் பாசத்தினுடைய ஞானமுமென்றின் றிந்த மூன்று முதலிற்கு மூன்றுஞான முண்டென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். |
| ஒன்றாப் பெற்றியவாகலின்— | இது ஒன்றாகாத முறைமையினாலே |
| மும்மைப்பொருட்கு மும்மைத்தன்மை—செம்மைத் தென்னிற் செலவுக ளெழுதுக— | இந்த மூன்றுமுதலிற்கு மூன்றுஞானமுள்ளதென்கையாலான்மா வொன்றுப[illegible]ப் பசுஞானமும் பாசஞானமும் போனபடி யெப்படியென்று சொல்லவேண்டும். இதன்றியும், |
| இருவருங் கூடி யொருபயனுய்த்தென்—றருளினை | ஆன்மாவுஞ் சிவனுங்கூடி யொருமுதலாயிற்றென்று சொன்னாய். |
| இவ்வாறபே | இப்படிப் பெத்தத்தி லிரண்டாய் முத்தியி |

திக ணிலேயே — லொன்று யிருக்குமென்று சொல்லுகிறது மாயாவாதியுடைய மதமாயிருக்கும்.

பதி பசு பாச முதிரறிவுகளுட- னாறு முன்னர்க் கூறி — பதி பசு பாசங்களு மவையிற்றினுடைய ஞானங்களு மாறுவகையாக முன்சொல்லி,

பின்ன - ரிரு பொருணீந்த மற்றொரு நால்வகையும்- — அந்தவாறினும் பாசமும் பாசஞானமென்ற விரண்டையும் விட்டுப் பின்பு நாலாக்கி யந்த நால்வகையும்

ஈனமில் ஞான தரு ஞான ஞேய மென - றிசைய மூன்றாய் — இதிலே பசுஞானமொன்றையும்விட்டுக் குற்றமில்லாத ஞாதரு ஞான ஞேயமென்று பொருந்தப்பட்ட மூன்றாய்

பசு பதியென் றவற் - றிரண்டாய் — அதிலே ஜீவஞானத்தை நீக்கி யான்மாவென்றுஞ் சிவமென்று மிரண்டாய்

இரண்டு மொன்றி யிரண்டறகத்-திரண்டாம் பயனெனுந் திருவருடெளிவில் — இந்த விரண்டிலே யான்மாவான தந்தச் சிவனிடத்திலே கூடி யிரண்டு மொருபயனாய் நிற்குமென்று நீ சொல்லும் நிர்மல சாக்கிராதீதந் திருவருட்பகுதியைச் சொல்லுமிடத்து

சென்று சென்றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்று - மென்றிறை யியற்கை யி — திருவாசகத்தில் "இன்றெனக்கருளி" என்ற திருவிருத்தத்தில் திருவாதவூர்நாயனார் பேரின்பம்வேண்டிக் கர்த்தாவினுடைய தன்மையை யருளிச்செய்தது நீர் சொன்ன வர்த்தத்திற்குத் தகும். (என்றது என்னத் தகாதென்ப

யம்புத றகுமே-

து கருத்து.) ஏகராம் எதிர்மறை (ஒன்றுமல்ல விரண்டுமல்ல வொன்று மிரண்டு மின்று மல்லவென்ப தன்மை.) இதன்றியும்,

ஒன்றுமென்ற லன்றியு முவப்பு- மின்று மென்று லென்பயன்

பதியும் பசுவு மொன்றுமென்று சொன்னதன்றியு மிவ்விடத்தோ ரின்பமு மதனு ளுண்டாகிய பிரியமு மின்றுதயிறு லுனக்குப் பிரயோசனமென்ன. (என்னவே பெறுவா யில்லையென்பது கருத்து.)

இயம்புக-

நான் சொன்ன வத்தத்தை யல்லவென்று சொன்னீரே பின்னை யிந்தச் சித்தாந்தவத்த மிப்படி யிருப்பதென்று நீர் சொல்லுவீராக.

என்றனை விளவு மியாவும் விளங்க-வென்றிகொள் கருத்தின் விரும்பினையாயின்-

பின்னை யெப்படி யிருப்பதென் றென்னை நீ கேழ்க்கிறதெல்லாந் தெரியத்தக்கதாக விவன்னுடைய திடமுறு கருத்திலே யிருப்ப முண்டாயின்

நதிக்கரை யானைக் கொதித் தலமாந்து-

ஆற்றங்கரைப் பசுப்போலுங்காமோ விங்காமோ வென்று நீ பதறிக்கொண்டு திரிகிறதைவிட்டு

வெண்ணெயம் பதி திகழ் மெய் கண்டவனரு-ளுண்ணிலை யுடையோ னொருவனுரைத்த-

திருவெண்ணெய் நல்லூரிலே விளங்கப்பட்ட மெய்கண்டதேவனுடைய வநுக்கிரகத்தினுண்மையைப் பெற்ற மறைஞான சம்பந்த நாயனார் எனக் கருளிச்செய்த வத்தத்தைக் கொண்டு

தவப் பிரகாசத் தன்மையில் வி

முன் ஜநநத்திலே செய்த தவங்களினதா மிகுதிகொண்டு நான் செய்யப்பட்ட சிவப்பி

| | |
|---|---|
| ரித்த – சிவப்பிரகாசச் செழுந்தமிழுண்மையை | ரகாசமாகிய செழுவிய தமிழினுடைய வத்தத்தை |
| அருளுடனாய்ந்துகொள்ள – | ஆசாரியருடனே கூடி யாராய்ந்துகொள்ளவே |
| திருவருள் விளைவிருந்திடுமன்றே. | பின்னை யிந்தத் திருவருளின் பகுதி யெப்படி யிருப்பதென்று நீ கேட்ட சந்தேகங்களெல்லா நன்று யுமக்கு விளக்கா நிற்கும். எ – று. (கஅ) |

சைவவாதி சங்கற்பநிராகரண முற்றிற்று.

சங்கற்பநிராகரண முற்றிற்று.

பாயிர முட்பட அகவல் – உ0.

## தனியன்.



கற்றவன் கருணைகூரக் கலந்துயிர் சிவமாய்வாழப்
பற்றவன் பிரேமையாகப் பரிவினுற் சிவப்பிரகாசஞ்
சொற்றவன் பொருட்சுபாயந் துலக்கிய தூயோன்றொல்லோன்
கொற்றவன் குடியானந்தங் குடிமுழு தாண்டகோவே.

இந்நூ லுரையாசிரியர் பெயர் பிரதிகளிற்

காணப்படவில்லை.